# மணிக்கொடி

## 1

பெரியப்பா இல்லாத வாசற்பக்கம் வெறிச்சோடிக் கிடந்தது. தமது சாய்வு நாற்காலியில் ஒரு சிங்கம் மாதிரி அவர் உட்கார்ந்திருப்பது வழக்கம். கம்பீரம் அவரது முழுத் தோற்றத்திலும் அகன்ற கண்களிலும் குடி கொண்டிருந்தது. அகலமான சதுர முகம். தடிமனான புருவங்கள். ஒரு புருவம் சற்று ஏற்றமாக இருக்கும். தீவிரமாக எது குறித்தாவது அவர் பேசுகையில் அந்தப் புருவம் மேலும் ஏற்றம் கொண்டு அவரது முகத்துக்கு ஒரு தனிக்களையைத் தரும். சற்றே மேடிட்ட அகலமான நெற்றி. எப்போதும் அதில் ஒரு சந்தனப் பொட்டு.

காலியாக இருந்த அந்த நாற்காலியைப் பார்த்த போது, மனத்தை என்னவோ செய்தது. பெரியப்பா தலைவலி, கால்வலி என்று சொன்னதே இல்லை. இப்போது அவர் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு இரண்டு நாட்கள் ஆகி விட்டன என்பதை ஏற்கவே முடியவில்லை. ஒருவேளை இது அவருக்கு இறுதி வேளையாக இருக்குமோ? கற்பனை கூடச் செய்து பார்க்க முடியவில்லை.

"கிட்டு!"

அம்மாவின் அழைப்பால் எண்ணங்கள் கலைந்து, தலை உயர்த்திப் பார்த்தேன். மருத்துவ விடுதியிலிருந்து திரும்பி இருந்த அம்மா, கால் செருப்புகளை உதறியபடி, "உன்னைப் பெரியப்பா வரச் சொன்னார். உடனே போ," என்றார்.

எனது நெஞ்சு அடித்துக் கொண்டது எனக்கே கேட்கிற மாதிரி ஆயிற்று.

"ஏம்மா? விபரீதமா எதாவதா?"

"நல்ல ஞாபகத்தோடதான் இருக்கார். நன்னாப் பேசறார். குரல் மட்டும் கொஞ்சம் கம்மினாப்ல இருக்கு. ஆனாலும் உற்சாகமாத்தான் இருக்கார். உன்னோட என்னமோ விவரமாப் பேசணுமாம்."

அம்மா சொல்லிக் கொண்டிருக்கையிலேயே நான் எழுந்து விட்டேன்.

"இதோ, ரெண்டே நிமிஷத்துல கௌம்பிடறேம்மா. நான் போறப்போ ஏதாவ்து எடுத்துண்டு போகணுமா?"

"இல்லே."

மருத்துவமனையில் பெரியப்பாவின் அறையை நான் அடைந்த போது, அவர் விழித்துக்கொண்டு தான் படுத்திருந்தார். என்னைப் பார்த்ததும் அகத்தின் மலர்ச்சி தமது பரந்த முகத்தில் பெரிய புன்னகையாய் மின்ன, அவர் சற்றே முதுகை நிமிர்த்திக் கொண்டு உட்கார முயன்றார்.

"படுத்துக்குங்கோ, பெரியப்பா. களைப்பாத் தெரியறேள். படுத்துக்குங்கோ," என்றவாறு நான் அவரது கட்டிலுக்குப் பக்கத்தில் இருந்த உயர்ந்த முக்காலியில் உட்கார்ந்தேன்.

"கிருஷ்ணா, நீ எனக்கு ஒரு உதவி பண்ணணும்."

"சொல்லுங்கோ, பெரியப்பா!"

"உனக்கு ஒரு ரெண்டு மாசம் போல லீவ் கிடைக்குமா?"

"எதுக்கு, பெரியப்பா?"

"உனக்கு ரொம்பப் பெரிசா ஒரு எழுத்து வேலை தரலாம்னுட்டு. ஆபீஸ் போயிண்டு வந்துண்டெல்லாம் அந்த எழுத்து வேலையைச் செய்ய முடியாது கிருஷ்ணா. முதல்ல நிறைய படிக்க வேண்டியது இருக்கு. படிச்சுட்டு ஒரே முனைப்பா உக்காந்து தொடர்ச்சியா எழுதினாத்தான் அது சரியா அமையும். என்ன சொல்றே?"

"என்ன எழுத்து வேலை தரப் போறேள், பெரியப்பா?"

"ஒரு பெரிய நாவல் எழுதற வேலை."

"என்னது? நாவல் எழுதற வேலையா? எனக்கா?"

"ஆமாண்டா. உனக்கேதான். என்ன அப்படி பிசாசைப் பார்க்கிற மாதிரி கண்ணை விரிச்சுண்டு பார்க்கறே?"

"என்ன சொல்றேள், பெரியப்பா? புரியும்படியாச் சொல்லுங்கோ."

"நம்ம வீட்டுக் கூடத்துப் பரண்ல கிழக்குப் பக்கத்துச் சுவரோரமா சில டயரிகள் இருக்கு. டயரின்னா இப்ப வர்ற மாதிரி பிரிண்டட் டயரிகள் இல்லே. பைண்ட் பண்ணின நோட்புக்ஸ். ஒவ்வொரு நோட்புக்கோட அட்டையிலயும் அது இன்ன தேதி தொடங்கி இன்ன தேதி வரைக்கும் முடியறதுங்கிறதை எழுதி இருக்கேன். அதை எழுத ஆரம்பிச்சது 1920 ஆம் வருஷம் ஆகஸ்டு ஒண்ணாந்தேதியன்னிக்கு - அதாவது திலகர் செத்துப் போன நாள். நாடே திமிலோகப் பட்டுது அன்னிக்கு."

பழைய ஞாபகங்களில் ஆழ்ந்தவராய்ப் பெரியப்பா சில நொடிகளை மௌனத்தில் கழித்து விட்டுத் தொடர்ந்தார் :

"சுதந்திரம் அடையறதுக்காக அந்தக் காலத்துல மனுஷா எப்படியெல்லாம் கஷ்டப்பட்டா, எப்படி

ஜோதிர்லதா கிரிஜா

எப்படியெல்லாம் தியாகங்கள் பண்ணினாங் கிறதெல்லாம் இந்தக் காலத்துப் பசங்களுக்கு சுத்தமாத் தெரியல்லே..."

"நான் எழுத வேண்டியது நாவலா, இல்லே ஹிஸ்டரியா, பெரியப்பா? தெளிவாச் சொன்னா தேவலை."

"ரெண்டுந்தாண்டா. அதாவது சரித்திர நாவல்ங்கிறாளோல்லியோ? அது."

"பெரியப்பா! எம் மேல உங்களுக்கு இருக்கிற நம்பிக்கைக்காக உங்களுக்கு ரொம்ப தேங்க்ஸ். ஆனா நீங்க வெச்சிருக்குற டயரி குறிப்புகளை வெச்சு ஒரு நாவல் எழுதறதுக்கு வேண்டிய சாமர்த்தியமெல்லாம் எனக்குக் கிடையாது."

"அதுகள்ளாம் வெறும் டயரி குறிப் புன்னு யாருடா சொன்னது? ரத்தம், சத்தம், சிரிப்பு, வெறுப்பு, சோகம், மோகம்..."

"அப்புறம், பாசம், மோசம், வேஷம், கோஷம்..." என்று நான் தொடர பெரியப்பா வாய் விட்டுச் சிரித்தார்.

"நீ இப்படியெல்லாம் தமாஷுக்காகச் சொன்னாலும் இதெல்லாமும் அதுல இருக் குடா, கிருஷ்ணா. தேசப் போராட்ட இயக் கமே முதல்ல கோஷத்துலதானே ஆரம்பிச் சுது? நிறைய வேஷங்களும் இருக்கு... உன் னோட விளையாட்டை ஒதுக்கி வெச்சுட்டு, இப்ப நான் சொல்லப் போறதை நீ கேக்க ணும்..." என்ற பெரியப்பா சட்டென்று கண் சிமிட்டி, "ஏன்? காதல் கூட இருக்கு..." என் றார்.

"அப்ப மோதலும் இருக்கணுமே?"

"இல்லாமயா? இருக்கு, இருக்கு. நவரச மும் இருக்கு. நீ என்ன பண்றே, எல்லா டயரி களையும் வரிசையா முதல்ல படிக்கிறே. அப்படிப் படிச்சு முடிச்சதும் உனக்குள்ள ஒரு களம் நிச்சயமா உருவாகும். நாவல் எழுத ணும்கிற எண்ணத்தோட படிக்கணும்கிறது ரொம்ப முக்கியம். அதுல கதாநாயகன் யாரு தெரியுமோ?"

"என்னோட பெரியப்பாதான்! வேற யாரு? அது சரி, கதாநாயகி யாரு?" என்று நான் கண்சிமிட்ட, பெரியப்பா சிரித்துக்



கொண்டார்.

பிறகு வெட்கத்துடன், "எல்லாம் அந்த டயரிலேயே இருக்குடா. நீங்கள்ளாம் நெனச்சுண்டிருக்கிற மாதிரி உங்க பெரியப்பா ஒண்ணும் நித்திய பிரும்மசாரி இல்லே. இதுக்கு மேல நான் அதைப் பத்தி ஏதும் சொல்றதா இல்லே. சொன்னா சுவாரசியம் போயிடும். நீயே படிச்சுத் தெரிஞ்சுக்கோ."

"பெரியப்பா... நீங்களே கூட அதை நாவலா எழுதி இருக்கலாமே?"

"என்னமோ, எழுதணும்னு தோணல்லே, எழுதலே. இப்பவாவது தோணித்தே. அந்த டயரிகள் தவிர, நல்ல லைப்ரரியிலே தேடி சுதந்திரப் போராட்டம் பற்றின சில புத்தகங்களையும் எடுத்துப் படிச்சா உனக்குச் சரித்திரப் பின்னணி நன்னா புரியும்."

"உங்க உடம்பு முதல்ல சரியாகட்டும், பெரியப்பா!"

"நான் என்ன சின்னக் குழந்தையா? எனக்கு நீ தைரியம் சொல்றியா இப்ப? மை டேஸ் ஆர் நம்பர்ட், ஐ நோ இட். என் ஒரே ஆசை பத்து நாள் இருபது நாள்னு இழுத்திண்டிருக்காம ரெண்டொரு நாள்ல நான் போயிடணும்."

பெரியப்பாவின் கண்கள் இலேசாய்ச் சிவந்தன.

"நான் பிறந்தது 1905-ஆம் வருஷம். அக்டோபர் மாதம், பதினாறாந்தேதி. அன்னிக்குத்தான் வெள்ளைக்காரன் பெங்காலை ரெண்டா உடைச்சான்" - எதைச் சொன்னாலும் முடிந்த அளவுக்கு அதில் சரித்திர நிகழ்ச்சியைக் கலக்காமல் பேசப் பெரியப்பாவுக்குத் தெரியாது.

"இன்னிக்கு என்ன தேதி? டிசம்பர் பதினெட்டு, 1985! காங்கிரஸ் கட்சி நூற்றாண்டு கொண்டாடிண்டிருக்கிற வருஷம். அப்ப எனக்கென்ன வயசு இப்ப? எண்பது முடிஞ்சுடுத்து. இத்தனை வயசுக்கு மேலயும் இந்த உலகத்துல — இன்னும் சொல்லணும்னா - இந்த நாட்டில நான் வாழணுமா?"

"இந்த நாட்டில" என்ற போது அழுத்தம் தந்து பேசியது அவரது ஏமாற்றத்தையும் துக்கத்தையும் உணர்த்தியது.

மறுநாள் பெரியப்பா தூக்கத்திலிருந்து கண் விழிக்கவே இல்லை. 'வலி தெரியாத சாவு' என்று டாக்டர் சொன்னபோது எங்கள் சோகத்தை மீறி ஓர் ஆறுதல் ஏற்பட்டது.

## 2

பெரியப்பாவின் நாற்காலி இப்போது நிரந்தரமாய்க் காலியாகி விட்டது. அகலமான அடிப்பாகமும் நெடிய முதுகும் உள்ள அந்த நாற்காலியில் உட்கார யாருமே துணியவில்லை. அது எங்கள் வீட்டில் ஒரு காட்சிப் பொருளாகியது. "பெரியப்பா நாற்காலி" என்று பெயர் பெற்றது. பரணிலிருந்து டயரிகளை எடுத்து ஒவ்வொன்றாக அந்த நாற்காலியில் வைத்து எதிரே அதைவிடக் குட்டையான ஸ்டூலில் அமர்ந்து படிக்கத் தொடங்கினேன்.

பெரியப்பாவின் கடைசி ஆசை பற்றி அம்மாவிடம் சொன்னேன். அம்மா பெரியப்பாவைப் பற்றிய சில அந்தரங்கங்களைச் சொன்னார். அப்பா சில முக்கியமான விவரங்களைத் தெரிவித்தார். டயரிகளில் அவரால் குறிப்பிடப்பட்டுத் தற்சமயம் உயிரோடு உள்ளூரிலும் அயலூரிலுமாக இருந்த சிலரைச் சந்தித்தும் பல விவரங்களைச் சேகரித்தேன். சிலர் இறந்து விட்டிருந்தனர். இறந்து போனவர்களின் உறவினர்களைச் சந்தித்த போது சில சந்திப்புகள் பயனுள்ளவையாக இருக்க, மற்றவை பயனற்றுப் போயின.

பெரியப்பா சொன்னது சரிதான் என்பது அவருடைய டயரிகளைப் படித்து முடித்ததும் மிக நிச்சயமாய்த் தெரிந்தது - அது ஒரு நவரச நாவல் என்பது. ஒவ்வொரு டயரியாய்ப் படிக்கப் படிக்கக் கதை மெல்ல மெல்ல உருவாகிக் கொண்டே போயிற்று....

வீட்டின் வெளித் தாழ்வாரத்தில் ராமசாமி கவலை படர்ந்து கிடந்த முகத்தைக் கைகளில் ஏந்தியவாறு உட்கார்ந்து கொண்டிருந்தார். உள்ளே இருந்து 'குவா குவா' சப்தம் கேட்கப் போகும் கணத்துக்காக ஆவலுடன் காத்திருந்தார். பிள்ளைப் பேற்று அறையிலிருந்து அவர் மனைவி குஞ்சம்மா வலி தாளாமல் நொடிக்கொரு தடவை குரல் எழுப்பியபோதெல்லாம் தமக்கும் வலிப்பது போன்று அவர் உடம்பைத் திருகிக் கொண்டிருந்தார். மனைவியின் மீது அவருக்கு அவ்வளவு அன்பு. மனைவியின் ஒவ்வொரு பிள்ளைப்பேற்றின் போதும் ஒரு குற்ற உணர்வுக்கு ஆளாவது அவரது இயல்பாக இருந்து வந்தது. பிறந்த குழந்தைகள் தக்கி இருந்திருப்பின், அவர் இரண்டுக்குப்



"இந்த ஆள் வயிறு முட்ட நூடுல்ஸ் சாப்பிட்டுட்டு காசில்லேங்கிறார் முதலாளி!"

"அப்படி எவ்ளோ சாப்பிட்டார்?"

"சும்மா ஒரு ஆறு கிலோமீட்டர் இருக்கும் முதலாளி!"

- வேதபுரி எஸ். ரமேஷ்

பிறகு எப்போதும் வேண்டாமை மனக்கட்டுப் பாட்டின் மூலமே கடைப்பிடித்திருக்கக் கூடியவர்தாம். ஆனால் ஆறு பிறந்தும் ஒன்று கூடத் தக்கவில்லையே. இது ஏழாவது பிரச வம். இப்போது பிறக்கிற குழந்தையாவது தக்கினால் நன்றாக இருக்கும் என்று வேண்டி யறியாத தெய்வங்களின் பெயர்களையெல் லாம் சொல்லி வேண்டிக் கொண்டிருந்தார். பிறப்பது பெண் குழந்தையாக இருந்தாலும் சரியே. அவரைப் பொறுத்தமட்டில் ஆண் - பெண் பேதமெல்லாம் இல்லை.

அவருடைய அன்பு மனைவி சுமார் அரை மணி நேரம் யமனுடன் போராடிய தற்குப் பிறகு குழந்தை பிறந்தது. 'குவா குவா' சத்தம் காதில் விழுந்ததுமே ராமசாமி வியர் வையால் பளபளத்த முகத்தை மேல் துண் டால் துடைத்தவாறு எழுந்து நின்றார். வாச லுக்கு வந்து அரைக் கதவு திறந்து எட்டிப் பார்த்த அவர் தமக்கை விசாலம், "பிள்ளைக் கொழந்தைடா, செக்கச் செவேல்னு மூக்கும் முழியுமா அப்படியே ஓம் பொண்டாட்டி மாதிரியே இருக்கான் போயேன். இன்னும் கொஞ்ச நேரம் கழிச்சு கூப்பிடறேன், அப்ப வந்து பாரு. என்ன?" என்று விட்டு அவரது பதிலுக்கு நில்லாமல் முகத்தை உள்ளே இழுத்துக் கொண்டு கதவைச் சாத்தினாள்.

கொஞ்ச நேரம் கழிந்ததும் ராமசாமி உள்ளே அழைக்கப்பட்டார். மனைவியருகே ஆனந்தக் கண்ணீரும் புன்சிரிப்புமாக நின்றார்.

"ஏன்னா? இதுவாவது தக்குமா? எனக்கு பயம்மா இருக்குன்னா," என்று கண்கலங்கி னாள் குஞ்சம்மா.

"அழாதே, குஞ்சம்மா. இது பிழைச் சுக்கும்னு எனக்குத் தோணறது. குண்டா, ஆரோக்கியமா தெரியறது. செதுக்கப்பட்ட சிலை போல இருக்கு. அழகனாவும் இருப் பான். நீ வேணாப் பாரு."

அவர் எதிர்பார்த்தபடியே குழந்தை தக்கி விட்டது. அதற்குத் தொட்டில் போட்டுப் பெயர் வைத்தபோது, அப்போது மிகப் புகழ் வாய்ந்த நாட்டுத் தலைவராக இருந்த பால கங்காதர திலகரின் மீதுள்ள மரியாதையால் "கங்காதரன்" என்று ராமசாமி அதற்குப் பெயரிட்டார். அது கடவுளுடைய பெயராக வும் இருந்தமையால் யாரும் ஆட்சேபிக்க வில்லை. அவருடைய அக்காள் விசாலம் மட்டும், "நீ ஒருத்தன் காங்கிரஸ், காங்கிரஸ்னு ஜபிச்சுண்டிருக்கறது போறுண்டா. இதுக்கு வேற உன்னோட உபதேசங்களையெல்லாம் பண்ணாதே. நேக்குக் கெட்ட கோவம் வரும், ஆமா!" என்றாள்.

பள்ளிக்கூட ஆசிரியராக இருந்த ராமசாமி தம் மகன் கங்காதரன் தம்மைக் காட்டிலும் அதிகமாய்ப் படித்துப் பட்டங்கள்



''மின்சார வாரியத்துல காஷியர் வேலைக்காக இண்டர்வியூவுக்குப் போயிட்டு வந்தியே... ரிசல்ட் என்னாச்சு...?''

'' 'ப்யூஸ்' ஆயிடுச்சுடா!''

- கோவிந்தன்

பெற வேண்டும் என்று பெரிதும் அவாவி னார். கங்காதரனும் நன்றாய்ப் படிக்கக்கூடி யவன் என்பதற்கான அறிகுறிகள் தெரிந்தன. அவருக்குப் பெருமை பிடிபடவில்லை.

"அடியே, குஞ்சம்மா, நம்ம பிள்ளை பிர மாதமா வரப் போறான், பார்த்துண்டே இரு. பெரிய படிப்புப் படிக்க வைக்கப் போறேன் இவனை எப்படியாவது" என்பார் வாய்க்கு வாய்.

"ஆ...மா. நீங்களும் நானும் நெனச்சாப்ல ஆச்சா? அவன் நெனக்க வேண்டாமா? அவனும் உங்க காத்து அடிச்சு, காங்கிரஸ் கீங்கிரஸ்னு சேர்ந்து தொலைக்காம ஒழுங்கா இருக்கணுமே!"

"இத பாரு! படிப்பு முடியற வரைக்கும் அதுக்கெல்லாம் நான் அவனை அனுமதிக் கிறதா இல்லே. ஆனா படிச்சு முடிச்சுப் பெரியவனானதும் அது அவனோட இஷ்டத் தைப் பொறுத்த விஷயம்னு விட்டுடுவேண்டி, தலையிட மாட்டேன். நாட்டில இருக்கிற வாளுக்குச் சுதந்திரம் வேணும்னு போரா டிண்டிருக்கிற நான், வீட்டில இருக்கிறவா ளுக்குச் சுதந்திரம் தரலைன்னா அப்புறம் என்ன அர்த்தம்?"

"அது என்ன நாட்டு சுதந்திரமோ, வீட்டு சுதந்திரமோ, நாளைக்கு நீங்க ஜெயிலுக்குப் போய் அப்படியே ஆயுள் தண்டனை அடையறேள்னு ஒரு பேச்சுக்கு வெச்சுப் போம். எங்களோட கதி என்னாறது? அதை யோசிச்சேளா?"

"எல்லாரும் இப்படியே சுயநலத்தோட நம்ம குடும்பம் என்னாறது, குழந்தை, பெண் டாட்டி என்னாறதுன்னெல்லாம் யோசிச்சிண் டிருந்தா வெள்ளைக்காரனை எப்ப வெளி யேத்தறது? எப்ப நமக்கு சுதந்திரம் கிடைக் கிறது?"

"என் கேள்விக்கு இதுவா பதில்? எங்க கதி என்ன? அதுக்குப் பதில் சொல்லுங்கோ."

அவள் பேசிய பேச்சைக் காட்டிலும் அப்படியும் ஆகி விடுமோ என்ற அச்சம் கிளர்த்திய கோபத்தில் ராமசாமி கத்தினார்.

"கண்டமேனிக்குப் பேசாதடி, குஞ்சம்மா. அப்படியெல்லாம் மாட்டிக்க மாட்டேன். எல்லாம் ரகசியமாத்தான் நடந்திண்டிருக்கு. நீ இப்படி எட்டு வீட்டுக்குக் கேக்கற மாதிரி கத்தி என்னோட ரகசியத்தை வெளிப்படுத்தி னாத்தான் உண்டு."

"என்னை அடக்கறதுக்கு முந்தி நீங்க உங்க குரலைக் கொஞ்சம் அடக்கிக்கக் கத்துக் குங்கோ. நீங்க இப்ப கத்தினது லண்டன்ல கேட்டிருக்கும்."

"லண்டன்ல கேட்டுதோ இல்லையோ, வாசல்ல நிச்சயம் கேட்டுது!" என்று கூறிக் கொண்டே அப்போது ஒருவர் உரிமையோடு உள்ளே வந்தார். மணவாளன்தான் அவ்வாறு நட்புரிமையை எடுத்துக் கொண்டவர்.

"வாங்க, வாங்க, நாயுடுகாரு. என்ன, பேப்பரும் கையுமா வந்திருக்கீர்?"



**"சே! நம்ம பன்னீர்செல்வம் செஞ் சதை நினைச்சாலே கேவலமா இருக் குப்பா!"**

**"எதைச் சொல்றீங்க?"**

**"ஸ்டார் ஹோட்டல் ரிசப்ஷன்ல வந்து 'மாவாட்ற வசதி உண்டா?'ன்னு கேட்டுட்டுப் போறாரே!"**

**- சீர்காழி வி. ரேவதி**

"நீர் ஸ்கூலுக்குப் போய்த்தான் பேப்பர் படிப்பீர்னு எனக்குத் தெரியும். அதான் சேதியைச் சொல்லிட்டுப் போலாம்னு வந்தேன்."

இருவரும் அருகருகே ஊஞ்சலில் உட் கார்ந்து கொண்டார்கள்.

"இந்தாரும். நீரே படியும்..."

**ரா**மசாமி அவர் சுட்டிய இடத்தில் காணப்பட்ட செய்தியை முனகலாய்ப் படிக்கலுற்றார்.

'மே மாதம் ஆறாந் தேதியன்று இங்கி லாந்தில் மன்னர் ஏழாம் எட்வர்டு கால மானார். இவ்வாண்டு - 1910 - ஜூன் மாதம் 22 ஆம் தேதி வாரிசு ஐந்தாம் ஜார்ஜுக்கு வெஸ்ட்மினிஸ்டர் அப்பேயில் முடிசூட்டு விழா நடைபெறும். இந்த அதிகாரபூர்வமான முடிசூட்டு விழா நடந்து முடிந்த பின்னர் அரச தம்பதியர் இந்தியாவுக்கு வருகை புரி வார்கள். டில்லி மாநகரில் இங்கிலாந்தில் தங்களுக்கு முடிசூட்டு விழா நடந்து முடிந்தது பற்றி அரச தம்பதியர் இந்திய மக்களுக்கு அறிவிப்பார்கள். அத்துடன் அதனைக் காண இங்கிலாந்துக்கு வர முடியாது போன இந்தி யர்களுக்காக அதன் நினைவு விழாவை டில்லியில் அவர்கள் விமரிசையாய்க் கொண் டாடுவார்கள்...'

நாளிதழை அவரிடம் திருப்பிக் கொடுத்த ராமசாமி, "இவனோட முடிசூட்டு விழா வைப் பார்க்கலேன்னு யாருய்யா இந்தியா வில அழுதது?" என்றார் கடுப்பாக.

"நீங்க வேற. அதுக்கு அழறவங்களும் இந்த நாட்டில இருக்குறாங்க ஓய். உமக்குத் தெரியல்லே."

"அப்படிப்பட்ட துரோகிகளும் இருக் கிறதாலதான் வெள்ளைக்காரனால இந்தியா பூராவையும் கபளீகரம் பண்ண முடிஞ்சது," என்றார் ராமசாமி இன்னும் அதிகக் கடுப்புடன்.

"இங்க எதுக்குய்யா வர்றது? இங்க வந்து தர்பார் பண்ணி நம்ம கஜானாவைக் காலி பண்றதுக்கா?"

ராமசாமி குபீரென்று சிரித்தார். "நீர் வேற! இல்லேன்னா இந்த நாட்டு கஜானாவில இருக்கிற பணம் இந்த நாட்டு மக்களுக்காகத் தான் முழுக்க முழுக்க செலவழியுதாக்கும்."

"என்னமோ, போங்க அய்யர்வாள். ஒண் ணும் நல்லாவே இல்லே. இந்திய தேசியக் காங்கிரஸ் கட்சி தொடங்கி எத்தினி நாளாச்சு. 1885-லே 'இன்டியன் நேஷனல் யூனியன்' என்கிற பேர்ல தொடங்கி, அந்த வருஷமே முதல் கூட்டத்தைப் பம்பாய்ல நடத்தினாங்க. போன வருஷம் வரையில மொத்தம் இருபத்தி நாலு கூட்டம் நடந்திருக்குது. என்ன சாதிச் சுட்டோம் பெரிசா? சொல்லுங்க. கிட்டத் தட்ட இருபத்தஞ்சு வருஷமய்யா, இருபத் தஞ்சு வருஷம். அது கொஞ்ச நாள் இல்லியே?" - மணவாளனின் கண்கள் அகன்று அவற்றில் சன்னமாய்ச் சிவப்பு ஏறியது.

ராமசாமி புன்னகை செய்தார். "இருபத் தஞ்சு வருஷம்கிறது ஒரு தனி மனுஷனோட வாழ்க்கையில நீண்ட நாள்தான் நாயுடுகாரு. ஆனா ஒரு தேசத்தினுடைய வாழ்க்கையில அது ரொம்பச் சின்ன பீரியட்தாங்காணும். கொஞ்சங் கொஞ்சமாத்தானே சாதிக்க முடியும்?"

"அது சரி."

"கொஞ்சம் உள்ளே வரேளா?"

"வந்துட்டேன்."

**ரா**மசாமி எழுந்து போய்க் காப்பிக் குவளைகளையும் வட்டைகளையும் எடுத்து வந்து ஊஞ்சலில் வைத்தார்.

"ஆடாம உக்காரும் அய்யர்வாள். காப்பி

கொட்டிடும்," என்றபடி தமது குவளையைக் கையில் எடுத்துக் கொண்ட மணவாளன், காப்பியை ரசித்துக் குடிக்கத் தொடங்கினார்.

"உங்க சம்சாரத்துக்குன்னு எங்கேருந்து தான் இப்படி ஒரு கைமணம் வந்திச்சோ, காப்பி பிரமாதங்காணும். என் சம்சாரமுந் தான் காப்பி போடுது. வாயில வைக்க வழங் கலே" என்று மணவாளன் இரைந்து விமர் சிக்க, உள்ளே கேட்டுக் கொண்டிருந்த விசால மும் குஞ்சம்மாவும் சிரித்தார்கள்.

காலியான குவளையைத் தரையில் வைத்த மணவாளன், "நம்ம வங்காளத்து அரவிந்த கோஷ் பாண்டிச்சேரியில செட்டில் ஆயிட்டாராம். தெரியுமா?" என்றார்.

"அட, யாரு சொன்னா உமக்கு?"

"பாண்டிச்சேரியில நம்ம சொந்தக் காரங்க இருக்காங்கல்ல? அவங்ககிட்டேருந்து கிடைச்ச தகவல்தான்."

"இங்கிலீஷ்காரன் கண்ணுல மண்ணைத் தூவற இந்த வேலையை முதல்ல ஆரம்பிச்சு வெச்சது நம்ம பாரதியார்தான். இல்லியா? இப்ப அவரை அரவிந்தகோஷ் முதற் கொண்டு ஃபாலோ பண்ணத் தொடங்கிட் டாங்க பாரும். நம்ம பாரதியார் கில்லாடிங் காணும். புதுச்சேரியில போய் ஃப்ரெஞ்சுக் காரன் ஆட்சிக்குக் கீழே செட்டில் ஆயிட்டா இங்கிலீஷ்காரனால ஒண்ணும் பண்ண முடி யாதுன்னு டக்குனு தோணி அங்க போயிட் டாரு, பாரும். இவங்களுக்குள்ள தொடர்பு இருக்குமா?"

"அதைப் பத்திச் சொல்றதுக்குத்தான் வந்தேங்காணும். அரவிந்தர், பாரதியார் இவங் கல்லாம் பாண்டிச்சேரியில அடிக்கடி சந்திக் கிறாங்களாம். வெறுமனே சந்திப்பு, மீட்டிங், பேச்சு, எழுத்துன்னு மட்டும் போயிட்டிருந்தா எந்த ஜென்மத்துலேங்காணும் இந்தியா சுதந்திரம் அடையிறது? அரவிந்தரும் முன்னே இருந்த அளவுக்குத் தீவிரமா இல்லையாம்!"

"நாயுடுகாரு. ஒண்ணு சொல்றேன், கேளும். முதல்ல ஜனங்களுக்கு, நாம அடிமை களா இருக்கோம்கிறது புரிஞ்சு அவங்களுக்கு வெள்ளைக்காரன் மேல தாங்க முடியாத ஆத்திரம் வரணும். அதுக்கு அப்புறந்தான் புரட்சி வெடிக்கும். அதுக்கு இன்னும் நிறைய நாளாகும். திலகர் வேற நாடு கடத்தப்பட்டு இப்ப பர்மாவில இருந்திட்டிருக்காரு. பாவம்! அம்பத்திரண்டு வயசுல நாடு கடத்தல். என்ன அயோக்கியத்தனம். என்ன கஷ்டமெல்லாம் கொடுக்கிறாங்களோ?"

"திலகர் மாதிரி ஒரு பெரிய தலைவர் பர்மா மாண்டலே ஜெயில்ல ஆறு வருஷம் இருக்கறதுங்கிறது எவ்வளவு பெரிய துரதிருஷ் டம். பம்பாய்ல அவரைத் திலக் மகராஜ்னு தான் சொல்லுவாங்களாம். அம்புட்டு செல் வாக்கு அவருக்கு. கோர்ட்ல மூச்சு விடாம இருபத்தொரு மணி நேரம் தன் கேசைத் தானே வாதாடிப் பேசினவராச்சே!"

"பின்னே? பத்திரிகையில நம்ம கருத்துக்களை வெளியிடற சுதந்திரத்தைத் தடை செய்யற அடக்குமுறைச் சட்டத்தை எதிர்த்துக் கேசரி பத்திரிகையை நடத்திட் டிருந்த திலகர் அதுல எழுதாம இருப்பாரா? இதென்னய்யா அக்கிரமம்? நம்ம நாட்டுல வந்து உக்காந்துக்கிட்டு,. நம்ம பத்திரிகை சுதந்திரத்துல தலையிடறதா?"

அச்சமயம் வாசற்புறத்தில் நிழல் தட்டி யது. கதவை யாரோ விரலால் தட்டுகிற ஓசையும் கேட்டது. ராமசாமி எழுந்து சென்று பார்த்தார்.

இருபத்தைந்திலிருந்து முப்பதுக்குள் வயது சொல்லக்கூடிய ஒரு பெண், புன்சிரிப் புடன் அவரைப் பார்த்துக் கை கூப்பி னாள்.

"மிஸ்டர் ராமசாமிங்கறது..."

"நான்தான்."




உங்கள் பையனைப் பலவிதமாக அழைக்கலாம். ஆனால் ஒவ்வொன்றுக்கும் ஓர் அர்த்தம் இருக்கிறது!

*பிள்ளை :* தொல்லை தரும் மகன்; *மகன் :* குடும் பத்தைக் காப்பாற்றுகிறவன்; *மைந்தன் :* குடும்பத்துடன் சுற்றத்தாரையும் தாங்க வல்லவன்; *குமாரன் :* தந்தையை விட அறிவில், திறனில் மிக்கவன்; *புத்திரன் :* தந்தையை நற்கதிக்கு அனுப்பவல்ல நல்லறம் செய்பவன்.

- வாரியார்

தகவல் : வயலூரான்

"உங்களிடம் கொஞ்சம் பேசணுமே."

"என்ன விஷயமா?"

"நான் உள்ளே வரலாமா?"

"ஐ'யாம் சாரி, சாரி. உள்ள வாங்கோம்மா. வாங்கோ."

வழிநடையில் காலணிகளை உதறிய பின் அந்தப் பெண் ராமசாமியைத் தொடர்ந்து உள்ளே வந்தாள். மணவாளன் ஊஞ்சலிலிருந்து இறங்கினார். அடுக்களையி லிருந்து எட்டிப் பார்த்த குஞ்சம்மாவின் பார்வையும் அந்தப் பெண்ணின் பார்வை யும் சந்தித்துக் கொண்ட போது, புதியவளின் பார்வையில் அன்பு தெரிய, குஞ்சம்மாவின் பார்வையில் அந்த உணர்ச்சி சிறிதும் இல்லை.

(தொடரும்)

# காதல் கூண்டிலிருந்து விடுதலை!

♦ "காதல் கூண்டுக்குள்ளேயே என்னைப் போட்டு அடைச்சுட்டாங்க. கதவைத் திறந்து பறக்க விட்டதற்கு நன்றி" என்று கே. பாலசந்தருக்கு மனப்பூர்வமான நன்றிகளைத் தெரிவித்துக் கொண்டாராம் ரமேஷ் அரவிந்த்.

'டூயட்' - படத்தில் கிடைத்த திருப்புமுனை, கமல் படத்திலும் கதாநாயக வாய்ப்பை வழங்கியிருக்கிறது. பாலு மகேந்திரா இயக்கத்தில் தயாராகி வரும், இன்னும் பெயரிடப்படாத, நூறு சதம் காமெடி படத்திலும், ஒப்பந்தமாகியிருக்கிறார், ரமேஷ் அரவிந்த்.

"அருவியிலிருந்து கொட்டும் போது அது சாதாரண தண்ணீர்தான்... ஆனா அதுக்குக் கீழே டர்போ இயந்திரம் வைச்சதும் மின்சாரம் கிடைக்குது. அதுபோல... நடிகர்களெல்லாம் தண்ணீர் போல. டர்போ போன்ற ஒரு டைரக்டர் கிடைச்சதும் நடிப்புத் திறமை வெளிப்படுகிறது" என்று சின்ன உவமையோடு விளக்கினார். மெக்கானிக்கல் இன்ஜினியரிங் படித்தவராச்சே!

ரமேஷ் அரவிந்தின் உற்சாகத்திற்கு இன்னொரு காரணமும் உண்டு. மலையாளத்தில் 'அவன் அனந்த பத்மநாபன்' என்ற படத்தின் மூலம் அறிமுகமாகியிருக்கிறார் - மூன்று வயதுக் குழந்தையின் மன முதிர்ச்சியுடன் பேசிப் பழகும் ஓர் அப்பாவி கிராமத்து இளைஞரின் பாத்திரம். இதில் ரமேஷ் புதிய பரிமாணத்தைப் பெற்றிருக்கிறார். கொசுறாக ஒரு நியூஸ் : ரமேஷுக்குப் பிரபு வைத்திருக்கும் செல்லப் பெயர் 'யூ.என்.ஓ. டிப்ளமாட்'. எந்த சிக்கலிலும் மாட்டிக் கொள்ளாமல், தான் உண்டு தன் வேலை உண்டு என்று இருப்பதால் இந்த அடைமொழியாம்!

♦ 'சரத்' என்னும் புதிய இயக்குநர் கதை, திரைக்கதை, வசனம் எழுதி இயக்கும் படம் "அடுத்த கட்டம்!" தாய்க் கட்சியிலிருந்து பிரிந்து வந்து தனிக்கட்சி ஆரம்பிக்கும் ஓர் அரசியல்வாதியாக விஜயகுமார் நடிக்கிறார். அந்த பாத்திரத்திற்காக விஜய்குமாருக்குப் பலவிதமாக மேக்கப் போட்டுப் பார்த்திருக்கிறார்கள். எதுவும் 'பளிச்'சென்று இல்லை. கடைசியாக ஒரு மேக்கப் போட்டுப் பார்த்ததில்,



* ஆதித்யன்



அப்பாடி! அது தத்ரூபமாக அமைந்துவிட்டது. ஸ்டில்லை கவனியுங்கள்... கெட்டி மீசை, கறுப்புத் துண்டு...

♦ 'கிழக்கு செவக்கையிலே, கீரை அறுக்கையிலே' - சீவலப்பேரி பாண்டி படத்தில் இந்தப் பாடலைப் பாடியிருப்பவர் ராஜகோபால். (டீ.வி. புகழ் சந்தியா ராஜகோபாலின் கணவர்) இசை... ஆதித்யன். 'சீவலப்பேரி பாண்டி' காசெட் விற்பனை அமோகமாக இருப்பதைத் தொடர்ந்து, 'துறைமுகம், 'பக்காத் திருடன்' 'சின்னப் புள்ள' ஆகிய படங்களில் இசையமைத்துக் கொண்டிருக்கிறார் ஆதித்யன்.

"1994 - சினிமா இசை எப்படி இருக்கிறது?"

"பழைய இட்லி சாம்பார்தான். ஆனால் புத்தம் புதிய அலுமினிய தாளில் பேக்கிங் செய்யப்பட்டு வருகிறது... ஒலியமைப்பில், புதுமை காட்ட, இப்போ நிறைய நவீன வசதிகள் இருக்கு. அதை வெச்சு, பழையதையே, புது



இசை போல தர முடியுது. ஜனங்களுக்குப் பிடிச்சா சரிதான்" என்கிறார் ஆதித்யன்.

♦ "மைந்தன்' அப்படின்னா என்ன...? ஐயா, உங்களுக்குத் தெரியுமா? அம்மா... நீங்க சொல்லுங்க" என்று கிராமத்து ஜனங்களிடம் கேட்டிருக்கிறார் இயக்குநர் புகழேந்தி...

"இது கூட தெரியாம இருக்குமா? 'மைந்தன்'னா மகன்..." ஊர்ப் பெரிசுகள் சட்டென்று பதில் தந்ததும்தான் உயிரே வந்ததாம்!

'மைந்தன்' என்று செந்தமிழ்ப் பெயர் வைத்தால் பாமர மக்களுக்குப் புரியுமா?" என்று பலரும் கிளப்பி விட்டதில் வாடிப் போயிருந்தாராம்.

நியாயம்தானே? 'டூயட்', 'ஜென்டில்மேன்' போன்ற ஆங்கில டைட்டில்கள்தானே எல்லாருக்கும் புரிகிறது!

♦ சமீபத்தில் லண்டன் போயிருந்த சுகன்யா, அங்கு 'லிமோசின்' காரில் பயணம் செய்த சொகுசை இன்னமும் மறக்காமலிருக்கிறார். காரணம் அது சாதாரணக் கார் அல்ல; ராஜ பரம்பரையினரும் பெரும் பெரும் கோடீஸ்வரர்களுமே வைத்திருக்கும் கௌரவத்துக்குரிய விஷயம் அது. "வெண்ணெய் போல் வழுக்கிக் கொண்டு ஓடும் அந்தக் காரை வாங்க வேண்டுமென்றுதான் நினைத்தேன். ஆனால் நமது இந்தியச் சாலைகளுக்கு அது ஒத்து வராது என்பதால் விட்டு விட்டேன்!" என்று வருத்தத்தோடு சொல்கிறார்.

- ஹர்ஷராஜ்

# அடுத்த இரண்டு மாதங்களில் உங்கள் வாயிற்கதவுகள் தட்டப்படப்போகின்றன.

# முதல் தட்டுக்கே திறந்து விடுங்கள்.



# 3 மணிக்கொடி

**மணிக்கொடி — போன வாரம்**

கிட்டு — நான்தான் — சாகிற தருவாயில் என் பெரியப்பா, தன் டைரிகளைப் படித்து, சுதந்திரப் போராட்டக் காலத்தை மையமாக வைத்து ஒரு நாவல் எழுதச் சொல்லி என்னிடம் கேட்டுக் கொண்டுவிட்டார்.

முதல் அத்தியாயத்தில் சுதந்திர தாகம் கொண்ட ராமசாமி - மணவாள நாயுடு அறிமுகமாகியிருக்கின்றனர். அரவிந்தர் பாண்டிச்சேரி வந்தது, இங்கிலாந்து அரசர் இந்தியா வரப் போவது போன்ற சில தகவல்களை அலசுகிறார்கள். அப்போது, ஒரு 25 வயதுப் பெண், ராமசாமியைத் தேடி வருவதோடு சென்ற வாரம் - தொடரும்.

ராமசாமி ஒரு நாற்காலியை நகர்த்திப் போட்டார். அதில் அந்தப் பெண் உட்கார்ந்து கொண்டாள். மணவாளன் மறுபடியும் ஊஞ்சலில் உட்கார, ராமசாமியும் அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டார்.

"எம்பேரு அஞ்சனா தேவி. என்னோட பெரிய அண்ணா பேரு அருணாசலம். லண்டன்ல இண்டியா ஹவுஸ் ஹாஸ்டல்ல தங்கி மேல்படிப்புப் படிச்சிண்டிருக்கான். சட்டப் படிப்பு. அந்த ஹாஸ்டலை நிர்மாணிச்சவர் ஷியாம்ஜி கிருஷ்ண வர்மான்னு கேள்விப்பட்டிருக்கலாம்."

"ஆகா! அவரைத் தெரியாத புரட்சியாளர்கள், தேசபக்தர்கள் இந்தியாவில உண்டா என்ன?"

"இண்டியா ஆபீஸ்ல போன வருஷம் ஜூலை மாசம் நடந்த ஒரு விழாவப்ப மதன் லால் திங்ராங்கிற ஒரு இருபத்திரண்டு வயசு மாணவன், சர் கர்ஸான் வில்லிங்கிற வெள்ளைக்கார அதிகாரியைச் சுட்டுக் கொன்ன செய்தியும், அதற்குத் தண்டனையா அவன் தூக்கிலே போடப்பட்ட செய்தியும் நமக்குத் தெரியும். ஆனா அவனுடைய கடைசி வாக்குமூலம் இன்னதுன்னு விவரமா நமக்குத் தெரியுமோ?"

"தெரியாது."

"அதை எங்க அண்ணா எப்படியோ வாங்கி எனக்கு அனுப்பி வெச்சிருக்கான். எனக்குத் தெரிஞ்ச தமிழ்ல அதை நான் மொழியாக்கம் பண்ணி இப்ப எடுத்து வந்திருக்கேன், உங்க கிட்ட காட்டறதுக்காக. அதை அச்சடிச்சு ரகசியமா மக்களிடத்துல விநியோகிக்கணும்கிறது எங்கண்ணாவுடைய விருப்பம்... படிச்சுப் பாக்கறேளா?" என்ற அஞ்சனாதேவி தன் கையில் இருந்த துணிப் பையிலிருந்து குண்டூசி குத்தப்பட்ட ஒரு காகிதக் கற்றையை ராமசாமியிடம் நீட்டினாள்.

அதைப் பெற்றுக் கொண்ட அவர், "படிக்கிறேன்; கேக்கறீங்களா மணவாளன்?" என்றார்.

"கரும்பு தின்னக் கூலியா?"

"இவர் யாருன்னு நீங்க கேக்கலையே? மிஸ்டர் மணவாளநாயுடு. காங்கிரஸ்காரர். வெள்ளைக்காரங்க மேல ரொம்பக் கோபக்காரரும் கூட."

"தெரியும் சார். கேள்விப்பட்டிருக்கேன். ஒரு தரம் இவரை எங்கப்பாவுடைய சிநேகிதர் லட்சுமணன் சார் வீட்டில பார்த்துக் கூட

**ஜோதிர்லதா கிரிஜா**

இருக்கேன். ஆனா இவர் என்னைப் பார்க்கல்லே. இவர் யாருன்னு ஏற்கெனவே எனக்குத் தெரிஞ்சிருந்ததுனாலதான் தயக்கமில்லாம இந்தக் கடுதாசிகளை அவர் எதிர்ல உங்ககிட்டக் குடுத்தேன். விஷயத்தையும் சொன்னேன். இல்லைன்னா சொல்லி இருப்பேனா சார்?"

"கொஞ்சம் இப்படி வரேளா?"

காகிதக் கற்றையை ஊஞ்சலில் வைத்த ராமசாமி எழுந்து உள்ளே போனார்.

"அந்தப் பொண்ணுக்குக் காப்பி."

"அட! நான் சொல்லாம நீயே ரெடி பண்ணிட்டியே. என் தங்கக் கட்டி" என்று முனகிய ராமசாமி, விசாலம் அங்கில்லாத தால் செல்லமாய் அவள் கன்னத்தை இழைத்து விட்டுக் காப்பியை எடுத்துக் கொண்டு போனார்.

"முதல்ல காப்பியைக் குடிங்கம்மா."

"நீங்க?"

"நாங்க ரெண்டு பேரும் இப்பத்தான் குடிச்சோம்மா. நீங்க சாப்பிடுங்க..."

"ஏன்யா? மறுபடியும் குடிக்கக் கூடா துன்னு சட்டமா?" என்று மணவாள நாயுடு கேட்க, அவர் சிரித்துக் கொண்டே அடுக் களைக்குப் போனார்.

அஞ்சனாதேவி பிகு பண்ணாமல் காப்பியை எடுத்துப் பருகினாள். அவள் குடித்து முடித்ததும் ராமசாமி படிக்கத் தொடங்கினார்:

"...... என்னைத் தற்காத்துக் கொள்ளு வதற்காக நான் எதையும் சொல்லப் போவ தில்லை. நான் விளக்கப் போவதெல்லாம் எனது செய்கை சரியானதே என்பதைத்தான். இங்கிலாந்து நாட்டு நியாய சபைக்கு என் னைக் கைது செய்வதற்கோ, தூக்கிலிடு வதற்கோ எந்த உரிமையும் கிடையாது என் பதை நான் அறிவேன். அதனால்தான் நான் எனக்காக வாதாட வக்கீல் வைத்துக் கொள்ள வில்லை. இங்கிலாந்து நாடு ஜெர்மானியர்கள் வசமாகிப் போனால், ஜெர்மானியர்களோடு சண்டை போடுவது ஓர் இங்கிலாந்து நாட்டுக்காரனுக்கு எவ்வளவு நியாய மானதோ அதே அளவுக்கு ஆங்கிலேயரை எதிர்க்கும் எனது செயலும் நியாயமானதே. கடந்த ஐம்பது ஆண்டுகளில் எட்டுக் கோடி இந்தியர்கள் கொல்லப்பட்டுள்ளமைக்கு நான் ஆங்கிலேயர்களையே பொறுப்பாக்குவேன். எங்கள் நாட்டிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் பத்துக் கோடிப் பவுன் மதிப்புள்ள செல் வத்தை நீங்கள் இங்கிலாந்துக்கு எடுத்துச் சென்று வருகிறீர்கள். இந்தியாவில் தேசபக்தர் களை அநியாயமாக நாடு கடத்தியும் தூக்கிலிட்டும் வருகிறீர்கள். இங்கிலாந்தி லிருந்து ஆங்கிலேயர்களை இந்தியாவுக்கு இட்டுச் சென்று அங்கே நூறு பவுன் மாதச் சம்பளம் ஒவ்வோர் ஆங்கிலேயனுக்கும் கொடுக்கிறீர்கள். இந்த நூறு பவுனில் - கேளிக்கைகளிலும் ஆடம்பரங்களிலும் நீங்கள் செலவு செய்யும் இந்த நூறு பவுனில் - ஆயிரம் இந்தியர்கள் எளிதாகத் தங்கள் வாழ்க்கைத் தேவைகளைப் பெற்று விடு வார்கள்.

"இங்கிலாந்தை ஆக்கிரமிக்கும் உரிமை எவ்வாறு ஜெர்மானியர்களுக்கு இல்லையோ, அவ்வாறே இந்தியாவை ஆக்கிரமிக்க ஆங்கி லேயர்களுக்கு எந்த உரிமையும் இல்லை. எங்கள் புண்ணிய பூமியை ஆக்கிரமித்து மாசு படுத்திவரும் ஆங்கிலேயர்களைக் கொல்லுவது என்பது இதனால் நியாய மானதே. உங்களிடம் எனக்கு இரக்கம் காட்டச் சொல்லி நான் கெஞ்சப் போவதில்லை. உண்மையில், நீங்கள் என்னைத் தூக்கிலிடுவதையே நான் விரும்புகிறேன். அப்போதுதான் எங்கள் நாட்டு மக்களுக்கு உங் களைப் பழிவாங்கும் உணர்ச்சி வேகம் எழும்.

"இவ்வாறு 'நீ என்ன சொல்ல விரும்புகிறாய்?' எனும் மாஜிஸ்தி ரேட்டின் கேள்விக்கு மதன்லால் திங்ரா பதில் சொன்னான்."

"அடாடா. என்ன நெஞ்சுரம்! எவ்வளவு தைரியம்! உயிரைத் துச்சமா மதிக்கணும்னா எவ்வளவு தேசபக்தி இருக்கணும்?" என்றார் மணவாளன்.

"வார்த்தைக்கு வார்த்தை அப்படியே மொழியாக்கம் பண்ணி இருக்கிறதாச் சொல்ல முடியாது. ஆனா எல்லா வாக்கியங்களோட மையக் கருத்தையும் உள்ளபடி தமிழாக்கத்திலே வெளிப்படுத்தி இருக்கேன், சார்!"



“அது போறுமேம்மா. மணவாளன், உங்க சொந்தக்காரர் ஒருத்தர் ப்ரெஸ் வச்சிருக்காரில்ல?”

“வெச்சிருக்காரு. ஆனா, அந்தாளு நம்ம டைப்பா, இல்லியான்னு சரியாத் தெரியலியே.”

“மெதுவாப் பேச்சுக் குடுத்துக் கண்டுபிடிக்கப் பாருமேன். அதைக் கண்டுபிடிக்கிறது பெரிய காரியமா என்ன?”

“பார்க்கறேன் அய்யர்வாள்!”

“என்னைப் பத்தி உங்களுக்கு யாரு சொன்னா?” என்று ராமசாமி அஞ்சனா தேவியைப் பார்த்துக் கேட்டார்.

“எங்க குடும்ப நண்பர் ஒருத்தர் இருக்கார் தியாகராஜன்னு. அவர்தான் சொன்னார் சார்.”

“யாரு? டி.டி. தியாகராஜ முதலியாரா?”

“ஆமா. அவரேதான்.”

“உங்க அண்ணா லண்டன்ல செயல் படுகிற புரட்சிக்கார கும்பல்ல ஒரு மெம்பர், அப்படித்தானே?” என்று மணவாளன் கேட்டார்.

“ஆக்டிவ் மெம்பர் சார்! எனக்குப் பல விஷயங்கள் அப்பப்போ தெரிவிப்பான். ரொம்ப சுவாரஸ்யமா இருக்கும். உதாரணமா சர்ச்சில்னு ஒரு எம்.பி., மதன் லால் திங்ராவுடைய கடைசி அறிக்கையை ‘தேசபக்தியைக் குறிக்கிற மிகச் சிறந்த சொற்கள்’ அப்படின்னு தம்மையும் மறந்து பாராட்டி இருக்கார். லாயிட் ஜார்ஜோ அவனை ரொம்பவும் புகழ்ந்தாராம்.”



“லாயிட் ஜார்ஜ்ங்கிறது யாரு?” என்றார் மணவாளன்.

“இங்கிலாந்து மந்திரி சபையில நிதி அமைச்சரா இருக்கிறவர். அங்க சேன்சலர் ஆப் தி எக்ஸ்செக்கர்னு சொல்றாங்க.”

“அப்ப வெள்ளைக்காரங்கள்ளயும் நல்லவங்க இருக்காங்கன்றீங்க இல்லியா, அய்யர்வாள்?”

“நியாயம் தெரியாதவங்களா அவங்க? நல்லாத் தெரியும் நாயுடுகாரு. தெரிஞ்சே பண்ற தப்புத்தான். ஊர்லயும் உலகத்துலயும் மத்தவங்க தப்புப் பண்றப்ப மத்தியஸ்தத்துக்குப் போகத் தெரியல்ல? தன்னோட காரியம்னு வர்றப்ப வேற நியாயந்தான் நாயுடுகாரு.”

“அப்புறம்? இன்னும் ஏதாவது சுவாரசியமான விஷயங்கள் உண்டாம்மா லண்டன் புரட்சியாளர்களைப் பத்தி?”

“மதன்லால் திங்ரா தன்னோட உடல் இந்து முறைப்படி தகனம் பண்ணப்படணும்னு தன்னோட கடைசி ஆசையை வெளியிட்டானாம். ஆனா இங்கிலாந்து சர்க்கார் ஒப்புக்கல்லே. அங்க இருக்கிற வீர சாவர்க்கர் அவனோட உடலைத் தங்கிட்ட ஒப்படைக்கச் சொல்லி விடுத்த வேண்டுகோளுக்கும் அவா செவிசாய்க்கலையாம்.”

“அட, பாவிகளா!”

“ஆமா, அதனால அவனோட உடலைப் புதைச்சாளாம்.”

“என்ன அல்பமான மனுஷங்க!”

“ரொம்பக் கேவலம்தான்... வீர சாவர்க்கர் 1857 ஆம் வருஷத்துச் சிப்பாய்க்கலகத்தைப் பத்தி ‘எரிமலை’ங்கிற தலைப்பில ஒரு புத்தகம் எழுதி இருக்கார். நீங்க கூடக் கேள்விப்பட்டிருப்பேள்.”

“கேள்விப்பட்டிருக்கோம். அதனோட இங்கிலீஷ் வடிவம் ஹாலண்ட்ல பிரசுரம் ஆச்சுன்னும் கேள்விப்பட்டிருக்கேன்.”

“அந்தப் புத்தகந்தான் மதன்லால் திங்ராவுக்கு இன்ஸ்பிரேஷனாம், சார். அதைப்



## அருள்வாக்கு

**யா**க்ஞவல்கியர் வீட்டை விட்டு விட்டு ஸந்நியாஸியாகப் போவதற்கு உத்தேசம் பண்ணி, இரண்டு பத்னிகளுக்கும் சொத்தைப் பாகம் பிரித்துக் கொடுக்கிறார். காத்யாயனி சொத்திலேயே திருப்தி அடைந்து விடுகிறாள். ஆனால் மைத்ரேயியோ, "இந்தச் சொத்திலெல்லாம் இல்லாத சௌக்யம் ஸந்நியாஸத்தில் இருக்கிறது என்பதால்தானே இதை விட்டு அதற்குப் போகிறீர்கள்? அப்படிப்பட்ட அந்த ஸௌக்யம் என்ன? அதை எனக்கும் தான் எடுத்துச் சொல்லுங்களேன்!" என்று கேட்கிறாள். அதற்கு யாக்ஞவல்கியர், "நீ எப்போதுமே எனக்குப் பிரியமானவளாக இருந்திருக்கிறாய். இப்போது இந்தக் கேள்வியைக் கேட்பதால், இன்னமும் அதிகப் பிரியமானவளாக ஆகிவிட்டாய்" என்று சொல்லி, உபதேசிக்க ஆரம்பிக்கிறார். இந்தப் பிரியம் என்பது என்ன என்பதையே தத்வார்த்தமாக விஸ்தாரம் செய்கிறார். "பதியிடம் பத்தினிக்குள்ள பிரியமும், பத்தினியிடம் பதிக்குள்ள பிரியமும், இப்படியே புத்திரரிடத்திலுள்ள பிரியமும், செல்வங்களில் உள்ள பிரியமும், எல்லா விதமான பிரியங்களுமே எதனிடம் செலுத்தப்படுகின்றனவோ அந்தப் பதி, பத்தினி, புத்ரர், செல்வம், மற்ற விஷயங்கள் இவற்றின் பொருட்டாக உண்டாவதில்லை. இப்படிப் பிரியமாக இருப்பதால் ஒருவனுக்குத் தன் நிறைவு ஏற்படுகிறதல்லவா? தன் ஆத்மாவுக்கு இது ஸந்தோஷம் உண்டாக்குகிறது என்பதால்தானே ஒன்றிடம் பிரியத்தைச் செலுத்துகிறான்? அப்படியானால் அந்த ஆத்மா, அன்பு ஸ்வரூபமாக, ஆனந்த ஸ்வரூபமாக இருக்கிறது என்பதுதானே அர்த்தம்? அதை மட்டும் பிரித்துத் தெரிந்து கொள்வதற்காகத்தான், அதுவரை பிரியமாக இருந்த எல்லாவற்றையும் விட்டு விட்டு, ஸந்நியாசியாகப் போவது. அதைத் தெரிந்து கொண்டபின், அதற்கு அந்நியமாக எதுவுமே இல்லை என்று ஆகிவிடும். எல்லாமும் பிரியமானதாகி விடும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

படிச்சுட்டுத்தான் அவன் தேசபக்தனாயிட்டானாம்."

"அது சரி, வரவேற்கலாம். ஆனா உங்களை மாதிரி பெண்கள் தேசபக்தி, புரட்சி இயக்கம்னு வரும் போதுதான் யோசனை பண்ண வேண்டியிருக்கு!"

"ஏன் சார்? என்ன யோசனை?"

"ஆம்பளைங்க நிறைய இருக்கிற இந்த இயக்கத்துல உங்கள மாதிரி சில பொண்ணுகளையும் சேர்த்துண்டா, உங்களைப் பாதுகாக்கறதும், பத்திரமா வீட்டுல கொண்டு போய்ச் சேர்க்கிறதுமே எங்களுக்கு அதிகப்படியான வேலையா இருக்கப் போறது. பூனைக் குட்டியை மடியில கட்டிட்டு சகுனம் பார்க்கிற கதைதான்" என்று மணவாளன் சிரித்துக் கொண்டே சொல்ல, சிரிப்பையடக்கும் முயற்சியில் ராமசாமி தலையைத் தாழ்த்திக் கொண்டார்.

**அ**டுக்களையில் இருந்தபடி இவர்களது உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த விசாலமும் குஞ்சம்மாவும் ஒருவரை ஒருவர் நோக்கிக் கண்சிமிட்டிப் புன்னகைப் பரிமாற்றம் செய்து கொண்டார்கள்.

"ஏங்கா? இவளுக்குக் கலியாணம் ஆகி இருக்குமோ?"

"மெதுவா எட்டிப் பாரேன் நீதான்."

"எட்டிப் பார்த்துக் கண்டுபிடிக்கிற மாதிரி இல்லே. நன்னா இழுத்துப் போத்திண்டு உக்காந்துண்டிருக்கா."

"எத்தனை வயசு இருக்கும் அவளுக்கு? இருபத்தஞ்சாவது ஆகி இருக்கணும்."

"இருக்கும், இருக்கும். அப்ப கல்யாணமும் ஆகி இருக்கும். ஆம்படையான் தண்ணி தெளிச்சு விட்டுட்டான் போல இருக்கு. புருஷனுக்கு அடங்காத பொண்ணா இருந்திருப்பா. இல்லேன்னா இப்படிச் சரிக்குச் சரியா அசலாத்துப் புருஷாளோட — அதுவும் நாற்காலியில உக்காந்துண்டு பேசறதுக்குத் தைரியம் வருமா?"

"அப்ப, என்னைப் பூனைக் குட்டிங்கறேள், நாயுடு சார்" என்று கேட்டு விட்டு அஞ்சனா தேவி நகைச்சுவை உணர்வுடன் வாய் விட்டுச் சிரித்தாள்.

"அதுக்கில்லேம்மா. நீங்க எதுக்கும் பத்துத் தரம் நல்லா யோசிச்சுட்டுத்தான் இதுல எறங்கணும். நாங்க ஆம்பளைங்க எப்படியோ சமாளிச்சுப்போம். ஒரு இடத்துலேருந்து தப்பிக்கணும்னா சுவரேறிக் குதிச்சு சட்னு ஓடிடுவோம் நாங்க. நீங்க செய்வீங்களா?"

"அதுக்கும் நாங்க தயாராத்தான் இருக்கோம். மேடம் காமா அயல்நாட்டில போய்ப் பண்ணிண்டிருக்கிறதை சின்ன அளவில

# மகாநிதி




ஆழ்வார்பெட் பெனிஃபிட் ஃபண்ட் - 3 வருட டெபாசிட்டுகளுக்கு 21% வரை வட்டி வழங்குகிறது. அந்த வட்டியும் மாதம்தோறும் அளிக்கப்படுகிறது. இதை நிலையானதொரு வருமானம் போலவே நீங்கள் பெற்று மகிழலாம். ABFL 10,000-க்கு மேற்பட்ட உறுப்பினர்களுடன், நற்பெயரும் நன்மதிப்பும் பெற்ற நல்லதொரு நிதி நிறுவனம் ஆகும். இது மிக மகத்தானதொரு வளர்ச்சியைக் கண்டிருக்கிறது - டெபாசிட்டுகளில் 18 மடங்கு உயர்வு... மேலும் மூலதனம் மற்றும் ரிசர்வுகளில் 280% உயர்வு... அதுவும் மிகக் குறுகிய காலத்தில்! வீட்டு வசதிக் கடன்கள், நகைக் கடன்கள், பிக்சட் டெபாசிட், இரட்டைப் பயன் (Double Benefit) டெபாசிட் மற்றும் பென்ஷன் தாரர்களின் பெட் டெபாசிட் திட்டங்கள் போன்ற பலப்பல திட்டங்களை இந்த நிறுவனம் அளிக்கிறது.

## வீடுகளின் பேரில்

## க ட ன்

- சென்னை நகர எல்லைக்குள் உள்ள ஃபிளாட்டுகள் / வீடுகளுக்கு
- பூர்த்தி செய்ய வேண்டிய படிவங்கள் மிகக் குறைவு
- விரைவாகப் பரிசீலனை செய்து வழங்கப்படும்
- கடனைத் திருப்பிச் செலுத்த இணக்கமான திட்டம்

Insight-4197





நம்பிக்கைக்குரிய நிதி நிறுவனம்

**ஆழ்வார்பெட் பெனிஃபிட் ஃபண்ட் லிமிடெட்**

கூட்டாண்மை அலுவலகம் : 43-B, சி.பி. ராமசாமி ரோடு
ஆழ்வார்பேட்டை, சென்னை 600 018
தொலைபேசி : 499 4809
உறுப்பினர்களுக்கு மட்டும்

கிளைகள் : ★ அண்ணா நகர் ★ அடையாறு ★ அசோக் நகர் ★ தி. நகர் ★ நங்கநல்லூர் ★ தாம்பரம் ★ ஜார்ஜ் டவுன் ★ பாண்டிச்சேரி ★ கோயம்புத்தூர்






எங்களால சொந்த நாட்டில பண்ண முடியாதா?”

“அப்படி மேடம் காமா பெரிய அளவில என்ன பண்ணிண்டிருக்கா?”

“ஷியாம்ஜி கிருஷ்ணவர்மா, இண்டியன் சோஷியாலஜிஸ்ட்ங்கிற பேர்ல நடத்தற இங்கிலீஷ் நியூஸ்பேப்பரும், மேடம் காமாவுடைய வந்தே மாதரம்கிற பத்திரிகையும் அமெரிக்காவில தாராளமா அங்க வாழற இந்தியர்களிடத்துல - குறிப்பா சீக்கியர்களிடத்துல - நிறையப் புழங்கிண்டிருக்காம். அமெரிக்க அரசாங்கமும் அமெரிக்க ஜனங்களும் நம்ம பக்கந்தானாம். அவாளுடைய அனுதாபம் இந்தியா மேல இருக்கிறதுனால இந்தப் பத்திரிகைகள்ளாம் அமெரிக்காவுக்குள்ள வரக்கூடாதுன்னு தடுக்கப் பார்த்துதாம் இங்கிலாந்து. ஆனா எதுவும் நடக்கல்லே. அமெரிக்க சர்க்கார் இங்கிலாந்தோட கோரிக்கையைக் காதுலயே போட்டுக்கல்லையாம். இது மாதிரி உலக நாடுகள் எல்லாம் இங்கிலாந்துக்கு எதிரா அணி திரண்டு அதைக் கண்டிக்கத் தொடங்கினா நமக்கு அது சாதகமாத்தானே முடியும்?”

“அதுக்கெல்லாம் மசியக்கூடியவனா இந்த இங்கிலீஷ்காரன்? எனக்குத் தோணல்லேம்மா... பார்க்கலாம். திலகர் திரும்பி வர்றதுக்கு இன்னும் நாலு வருஷம் இருக்கே? அதை நினைச்சாத்தான் மலைப்பா இருக்கு. அவர் மாதிரி ஒரு தலைவர் இந்தியாவில் ஒவ்வொரு ராஜதானியிலயும் வரணும்மா. வந்தா, வெள்ளைக்காரன் இருந்த இடம் இங்க புல்லு முளைச்சுப் போயிடும்.”

அப்போது, “சார்!” என்ற அதிகாரமான குரல் வாசற்புறத்திலிருந்து வந்தது.

“யாரு?” என்றபடி ராமசாமி ஊஞ்சலிலிருந்து இறங்கினார். எழுந்து போனார். வாசலில் ஒரு சிவப்புத் தொப்பிப் போலீஸ்காரர் நின்று கொண்டிருந்தார்.

“ராமசாமிங்கிறது?”

“நான்தான்.”

“உங்க வீட்டைச் சோதனை போடணும்.”

அதற்குள் மற்றொரு கான்ஸ்டபிள் வந்தார். பூட்டி வைக்கப்பட்டிருந்த அலமாரிகள் திறந்து காட்டப்பட்டன. அக்கு வேறு ஆணி வேறாய் அதை இரண்டு அரசாங்க ஊழியர்களும் புரட்டிப் பார்த்தனர். மேசை அறை, அதன் இழுப்பறை இரண்டும் சின்னாபின்னப்படுத்தப்பட்டன. ஊஞ்சலில் வைத்து விட்டு வந்த மதன்லால்திங்ரா பற்றிய காகிதக் கற்றை நினைவுக்கு வர, ராமசாமிக்கு நா உலர்ந்து போயிற்று.

(தொடரும்)

# மனிக்கோல

"இதென்ன ஒருத்தர் மாத்தி ஒருத்தரா இன்னிக்கு வந்துண்டே இருக்கா?" என்றவாறு திரும்பிய குஞ்சம்மா புன்னகையுடன் அடுக்களைக்குள் நுழைந்து கொண்டிருந்த அஞ்சனாதேவியைப் பார்த்துத் திகைப்படைந்தாள்.

"ஒரு நிமிஷம் கொஞ்சம் அடுப்பை விட்டு நகர்றேளா?" என்ற அஞ்சனாதேவி குஞ்சம்மாவைப் பிடித்துத் தள்ளாத குறையாக அப்பால் நகர்த்தி விட்டுத் தன் கையில் இருந்த காகிதக் கற்றையை நீளவாட்டத்தில் சுருட்டிச் சுருட்டி, எரிந்து கொண்டிருந்த அடுப்புக்குள் செருகினாள். அது எரியத் தொடங்கியதும் அடுக்களைக் கதவையும் நன்றாகச் சாத்தினாள்.

"காகிதம் எரியற வாசனை உள்ளே வரப் போற போலீஸ்காரனுக்கு மூக்குல பட்டுடப் படாது. அதுக்குத்தான். இது கொஞ்சம் ரகசியமான காகிதம். ஒரு துளி சின்னத் துணுக்கு கூட விட்டுப் போகாதபடி முழுக்க முழுக்க எரிச்சுடணும்..." என்று அவள் மெல்லிய குரலில் கூறியதைக் குஞ்சம்மா வாய்பிளந்து கேட்டபடி அடுப்பருகே நின்றாள். விசாலமும்தான்.

காகிதக் கற்றை முழுவதும் நன்றாக எரிந்த பிறகு அடுக்களைக் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தாள் அஞ்சனா.

தாம் விட்டுச் சென்ற காகிதக் கற்றை ஊஞ்சற்பலகையில் இல்லை என்பதையும், அஞ்சனாதேவி அங்கு இல்லை என்பதையும், மணவாளனின் சாடையான புன்சிரிப்பையும் பார்த்த பிறகுதான் ராமசாமிக்கு அப்பாடா என்றிருந்தது.

தெம்புடன் ஊஞ்சலில் திரும்பவும் உட்கார்ந்து கொண்டு, "உம்ம்... நன்னாத் தேடிக்குங்க..." என்றார் புன்னகையுடன்.

அந்த வீடே தலைகீழாய்ப் புரட்டப்பட்டது. போலீஸார் தேடிய துப்பு எதுவும் கிடைக்கவில்லை.

சோர்வுடன் கிளம்ப முற்பட்ட இருவரும், "உங்களுக்குத் தொல்லை குடுத்துட்டோம், சார். எங்க டியூட்டி. என்ன செய்யறது?" என்று சொல்லி வருந்தினார்கள்.

இருவரும் சென்ற பிறகு ராமசாமி வாசற்கதவைத் தாளிட்டு விட்டு வந்து மறுபடியும் ஊஞ்சலில் உட்கார்ந்தார். அஞ்சனாதேவியும் தனது நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

"நல்ல வேலை செஞ்சேள். அந்தப் போலீஸ்காரங்க ரெண்டு பேர் கையிலயும் நான் ஊஞ்சல்ல போட்டுட்டுப் போன காகிதக் கத்தை கிடைச்சிருந்தா என்ன கதி ஆகியிருக்கும்?" என்று பெருமூச்சு விட்டார் ராமசாமி. அஞ்சனாதேவி மீது பதிந்திருந்த அவரது பார்வையில் அளவிடற்கரிய நன்றி இருந்தது.

"எனக்குக் கூட அதை அப்புறப்படுத்தணும்னு தோணல்லே, அய்யர்வாள். இந்தம்மா தான் வாசற்பக்கம் எட்டிப் பார்த்துட்டுப் போலீஸ்காரனோட செகப்புத் தொப்பியைப் பார்த்ததும் சரேல்னு எழுந்து வந்து, அந்தக் காகிதக் கத்தையைக் கையில எடுத்துக்கிட்டு உங்க வீட்டு சமையக்கட்டுக்குள்ளே விடுவிடுன்னு நொழைஞ்சுட்டாங்க. அதைப் பார்த்ததும்தான் எனக்குப் புரிஞ்சிச்சு... ஏம்மா? அந்தக் காகிதங்களை எரிச்சுட்டீங்க தானே?" என்றார் மணவாளன்.

"ஆமா. கம்ப்ளீட்டா ஒரு துணுக்குக்கூட இல்லாதபடி எரிச்சு சாம்பலாக்கியாச்சு."

"இப்ப என்ன செய்யறது? அச்சுக்குக் கொடுக்கிறதா இருந்தோமே? எல்லாம் பாழாயிடுத்தே?"

"ஒண்ணும் பாழாகல்லே, சார்! எங்கிட்ட எங்கண்ணா அனுப்பின இங்கிலீஷ் வெர்ஷன் இருக்கே? மறுபடியும் தமிழ்ல மொழி மாத்திட்டாப் போறது. இப்பக் கூட என்னால அந்த ஒரிஜினலைப் பார்க்காமயே இப்ப

ஜோதிர்லதா கிரிஜா

நான் உங்ககிட்ட கொடுத்த தமிழ் வாசகத்தை எழுதித் தர முடியும். ஏன்னா எனக்கு அது அப்படியே மனப்பாடமாயிடுத்து. அத்தனை தரம் படிச்சேனாக்கும்."

"அப்ப இங்கேயே உக்காந்து எழுதிக் குடுத்துடுங்கோ. இப்ப தானே சோதனை போட்டுட்டுப் போயிருக்காங்க போலீஸ்காரங்க? அதுக்குள்ள மறுபடியும் வர மாட்டா."

"ஒரு பேனாவோ பென்சிலோ தாங்கோ. அப்படியே கொஞ்சம் பேப்பரும்..."

ராமசாமி எழுந்து தமது அல மாரியை நோக்கி நடந்தார். அப் போது வாசற்பக்கத்திலிருந்து, "அப்பா, அப்பா" என்று ஒரு குழந்தை அழைக்கிற குரல் கேட் டது. மணவாளன் எழுந்து நின்று வாசற்கதவைத் திறந்ததும் மறுபடி யும், "அப்பா!" என்ற கூவலுடன் உள்ளே ஓடி வந்த சிறுவன் கூடத் தில் ஒரு நாற்காலியில் சிரித்த முகத் துடன் தன்னைக் கண்கொட்டா மல் பார்த்தபடி உட்கார்ந்திருந்த புதிய பெண்மணியைக் கண்டதும் முகம் முழுவதும் சிவப்பாகிப் போனான்.




"இங்க வாப்பா, கண்ணா, உம் பேரென்ன?"

வாயில் அடக்கி இருந்த பெரிய மிட்டாய் சரியான உச்சரிப்பைத் தடுக்க, "கங்காடழன்" என்று சொல்லி விட்டுத் தன்னைப் பிடிக்கக் கைநீட்டிய அஞ்சனா தேவியிடம் சிக்காமல் அவன் சமையற்கட் டுக்கு ஓடிப் போனான்.

நாற்காலியிலிருந்து எழுந்து வெள்ளைத் தாள்களை ராமசாமியிடமிருந்து வாங்கிக் கொண்ட அஞ்சனாதேவி, "பள்ளிக்கூடத்துல சேர்த்தாச்சா?" என்று கேட்டாள்.

"சேர்த்தாச்சு. ஒண்ணாங்கிளாஸ்ல படிச்சுண்டிருக்கான்."

**அ**ஞ்சனாதேவி தனது ஞாபகத்திலி ருந்து மதன்லால் திங்ராவின் வாக்குமூலத்தை விடுவிடுவென்று எழுதிச் சில நிமிடங்களுக் குள் ராமசாமியிடம் கொடுத்து விட்டாள்.

"ரெண்டொரு வார்த்தைகள் அங்க இங்க மாறி இருக்கு, சார். நான் முதல்ல கொடுத்ததே வார்த்தைக்கு வார்த்தை மொழிபெயர்ப் புன்னு சொல்ல முடியாதுதான்."

"அதைப் பத்தி என்னம்மா? நமக்கு வேண் டியது மதன்லால் திங்ராவோட ஆவேசமான

## அருள்வாக்கு

**ஸோ**மபானம் என்பது போதைப் பொருள் அல்லவே அல்ல. (அது intoxicating அல்ல.) "அர்த்த வாதம்" என்கிற முறையில், மிகைப்படப் பேசும்போது, வேதத்தில் ஓரிடத்தில், இந்திரன் ஸோமரஸத்தால் மதமடைந்து சத்ருவதம் பண்ணினான் என்று வருவதை வைத்துக் கொண்டு இப்படிக் குயுக்தி பண்ணுகிறார்கள். தேவ சரீர தத்வமே மநுஷ்ய தர்மங்களுக்கு மேலானது. அதுமட்டுமின்றி ருத்விக்குகள் ஏதோ பாட்டில் பாட்டிலாகவோ மொந்தை மொந்தையாகவோ குடித்த மாதிரிப் பேசுவது அடியோடு விஷயம் தெரியாத பேச்சு. ஒரு யாகத்தில், உரல் மாதிரியான ரூபத்தில் ரொம்பச் சின்னதாக உள்ள க்ரஹம் என்ற ஒரு பாத்திரத்தில், இத்தனை ஸோமரஸம் வடித்து ஹோமம் செய்ய வேண்டும். அதில் மீறுவதை 'ஹுத சேஷம்' என்று சாப்பிட வேண்டும் என்று சட்டம் இருக்கிறது. இம்மாதிரி ஒரு யாகத்தில் துளித் துளியாகச் செய்கிற ஸோம பானத்தையெல்லாம் சேர்த்தால் கூட ஒரு அவுன்ஸுக்கு மேல் வராது. இப்படிச் சாப்பிட்டு எவரும் மயக்கமடைந்ததும் கிடையாது. ஸோம ரஸம் என்பது அப்படியொன்றும் ருசியாகவும் இருக்கவில்லை என்கிறார்கள்.

ஸோம பானத்தை அந்தக் காலத்து காபி என்று சிலர் வியாக்கியானம் பண்ணிவிட்டார்கள்! ஸோமரஸம் உண்டாக்குகிற ஸந்தோஷத்தைப் பற்றி வேத மந்திரங்கள் இருப்பதால் இப்படித் தப்பர்த்தம் பண்ணிவிட்டார்கள். காபி சித்த விருத்தியைக் கெடுக்கிற வஸ்து. ஸோம ரஸம் சித்த சுத்தியை உண்டாக்குகிற வஸ்து. இரண்டையும் ஒன்று என்பது கொஞ்சம் கூடப் பொருந்தாது. அந்தக் காலத்தில் ஸம்ருத்தியாகக் கிடைத்துவந்த ஸோமலதை இப்போது கிடைப்பதே ரொம்பவும் அபூர்வமாகிக் கொண்டு வருகிறது. வேத தர்மங்கள்,

---

வாக்குமூலம்தான். அதாவது அவனோட கருத்து. வார்த்தைக்கு வார்த்தை அப்படியே இருந்தாகணும்னுட்டு ஒண்ணுமில்லே. அவனோட ஆவேசமான சாடலைக் கேட்டதுக்கு அப்புறமாவது நம்ம ஜனங்களுக்கு ரோசம் வருதான்னு பார்க்கலாம். இப்ப கூட நிறைய பேரு ஒரு அவநம்பிக்கையோடதான் காங்கிரஸ் கட்சியைப் பார்க்கறா. ஆயுத பலமும் படைபலமும் இருக்கிற ஒரு பெரிய சாம்ராஜ்ஜியத்தோட நாமாவது, மோதி ஜெயிக்கிறதாவது அப்படிங்கறாப்ல. ஆனா அடி மேலடி வெச்சா அம்மியும் நகரும்கிறது அசட்டுப் பழமொழி இல்லியே?"

"நம்ம இயக்கம் சிறுகச் சிறுக வளர்ந்தா நிச்சயம் ஒருநாள் வெள்ளைக்காரன் ஓடித்தான் போவான், அய்யர்வாள்."

"ஆனா வெறுமனே வருஷா வருஷம் ஒரு நகரத்துல கூட்டம் போட்டுப் பேசறதும் தீர்மானங்கள் போடறதும் வெள்ளைக்காரனை இந்த நாட்டை விட்டு விரட்டாது, சார். அதுக்கு இந்த மதன்லால் திங்ரா மாதிரி ஆட்கள் நிறைய பேரு உருவாகணும்" என்றாள் அஞ்சனாதேவி ஆவேசமாக.

# 5

**அ**ஞ்சனாவின் ஆவேசமான பேச்சைக் கேட்டு மகிழ்ந்து, "தீவிரவாதியா இருக்கிறதிலே தப்பில்லே; அதிலே நான் திலகர் கட்சி" என்றார் ராமசாமி.

"ஆனா திலகரோட மரியாதைக்குரிய கோபாலகிருஷ்ணகோகலேயோ ஒரு மிதவாதியா இருந்துண்டு மயிலே மயிலே இறகு போடுன்னு வெள்ளைக்காரங்கிட்ட கெஞ்சிண்டிருக்காரே? பல்லைக் காட்டிக் கெஞ்சிக் கேட்டு வாங்கற வஸ்துவா சுதந்திரம்? அவங்கிட்ட நாம எதுக்கு கெஞ்சறது? நம்ம வஸ்துவை ஒருத்தன் பிடுங்கி வெச்சுண்டா, அதை நாமும் அடிச்சுப் பிடிச்சுத் திரும்பி வாங்கிக்க வேண்டியதுதானே?"

"திலகர் தீவிரவாதியே ஒழிய, மதன்லால் திங்ரா மாதிரி பயங்கரவாதி கிடையாதும்மா."

"முள்ளை முள்ளால எடுக்கறதுல எந்தத் தப்பும் இல்லே, சார்!"

"ஆன்னா, கோபாலகிருஷ்ண கோகலே சொல்றதுலயும் ஒரு பாயிண்ட் இருக்கும்மா."

"என்ன சார் பாயிண்ட்?"

"அவர் என்ன சொல்றார்னா, இந்தியர்கள் வெள்ளைக்காரன் கீழே பல பதவிகள்ளயும் வேலைகளைச் செஞ்சு நிர்வாகத் திறமையை வளர்த்துக்கணும் முதல்லேங்கறார். நிர்வாகத்திறன் திடீர்னு வந்துடாதுதானே? அதனாலதான் அவர் சொல்றார். கொஞ்ச நாளுக்கு நாம வெள்ளைக்காரனைச் சகிச்சுண்டு பல முக்கியமான பதவிகளைக் கைப்பற்றணும் முதல்லேங்கறார். அதுக்கு அப்புறம் ஒரு வன்மையான போராட்டத்துல ஈடுபட்டு வெள்ளைக்காரன்கிட்டேருந்து ஆ[illegible] பிடுங்கிடணும்கறார். அது சரியான வழி இல்லைன்னும் நாம ஒரேயடியா [illegible]. [illegible]கில்லே. மிதவாதக்காராளையெல்லா...



**ஆசாரங்கள் எல்லாம் நசித்து வருவதற்கு ஏற்றாற்போல், ஸோம யாகங்களுக்கு ஜீவாதாரமாக இருக்கப்பட்ட கொடியும் க்ஷீணித்துக் கொண்டே வந்திருக்கிறது. சமீபத்தில், கொல்லங்கோடு ராஜா, ஸோம யாகம் எங்கே நடந்தாலும் அதற்கு ஸோம லதை கொடுப்பதென்று வைத்துக் கொண்டிருந்தார். காபிக்கும் இந்த ஸோமலதைக் கும் ஒரு சம்பந்தமும் இல்லை.**

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

வெள்ளைக்காரனுக்கு வால்பிடிக்கிறவான்னு சொல்றதும் தப்பு. அவாளுக்கும் தேசபக்தி இருக்கு. வழிதான் வேறயா இருக்கு."

"என்ன அய்யர்வாள் ரெண்டு விதமாவும் பேசறீர்?" என்றார் மணவாளன்.

"ரெண்டும் பேசலைங்காணும். எத்தனை கோகலேக்கள் வந்தாலும் என்னை மாத்திக்க மாட்டேன். நான் திலகர் கட்சிதான். ஆனா கோகலேயை அப்படியே முழுக்க முழுக்கத் தள்ளிட முடியாதுங்கிறதுக்காகச் சொல்ல வந்தேன்."

சில நொடிகளுக்கு எல்லாரும் மவுனமாக இருந்தார்கள். பிறகு அஞ்சனாதேவி எழுந்து கொண்டாள்.

"அப்ப நான் வரட்டுமா, சார்?"

"செய்யுங்கோ."

அஞ்சனா மறந்து போன ஒன்றை ஞாபகப்படுத்திக் கொண்ட அவசரத்துடன், விரைந்து சென்று சமையற்கட்டின் வாயிலில் நின்று, "நான் போயிட்டு வரேன், மாமி" என்று பொதுவாய்ச் சொன்னாள்.

விசாலமும் குஞ்சம்மாவும் தலையசைக்க, அவள் கூடத்தில் புத்தகம் படித்துக் கொண்டிருந்த கங்காதரனின் கன்னத்தில் தட்டி விட்டு ஓட்டமும் நடையுமாய் வாசலுக்குப் போனாள்.

அவள் பின்புறத்தையே பார்த்தபடி நின்ற குஞ்சம்மா, "மாமியாமே மாமி. என்னைப் பார்த்தா மாமியாட்டமா இருக்கு?" என்று தனக்குள் எரிச்சலுடன் சொல்லிக் கொண்டாள்.

**வீ**ட்டையடைந்த அஞ்சனா, அவசரமாய்க் காலணிகளை உதறி விட்டு, "அப்பா, அப்பா!" என்று கூப்பிட்டுக் கொண்டே அவரது அறையினுள் விரைவாக நுழைந்தாள்.

நாளிதழிலிருந்து ஒரு முக்கியமான பகுதியைக் கத்திரிக்கோலால் வெட்டிக் கொண்டிருந்த ராஜாராமன் தலையை உயர்த்திப் பார்த்தார்.

"என்னம்மா? ஒரே பரபரப்பாத் தெரியறே?"

"ஆமாம்ப்பா. அந்த காங்கிரஸ்காரர் ராமசாமி வீட்டுக்குப் போயிருந்தேம்ப்பா."

"அட, எங்கிட்ட சொல்லவே இல்லியே நீ? சொல்லி இருந்தா நானும் வந்திருப்பேனே?"

"முதல் தடவையா போனதாலே சொல்லல்லேப்பா. போய், என்ன ஏதுன்னு ஓரளவுக்காவது தெரிஞ்சுண்டு வந்த பிற்பாடு உங்ககிட்ட சொல்லலாம்னு இருந்தேம்ப்பா. மனுஷாளை எடை போடற சாமர்த்தியம் உங்களுக்குப் போறாது; எல்லாரையும் நம்பிடறேள். அண்ணாவைப் பத்தியும் அவனோட லண்டன் நடவடிக்கைகளைப் பத்தியும் எடுத்த எடுப்பில அவர்கிட்ட சொல்லிடப் போறேளேன்னு எனக்குப் பயம். அதான் அவர் எப்படிப்பட்ட ஆளு, என்ன, ஏதுன்னு தெரிஞ்சுண்டு வரலாம்னு போனேன். ஆனா அவரைப் பார்த்ததுமே புரிஞ்சுடுத்து அவர் எப்படின்னு!"

ராஜாராமன் புன்னகை செய்தார். மனிதர்களை எடை போடும் கெட்டிக்காரத்தனம் தமக்குப் போதாது என்பதில் மனைவியும் மகளும் ஒரே மாதிரியான கருத்துக் கொண்டிருப்பதை நினைத்துத்தான். நிறைய பேரிடம் அவர் ஏமாந்து போயிருந்தது உண்மைதான். எனவே அவர்கள் மீது கோபிப்பதில் பொருள் இல்லை. அதனால், "ஓகோ, அப்படியா? என்ன தெரிஞ்சுண்டே மிஸ்டர் ராமசாமியைப் பத்தி? மிதவாதியா, தீவிரவாதியா?" என்றார்.

"தீவிரவாதிதான். ஆனா கோபாலகிருஷ்ண கோகலேயை ஒரேயடியா மட்டந்தட்டக் கூடாதுங்கறாப்ல பேசறார்."

"இந்த நாடு ஒரு ஏமாளி நாடும்மா, அஞ்சனா. நமக்குள்ள ஒத்துமை இல்லாம போனதுனாலயும், நமக்குள்ளேயே ஒருத்தரை ஒருத்தர் காட்டிக் கொடுக்கிற புத்தி இருக்கிறவங்க நிறைய பேர் இருந்ததாலேயுந்தான் இன்னிக்கு ஒரு அயல்நாட்டுக்காரன் நம்மை ஆண்டுண்டு இருக்கான்."

"ஆரம்பிச்சுட்டேளா அப்பாவும்



"எங்க தலைவர் மத்தவங்க சொத்துக்கு ஆசைப்படவே மாட்டார்!"

"அதனாலதான்... வெறும் பொறம்போக்காவே வளைச்சிப் போடறாரா...?"

- புதுவண்டி ரவீந்திரன்

பொண்ணும்?" என்ற நக்கலான குரல் கேட்டு இருவரும் திரும்பினார்கள். அஞ்சனாவின் அம்மா பாமா அறைவாசலில் நின்றிருந்தாள்.

"காலங்கார்த்தால எங்கே போனே? போறப்ப கேக்க வேண்டாம்னு இருந்தேன்."

"என்னோட ஃப்ரண்டு வீட்டுக்கும்மா... அப்பா, காரை எடுத்துண்டு அவா வீட்டுக்கு மறுபடியும் போயிட்டு வறேம்ப்பா. ஒரு முக்கியமான விஷயம் சொல்ல விட்டுப் போயிடுத்து..."

"சரிம்மா. டிரைவரை வேணாக் கூட்டிண்டு போயேன்."

"இல்லேப்பா. நானே காரை ஓட்டிண்டு போறேன்."

"இத பாருடி, அஞ்சனா. இன்னிக்கு ஒருநாள் போயிட்டுப் போறது. இனிமே காரை எடுத்துண்டு போற வேலையெல்லாம் வெச்சுக்காதே. ஆமா. போனேன் வந்தேன்னு போயிட்டுச் சாப்பாட்டு நேரத்துக்கு வந்துடு. உனக்குப் பிடிச்ச சமையல்."

"சரிம்மா. வந்துடறேன்" என்ற அஞ்சனா ஒரு துள்ளலுடன் கார்ஷெட் நோக்கி ஓடிப் போனாள்.

"இதென்ன ஓட்டம், கல்யாண வயசைத் தாண்டி எத்தனை வருஷமாச்சு! கல்யாணம் வேண்டாங்கறாங்கறதுக்காக ஒரு பொண்ணுக்கு இப்படியா இடங்கொடுப்பா? ஊர்ல என்னவெல்லாமோ பேசறா நம்மைப் பத்தி. கொஞ்சமாவது அடக்க ஒடுக்கம் இருக்கா பாருங்கோ. என்னமோ போங்கோ. ஒண்ணும் சரி இல்லே."

"ஊர்ல யாரும் எதுவும் பேசி இருக்க மாட்டாடி. உங்கிட்ட அவா பேசிக்கறதாச் சொன்னாளே, அவளோட அபிப்பிராயம்டி அது. நேடியா நம்மகிட்ட அப்படிப் பேச முடியுமா? அதான் ஊர்ல நாலு பேர் பேசிக்கிறதா உங்கிட்ட வந்து சொல்றா. யாரு அவ? அவ காதைப் பிய்ச்சுடறேன்."

"காதையோ மூக்கையோ பிய்க்கிறதுக்கு அவ சூர்ப்பனகையும் இல்லே, நீங்க ராமன் தம்பி லட்சுமணனும் இல்லே. சொன்னது நம்மாத்து வேலைக்காரி தங்கம்."

"அவளைக் கூப்பிடு இங்கே. நான் கேக்கறேன்."

"பார்த்தேளா, பார்த்தேளா? இதுக்குத் தான் சொல்ல மாட்டேன்னேன். அவ என்ன பண்ணுவா, பாவம். அவ நம்மாத்துல வேலை செய்யறதால அவ காதுபடப் பேசி இருப்பா. நம்ம காதுல அது அவ மூலமா விழறதுக்காக."

"நான் அதுக்குச் சொல்ற பதிலும் அவ மூலமா அவா காதுல விழட்டுமேடி?"

"அய்யோ வேண்டான்னா. என்னது இது? வீண் அக்கப்போர் பண்ணிண்டு. விடுங்கோ."

"சரி, சரி. விடு. நான் கேக்கல்லே. ஒண்ணு மட்டும் சொல்றேன், கேட்டுக்கோ. நம்ம பொண்ணுக்கு எப்ப கல்யாணம் பண்ணணும், என்ன, ஏதுங்கிறதெல்லாம் நாம தீர்மானிக்க வேண்டிய விஷயம். ஊர்க்காரா இல்லே. என்ன, புரிஞ்சுதா?"

"புரிஞ்சுது, புரிஞ்சுது" என்று அலுப்புடன் கூறியபடி நகர்ந்து விட்டாள் பாமா.

சுமார் அரைமணி நேரம் கழித்து வேலைக்காரி தங்கம் அவரது அறை வாசலில் வந்து நின்று, "சாமி! உங்களை அவசரமாப் பார்க்கணும்னு ஒரு ஆளு வந்திருக்காரு. வாசப் பக்கத்து ஹால்ல உக்கார வெச்சிருக்கேன்" என்று அறிவித்தாள்.

அவர் எழுந்து போனார். வந்திருந்த ஆள் இளைஞன். அவன் முகத்தில் ஒரு கலவரமும் கவலையும் - ஏன், கோபமும் கூடத்தான் - தெரிந்தன. மிகவும் சிந்தனை வசப்பட்டிருந்தான்.

(தொடரும்)

"ஆறாம் நம்பர் பேஷண்டுக்குத் திடீர்னு 'பல்ஸ் டௌன்' ஆயிடிச்சு டாக்டர்!"

"எப்போ ஆச்சு அப்படி...?"

" 'கண்ணைத் திறந்து பாருங்க, உங்க மனைவி வந்திருக்காங்க'ன்னு சொன்னதும் டாக்டர்!"

- சீர்காழி வி. ரேவதி



# வசதி, பாதுகாப்பு, நம்பிக்கை ஆகியவை வாழ்வில் இடம் பெற... வழிகாட்டுகிறது எல்டிசி.



## பென்ஷனர் பெனிஃபிட் திட்டம்

**பாதுகாப்புப் பெறுவது உங்கள் பணம் மட்டுமல்ல. உங்களுடைய மன அமைதியும் கூட.**

வயது 60 கடந்தால் என்ன? அதன் பின்னரும் நீங்கள் மன நிறைவோடு வாழ முடியும். அதற்கு உதவியாக இதோ ஒரு சிறப்பு டெபாசிட் திட்டம் — முதியவர்களுக்கு மட்டும். இத்திட்டத்தின் மூலம் ஒரு டெபாசிட்தாரர் என்கிற முறையில் நீங்கள் மாதாமாதம் ஒரு நிலையான உயர் வருமானத்தைப் பெறுகிறீர்கள். இதற்கான வட்டி வாரண்டுகள் பின் தேதியிடப் பட்டு முன்னதாகவே உங்களுக்கு அளிக்கப்பட்டு விடுகின்றன.

எனவே, கவலைகளிலிருந்து விடுபட்டு நீங்கள் மன நிறைவையும் அமைதியையும் நிச்சயமாகப் பெற முடிகிறது.

உங்கள் வளமைக்கு வழிகாட்டும் ஐந்து வெவ்வேறு டெபாசிட் திட்டங்களை லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட் உங்களுக்கு அளிக்கிறது: ஃபிக்சட் டெபாசிட், குமுலேடிவ் டெபாசிட், ரொக்க சர்ட்டிஃபிகேட், ரெக்கரிங் டெபாசிட், பென்ஷனர் பெனிஃபிட் திட்டம்... ஒவ்வொரு டெபாசிட்தாரரும் இத்திட்டங்களின் மூலம் பெறுவது: சிறப்பான பலன்கள், தனிப்பட்ட சேவை.

**எல்டிசியின்** டெபாசிட் தொகைகள் 1993-94ல், ஒரே ஆண்டில் **100% வளர்ச்சி** கண்டுள்ளதற்கு இவைதான் காரணம். இந்த வெற்றியினால் ஊக்குவிக்கப்பட்டு எல்டிசி மற்றுமொரு லட்சியத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறது: 31 மார்ச் 1995 அன்று அடைய நிர்ணயித்துள்ள டெபாசிட் தொகை இலக்கு ரூ.25 கோடி.

**பி.ஜி. சரண்யன்**
சேர்மன்

**டெபாசிட்டுகள் ஏற்கப்படுகின்றன!**

**லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட்**

**கார்ப்பொரேட் அலுவலகம்:**
37/1, கதீட்ரல் சாலை,
ஸ்டெல்லா மேரிஸ் கல்லூரி எதிரில்
சென்னை 600 086,
தொ.பே: 8281826/8281930

**கிளைகள்:** சென்னை • அம்பத்தூர், போன்: 681860 • அண்ணா நகர், போன்: 6212047 • குரோம்பேட்டை, போன்: 401267 • கே.கே. நகர், போன்: 4833917 • மடிப்பாக்கம், போன்: 2346586 • நங்கநல்லூர், போன்: 2348593 & 2346066 • விருகம்பாக்கம், போன்: 4830846 • மேற்கு மாம்பலம், போன்: 4830150 • திருச்சி, போன்: 25323 • மதுரை, போன்: 30626 • கோயம்புத்தூர், போன்: 43576 • திருநெல்வேலி, போன்: 322073 • காரைக்குடி, போன்: 2023 • வேலூர், போன்: 21902 • பாண்டிச்சேரி, போன்: 31859 • பெங்களூர், போன்: 366433.

***எல்டிசி: உங்கள் வாழ்வின் வளமைக்குப் பொன்னான பாதை.***

10.3.94 தேதியிட்ட ஹிந்து நாளிதழில் வெளியான 25.10.93 தேதியிட்ட சட்ட பூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி.

ADWAVE/LTC/4729 TAM A

# மணிக்கொடி

## 6

அன்று நடைபெறவிருந்த ரகசியக் கூட்டத்தைப் போலீஸ் கெடுபிடி இருந்ததால் ரத்து செய்து விடுவதாகத் தீர்மானித்தார் ராமசாமி. தம் வீட்டுக்கு வந்து சோதனை யிட்டவர்களுக்கு வேறு ஏதும் தகவல்களும் கிடைத்திருக்கலாம் அல்லவா? எனவே கூட் டத்துக்கு வருவதற்கு இருந்தவர்களின் வீடு களுக்குச் சென்று, அது ரத்தாகிவிட்ட செய்தி யைத் தெரிவித்து விட்டு அஞ்சனா தேவி யுடன் காரில் ராமசாமி தம் வீட்டு வாசலில் இறங்கிக் கொண்டார். அப்போது சாப்பாட்டு நேரம் ஆகி விட்டிருந்தது. கங்காதரன் தானும் காரில் வர ஆசைப்பட்டுச் சிணுங்கியதால் அவனையும் அழைத்துச் சென்றிருந்தார்கள். மணவாளன் வழியிலேயே தம் வீட்டில் இறங்கி இருந்தார்.

அஞ்சனாவுக்கு நன்றி தெரிவித்த ராமசாமி, "மணி பன்னண்டாயிடுத்து. நம்மாத்துல இன்னிக்கு சாப்பிட்டுட்டுப் போகலாமே?" என்று உபசரித்தார்.

"நம்மாத்துல சாப்பிடறதுக்கு என்ன, சார்? இன்னொரு நாள் பார்த்துக்கலாம். எங்காத்துல எங்கம்மாவும் அப்பாவும் காத் திண்டுருப்பா. அடுத்து எப்ப பார்க்கிறது?"

"உங்க சவுகரியம் போல. சில சனிக் கிழமைகள்ள ஸ்கூல் இருக்கும். ஞாயித்துக் கிழமைகள்ள கட்டாயம் வீட்டிலதான் இருப் பேன். ஆனா காலம்பற எட்டு மணிக்குள்ள என்னைச் சந்திக்கிறது நல்லது. ஏன்னா மீட்டிங் ஏதாவது இருந்தா நான் வெளியில போயிடுவேன். இல்லாட்டா, மணவாளன் வீட்டுக்குப் போயிடுவேன். அதான்."

"ஆத்துல உங்க மிஸஸ் கிட்டவும் அக்கா கிட்டவும் சொல்லிடறேளா, நான் போயிட்டு வர்றேன்னு சொன்னதா?"

"இறங்கி வந்துதான் சொல்லிக்கிறது."

"இறங்கினா வம்பு, சார். அப்புறம் சாப்பிடச் சொல்லிக் கட்டாயப்படுத்து வேள்... வேணாம், நீங்களே சொல்லிடுங்கோ..."

"சரி, உன் அப்பாகிட்டே என் நமஸ் காரம் சொல்லு. ராஜாராமன் ரொம்பப் பிர பலமான வக்கீல். அவரைப் பற்றி நிறைய கேள்விப்பட்டிருக்கேம்மா. ரொம்ப சந்தோ ஷம். நானே ஒரு நாள் உங்க வீட்டுக்கு வந்து உங்கப்பாவைச் சந்திக்கிறேன்..."

"கட்டாயம் வாங்க, சார்!" என்று அஞ்சனாதேவி காரைக் கிளப்பினாள்.

விசாலம் பிறகு சாப்பிடுவதாய்ச் சொல்லவே, கணவனுக்கும் குழந்தைக்கும் குஞ்சம்மா பரிமாறத் தொடங்கினாள்.

"அந்தப் பொண்ணு என்ன ஜாதி? நம்மவாளா?" என்று ஊஞ்சலை ஆட்டியபடி அதில் உட்கார்ந்திருந்த விசாலம் தயக்கத் துடன் வினவினாள்.

"இதெல்லாம் அநாகரிகமான கேள்வி கள், அக்கா. இந்த வழக்கத்தையெல்லாம் நாம நிறுத்தணும். நமக்குள்ள ஆயிரம் ஜாதி களையும் பேதங்களையும் வச்சுண்டு அலை யறதுனாலதான் வெள்ளைக்காரனுக்கு நம்மை அடிமைப்படுத்தறது சுலபமாப் போச்சு."

"ஜாதின்னா என்னப்பா?"

"இது மாதிரி எல்லாருமே கேக்கற ஒரு காலம் வரணும், கங்காதரா! மியூசியத்துல வைக்கிற பழம்பொருள் மாதிரி ஜாதிங்கிற இந்த வார்த்தையும் பழக்கத்துல இல்லாத ஒண்ணா மாறணும். அப்பதான் இந்த நாடு உருப்படும்."

"ரொம்பப் பணக்காரா போலிருக்கு. அதான் மோட்டார் கார் வெச்சிண்டிருக்கா. பொண்களே மோட்டார் கார் ஓட்டத் தொடங்கியாச்சு. கலி முத்திப் போச்சு."

"ஏங்கா பொண்ணுகள் சாரத்தியம் பண்றது ஒரு அதிசயமா? கைகேயி, அல்லி இவாள்ளாம் தேரோட்டல்லையா? அவா புராண காலத்தைச் சேர்ந்தவா, தேர் ஓட்டினா, இவா கார் ஓட்றா!"

"ஆமா, தைரியமான பொண்ணு. எதுக்கும் துணிஞ்ச கட்டைன்னு தோண்றது."

"அப்படின்னா?"

"அசலாத்துப் புருஷாளை மோட்டார்ல ஏத்திண்டு தானே அதைத் தெருத் தெருவா ஓட்டிண்டும் போகணும்னா அவ தைரிய சாலிப் பொண்ணாத்தானே இருக்கணும்?"

"தைரியசாலிங்கறதுக்கும் எதுக்கும் துணிஞ்ச கட்டைங்கிறதுக்கும் வித்தியாசம் இல்லியா? ஊராளாத்துப் பொண்களைப் பத்தி வாய்க்கு வந்ததைப் பேசக் கூடாதுக்கா. நீயும் ஒரு பொண்ணுங்கிற ஞாபகத்தோட பேசு."

"எதையும் நீ தப்பாவே எடுத்துக்கறே, ராமசாமி!"

"எதையும் நீ தப்பான் கண்ணோடதான் பார்க்கறேக்கா. முன்ன பின்ன தெரியாதவாளைப் பத்தி - அது ஆம்பளையோ, பொண்ணோ - இப்படியெல்லாம் நாக்குல பல்லைப் போட்டுப் பேசப்படாது."

"அய்யோ, அய்யோ. சர்ப்பிடற சமயத்துல எதுக்கு இந்த வேண்டாத வாக்குவாதம்? அக்கா ஏதோ தெரியாத்தனமாகக் கேட்டுட்டா. விடுங்கோ அத்தோட."

விசாலத்தின் கண்கள் கலங்கின. கணவனை இழந்து கைம்பெண்ணாகத் தன்னிடம் வந்து சேர்ந்து விட்ட அக்காவைக் கடிந்து ராமசாமி பேசியதே இல்லை. இன்று எப்படியோ சொற்கள் தடித்து விட்டன. எதிரே வந்து நின்ற குஞ்சம்மா விசாலத்துக்கு அழுகை வரப் பார்ப்பதாகச் சாடையால் அவருக்கு உணர்த்தினாள்.

அதன் பிறகு அங்கு யாரும் கொஞ்ச நேரம் வாயே திறக்கவில்லை. எனினும் கனத்த அந்த மௌனத்துக்குப் பின்னால் அவரவர் எண்ணங்களின் திண்மையால் ஒரு மனக்கசப்பு நிலவியது.

சாப்பிட்டு முடித்து, வேட்டி ஓரத்தில் கையைத் துடைத்தபடி ராமசாமி வந்ததும், விசாலம் ஊஞ்சலை விட்டு இறங்கினாள்.

"கோவிச்சுக்காதேக்கா. அது தைரிய சாலிப் பொண்ணுதான். இனி அந்தப் பொண்ணும் அவ



ஜோதிர்லதா கிரிஜா

ளோட சில சிநேகிதிகளும் அடிக்கடி நம் மாத்துக்கு வருவா. வெள்ளைக்காராளுக்கு எதிரா நாங்க நடத்திண்டிருக்கிற ரகசியப் போராட்டத்துல அவாளும் இனிமே கலந்துப்பா. நீயும் குஞ்சம்மாவும் நாலு எழுத்துப் படிச்சிருந்தா இப்படியெல்லாம் பேச மாட்டேள்."

"தெரியாத்தனமாப் பேசிண்டேண்டாப்பா... விடு," என்ற விசாலம் அகன்றாள்.

**ரா**மசாமி உண்ட மயக்கத்துடன் இலேசாய்க் கண்ணயரத் தொடங்க, கங்காதரன் இரண்டு தரம் அவரை எழுப்ப முயன்று தோற்று, குஞ்சம்மா கோபித்துக் கொண்டதும் ஊஞ்சலை விட்டு மெல்ல இறங்கினான்...

..சமையற்கட்டில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த குஞ்சம்மாவும் விசாலமும் ராமசாமியின் மெல்லிய குறட்டையொலி கேட்கத் தொடங்கியதும் சற்றே மன இறுக்கம் குறையப் பெற்றார்கள்.

"அந்தப் பொண்ணை ஏதோ ஒரு வார்த்தை சொன்னதுக்கு என்ன கோவம் வருது பாரேன் இவனுக்கு" என்று ஆரம்பித்தாள் விசாலம்.

"படிச்ச பொண்ணு. தாட்பூட்னு இங்கிலீஷ்ல பேசத் தெரிஞ்சவ. நீங்களும் நானும் அப்படியா...? சாம்பார் இன்னும் கொஞ்சம் விடட்டுமா?"

"வேண்டாம். போறும். நீ என்னதான் சொல்லு. பொண்களுக்கு அடக்க ஒடுக்கம் வேணும். புருஷாளுக்குச் சரியா சேர்ல உக்காந்துண்டு பேசறதும் சிரிக்கிறதும் பாந்தமாவே இல்லே. அசட்டுப்பிசட்டுனு இருக்கு."

"ஆமாமா. இது மாதிரி பொண்களையெல்லாம் நம்பவே கூடாது. அமைதியாப் போயிண்டிருக்கிற குடும்பங்களைக் கலைச்சுடுவா."

விசாலம் திடுக்கிட்டுத் தலை நிமிர்ந்தாள். "ராமசாமி அப்படிப்பட்டவன் இல்லே!" என்றாள்.

## 7

**ரா**ஜாராமனைக் கண்டதும் அந்த இளைஞன் எழுந்து நின்று கைகூப்பி அவரை வணங்கினான். பதிலுக்கு அவனை வணங்கிய ராஜாராமன், "உக்காருங்க, உக்காருங்க," என்றவாறு தாமும் அவனுக்கு எதிரே ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார்.

அவனுடைய தயக்கத்தைப் பார்த்துவிட்டு, "ஏதாவது கேஸ் விஷயமா வந்தீங்களா?" என்ற கேள்வியைச் சம்பிரதாயமாக அவ்விளைஞனைப் பார்த்து அவர் கேட்ட போதிலும், வழக்கு எதன் பொருட்டும் அவன் தம்மை நாடி வரவில்லை என்பது உள்ளுணர்வாக அவருக்குத் தோன்றி விட்டிருந்தது. பார்த்த மாத்திரத்தில் அவன் ஒரு புரட்சிக்காரனாகத்தான் இருக்க வேண்டும் என்று அவர் கணித்து விட்டார். அவரது கணிப்பு முற்றும் சரியே என்பது சீக்கிரமே நிரூபணமாயிற்று.

"என் பெயர் நரேந்திரநாத் பானர்ஜி. லண்டனில் என் மூத்த சகோதரன் இந்திரநாத் பானர்ஜி சட்டம் படித்துக் கொண்டிருக்கிறான். லண்டனில் உள்ள இந்தியா ஹவுசில் மற்ற இந்திய மாணவர்களுடன் தங்கி இருக்கிறான். தங்கள் மகன் அருணாசலம் அவனுடைய நெருக்கமான நண்பர்களில் ஒருவன்..." என்று ஆங்கிலத்தில் சின்னதாய் ஒரு பீடிகை போன்ற பாணியில் சொல்லி விட்டு, அவன் தன் கைக்குட்டையைச் சட்டைப் பையிலிருந்து எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டான். பிறகு, "தமிழ் புரியும், ஆனால் பேச வராது!" என்றான்.

ராஜாராமன் கவலையுடன் அவனைப் பார்த்தார். "நீங்கள் தடுமாறுவதைப் பார்த்தால் மகிழ்ச்சியான செய்தியுடன் வரவில்லை என்று தோன்றுகிறது" என்றார்.

"நான் சொல்லப் போகும் விஷயம் சற்று மோசமானதுதான். ஆனால் திடமான மனமும் தீவிரமான தேசப்பற்றும் உள்ள படித்த அறிவாளியான தங்களுக்கு அது அவ்வளவு கவலையை அளிக்காதென்றே நான் நம்புகிறேன்" என்று மறுபடியும் ஒரு சிறு முன்னுரையையே படித்தான் நரேந்திரநாத் பானர்ஜி.

"எதுவாக இருந்தாலும் தயங்காமல் சீக்கிரம் சொல்லுங்கள்."

"பயங்கரவாத நடவடிக்கைகளுக்காக உங்கள் அன்பு மகனும் என் அண்ணனின் அருமை நண்பனும் ஆன அருணாசலம் கைது செய்யப்பட இருந்தான். ஆனால்,



"என் பையன் எள்ளுன்னா, எண்ணையோட, வந்து நிப்பான்!"

"ஏன், 'காது' கேட்காதா?"

-ஆர்.வசந்தகுமார்.

அந்தச் செய்தி லண்டன் உளவுத் துறையில் பணிபுரியும் ஓர் ஆங்கிலேய நண்பனின் மூலம் முன்னதாய்த் தெரிய வந்து, அரு ணாசலம் ஓர் ஆங்கிலோ இந்தியக் கிறிஸ் தவனைப் போல் காட்டிக் கொண்டு, பிரான்ஸ் நாட்டுக்குப் போய் விட்டான். கப் பலில் ஏறியது வரையில் எங்களுக்குத் தெரி யும். மார்சேல்ஸ் துறைமுகத்தில் இறங்கப் போவதாகச் சொன்னதும் தெரியும். அநேக மாய்ப் போய்ச் சேர்ந்திருப்பான். அல்லது வழியில் ஏதேனும் தடங்கல் ஏற்பட்டிருப்பின் சற்றுத் தாமதம் ஆகக்கூடும். அவன் பிரான்ஸ் நாட்டைச் சென்றடைந்தானா அல்லது பாதிப் பயணத்திற்குள் குட்டு வெளிப்பட்டு மாட்டிக் கொண்டிருப்பானா என்ப தொன்றும் எங்களுக்குத் தற்சமயத்துக்குத் தெரிய வாய்ப்பில்லை. அருணாசலத் திடமிருந்து இனிக் கொஞ்ச காலத்துக்குத் தங்களுக்குக் கடிதம் வரக்கூடிய சாத்தியக் கூறுகள் இல்லை என்ற நிலையில் நடந்ததை யெல்லாம் தங்களுக்குத் தெரிவிக்குமாறு அருணாசலம் எங்களுக்குச் செய்தியனுப்பி னான்."

"உங்களுக்கு மட்டும் எப்படி செய்தி கிடைத்தது?"

"கல்கத்தாவில் செயல்பட்டுக் கொண்டி ருக்கும் ராஜாபஜார் கழகத்தில் நான் உறுப் பினன். கப்பல் மாலுமிகளைக் கைக்குள் போட்டுக் கொண்டு இந்தியா ஹவுசில் வாழும் நம் நாட்டுத் தேசபக்த வாலிபர்கள் லண்டனிலிருந்து கைத் துப்பாக்கிகள், வெடி குண்டுகள் போன்றவற்றைத் திருட்டுத்தன மாக நம் நாட்டுப் புரட்சி இயக்கத்தினர் அடைய உதவி வருகின்றனர். அவர்கள் மூலம் நம் நாட்டின் பல பகுதிகளிலும் தீவிர வாத நடவடிக்கைகள் வலுத்து வருகின்றன. அயல் நாட்டினருடன் நாங்கள் இடைவிடாத தொடர்பு கொண்டுள்ளோம். என் அண் ணன் இந்திரநாத் பானர்ஜி லண்டனில் இருக்கிறார் என்பதை ஏற்கெனவே சொன் னேன்..."

ராஜாராமனின் முகத்தில் தம் மகன் என்ன ஆனானோ என்ற கவலையை மீறி வியப்பும் மகிழ்ச்சியும் தோன்றின.

"உங்களையொத்த இளைஞர்கள் உண்மையில் பாராட்டுக்குரியவர்கள், மிஸ்டர் நரேந்திரநாத்! நான் உங்களையெல் லாம் எண்ணி மிக மிகப் பெருமைப்படு கிறேன். நீங்கள் மிகப் பெரிய தியாகிகள்."

நரேந்திரநாத் பானர்ஜியின் முகத்தில் சற்றே சிவப்புத் தோன்றியது. "அப்படி யெல்லாம் ஒன்றுமில்லை, அய்யா. பெரிய பெரிய வார்த்தையெல்லாம் சொல்லாதீர்கள்.



**"அண்ணே! திடீர்னு கட்சி மாறிட்டீங்களாமே...எனக்குக் கூடச் சொல்லவே இல்லியே!**

**"நீங்க ஒண்ணு. எனக்கே காலையில பேப்பர் பார்த்துத்தான் தெரியும்!"**

**– கடுவை கோபால்சாமி.**

---

பெற்ற மக்களைத் தியாகத்துக்குத் தயார் படுத்திப் பெருமை கொள்ளும் உங்களைப் போன்ற தகப்பன்மார்களைக் காட்டிலும் நாங்கள் உயர்ந்தவர்கள் அல்ல. ஐயா, மேலும் ஒரு வேண்டுகோள்..."

"என்ன?"

"நான் உங்கள் மகனைப் போன்றவன். என்னை நீங்கள் 'மிஸ்டர்' போட்டு அழைக்க வேண்டாம்."

"சரி" என்று ராஜாராமன் ஒப்புக் கொண்டு புன்னகை செய்தார்.

"அருணாசலத்தைப் பற்றி வேறு தகவல்கள் கிடைத்ததும் நான் தங்களோடு தொடர்பு கொள்ளுவேன், அய்யா. கவலைப் படாதிருங்கள். அப்போது நான் வரட்டுமா?" என்றவாறு எழப் பார்த்த நரேந்திரநாத் பானர்ஜியைத் தோள் பற்றிக் கட்டாயமாக உட்கார வைத்த ராஜாராமன், "அதற்குள் என்ன அவசரம்? உன்னோடு நான் நிறைய பேச விரும்புகிறேன். உன்னைப் பற்றி, வடக்கே இயங்கி வரும் பயங்கரவாத இயக் கங்களைப் பற்றி எல்லாம் நான் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன், உட்கார். என் வீட்டில் எதுவும் சாப்பிடாமல் நீ அவ்வளவு எளிதாய்த் தப்பித்துக் கொண்டு போய் விட முடியாது" என்றார். தொடர்ந்து, "இன் னொரு விஷயம். என் மனைவிக்கு ஆங்கிலம் பேச வராது. ஆனால் எளிமையான ஆங்கி லத்தை அவளால் புரிந்து கொள்ள முடியும். தன் மகனுக்கு நேர்ந்துள்ள இக்கட்டு பற்றி அவள் அறியக் கூடாது. எனவே அவள் எதிரே நீ எதுவும் பேசாதே. அருணாசலம் சௌக்கியமாக இருப்பதாய்ச் சொல்லி அனுப்பியுள்ளதாகத்தான் நான் அவளிடம் சொல்லப் போகிறேன். என்ன?" என்று எச்சரித்தார்.

(தொடரும்)

• சில்ரண்ட்ஸ் ஆர்ட்ஸ் குரூப்...

# உழைக்கும் நாட்டில் ஓய்வுக்கும் நேரமுண்டு!

குவைத்துக்குச் செல்வதே உழைத்து உழைத்துப் பொருள் சேர்க்கத்தான் என்றாலும் உழைப்பின் களைப்புத் தெரியாமலிருக்க வேறு ஏதாவது செய்ய வேண்டாமா? இந்தக் கேள்வி பலரின் மனத்திலும் எழுந்தபோது ஏற்பட்டதுதான் பாரதி கலை மன்றம். ரெங்கசாமி, செந்தமிழ் அரசு, ராமசுப்ரமணியன், ரகுராமன், ரஃபி அகமது, சுப்புராமன், லதா சீனிவாசன், சத்யா, சுதர்ஸன்.... என்று ஏராளமானோரின் கூட்டு முயற்சி காரணமாக, சதாமின் படையெடுப்பையும் முறியடித்துவிட்டுச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது!

கலை, இலக்கியம், நாடகம், நாட்டியம், இசை, ஓவியம் மட்டுமல்ல; கம்ப்யூட்டர் வகுப்பிலிருந்து யோகாசனம் வரை எதையும் விட்டுவைக்காமல் நடத்துகிறார்கள். குழந்தைகளுக்குத் தமிழ் வகுப்புகள் நடத்துகிறார்கள். சென்னை தொலைக்காட்சி நிலையத்தில் செய்தி வாசித்துக் கொண்டிருந்த செந்தமிழ் அரசு இங்கே அவ்வப்போது மெல்லிசை விருந்தளித்து மகிழ்விக்கிறார். இந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் இந்தியத் தூதரகம் குறைந்த வாடகையில் அரங்கம் கொடுத்து ஊக்குவிப்பது இன்னொரு உற்சாகம்.

பெரியவர்கள் இப்படியென்றால் குழந்தைகளும் சும்மா இருக்கவில்லை. 'சில்ரண்ட்ஸ் ஆர்ட்ஸ் குரூப்' என்கிற பெயரில் நாடகம், நாட்டியம் என்று வெளுத்து வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். இங்கே பதினோராம் வகுப்புப் படிக்கும் அரவிந்த், டி.என். கிருஷ்ணனின் சிஷ்யன். நம் நாட்டின் பாலநேரு விருது பெற்றிருக்கிறான் என்பது கூடுதல் சிறப்பு. இவையும் போதாமல் போரடிக்க ஆரம்பித்தால் குழந்தைகள் என்ன செய்வார்கள்?

இருக்கவே இருக்கிறது 'என்டர்டெய்ண்மெண்ட் சிட்டி'. இதற்குள் தோட்டம், படகுச் சவாரி, எதிர்கால உலகம், விண்டேஜ் கார்கள், மூன் ஆர்பிடர், Atom Smasher என்று குழந்தைகள் பொழுது போக்க ஏராள ஐயிட்டங்கள். குழந்தைகளைச் சாக்கிட்டுப் பெரியவர்களுக்கும் நல்ல பொழுது போக்குக் கிடைக்கிறது.

இது தவிர, விடுமுறை நாட்களில் பிக்னிக் மாதிரி போய் பொழுது போக்குவதற்கும் ஓர் இடம் இருக்கிறது. அதுதான் கிரீன் ஐலண்ட். குவைத்தியர்கள் இங்கு ஏராளமான பங்களாக்களைக்

• என்டர்டெய்ன்மென்ட்....

கட்டி, லாரிகளில் தண்ணீரை வரவழைத்துத் தோட்டங்களைப் பராமரிக்கிறார்கள். வார விடுமுறைகளை இங்கு வந்து ஜாலியாய் அனுபவிக்கின்றனர்.

கிரீன் ஐலண்டில் பீச் குளியல், போட்டிங் என்று நிறைய பொழுது போக்குகள் உள்ளன. தவிர, கிரான் ரிசார்ட்ஸ் என்னுமிடத்தில் தங்குவதற்கான காட்டேஜ்களும் உண்டு. இதற்கு நாள் வாடகை நான்காயிரம் ரூபாய்! இருப்பினும் குடும்பத்தோடு செல்வதற்கு அருமையானதோர் இடம். போகும் போது கணவன் - மனைவி என்பதற்கான ஆதாரம் காட்ட வேண்டும். இல்லையெனில் தங்குவதற்கு அனுமதியளிக்க மாட்டார்கள்!

* ....சிட்டி

அப்புறம் குவைத் நகரிலுள்ள முருகாப் என்னும் இடம். ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் இந்தியர்கள் ஒன்றாகக் கூடும் இடம் இது. தமிழர்கள் சென்னை, கோவை, திருச்சி, சேலம்... என்று மாவட்ட வாரியாகச் சந்தித்துக் கொண்டு, தாயகம் சென்று வந்தவர்களிடம் அவரவர் மாவட்ட நிலைமைகள் பற்றி விசாரித்துத் தெரிந்து கொள்கிறார்கள். இனி போகப் போகிறவர்களிடம் பொருள்களையோ கடிதங்களையோ கொடுத்தனுப்புகிறார்கள். பொழுது போக்காக மட்டுமல்லாமல் சொந்த ஊர் நிலவரங்களைத் தெரிந்து கொள்கிற பயனுள்ள சந்திப்பாகவும் இருக்கிறது குவைத் வாழ் இந்தியர்களுக்கு!

- **உஷா கௌசிக், சந்திரன், அன்பழகன், அரசு, திருநெல்வேலி சங்கர், முத்து.**

படங்கள் : **வினோத்**



* பாரதி கலை மன்றத்தினர்



# இந்த ஆலமரத்துக்கும் ஒரு நிதி நிறுவனத்துக்கும் என்ன சம்பந்தம்?



AKSHAR SF/94148

சக்தி பைனான்ஸ் – வங்கிகளுக்
இணையான பாது-காப்

கமர்ஷியல் சப்ஜெக்ட்

*(தயாரிப்பாளர் திரைத்துறை நண்பர்களுடன் சோகமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்.)*

**தயாரிப்பாளர்** : சே! நம்ம நிலைமை எப்படி ஆயிடிச்சு பார்த்தீங்களா? வன்முறையும் ஆபாசமும் சினிமாவிலே கண்டிப்பா இருக்கவே கூடாதுன்னு பிடிவாதம் பிடிக்கறாங்களே. மொத்தம் இருக்கிற பதினைஞ்சு ரீல்லே வன்முறையையும் ஆபாசத்தையும் எடுத்துட்டா பதினாலு ரீல் போயிடும். மிச்சம் இருக்கிற ஒரு ரீல்லே என்னத்தைப் படம் எடுக்கிறது?

***(கதையரசர் கருப்பண்ணன் சினிமா சான்ஸ் கேட்டு உள்ளே வருகிறார்)***

**கருப்பண்ணன்** : ஸார் என் பேரு கதையரசர் கருப்பண்ணன். எனக்கு ஒரு சான்ஸ் கொடுத்திங்கன்னா, வெள்ளி விழா கொண்டாடற மாதிரி ஒரு கதை சொல்லுவேன்.

**டைரக்டர்** : கதையரசர் கருப்பண்ணனா? உங்க அப்பா அம்மா வெச்ச பேரே அதுதானா?

**கருப்பண்ணன்** : இல்லைங்க. பட்டத்தை நானே வெச்சுகிட்டேன். கதை சொல்லட்டுங்களா?

**தயாரிப்பாளர்** : கதை யாருக்குய்யா வேணும்? இவ்வளவு நாள் கதையை வெச்சா படம் எடுத்தோம்?

**கருப்பண்ணன்** : ஸார் கதைன்னா நீங்க நிஜமாவே கதைன்னு நினைச்சுட்டீங்களா? கதையே கிடையாது. அதான் கதை!

**டைரக்டர் (தயாரிப்பாளரிடம்)** : ஸார் நமக்கும் இப்ப வேலை வெட்டியில்லைன்னு ஆயிப் போச்சு. பொழுதுபோக வேண்டாமா? அவர்தான் கதையைச் சொல்லட்டுமே. எதுக்கும் கேட்டு வெப்போம்.

**கருப்பண்ணன்** : ஸார் உங்க பிரச்னை எனக்குப் புரியுது. சென்ஸார்லே வன்முறையும் ஆபாசமும்தான் கூடாதுன்னு சொல்றாங்க. ஆனா, கதை எவ்வளவு பேத்தலா இருந்தாலும் அதுலே அவங்க கையை வெக்க முடியாது. எல்லா தமிழ்ப்பட டைரக்டர்களும் சேர்ந்து ஒரே படத்தை டைரக்ட் பண்ணா எப்படி இருக்கும்? அப்படி ஒரு கதை நம்மகிட்டே இருக்கு.

**தயாரிப்பாளர்** : கதை கிராமத்துலே நடக்கிற மாதிரியா?

**கருப்பண்ணன்** : சேச்சே! கிராமத்துக் கதைன்னா படத்துலே கெட்ட வார்த்தைகள் வரணுமே. சென்ஸார்லே தகராறு பண்ணுவாங்க. கெட்ட வார்த்தை இல்லைன்னா கிராமத்து மண்ணோட மணம் வீசாது. அதனாலே நகரத்திலே நடக்கிற மாதிரி வெச்சுக்கலாம்.

**டைரக்டர்** : சரி, அப்படியே வெச்சுக்குங்க. கதையைச் சொல்லுங்க.

**கருப்பண்ணன்** : ஹீரோ பரம ஏழை. படிக்காதவன். தெருத் தெருவா போய் பேப்பர் பொறுக்கறதுதான் அவன் வேலை.

**டைரக்டர்** : வெரிகுட். ஹீரோ இந்த மாதிரி ரோல்லே இது வரைக்கும் எந்தப் படத்திலேயும் வந்ததில்லை. புதுமையா இருக்கு.

**கருப்பண்ணன்** : ஹீரோயின் ஒரு கலெக்டர். ஒரு நாள் மந்திரி, கலெக்டர் ஆபீஸுக்கு வந்து ஒரு ஃபைல்லே கையெழுத்துப் போடுன்னு மிரட்டறார். கலெக்டர் முடியாதுங்கறா. இரண்டு பேருக்கும் தகராறு. இந்தச் சத்தம் தெருவிலே குப்பை வாரிகிட்டிருக்கிற ஹீரோ காதுலே விழுந்ததும் அப்படியே கோணிப் பையோட ஆறாவது மாடிக்கு ஜம்ப் பண்ணிப் போறான்.

**தயாரிப்பாளர்** : கலெக்டரைக் காப்பாத்தறதுக்குப் போறானா?

**கருப்பண்ணன்** : கரெக்ட். ஹீரோவும் ஹீரோயினும் மீட் பண்ற ஸீன் ரெண்டு பேரோட கண், மூக்கு, காது எல்லாத்தையும் தனித்தனியா காட்டறோம். இதைப் பார்த்து பயந்து மந்திரி ஓடிப் போயிடறாரு.

சத்யா

**டைரக்டர்** : இந்த இடத்திலே



ஒரு பாட்டு வெச்சுக்கலாம்.

**கருப்பண்ணன்** : ஆமா. காதல் வேகத்திலே ஹீரோ கோணிப்பையை வீசி எறியறான். அந்தக் குப்பையும் கலெக்டர் ஆபீஸ் குப்பையும் கலந்து போகுது. ரெண்டு பேர் மனசும் ஒன்றிப் போகுதுன்னு சிம்பாலிக்கா காட்டறோம். கலர் கலரா காகிதங்கள் ஆகாயத்திலே பறக்குது. நடுவிலே ஹீரோவும் ஹீரோயினும் டூயட் பாடறாங்க. எப்படி?

**தயாரிப்பாளர்** : அதிருக்கட்டும். தெருவிலே பேப்பர் வார்றவனை கலெக்டர் ஹீரோயின் எப்படி லவ் பண்ணுவா? லாஜிக் உதைக்குதே.

**கருப்பண்ணன்** : அதுக்கும் ஒரு ஐடியா வெச்சிருக்கேன். பாட்டு முடிஞ்சதும், 'ஊரிலே ஒரு குப்பை கூட இருக்கக் கூடாதுங்கறதுதான் என் லட்சியம். அதுக்கப்புறம் தான் நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க முடியும்'னு ஹீரோ சொல்றான். 'மந்திரி தொல்லை தாங்க முடியலை. நானும் கலெக்டர் வேலையை ராஜினாமா பண்ணி உங்க கூட சேர்ந்து உங்க லட்சியத்தை நிறைவேத்தறேன்'னு ஹீரோயின் சபதம் போடறா. கலெக்டர் ஆபீஸ்லே ஒரு பொம்மை கை தட்டுது. ஒரு பொம்மை தலையாட்டுது. ஒரு காலண்டர் காத்துலே திரும்பிக்குது.

**டைரக்டர்** : சூப்பர்! அப்புறம்?

**கருப்பண்ணன்** : ஹீரோயின் ஹீரோவுக்கு அ, ஆ, இ, ஈ சொல்லித் தரா. பழைய காகிதங்களைப் படிச்சு உலக விஷயங்களைத் தெரிஞ்சுக்கிட்டு ஆறே மாசத்திலே ஹீரோ அகில இந்தியாவிலேயும் ஃபர்ஸ்ட் ரேங்க்லே ஐ.ஏ.எஸ். பாஸ் பண்ணி கலெக்டர் ஆயிட்றான்.

**தயாரிப்பாளர்** : வெரிகுட். கொஞ்சம் கூட நம்பற மாதிரியில்லை. அப்படித்தான் இருக்கணும்.

**கருப்பண்ணன்** : ஒருநாள் ஹீரோயின் வீட்டுக்கு ஹீரோ போறான். அங்கே அவ டான்ஸ் ஆடிக்கிட்டே பாடறா. அந்தப் பாட்டைக் கேட்டதும் ஹீரோவுக்கு அதிர்ச்சி.

**டைரக்டர்** : அதிர்ச்சியா?

**கருப்பண்ணன்** : ஆமா. இந்தப் பாட்டை எங்கேயோ கேட்ட ஞாபகம். அப்போ ஒரு ஃப்ளாஷ்பேக். ஹீரோவோட அம்மா கர்ப்பமா இருக்கும் போது இதே பாட்டைத் தான் பாடறாங்க. அப்போ வில்லன் - அதான் ஹீரோயினோட அப்பா அவளைச் சுட்டுடறான். இது வயித்துக்குள்ளே இருந்த குழந்தையோட மனசிலே பதிஞ்சிடுது. அந்தக் குழந்தைதான் ஹீரோ.

**டைரக்டர்** : பிரமாதம். சென்டிமெண்டல் டச் கிடைக்குது.

**கருப்பண்ணன்** : தன் தாயோட மரணத்திலே ஹீரோயினோட அப்பாவுக்குத் தொடர்பு இருக்கும்னு சந்தேகப்படறான். இந்த மர்மத்தைக் கண்டுபிடிச்ச பிறகுதான் நம்ம வாழ்க்கை தொடரும்னு சொல்லிட்டு ஹீரோ ரெண்டு கட்டிலையும் பிரிச்சு வெச்சுடறான்.

**டைரக்டர்** : இந்த இடத்திலே இடைவேளை வெச்சுக்கலாம்.

**கருப்பண்ணன்** : ஹீரோவை மயக்கறதுக்காக ஹீரோயின் பல திட்டங்கள்

போடறா. ஒருநாள் ரெண்டு கழுதைகள் ரொம்ப நெருக்கமா இருக்கிறதைப் பார்க்கறா. அப்போ ஒரு கிழவர் இன்னொருத்தர்கிட்டே ஒரு விஷயத்தைச் சொல்றார்.

**தயாரிப்பாளர்** : என்ன சொல்றார்?

**கருப்பண்ணன்** : காயிதம் தின்னா எந்தக் கழுதைக்கும் மூடு வரத்தான் செய்யும். இனிமே கழுதைக்கு ரொம்ப காகிதம் சாப்பிடக் குடுக்காதேன்னு சொல்றார்.

**டைரக்டர்** : காகிதத்தைச் சாப்பிட்டா அப்படி ஆயிடுமா?

**கருப்பண்ணன்** : சேச்சே! அதை நம்பி நீங்க காகிதங்களையெல்லாம் சாப்பிட்டு வெக்கப் போறீங்க. சும்மா கதைக்காக அப்படி வெச்சுக்கறோம். இதைக் கேட்டதும் ஹீரோயின் ரீம்ரீமா பேப்பர் வாங்கிக் கூழாக்கி அதை ஹீரோ சாப்பிடும் போது கலந்துடறா.

**தயாரிப்பாளர்** : இந்த ஸீனுக்காகவே படம் பிச்சுகிட்டுப் போகும்னு நினைக்கிறேன்.

**கருப்பண்ணன்** : இந்தச் சம்பவத்துக்குப் பிறகு ஹீரோ, ஹீரோயினை மன்னிச்சுடறான். ரெண்டு பேரும் ஹீரோவின் தாயைக் கொலை செஞ்சவங்க கூட்டத்தைப் பழி வாங்கப் புறப்படறாங்க. அப்போ அவங்களுக்கு ஒரு பல்லியும் காக்காவும் உதவி செய்யுது.

**டைரக்டர்** : பல்லியும் காக்காவுமா?

**கருப்பண்ணன்** : ஆமா, எத்தனை நாளைக்குத்தான் பாம்பு, நாய், குதிரைன்னே காட்டிக்கிட்டிருப்பீங்க? வித்தியாசமா இருக்கட்டுமே.

**தயாரிப்பாளர்** : சரி இருக்கட்டும்.

**கருப்பண்ணன்** : ஒரு நாள் ஹீரோவை வில்லன் ஆளுங்க சங்கிலியாலே கட்டிப் போட்டுடறாங்க. 'உண்மையைச் சொல். நீதானே உங்கம்மாவோட பையன்?'னு கேட்டு மிரட்டறாங்க. 'எத்தனை அடி அடிச்சாலும் இந்தக் கேள்விக்கு மட்டும் நான் பதில் சொல்லவே மாட்டேன்'னு ஹீரோ சொல்றான். மந்திரி, ஹீரோயினைச் சுடத் தயாரா இருக்கார்.

**தயாரிப்பாளர்** : அவங்க எப்படித் தப்பிக்கிறாங்க?

**கருப்பண்ணன்** : அவசரப்படாதீங்க. காக்கா மேலே பல்லி உட்கார்ந்து வழி சொல்லுது. காக்கா க்ளைமாக்ஸ் நடக்கிற இடத்துக்குப் பறந்து வந்து மந்திரி கையிலே இருக்கிற துப்பாக்கியைப் பறிச்சு ஹீரோ கிட்டே கொடுக்குது. பல்லி சங்கிலியை அவுத்து விட்டுடுது.

**டைரக்டர்** : த்ரில்லிங்கா வருது.

**கருப்பண்ணன்** : ஹீரோ எல்லாரையும் அரெஸ்ட் பண்ணி, 'நான் வாரினது பேப்பர். அதுதான் என்னைக்கும் சூப்பர். இனிமே நீ பாப்பர்'னு வில்லனைப் பார்த்துச் சொல்றான்.

**தயாரிப்பாளர்** : ஹீரோ கலெக்டராச்சே! அவன் எப்படி அரெஸ்ட் பண்ண முடியும்?

**கருப்பண்ணன்** : அவனே சொல்றான் 'நான் உண்மையில் ஐ.ஜி.ஆஃப் போலீஸ்தான். உங்களைப் பிடிக்கறதுக்காகத்தான் இத்தனை நாள் கலெக்டரா நடிச்சேன்'னு.

**டைரக்டர்** : படம் சூப்பர் ஹிட்டாயிடும்னு தோணுது. படத்துக்கு என்ன பேர் வெக்கறது?

**கருப்பண்ணன்** : பேருக்கா பஞ்சம்? 'மடிப்பாக்கம் மாமி', 'போடா சோமாறி', 'ஆத்தா பெத்த பொண்ணு', 'எவன்டா அவன் மந்திரி?' - இப்படி எதையாவது வெச்சுக்க வேண்டியதுதான்.

**டைரக்டர்** : எல்லாம் சரிதான். வில்லனை மந்திரின்னு சொன்னா சென்ஸார்லே சம்மதிக்க மாட்டாங்களே.

**கருப்பண்ணன்** : 'எதிர்க்கட்சித் தலைவர்'னு மாத்திக்குவோம். கவர்ன்மெண்ட்லே அவார்டு கிடைச்சாலும் கிடைக்கும்!

---

''வயிறு வலிக்கச் சிரிக்க வைக்கும் வாசகங்களோட ஒரு போஸ்டரா, என்னங்க எழுதியிருக்கு?''

''வால் நட்சத்திரத்தை வியாழன் கிரகத்திலேயே விழச் செய்து தமிழகத்தைக் காப்பாற்றிய புரட்சித் தாய்க்கு நன்றி! நன்றி!! நன்றி!!!''

- வீ. மனோஹரன்



### இதுவரை...

கிட்டுவின் பெரியப்பா சுதந்திரப் போராட்ட தியாகி. அவர் இறக்கும் நிலையில் தமது - சுதந்திரப் போராட்ட கால - டைரிகளைக் கிட்டுவிடம் கொடுத்து, அதைப் படித்துப் பார்த்து, சுதந்திரப் போராட்ட காலத்தை மையமாக வைத்து ஒரு நாவல் எழுதச் சொல்கிறார். அவன் டைரிகளைப் படிக்க ஆரம்பிக்கிறான்.

சுதந்திர தாகம் கொண்ட ராமசாமி, மணவாள நாயுடு மற்றும் ராஜாராமன் அவர் மகள் அஞ்சனாதேவி. அவர்களும் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்பவர்கள்தான்.

ஒரு நாள் ராஜாராமன் வீட்டுக்கு வந்த இளைஞன் நரேந்திரநாத் பானர்ஜி, அவரது மகன் அருணாசலம் தனது தீவிரவாத நடவடிக்கை காரணமாக லண்டனிலிருந்து பிரான்ஸ் நாட்டுக்குத் தப்பிச் சென்றது பற்றிக் கூறுகிறான். அப்போது ராமசாமி தமது மனைவியிடம் இந்தச் செய்தியைச் சொல்ல வேண்டாமென்று எச்சரிக்கை செய்கிறார்...

# மணிக்கொடி

“பாமா, பாமா...” என்று கூவியழைத்த ராஜாராமன், அவள் வந்ததும், “இந்தப் பையன் ஒரு பெங்காலி. நரேந்திரநாத் பானர்ஜின்னு பேரு. இவனோட அண்ணா நம்ம அருணாசலத்தோட லண்டன்ல படிச்சிண்டிருக்கானாம். ரெண்டு பேரும் ரொம்ப சிநேகிதமாம். ‘மெட்ராஸ் போனா எங்க வீட்டுக்குப் போய் நான் சௌக்கியமா இருக்கேன்னு எங்க அப்பா, அம்மாகிட்ட சொல்லு’ன்னு சொல்லி அனுப்பி வெச்சிருக்கான் அருணாசலம்.”

“அப்படியா? ரொம்ப சந்தோஷம்ப்பா. நம்மாத்துல நீ சாப்பிட்டுட்டுத்தான் போகணும்... மெட்ராஸ்ல யாரு இருக்கா உனக்கு? எங்கே தங்கி இருக்கே? இங்கேயே தங்கலாமே?”

“தாங்க்யூ, மா” என்று சொன்ன நரேந்திரநாத் பானர்ஜி, சில நொடிகள் கழித்து, ஆங்கிலத்தில், “நான் இங்கே எழும்பூரில் உள்ள ஒரு விடுதியில் தங்கி இருக்கிறேன். நாங்கள் நான்கைந்து நண்பர்கள் கல்கத்தாவிலிருந்து வந்திருக்கிறோம். அதனால் இங்கு வந்து தங்க இயலாதம்மா. மன்னிக்க வேண்டும். இங்கே எனக்குச் சொந்தக்காரர்கள் யாரும் இல்லை... அடுத்த தடவை வரும் போது பார்க்கலாம்” என்றான்.

“தமிழ் புரியும் போலிருக்கே?”

“கொஞ்சம் கொஞ்சம் புரியும். அர்த்தம் புரியும். சொல்ல வராதும்மா.”

பெங்காலிகளுக்கு இனிப்பு ரொம்பவும் பிடிக்கும் என்று தெரியும். அதனால் ஒரே ஓர் இனிப்பு மட்டும் அதிகப்படியாய்ப் பண்ணுவாள் என் மனைவி. அதை நீ சகித்துக் கொள்ள வேண்டும்.”

“நன்னாச் சாப்பிடுவார். வேணும்னே மட்டந் தட்டுவார்... ஏன்னா? பாயசம் பண்ணிடட்டுமா?”

“என்ன? பாய்சன்?” என்று நரேந்திரநாத் கண் விரித்து வினவ, பாமா சிரித்தாள்.

“பாத்தியாடி? உன்னோட பாயசம் பாய்சன் மாதிரி இருக்கும்னு எப்படியோ ஊகிச்சுட்டான் பாரு... பாயசம், நரேந்திரநாத். ஆங்கிலத்தில் இனிப்புக் கஞ்சி என்பார்களே அது.”

பாமா உள்ளே செல்ல, “உங்களுக்கு எத்தனை பிள்ளைகள், அய்யா?” என்று கேட்டான் நரேந்திரநாத்.

“ஒரே ஒரு மகன்தான், இரண்டு பெண்கள். மூத்தவள் ஒரு காங்கிரஸ்காரர் வீட்டுக்குப் போயிருக்கிறாள். அவளும் அருணாசலமும் இரட்டைக் குழந்தைகள். அவன் முதலில் பிறந்ததால் அவளுக்கு அண்ணா ஆகிறான். மூன்றாவது, பெண். அவள் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறாள். இன்றைக்கு விடுமுறை. தன் சிநேகிதி ஒருத்தியின் வீட்டுக்குப் போயிருக்கிறாள். இருவரும் கொஞ்ச நேரத்தில் வந்து விடுவார்கள். எல்லாரும் சேர்ந்து சாப்பிடலாம்.”

“அவசரமில்லை” என்றான் நரேந்திரன்.

“உன் அப்பா அம்மாவைப் பற்றிச் சொல், நரேந்திரநாத். அப்பா கல்கத்தாவில் என்ன செய்கிறார்? தேச சேவையில் ஈடுபட அவர் உங்களை அனுமதித்திருக்கிறாரா, அல்லது வீட்டுக்குத் தெரியாமல் செய்து கொண்டிருக்கிறீர்களா?”

“எனக்கு அம்மா இல்லை. அப்பா மட்டும் இருக்கிறார். அதிகம் படிக்காத போதிலும், மிகச் சிறந்த தேச பக்தர். கல்கத்தாவில் நாங்கள் ஜவுளிக் கடை வைத்திருக்கிறோம். லண்டனிலிருந்து துணிகளை இறக்குமதி செய்கிறோம். இங்கிலாந்தில் உள்ள எங்கள் தோழர்களின் உதவி




யால் அவவப்போது துணிப் பெட்டிகளுடன் வெடிகுண்டுகள் அடங்கிய பெட்டிகளும் கப்பலில் வந்து இறங்குவதுண்டு. அவற்றை அப்பா உடனே அபிநவ பாரத், அனுசீலன் சமிதி, ராஜாபஜார் கழகம் போன்ற புரட்சி இயக்க அமைப்புகளுக்கு விநியோகம் செய்து விடுவார். 1908 – 9இல் இந்த அமைப்புகள் கண்டுபிடிக்கப்பட்டுத் தடைசெய்யப்பட்டு விட்டபோதிலும், இப்போது அவை மறுபடியும் புத்துயிர் பெற்று இயங்கத் தொடங்கி விட்டன. அவற்றின் பழைய விலாசங்களில் இயங்காமல் புது இடங்களில் செயல்படுகின்றன."

ராஜாராமன் பெருமிதப் புன்னகை புரிந்தார். "கேட்கக் கேட்க ஆர்வம் அதிகரித்தது. இன்னும் என்னென்ன செய்தார்கள்? சொல்லு, நரேந்திரநாத்!"

"ஆயுதக் கலைகளிலும், வெடிகுண்டுகள் தயாரிப்பிலும் பயிற்சி அடைவதற்காக விநாயக் தாமோதர் சாவர்க்கர் தம் தோழர்களுள் சிலரைப் பாரீசுக்கு அனுப்பி வைத்தார். அவர்களில் முக்கியமானவர் பாண்டுரங்க மகாதேவ் பாபட். அவர் ஏற்கெனவே பாரீசில் ரஷ்யப் புரட்சியாளர்களுடன் இணைந்து வெடிகுண்டு தயாரிப்புக் கலையில் ஈடுபட்டிருந்த சாவர்க்கரின் மற்றும் இரு நண்பர்களான ஹேம்சந்திரதாஸ், மீர்ஸா அப்பாஸ் ஆகியோருடன் சேர்ந்து கொண்டு செயல்படத் தொடங்கினார். ரஷ்யர்களிடமிருந்து வெடிகுண்டு தயாரிப்புப் பற்றிய புத்தகம் ஒன்றை அவர்கள் பெற்றனர். அன்னாக்ளாஸ் எனும் ரஷ்யப் பெண்மணி அவர்களின் வசதிக்காக அந்தப் புத்தகத்தை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து கொடுத்தாராம்!"

"அட. பரவாயில்லையே. புரட்சிக்காரர்களுக்குத்தானே இன்னொரு புரட்சிக் கும்பல் மீது அனுதாபமும் அக்கறையும் இருக்கும்."

"கல்கத்தாவுக்குப் பக்கத்தில் அரவிந்த கோஷ் அவர்களின் சகோதரர் பரீந்திரகுமார் கோஷ் ஒரு வெடிகுண்டு தயாரிக்கும் தொழிற்சாலையையே ஏற்படுத்தியது உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியாதே!"

"அனுசீலன் சமிதி அவர் ஏற்படுத்தியது தான் என்பது தெரியுமல்லவா?"

"அது தெரியும்."

"1905-இல் பரீந்திரகுமார் கோஷ் பவானி மந்திர் எனும் நூலை வெளியிட்டார். இந்தியாவில் பல பாகங்களிலும், ஊர்களுக்கு ஒதுக்குப்புறமான பகுதிகளில் பவானிகோவில் எனும் மத அடிப்படையிலான இடங்களைத் தோற்றுவித்து அங்கு புரட்சியாளர்கள் தங்கள் இரகசியக் கூட்டங்களைக் கூட்டவும் திட்டங்களை வகுக்கவும் அது

ஜோதிர்லதா கிரிஜா

படும். அவளை ஆயிரக்கணக்கில் விற்பனை ஆயினும் பரீந்திரகோஷின் கூட்டாளியான நரேந்திரகோசேங் என்பவன் துரோகியாக மாறிக் காட்டிக் கொடுத்ததால்தான் வெள்ளைக்காரர்களால் அவர்களது இரகசிய அலுவலகம், கடிதப் போக்குவரத்து பற்றிய தகவல்கள், திட்டங்கள் போன்றவற்றை அறிய முடிந்தது. நரேந்திரா எனும் என் பெயரை அவனும் வைத்துக் கொண்டிருந்தது என்னை அவமானத்தில் ஆழ்த்துகிறது."

ராஜாராமன் புன்னகை செய்தார். "நம்மவர்களிலேயே இவ்வாறு சில துரோகிகள் மட்டும் இல்லாதிருந்தால் நாம் வெள்ளைக் காரனை விரட்டும் நாள் அதிகத் தொலைவில் இல்லை..."

"என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்? ஆங்.. குதிராம்போஸ், பிரபுல்லா சக்கி ஆகிய இருவரும் கென்னடி குடும்பத்தினரைக் கொலை செய்த வழக்கு நீதிமன்றத்தில் நடந்து கொண்டிருக்கும்போதே, கோர்ட்டிலேயே வைத்து பப்ளிக் பிராசிக்யூட்டரும், போலீஸ் டெபுடி சூப்பரின்டென்டென்டும் சுட்டுக் கொல்லப்பட்டார்கள்."

"ஆமாம், ஆமாம். படித்தேன்."

"இந்த வழக்கில் தேச பக்தர்களைக் காட்டிக் கொடுத்த நரேந்திரகோசேயைக் கன்னயலால் தத்தா என்பவனும் சத்தியன் போஸ் என்பவனும் சிறைச்சாலைச் சுற்றுச் சுவரினுள்ளேயே சுட்டுக் கொன்று விட்டார்கள். கன்னியலால் கூடத் தூக்கிலிடப் பட்டான். மாவீரனாய்க் கருதப்பட்ட அவனது சவ ஊர்வலத்தில் ஆயிரக்கணக் கான மக்கள் கலந்து கொண்டார்கள். இதற்கு முன்னால் அந்தளவு பிரம்மாண்டமான மக்கள் நெரிசலை நான் பார்த்ததே இல்லை..."

அப்போது வெளியே தன் தோழி ஒருத்தியின் வீட்டுக்குப் போய்த் திரும்பிய அமராவதி, காலணிகளைக் கழற்றி விட்டு உள்ளே வந்தாள். அப்பாவுடன் அமர்ந்திருந்த நரேந்திரநாத் பானர்ஜியைப் பார்த்தாள். அவனும் பார்த்தான். இருவரின் பார்வைகளும் விரிந்தன.

"அட, நீங்களா?" என்றாள் அமராவதி.

"என்ன ஆச்சரியம்?" என்றான் அவன்.

ராஜாராமன் சற்றே வியப்புற்றவராய் இருவரையும் மாறி மாறிப் பார்த்தார். 'தமக்குத் தெரியாமலே தம் இளைய மகளும் இரகசியப் புரட்சிக் கும்பலில் சேர்ந்திருக்கிறாளா என்ன?' என்ற கேள்வி அவருள் எழுந்தது. ஆனால், 'அதை மறைக்க வேண்டிய அவசியமே இல்லையே?' என்ற எதிர்க் கேள்வியும் எழுந்தது. எனவே அவர்களே சொல்லட்டும் என்பது போல் அவர் மௌனமாக இருந்தார்.

(தொடரும்)



"ராமு தலைமுறை இடைவெளிக்கு ஒரு உதாரணம் கொடு!"

"தில்லானா மோகனாம்பாள் சினிமாவில சிவாஜி நாதஸ்வரம்தான் வாசிப்பாரு. புதுப் படத்துல அவர் மகனோ சாக்ஸபோன் வாசிக்கிறாரு, சார்!"

- ஆர்.ரகோத்தமன்.



தயாரிப்பாளர்: அந்த வில்லன் நடிகர் எதுக்காக டைரக்டர்கிட்டே தகராறு பண்றாரு?

உதவி டைரக்டர்: கற்பழிப்பு காட்சிகளை ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்ல வெச்சிருக்கக் கூடாதாம்!

தயாரிப்பாளர்: அதனால்?

உதவி டைரக்டர்: ஏதாவது ஒரு போலீஸ் ஸ்டேஷன்ல வெச்சிக்கச் சொல்றாரு!




நண்பர்: எது எதுக்குத்தான் போஸ்டர் ஒட்டறதுன்ற வெவஸ்தையே இல்லாம போயிடுச்சின்னு எப்படி சொல்றீங்க?

அடுத்தவர்: அந்த நடிகைக்கு கல்யாணம் ஆகி இன்னையோட நூறு நாள் ஆகுதாம். இன்னும் டைவர்ஸ் ஆகாத கணவர் மகிழ்ச்சியோட விழா எடுக்கப் போறாராம்!

-ஆர். நரேந்திரன்.



"ரிசப்ஷனுக்குப் போனா போதாதா? கல்யாணத்துக்கும் போகணுமா?"

சமையலறையிலிருந்து கௌசல்யா கேட்டாள். தாமோதரனுக்கு வெடுக்கென ஏதாவது சொல்ல வேண்டும் போல் தோன்றியது. கட்டுப்படுத்திக் கொண்டான். பேப்பரில் மீண்டும் முழுக முயற்சி செய்தான்.

"கேக்கறேன் இல்ல? மனுஷியா தோணலியா?"

"என்ன கேட்ட?"

"ரிசப்ஷனுக்குப் போனா போதாது?"

"போதாது."

மேலே ஏதும் சொல்லாமல் நிறுத்தினான். இவளுக்கு சுந்தரத்தைப் பிடிக்கவில்லை. பார்வையே சரியில்லை என்பாள். அதற்கு என்ன செய்வது?

தாமோதரனைப் பொறுத்தவரை அவன் நண்பன். உபகாரி. பெரிய அபிப்பிராயமில்லை. ஆனால் பழக எளிமையானவன். வாழ்க்கை அவனை அலைக்கழிக்கிறது. வேறொன்றுமில்லை. ஐந்து வருடத்திற்கு முன் அவன் மனைவி, வேறொருவனோடு போய் விட்டாள்.

"இவனோட எவ வாழ்வா?"

கௌசல்யா ஒருநாள் சட்டெனக் கேட்டு விட்டாள். தாமோதரனுக்குப் பொறுக்கவில்லை.

"அவனுக்கு என்ன கொறைச்சல்?"

"என்ன கொறச்சல் இல்லாம இருக்கு? உங்க ஆபீஸ்ல பேசறாங்கன்னு நீங்களேதான் சொல்றீங்களே. யார பார்த்தாலும்தான் இளிச்சிக்கிட்டு நிக்கறாரம்பீங்களே."

பேச்சுவாக்கில் இதையெல்லாம் சொல்லியிருக்கிறான். அது விபரீதமாய் அர்த்தம் ஆகும் என்று நினைத்ததில்லை. ஆனால் சுந்தரம் அவ்வளவு விபரீதமானவனில்லை. நல்ல ஒரு பெண்ணைத் தேடுகிறான் என்று மட்டும் தோன்றும். அவனுடைய செயல்களுக்கெல்லாம் இவன் அப்படித்தான் அர்த்தம் கொண்டான்.

ஆனால் சொல்லும் போது, பேசும் போது, பல விஷயங்கள் ஓரளவுக்கு எடுபடுகின்றன. அதன் மோசமான பகுதிதான் முக்கியத்துவம் பெறுகிறது. இது உணர்ந்தவுடன் தாமோதரன் மிகவும் கவனமாய்ப் பேசத் துவங்கினான். ஆனாலும் கௌசல்யா மனத்தில் விழுந்த விதை வளரத்தான் செய்தது.

தற்செயலாய் ஒரு மழை நாளில் சுந்தரம் வீடு வந்தான். முழுதும் நனைந்திருந்தான். வண்டியைத் தள்ளிக் கொண்டு வந்திருக்கிறான்.

"தண்ணி உள்ள போயிடுச்சி. நின்னு சரிபண்ணலாம்னா, எடமே இல்லை. உன் வீடு ஞாபகம் வந்தது. வந்துட்டேன். ஏதும் தொந்தரவு இல்லியே?"

அவன் வந்த போது, இரவு மணி ஒன்பதுக்கு மேல். அப்பொழுதுதான் தாமோதரன் சாப்பிட்டிருந்தான். உள்ளே சமையலறையில் கௌசல்யா சாப்பிட்டுக் கொண்டிருந்தாள்.

"சரி, மொதல்ல உள்ள வா. தலையைத் தொடச்சிக்கோ."

லுங்கியும், டவலும் தர, அவன் ஆடைகளைக் களைந்து, கொடியில் போட்டான். தாமோதரனுக்குச் சாப்பிடச் சொல்லலாமா என்றிருந்தது. சமையலறை நிலைமை என்னவோ? சமையலறைக்குள் நுழைய, கௌசல்யா பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருந்தாள்.

"ஏதாவது வெச்சிருக்கியா சாப்பிடறதுக்கு?"

"ஒண்ணும் இல்லை."

"ஏதாவது செய்றியா?"

"என்ன செய்யச் சொல்றீங்க?"

"உப்புமா, ஏதாவது?"

என்னவோ மெதுவாய் முணுமுணுத்தாள். கஷ்டந்தான். பேசாமல் வெளிவந்தான். சுந்தரம் வண்டியோடு போராடிக் கொண்டிருந்தான். கொஞ்ச நேரத்தில் அந்த வெராந்தாவே ரணகளமானது. வண்டியை ஓங்கி ஓங்கி உதைப்பதும், அது ஸ்டார்ட் ஆகாமல் முரண்டு பண்ணுவதும், ஸ்டார்ட் ஆனால், வெளியே எக்கச்சக்க புகையைக் கக்குவதுமாய் ஒரே இரைச்சல். உள்ளே அறையில் படுத்திருந்த கோபி எழுந்து வெளியே வந்து விட்டான்

கண்ணில் தூக்கக் கலக்கம். என்ன செய்வது என்று தெரியாமல், அழவும் துவங்க, தாமோதரன் அவனைத் தோளில் தூக்கிக் கொண்டான்.

ஆர்.வெங்கடேஷ்

வெளியே எட்டிப் பார்த்த கௌசல்யா, கோபியை வந்து வாங்கிக் கொண்டாள். அப்பொழுதும் அவன் அழுகையை நிறுத்தவில்லை. வந்த கோபத்தில், அவன் தொடையைக் கிள்ள, கோபி அலறினான்.

"என்னத்துக்கு அவனைக் கிள்ற?"

தாமோதரன் உடனே கோபியை நெருங்கிப் போக, அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டு படுக்கையறை போனாள். வெராந்தாவில் சுந்தரம் வண்டியை உதைத்துக் கொண்டிருந்தான்.

"ஸ்டார்ட் ஆவுது, பிராப்ளம் இல்லை."

புன்னகை செய்தான். தாமோதரனும் வெறுமனே தலையாட்டினான்.

"வரச் சொல்றீங்களா அவரை?"

திரும்பிப் பார்ப்பதற்குள், அவள் சமையலறை நுழைந்தாள். சுந்தரமும், தாமோதரனும் உள்ளே வர, டைனிங்டேபிளில் இலை போட்டிருந்தாள்.

"நீயும் சாப்பிடேன், வா!"

"இல்லை, இப்பத்தான் சாப்பிட்டேன். நீ உட்கார்."

நல்ல பசி. உப்புமாவையும், ஊறுகாயையும் வழித்துச் சாப்பிட்டான். கை கழுவினதோடு, உடனே கிளம்பி விட்டான்.

கௌசல்யா இலையை எதிர்த் தொட்டியில் போட்டுத் திரும்பினாள்.

சுந்தரம் வண்டியை ஸ்டார்ட் செய்தான். திரும்பி, "வரேன் தாமு. வரேங்க. உப்புமா நல்லாயிருந்திச்சி" - மெலிதாய்ச் சிரித்தபடி, கையசைத்து டாட்டா காட்டினான். அவளுக்கு வெறுப்பாய் இருந்தது.

கூடத்து விளக்கையணைத்து விட்டு, உள்ளே வந்தவள், யாருக்கோ சொல்வது போல் பேசத் துவங்கினாள்.

"அடுத்தவங்க வீட்டுல வந்து சாப்டுட்டு; கர்டஸிக்குக் கூட இலையை எடுக்கட்டுமான்னு கேக்கலை!"

தாமோதரன் பொறுமை காத்தான்.

"இதுல டாடா வேற காட்டறாரு. அடுத்தவன் பொண்டாட்டிக்கு... வெட்கங்கெட்ட ஜென்மங்க..."

"ஏய், என்னா பேசற? மரியாதையாப் பேசு."



"மரியாதையா நடந்துக்கிட்டா, மரியாதையாப் பேசுவாங்க. அடுத்த வன் பொண்டாட்டிக்கு டாட்டா காட்டறதிலேர்ந்தே தெரியலியா, எப்படிப்பட்ட ஆளுன்னு?"

"அவன் மரியாதைக்குக் கையாட்டியிருப்பாண்டி. நீ ஏன் அதைத் தப்பா எடுத்துக்கற?"

"அது, மரியாதை இல்லை. புத்தி!"

புரிய வைக்க முடியாது. அவளுடைய கலாசாரம் அப்படி. அதில் வந்த பழக்கம் அப்படி. கையசைக்கும் கலாசாரம் அன்னியமானது. ஆனாலும் அன்பின் வெளிப்பாடு. சொன்னால் விளங்காது. விளங்கினாலும் இவள் ஏற்க மாட்டாள்.

"**எ**ன்னடா இவ்ளோ லேட்?"

சுந்தரத்தின் குரல் சன்னமாகவே கேட்டது. தாமோதரனின் கையை இறுக்கிக் குலுக்கினான். பக்கத்தில் நின்ற நாளைக்கு மனைவி ஆகப் போகிற பாமாவை அறிமுகப்படுத்தினான்.

"என்னடா இப்படி டீல்ல வுட்டிட்டீங்க. நீங்கதானே எடுத்துச் செய்யணும்? என்னமோ கெஸ்ட் மாதிரி மெதுவா வர?"

பதில் சொல்ல முடியாத கேள்வி. எடுத்துப் போட்டுக் கொண்டு செய்ய வேண்டியவன்தான். இப்படி ஒரு மனைவியை வைத்துக் கொண்டு என்ன செய்ய முடியும்? தாமோதரனை விட்டு இரண்டடி பின்னால் தள்ளி நின்றிருந்தாள் கௌசல்யா. அருகே அழைத்தான். பாமா சிரித்தபடி, கைகுலுக்கினாள். கௌசல்யா புன்னகை செய்தாள்.

"கொஞ்சம் நம்ம ஃபிரெண்ட்ஸ் எல்லாம் பாத்துக்கடா. ராஜியும், சாரதியுமாவே திண்டாடறாங்க."

கௌசல்யா கோபியோடு பின்னால் ஒரு சீட்டில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

"நீ சாரதிய மீட்பண்ணதில்ல இல்லை?"

இல்லையென்பது போல் தலையாட்ட, சாரதியை அழைத்து அறிமுகப்படுத்தினான். சட்டெனக் கலந்து கொண்டான். தெளிவான முகம். சிரிப்பு.

"நீங்க எங்க இருக்கீங்க?"

"கல்கத்தாவில். சுந்தரம் கல்யாணத்துக்காகவே மெட்ராஸ் வந்தோம்."

"அப்படியா?"

"ம். கல்யாணத்த எடுத்துச் செய்யறதுக்கு வேற யார் இருக்காங்க. வீட்டோட, தலைவருக்குத் தகராறு. அதனால, நாங்க ரெண்டு வாரம் லீவு போட்டுட்டு வந்துட்டோம்."

இது தாமோதரனுக்குப் புதுச் செய்தி. சுந்தரம் தனியாக இருக்கிறான் என்பது தெரியும். ஆனால் பெற்றோரோடு தகராறா? சாரதி, ராஜியை அறிமுகப்படுத்தினான். இருவரும் பம்பரம். பெண் வீட்டிலிருந்து, அவளுடைய தங்கை எல்லோரையும் கவனிக்க, இங்கே ராஜி.

தாமோதரன் சாரதியோடு வேலை செய்யத் துவங்கினான். நண்பர்களுக்கெல்லாம் ரஸ்னா வழங்க, நின்று பேச என்று நேரம் பறந்தது.

"சாப்டாச்சின்னா கௌம்பலாமா?"

தாமோதரனைப் பார்த்துக் கேட்டாள் கௌசல்யா. நிலைமை புரியவே புரியாதா?

"டைமிருக்கே, மெதுவா கௌம்பலாம்."

"அப்புறம் பஸ் இருக்காது."

"இப்படி நடுவுல வுட்டுட்டுப் போனா நல்லாயிருக்குமா. யாரோ கல்கத்தாலேர்ந்து, இங்கே வந்து கல்யாணத்துக்கு ஹெல்ப் பண்றாங்க. இங்க தண்டையார்பேட்டையில இருந்துக்கிட்டு அவசரப்பட்டா, நல்லாவா இருக்கும்?"

"நீங்க வேணா, இருந்து முடிச்சுக் கொடுத்துட்டு, வாங்க, நாங்க கௌம்பறோம்."

யதார்த்தமாய்ப் பேசுவது போல் சொன்னாள். தாமோதரனுக்கு ஆத்திரம் கனன்றது. என்ன நெஞ்சழுத்தம்? பிடிக்கவில்லையென்றால், கத்தியால் வெட்டிப் போடக் கூடத் தயங்க மாட்டாள்.

"வந்தது வந்துட்டோம். கொஞ்சம் பொறுமையா இரு. கௌம்பிடலாம்."

கோபமும் இயலாமையும் வெளிப்பட்டது. வெறுப்பு மட்டுமே கூடியது. சிந்தனையை மாற்றிக் கொள்ள, மற்றவர்களோடு போய்ப் பேசத் துவங்கினான். டைனிங் ஹாலில் போய் விசாரிக்கத் துவங்கினான்.

"நைட் இருப்பீங்க இல்ல?" - சாரதி கேட்டான்.

"வீட்டுக்குப் போகணும்."

"வீட்டுக்குப் போறீங்களா? நீங்க கல்யாணம் முழுசும் இருப்பீங்கன்னாரு சுந்தரம்?"

சுந்தரத்தின் எதிர்பார்ப்பு நியாயமாகப் பட்டது. என்ன சொல்வது? அதுவும் கௌசல்யாவை வைத்துக் கொண்டு!

"நாளைக்குக் காலைல வந்துடறேன். நைட் பையன் தூங்க மாட்டான். புது எடம்னா தூக்கம் வராது. போயிட்டு காலையில வந்துடுவேன்."

**நா**ன்காவது பாட்சில் கௌசல்யா

---

**ம**த்தியப் பிரதேசத்தில்தான் இந்தியாவிலேயே மிக அதிக அளவு வாரப் பத்திரிகைகள் வெளியாகின்றன. சுமார் 800 க்கும் மேல். 'ஹிப்ஹிப் ஹுர்ரே', 'நேஷனல் வேவ்', 'ஷோ, பக்வான்' என்றெல்லாம் விசித்திரப் பெயர்கள். இத்தனை பத்திரிகைகள் வர முக்கிய காரணம் மத்தியப் பிரதேச அரசுதான்! ஒரு வாரப் பத்திரிகை, ஒவ்வொரு வாரமும் பெறும் அரசு விளம்பர மதிப்பு ரூ. 2000/. பல பத்திரிகைகள் ஐம்பது பிரதிகளுக்கு மேல் அச்சிடுவதில்லை. அதிகபட்சம் ரூ. 500 செலவு போக லாபம் ரூ. 1500!

ஆதாரம் : வீக்; தகவல் : எஸ். ஆலன்

வோடு, தாமோதரன் சாப்பிட உட்கார்ந்தான். அவள் வேண்டா வெறுப்பாய்ச் சாப்பிடுவது போல் தோன்றியது. என்ன ஒரு மனுஷி?

கை கழுவிக் கொண்டு, பீடா போட்டுக் கொண்டான்.

சுந்தரம் இருக்கையில் அமர்ந்திருந்தான். யாரோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

"என்னடா, கௌம்புரியா?"

"இல்ல, பையனுக்கு ஒடம்பு சரியில்லை. சாயங்காலம் கௌம்பும்போதே, லேசா சுட்டுது. அதான். நேரா டாக்டர்கிட்ட போகணும். நாளைக்குக் காலையில வந்துடறேன்."

"என்ன சார், நீங்களெல்லாமே போயிட்டீங்கன்னா, என்ன சார் அர்த்தம்? இருங்க சார்."

பிரசென்டேஷன்களை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்த ராஜி.

"இல்லை மேடம். பையனுக்குத்தான் பிராப்ளம். நான் வந்துடறேன்."

"டேய், இவளைத் தெரியுமா உனக்கு?" ஆச்சரியமாய் சுந்தரம் கேட்டான்.

"தெரியுமே. சாரதி ஒய்ப்தான?"

"ஆமா. அது இப்போ. இவளதான் நான் மொதல்ல கல்யாணம் பண்ணிக்கிட்டேன். அது தெரியுமா?"

"ஓடிப் போயிட்டான்னு..."

"ஓடியெல்லாம் போகலை. நான்தான் அனுப்பிச்சேன். சாரதி அப்போ துபாய் போயிருந்தார். இவ அப்பா என் தலையில இவளைக் கட்டிட்டாரு. இவ விஷயத்தச் சொன்னா. ஒருத்தரை விரும்பி, வேற ஒருத்தனைக் கல்யாணம் செஞ்சிக்கறது மகா கொடுமை. விஷயம் தெரிஞ்சி, நான் அவங்க வீட்டுல பேசி, சண்டை போட்டு, வாலண்டியரா டைவர்ஸ் கொடுத்து சாரதிக்கே இவளைப் பண்ணி வெச்சுட்டேன்!"

ஆச்சரியமாய் இருந்தது. கௌசல்யாவும் சுந்தரத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். எல்லாம் புதுச் செய்தி.

"இதெல்லாம் எனக்கு நீ சொல்லவே இல்லை?"

"எல்லாருக்கும் தெரியுமே. அதனாலதான் என் பேரண்ட்ஸோட தகராறெல்லாம் ஆச்சி. இப்ப இவங்களே, பாமாவைப் பார்த்து எனக்குக் கல்யாணம் பண்ணி வெக்கறாங்க!"

என்ன சொல்வது என்று தெரியாமல் நான் நின்றேன். ஆச்சரியம் மட்டுமே விரிந்திருந்தது. சந்தோஷத்தைச் சொல்ல முடியாமல் இறுக்கிக் கைகுலுக்கினேன். கௌசல்யா சிரித்தாள், சுந்தரத்தைப் பார்த்து. என்ன ஒரு உயர்ந்த மனுஷன்!

"நாளைக்குக் கண்டிப்பா வந்துடுங்க. முதல்ல பையனுக்கு என்னன்னு போய்ப் பாருங்க."

நான் வெளியே நடக்கத் துவங்கினேன். காம்பவுண்ட் முனையில் திரும்பிப் பார்க்க, சுந்தரம் கையசைத்து டாட்டா காட்டினான். நான் கையசைத்தேன். கௌசல்யாவும் கையசைப்பதை அப்போதுதான் பார்த்தேன்.

ஜோதிர்லதாகிரிஜா

# 8

அஞ்சனாதேவி சரிக்குச் சரியாய் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, ராமசாமியுடன் தயக்கமோ கூச்சமோ இன்றிப் பேசியதும், வாய் விட்டுச் சிரித்ததும் விசாலத்துக்குப் பிடிக்கவில்லையெனினும், 'இது மாதிரிப் பொண்களை நம்பவே கூடாது. அமைதியாப் போயிண்டிருக்கிற குடும்பங்களைக் கலைச்சுடுவா' என்று குஞ்சம்மா சொன்னது அவளுக்கு ரசிக்கவில்லை. தன் உயிருக்குயிரான தம்பியைப் பற்றியும் அவள் தரக்குறைவான கருத்தை வெளியிட்டு விட்டதாக எண்ணி, அவள் கசந்து போனாள். அதனால்தான், 'ராமசாமி அப்படிப்பட்டவன் இல்லே' என்னும் வெடுக்கான பதில் அவளிடமிருந்து சீறிப் பாய்ந்தது.

''எப்படிப்பட்ட புருஷாளும் இது மாதிரிப் பொண்கள் மேல வந்து விழுந்தா மயங்கித்தான் போயிடுவா. ஆனானப்பட்ட விஸ்வாமித்திரரே மேனகைக்கு முன்னால திருணமாத்திரம்னா, உங்க தம்பி எம்மாத்திரம்?"

"என்ன பேசறே நீ குஞ்சம்மா? மேல வந்து விழறது அது இதுன்னு வாய்க்கு வந்ததைப் பேசாதே. நீ அவனைப் பத்தி இப்படியெல்லாம் நினைக்கிறேங்கிறது தெரிஞ்சா அவன் அப்படியே ஒடிஞ்சு போயிடுவான். அந்தப் பொண்ணும் அப்படி ஒண்ணும் மேல வந்து விழற பொண்ணாத் தெரியல்லே. நன்னா இழுத்துப் போத்திண்டு அடக்கமான பொண்ணாத்தான் இருக்கா."

"நீங்களுந்தான் சொன்னேள் சித்த முந்தி - எதுக்கும் துணிஞ்ச கட்டைன்னு" என்றாள் குஞ்சம்மா விடாப்பிடியாக.

"நீ சொல்ற அர்த்தத்துல நான் சொல்லல்லே. தைரியமான பொண்ணுங்கிற அர்த்தத்துலதான் சொன்னேன். 'எதுக்கும் துணியறது'ன்னா புருஷாளை மயக்கறதுன்னு அர்த்தமில்லே. மத்தப் பொண்ணுகள் செய்ய பயப்படற காரியங்களை இந்தப் பொண்ணு தைரியமாச் செய்யும்னு எனக்குத் தோணினதை நான் சொன்னேனே ஒழிய, நீ நினைக்கிற மாதிரியான அர்த்தத்துல இல்லே. ரெண்டாவது, ராமசாமியும் அப்படிப்பட்ட ஆளில்லே."

அதன் பிறகு இருவரும் அஞ்சனாதேவியைப் பற்றி எதுவும் பேசாது தேவையானதற்கு மட்டும் பேசியவாறு சாப்பிட்டு முடித்தார்கள்.

"நீங்க போய்ப் படுத்துக்குங்கோங்க்கா. நான் அடைக்கு அரைச்சு வச்சுட்டு வந்து கொஞ்சம் படுத்துக்கறேன்."

"சோறு தின்னதும் திங்காததுமாக் கல்லுரலைக் கட்டி இழுக்க வேண்டாம். பேசாம வந்து படு நீயும். ஒரு அரை மணி கழிச்சு அரைச்சுண்டாப் போறது."

அதற்குப் பிறகு நாத்தனாருடன் வாக்கு வாதம் செய்யாமல் குஞ்சம்மா அவளுக்கு அருகே தானும் ஒரு புடைவைக் கிழிசலை விரித்துக் கொண்டு படுத்தாள். சற்று நேரத்தில் விசாலத்தின் சன்னமான குறட்டையும் ராமசாமியின் குறட்டையும் மாற்றி மாற்றிக் கேட்கலாயின. ஆனால் குஞ்சம்மாவுக்குத் தூக்கம் வரவில்லை. அஞ்சனாதேவியின் அழகிய முகமும், கவர்ச்சியான புன்னகையும், தயக்கமின்றி ஆண்களுடன் உரையாடும் சகஜமும் அவளை அலைக்கழித்துக் கொண்டிருந்தன.

கொஞ்ச நேரத்தில் எழுந்து ஓசைப்படாமல் கூடத்துக் கண்ணாடி அலமாரியின் எதிரே போய் நின்று உடம்பை இப்படியும் அப்படியும் திருகி, முறுக்கித் தன் உடற்கட்டை ஒரு நோட்டம் விட்டாள். அத்தனை பிள்ளைகளைப் பெற்ற பின்னும் தன் உடம்பு கட்டு விடாமல் இளமையுடனேயே இருப்பதைக் கண்டு பூரித்தாள்.

ஊஞ்சல் கிறீச்சிட்ட ஓசையால் எண்ணங்கள் கலைந்து, குஞ்சம்மா திரும்பிப் பார்த்தாள். ராமசாமி - படுத்திருந்தவர் - எழுந்து உட்கார்ந்திருந்தார். முகத்தில் விஷமச் சிரிப்புத் தெரிந்தது.

"என்ன, உன்னோட அழகை நீயே ரசிக்கிறயாக்கும்?'' என்றார் மெதுவான குரலில். விசாலத்தின் சன்னக்குறட்டை

மணிக்கொடி

இன்னமும் கேட்டுக் கொண்டிருந்த துணிச்சலில்.

"கட்டின புருஷன் ரசிக்கலைன்னா நானே ரசிச்சுக்க வேண்டியதுதானே?" என்று குஞ்சம்மா சிரித்தாள்.

விசாலம் புரண்டு படுக்க, குஞ்சம்மா உதட்டில் விரல் வைத்து எச்சரித்தாள். ராமசாமி சிரிப்புடன் ஊஞ்சலிலிருந்து இறங்கினார். கூடத்தின் ஓர் ஓரத்தில் கண்ணயர்ந்திருந்த கங்காதரனைப் பார்த்ததும், "குஞ்சம்மா, இவனை இனிமே மத்தியானத்துல தூங்க விடக்கூடாது. கெட்ட பழக்கம். உடம்புக்கு ஆகாது," என்றார்.

"பெரியவாகிட்ட இருக்கிற வழக்கந்தானே சின்னவாளுக்கும் வரும்?"

"அது சரி..."

"ஏன்னா, அந்தப் பொண்ணு அஞ்சனா ரொம்பப் பணக்காரக் குடும்பமோ?" குஞ்சம்மாவால் அஞ்சனாவின் நினைவை - அந்த நினைவு அளித்த பயத்தை - இதயத்திலிருந்து ஒதுக்க முடியவில்லை.

"அதான் அப்பவே சொன்னேனே, அவ அப்பா பிரபல வக்கீல்னு? சொந்தமா கார் வெச்சிண்டிருக்காளே, அதுலேருந்தே தெரியல்லே?"

"எங்க அப்பா, அம்மா என்னைக்



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்கு (1994) வந்த கதைகளில் பரிசுக்குரியன தவிர, கீழ்க்கண்ட கதைகள் பிரசுரத்துக்குத் தேர்ந் தெடுக்கப்பட்டுள்ளன.

1. வேலி - அனுஷா
2. அவன், அவர், ஐந்தேகால் ரூபாய் - எஸ். சுகன்யா
3. பதனீர்பட்டி - ஈரோடு என். சாரதாப்பிரியன்
4. வேர்களைத் தேடி - பிருதிவிராஜ்
5. காந்தீயம் தோற்பதில்லை - தஞ்சை மகேஷ் ப்ரியன் (மகேஷ்வரன்)
6. வேண்டாம் அந்த ஏணிப்படி - 'சுபமுகா' (கே. கணேசமூர்த்தி)
7. அடைகாக்கும் கோழிகள் - அனந்தலஷ்மி
8. அழுக்கு - கமலா கந்தசாமி
9. எப்போதோ வீழ்ந்த விதை - என். சிவானந்தம் - அறிமுக எழுத்தாளர்
10. பார்வை - சோம. வள்ளியப்பன்
11. கனவுகள் தள்ளுபடி - வே. எழிலரசு
12. முரண்பாடுகள் - பூ. பெருமாள்சாமி
13. சிகரெட் துண்டு - உத்தமசோழன்
14. ஒரு இந்தியக் கனவு - நாகூர் அன்வர்
15. முள் - ஜீ. நாராயணன்
16. நிவாரணம் - ராஜ குரு
17. தெளிவு - வாசன்
18. மரம் வைத்தவர்கள் - சோமசேகர பாகிமான்

கடைத் தெருவுக்குக் கூட அனுப்பினது கிடையாது. படியைத் தாண்டித் தெருவுக்கு வர அனுமதிச்சது பத்து வயசு வரைக்குந் தான். காலம் மாறிண்டிருக்கு."

"நல்லதுதானே? பெண்கள்னா அடுப்படி யையே கட்டிண்டு அழணும்னு இல்லேடி, குஞ்சம்மா. நான் கூட உனக்கு இங்கிலீஷ் சொல்லித் தரலாமான்னு பார்க்கறேன்."

"போறுமே."

"என்னது போறுமே? நிஜமாத்தாண்டி சொல்றேன். இன்னும் ரெண்டே வருஷத்துல உன்னை இங்கிலீஷ்ல கொப்புளிக்க வைக்கி றேனா இல்லியான்னு பாரு. ஆனா நீ மனசு வெச்சு முனைப்பாக் கத்துக்கணும்."

குஞ்சம்மா கண்ணாடி அலமாரியை விட்டகன்று சமையற்கட்டை நோக்கி நடந்து கொண்டே, "ஆ...மா. இப்ப நான் இங்கிலீஷ் கத்துண்டு என்ன சாதிக்கப் போறேன்? வெள்ளைக்காரனைப் பார்த்து, 'கெட் அவுட்'னா சொல்லப் போறேன்? அதுக்கெல் லாந்தான் அஞ்சனாதேவி மாதிரிப் பொண் கள் இருக்காளே?" என்றாள்.

அவளுக்குப் பின்னாலேயே நடந்து, தாமும் சமையலறையை அடைந்த ராமசாமி, குடத்திலிருந்து குடிநீர் சரித்து எடுத்தபடி, "இன்னும் எத்தனையோ அஞ்சனாக்கள் வேணும்டி, குஞ்சம்மா. கங்காதரன் மட்டும் இல்லைன்னா நான் இன்னும் அதிகத் தீவிரத்தோட இந்த இயக்கத்துல ஈடுபட்டு இத்தனை நாள் ஜெயில் கியில்னு போயிருப் பேன். நீயும் அவனுமாச் சேந்துண்டுதான் என்னைக் கட்டிப் போட்டு வெச்சிருக்கேள்" என்றார்!

"கட்டிப் போட்டிருக்குற லட்சணமா இது? அழகுதான். இதுக்கே ஆத்துக்குள்ள போலீஸ்காரன் நொழைஞ்சு ரகசியக் காகிதம் இருக்கான்னு பார்க்கிறதுக்காக வந்து எல்லா இடங்களையும் குடையறான். இன்னும் அவிழ்த்து விட்டிருந்தா எப்படியோ?"

"அந்தப் பொண்ணுக்கு நல்ல ப்ரெசன்ஸ் அஃப் மைண்ட்... டக்குனு அடுக்குள்ள வந்து அந்தக் காகிதங்களை அடுப்புக்குள்ள சொருகி எரிச்சுட்டா. இல்லேன்னா இன் னிக்கு நான் நன்னா மாட்டிண்டிருந்திருப் பேன். எத்தனை வருஷம் தீட்டி இருப் பானோ..."

"அந்தப் பொண்ணுக்கு என்னன்னு சொன்னேள்? ப்ரெச... என்ன அது?"

"ப்ரெசன்ஸ் அஃப் மைண்டனு சொன் னேன். அதாவது ஒரு நெருக்கடியான நேரத் துல திகைச்சுப் போய் நிக்காம, டக்குனு சமயோசிதமா நடந்துக்குற கெட்டிக்காரத் தனம்."

## அருள்வாக்கு

எல்லா பரோபகாரங்களையும் விட உத்தமமானது ஒரு ஜீவனைப் பரமாத்மாவிடம் சேர்க்கிறதுதான். ஆகையால் நாம் செய்கிற நாம உச்சாரணத்தால் அந்திமத்தில் ஒரு ஜீவன் பகவானை நினைக்கும்படியாகப் பண்ணி, அதனால் பகவான் அந்த ஜீவனை எடுத்துக் கொள்ளச் செய்து விட்டால் அதைப் போன்ற உபகாரம் வேறே எதுவும் இல்லை.

கடைசிகால ஈச்வர ஸ்மரணை ஜன்மாவை அப்படியே அழித்து விட்டால் கூடப் பரவாயில்லை. நிச்சயம் அது பாபத்தைப் பெரிய அளவுக்கு அலம்பி விட்டு விடும். இதைப் பற்றி ஸந்தேஹமில்லை. பகவந்நாமா மனஸுக்கு உள்ளே ஊறி விடுகிறபோது பாபத்தை நிச்சயம் கழுவிவிடும். ஆனதால், பகவந்நாமாவோடு கண்ணை மூடுகிறவன் ஜன்மாவே இல்லாமல் விடுபட்டு விடுகிறான் என்று வைத்துக் கொள்ளாவிட்டாலும், மறுபடியும் பாபஜன்மா எடுக்கவே மாட்டான்; நல்ல புண்ய ஜன்மாவாக எடுப்பான் என்பது நிச்சயம்.

புண்ய ஜன்மா என்றால், பணம், காசு, அழகு, உசந்த ஜாதி, இது களா? இல்லை. இந்த ஜன்மா முடிவிலே வந்த பகவத் ஸ்மரணை, விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து அடுத்த ஜன்மாவிலும் எப்போது பார்த்தாலும் இருக்கும்படியான சூழ்நிலையும் மனநிலையும் கொண்டதுதான் புண்யஜன்மா. அப்படி எடுத்து அடுத்த ஜன்மத்தோடாவது சொந்த முயற்சியினாலேயே ஸம்ஸார நிவர்த்தியை ஸம்பாதித்துக் கொள்ள ஒரு ஜீவனுக்கு இந்த ஜன்மத்திலேயே அந்திம நேரத்தில் நாம் நம்மாலான ஸஹாயத்தைப் பண்ண வேண்டும்.

இந்த மஹா பெரிய தர்மத்தைத் தவறாமல் செய்ய வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



"அவ கெட்டிக்காரின்றேள்."

"நிச்சயமா. இல்லேன்னா நான் மாட்டிண்டிருந்திருப்பேன்."

"அப்படின்னா நான் அசடா?"

"இதேதுடா வம்பா இருக்கு? அவ கெட்டிக்காரின்னா நீ அசடுன்னு அர்த்தமா? நீ எப்படின்னு நான் சொல்லலையே?"

"இப்ப சொல்லுங்களேன்."

"அவளை விட நீ அதிக கெட்டிக்காரின்னு அர்த்தம்" என்று சிரித்த ராமசாமி, குஞ்சம்மாவின் விந்தையான மனப்போக்கை எண்ணித் திகைத்தவாறு தண்ணீரை மடக் மடக்கென்று குடித்து விட்டுத் தம்ளரைக் கவிழ்த்து வைத்தார்.

"கேலி கிடக்கட்டும். அதென்ன பேரு அஞ்சனாதேவின்னுட்டு? ரொம்ப ஃபாஷனாப் பேர் வெச்சிண்டிருக்காளே?"

"அவளா வெச்சிண்டா? அவ அப்பா, அம்மா வெச்சிருக்கா. உங்கப்பா ஒரு கர்நாடகம். குஞ்சம்மான்னே பேரு வெச்சுட்டார். இப்பக் கூட ஒண்ணும் குடிமுழுகிடலலே. நீ வேணா ஒண்ணு பண்ணேன். குஞ்சம்மாங்கிற பேரை குஞ்சனா தேவின்னு மாத்திண்டுடேன். கெஜட்டுல போட்டுடலாம்...."

"கெஜட்டுன்னா...?"

"பாத்தியா, இதுக்குத்தான் இங்கிலீஷ் கத்துக்கணும்கிறது. ப்ரெசன்ஸ் அஃப் மைண்ட், கெஜட் இதுக்கெல்லாம் அர்த்தம் கேட்டுண்டிருக்க வேண்டாம் பாரு! வர்ற புதன் கிழமையிலேருந்து உனக்கு நான் இங்கிலீஷ் கத்துக் கொடுக்கப் போறேன். உன்னையும் நான் கொஞ்சங் கொஞ்சமா மாத்தப் போறேன்."

இங்கிலீஷ் கற்றுக் கொள்ளுவது என்ற யோசனை குஞ்சம்மாவுக்கு மிகவும் பிடித்திருக்க, அவள் முகத்தில் சிரிப்புத் தோன்றியது.

"நெஜமாவேதான் சொல்றேளா?"

"பின்ன பொய்யா சொல்றேன்? குஞ்சம்மா அப்பத்தானே குஞ்சனாதேவியாக முடியும்? நாளைக்கு நீயும் அஞ்சனாதேவி வீட்டுக்குப் போய் அவ அப்பா எதிர்ல நாற்காலியில உக்காந்துண்டு சரிசமானமா இங்கிலீஷ்ல பேசலாமோல்லியோ?" என்றார் ராமசாமி.

(தொடரும்)

# விழிப்புணர்வு Vs சிரிப்புணர்வு!

ஆகஸ்ட் 15 முதல் வாக்காளர் விழிப்புணர்வு பிரசார இயக்கம் துவக்குகிறார் சேஷன்.













அடடே... நம்ம லைன்ல திங் பண்ணி விழிப்புணர்ச்சி ஏற்படுத்தற மாதிரி ஏதோ படம் எடுக்கறீங்களாமே! ரொம்ப சந்தோஷம்... என்ன டைட்டில்?

அம்மா-பால்!



# 9

ராஜாராமன் விழிகள் சற்றே விரிய அமர்ந்திருந்ததை அமராவதியும் நரேந்திரநாத் பானர்ஜியும் ஒருசேரப் பார்த்தார்கள்.

"என்னப்பா பார்க்கறேள்? இவர் பேரு எனக்குத் தெரியாது. ஆனா ஆளைத் தெரியும்" என்றாள் அமராவதி.

"என்னம்மா சொல்றே நீ? ஆளைத் தெரியும், ஆனா பேரு தெரிலைங்கறே?"

அவர்களின் உரையாடலின் சாரத்தைப் புரிந்து கொண்ட சிரிப்புடன், "அன்று நடந்ததை நீங்கள் வீட்டில் தெரிவிக்கவே இல்லையா என்ன?" என்றான் அவன் வியப்புடன்.

குரலைத் தாழ்த்திக் கொண்ட அமராவதி, "இல்லை. சொல்லவில்லை. சொன்னால் கவலைப்படுவார்கள் என்பதால்தான்" என்றாள்.

இதனால் மேலும் திகைப்படைந்த ராஜாராமன், "என்ன சொல்றே நீ, அமராவதி? என்ன நடந்தது கவலைப்படும்படியா?" என்றார்.

"சொல்றேம்ப்பா... இனிமே மறைக்க முடியாது. சொல்லிடறேன். அம்மா இப்ப இங்க வரமாட்டாதானே?"

"இல்லே. இப்போதைக்கு வரமாட்டா. பாயசம் பண்றதுல பிஸியா இருக்கா."

"பாயசமா? என்ன விசேஷம்?"

"நரேந்திரநாத் பானர்ஜி இன்னிக்கு நம்மாத்துல சாப்பிடறான்."

"ஓ. உங்கள் பெயர் நரேந்திரநாத் பானர்ஜியா?"

"ஆமாம். உங்கள் பெயர்?"

"என் பெயர் அமராவதி. அப்பாவை உங்களுக்கு ஏற்கெனவே தெரியுமா?"

"இன்றைக்குத்தான் ஒருவர்க்கொருவர் அறிமுகம் செய்து கொண்டோம். லண்டனில் படித்துக் கொண்டிருக்கும் என் மூத்த சகோதரன் இந்திரநாத் பானர்ஜியும் உங்கள் அண்ணா அருணாசலமும் நண்பர்கள். ஒரு செய்தி சொல்லும்படி என் அண்ணா எனக்கு எழுதி இருந்தான். அதைச் சொல்லுவதற்குத்தான் வந்தேன்."

அமராவதி பரபரப்படைந்து "என்ன செய்தி கொண்டு வந்தீர்கள்?" என்று வினவினாள்.

அவன் விவரித்தான். கேட்டுக் கொண்டிருக்கையிலேயே அவள் விழிகளில் நீர் படர்ந்தது.

## ஜோதிர்லதா கிரிஜா

"அமராவதி, இத பாரு. உங்கம்மா திடீர்னு இங்க வந்து நின்னு என்ன, ஏதுன்னு கேக்கறதுக்கு முந்தி கண்ணைத் தொடச்சுக்கோம்மா. நான் அவகிட்ட எதுவும் சொல்றதா இல்லே.... அப்புறம் உடைஞ்சு போயிடுவா."

அமராவதி கண்களைக் கைக்குட்டையால் ஒற்றிக் கொள்கையில்.. "அதுசரி, உங்களுக்குள் எப்படி இதற்கு முன்னால் அறிமுகம் ஏற்பட்டது என்பதை இன்னும் நீங்கள் சொல்லவே இல்லையே" என்று கேட்டார் ராஜாராமன்.

"இரண்டு நாட்களுக்கு முன்னால் நான் ஜார்ஜ்டவுனுக்குப் போயிருந்தேன். அப்பா கடை வீதியில நடந்து கொண்டிருந்த போது, ஒரு வெள்ளைக்காரன் நன்றாய்க் குடித்திருந்தான் - அவன் பக்கா வெள்ளைக்காரனாக இல்லாமல், ஓர் ஆங்கிலோ இந்தியனாகவும் இருக்கக்கூடும் - என்னை வழிமறித்துக்கொண்டு என் கையைப் பிடித்து இழுத்தான். தெருவில்

நடந்து கொண்டிருந்த சிலர் திகைத்துப் போய்ப் பார்த்தார்களே தவிர, சிலைகளாய் நின்று கொண்டிருந்தார்கள். அப்போது மோட்டார்சைக்கிளில் அந்தப் பக்கம் வந்த மிஸ்டர் நரேந்திரநாத்தான் அவன் கையை முறுக்கி என்னை விடுவித்ததோடு அவன் கன்னத்திலும் நாலு விட்டார். அதன் பிறகு என்னைத் தமது சைக்கிளின் பின்னிருக் கையில் அமர்த்தி, சென்ட்ரல் வரை அழைத் துப் போனார்.

"என்ன திமிர் அந்த ஆங்கிலோ இந்திய னுக்கு!... இவ்வளவு நடந்திருக்கிறது. நீ வீட்டில் மூச்சு விடவில்லை. என்னிடமாவது சொல்ல வேண்டாமா?"

அமராவதி பேசாதிருந்தாள்.

"இவ்வளவு உதவி செய்தவனுடைய பெயரைக் கூட நீ கேட்டுத் தெரிந்து கொள்ள வில்லை. படித்து என்ன பிரயோசனம்?"

"சேச்சே. அப்படியெல்லாம் சொல்லா தீர்கள். அப்படி ஒரு நிலைக்கு ஆட்பட்ட பெண் எத்தனை மனக் கலக்கம், அச்சம், கூச்சம், அவமானம், ஆத்திரம் போன்ற பல் வேறு உணர்ச்சிக் கொந்தளிப்புக்கு ஆளாகி இருந்திருப்பாள் என்பதை நீங்கள் நினைத்துப் பார்க்கவேண்டும்!" என்றார் நரேந்திரநாத்

அப்போது வாசற்புறத்திலிருந்து கார் ஹாரன் ஓசை கேட்டது.

"காரை எடுத்துண்டு யாருப்பா வெளியில போனது?"

"அஞ்சனாதான்."

"எங்கே போயிருந்தா?"

"ராமசாமின்னு ஒரு காங்கிரஸ்காரர். மெட்ராஸ்ல கொஞ்சம் உருப்படியான காரி யங்கள் செய்யறதுல ஆர்வமுள்ளவர். அவ ரையும் நம்ம இயக்கத்துல கூட்டுச் சேர்த் துக்கலாமான்னு நோட்டம் பார்க்கிறதுக் காகப் போயிருந்தா... அவ, அவர் வீட்டுக்குப் போயிருந்த நேரம் பார்த்து அவரோட வீட்டைச் சோதனை போடப் போலீஸ்காரன் வந்துட்டானாம். அதோ அவளே வந்துட்டா. வாம்மா, அஞ்சனா..."

**வி**டுவிடுவென்று உள்ளே வந்த அஞ்ச னாவின் விரைவு நரேந்திரநாத் பானர்ஜியைப் பார்த்ததும் சற்றே மட்டுப்பட்டது.






ஹிந்து 26.07.94 தேதியிட்ட நாளிதழில் 17 ஆம் பக்கத்தில், அ. இ. அ. தி. மு. க. மாணவர்கள் சங்கச் செயலர் வெளியிட்ட விளம்பரத்தில் தமிழக முதலமைச்சரை வர்ணித்து 'The Enigmatic Leadership' என்று காணப்படுகிறது. இதற்கு அர்த்தம் 'புரியாத' அல்லது 'புதிரான' தலைமை என்பது!

- இரா. வேங்கடசுப்பிரமணியம்

மெழுகுவர்த்தியை உபயோகிக்கும் முன் சிறிதளவு உப்பை எடுத்து அதில் சில மணி நேரங்கள் மெழுகுவர்த்தியைப் புதைத்து வைத்துவிட்டு, மீண்டும் வெளியே எடுத்துப் பற்ற வைத்தால் நீண்ட நேரம் எரியும். சீக்கிரம் உருகவும் உருகாது. வெளிச்சம் பளிச்சென்று இருக்கும்! செய்து பாருங்களேன்!

- ஆர். ஆர். பூபதி



"இவள் என்னுடைய மூத்த மகள், அஞ்சனா தேவி. அருணாசலத்துக்கு அடுத்தாற்போல் பிறந்த இரட்டைக் குழந்தை என்று சொன்னேனே, அவள். இது மிஸ்டர் நரேந்திரநாத் பானர்ஜி. இவனுடைய அண்ணாவும் லண்டனில் படித்துக் கொண்டிருக்கிறானாம். அருணாசலத்துடைய நண்பனாம். சேதி சொல்லியனுப்பி இருக்கிறான்.

"நல்ல செய்திதானே?" என்று நரேந்திரநாத் பானர்ஜியைப் பார்த்து வினவியவாறு அஞ்சனா ஒரு நாற்காலியில் அமர்ந்தாள்.

நரேந்திரநாத் சுருக்கமாய் அவளுக்காக ஒரு தரம் தான் கொண்டு வந்த செய்தியைச் சொன்னான். அஞ்சனாவின் கண்கள் பொங்காவிட்டாலும், அவள் முகம் நொடியில் மாறிப் போய் விட்டது. கண்களில் அச்சமும், துயரமும் ஒருங்கே தோன்றின.

"கவலைப்படாதீர்கள், மிஸ் அஞ்சனா தேவி. லண்டன் இந்தியா ஹவுஸ் ஹாஸ்டல் தேசபக்த மாணவர்கள் அனைவருமே கெட்டிக்காரர்கள். எப்படியாவது தப்பி விடுவார்கள். மேலும் பாரீஸில் மேடம் காமாவின் ஆட்கள் இருப்பதால் உங்கள் அண்ணாவுக்கு எந்த ஆபத்தும் வராது. அவரை அந்த ஆட்கள் கவனித்துக் கொள்ளுவார்கள். அடுத்த தகவல் கூடிய சீக்கிரம் நமக்கு வந்து சேரும்...."

"வரும் தகவல் எதுவானாலும், அது உங்கள் மூலந்தான் எங்களுக்கு வந்துசேருமா, மிஸ்டர் நரேந்திரநாத்? நாங்கள் உங்கள் அண்ணாவுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டு தகவல் பெற முடியாதா?"

"அது இங்கு வாழும் உங்களுக்கும் சரி, லண்டனில் இருக்கும் அண்ணாவுக்கும் சரி, ஆபத்தாக முடியலாம்."

சற்றுநேர மௌனத்துக்குப் பிறகு, அதைக் கலைப்பதுபோல, "அதுசரி, உன் கதை என்ன? ராமசாமி என்ன சொன்னார்?" என்று கேட்டார் ராஜாராமன்.

அஞ்சனாதேவி ராமசாமியுடனான தனது சந்திப்பு, காவல் துறையினர் அவரது வீட்டுக்கு வந்து திடீர்ச் சோதனை செய்தது, கூட்டத்தை இரத்துச் செய்த தகவலை அவருடைய தோழர்களுக்குத் தெரிவிக்கச் சென்று விட்டு வந்துள்ளது வரையில் தெரிவித்தாள். பிறகு, "உங்கள் அண்ணாவிடமிருந்து எப்போ கடிதம் வரும்? ஒரு வேளை அது தவறி, அதிகாரிகளிடம் சிக்கி விட்டால்!" என்று கவலையோடு கேட்டாள்.

"மறைமுகமான தந்திரச் சொற்களைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் என் அண்ணா ஈடுபட்டிருக்கிறான். மேலெழுத்துவாரியாகக்

கடிதத்தைப் படிக்கும் யாருக்கும் அது ஒரு சாதாரணக் குடும்பக் கடிதம் மாதிரிதான் தெரியும். ஆனால் தந்திரவழியைப் புரிந்து கொண்டவர்களுக்கு அதன் பொருள் வித்தியாசமாகப்படும். நாமும் அதைப் புரிந்து கொண்ட பிறகு அதே முறையில் லண்டன்காரர்களுக்குப் பதில் எழுதியனுப்பலாம். யாருக்கும் எந்தச் சந்தேகமும் வராது."

"உங்கள் இயக்கத்துக்கெல்லாம் ரொம்பப் பணம் தேவைப்படுமே; அதற்கெல்லாம் என்ன செய்வதாக இருக்கிறீர்கள்?" என்றார் ராஜாராமன்.

"ஏற்கெனவே நிறையச் செய்து வந்துள்ளோம். அய்யா! தங்களுக்கு உண்மையில் அதுபற்றி ஏதும் தெரியாதா?"

"வட இந்தியாவில் பல ஊர்களில் நிறையக் கொள்ளைகள் நடப்பதற்குக் காரணம் சுதந்திரப் போராட்ட வீரர்களின் இயக்கமே என்று கேள்விப்படுகிறோம்."

"அது உண்மைதான், அய்யா. ஆனால் நாங்கள் கொள்ளையடிப்பது ஆங்கில ஏகாதிபத்தியத்தின் அரசு அலுவலகங்களைத்தான். அவர்களின் பாங்கிகளை. கஜானாக்களை. ரெயில் பெட்டியில் கார்டிடம் இருக்கும் இரும்புப் பணப் பெட்டியை உடைத்துக் கொள்ளையடித்தல் போன்ற செயல்களால் எங்களுக்குப் பணம் கிடைக்கிறது. பெரும் பணம் சேர்த்து வைத்துள்ள ஆங்கிலேயரின் பங்களாக்களிலும் நாங்கள் எங்கள் கைவரிசையைக் காட்டத் தவறியதில்லை."

"இதுபோன்ற ஏதேனும் ஒரு கொள்ளையிலாவது நீங்கள் நேரடியாய்க் கலந்து கொண்டதுண்டா?" என்று அமராவதி வாயைச் சற்றே பிளந்தபடி வினவ, நரேந்திரநாத் பானர்ஜி கடகடவென்று வாய்விட்டுச் சிரித்தான்.

"அப்படிச் செய்ய வேண்டும் என்ற ஆசை எனக்கு ரொம்பவே உண்டு. ஆனால் அந்தப் பரபரப்பான இனிய அனுபவம் இன்னும் எனக்குக் கிட்டவில்லை. எனது பயிற்சிக்காலம் இன்னும் முடியவில்லை. முடிந்தபிறகு இதுபோன்ற வீர தீர விளையாட்டுக்களில் அவர்கள் என்னையும் சேர்த்துக் கொள்ளக்கூடும். ஆனால், ஒரு சில முக்கிய நிகழ்ச்சிகள் தாமாக என்னைத் தேடி வந்ததுண்டு. அவற்றைப் பிறகு சொல்லுகிறேனே?"

"இந்தியர்களில் யாரையும் நீங்கள் கொள்ளையடிப்பதில்லையா?"

"பொதுவாக இல்லை. மிக, மிகப் பெரிய பணக்காரர்களாக இருந்து கொண்டு வெள்ளையர்களுக்கு வால் பிடிப்பவர்களாகவும் இருந்தால் அவர்களைக் கொள்ளையடிப்போம்."

"இது போன்ற பணிகளில் பெண்கள் உண்டா?" என்று ஆவலுடன் விசாரித்தாள் அமராவதி.

"இல்லை. கூடிய விரைவில் அவர்களும் பங்கேற்கக்கூடும் என்றே தோன்றுகிறது. இம்மாதிரியான கொள்ளைகளைச் செய்வதில் பெண்களுக்குச் சிறு தீங்கும் விளைவிக்கக்கூடாது, அவர்கள் மீது சுண்டு விரலும் படக்கூடாது என்பது எங்களுக்கு நாங்களே விதித்துக் கொண்டிருக்கும் கட்டுப்பாடு."

"அவசியமானால் மட்டுமே கொலை செய்வீர்கள், இல்லையா?" என்றாள் அஞ்சனா.

"தற்காப்புக்காகவும் எங்களுக்கு இடைஞ்சல் இல்லாதிருப்பதற்காகவும் மட்டுமே கொலை செய்வோம்...."

காலடியோசை கேட்டு மூவரும் தலை உயர்த்த, பாமா வந்து நின்றாள்.

அவர்களது பேச்சை அரைகுறையாய்ப் புரிந்து கொணடு,

"என்னன்னா இதெல்லாம்? என்னமோ கொலை, கொள்ளைனெல்லாம் பேசறானே?" என்றாள் கலவரத்துடன்.

(தொடரும்)

"ஏங்க, ராத்திரி 12 மணிக்கு பஸ் வந்து சேர்ந்ததுன்னு சொல்றீங்க. நேரா ஆட்டோ பிடிச்சு வீட்டுக்கு வரவேண்டியதுதானே? உங்களை யார் லாட்ஜுல ரூம் போடச் சொன்னது?"

"ஆட்டோ சார்ஜை விட ரூம் வாடகை கம்மியா இருந்தது. அதனாலதான்!"

- ஏ. சுந்தரம்



## 10

பாமா ஒன்பதாம் வகுப்பு வரையில் படித்துத் தேறியவள். எளிய ஆங்கிலத்தை நன்கு புரிந்து கொண்டு விடக்கூடியவள். எனவே, அவள் கூடத்துக்கு வெளியே நின்றபடி தாங்கள் பரிமாறிக் கொண்ட பேச்சு முழுவதையும் கேட்டிருந் திருப்பாளோ என்ற ஐயம், ராஜாராமனுக்கு அவளது கேள்வியைச் செவியுற்றதும் ஏற் பட்டது. எனினும் அப்படிச் செய்திருக்க மாட்டாள் என்ற நம்பிக்கையுடன், "கல்கத் தாவில் இப்போதெல்லாம் கொலை, கொள் ளைகள் ரொம்ப ஜாஸ்தியாயிடுத்தாம். ஆனா எப்படிப்பட்ட கொள்ளைக்காரங்களும் பெண்கள் மேல கை வைக்க மாட்டாளாம். அவாளுக்குள்ள அப்படி ஒரு கட்டுப்பாடாம். அதான் சொல்லிண்டிருந் தான். ...சாப்பிட வர லாமா?" என்றார்.

...சற்றுப் பொறுத்து பாமா உணவு பரிமாற, நால்வரும் சிரிப்பும் கும் மாளமுமாய்ச் சாப்பிடத் தொடங்கினார்கள்.

மதன்லால் திங்ரா வின் மரண வாக்கு மூலம், வழக்காடுமன் றத்து வாக்குமூலம் ஆகிய வற்றின் மொழியாக்கங் களுடன் தான் ராமசாமி யின் வீட்டுக்குப் போன போது நடந்தவற்றை யெல்லாம் நரேந்திரநாத் பானர்ஜிக்காகவும், தங்கை அமராவதிக்காகவும் முணுமுணுப்பான ஆங் கிலத்தில் - பாமாவுக்குப் புரியாத முறையிலும், அவள் காதுக்கெட்டாத தொலைவில் இருக் கும் போதும் மட்டும் அஞ்சனா விவரித் தாள்.

"அது சரி, உங்கள் அண்ணா இதை எப்படி உங்களுக்கு அனுப்பினார்?"

"கடிதம் யாரிடமிருந்து என்று கண்டு பிடிக்க முடியாதபடி இருக்கும். கடிதத்தில் தனது விலாசத்தை எழுதவே மாட்டான். ஆங்கிலத்தில் டைப் அடித்து அனுப்புவான். கையெழுத்தும் போட மாட்டான். கடிதத் தின் இறுதியில் ஓம் என்று தமிழில் எழுதுவான். கடிதம் வெள்ளைக் காரர்களின் கைகளில் சிக்கினாலும் யாரிடமிருந்து என்பது தெரியாது. உறையின் வெளியே விலாச மும் இருக்காது. கப்பல் மாலுமி ஒருவர் அவனுக்கு நண்பர். அவர் மூலம் எங்களுக்கு வரும். மிக மிக அபாயமான வேலையைத்தான் அந்த மாலுமி எங்களுக் காகச் செய்து வந்தார். கடிதமும் கையுமாக அவர் மாட்டிக் கொண்டால் எல்லாரும் தொலைந்தோம். அந்த மாலுமியும் இனி இங்கு வர வாய்ப்பில்லை, மாற்றப்பட்டு விட்டதால்."

சிரிப்பும் சிந்தனையுமாய்ச் சாப்பிட்டு முடித்தபின், நால்வரும் திரும்பவும் நடுக் கூடத்துக்கு வந்து நாற்காலிகளில் அமர்ந் தார்கள்.

"குதிராம் போஸ் பத்திச் சொன்னான்மா, அஞ்சனா. அவனோட ஃபோட்டோ அவ னைத் தூக்கில போட்டதும் ஆயிரக்கணக் குல கடைகள்ல வித்துதாம். எங்கே, நரேந் திரநாத், மறுபடியும் சொல்லு, கேட்போம்," என்று ராஜாராமன் கேட்டுக் கொண்டார்.

அவருக்குச் சொன்னவற்றையெல்லாம் நரேந்திரநாத் பானர்ஜி மற்றும் ஒருமுறை விவரித்தான். சொல்லிமுடிக்கும் வரை இரண்டு பெண்களும் கண்ணைக் கூடக் கொட்டாமல் அவனைப் பார்த்தபடி இருந் தார்கள். உணர்ச்சிவயப்பட்டு பல்வேறு முக பாவங்கள் காட்டி, அவன் பேசிய தினுசில் மனம் பறிகொடுத்தார்கள். குதிராம் போஸ் பற்றியும் கன்னயாலாலின் இறுதி ஊர்வலத் தில் பிரும்மாண்டமான மக்கள் கூட்டம் கலந்து மரியாதை செய்தது பற்றியும் மிகுந்த உணர்ச்சியுடன் கூறி முடித்து விட்டு, நரேந் திரநாத் பானர்ஜி சில நொடிகள் போல் பேசாதிருந்தான். அவன் கண்கள் சிவந்திருந் தன. இரண்டு பொன்னான இளைஞர்களின் உயிர்கள் கோரமான முறையில் பறிக்கப் பட்டு விட்ட கனமான துயரத்தில் ஆழ்ந்து, நால்வரும் இறுகிய மௌனத்தில் அசை யாமல் உட்கார்ந்திருந்தார்கள்.

சற்றுப் பொறுத்து, "விநாயக் தாமோதர் சாவர்க்கர் வேறு கைது செய்யப்பட்டு விட்டார். உங்களுக்குத் தெரிந்திருக்குமே?" என்றான்.

"தெரியும். இந்த மார்ச் மாதத்தில், இல் லையா?"

"ஆமாம். இந்தியாவில் புரட்சியாளர் களின் நடவடிக்கைகளை லண்டனிலிருந்த படி அவர்தான் வழிநடத்திக் கொண்டிருந் தார். அன்னா க்ளாஸ் எனும் ரஷ்ய மாது

ஜோதிர்லதா கிரிஜா

ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து தந்த 'வெடிகுண்டுகள் செய்யும் முறைகள்' எனும் சிறு ஏட்டின் 20 சைக்ளோஸ்டைல் செய் யப்பட்ட பிரதிகளை சில புரட்சியாளர்க்கு அதனை எடுத்து வந்த பாண்டுரங்க மகா தேவ் பாபட் விநியோகித்தார். இந்தியா முழு வதும் இரகசிய வெடிகுண்டுத் தொழிற் சாலைகள் ஏற்படுத்தி முடிக்கப்படும் வரை யில் எந்தக் காரணத்தைக் கொண்டும் யாரும் ஒரு குண்டைக் கூட வெடிக்கக் கூடாது என்பது சாவர்க்கரின் கடுமையான உத்தர வாக இருந்தது. ஒரு குண்டு வெடித்தாலும், சந்தேகத்தின் பேரில் வெள்ளையர்கள் நாட் டின் மூலை முடுக்கு களிலெல்லாம் தேடிப் பார்த்து அரைகுறை யாக நிற்கும் தொழிற் சாலைகளையோ, அவற்றை நிர்மாணிப் பதில் ஈடுபட்டுள்ள தேசபக்தர்களையோ கண்டுபிடித்து விடக் கூடும் என்பதால் தான்... சாவர்க்கர் தம் சகோதரர் கணேஷ் தாமோதர் சாவர்க்க ருக்கு ஒரு துப்பாக் கியை அனுப்பி வைத் தார். எவ்வளவு தந்திர மாக அதை அனுப்பி னார் தெரியுமா?"

"எப்படி?"

"ஒரு கனமான புத்தகத்தின் ஆரம்பப் பக்கங்களையும் கீழ்ப் பக்கங்களையும் விட்டு விட்டு, நடுவே உள்ள பக்கங்களை ஒரு துப்பாக்கியின் வடிவத்தில் வெட்டி விட்டு, அந்தப் பள்ளத்தில் அதைக் கச்சித மாய்ப் பொருத்திப் புத்தகத்தை மூடி விட் டார். ஆனால் இத்துப்பாக்கி அவர் சகோ தரர் கையைச் சென்றடையு முன்னரே, அந்தச் சகோதரர் நாசிக்கொலை வழக்கு சம்பந்தமாய்க் கைது செய்யப்பட்டு விட் டார்."

"என்ன துரதிருஷ்டம்" என்றாள் அஞ்சனா.

"நாசிக்கில் என்ன நடந்தது?" என்று கேட்டாள் அமராவதி.

"நான் அப்புறம் உனக்குச் சொல்லு கிறேன். நரேந்திரநாத்தைத் தொந்தரவு செய் யாதே" என்று ராஜாராமன் இடைமறித்ததை வலுவாக மறுத்து விட்டு, நரேந்திரநாத் பானர்ஜி சொல்லத் தொடங்கினான்.

"அபிநவ் பாரத் சொஸைட்டி எனும் புரட்சி யாளர் கழகத்தை உருவாக்கியவர் கணேஷ் தாமோதர் சாவர்க்கர்தான். கணேஷ் பற்றிய



தகவல்களை எப்படியோ அடைந்து விட்ட அரசு அவரைக் கைது செய்து காவலில் வைத்து விட்டது. கணேஷ் குற்றவாளி என்று தீர்ப்பளித்த நாசிக் ஜில்லா மாஜிஸ்திரேட் ஜாக்சனைக் கொன்று விட அபிநவ் பாரத் சொஸைட்டியின் உறுப்பினர்கள் தீர்மானித் தனர். டிசம்பர் 21ஆம் தேதியன்று சென்ற ஆண்டில் ஜாக்சன், அனந்த் லட்சுமண் எனும் பதினெட்டு வயதே ஆன கல்லூரி மாணவனால் சுட்டுக் கொல்லப்பட்டான்.

கனு வித்யா எனும் அவர்கள் இயக்கத்தைச் சேர்ந்த மற்றோர் உறுப்பினன் துரோக நடவடிக்கையில் ஈடுபட்டுப் போலீசுக்குத் தெரிவித்ததால்தான் இந்தச் சதி பற்றிய முன்தகவல் தெரிந்து, கணேஷ்தாமோதர் சாவர்க்கரை அவர்கள் கைது செய்ய நேர்ந் தது. இவனால் முப்பத்தேழு புரட்சியாளர் கள் கைதானார்கள். இவர்களில் மூன்று பேர் தூக்கிலிடப்பட்டார்கள். மற்றவர்கள் பல் வேறு சிறைத் தண்டனைக்கு உட்பட்டார் கள். விநாயக் தாமோதர் சாவர்க்கர் பற்றிய தகவலும் இதனால் தெரியவந்து விட, லண்டனில் அவர் கைது செய்யப்பட்டு இப்போது அங்கு சிறைவைக்கப்பட்டிருக் கிறார். இங்கிலாந்து அரசு அவரை என்ன செய்ய இருக்கிறதோ தெரியாது. நமக்குள்ளே இப்படி ஓரிரு துரோகிகள் இருப்பதால் எத்த கைய நஷ்டம் ஏற்படுகிறது பாருங்கள், சே...”



‘‘உன் படிப்புக்கு உன் அண்ணன் கிட்டே இருந்து மணி ஆர்டர் வருமே... இப்போ ஏன் வருவதில்லை...?”

“எங்க ‘மன்னி ஆர்டர்’தான்!”

- சோம. முத்துக்குமார்

“தனிமனிதர்களைக் கொல்லுவது சரி இல்லையோ எனும் சந்தேகம் அவ்வப்போது வந்தாலும், வெள்ளைக்காரர்களுக்கு அவர் களது அராஜகத்தை உணர்த்த வேறு வழி இருப்பதாய்த் தெரியவில்லை. கோகலே சொல்லும் மிதவாதம் இன்னும் பல நூறு ஆண்டுகளுக்கு இந்தியாவை அடிமையாகத் தான் வைத்திருக்கும் என்றே தோன்றுகிறது.”

“சந்தேகமில்லாமல்... அந்த வெள்ளைக் கார மாஜிஸ்திரேட் ஜாக்சன், கணேஷ் தாமோதரைக் கைது செய்தது யாருடைய தூண்டுதலாய் என்று தெரியுமா உங்க ளுக்கு?”

“தெரியாது.”

“லண்டனில் இந்திய விவகாரங்களுக் கான அதிகாரியாக இருந்த கர்ஸான் வில்லி யின் தூண்டுதலால்தான்.”

“ஓகோ. அந்தக் கர்ஸான் வில்லியை மதன் லால் திங்ரா சுட்டுக் கொன்றது அதனால் தானா?”

“ஆமாம். அதனால்தான்.”

“மதன்லால் திங்ராவின் கோர்ட்டு வாக்கு மூலம், மரண வாக்குமூலம் ஆகியவை உங்க ளிடம் உள்ளனவா, நரேந்திரநாத்?” என்று கேட்டாள் அஞ்சனா.

“இல்லை. கொடுத்தீர்களென்றால் நானும் அவற்றுக்குப் பிரதிகள் எடுத்துப் பலருக்கும் விநியோகிக்க ஏற்பாடு செய்வேன்...”

அஞ்சனா எழுந்து போய் அலமாரி யைத் திறந்து, அதில் வைக்கப்பட்டிருந்த சிறிய பெட்டியிலிருந்து ஒரு கற்றைக் காகிதங் களை எடுத்து வந்து அவனிடம் கொடுத் தாள்.

‘‘கொஞ்சம் வெள்ளைத்தாள்களும் கொடுத்தீர்களாயின், இங்கேயே உட்கார்ந்து பிரதி எடுத்துக் கொண்டு விடுவேன்.”

“தருகிறேனே.”

...அவன் எழுதிக் கொண்டிருந்த போது, “என்னடி, அமராவதி! என்னமோ ஆபத்து லேருந்து இவர் உன்னைக் காப்பாத்தினார்னு அப்பா சொன்னாளே, என்ன அது? இப்ப சொல்லேன்,” என்று கேட்டாள் அஞ்சனா. அமராவதி நடந்ததையெல்லாம் அவளுக்கு விரிவாகச் சொன்னாள்.

“ஜார்ஜ் டவுன் பக்கம் எதுக்குப் போனே நீ?”

“ஸ்டேஷனரி வாங்க வேண்டி இருந்தது. அதுக்காகப் போனேன்.”

எழுதிக் கொண்டே, “இந்த ஜார்ஜ்டவுன், கர்ஸான் ரோட் இது மாதிரி வெள்ளைக் காரன் பெயரால் இருக்கிற இடங்களுக்கெல் லாம் நம்ம நாட்டுப் பெரியவர்கள் பெயரை வைக்க வேண்டும். என்ன சொல்லுகிறீர் கள்?” என்றான் நரேந்திரநாத் பானர்ஜி முகத் தைத் தீவிரமாக வைத்தபடி.

“மெட்ராஸ்ல ஜார்ஜ் டவுன்கிற பேரு எப்படிப்பா அந்த இடத்துக்கு வந்தது?” என்றாள் அமராவதி.

“இது தெரியாதா? பிரின்ஸ் ஆப் வேல்ஸ் 1906-இலே இந்தியாவுக்கு வந்தான். அவந்தானே அடுத்த இங்கிலாந்து அரசன் ஐந்தாம் ஜார்ஜ்? அதுக்காக ஜார்ஜ் டவுன்னு பேரை வச்சுட்டா.”

“சுதந்திரம் வரட்டும்; எல்லாத்தையும் மாற்றிப்பிடுவோம். ரிப்பன் பில்டிங் பேரை யும் மாத்திடணும்,” என்று அமராவதி கொதிப்புடன் அறிவிக்க, “இதுக்குத்தான் சரித்திரம் தெரியணும்கிறது. லார்ட் ரிப்ப னைப் பத்தி மட்டும் அப்படிச் சொல்லவே சொல்லாதே. எப்படிப்பட்ட பெரிய மனு ஷன் தெரியுமா அந்தாளு? அடேயப்பா, இது

வரையில இந்தியாவை ஆண்ட வைஸ்ராய் அத்தனை பேரிலயும் அவர்தான் பெஸ்ட். 1880-லேருந்து 1884 வரையில் ஆண்டார். நிர்வாகத் துறையில் பல சீர்திருத்தங்களைச் செய்தார். இந்தியர்களுக்குத் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ற நிர்வாகத் திறமை வரணும்கிறதுக்காக லோகல் செல்ப் கவர்ன்மென்ட்ங்கிற ஸ்தல ஸ்தாபன ஆட்சி முறையை முதன் முதலா அமல்படுத்தினார். தேசம் முழுவதும் லோகல் போர்டுகளும் ஜில்லா போர்டுகளும் ஏற்பட அவர்தான் காரண கர்த்தா. கல்வித் துறையிலயும் எத்தனையோ சீர்திருத்தங்களைச் செய்தார். வெள்ளைக்காரக் குற்றவாளிகளை இந்திய மாஜிஸ்திரேட்டுகள் விசாரிக்கக்கூடாதுன்னு இருந்த சட்டத்தை மாத்தி, முதன் முதலா சர் ரோமேஷ் சந்திராங்கிறவரைக் கல்கத்தா நீதி சபையில ஆக்டிங் ஜட்ஜா நியமிச்சார். இந்தியர்கள் மேல பரிவும் பாசமும் காட்டினதோட; வெள்ளைக்காரங்க இங்க நடந்துண்ட முறையை அடிக்கடி கண்டிக்கவும் செய்த ரிப்பனை லண்டன் பத்திரிகைகளும் இந்தியாவில் வெள்ளைக்காரங்க பத்திரிகைகளும் தாக்கு தாக்குனு தாக்கித்து. அதனால இங்கிலாந்து சர்க்கார் மேல தன் கோபத்தையும் வருத்தத்தையும் தெரிவிச்சுட்டு, அவர் தன்னோட பதவியை ராஜினாமாப் பண்ணிட்டார்.''

"அட, அவ்வளவு பெரிய மனுஷனா!'' என்று அமராவதி வியந்து போனாள்.

"அதனாலதான் தமிழ்நாட்டுல 'ரிப்பன் எங்கள் அப்பன்'னு சொல்லிப் புகழ்ந்து பாராட்டினா...''

இதற்குள் எழுதி முடித்து விட்ட நரேந்திரநாத், "ஒன்று சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே?'' என்றான்.

"இல்லை, நரேந்திரநாத். எதுவானாலும் சொல்லு.''

"உங்கள் தமிழ் தடா புடா என்று ஒரு மாதிரி - அதாவது சண்டை போடுகிற மாதிரி ஒலிக்கிறது.''

"உங்கள் வங்காள மொழி ரொம்ப இனிமை என்று எண்ணமோ? உஷ் உஷ் என்று காக்கா, குருவி விரட்டி ஓட்டுவது போன்ற ஓசையுள்ள மொழி'' என்று சிரித்தாள் அஞ்சனா.

"வெள்ளைக்காரனை விரட்டப் போவது வங்காளம்தானே? அதனால் எங்கள் மொழி பொருத்தமான மொழிதான்,'' என்று நரேந்திரநாத் பானர்ஜி வாய் விட்டுச் சிரித்தான்.

அஞ்சனாவின் முகத்திலிருந்த புன்னகையும் விளையாட்டும் மறைந்து அதில் சட்டென்று ஒரு தீவிரம் குடிகொண்டது.

"மிஸ்டர் நரேந்திரநாத், வங்காளத்தைத் தவிர வேறு ராஜதானிகளில் வெடிகுண்டுத் தொழிற்சாலைகள், புரட்சியாளர்கள் இல்லையா? தெரியாமல்தான் கேட்கிறேன். மகாராஷ்டிராவில் இருப்பது தெரியும்.''

"ஆங்காங்கு ஏற்பட்டுள்ளன. இன்னும் ஏற்பட்டு வருகின்றன, மிஸ் அஞ்சனாதேவி. வங்காளத்தில்தான் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையிலும் தீவிரத்திலும் புரட்சியாளர்கள் செயல்பட்டு வருகிறார்கள். பீகார், ஒரிஸ்ஸா, பஞ்சாப், மகாராஷ்டிரம், ஏன், சிறிய அளவில் தானென்றாலும் தமிழ்நாட்டிலும், புரட்சியாளர்கள் தங்கள் கிளைகளை நிறுவியுள்ளார்கள். பிரபுல்லா சக்தியும் குதிராம் போசும் வெடிகுண்டு வீசிக் கென்னடி என்ற வெள்ளைக்காரனின் மனைவியையும் மகளையும் கொலை செய்ததைப் புகழ்ந்து தம் கேசரி என்ற பத்திரிகையில் எழுதியதால்தான் திலகர் பர்மாச் சிறைக்குக் கடத்தப்பட்டார் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்குமென்று நம்புகிறேன்.''



**"நம்ம பேட்டை ரௌடி பக்கிரியை சென்சார் போர்டில வேலைக்குக் கூப்பிட்டிருக்காங்க!''**

**"அட! என்ன வேலை?''**

**"சினிமா பாட்டில வர்ற சில வார்த்தைகளுக்கெல்லாம் அர்த்தம் சொல்ல!''**

**- பாளை. பசும்பொன்**

"தெரியும்...'' என்றாள் அஞ்சனா.

"உரிய நாளில் அவரை விடுதலை செய்வார்களோ, இல்லாவிட்டால் வேறு ஏதேனும் அடாத பழிசுமத்தித் தண்டனைக் காலத்தை நீட்டித்து விடுவார்களோ, தெரியவில்லை. அந்த ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்'' என்று கூறிப் பெருமூச்சு விட்டார் ராஜாராமன்.

அப்போது வாசற்கதவு படபடவென்று தட்டப்பட்டது. தட்டிய தினுசில் ஒரு பதற்றமும் அவசரமும் தெரிந்தன. அஞ்சனா எழுந்தாள். அவளைத் தம் பார்வையாலேயே அமர்த்தி விட்டு, யாரென்று பார்க்கத் தாமே எழுந்து போனார், ராஜாராமன்.

(தொடரும்)

# ஆட்கள் தேவை

"**சா**ர்...!"

"யாரது...?"

"வேலைக்கு ஆள் தேவைன்னு வெளியில விளம்பரம் பார்த்தேன், அதுதான்...!"

"அட்டடே... வேலைக்கா... வாங்க வாங்க. உட்காருங்க...!"

"பரவால்ல சார்... இப்படியே நிக்க றேனே...!"

"சும்மா உக்காருங்க சார்... ஆமா நீங்க ஸிங்கரா...? கட்டிங் மாஸ்டரா...? இல்லே, ஓவர்லாக் எம்ப்ராய்டிங், பண்ட்லிங்...!"

"அதெல்லாம் எதுவுமேயில்லை சார். ப்ளஸ் டூ படிச்சிட்டுக் கோயமுத்தூர்ல ஒர்க் ஷாப் வேலை பாத்துட்டிருந்தேன். இப்பெல் லாம் இஞ்சினீயரிங் தொழில் நலிஞ்சு, வர்ற வரும்படி கட்டுபடியாகலை. திருப்பூர் போனா பொழையாத புள்ளையும் பொழைக் கும்ன்னாங்க. அதுதான் குடும்பத்தோட....!"

"அட, அப்பிடியா...? ம்.... ஒர்க்ஷாப்புல வேலை செஞ்சவங்களுக்கு ஏத்த மாதிரி இங்கே எந்த வேலையும் இல்லியே....!"

"சார் அப்பிடி சொல்லக் கூடாது... எந்த வேலை கொடுத்தாலும் நா செய்வேன் சார். கண்ணுல பார்த்தா கையில செய்யற திறமை எங்கிட்ட இருக்கு சார்!"

"கண்ணு பார்த்தா கை செய்யுமா... அதெப்படிப்பா...? ஆமா, உன்னோட வயசு என்னாச்சு?"

"முப்பத்தியிரண்டு!"

"முப்பத்தி ரெண்டா... அடேயப்பா... அர சாங்க உத்தியோகத்துல கூட சேத்திக்க மாட் டாங்க. ஏம்ப்பா இந்த வயசுல பழக வேண் டிய வேலையா இது...? படிக்க வேண்டிய காலத்துல பழக வேண்டிய தொழில் தெரி யுமா இது? பேசாம நீ ஒர்க்ஷாப் வேலைக்கே போயிடு!"

"சார் சார்... நீங்க சடால்னு அப்பிடி சொல்லக் கூடாது. பெரிய மனசு பண்ணி, எனக்கொரு வேலையக் கொடுங்க. ஜமாய்த் துக் காட்டறேன்!"

"என்னப்பா உன்னோட காலங்கார்த் தால ஒரே தொல்லையாப் போச்சு. இங்கெல் லாம் ஒரு குழந்தைப் புள்ளை ஒரு நாளக்கி ஆயிரக்கணக்குல பீஸ் மடிச்சடுக்குது. பொம்பளைப் புள்ளைக மலை மலையா ஓவர்லாக் அடிச்சு, கை நிறைய காசு சம் பாதிக்கறாங்க. பத்து வயசுல வேலக்கி வந்த வங்கெல்லாம் பெரிய கட்டிங் மாஸ்டராகி, தினம் இருநூறு முந்நூறுன்னு பாக்கெட்டை ரொப்பீட்டுப் போறாங்க தெரியுமா...? இங்கே ஒரு பொடியன் செய்யற வேலையையும், அவனுக சம்பாதிக்கிற சம்பாதனையையும் பார்த்தேன்னா நீயே மிரண்டடிச்சிட்டு ஓடிப் போவே!"

"அப்படியெல்லாம் போக மாட்டேன், நம்புங்க சார்...!"

"ம்... சரி சரி... உனக்கேத்த மாதிரி சூப்பர் வைசர் வேலை போட்டுத் தர்றேன், செய் வியா?"

"சூபர்வைசரா? ஓ... ரொம்ப தாங்க்ஸ் சார்..."

"சூபர்வைசர்ன்னா உடனே உங்க ஒர்க் ஷாப் மாதிரி வெள்ளைக் காலர்ல 'இன்' பண்ணிட்டுன்னு கனவு காண ஆரம்பிச் சுடாதே... உன்னோட கரி இழுக்கற ஒர்க் ஷாப் வேலையை விட ஒரு படி கூட!"

"எப்படி சார்?"

"இங்கே சூப்பர்வைசர்ன்னா காலம்பற ஆறேழு மணிக்கே கம்பெனிக்கி வந்திட ணும். இராத்திரி ஒம்பது பத்து மணி கூட ஆகும், வீட்டுக்குப் போக. போஸ்ட் ஆபீஸ் போயிட்டு வர்றதுலயிருந்து ஆளுக வேலை செய்யறதைக் கவனிச்சுட்டே, அவங்க கூடமாட வேலைக்கி ஒத்தாசை செய்யணும். அவசர ஆத்திரத்துக்கு நீயே 'பண்ட்லிங்' போடணும்... பீஸ் மடிச்சடுக்கணும்... தெரி யாததைத் தெரிஞ்ச பசங்ககிட்டே கேட்டுத் தெரிஞ்சுக்கணும்...!"

"சரி சார்...!"

"எல்லாத்துக்கும் மேலா லேபரர்கிட்டே சுயமரியாதைய எதிர்பார்க்கக் கூடாது. அவங்கதான் இங்கே ராஜா மாதிரி. ஏதாவது அவங்க உன்னைக் கிண்டலடிச்சாக் கூட காது கேக்காத மாதிரி கண்டுக்காம இருந்துக் கணும். எக்குத்தப்பா ஏதும் பேசிடக்



கூடாது... பொடியனுக உட்பட...! தட்டிக் கொடுத்து வேலை வாங்கத் தெரியணும். தப்பித் தவறி ஏதாவது பிரச்னைன்னா தப்பு அவங்களோடதா இருந்தாக்கூட உனக்குத் தான் சீட்டுக் கிழிக்க வேண்டி வரும். ஏன்னா இங்கே உம்மாதிரி படிச்சவங்க ஆயிரம் பேர் கிடைப்பாங்க... ஆனா இந்த வேலையைப் படிச்சவங்களை விட்டாப் பிடிக் கறது குதிரைக் கொம்பு!"

"ஆகட்டும் சார்... அப்புறம் சம்பளம்...!"

"ஓ... சம்பளத்தைச் சொல்ல மறந்துட் டனா... முதல்லியே சொல்லியிருக்க வேண்டி யது. இங்கே எல்லோருக்கும் வாரக் கூலி. உனக்கு மட்டும் மாதச் சம்பளம் நானூறு ரூபாய்... கொஞ்சம் மனசுக்குத் திருப்திகரமா வேல செஞ்சேன்னா அம்பதோ அறுபதோ கூட்டித் தருவோம்!"

"என்ன சார் சொல்றீங்க...?"

"ஏம்ப்பா... சம்பளத்தைக் கேட்டவுடனே இப்படிப் பதர்றே...? இங்கே இதுதான் ஆபீஸ் உத்தியோகம். படிச்சவங்களுக்கு இவ்வளவுதான் சம்பளம். எந்தக் கம்பனியில வேண்ணா கேட்டுப் பாரு!"

"இல்லே... இங்கே பொடியனுக கூட வாரம் இருநூறு முந்நூறு சம்பாதிக்கறாங் கன்னு...!"

"முந்நூறு என்ன... அவனுக சாமர்த்தியம் போல ஆயிரம் கூட சம்பாதிக்கறாங்க... அதுக்காக ஒனக்கு ரெண்டாயிரம் ரொக்கமா எண்ணிக் கொடுத்திட முடியுமா? அவன் செய்யற வேலையில துளியூண்டு நீ செய் வியா? அவனுக கூட நீ போட்டி போட முடியமா... வேணுமின்னா உனக்கும் அப்பிடி ஆசையிருந்தா சம்பளமில்லாம வந்து வேலையைப் பழகு. பழகி முடிச் சவுடனே 'பீஸ் ரேட்'ல வேல செய்யி... ஆனா பொடியனுகளெல்லாம் 'கேணச்' சிரிப்பு சிரிக்கறானுகன்னு நீ என்னை சடைஞ்சுக்கக் கூடாது...!"

".... ....!"

"என்னப்பா ரொம்ப அமைதியா யிட்டே... ஓர்க்ஷாப்பே தேவலைன்னு படுதா...? அட என்னப்பா நா பாட்டுக்குப் பேசிட்டே இருக்கேன்... நீ பாட்டுக்குப் போயிட்டே இருக்கே...?"

**கா.சு.வேலாயுதன்**

# இந்த ஆலமரத்துக்கும் ஒரு நிதி
# நிறுவனத்துக்கும் என்ன சம்பந்தம்





சக்தி பைனான்ஸ் – வங்கிகளுக்
இணையான பாதுகாப்




**அ**ரச சபைக்குத் தாமதமாக வந்த தெனாலிராமன் சொன்ன காரணம் - 'அழும் குழந்தையைச் சமாதானப்படுத்தி விட்டு வர முடியவில்லை...'

"என்ன... ஒரு குழந்தையை உன்னால் சமாதானப்படுத்த முடியவில்லையா..." - என்று வியந்த அரசருக்கு, தெனாலிராமன் குழந்தையாகவும் அரசர் தந்தையாகவும் நடித்துக் காட்டியது -

குழந்தை : "பானை வேணும்..." (அழுகை)

பானை வரவழைக்கப்பட்டது.

குழந்தை : "யானை வேணும்..." (அழுகை)

யானை வரவழைக்கப்பட்டது.

குழந்தை மீண்டும் அழுதது....

"பானைக்குள் யானையை நுழைய வை..."

அரசர் தன் தோல்வியை ஒப்புக் கொண்டது அந்தக் காலம்!

**புதிய கதை : இன்றும் அப்படி ஒரு நிகழ்ச்சி**

**அ**மைச்சரவைக் கூட்டத்திற்கு ஒரு அமைச்சர் தாமதமாக வந்தார். காரணம் கேட்கப்பட்டது.

அழுத குழந்தையைச் சமாதானப்படுத்தி விட்டு வர முடியவில்லை என்றார் அமைச்சர்.

அப்படி என்ன குழந்தை கேட்டது -

குழந்தை : "முதல்வர் வரணும்... முதல்வர் வரணும்..." (அழுகை)

எப்படியோ கெஞ்சிக் கூத்தாடி முதல்வரை அழைத்து வந்தார்கள்.

மீண்டும் குழந்தை அழுகை...

"கவர்னர் வரணும்... கவர்னர் வரணும்."

கவர்னரையும் போய் கெஞ்சிக் கூத்தாடி அழைத்து வந்து நிறுத்தினார்கள்.

குழந்தை மீண்டும் அழுகை...

"இன்னும் என்ன செய்யணும்..." என்று கேட்டபோது, குழந்தை அழுகையை நிறுத்தாமல் - "முதல்வரும் கவர்னரும் கைகுலுக்க வேண்டும்..." - என்று அழுதது.

அமைச்சர் சொன்னார் - -

"இதைவிட பானைக்குள் யானையை நுழைத்து விடுவது சுலபம்...!"

— ஏ.வி.கிரி



சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாலே இளம் சிந்தனைகள் நமக்குத் தோன்று கின்றன. இருபது வயது குறைந்த மாதிரி எண்ணம் உண்டாகிறது.

இவரை நான் எங்கு சந்தித்தேன்?

எப்படிச் சந்தித்தேன்?

'நீர்க்குமிழி' திரைப்படத்தில் எனக்கு ஒளிப்பதிவாளராகப் பணிபுரிந்தவர் திரு நிமாய் கோஷ் அவர்கள்.



* மார்லின் மன்ரோ



* ஹிட்ச்காக்

# கே.பாலசந்தர்

கலைவாணர் என்.எஸ்.கே. அவர்கள் இவரை மாஸ்கோவில் சந்திக்க, திரும்பி வரும் போது கலைவாணர் இவரை சென்னைக்கு அழைத்து வந்து தமிழ்ப் படங்களுக்கு ஒளிப்பதிவாளர் ஆக்கினார்.

இதைப் பற்றி நிமாய் கோஷ் அவர்கள் குறிப்பிடும் போது,

"I CAME TO MADRAS FROM CALCUTTA VIA MOSCOW"

என்று ஹாஸ்யமாகச் சொல்வார்.

இதே போல்தான் எனது சின்ன வயது சிதம்பரத்து நண்பனை அவர் அமெரிக்கா வழியாகச் சென்னை வந்த போது சந்தித்தேன் என்று சொன்னால் பொருத்தமாகும்.

பத்திரிகைகளில் எழுதும் கட்டுரைகள் வாயிலாக நான் தெரிந்து கொண்டிருந்த டாக்டர் உதயமூர்த்திதான், அண்ணாமலை சர்வகால சாலையில் எனது பக்கத்து சீட் உதயமூர்த்தி என்று நீண்ட நாட்களுக்குப் பிறகுதான் புரிந்து கொண்டேன்.

OH! WHAT A GIANT LEAP BY MY FRIEND!

சமீபத்தில் ஒரு நாள் சந்தித்த போது இப்பொழுது திரைப்படங்களிலே பரவலாகக் காணப்படுகின்ற அதிகப்படியான செக்ஸ் காட்சிகள் பற்றியும், வன் முறைக் காட்சிகள் பற்றியும் கவலை தெரிவித்து என்னிடம் வாதாடினார்.

இப்படிப்பட்ட குற்றச்சாட்டுகள் எனது திரைப் படங்களிலே இடம் பெறுவதில்லை யென்று நான் வாதாடிய போதும் அந்தத் துறையைச் சார்ந்தவன் என்கிற முறையிலே நீங்கள் ஏதாவது செய்ய வேண்டாமா என்று கேட்டார்.



* உதய மூர்த்தி

நான் சொன்னேன் :

இப்பொழுது பெரும் கெடுபிடிக்கு உள்ளாக்கப்பட்டிருக்கும் CENSOR பிரச்னைக்குக் கூட இரண்டு பக்கங்கள் உண்டு, நாணயத்தின் இரண்டு பக்கங்களைப் போல!

வன்முறையைப் பொறுத்தமட்டில் Alfred Hitchcock சொன்னார் :

"THERE IS NO TERROR IN KILLING;
ONLY IN THE ANTICIPATION OF IT."

"ஒரு கொலை நடக்கப் போகிறது என்கிற எதிர்பார்ப்பிலேதான் பயங்கரம் இருக்கிறதே தவிர, நிஜமாகக் காட்டப் படுகிற கொலையிலே இல்லை!"

எவ்வளவு அனுபவபூர்வமான அறிவுரை இது! திரையுலக இயக்குனர்கள் இந்த உண்மையை மட்டும் புரிந்து கொண்டால்... வன்முறை விஷயத்தில் கத்தரிக்கோல் கெடுபிடி இருக்கவே சந்தர்ப்பமில்லை.

THE OTHER SIDE OF THE COIN :

மர்லீன் மன்ரோ என்கிற ஹாலிவுட் நடிகை ஒருமுறை சொன்னார். அவர் நகைச்சுவையாகக் குறிப்பிட்டாலும் அதிலும் உண்மை இருக்கத்தான்செய்கிறது.

"THE TROUBLE WITH CENSORS
IS THEY WORRY IF A GIRL
HAS CLEVAGE; THEY OUGHT
TO WORRY IF SHE HAS NOT ANY"

இதை நான் தமிழ்ப்படுத்த விரும்பவில்லை!

(நினைவலைகள் தொடரும்)

# வேலி

**கா**லை எட்டு மணிக்கு மேல் ஆகிவிட்ட போதிலும் லேசான இருட்டு இன்னமும் மிச்சமிருந்தது. காற்று சிலு சிலுப்போடு உடலுக்குள் ஊடுருவிற்று. சென்ற பத்து நாட்களாகத் தொடர்ச்சியாகப் பெய்த மழையினால் இந்தப் பிரதேசம் ரொம்பவும் குளிர்ந்து போய் விட்டது. இன்றும் கொட்டப் போகிறேன் என்று பயமுறுத்தும் வானத்தைப் பார்த்துக் கொண்டே தெருவில் இறங்கினார் கவுடர்.

இந்த சீதோஷ்ண நிலை காரணமாக இன்னும் டீச் செடிகளில் நிறையத் துளிர் விட்டிருக்கும். அவற்றை இன்றே பறித்து விட ஏற்பாடு செய்ய வேண்டும். ஒன்பது மணிக்குள் தோட்டத்துக்குப் போனால்தான் இலைபறிக்க ஆட்கள் கிடைப்பார்கள். இல்லாவிட்டால் வேறெங்கேனும் வேலைக்குச் சென்று விடுவார்கள்.

அவர் மூச்சு வாங்க மேலே ஏறுகையில், "சாமி! நல்லா இருக்கீங்களா?" - என்ற குரல் கேட்டுத் திரும்பினார். வெண்புகையாய் படர்ந்திருக்கும் பனிப்படலத்தின் ஊடே எதிரே நிற்பவனைக் கூர்ந்து நோக்கினார். ஓ... மாடசாமி. இப்போது இவன் எங்கே வந்தான்.

"என்ன கவுடரே, நல்லா இருக்கீங்களா, மிஸ்ட்டுல ஆளை அடையாளம் தெரியல லீங்களா?" -அசட்டுச் சிரிப்புடன் நிற்கும் மாடசாமியைக் காண்கையில் வழக்கமாய்த் தோன்றும் எரிச்சல் அவரைப் பற்றியது.

"ம்... ம்..." - என்றவாறே அவர் மேலே நடந்தார்.

"தோட்டத்துப் பக்கம் போறீங்களா கவுடரே?"

"ம்... ம்..." - என்று மறுபடியும் ஓசையை மட்டும் எழுப்பினார் கவுடர், இவன் எப்படி வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளட்டும் என்பது போல.

"தோட்டத்திலே இலை பறிக்கிற வேலை இருக்குதுன்னா ஆளுங்ககிட்டே கொஞ்சம் சொல்லி வையுங்க சாமி. என் தோட்டத்து இலையையும் தெரியாம பறிச்சுரப் போறாங்க. நீங்க கூடவே இருந்து கொஞ்சம் சொல்லுங்க சாமி, தயவு செஞ்சு."

அவர் எதுவும் பேசாது மௌனமாக நடப்பதைப் பார்த்து விட்டு அவனே தொடர்ந்தான்.

"நான் எப்படியாவது வேலி போட்டுட ஏற்பாடு செய்யறேன் சாமி. கொஞ்சம் பணப் பிரச்னை. அதான் வேலி போட முடியாம திண்டாடறேன்."

வேலி போட்டு விட்டால் மட்டும் இவனுக்குத் தோட்டத்தை நிர்வகிக்கத் தெரிந்து விடுமா? செடியில் எந்த இலையைக் கிள்ள வேண்டும் என்ற ஞானம் கூட இல்லாத இவனெல்லாம்...

மாடசாமி இவரது மனத்தில் ஓடும் எண்ணங்களைப் புரிந்து கொண்டவன் போலப் பதில் சொன்னான். "தேயிலை பத்தின விஷயங்களெல்லாம் கத்துக்கிறதுக்காக உபாஸிலே வகுப்பிலே சேர்ந்திருக்கேன் சாமி. ப்ரீயாவே சொல்லித் தராங்களாம். அடுத்த வாரத்திலேயிருந்து வரச் சொல்லி யிருக்காங்க. எல்லா விவரமும் தெரிஞ்சிக் கிட்டேன்னா அப்புறமா நானே இலை பறிச்சிக்கிட்டுப் போய் பாக்டரியிலே கொடுத்துடுவேன். அதுவரைக்கும் தயவு பண்ணுங்க சாமி. என் பூமியிலேயிருந்து இலை பறிச்சுடாதீங்க."

அவர் அலட்சியமாக ஒரு பார்வையை அவன் மேல் வீசி விட்டு மேலே நடந்தார். கேவலம் ஐந்து சென்ட் தோட்டத்தில் இலையெடுக்கக் கூலி கூட கொடுக்க முடியாத வக்கற்ற பயலுக்கு, பேச்சு ஒரு கேடா என்று தோன்றிற்று. இந்தக் கூலிப் பயலுக்குப்



போய் தம் நிலத்தின் ஒரு பகுதியை விற்கப் படும்படி ஆயிற்றே என்ற உணர்வு கிளம்பி, எரிச்சலைத் தோற்றுவித்தது.

சில மாதங்களுக்கு முன்னால் மகளின் கல்யாண விஷயமாக நிலத்தின் ஒரு பகுதியை விற்றே ஆக வேண்டும் என்ற கட்டாயம் ஏற்பட்ட போது, அவருக்கு உண்டான வருத்தம் கொஞ்ச நஞ்சமல்ல. தமது நிலம் இருக்கும் திசையில் ஒரு அந்நிய ஆளை நடக்க விடுவதைக் கூட சகிக்க முடியாத அவருக்கு, நிலத்தை மற்றவர்க்கு விற்க நேரிடும் விஷயத்தை ஜீரணிக்க வெகு நாட்களானது. ஆனால் வேறு வழியின்றி மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு புரோக்கர் வழியாக நிலத்தை விற்க ஏற்பாடுகள் செய்தார். மேல்குன்னூரில் இருக்கும் ஒரு பணக்காரர் நிலத்தை வாங்க விருப்பம் தெரிவிப்பதாக அறிந்து, பேரம் பேசி முடித்து ரிஜிஸ்தர் செய்கையில்தான் அந்தப் பெரிய மனிதர் நிலத்தை மாடசாமிக்காக வாங்கப் போகும் விஷயம் தெரிய வந்தது. அவர் மெட்றாஸிற்குப் போய் செட்டில் ஆகப் போவதாகவும் அவரிடம் இத்தனை வருஷங்களாக விசுவாசமாக உழைத்த மாடசாமிக்கு அவனைப் பாராட்டும் அடையாளமாக இந்த நிலத்தை வாங்கிப் பரிசாக அளிக்கிறார் என்பதும் தெரியவந்தது.

மகளின் கல்யாண அமளியில் மும்முரமாயிருந்த அவர் சில தினங்கள் கழித்து தோட்டத்துப் பக்கம் போகையில் மாடசாமியைப் பார்க்க நேர்ந்தது. டீச் செடியைப் பற்றியும் இலையைப் பற்றியும் அவன் அசட்டு இளிப்புடன் விசாரித்த போது, அவருக்கு ஆத்திரம்தான் வந்தது. இந்தப் பயலுக்கு வந்த வாழ்வைப் பார் என்று மனம் குமுறியது. அவனுக்குத் தேயிலைச் செடி பற்றிய விவரம் ஒன்றும் தெரியாதது கூட ஒரு



விதத்தில் நல்லதாகப் போயிற்று. கொடுக்கப் பட்டிருக்கும் நிலத்துக்கு எல்லையாக எந்த வொரு வேலி அமைப்பும் அவனால் போட முடியாததால் இன்னும் கூடுதலாகவே சௌகரியமாகப் போயிற்று. முன்பு போலவே தோட்ட முழுவதிலும் உள்ள தேயிலைச் செடிகளிலிருந்து இலைகளை எடுத்து, அவரால் பயன்பெற முடிந்தது.

தேயிலை பறிக்கும் கூலியாட்கள் வசிக்கும் வரிசையில் போய் கவுடர் விசாரித்ததில், அனேகம் பேர் வெளியே வேலைக்குப் போய் விட்டதாகத் தெரிந்தது. நல்லவேளையாக இரண்டு பெண் கூலி யாட்கள் மட்டும் இருந்தனர். அவர்களை அழைத்துக் கொண்டு தோட்டத்துக்குப் போனார்.

அந்தப் பெண்களை இலை பறிக்கச் சொல்லி விட்டு அவர் மேட்டில் ஏறி உட் கார்ந்து கொண்டார்.

அவர்களில் ஒருத்தி இவர் இருக்கும் திசை நோக்கி ஓங்கிய குரலில் ஏதோ கேட்பது காதில் விழ அவர் திரும்பினார். "இந்தப் பக்கத்து நிலத்தை நீங்க யாருக்கோ வித்துப் போட்டீங்களாமே. எங்கேயிருந்து இலை பறிக்கணும்னு குறிப்பிட்டுச் சொன் னீங்கன்னா நல்லது சாமி."

அவருக்குச் சற்றுமுன் பார்த்த மாட சாமியின் நினைவு வந்தது. 'இந்தத் தடவை யாவது இலை எடுக்காதீங்க சாமி' என்று அவன் சொன்னதும் நினைவுக்கு வந்தது.

அவர் ஒரு நொடியில் சமாளித்துக் கொண்டார். மாடசாமியின் வார்த்தைக் கெல்லாம் போய் பெரிதாய் மதிப்புக் கொடுத்துக் கொண்டிருக்கிறேனே, என்ன ஒரு மடையன் நான்.

அவர் அங்கிருந்தே சைகை காட்டினார். 'எல்லாவற்றையும் பறித்து விடுங்கள். எல் லாம் நம்மதுதான்!'

அந்தப் பெண்கள் மெதுவாகப் பறித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து விட்டு, அவர்களை விரட்டிக் கொண்டிருந்தார்.

வலதுபுறமாக இருந்த சீதாப்பழ மரத்தின் பின்னே ஒரு சாக்குப் பை நிறைய டீ இலை கள் வைத்திருப்பதைப் பார்த்தார். இதை இவர்கள் ஒளித்து வைத்திருக்கிறார்களோ என்ற சந்தேகம் எழுந்தது. போன மாதம் இப்படித்தான் காரி கவுடர் தோட்டத்தில் நடந்ததாம். இலை பறிப்பவர்கள் இரண்டு மூன்று மூட்டைகளை மறைத்து வைத் திருந்து, இருட்டிய பிறகு எடுத்துப் போய் பாக்டரியில் கிடைத்த விலைக்கு விற்றுக் கொண்டிருந்தார்களாம். அதே போல இந்தப் பெண் பிள்ளைகளும் செய்கிறார்கள். அதுதான் இந்தத் திருட்டு முழி முழிக் கிறார்கள்.

இந்த நினைவு எழுந்ததும் அவருக்கு உட லெங்கும் உஷ்ணம் பரவியது. கண்கள் ஜிவு ஜிவுத்துப் போய் முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு அவர்களைப் பார்த்துச் சத்தம் போட்டார்.

அவர் சப்தம் போடுவதைக் கேட்டுச் சில நொடிகள் ஸ்தம்பித்துப் போய் நின்ற அவர் கள், தங்களுக்குள் சின்னதாக ஏதோ பேசிக் கொண்டார்கள். சட்டென்று இலை பறிப் பதை நிறுத்தி விட்டு சேலைத் தலைப்பை உதறிக் கட்டிக் கொண்டார்கள். அவர் எதிரே வந்து நின்று, "இந்தாங்க சாமி, வாய்க்கு வந்தபடி பேசாதீங்க. நீங்களும் ஆச்சு. உங்க வேலையும் ஆச்சு" என்று சொல்லி விட்டு செடிகளினூடே சரசர வென்று இறங்கி நடந்தார்கள். சில நொடி களுக்குப் பின் திரும்பி, "இனிமே உங்க தோட்டத்துலே யார் வந்து இலை பறிக் கிறாங்கங்கிறதையும் நாங்க பார்த்துடறோம்" என்ற வாக்கியத்தை வீசி விட்டு, ஓட்டமாய் ஓடி மறைந்தார்கள்.

அவர்கள் சென்றதையே பார்த்துக் கொண்டு நின்ற கவுடர் தன்னைச் சுற்றிலும் பார்த்தார். இலை எடுத்த பைகள் இங்கு மங்குமாகச் சிதறிக் கிடந்தன. எப்போதும் போலத்தானே இந்தக் கூலியாட்களை அதட்டினார். இவர் தரும் கூலியை நம்பி வாழ்பவர்களுக்கு இத்தனை திமிரா?

டீ இலைச் சாக்குகளை வைத்துக் கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் ஒரு நிமிடம் திணறினார். பொழுது சாய்ந்து கொண்டு வருவதால் இனி வேறு கூலியாள் கிடைப்பதும் கஷ்டம். மேலும் அந்தப் பெண்கள் போகிற போக்கில் கத்தி விட்டுச் சென்றது வேறு நினைவுக்கு வந்தது. அவர்கள் உள்ளூர்க் கூலியாட்கள். ஆகவே அவர்களை மீறிக் கொண்டு வேறு யாரும் உடனடியாக இவரது தோட்டத்தில் வேலை செய்ய வர மாட்டார்கள் என்பது நிச்சயம்.

இந்த இலைப் பைகளை இங்கேயே வைத்து விட்டு நாளைக் காலை நம் வீட்டுப் பக்கத்திலிருந்து ஏதேனும் ஆட்களை அழைத்துக் கொண்டு வரலாம் என்றால் அதுவும் சாத்தியம் இல்லை. இலைப் பைகள் இரவோடிரவாகக் கண்டிப்பாகத் திருட்டுப் போய் விடும். என்ன செய்வது?

அவர் சிறிய சிறிய பைகளாக இருந்த வற்றை மொத்தமாக நான்கு கோணிப் பைக ளில் திணித்தார். கடவுளே, இந்தப் பைகளை எப்படி பாக்டரிக்கு எடுத்துப் போவது? கூலி

யாட்கள் இருந்த போது வெகு சுலபமாக இருந்த வேலை இப்போது ஏன் இவ்வளவு மலைப்பைத் தருகிறது? ஒவ்வொரு பையாக நாம்தான் தூக்கி ஒரு கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் பாக்டரிக்கு எடுத்துப் போக வேண்டுமா?

அவருக்கு அந்த வழி நெடுகிலும் 'கவுடரே கவுடரே' என்று மதிப்பும் மரியாதையு மாய்க் கூப்பிடும் ஜனங்களின் நினைவு வந்தது. அவர்களின் இடையே நாம் மூட்டையைச் சுமந்து சென்றால் நம் கௌரவம் என்ன ஆகும்!

அவர் வேறு வழியின்றி நன்றாக இருட்டட்டும் என்று காத்திருந்தார். இருட்டில் மூட்டையைத் தூக்கிப் போனால் யாரோ கூலியாள் போவதாகத் தான் நினைத்துக் கொள்வார்கள். வேகமாகத் திரும்பி வந்து ஒவ்வொரு மூட்டையாக எடுத்துப் போய் விடலாம் என்று தீர்மானித்தார்.

நன்கு இருட்டிய பிறகு ஒரு மூட்டையை எடுத்துத் தலையில் வைத்துக் கொண்டார். பழக்கம் இல்லாததால் நடக்க முடியாமல் கால்கள் தள்ளாடின. சில நிமிட நடைக்குப் பிறகு எதிர்ப்பட்ட ஓர் உருவம் இவரைப் பார்த்து விட்டு நிற்பது தெரிந்தது. இவர் முகத்தைக் காண்பிக்காதவாறு நடக்க முயற்சிக்கையில்...

"கவுடரே, நீங்களா... என்ன இது. மூட்டையைத் தூக்கிக்கிட்டு..."

கடவுளே... மாடசாமி. இவன் ஏன் வந்து தொலைத்தான்.

அவன் திரும்பத் திரும்பக் கேட்டதால் அவர் வேறு வழியின்றி ஆனால் விவரம் எதுவும் சொல்லாமல் பாக்டரிக்கு இலைகளைக் கொண்டு போவதாகச் சொன்னார்.

"பாக்டரிக்கா... இடத்தை மட்டும் காண்பியுங்க சாமி. நான் தூக்கிட்டு வரேன்" என்று சொல்லி விட்டு மூட்டையைப் பலவந்தமாக அவரிடமிருந்து பிடுங்கித் தன் தலையின் மேல் வைத்துக் கொண்டான் மாடசாமி.

அடுத்த ஒரு மணி நேரத்துக்குள் அவன் அந்த நாலு மூட்டைகளையும் பாக்டரிக்கு வெகு சுலபமாகக் கடத்துகையில் கவுடரின் மனத்தில் ஒரு எண்ணம் மின்னல் போலப் பளிச்சிட்டது. இந்த மூட்டைகளில் இருப்பவற்றுள் பெரும்பாலான இலைகள் இவனது உடைமை நிலத்திலிருந்து எடுக்கப்பட்டதுதான். இதை இவன் அறிவானா?

பாக்டரியில் இலைகளை நிறுத்து, அதற்கான பணத்தை வாங்கிக் கவுடரிடம் கொடுத்து விட்டு வழக்கம் போல அசட்டுத் தனமாய்ச் சிரிக்கும் மாடசாமியைக் காண்கையில் கவுடருக்கு மனத்தின் ஒரு மூலையில் ஒரு சங்கட உணர்வு தோன்றியது.

மாடசாமி நீட்டிய பணத்தை அவன் கரங்களுக்குள் அழுத்தினார். "இதை நீயே வெச்சுக்க மாடசாமி. இலையிலே நெறைய உன் பூமியிலிருந்து எடுத்ததுதான். வழக்கம் போல கூலியாளுங்க எல்லை தெரியாம எடுத்துட்டாங்க."

அவன் அந்தப் பணத்தைத் திரும்ப அவரிடம் கொடுத்தான். "அப்போ உங்க தோட்டத்து இலையும் கலந்துதானே இருக்கு. எவ்வளவு என்னுதுன்னு தெரியாதப்போ நான் இந்தப் பணத்தை எப்படி வாங்கிக்கிறது. அது சரியில்லீங்க."

சிறிது நேரம் கழித்து அவன் அவரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டான்.

"நான் கௌம்பறேங்க. நேரமாயிடுச்சு" என்று சொல்லி விட்டு நடந்தவன் சில நொடிகள் நிதானித்துத் திரும்பி, "சீக்கிரமே வேலி போட்டுருவேங்க. அதுவரைக்கும் இலை பறிக்காம பார்த்துக்குங்க சாமி!" என்றான்.

## பன்னிரண்டாவது ஆசிய விளையாட்டு




பன்னிரண்டாவது ஆசிய விளையாட்டுப் போட்டிகள் ஹீரோஷிமாவில் நடக்கவிருக்கிறது. (அக்டோபர் 2-ம் தேதியிலிருந்து அக்டோபர் 16-ம் தேதி வரை)

மிக்கி மவுஸ் போன்ற அமைப்புள்ள இரண்டு சின்னங்கள் - poppu (ஆண்புறா) cuccu (பெண்புறா)- தயாரிக்கப்பட்டு விட்டன. ஆசிய விளையாட்டுப் போட்டிகளிலேயே இதுவரை இல்லாத அளவில் பலதரப்பட்ட விளையாட்டுகளும், கலந்து கொள்ளும் நாடுகளும், விளையாட்டு வீரர்களும் அதிகம்.

சுமார் 7,300 விளையாட்டு வீரர்கள் இந்த ஆசிய போட்டியில் கலந்து கொள்ளப் போகிறார்கள். 337 வகைப் போட்டிகளுக்கு 43 நாடுகள் பங்கேற்க உள்ளன.

'ஹீரோசீமா பிக் ஆர்ச்' என்ற ஸ்டேடியத்தில்தான் இந்த ஆசியவிளையாட்டுப் போட்டிகள் தொடங்கி, அந்த ஸ்டேடியத்திலேயே முடிவு பெறும். பத்தாயிரம் பேர் அமர்ந்து பார்க்கும்படி ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஒவ்வொன்றும் 3.5.மீட்டர் உயரம், 4.6 மீட்டர் அகலம் உள்ள நூறு பெரிய டீவி திரைகளில் அவ்வப்போது வீடியோ காட்சிகளும் தெரியும்.

நன்றி: ஜப்பான் காலிங்
- கா.ரா.குமார்



# மணிக்கொடி

ராஜாராமன் திறந்த கதவுக்கு அப்பால் இரண்டு இளைஞர்கள் நின்றிருந்தார்கள். இருவரில் மூத்தவனாய்த் தெரிந்த மனிதனின் முகத்தில் தம்மை அடையாளம் கண்டு கொண்டதற்கான அறிகுறியும், வியப்பும் தெரிந்ததை அவர் கவனித்தார்.

"மிஸ்டர் ராஜாராமனைப் பார்க்கணும். நீங்கதானே?"

"ஆமா. நானேதான். என்ன விஷயமாய்ப் பார்க்கணும்?"

"உள்ளே வந்துதான் பேசணுங்க."

"சரி, வாங்க."

அஞ்சனா, அமராவதி, நரேந்திரநாத் ஆகியோர் அமர்ந்திருந்த கூடத்துக்கு முன்னால் இருந்த தமது அறைக்குள் அவர் அவர்களை அழைத்துச் சென்றார்.

"உக்காருங்க."

"நாங்க சி.ஐ.டி. இன்ஸ்பெக்டர்ஸ். உங்க வீட்டைச் சோதனை போடச் சொல்லி எங்களுக்கு உத்தரவு."

"ஒரு நிமிஷம்... அஞ்சனா, அஞ்சனா..."

"என்னப்பா?" என்று கேட்டுக் கொண்டே அங்கு வந்த அவளிடம், "இவா சி.ஐ.டீஸாம். நம்மாத்தைச் சோதனை போடறதுக்காக வந்திருக்கா. அம்மாகிட்டே சொல்லி சீக்கிரம் சாப்பிட்டு முடிக்கச் சொல்லு. ஏன்னா சமையற்கட்டுலயும் சோதனை போடுவா..." என்றார் ராஜாராமன் சிரிப்புடன்.

அவர் தன்னையழைத்துச் சொன்னதன் உட்கிடையைப் புரிந்து கொண்ட அஞ்சனா, "சரிப்பா, சொல்றேன்," என்று உள்ளே விரைந்து 'ஆவன' செய்ய முற்பட்டாள்.

"சொல்லுங்க."

"என்னை உங்களுக்கு அடையாளம் தெரியல்லேன்னு தோணுது. தினசரி எத்தனையோ கட்சிக்காரங்க உங்களைத் தேடிக்கிட்டு வர்றாங்க. எத்தனை பேரைன்னு நினைப்பு வச்சுப்பீங்க?"

ராஜாராமன் அவனைக் கூர்ந்து பார்த்து அடையாளம் தெரிந்து கொள்ள முடியாது தோற்றுப் போனார்.

"என் பேரு சிவப்பிரகாசம். இவன் என் சொந்தத் தம்பி. இவன் பேரு ஞானப்பிரகாசம். இவனும் சி.ஐ.டி.தான். ஆறு வருஷத்துக்கு முந்தி எங்கிட்ட ஒரு சல்லிக்காசு கூட வாங்காம எனக்காக ஒரு கேஸ்ல வாதாடி ஜெயிச்சுக் குடுத்தீங்க. ஞாபகம் வருதா?"

"அட, அந்த சிவப்பிரகாசமா? இப்ப ஞாபகம் வந்துடுத்துப்பா."

'அப்ப நீங்க புரசைவாக்கத்துல இருந்தீங்க.'

"ஆமா. நீங்க கான்ஸ்டபிளா இருந்தீங்க."

"இப்ப சி.ஐ.டி... தம்பி! இவரு மட்டும் நமக்காகப் பணம் வாங்காம வாதாடி சித்தி ஏமாத்தப் பார்த்த அப்பாவுடைய வீடு வித்த பணத்துல நமக்கான பங்கை வாங்கிக் குடுத்திருக்கலைன்னா நாம இந்த நெலமைக்கு உயர்ந்திருக்க முடியாது."

அதுவரை உர்ரென்று முகத்தை வைத்துக் கொண்டிருந்த ஞானப்பிரகாசம் முதன் முறையாகக் கீற்றுப் போல் சின்னதாய் ஒரு புன்னகை காட்டினான்.

"அப்பப்ப சில ஏழைகளுக்காகவும் காசு வாங்காம வாதாடி அவங்க கேஸ்களை ஜெயிச்சுக் கொடுக்கணும்கிறது என்னோட கொள்கை. அது தெரிஞ்சோ தெரியாமலோ நீங்க எங்கிட்ட வந்தீங்க."

"கேள்விப்பட்டுத்தான் சார் வந்தேன். நீங்களும் என்னோட நெலமையைப் புரிஞ்சுக்கிட்டு காலணாக்கூட வாங்காம வாதாடி ஜெயிச்சுக் குடுத்தீங்க. உங்களுக்கு அதுக்குப் பிரதி உபகாரமா ஏதுஞ்செய்யாட்டியும், இப்ப உங்க வீட்டைச் சோதனை போட வந்திருக்கேன்..."

ராஜாராமன் உதடுகள் பிரியாமல் புன் சிரிப்புக் காட்டினார்.

"அது சரி. 'எதுக்காக எங்க வீட்டைச் சோதனை போட வந்திருக்கீங்க'ன்னு நீங்க கேக்கவே இல்லியே, சார்?" - 'அப்படியானால் வெள்ளைக்கார அரசின் சந்தேகம் சரியானதுதானா? அதனால்தான் உங்களையும் அறியாது ஒரு சின்ன ஆச்சரியம் கூடக் காட்டாமல் உட்கார்ந்திருக்கிறீர்களா?"

கணத்துக்கும் குறைவான பொழுதுக்குள் ராஜாராமன் சுதாரித்துக் கொண்டு சிரித்தார். "இப்பத்தான் எல்லார் வீடுகள்ளயும் திடீர் திடீர்னு பூந்து போலீஸ்காரங்க சோதனை போடறாங்களே. அதனாலதான் என்ன விஷயமாச் சோதனை போடப் போறீங் கன்னு கேக்கல்லே..."

"சார், உங்க விஷயத்துல நாங்க ரொம் பவும் கடுமையா செர்ச் பண்ணப் போற தில்லே. செர்ச் பண்ணினதாப் பேர் பண் ணிட்டு எதுவும் கிடைக்கல்லேன்னு ரிப் போர்ட் எழுதிடறதாத்தான் இருக்கோம்."

"உங்க இஷ்டப்படி செய்யுங்க... ஆனா... இங்கிலீஷ்காரங்க சந்தேகப்படற மாதிரி ஏதாவது தடயம் இந்த வீட்டில உங்களுக்குக் கிடைச்சா என்ன பண்றதா இருக்கீங்க?" - ராஜாராமன் சிரித்தபடி வினவினார்.

## ஜோதிர்லதா கிரிஜா

சிவப்பிரகாசமும் ஞானப்பிரகாசமும் பார்வைப் பரிமாற்றம் செய்து கொண்டார்கள். சிவப்பிரகாசம் சொன்னான் : "அப்படி ஏதாச்சும் கிடைச்சாலும், நாங்க எதுவும் கிடைக்கலைன்னு ரிப்போர்ட் எழுதறதாத் தான் இருக்கோம்."

"எனக்கு உதவி செய்யணும்கிறதுக்காக உங்களுக்கு நீங்களே ஆபத்தைத் தேடிக் காதீங்க, சிவப்பிரகாசம். நாளைக்கு வேற சி.ஐ.டி.யை அனுப்பி வைச்சாலும் வைப் பாங்க..."

"அவங்க வந்தப்ப தடயம் கிடைச்சிச்சு. நாங்க வந்து தேடினப்ப கிடைக்கல்லே. அம் புட்டுத்தேன்..."

"அப்ப இங்க தடயம் இருக்குன்னு சொல் நீங்களா?" என்று ராஜாராமன் சிரிக்க, "அது உங்களுக்குத்தானே சார் தெரியும்? தேடிப் பார்த்தாத்தான் எங்களுக்குத் தெரியும்" என்ற சிவப்பிரகாசமும் சிரித்தான்.

"சரி, பாருங்க."

ஞானப்பிரகாசம் உட்கார்ந்திருக்க, சிவப் பிரகாசமே சாவி செருகி இருந்த அலமாரி, மேசை, அதன் இழுப்பறை என்று





"ஆஸ்பத்திரி திறப்பு விழாவுக்குத் தலைவரை அழைச்சது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"என்னென்ன டெஸ்ட் உண்டோ அத்தனையையும் தனக்கு இலவசமா பாத்துட்டுப் போயிட்டார்!"

— அம்பை தேவா

மேலெழுந்தவாரியாக ஆராய்ந்தான். தேடியதாகப் பேர் பண்ணிய பிறகு, திரும்பி வந்து நாற்காலியில் உட்கார்ந்தான்.

"ஐ'ஆம் சாரி, சார். செர்ச் வாரண்டை நீங்க கேட்டு வாங்கிப் பார்க்கல்லே. நாங்களும் காட்டல்லே..." என்று சிரித்த அவன் தனது கைப்பையைத் திறந்து ஓர் உறையை வெளியே இழுத்தான். உத்தரவை எடுத்து அவரிடம் காட்டினான்.

"எல்லாம் ஒரு நம்பிக்கைதான் சிவப்பிரகாசம்."

"அப்புறம் வீட்டுக்குள்ளயும் தேடினதா நாங்க பேர் பண்ணணுமே, சார்? போகலாமா?"

"பேஷா. வாங்கோ...."

கூடத்துக்கு வந்த இருவரும், அங்கு உட்கார்ந்து அமராவதியுடனும் அஞ்சனாவுடனும் பேசிச் சிரித்துக் கொண்டிருந்த நரேந்

"கேட்ட உடனே, இன்னிக்கு பேப்பர் தர்றையே... பேப்பர்லே என்ன நியூஸ்?"

"ஒசி பேப்பர் தர மறுத்தவருக்குக் கத்தி குத்து'ன்னு செய்தி வந்திருக்கு!"

— வி.சி. கிருஷ்ணரத்தினம்



திரநாத் பானர்ஜியைப் பார்த்தார்கள். அவனது பார்வையும் அவர்கள் பார்வைகளும் கலந்தன. சிவப்பிரகாசத்தின் முகமும் ஞானப்பிரகாசத்தின் முகமும் மாற்றங் கொண்டன.

பக்கத்து அறையையடைந்ததும், கைப்பையிலிருந்து ஓர் உறையை எடுத்து அதனின்று ஒரு நிழற்படத்தை உருவிய சிவப்பிரகாசம், "சார், உங்க வீட்டில உக்காந்து பேசிட்டிருக்கிற ஆள் இவருதானான்னு கொஞ்சம் பாருங்க," என்றான்.

அதை வாங்கிப் பார்த்த ராஜாராமன், "ஆமா, அவன் மாதிரியேதான் இருக்கான். என்ன விஷயம்?" என்றார். அவருக்கு இதயம் தடதடக்கலாயிற்று.

"அந்தாளு பெங்காலிதானே?"

சட்டெனக் கிளர்ந்த யோசனையில், "இல்லியே. அவன் பக்கா தெக்கத்தியாளுன்னா? வெங்கட்ராமன்னு பேரு... நீங்களே வேணாப் பேசிப் பாருங்களேன்..." என்றார், இரைந்த குரலில்.

"அப்படியா? டிட்டோ அந்தக் கொலைகார நரேந்திரநாத் பானர்ஜி மாதிரியே இருக்கானே?" என்றான் சிவப்பிரகாசம்.

## 12

நரேந்திரநாத் பானர்ஜியைத் தெற்கத்தியான் என்றும் அவனது பெயரை வேங்கடராமன் என்றும் சொன்னது அவன் வாயைத் திறந்து ஒரே ஒரு தமிழ்ச் சொல்லை விடுவித்ததுமே பொய்த்துப் போகுமே என்று எண்ணிய ராஜாராமன், வாயில் வந்ததை உளறிய தமது அவசரக் குடுக்கைத்தனத்துக்காகத் தம்மையே நொந்து கொண்டார்.

புகைப்படத்தைத் திரும்பவும் தனது பையினுள் பத்திரப்படுத்திய சிவப்பிரகாசம் அந்த அறையிலும் ஓரிரு பொருட்களை நகர்த்தியும் கவிழ்த்தும் பார்த்த பிறகு, "அப்ப நாங்க கெளம்பட்டுமா, சார்?" என்றான்.

"செய்யுங்க. சிவப்பிரகாசம்..." என்ற ராஜாராமன் இருவரையும் முந்திக் கொண்டு அவ்வறையை விட்டு வெளியே வந்தார். கூடத்தில் நரேந்திரநாத் பானர்ஜி உட்கார்ந்திருந்த நாற்காலி காலியாக இருந்தது.

"என்ன அஞ்சனா, வெங்கட்ராமன் எங்கே? போயிட்டானா?" என்று இரைந்த குரலில் கேட்டபடி அவர்களை நெருங்கிய ராஜாராமன் கண்களை மலர்த்திச் சாடை செய்தார்.

அஞ்சனா, "ராம் போயிட்டு வர்றேன்னு உங்ககிட்ட சொல்லச் சொன்னாம்ப்பா...

## அருள்வாக்கு

**யாரோ ப்ரபு லக்ஷப்ராம்மண போஜனம் செய்யப் போகிறார். அதற்காக மலை மலையாக சாப்பாட்டு வகைகள் கொட்டிக் கிடக்கிறது. ஆனாலும் உனக்கு வேண்டியது ஒரு இலைச் சாப்பாடுதானே? உனக்கு ப்ரபுவைத் தெரியாது. ஆனால் அவருக்கு வேண்டப்பட்ட ஒருவரைத் தெரியும். இவரிடம் கேட்டுக் கொண்டால் இவரே காரியரில் போட்டு எடுத்துக் கொண்டு வந்து நீ இருக்கிற இடத்திலேயே கொடுத்து விடுவார். அப்புறம் ப்ரபுவிடம் போய் நீ எதற்கு நிற்க வேண்டும்? சாப்பாடு அவருடையதாகவே இருக்கட்டும். அதற்காக, அவரைப் போய் நீ தொந்தரவு பண்ண வேண்டியதில்லை. அவர் அதை எதிர்பார்க்கவும் இல்லை. 'உன்னிடம் வருகிறவர்கள்**

உங்களைத் தொந்தரவு பண்ண வேண்டாம் கிறதுக்காக எங்ககிட்ட சொல்லிட்டுப் போனான்,'' என்றாள்.

அவருக்கு அப்பாடா என்று இருந்தது. நல்லவேளை வேங்கடராமனின் சுருக்கம் ராம் என்று சமாளிக்கலாம்.

இருவரையும் வாசல் வரை போய் வழி யனுப்பிக் கதவைத் தாளிட்டுக் கொண்டு திரும்பிய ராஜாராமன், அயர்வுடன் தொப்பென்று மகள்களுக்கு எதிரே ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார்.

“அவனுக்கு எப்படியோ தோணி இருக்கு உடனே இங்கேருந்து கௌம்பிப் போயிடணும்னு'' என்றார் ராஜாராமன் வியர்த்திருந்த முகத்தை மேல்துண்டால் ஒற்றியவாறு.

“ஒருவேளை சி.ஐ.டி. காரா ரெண்டு பேரும் ஒரு மாதிரி சந்தேகமாத் தன்னை உத்துப் பார்த்ததை அவன் கவனிச்சுட்டான்னு தோணறது. இல்லேன்னா சட்னு எழுந்து ஓடிடணும்னு அவனுக்கு எப்படித் தோணி இருக்கும்?'' என்றாள் அஞ்சனா.

“நீங்க பக்கத்து ரூம்லே அவங்ககிட்ட 'அவன் பக்கா தெக்கத்தி ஆளுன்னா? வெங்கட்ராமன்னு பேரு' அப்படீன்னு சத்தமாச் சொன்னதுமே எங்களுக்குப் புரிஞ்சு போயிடுத்துப்பா, அது எச்சரிக்கைன்னு. ஆனா அதுக்கு முன்னாடியே நரேந்திரநாத் கௌம்பிட்டான்'' என்றாள் அமராவதி.

“போறதுக்கு முந்தி ஏதாவது சொன்னானா?''

“...'நான் உடனே புறப்பட்டாகணும். சி.ஐ.டிக்காரா ரெண்டு பேரும் என்னைப் பார்த்த பார்வை சரி இல்லே. அப்பாகிட்ட சொல்லிடுங்கோ' அப்படின்னு சொல்லிட்டு ஓட்டமும் நடையுமா வெளியேறிட்டாம்ப்பா!'' எனறாள் அஞ்சனா.

“நல்ல வேலை பண்ணினான். புத்திசாலிப் பையன்.''

“ஏம்ப்பா, நீங்க பாட்டுக்கு யோசிக்காம அவனைத் தெக்கத்தியாளுன்னு சொல்லிட்டேளே! சி.ஐ.டி.க்காரா ரெண்டு பேரும் அவனோட பேச்சுக் கொடுத்திருந்தா என்ன கதி ஆகியிருக்கும்?'' - அமராவதி.

“நன்னா ஆப்டுண்டிருப்பேன்...'' என்று சிரித்தார் ராஜாராமன்.

அப்போது அங்கு வந்து தானும் அவர்களுக்கு எதிரே ஒரு நாற்காலியில் உட்கார்ந்த பாமா, “என்ன சதி நடக்கிறது நம்மாத்துல? அந்தப் பிள்ளையாண்டான் எங்கே?'' என்றாள். “சி.ஐ.டிக்காரா எதுக்கு வந்தா?''

“இத பாரு, பாமா. இது உனக்குத் துளிக் கூட சம்பந்தமே இல்லாத சமாசாரம். அதனால நீ என்ன பண்றே? எந்தக் கேள்வியும் கேக்காம கம்னு இருக்கே.''

“ஆத்துப் பொம்மனாட்டிக்குத் தெரியாம எதையும் ஒளிக்கக்கூடாதுன்னா. இப்ப எதையுமே நான் கவனிக்கல்லேன்னு வச்சுக்குங்கோ. நாளைக்கே எவனாவது சி.ஐ.டி. வந்து நரேந்திரநாத் பானர்ஜியைப் பத்தி எங்கிட்ட கேட்டா, 'ஓ. அந்த பெங்காலிப் பையன்தானே? தெரியுமே! எங்காத்துக்கெல்லாம் வந்திருக்கானே!' அப்படின்னு நான் பாட்டுக்கு விஷயம் புரியாம உளறிக் கொட்டிக் கிளறி மூடினேன்னா எப்படி இருக்கும்.''

அங்கே இறுக்கமான மவுனம் விளைந்தது. மூவரும் 'இவள் சொல்லுவது சரிதானே?'' என்ற கேள்வியைப் பார்வையால் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டார்கள்.

“இத பாரு, பாமா. உனக்கு வீண் கவலை கள்ளாம் வேண்டாம்னுதான் உங்கிட்டேருந்து இதையெல்லாம் மறைச்சோமே ஒழிய, மத்தப்படி உனக்குத் தெரியப்படாதுன்னு இல்லேடி.''

''எதையெல்லாம் மறைச்சேங்கிறதை இன்னும் நீங்க சொல்லவே இல்லியே?''

''தீவிரவாதிகள் வாழற இண்டியா ஹவுஸ்ல நம்ம அருணும் இருக்கிறதால அவனுக்குக் கொஞ்சம் இடைஞ்சல். நீ வீணாக் கவலைப்படப் போறியேன்னுதான்...''

“கடல் கடந்து அனுப்பாதீங்கோன்னு தலைதலையா அடிச்சுண்டேன். கேட்டேளா? கரிச்சுக் கொட்டிண்டே, அவ

யாரானாலும் கொடுத்து விட்டுப் போ' என்று அந்த வேண்டப்பட்ட நபருக்கு அவரே தாராளமாக உரிமை கொடுத்திருக்கிறார். அவரும் (அந்த நபரும்) ப்ரபுவின் சாப்பாட்டைத்தான் தாம் போடுகிறோமே தவிர, தாமாகவே போடுவதாக பாத்யதை கொண்டாடிக் கொள்வதில்லை. ஈச்வரன் தான் ஞானத்தை அநுக்ரஹிக்கும் சக்தியை குருவுக்குக் கொடுத்திருக்கிறான். அவரும் தாமே ஞானம் அளிப்பதாகக் கொஞ்சம் கூட உரிமை பாராட்டுவதில்லை. ஆனாலும் ஈச்வரனே இப்படி ப்ரியப்பட்டு மற்றவர்களுக்கு ஞானம் வழங்கும்படியான சக்தியை இவருக்கு, குரு என்கிறவருக்கு, வழங்கியிருக்கிறானென்றால், தங்களைக் கடைத்தேற்றுவதான பரம லக்ஷ்யத்தை நிறைவேற்றி விடும் இந்த குருவையே சிஷ்யர்கள் ஸகலமுமாக நினைத்து அவரிடமே அநன்ய பக்தி செலுத்துவதும் அவனுக்கு உவப்பாகத் தானே இருக்க வேண்டும்!



— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

னோட நாட்டுக்கு எதுக்கு அனுப்பிப் பிள்ளைகளைப் படிக்க வைக்கணும்?''

"நல்ல கேள்வி" என்று சிரித்தார் ராஜாராமன்.

"சிரிக்க வேண்டான்னா. அருண் படிச்சது போறும். கௌம்பி வந்துடச் சொல்லுங்கோ. நீங்க சம்பாதிச்சு வெச்சிருக்கிறது மூணு நாலு தலைமுறைக்குக் காணும். உங்க கிட்டயே ஜூனியரா வெச்சுண்டேள்னா கொஞ்ச நாளுக்குள்ளயே உங்க மாதிரி ஓகோன்னு வந்துடுவான். லண்டனும் வேண்டாம் ஒரு மண்ணும் வேண்டாம்."

பாமா அழத் தொடங்கினாள்.

"சரி, பாமா. அழாதே. கூடிய சீக்கிரம் எப்படியாவது அவனைத் திரும்பி வரச் சொல்லி சேதியனுப்பிச்சுடலாம். கண்ணைத் தொடச்சுக்கோ."

பாமா கண்களைத் துடைத்துக் கொண்டே தாங்க முடியாத துயரம் முகத்தில் நிழலாய்த் தெரிய எழுந்து சென்றாள்.

''8 துப்பாக்கி, 3 லத்தி, 2 தொப்பி, 4 பூட்டுச் சாவின்னு லிஸ்ட் போட்டு வ்ச்சிருக்கீங்களே என்ன சார் இதெல்லாம்?''

''நேத்து எங்க ஸ்டேஷன்ல காணாம போன பொருட்களோட லிஸ்ட்!''

— 'கச்சி' ஆர்.சி. மதிராஜ்



அன்றிரவு தூக்கம் வராமல் ராஜாராமன் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார். கூடத்துக் கெடியாரம் பன்னிரண்டு தடவை அடித்து ஓய்ந்ததும் அவர் படுத்துக் கொண்டிருந்த அவரது அறைச் சன்னலுக்கு வெளியே சன்னமான காலடியோசை கேட்டது. அது தெருவைப் பாராமல், பக்கவாட்டில், இடப்புறத்தில், தோட்டத்தைப் பார்த்த சன்னல்.

அமாவாசையாதலால் நல்ல இருட்டு. தலைமாட்டில் இருந்த டார்ச் லைட்டை ஏற்றலாமா என்று கணம் போல் நினைத்த அவர், தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டார். பக்கவாட்டில் திரும்பிப் படுத்தவாறு கண்களை மட்டும் கூர்மையாக்கிக் கொண்டு அசையாமல் இருந்தார்.

சன்னல் வழியே அந்த இருட்டிலும் ஒரு கை உள்ளே வந்தது தெரிந்தது. பக்கத்தில் திருடுகிறாப்போல் எந்தப் பொருளும் இல்லாததால் அவர் அப்படியே படுத்திருந்தார். சில நொடிகளுள் சொத்தென்று ஏதோ ஒரு பொருள் அவரது அறையினுள் கட்டிலருகே வந்து விழுந்தது. கையும் அகன்றது. யாரோ திரும்பிப் போகும் காலடியோசை கேட்டது. ராஜாராமன் படபடக்கும் நெஞ்சுடன் கட்டிலிலிருந்து இறங்கிச் சன்னல் பக்கம் சென்று வெளியே பார்த்தார். எந்த உருவமும் தென்படவில்லை. சிறிது நேரம் இருட்டைக் கூர்ந்து பார்த்தபடி நின்ற பின்னர் தம் கட்டிலுக்குத் திரும்பிக் குனிந்தார்.

(தொடரும்)

# கொத்துக் ...

திராட்சை என்றதுமே ஹைதராபாத் தான் நினைவுக்கு வரும். கூடவே அங்குள்ள ஒருவரின் திராட்சைத் தோட்டமும் சிலரது நினைவில் வரும்! ஆனால், அதைவிட அற்புதமான திராட்சை வகைகளைக் கோயம்புத்தூர் அருகிலுள்ள காளம்பாளையம், மாதம்பட்டி போன்ற ஊர்களிலேயே விளைவிக்கிறார்கள்.

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக இந்தப் பகுதிகளிலுள்ள சுமார் ஆயிரம் ஏக்கர் பரப்பளவில் திராட்சை பயிரிடப்படுகிறது. இவர்கள் வழக்கமாகப் பயிரிடுவது பன்னீர் திராட்சை வகை. இதற்குக் கேரளாவில் ஏக கிராக்கி என்பதால் அனைத்தும் அங்கேயே அனுப்பப்படுகிறது.

இப்போது நிலைமை மாறி வருகிறது. வழக்கமாகப் பயிரிடும் பன்னீர் திராட்சை வகையிலிருந்து சிறிது சிறிதாக மாறுபட்டு புதிய புதிய விதைகளில்லாத திராட்சை வகைகளைப் பயிரிட ஆரம்பித்திருக்கிறார்கள்.

கடந்த இரண்டாண்டுகளுக்கு முன்பு ஆரம்பிக்கப்பட்ட 'கோவை மாவட்ட திராட்சை உற்பத்தியாளர் சங்கம்' தன்னிடமுள்ள 120 உறுப்பினர்களுக்கும் புதிய

• திராட்சைத் தோட்டம்...



வகைகளைப் பயிரிடும் முறைகளை அச்சிட்டுத் தந்து உதவுகிறது. உற்பத்தியாகும் திராட்சையை விற்பனை செய்யும் பொறுப்பையும் சங்கமே ஏற்றுக் கொள்கிறது.

வேறெங்கையும் விட இந்தப் பகுதிதான் பன்னீர்த் திராட்சைப் பயிருக்கு உகந்தது என்றாலும் இப்போது புதிய ரகங்களை அறிமுகப்படுத்த வேண்டிய அவசியம் என்ன?

"காரணம், புதிய விதைகளில்லாத வகைகள் அதிக விலையைப் பெற்றுத் தருகின்றன; பன்னீர்த் திராட்சையை விடவும் தரமான வகைகள். ஏற்றுமதிக்கான வாய்ப்புகள் இவற்றில் அதிகம்; உலர் திராட்சைக்கு ஏற்றவை; பன்னீர் திராட்சை ஏழெட்டு ஆண்டுகளுக்குத்தான் விளைச்சல் தரும் என்கிற நிலையில், இவை, இருபதாண்டுகள் வரை விளைச்சல் தரக்கூடிய வாய்ப்பிருக்கிறது!" என்கிறார் சங்கத்தின் தலைவர் வேலுமயில்சாமி.

திராட்சை வகைகளுக்கான பயிரிடும் முறைகளைச் சங்கம் எங்கிருந்து பெறுகிறது? "நாங்கள் அவ்வப்போது மகாராஷ்டிரா போன்ற வெளிமாநிலங்களுக்குச் சென்று, அங்குள்ள திராட்சை உற்பத்தியாளர்களைச் சந்தித்துப் பேசுகிறோம்; அவர்களுடைய தோட்டங்களைப் பார்வையிடுகிறோம். அதனால் புதுப் புது வகைகளையும், வழிமுறைகளையும் நாங்கள் சுலபமாக அறிந்து கொள்ள முடிகிறது. இப்போது திராட்சைத் தோட்டங்களிலும், சொட்டு நீர்ப் பாசனத்தை அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கிறோம்!" என்கிறார் வேலுமயில்சாமி.

• கனியாத பன்னீர்த் திராட்சை



• வேலுமயில்சாமி

தற்சமயம் பன்னீர்த் திராட்சையைப் பயிரிட்டிருக்கும் குமார வடிவேல், ஏன் இன்னும் புதிய வகைகளுக்குப் போகவில்லை? "போகக் கூடாது என்பதில்லை. இருக்கிற பயிரின் அறுவடைக் காலம் முடிந்த பிறகுதானே போக முடியும்!" என்கிறார்.

"சாதாரணமாக பன்னீர்த் திராட்சையின் மூலம் ஏக்கருக்கு ஆண்டொன்றுக்கு 20,000 ரூபாய் லாபம் கிடைத்தால்,



• குமார வடிவேல்

புதிய விதைகளில்லாத வகைகளில் 45,000 ரூபாய் வரை கிடைக்க வாய்ப்பிருக்கிறது. ஆனால், நாங்கள் இப்போது புதிய வகைகளை அறிமுகப்படுத்திப் பார்ப்பது சோதனை முறையில்தான். அது வெற்றிகரமான விளைச்சலைத் தரும் போதுதான் பலரும் பயிரிட ஆரம் பிப்பார்கள்!" என்கிறார் வேலுமயில் சாமி.

வெற்றிகரமான விளைச்சல் என்பது என்ன? ஒரு திராட்சைக் குலையின் எடை சராசரியாக அரைக் கிலோ இருக்க வேண்டும். அதே போல், ஆண்டுக்கு ஓர் ஏக்கரில் இருபதாயிரம் ரூபாய்க்கும் குறைவாக லாபம் கிடைக்க ஆரம் பித்தால், உடனடியாக மாற்றுப் பயிர் செய்து விட வேண்டும். இல்லையெனில் கட்டுபடியாகாது.

சாதாரணமாக ஓர் ஏக்கரில் திராட்சை பயிரிட வேண்டுமானால் எவ்வளவு செலவாகும்? "கல்தூண் களை நட்டுப் பந்தல் போடுவது போன்ற வேலைகளையும் சேர்த்துச் சுமார் 94,000 ரூபாய் வரை செலவா கும். இதில் 75,000 ரூபாய் வரை வங்கியில் கடனாகப் பெற முடியும். பயிரிட்ட ஒன்றரை ஆண்டுகளி லேயே போட்ட முதலீட்டைச் சம் பாதித்து விட முடியும் என்பதால் வங்கிக் கடனையும் சுலபமாக அடைத்து விடலாம்!" என்கிறார் வேலுமயில்சாமி. "அப்புறம் வருஷா வருஷம் கொத்துக் கொத்தாய் லாபம்தான்!"

"ஆனாலும் எல்லா இடங்களி லும் திராட்சையைப் பயிரிட்டு லாபம் பெற்று விட முடியாது. அதற்கு ஏற்ற செம்மண் நிலம் வேண்டும்; உப்புச் சுவையில்லாத தண்ணீர் வசதி வேண்டும்; தட்ப வெப்ப நிலையும் உகந்ததாக இருக்க வேண்டும். இந்த மூன்றில் ஒன்று இல்லாவிட்டாலும் திராட்சையில் லாபம் சம்பாதிக்க முடியாது என்பதை விவசாயிகள் கவனத்தில் கொள்வது மிகவும் அவசியம்!" என்கிறார் அவர்.

— பிரின்ஸ்

வண்ணப்படங்கள் : யோகா

---

"ஏன் சார், நாலு நாள் முன்னாடி நான் பார்த்து வச்சிட்டுப் போன புடைவையை இன்னிக்கு வாங்க வந்தா மூணு மடங்கு விலை சொல்றீங்களே, நியாயமா?"

"என்ன பண்றது மேடம், அது காப்பிக் கொட்டை கலர் புடைவை யாச்சே!"




# ஜோக்ஸ்!



"காலைல எழுந்ததும் உங்கம்மா பக்திசிரத்தையா எல்லோருக்கும் ஒவ்வொரு ஸ்பூன் பூஜா தீர்த்தம் தர்றாங்க போலிருக்கே?"

"அது தீர்த்தமில்லைப்பா, காப்பி!"

—ரகோத்தமன்

"பொண்ணு வீட்டுக்காரங்க ரொம்ப வசதியானவங்க!"

"எப்படிச் சொல்றீங்க தரகரே?"

"தினம் ரெண்டு வேளை காப்பி சாப்பிடறாங்களாம்!"



"சினிமாவுக்கு மட்டும் ஒரு மாசத்துக்கு முன்னாலேயே ரிசர்வ் பண்ணத் தெரியும். மாசம் பதினஞ்சாம் தேதிக்கு முன்னாடியே கரெண்ட் பில் கட்ட முடியாது. போய் க்யூவிலே நின்னு வாம்மா. உங்க அவசரத்துக்கு நாங்க வேலை பார்க்க முடியாது."

கவுண்ட்டருக்குள் இருந்தவர் வழக்கம் போல சிடுசிடுத்துக் கொண்டிருந்தார். நான் எதேச்சையாய்த் திரும்பிப் பார்த்தேன்.

அட! வசந்தி!

செமத்தியாய்த் திட்டு வாங்கிக் கொண்டு, 'க்யூ'வில் நிற்கும் போது, "இங்க வாங்க" என்றேன். நாய்க் குட்டி போல வந்தாள்.

"என்ன மேடம் ப்ராப்ளம்?"

"ஃப்யூஸ் பிடிங்கிட்டாங்க. பதினைஞ்சு தேதிக்கு முன்னேயே கட்ட நெனைச்சேன். மறந்துட்டேன். வேலைக்குப் போகணும்."

"வேலை எங்கே? சென்ட்ரல் ஸ்டேஷன் தானே?"

அப்போதுதான் உற்றுப் பார்த்தாள். அவள் முகத்தில் ஆச்சர்யம்! லேசாய் சந்தேகம்.

"ஆமா. உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"மை போட்டுப் பார்த்தேன். உங்க பேர் வசந்தி. மூணு அண்ணன். ரெண்டு தங்கை."

"மை காட்! புட்டுப் புட்டு வைக்கிறீங்க."

"என்னை ஞாபகமில்லையா? என் பெயர் வித்யேஷ்வர்."

விழித்தாள். ஒரு முறைதான் சந்தித்தோம். நிச்சயம் மறந்திருப்பாள். "எனக்கு அடையாளம் தெரியலை."

"உட்காருங்க."

வசந்தி மாறவில்லை. அதே கரிய முகம். அதே உயரம். லேசாய் இளைத்த மாதிரியிருந்தாள். திருமணம் முடிந்ததற்கு நிறைய சாட்சிகள் இருந்தன. பணத்தைக் கட்டி, ரசீதைக் கொடுத்தேன்.

"தாங்க்ஸ். நீங்க இல்லேன்னா டயத்துக்கு வேலைக்குப் போயிருக்க முடியாது."

"இதையெல்லாம் நீங்கதான் செய்யணுமா? உங்க ஹஸ்பெண்ட்?"

"இரண்டு பேரும் வேலைக்குப் போறோம். எல்லாத்தையும் பங்கு போட்டுக்கறதுதான் நியாயம்."



"இன்னும் என்னை ஞாபகப்படுத்திக்க முடியலையா?"

"சாரி."

"பரவாயில்லை. அப்புறமா மீட் பண்ணிப் பேசலாம்" என்றதும், அவள் கிளம்பினாள். அவள் கண்ணில் சந்தேகம் தங்கியிருந்தது. அவள் சென்றதும் என் வேலையில் ஆழ்ந்தேன்.

அடுத்த நாள்.

"சார், உங்களைப் பார்க்க வசந்தின்னு ஒரு அம்மா வந்திருக்காங்க."

"அனுப்பு."

வசந்தி உள்ளே வந்தாள்.

"வாங்க. உட்காருங்க."

உட்கார்ந்தாள். "என்ன? கண்டுபிடிச்சீங்களா?"

"இல்லை சார். நிஜமாவே நீங்க மை போட்டுத்தான் பார்த்திருக்கணும்."

சிரித்தேன். "என்ன விஷயம்?"

"எங்க பிளாட்லே, எலெக்ட்ரிக் மீட்டர் சரியா வேலை செய்யலை. தெரிஞ்சவரா இருக்கீங்க. அதான் வந்தேன்."

"லெட்டர் எழுதிக் கொடுங்க. நானே நேரா வர்றேன்."

அவள் முகம் விநாடியில் மாறி, சுதாரித்து... "நான் அந்நியரோடு பேசறதை என் கணவர் விரும்ப மாட்டார்."

"சென்ட்ரல் ஸ்டேஷன் கவுண்ட்டர்லே ஆயிரக்கணக்கான அந்நியர்கள் வருவாங்



# சொர்க்கத்திலே முடிவானது

பார்கவி

களே?"

பதில் சொல்லாமல் சிரித்தாள்.

"பயப்படாதீங்க. உங்க கூட மட்டும் பேச மாட்டேன்."

சமயம் பார்த்துக் குளிர்பானம் வந்தது. மவுனமாய் அவளே ஒரு பாட்டிலை எடுத்துக் கொண்டாள்.

"இன்னும் என்னை யாருன்னு கண்டுபிடிக்க முடியலை, இல்லை?"

"நீங்கதான் பிகு பண்ணாமல் சொல்லுங்களேன்."

"உங்களாலே கண்டுபிடிக்க முடியும். டைரி எழுதுவது உண்டா?"

"இல்லை."

"மூணு வருஷத்துக்கு முன்னாடி, செப்டெம்பர் ரெண்டாம் தேதி நாம சந்திச்சோம்."

"ஏதாவது கல்யாணத்திலே மீட் பண்ணியிருக்கலாம். உங்க தங்கை யாராவது எத்திராஜ்லே படிச்சாங்களா?"

"நான் ஒரே மகன். தவப்புதல்வன்."

"தூரத்து உறவு. சரிதானே?"

"இப்ப நாம குழப்பிக்க வேண்டாம். சமயம் வரும் போது சொல்றேன்."

அவள் கிளம்பினாள். அவள் எழுதிக்

கொடுத்த கடிதத்தை 'சீல்' அடிக்க அனுப்பி னேன்.

மறுதினமே, சரியாய் மதியம் இரண்டு மணிக்கு ஹைதராபாத்திலிருந்து தந்தி. 'சித்தப்பா மரணம். உடனே புறப்படு!, என்றிருந்தது.

எல்லா டிராவல் ஏஜென்சிகளும் கை விரித்தார்கள். சார்மினார் எக்ஸ்பிரசில் நாலு பக்கத்துக்கு வெயிட்டிங் லிஸ்ட். சென்ட்ரலில் வசந்தியை நாடினேன்.

"அட! நீங்களா? என்ன வேண்டும்?"

"இதுவரை நான் உதவி செய்தேன். இப்ப எனக்கு உங்க உதவி வேண்டும்."

என் கையிலிருந்த நூறு ரூபாய்த் தாள்களைப் பார்த்து விட்டு, "சில்லறையா?" என்றாள்.

"ஹைதராபாத் போறதுக்கு சார்மினார்லே எப்படியாவது ஏற்பாடு செய்யணும்."

"எத்தனை டிக்கெட்?"

"ரெண்டுதான். என் வொய்ஃபும் வரா."

"அஞ்சரைக்கு வாங்க. டிரை பண்றேன்."

"இருங்க. காப்பி சாப்பிட்டுப் போகலாம். எங்களுக்காக அலையறதுக்கு தென்பு வேண்டாமா?"

இருவரும் செல்ஃப் சர்வீஸ் காண்டீனில் நுழைந்தோம். காப்பியை ருசித்தபடி, "எப்படியிருக்கு கல்யாண லைஃப்?" என்றேன்.

"பெட்டர். நூறு சதவீதம் திருப்தியா யாருக்கும் வாழ்க்கை அமையறதில்லை."

"எனக்கு அமைஞ்சிருக்கு மேடம். எனக்கும் என் மனைவிக்கும் நல்ல அண்டர்ஸ்டாண்டிங் இருக்கு. மேனகா மனைவியா அமையறதுக்கு நான் கொடுத்து வச்சிருக்கணும்."

"என் கணவரோட சில கொள்கைகள் எனக்குப் பிடிக்காது. மற்றபடி பரவாயில்லை."

"இதைக் கேட்கறதுக்கு சந்தோஷமா இருக்கு. திருமணம் நடக்கறது பெரிசில்லை. திருப்தியான வாழ்க்கைதான் முக்கியம்."

"சரி, இளம்பலாமா?"

"உங்க தங்கைகளுக்குக் கல்யாணம் முடிஞ்சாச்சா?"

"இல்லை. கடைசித் தங்கைக்கு அக்டோபர்லே கல்யாணம். இப்ப சொல்லக் கூடாதா? நீங்க யாருன்னு."

"இப்ப ராகு காலம். வேண்டாம். அப்புறம் சொல்றேன்."

சரியாய் அஞ்சரை மணிக்கு வந்தோம். ஒரே ஒரு பெட்டி. மற்றபடி எதுவும் லக்கேஜ் இல்லை. வசந்தியைக் காணவில்லை. ஆறு பத்துக்கு சார்மினார் போய் விடும். மேனகா பொறுமையிழந்தாள்.

"யாரது வசந்தி? எப்படித் தெரியும் அவளை? எந்த அடிப்படையிலே நானூறு ரூபா கொடுத்தீங்க? உங்க சித்தப்பா சாவுக்கு என்னை எதுக்குக் கூப்பிடறீங்க? நீங்க மட்டும் போக வேண்டியதுதானே?"

"மேனகா! இது ரெயில்வே ஸ்டேஷன். நம்பர் முப்பத்திரெண்டு, பிள்ளையார் கோயில் தெரு இல்லை. கொஞ்சம் அடக்கமா நடந்துக்க."

"நான் என்ன இதை ஹோட்டல்னா சொன்னேன்? இப்ப டிக்கெட் வராது. ரிசர்வ் பண்ணாம ஏறி ராத்திரி பூரா அவஸ்தை. நீங்க போங்க. நான் அம்மா வீட்டுக்கு...."

சட்டென்று நிறுத்தினாள். இந்தக் கூத்தை வசந்தி கைகளைக் கட்டிக் கொண்டு ரசித்துக் கொண்டிருந்தாள்.

"இந்தாங்க டிக்கெட். இதிலே மீதிச் சில்லறை இருக்கு" என்றாள்.

மேனகா தலையைத் திருப்பிக் கொண்டாள்.

"தாங்க்ஸ்" என்றேன். மேனகாவை அறிமுகப்படுத்தவில்லை.

"நான் வரேன்."

"காப்பி?" என்றதும், எனக்கு மட்டும் கேட்கும்படி, "நீங்க பேசிட்டிருந்ததே காப்பி குடிச்ச மாதிரி சூடா இருக்கு. நூறு சதவீதம் திருப்தியில்லை?"

நான் வெட்கமாய்த் தலைகுனிந்தேன். நிஜத்தை எப்படிச் சொல்வது? அடங்காப் பிடாரியாய் வந்து அமைந்திருக்கிறது என்று எப்படிச் சொல்ல முடியும்? நான் வேதனையோடு சார்மினாரில் ஏறினேன்.

**ஊ**ரிலிருந்து திரும்பி, காரியமெல்லாம் முடிந்து, வழக்கம் போல தூசி படிந்த மின்சார அலுவலகம். வசந்தியின் கடிதம் கண்ணில் பட்டது. பழைய மீட்டரை எடுத்துக் கொண்டு கிளம்பினேன். பெல் அடித்ததும் கதவு திறந்து, "யெஸ்" என்றான் அந்த இளைஞன்.

"நான் வித்யேஷ்வர். இ.பி.யிலிருந்து வரேன். மீட்டர் சரியில்லைன்னு, இங்கே யாரோ வசந்தின்னு..."

அவன் திரும்பி, "ஏய்! வசந்தி! இங்க வா" என்றான்.

ஓடி வந்தாள். என்னைப் பார்த்தாள். 'படுபாவி' என்றன கண்கள்.

"நீ என்ன அரிச்சந்திரன் பொண்ணா? ஊர்லே நேர்மைன்னு நெனைப்பா? உன்னை யாரு லெட்டர் எழுதிக் கொடுக்கச் சொன்னது? வர வர சம்பாதிக்கற திமிர் ஏறிட்டிருக்கு."

"என்ன இது? அவர் முன்னாடியே ஏதேதோ பேசறீங்க?"

"என்ன? அவமானமா? உன்னை அடிக்கணும்டி" என்று குலைத்து விட்டு, "சாரி பிரதர். மீட்டர்லே மிஸ்டேக் இல்லை."

"பரவாயில்லே. நான் செக் பண்ணிக்கறேன்."

"நான் வேண்டாமின்னு சொல்றேன். இதுக்கு ஏதாவது பணம் வேண்டுமா?"

"மிஸ்டர்! கொஞ்சம் நாகரிகமாப் பேசுங்க. எனக்கு ரைட்ஸ் இருக்கு. இந்த மீட்டர்லே ரீடிங் கம்மியா வருது. உங்க வொய்ஃப் நேர்மையாக் கொடுத்த லெட்டரை நீங்க அநியாயமா மறைக்கறீங்க."

"பாத்தியாடி. கண்டவங்க, கண்டபடி பேசறானுங்க. இதற்குள் பக்கத்து பிளாட்டிலிருந்து வயதானவர் வந்தார். "சார், இங்கே வாங்க" என்று தனியாய்க் கூப்பிட்டார்.

"அவன் சுத்த பயித்தியக்காரன். பாவம் அந்தப் பொண்ணு, பலி ஆடா அவஸ்தைப் படுது. ரொம்பவும் பேசினா, அதைப் போட்டு அடிப்பான்" என்றார்.

"தாங்க்யூ சார். நல்ல சமயத்திலே சாருஹாசன் மாதிரி புகுந்து, என் கோபத்தை தடுத்தீங்க. நான் வரேன்."



"பஸ்ஸிலே என்னங்க சண்டை?"
"ஒருத்தர் பேப்பர் படிச்சிக்கிட்டு இருந்தார். இன்னொருத்தர் அதை எட்டிப் பார்த்து படிச்சார்... இவர் படிச்சி முடிக்கறதுக்குள்ளே... அவர் பக்கத்தைத் திருப்பிட்டாராம்!"
– கார்த்திக் ராஜா

**அ**ன்றே வசந்தி என்னை என் அலுவலகத்தில் சந்தித்தாள். இருவரும் நீண்ட நேரம் எதுவும் பேச முடியாமல் ,அமர்ந்திருந்தோம்.

"சாரி சார்."

"பரவாயில்லை. உங்க கணவரோட கொள்கைகள் சிலது பிடிக்காதுன்னு சொன்னீங்க. உங்க கணவருக்கு உங்களையே பிடிக்கலை போலிருக்கே?"

"அதைப் பற்றிப் பேச வேண்டாம். அப்புறம் அந்த ரகசியம். நீங்க எனக்கு என்ன வேண்டுமின்னு கண்டுபிடிச்சிட்டேன்."

"எப்படி?"

"மிஸ்டர் வித்யேஷ்வர், உங்களைச் சந்தித்த முதல் நாளே, நீங்கதான் மூணு வருஷத்துக்கு முன்னே செப்டெம்பர் ரெண்டாம் தேதி என்னைப் பெண் பார்க்க வந்த மாப்பிள்ளைன்னு தெரியும்."

"ஆமா! நீங்க கறுப்புன்னு, என் வீட்லே எதிர்ப்பு. அதனாலே ஜாதகம் சரியில்லைன்னு சொல்லிட்டாங்க."

"உங்க குணம் நல்லாயில்லைன்னு எங் கண்ணன் சொன்னாரு."

"எப்படியோ, நாம திசை மாறிட்டோம்."

"சரி சார். நான் கிளம்பறேன். இனி நாம சந்திச்சுப் பேசறது நல்லதில்லை. அதைச் சொல்லத்தான் வந்தேன்."

நான் மவுனமாகத் தலைகுனிந்தேன். வசந்தி எழுந்து கொண்டாள்.

"வசந்தி" என்றதும் திரும்பிப் பார்த்தாள்.

"எனக்கு ஒரு பையன் இருக்கான். அவன் பெரிசாகிக் கல்யாணம் செய்யும் போது அவன் விருப்பப்படியேதான் செய்வேன். ஜாதகம், கலர், பர்சனாலிட்டி எல்லாம் ரெண்டாம்பட்சம்."

அவள் சிரித்தாள். கனமான சிரிப்பு. என் மனசிலும்தான்.



# ரஜினி: பாசமிகு சித்தப்பா!

●● "பொங்கல் புதுநாளில் பூக்கும் குறிஞ்சி மலர்" என்று பூஜை போடப் பட்டாலும் இது ஏற்கெனவே இந்தியில் பூத்துவிட்ட குறிஞ்சிமலர்தான். அமிதாப் பச்சன் நடித்த 'அக்னிபாத்' படத்தை, சத்யா மூவீஸ் கதை இலாகா ஒரு சில மாற்றங்களுடன் எழுத, ரஜினியின் இமேஜுக்குத் தகுந்தவாறு இயக்க இருக்கிறார் சுரேஷ்கிருஷ்ணா. தம்முடைய அண்ணன் (விஜயகுமார்) பிள்ளைகளுக்காக மெழுகுவர்த்தியாகத் தம்மை உருக்கிக் கொண்ட பாசமிகு சித்தப்பாவாக ரஜினி நடிக்கிறார்.



• சுரேஷ் கோபி : சூடான மார்க்கெட்

●● சேலம், உசிலம்பட்டி போன்ற இடங்களில் இருக்கும் பெண் குழந்தைகளைக் கொல்லும் கொடுமையான வழக்கத்தை மையமாகக் கொண்டு, ராஜ்கிரண் 'எல்லாமே என் ராசா தான்' படத்திற்குக் கதை அமைத்திருந்தார். அந்தப் படம் ஆரம்பிக்கத் தாமதம் ஆனதில் ஒரு முக்கிய பிரச்னை உண்டாகி விட்டது. 'உசிலம்பட்டி பெண் குட்டி', 'கருத்தம்மா' போன்ற படங்களிலும் 'பெண் சிசுக் கொலை', 'தொட்டில் குழந்தை', போன்ற அம்சங்கள் இருப்பதாகச் செய்திகள் வரவே, ராஜ்கிரண் இப்போது தம்முடைய கதையை வேறு விதமாக மாற்றியிருக்கிறாராம்!

●● 'காஷ்மீரம்' - மலையாளப் படம். தெலுங்கு, இந்தி மொழிகளில் டப்பிங் செய்யப்பட்டு, தங்க மழை பொழிந்திருப்பதால் சுரேஷ் கோபியின் மார்க்கெட் நிலவரம் சூடு பிடித்திருக்கிறது. அவர் நடித்த எல்லா மலையாளப் படங்களும் உடனடியாக மொழி மாற்றப்படுகிறது... 'கமிஷனர்' படம் இன்னொரு சூடான பணியாரம். கமிஷனராகப் பதவி ஏற்கும் ஒரு நேர்மையான போலீஸ் அதிகாரி, கள்ள நோட்டு ஆசாமிகளாலும், அதற்கு உடந்தையான அரசியல்வாதிகளாலும் அலைக்கழிக்கப் படுவதை விறுவிறுப் பாகச் சொல்லியிருக்கிறாராம் இயக்குனர் ஷாஜி கைலாஷ். 'கமிஷனர்' - மலையாளத்தில் அனைத்துப் பகுதிகளிலும் சக்கைப் போடு போடுவதால், ஷாஜி கைலாஷுக்கும் நட்சத்திர டைரக்டர் அந்தஸ்து கிடைத்திருக்கிறது.

●● சரத்குமார் தம்முடைய மானேஜருக்காக நடித்துக் கொண்டிருக்கும் படத்திற்கு 'இதயம் பேசுகிறது' என்று பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. 'தாமரை' படத்தை இயக்கியுள்ள கே. ராஜலக்ஷ்மி தமது அடுத்த படத்திற்கு வைத்திருக்கும் பெயர் 'கல்கி.'

- ஹர்ஷராஜ்

# 13

கூடத்திலிருந்து வந்து கொண்டிருந்த விடிவிளக்கின் மங்கிய வெளிச்சத்தில் ராஜாராமன் தம் காலடியில் விழுந்த பொருளை உற்றுப் பார்த்தார். ஏதோ சின்ன முடிச்சுப் போல் இருந்தது. அவர் அதைக் கையில் எடுத்து முடிச்சை மெதுவாக அவிழ்த்துப் பிரித்தார். உள்ளே இரண்டு காகிதங்கள் மடித்து வைக்கப்பட்டிருந்தன. கனத்துக்காக உள்ளே ஒரு சிறு கூழாங்கல்லும் இருந்தது.

விளக்கைப் போட்டு விட்டு இரண்டு காகிதங்களையும் எடுத்து நன்கு பிரித்துச் சுருக்கங்கள் நீக்கினார். 'அன்புள்ள அய்யா' என்று ஆங்கிலத்தில் அது தொடங்கப் பெற்றிருந்தது. பரபரப்புடன் கடிதத்தின் இறுதியைப் புரட்டிப் பார்த்தார். நரேந்திரநாத் பானர்ஜி என்ற கையெழுத்து காணப்பட்டது. கண்ணாடியை மாட்டிக் கொண்டு, கட்டிலில் உட்கார்ந்து கடிதத்தைப் படிக்கத் தொடங்கினார்.

'அன்புள்ள அய்யா!

நமஸ்கார். தங்களிடம் நேரில் சொல்லிக் கொண்டு விடைபெறாமல் ஒரு திருடனைப் போல் நழுவியதற்கு முதலில் தாங்கள் என்னைத் தயவுசெய்து மன்னிப்பீராக. 'திருடனைப் போல்' என்ற வார்த்தைப் பிரயோகம் தப்பு என்று சொல்ல முடியாது. சொல்லப் போனால் திருட்டை விட அதிக பயங்கரமான குற்றத்தைப் புரிந்தவன் நான். அதாவது நான் ஒரு கொலைகாரன்!

அரசியலில் தற்காப்பு, அவசியம், வேறு வழியின்மை ஆகியவற்றுக்காகக் கொலை செய்வது எங்கள் இயக்கத்தால் நியாயப்படுத்தப்பட்டுள்ளதைத் தாங்களும் ஒப்புக் கொண்டுள்ளீர்கள் என்பதை மதன்லால் திங்ராவின் இறுதி வாக்குமூலங்களைத் தமிழில் மொழியாக்கம் செய்து விநியோகிக்கும் நோக்கத்துடன் உங்கள் மகள் அஞ்சனாதேவி ஒரு காங்கிரஸ்காரர் வீட்டுக்குப் போய் வந்ததிலிருந்தே நான் மிக நன்கு புரிந்து கொண்டேன்.

கொலை செய்து விட்டு அவ்வளவு எளிதாய்த் தப்ப முடியாது என்பதை நான் நன்கு அறிவேன். ஆயினும் எவ்வளவு காலத்துக்கு முடியுமோ அவ்வளவு காலத்துக்குத் தப்புவதற்கே நாங்கள் விரும்புகிறோம். அந்தக் கால இடைவெளியில் மேலும் சிலவற்றைச் சாதிப்பதற்குத்தான்.

தங்கள் அன்பு மனைவிக்கு என்னைப் பற்றிய உண்மைகள் தெரியவந்தால், இனி என்னை உங்கள் வீட்டுக்குள் அனுமதிக்க மாட்டார்கள். எனவே அவரிடம் இதையெல்லாம் தயவு செய்து சொல்லாதீர்கள். பூர்வஜென்மத்துச் சொந்தமோ என்னமோ உங்கள் வீட்டார் எல்லாரையும் எனக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது. உங்கள் மனைவி என் சிறு வயதில் செத்துப் போய் விட்ட என் அன்பான அம்மாவை ஞாபகப்படுத்துகிறார். குறிப்பிடும்படியாய் அவர்களுடைய அந்தக் கனிவான பார்வை என் உள்ளத்தைக் கொக்கி போட்டு இழுக்கிறது. அவர்கள் மடியில் தலைவைத்துப் படுத்து என் உள்ளத்து உணர்ச்சிகளையெல்லாம் கொட்டி விட வேண்டும் போல் ஓர் ஏக்கம் என்னுள் இக்கடிதம் எழுதும் போது கூடக் கிளர்கிறது.

அந்த இரகசியப் போலீஸ்





அதிகாரிகள் இருவரும் என்னைப் பார்த்த பார்வையிலேயே நான் கண்டுகொண்டேன், எனது புகைப்படம் அவர்கள் பார்வையில் பட்டு விட்ட உண்மையை. ஏனெனில் என்னைப் போன்ற அரசியல் கொலைகாரர்களின் புகைப்படங்கள் நாடு முழுதும் உள்ள பல்வேறு ராஜதானிப் போலீசாருக்கும் அனுப்பப்படும் உண்மையை நான் அறிவேன். அதனால் தான் தங்களிடம் நேரில் சொல்லிக் கொண்டு புறப்பட இயலாது போயிற்று.

நான் கொலை செய்த வெள்ளை அதிகாரி யார், எதற்காக அவனைக் கொலை செய்தேன் போன்ற விவரங்களை அறியத் தாங்களும் தங்கள் அன்பு மகள்களும் மிகவும் ஆவலுள்ளவர்களாக இருப்பீர்கள் என்பதை நான் அறிவேன். நான் சுட்டுக் கொன்றது டேவிட் வாட்சன் எனும் ஆங்கிலேயப் போலீஸ் அதிகாரியை. இவன் டாக்கா நகரத்தில் பணிபுரிந்து வந்தான் டெபுடி சூப்பரிண்டெண்டெண்ட் ஆக. இவன் ஒரு நாள் டாக்காவுக்கு அருகே இருக்கும் கிராமம் ஒன்றில் வயல் ஒன்றுக்குச் சென்று அங்கே வேலை செய்து கொண்டிருந்த பெண்களில் ஒருத்தியைக் கற்பழித்து விட்டான். துப்பாக்கியைக் காட்டி வெட்டவெளியில் குண்டு வெடித்து அவன் அச்சுறுத்தியதும் உடனிருந்த ஆண்கள் ஓடி விட்டார்கள். எங்கள் புரட்சி அமைப்பான அனுசீலன் சமிதிக்கு இவ் விஷயம் தெரிய வந்ததும் அந்த வெள்ளைக்காரனைக் கொல்லத் திட்டம் தீட்டினோம். எனக்கு இன்னும் பயிற்சி முடியாவிட்டாலும், பிடிவாதமாக அவனைக் கொன்று தீர்க்கும் வேலையை நானே செய்வேன் என்று உறுதி எடுத்துக் கொண்டு அவ்வாறே செய்தும் விட்டேன்.

போலீஸ் என்னைத் துரத்தியது. எப்படியோ செத்துப் பிழைத்த மகிழ்ச்சியுடன் மதறாசுக்கு வந்து சேர்ந்தேன். இனி எனது அடுத்த இலக்கு பாண்டிச்சேரியாகத்தான் இருக்கும். அங்கு போய்ச் சேர்ந்தால்தான் பிடிபடுவோம் என்ற அச்சமின்றி நிம்மதியாக வாழலாம். அங்கு வாழும் அரவிந்தர், கவிஞர் பாரதியார் போன்றோரைச் சந்தித்து அளவளாவி, எதுவும் சாதிக்க முடியாவிட்டாலும், பெரிய மனிதர்களின் கூட்டுறவில் இருக்கும் மகிழ்ச்சியையாகிலும் கொஞ்ச நாட்களுக்குப் பெற முடியும். அதன் பிறகு என்ன செய்வேன் என்பது எனக்கே தெரியாது.

நான் கொன்றது டேவிட் வாட்சனை மட்டுமில்லை. அதற்கு முன்னால் பிரான்சிஸ் எனும் இன்னோர் வெள்ளைக்காரனையும் கைகலப்பில் அடித்துப் போட்டே கொன்றிருக்கிறேன். ஒருமுறை ரெயில் பயணம் செய்து கொண்டிருந்த போது, வழியில் ஒரு நிலையத்தில் வண்டி நின்றது. பிரான்சிஸ் பெட்டியில் ஏறினான். அதில் என்னைச் சேர்த்து ஐந்து இந்தியர்கள் பயணம் செய்து கொண்டிருந்தனர். எல்லாரும் உடனே இறங்க வேண்டுமென்றும் தான் மட்டுமே அந்தப் பெட்டியில் இருக்கப் போவதாகவும் அவன் ஆணவத்துடனும் அதிகாரமாகவும் அறிவித்தான். என்னால் பொறுக்க முடியவில்லை. 'நாங்கள் எல்லாரும் டிக்கெட் வாங்கிக் கொண்டுதான் பயணம் செய்து கொண்டிருக்கிறோம். நாங்கள் இருக்கும் பெட்டியில் இருக்க உனக்கு

## அருள்வாக்கு



**விஷ்ணுவுக்கு ஒரு பிள்ளை ப்ரம்மா. இன்னொரு பிள்ளை உண்டு. அவன்தான் மன்மதன். இரண்டு பேரும் லக்ஷ்மியின் ஸம்பந்தமில்லாமலே பிறந்தவர்கள். ப்ரம்மா விஷ்ணுவின் நாபிகமலத்தில் உண்டானார். மன்மதனை அவர் மானஸிகமாக - ஒரு பிள்ளை உண்டாகட்டும் என்று மனஸினால் நினைத்த மாத்திரத்திலேயே - ஸ்ருஷ்டித்து விட்டார். அதனால் மனஸிஜன் என்று அவனுக்குப் பெயர். ப்ரஹ்மா கமலஜர். மூன்றாவது பிள்ளையாக மஹாவிஷ்ணு மோஹினி ரூபத்தில் சிவனிடம் பெற்ற சாஸ்தா இருக்கிறார். அவருக்குப் பூஜை இருக்கிறது. பெரிசாக வ்ருத்தியாகியும் வருகிறது. ப்ரஹ்மாவுக்குப் பூஜையில்லை. மன்மதனுக்கும் இல்லை.**

**இதற்கு ஒரு காரணம் தோன்றுகிறது. மன்மதன், ப்ரஹ்மா இருவருமே ஒரு ஜீவன் ஜன்மா எடுப்பதற்குக் காரணமாக இருப்பவர்கள்தானே? புத்ரோத்பத்திக்குக் காரணமான வேகத்தை மன்மதன் உண்டாக்குகிறான். அப்புறம் எந்த ஜீவன் எந்தப் பிண்டத்தில் புகுந்து கொள்ள வேண்டுமென்று பார்த்து ப்ரஹ்மா ஜன்மாவைக் கொடுக்கிறார்.**

**அத்தனை கஷ்டமும் நாம் ஜன்மா எடுத்ததால்தானே தெரிகிறது? ஸகல ஸமயாசாரங்களும், ஸாதனைகளும் ஜன்ம நிவ்ருத்தி, ஜன்ம நிவ்ருத்தி என்ற ஒன்றுக்காகத்தானே இருக்கிறது?**

**இதனால்தான் ஜன்மா ஏற்படக் காரணமான ப்ரஹ்மாவுக்கு வழிபாடில்லாமலாகியிருக்கிறதென்று தோன்றுகிறது. மன்மதனுக்கும் இதே காரணம்தான்.**

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

விருப்பம் இல்லையானால், நீ வேறு பெட்டியைப் பார்த்துக் கொண்டு போ' என்றேன் கடுமையாக.

வாக்குவாதம் வலுக்க, 'இறங்கப் போகிறாயா இல்லையா?' என்று மிரட்டினான்.

இதற்குள் ரயில் புறப்பட்டு நகர ஆரம்பித்து விட்டது. அவனைக் கீழே தள்ளி அடித்து நொறுக்கினேன்.

நிறைய அடிவாங்கியபின் அவன் செயலற்றுப் போனான். நான் வேகமெடுக்க முற்பட்டிருந்த ரயிலிலிருந்து வெளியே குதித்து விட்டேன். சில சிராய்ப்புகளுடன் தப்பினேன்.

மறுநாள் நாளிதழ் பார்த்து அந்த வெள்ளைக்காரன் இறந்து போனதைத் தெரிந்து கொண்டேன். இம் முதல் கொலையைச் செய்த போது நான் குறுந்தாடியும் மீசையும் வைத்துக் கொண்டிருந்தேன். என்னை அடையாளங் கண்டு கொண்டு போலீஸ் பிடித்து விடக் கூடாது என்பதற்காக அவற்றை நான் மழித்துக் கொண்டேன். ஆனால் மழித்த முகத்துடன் நான் செய்த இரண்டாவது கொலைக்காக எனது தற்போதைய சாயலில் போலீஸ் என்னைத் தேடிக் கொண்டிருக்கிறது! இப்போது எனது தோற்றத்தைத் தாடி, மீசை மூலம் நான் மாற்றிக் கொண்டால், முதல் கொலைக்காகப் பிடிபடுவேன். அதனால்தான் எனது தோற்றத்தை எப்படி மாற்றிக் கொள்ளுவது என்ற திகைப்பில் இருக்கிறேன். இதையெல்லாம் நானே உங்களிடம் சொல்லுவதாகத்தான் இருந்தேன். போலீஸ் குறுக்கிட்டதால் பிரிய நேர்ந்தது.

இனி நான் மிக, மிகத் தேவையாக இருந்தாலன்றி, உங்கள் வீட்டுக்கு வர மாட்டேன். உங்களுக்குத் தொல்லை நேர்வதையும் அதனால் தங்கள் அன்பான மனைவி கண்ணீர் விடுவதையும் என்னால் சகிக்க முடியாது. 'என் அன்பு மகனே' என்று அடிக்கடி விளித்தீர்கள். சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்ட அன்பு மகனைத் தந்தை மன்னிப்பார் என்ற நம்பிக்கையுடன் நான் தற்போதைக்குத் தங்களிடமிருந்து விடை பெறுகிறேன். இக் கடிதத்தைத் தங்கள் மகள் களிடம் காட்டிய பிறகு கிழித்துப் போட்டு விடவும். இதை வைத்துக் கொண்டு மேலும் ஆபத்துக்கு ஆளாகாதீர்கள். வந்தே மாதரம்.

நரேந்திரநாத் பானர்ஜி.

ராஜாராமனுக்குக் கண்கள் கலங்கின. 'சுதந்திர வெறியில் இந்த இளைஞர்கள் தங்கள் வருங்காலம், வாழ்க்கை-ஏன், உயிரையே பணயம் வைக்கிறார்களே' என்ற நினைப்

பால் கண்கள் நிறைந்து கண்ணீர், கன்னங்கள் வழியே உருண்டது.

அப்போது அவரது அறைக் கதவைத் தள்ளிக் கொண்டு பாமா உள்ளே வந்தாள். கண்ணீருடனும் வெறித்த பார்வையுடனும் மடியில் சில எழுதப்பட்ட தாள்களுடனும் தான் வந்ததைக் கூட உணராது உட்கார்ந்திருந்த கணவரைப் பார்த்து அவள் துணுக்குற்றுப் போனாள்.

## 14

பாமா மெல்ல நடந்து போய் கணவரது தோளில் தன் கையைப் பதித்து, "எதுக்குன்னா அழறேள்? ஏன் இப்படி உக்காந்துண்டிருக்கேள்? மடியில என்ன காகிதம்? லெட்டரா?" என்றாள். கட்டிலில் அவருக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டாள்.

ஏற்கெனவே சி.ஐ.டிகாரர்கள் பேச்சை ஒட்டுக் கேட்டு நரேந்திரநாத் பானர்ஜி ஒரு கொலைகாரன் என்பதாக அவள் ஊகித்து விட்டிருந்ததால், ஓரளவுக்கு அவளிடம் உண்மையைச் சொல்லி விட அவர் முடிவு செய்தார். கடிதத்தில் எழுதப்பட்டிருந்தவற்றை ஓரளவுக்குச் சொல்லி விட்டு, "அவனுக்கு அம்மா இல்லையாம். சின்ன வயசிலேயே செத்துப் போயிட்டா போலிருக்கு. உன்னைப் பார்த்ததும் அவனுக்கு அவனோட அம்மா ஞாபகம் ரொம்ப வந்துடுத்தாம். உன்னோட பார்வையில இருந்த கனிவு தன்னோட அம்மா நெனைப்பை ஏற்படுத்தினதா எழுதி இருக்கான். உன்னோட மடியில தலைவெச்சுப் படுத்துண்டு மனசில இருக்கிறதையெல்லாம் உங்கிட்ட கொட்டிடணும் போல இருந்துதாம் அவனுக்கு" என்று கூறி அவர் பெருமூச்செறிந்தார்.

பாமாவுக்குள் சொல்லி முடியாத வியப்பு பரவியது. அவளையும் மீறிக் கண்களில் நீர் வரி இட்டது.

"யாரோ யாரையோ என்னமோ பண்ணிண்டு போறான்னு இருக்க வேண்டியதுதானே? இவன் போய் அவனைக் கொன்னதுனால அந்தப் பொண்ணோட போன மானம் திரும்பியா வந்துடப் போறது? போனது போனதுதானே? இப்படியா வாழ்க்கையே பாழ்பண்ணிப்பா?"

"அது மாதிரி நெனச்சு எல்லாருமே நடந்துண்டா என்ன ஆகும்? இந்த நாட்டுப் பொண்கள் கையைப் பிடிச்சு இழுத்தா ஏன்னு கேக்கறதுக்கு நாதி கிடையாதுன்னு கண்டுண்டு வெள்ளைக்காரன் இன்னும் மோசமா நடந்துப்பானா இல்லையா? சொல்லு."

இந்தக் கேள்விக்குப் பாமாவால் பதில் சொல்ல முடியவில்லை. அவள் மவுனமாக இருந்தாள்.

அப்போது வாசல் பக்கத்திலிருந்து ரோந்துப் போலீசாரின் ஊதுகுழல் ஓசை கேட்டது. அவர்கள் வீட்டு வாசற்கதவும் தட்டப்பட்டது. ராஜாராமன் திகைப்புடன் எழுந்து போனார். கூடத்தைக் கடந்து வாசலுக்குச் சென்ற போது அஞ்சனாவும் அமராவதியும் கதவு தட்டப்பட்ட ஓசையால் கண் விழித்து எழுந்து கொண்டதைக் கவனித்தார். சன்னல் வழியே எட்டிப் பார்த்து, "யாரு?" என்றார்.

"நாங்க ரோந்துப் போலீஸ், சாமி. கொஞ்ச நேரத்துக்கு முந்தி ஒரு ஆளு உங்க தோட்டத்துலேருந்து ஓடினான். நாங்க துரத்திட்டு ஓடினோம். ஆனா பிடிக்க முடியல்லே. வீட்டுக்குள்ள புகுந்து எதையாச்சும் திருடிட்டு ஓடினானா இல்லாட்டி நாங்க பார்த்துட்டதால ஓடினானான்னு தெரியல்லே. வெசாரிக்கலாம்னு வந்தோம்."

"தோட்டத்துப் பக்கம் காலடிச் சப்தம் கேட்டிச்சு. நான் உடனே லைட்டைப் போட்டேன். அதனால இவங்க வீட்டில எல்லாரும் முழிச்சுட்டிருக்காங்கன்னு நெனச்சு ஓடிப் போயிருப்பான். இங்க எதுவும் திருடு போகல்லே, எவனும் நுழையவும் இல்லேப்பா."

"சரிங்க, சாமி. நாங்க வர்றோம்...."

உள்ளே வந்த அவரிடம், "என்னப்பா?" என்றாள் அஞ்சனா. நடந்ததை இருவரிடமும் தெரிவித்த ராஜாராமன், அவர்களிடம் அவனது நெடிய கடிதத்தைக் கொடுத்தார். இருவரும் உறக்கம் முற்றாய்க் கலைந்தவர்களாகி ஆவலுடனும் பரபரப்புடனும் கடிதத்தைப் படிக்கலாயினர்...

படித்து முடித்ததும், "பாவம்ப்பா அவன்" என்றாள் அஞ்சனா. அமராவதியின் கண்கள் சற்றே சிவந்திருந்தன.

"போலீசுக்குப் பயந்து பயந்து இனிமே அவனோட வாழ்க்கையே ஓடி ஒளியற வாழ்க்கையாத்தான் இருக்கப் போறது. இல்லியாப்பா?" என்றாள் அமராவதி. அவள் குரல் தழுதழுத்தது. முன்பின் அறிமுகம் இல்லாத புதியவன் ஒருவனுக்காகத் தாங்கள் அனைவருமே மனமுருகியதை எண்ணி அவளுள் வியப்பு பரவியது.

கொஞ்ச நேரம் கழித்து நால்வரும் தத்தம் இடங்களில் படுத்துக் கொண்டாலும் ஒருவருக்காவது உறக்கம் வரவில்லை. எல்லாருமே தத்தம் எண்ணங்களில் ஆழ்ந்து போயினர்...

(தொடரும்)

# மணிக்கொடி

நாட்கள் கடந்து கொண்டிருந்தன. நரேந்திரநாத் பானர்ஜியிடமிருந்து எந்தத் தகவலும் வரவில்லை. அருணாசலம் பற்றியும் தகவல் ஏதுமில்லை. ராஜாராமன், அவன் சவுக்கியமாக இருப்பதாய்த் தம் லண்டன் நண்பர் ஒருவர் மூலம் தகவல் சொல்லியனுப்பியதாக மனைவியிடம் அவ்வப்போது பொய் சொல்லி வந்தார்.

அஞ்சனா, காங்கிரஸ் இயக்கத்தில் ராமசாமியுடனும் அவருடைய கூட்டாளிகளுடனும் முழுமூச்சுடன் ஈடுபட்டுக் கூட்டங்களுக்குப் போவது, துண்டுப்பிரசுரங்கள் விநியோகிப்பது, பெண்களை அவர்கள் வீடுகளில் சந்தித்துக் காங்கிரஸ் இயக்கம் பற்றி விளக்குவது போன்ற அலுவல்களைச் செய்து வந்தாள்.

அவ்வாண்டின் இறுதியில் வழக்கம் போல் காங்கிரஸ் மாநாடு நடைபெற்றது. அலாகாபாத்தில் நான்கு நாட்கள் நடைபெற்ற அம் மகாநாட்டுக்கு சர் வில்லியம் வெட்டர்பர்ன் எனும் ஆங்கிலேயர் தலைமை தாங்கினார். இந்தியாவில் சுதந்திரத்துக்காகக் குரல் கொடுத்துப் போராடிய சில நல்ல ஆங்கிலேயர்களில் இவர் ஒருவர். அப்போது வைசிராயாக இருந்த மிண்டோவும் இங்கிலாந்து மந்திரி மார்லியும் இந்தியாவுக்காகச் சில 'சீர்திருத்தங்'களை அறிவித்திருந்தனர். இவற்றில் ஒன்று முஸ்லிம்களுக்குத் தனித் தொகுதிகள் தேர்தலின் பொருட்டு நிர்ணயிக்கப்படும் என்பது. இந்துக்களையும் முஸ்லிம்களையும் பிரித்த இந்த ஏற்பாடு இருசாராரையும் முகம் சுழிக்க வைத்தது. இம் மாநாட்டில் பலரின் கண்டனத்துக்கும் இது உள்ளாயிற்று. முஸ்லிம் லீகின் தலைவர் முகம்மது அலி ஜின்னாவே இதனை எதிர்த்தார். இந்துக்களும் முஸ்லிம்களும் எக்காரணங்கொண்டும் பிளவுபடாதிருக்க வேண்டும் என்று பல தலைவர்களும் வற்புறுத்தினார்கள். 'மயிலே மயிலே இறகு போடு' என்று வெள்ளைக்காரனிடம் ஆண்டுதோறும் கெஞ்சுகிற முறையில் வெற்றுத் தீர்மானங்களைப் போட்டுக் கொண்டிருப்பது எந்த முன்னேற்றத்தையும் ஏற்படுத்தப் போவதில்லை என்பது தீவிரவாதிகளின் கருத்தாகத் தொடர்ந்து இருந்து வந்தது. நாடுதழுவிய இயக்கமாய்க் காங்கிரஸ் கட்சி வளர்ந்து விட்டது, வெள்ளைக்காரனின் வயிற்றில் புளியைக் கரைத்ததென்னமோ உண்மை. அவன் இந்துக்களையும் முஸ்லிம்களையும் பிரிக்கச் சூழ்ச்சி செய்ததும், முஸ்லிம்களுக்கு அதிகச் சலுகைகள் கொடுப்பதன் மூலம் இந்துக்களின் கோபத்தைக் கிளற முயன்றதுமே இதற்குச் சான்றுகள். முஸ்லிம்களுக்கு அதிகமான தொகுதிகள் உள்ளாட்சித் துறைகளில் தரப்படும் என்பதும் மிண்டோ-மார்லி சீர்திருத்தங்களில் ஒன்றாக இருந்தது. இதனால் எல்லாம் நாடு தழுவிய அதிருப்தி, வெள்ளைக்காரர்கள் மீது இந்தியர்க்கு ஏற்பட்டிருந்தது.

அவ்வாண்டின் இறுதியில் நரேந்திரநாத் பானர்ஜியிடமிருந்து ராஜாராமனுக்கு ஒரு கடிதம் வந்தது. எந்த ஊரிலிருந்து அவன் அக் கடிதத்தை எழுதினான் என்பதற்கு அவன் எந்தத் தடயமும் அதில் கொடுக்கவில்லை. தபால் முத்திரையும் தெளிவற்று இருந்ததால் அவனது இருப்பிடம் ஊகிக்கும் படியாகவும் இல்லை. தனது பெயரையும் அவன் அதில் குறிப்பிடவில்லை. தனது பெயராலோ கையெழுத்தாலோ அவருக்குத் தொல்லை விளையக்கூடாது என்பதில் அவனுக்கு இருந்த அக்கறை அவர் கண்களை மல்கச் செய்தது.

'அன்புள்ள அய்யா,

உங்கள் வளர்ப்பு மகனுக்கு ஒப்பானவன் எழுதும் கடிதம் இது. என்னை மறந்திருக்க மாட்டீர்கள் என்பதை நன்கு அறிவேன். நான் நலமாக இருக்கிறேன். தங்கள் மகன் பற்றிய தகவல் ஏதும் எனக்கு என் அண்ணன் மூலம் கிடைக்கவில்லை. கிடைத்ததும் தெரிவிப்பேன்.

இவ்வாண்டு ஜூலை மாதம் முதல் தேதியன்று இந்தியாவுக்குக் கொண்டு வந்து விசாரணை நடத்துவதற்காகக் கப்பலில் ஏற்றப்பட்ட விநாயக தாமோதர் சர்வர்க்கர் பற்றிய முழுச் செய்தியையும் தாங்கள் அறிவீர்களா? அறியவில்லையாயின் நான் கொடுக்கும் தகவல்கள் தங்களுக்குச் சுவையாக இருக்கும். கப்பல், ப்ரான்ஸ் நாட்டைச் சேர்ந்த மார்சேல்ஸ் அருகே நங்கூரம் பாய்ச்சி நின்ற

போது விநாயக் தாமோதர் 'பாத்ரூம்' போக வேண்டுமென்று தன்னைக் கண்காணிப்பதற் கென்று நியமிக்கப்பட்டிருந்த காவலனிடம் தெரிவித்தாராம். அவ்வாறே அவன் அவரை பாத்ரூமுக்குள் அனுப்பி விட்டு வெளியே காத்திருந்த போது கழிவறையின் மேல்புறத் துத் துவாரம் (Porthole) வழியாக அவர் கடலில் குதித்து விட்டாராம். ஆனால் வேறொரு காவலாளி அவர் குதித்து நீந்தத் தொடங்கியதைப் பார்த்து விட்டிருக்கிறார். அவரை நோக்கித் துப்பாக்கியால் சுட்டிருக் கிறார். ஆனால் விநாயக் தாமோதர் சாவர்க் கர் துளியும் கவலைப்படாமலும் திரும்பிப் பாராமலும் விரைந்து நீந்திச் சென்றிருக் கிறார். பல குண்டுகள் வீணாயின. ஒன்றா வது அவர் மீதுபடவில்லை. கடைசியில் ஒரு வழியாக அவர் மார்சேல்ஸ் துறைமுகத்தை யடைந்த போது, இதற்குள் அங்கு செய்தி அனுப்பப்பட்டிருக்க, அங்கிருந்த பிரிட்டிஷ் காவலர்கள் அவரைப் பிடித்து விட்டனர். தாம் ப்ரான்ஸ் நாட்டு மண்ணில் கால் வைத்து விட்டதால் இங்கிலாந்து நாட்டு அர சுக்கு அங்கு தன்னைக் கைது செய்ய அதிகா ரம் கிடையாது என்று சாவர்க்கர் வாதாடிப் பார்த்தார். ஆனால் அங்கிருந்த பிரான்சு நாட்டுப் போலீசார் அவருக்கு உதவவில்லை. இதனால் இங்கி லாந்துக் காவலர்கள் அவரைத் தம் கப்பலுக்கு மறுபடியும் இழுத் துச் சென்றார்கள். இதுபற்றிக் கேள்விப்பட்டு மேடம் காமாவும் உங்கள் மெட்றாஸ் பிரசிடென்சி யைச் சேர்ந்த வி.வி.எஸ். அய் யரும் உடனே மார்சேல்சுக்கு விரைந்தார்கள். ஆனால் அதற் குள் விநாயக் தாமோதர் கைதாகி இட்டுச் செல்லப்பட்டு விட்டார். இவ்வாண்டு ஜூலை 22-ஆம் தேதியன்று பலத்த போலீஸ் காவ லுடன் பம்பாய்க்கு வந்து சேர்ந்த விநாயக் தாமோதர் சாவர்க்கர் பம்பாய் உயர்நீதி மன்றத்தில் விசாரிக்கப்பட்டார். அப்போது நான் பம்பாயில் இருந்தேன். வெடிகுண்டு தயாரிக்கும் வழி முறை பற்றிய நூலைப் பிரதிகள் எடுத்து விநியோகித்தது, ஆங்கிலே யரை எதிர்த்துப் போராட இந்தி





யர்களைத் தூண்டியது, பயங்கரவாதிகளுக்கு இரகசியமாய்த் துப்பாக்கிகள் அனுப்பியது ஆகிய குற்றச்சாட்டுகள் அவர் மீது சுமத்தப் பட்டன. நாசிக் கலெக்டர் ஜாக்சனின் கொலைக்கும் அவர் மீது குற்றம் சாட்டப் பட்டது. அவர் அனுப்பிய துப்பாக்கியால் தான் கலெக்டர் ஜாக்சன் சுடப்பட்டாராம். தண்டனையாக அவர் சொத்துக்கள் அனைத்தும் சர்க்காரால் பறிமுதல் செய்யப் பட்டன. அந்தமானுக்கு நாடு கடத்தப்பட வேண்டுமென்றும் தம் ஆயுள் முழுவதும் அங்கு அவர் இருக்க வேண்டும் என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது உங்களுக்கெல்லாம் தெரிந்திருக்கும். 'என்னைப் போன்றவர்கள் செய்யும் இதுபோன்ற தியாகங்களாலும், அனுபவிக்கும் துன்பங்களாலும் கண்டிப்பாக விரைவிலேயே ஒருநாள் எங்கள் நாடு சுதந்தி ரம் அடையும்' என்று கோர்ட்டில் முழங்கி னார் வீர சாவர்க்கர்.

அய்யா, வீர சாவர்க்கர் போன்ற மாபெரும் ஆத்மாக்களுக்கு முன்னால் என் னைப் போன்றவர்கள் எம்மாத்திரம்! ஆயுள் முழுவதற்கும் அந்தமான் தீவுகளில் சிறைப் பட்டு வாழப் போகும் அம்மாபெரும் மனித னின் மனம் என்ன பாடுபடும் என்பதை நினைத்துப் பார்க்குந்தோறும், அவருக்காக ஏதும் செய்ய முடியாமல் நிராதரவாக நிற் கும் எங்கள் நிலை மீது எங்களுக்கு ஆத்திர மும் கோபமும் கசப்பும் ஏற்படுகின்றன.

அடிக்கடி உங்களையெல்லாம் நினைத் துக் கொள்ளுகிறேன். அமராவதி, அஞ்சனா, அம்மா மூவருக்கும் எனது அன்பைச் சொல் லுங்கள். என்றாவது ஒருநாள் கட்டாயம் சந் திப்போம். அந்த நாள் விரைவில் வர வேண் டும் என்பது என் ஆசை.

வந்தே மாதரம்!

ராஜாராமன் விவரிக்க முடியாத வேத னைக்கு ஆட்பட்டார். லண்டனிலிருந்து ஆங்கிலோ - இந்தியனைப் போல் தப்பிச் சென்ற அருணாசலமும் கண்டுபிடிக்கப்பட் டிருக்க மாட்டான் என்பது என்ன நிச்சயம்? - கடிதத்தை மடித்து அவர் தம் கோட்டுப் பைக்குள் வைத்த போது கதவு தட்டப்பட் டது.

"யெஸ்?" என்றார் ராஜாராமன்.

"குட்மார்னிங் வக்கீல் சார்!" என்று சொன்னபடியே அவரது அறைக்குள் சி.ஐ.டி. சிவப்பிரகாசம் நுழைந்தான்.

## 15

குஞ்சம்மாவுக்கு ஆங்கிலம் கற்றுத் தரப் போவதாய்ச் சொன்ன ராமசாமி, அதை அவளுக்குக் கற்றுத் தரத் தொடங்கி ஆறு மாதங்கள் கழிந்து விட்டன. நாள்தோறும் அவரால் அவளுக்கு வகுப்பு எடுக்க முடிய வில்லையாதலால் முன்னேற்றம் குறிப்பிடத் தக்க வகையில் இல்லை. எனினும் அவள் ஆர்வமாய்க் கற்று வந்தாள். எப்படியாவது அஞ்சனாதேவியைப் போல் தானும் 'தஸ் புஸ்' என்று இங்கிலீஷில் உரையாட வேண் டும் என்ற ஆசையால் குஞ்சம்மா படித்த தையே திரும்பத் திரும்பப் படித்துக் கொண் டும் அடிக்கடி எழுதி எழுதிப் பார்த்த வண்ணமும் இருந்தாள்.

முதன் முதலாக அவர்கள் வீட்டுக்கு அஞ்சனா வந்து சென்றதன் பிறகு சென்ற இந்த ஆறு மாதங்களில் ஒரே ஒரு தடவை தான் அவர்கள் வீட்டுக்கு அவள் வந்து சென்றிருந்தாள். அதுவும் வீட்டுக்குள் வரா மல் காரில் இருந்தபடியே ஓட்டுநர் கையில் துண்டுக் காகிதம் ஒன்றைக் கொடுத்தனுப்பி விட்டுப் போய் விட்டாள். அப்போது ராம சாமி பள்ளிக்கூடத்தில் இருந்தார். அதனால் வீட்டுக்கு வந்து அவள் பேசச் சங்கோஜப்பட் டிருக்கலாம் என்று குஞ்சம்மா நினைத்தாள். வீட்டுக்குள் வந்து துண்டுக் காகிதத்தைத் தரா தது மரியாதைக் குறைவான செயல் என்று அவளை மனத்துள் விமர்சித்த அதே நேரத் தில் அவள் வராததே நல்லதென்றும் தோன் றியது. வாசற்புறத்து சன்னல் வழியாகத் திருட்டுத்தனமாய் அவளைக் கவனித்தாள். அஞ்சனா மேலும் அழகாகி இருப்பதாகப் பட்டதில் கழுத்தை ஒரு நொடிப்பு நொடித் துக் கொண்டு அங்கிருந்து அகன்றாள்.

காரைக் கிளப்பிக் கொண்டு அவள் போனதும், "என்ன கடுதாசி?" என்று விசா லம் விசாரித்தாள்.

"தெரியல்லே. என்னமோ இங்கிலீஷ்லே கிறுக்கி இருக்கு."

"நீதான் இப்ப கத்துக்கறியே?"

"கையெழுத்தைப் படிக்கற அளவுக்கெல் லாம் இன்னும் நான் கத்துக்கல்லே, அக்கா. அதுக்கு இன்னும் நிறைய நாளாகும்."

"அந்தப் பொண்ணு நம்மாத்துக்கு முதமுத வந்துதே, அதுக்கு அப்புறம் ஒரு மூணு நாலு மாசம் ஆகி இருக்குமா?"

"ஆறு மாசத்துக்கு மேலேயே ஆயிடுத்து, அக்கா. அச்சுப் பிச்சுனு அடிக்கடி கார்ல வந்து நம்மாத்து வாசல்ல இறங்கி, இங்க வந்து அவரோட வம்படிக்குமோன்னு பயந் திண்டிருந்தேன். நல்ல காலம். வரல்லே."

"அதான் மீட்டிங்ல எல்லாரும் சந்திச் சுக்கறாளாமே?"

"அது சரி... இதுகள்ளாம் மீட்டிங்லயும் இன்னொண்ணுலயும் கலந்துண்டு என்னத் தைச் சாதிக்கப் போறதுகளோ தெரியல்லே.



வண்ணப்படம் : கோபிநாத்

*பாரம்பரியப் பொலிவுடன் தயாராகி வருகிறது...*
*வழக்கமான குதூகலத்துடன் வரவேற்புச் சொல்லுங்கள்!*

---

காலா காலத்துல ஒருத்தனுக்குக் கழுத்தை நீட்டினமாம், கொழந்தை குட்டிகளைப் பெத்துண்டமாம்னு இல்லாம."

"அவ அப்பா அம்மாவும் விட்டு வெச்சிருக்காளே. அத்தெச் சொல்லு."

"பணக்காரா எது செஞ்சாலும் நியாயமாயிடறது. . இதையே நாம செய்யட்டும். நடக்கிறதே வேற. அது மட்டுமில்லேக்கா, நாலு எழுத்துப் படிச்சுட்டாலே கல்யாணம் வேண்டாம், காட்சி வேண்டாம், எவனுக்கும் அடங்க வேண்டாம்கறாப்ல ஒரு திமிரும் திண்ணக்கமும் பொண்களுக்கு வந்துடறது. சுதந்தரமா இருக்கணும்கற ஆசை ஏற்பட்டுடறது. அதான் நாட்டோட சுதந்திரத்துக்கும் இவா பொருத்தமாப் பாடுபடறா?"

அஞ்சனாவின் மீது அவளது முதல் வருகை நாளன்று விழுந்த கருத்து குஞ்சம்மாவுக்கு இன்னும் மாறவில்லை என்பதை விசாலம் புரிந்து கொண்டாள். 'நல்ல காலம். அந்தப் பொண்ணு அடிக்கடி ஆத்துக்கு வந்து போகல்லே. அந்த மட்டும் க்ஷேமம்' என்றும் எண்ணிக் கொண்டாள். குஞ்சம்மா பதற்றத்துடன் தொடர்ந்தாள் :

"அவளோட பத்துப் பதினஞ்சு சிநேகிதிகளை வேற காங்கிரஸ்ல அவ சேர்த்து விட்டிருக்காளாமேக்கா? தான் கெட்டது போறாதுன்னு சந்திரபுஷ்கரணியையும் சேர்த்துக் கெடுத்த கதையான்னா இருக்கு" என்றாள் ஒரு சீறலான பெருமூச்சுடன்.

"அவா வீடுகள்ளேயெல்லாம் இவளைத் திட்டு திட்டுன்னு திட்டுவாளே. அந்த பயம் துளியாவது இருக்கா பாரு அவளுக்கு."

"அதான் நீங்க அன்னிக்கே சொல்லிட்டேளேக்கா - எதுக்கும் துணிஞ்ச கட்டைங்கிறாப்ல - அது சரியாத்தான் இருக்கு."

"ஆனா நீ நினைக்கிற அர்த்தத்துல நான் சொல்லல்லே, குஞ்சம்மா. தைரியசாலிப் பொண்ணுங்கிற அர்த்தத்துல மட்டுந்தான் அப்படிச் சொன்னேன்."

குஞ்சம்மா சட்டென்று கழுத்தை ஒரு வெட்டு வெட்டி நாத்தனாரை ஓர் ஆழமான பார்வை பார்த்தபின் தன் விழிகளை அப்புறப்படுத்திக் கொண்டாள்.

பேச்சை மாற்றும் எண்ணத்துடன், "ராமசாமி இன்னிக்கு வர்றதுக்கு லேட்டாகும்னு ஏதாவது சொன்னானா?" என்றாள் விசாலம்.

"அதான் சொன்னாரேக்கா - ஏதோ மீட்டிங் இருக்குன்னு?"

"எங்கேயாம்?"

"எங்கேன்னு என்னிக்குமே அவர் சொன்னது கிடையாதேக்கா!"

இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருந்த நேரத்தில் ராமசாமியின் பள்ளிக்கூடத்தில் அவரது வகுப்பறையில்தான் அந்தச் சிறிய கூட்டம் நடந்து கொண்டிருந்தது. மேசை விளிம்பில் இலேசாய்ச் சாய்ந்து நின்றவாறு ராமசாமி சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தார். உணர்ச்சிவசப்பட்டுப் பேசுகையில் அவர் புருவங்கள் ஏறி இறங்கினாலும் கண்கள் சுருங்கியும் விரிந்தும் பல்வேறு உணர்ச்சிகளை வெளிப்படுத்திய அழகையும் சிவந்த உதடுகள் நெளிந்த நளினத்தையும் கண்ணிமைக்காது பார்த்தபடி இருந்தாள் அஞ்சனாதேவி. தொடக்க காலத்தில் அவர்பால் அவள் உள்ளத்து உணர்ச்சிகள் மிகச் சாதாரணமானவையாகத்தான் இருந்தன. நாட்கள் செல்லச் செல்ல, ராமசாமியின் ஆவேசம் மிக்க பேச்சுக்கள் தன்னுள் விளைவித்த வெறியில் அவள் கொஞ்சங் கொஞ்சமாக அவர்பால் தன் மனத்தை இழக்கலானாள். 'இவருக்கு மட்டும் கலியாணம் ஆகாம இருந்திருந்தால்...' என்ற அசட்டுக் கற்பனை அடிக்கடி அவள் மனத்தில் எழுந்து எழுந்து வீழ்ந்தது. 'அந்தக் குஞ்சம்மா எவ்வளவு அதிருஷ்டசாலி' என்ற எண்ணம் சற்றே அவள்பால் பொறாமையையும் அவள் மனத்தில் தோற்றுவித்துக் கொண்டிருந்தது.

'அந்தச் சுட்டிப்பயல் கங்காதரன் மட்டும் என் பிள்ளையாக இருந்தால்...' என்ற கற்பனையும் அவளுக்கு அடிக்கடி வருவதுண்டு. குழந்தை கங்காதரனின் மீது அவள் தனிப்பட்ட பாசம் கொண்டிருந்தாள். ராமசாமியின் மீது வெளிப்படுத்த முடியாத அன்பையெல்லாம் அவள் அவன் மீது பொழிந்து கொண்டிருந்தாள். பெரியவனானால், கங்காதரன் ராமசாமியின் சாயலில் இருப்பான் என்று அவள் நினைத்தாள். கம்பீரமான பார்வையும், கண்ணியமான பேச்சும், விலகி இருக்கும் தன்மையும் கொண்ட ராமசாமிக்கு மட்டும் மணமாகாதிருந்திருப்பின், தன்னை அவர் காதலிக்க முற்பட்டிருப்பார் என்ற நம்பிக்கை நிறைந்த நினைப்பு, அவள் கொள்ள முயன்ற கட்டுப்பாட்டை மீறி அவள் உள்ளத்தில் அவ்வப்போது எழுந்து சண்டித்தனம் செய்து கொண்டிருந்தது. தன் மனம் அவர்பால் இப்படிக் கட்டுப்பாடிழந்து அலைபாய்ந்து கொண்டிருக்கும் விஷயம் குஞ்சம்மாவுக்குத் தெரியவந்தால் அவள் உணர்ச்சிகள் எப்படியெல்லாம் பாதிக்கப்படும் என்று எண்ணிப் பார்த்த போதோ அவளுள் ஒரு நடுக்கம் பரவியது. எதனாலோ குஞ்சம்மாவுக்குத் தன்னை அவ்வளவாகப் பிடிக்கவில்லை என்று முதல் சந்திப்பின் போதே அவளுக்குத் தோன்றி விட்டது. தான் காங்கிரஸில் இருப்பதும் அடிக்கடி வெள்ளைக்காரன், தேசம், சுதந்திரம் என்றெல்லாம் பேசுவதும் தன் மனைவிக்குப் பிடிக்கவில்லை என்று சில தடவைகள் அவர் சொல்லிச் சிரித்ததுண்டு. அந்த இயக்கத்தில் இருப்பவள் என்பதால் மட்டும் விளைந்த பிடித்தமின்மை என்பதாய்க் குஞ்சம்மாவின் உணர்ச்சியை அவளால் மதிப்பிட முடியவில்லை. அதற்கும் அப்பாற்பட்ட உணர்ச்சி அது என்று அவளது உள்ளுணர்வுக்கு எடுத்த எடுப்பில் பட்டு விட்டது. 'நியாயந்தானே?' என்றும் தோன்றியது.

'ராமசாமி தன் கணவராக இருந்தால், குஞ்சம்மாவுக்குத் தன்னால் அவரை விட்டுக் கொடுக்க முடியுமா?' என்று நினைத்துப் பார்த்த போது அவளுள் ஓர் அதிர்வு தோன்றியது. 'இது தப்பு. தவறான எண்ணம்' என்று அவள் மனம் கூவாமல் இல்லை. ஆனாலும் கற்பனைகளின் கட்டுப்பாடற்ற தன்மையை அவள் அடக்க முயலவில்லை. அவள் மனத்தில் ஒரு கள்ளமும் அதன் விளைவான உறுத்தலும் நிரந்தரமாய்க் குடிகொண்டு விட்டன.

"மிஸ் அஞ்சனா அடுத்தபடி பேசுவார்" என்று ராமசாமி அறிவித்து விட்டு அமர்ந்தார். அப்போதுதான் திடுக்கிட்டவளாகத் தன் எண்ண ஓட்டங்களிலிருந்து விடுபட்ட அஞ்சனா, முதலில் தடுமாறித்தான் போனாள். ஆனால் பேசப் பேச சுயநல சிந்தனைகள் அழிந்து, அவளை சுதந்திர ஆவேசம் ஆட்கொண்டது.

(தொடரும்)




**"என்ன சார் இது...? உங்க படத்துக்கு வித்தியாசமா "இஞ்சி சாறு"ன்னு பேர் வச்சிருக்கீங்க?"**

**"கதையை, ஜீரணிக்க முடியலைன்னு யாரும் சொல்லிடக் கூடாது பாருங்க...!"**

**• புதுவண்டி ரவீந்திரன்**

# இலவச சிரிப்புப் பட்டா!

கருத்து : கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா
படம் : செல்லம்





பேச்சாளர் : முதலில் வீட்டு மனைப் பட்டாவை வாங்கிக் கொள்ளுங்கள். அரசாங்கம் நிலம் எங்கே இருக்கிற தென்று கண்டுபிடித்தவுடன் உங்க ளுக்குத் தெரியப்படுத்துவோம்...!

பேச்சாளர் : இப்போது நமது தலைவர் அவர்கள் இலவச வீட்டு மனைப்பட்டா வழங்குவார்கள். நமது கட்சியின் உறுப்பினர் கார்டு வைத்திருப்பவர்கள் மட்டும் வரி சையாய் வந்து அமைதியாய்ப் பெற்றுச் செல்லவும்...!



தொண்டர் : என்னண்ணே இது? இன்னும் இருபது பேர் காத்திருக்காங்க. ஐந்து வீட்டு மனைப்பட்டாதானே இருக்கு, என்ன பண்றது...?
தலைவர் : அதனாலென்ன... போய் இதையே பதி னைஞ்சு ஜெராக்ஸ் காப்பி எடுத்துட்டு வா, கதையை முடிப்போம்...!

"என்னங்க, வீடு வீடா இலவச வீட்டு மனைப்பட்டாவை மட்டும் கொடுத்துட்டுப் போறீங்க... இடம் எங்கன்னு சொல்லலையே...?"
"பொறுய்யா... நிலத்துக்கு அமெரிக்காவுல ஆர்டர் கொடுத் திருக்கோம்... பத்து லட்சம் ஏக்கர் கப்பல்ல வந்துட்டிருக்கு...!"

அருள் செல்வம் கட்சித் தலைவர்

இவ்விடம் 'இலவச' வீட்டு மனைப்பட்டா குறைந்த விலை யில் மொத்தமா கவும் சில்ல றையாகவும் கிடைக்கும்



# மஹாலயம் (அல்லது மஹாளயம்)



பெரிய இருப்பிடம், கல்யாணாதி சுபங்களுக்கு இருப்பிடம் மஹான்களுக்கு இருப்பிடம் என பல பொருள்கள் உண்டு. அதாவது மஹான்களான பித்ருக்கள் பூமியில் வந்து 16 நாட்கள் தங்கி, புத்ரன் முதலியவர்களுக்கு சுபத்தைச் செய்யும் காலம் என்று பொருள். ஸூர்யன் கன்யா ராசியில் புகுந்தபோது, ஆஷாடம் முதலான 5 ஆவது அபர பக்ஷத்தில் பித்ருக்கள் பூமிக்குச் செல்ல ஏவப்படுகின்றார்கள். அச்சமயம் நமது பெற்றோர், அவர்களது பெற்றோர்களுடன் கூடி நம்மை நாடி வருகின்றனர். அச்சமயம் மஹாளய அன்னச்ராத்தமாகச் செய்வது உத்தமம். இந்த 16 நாட்களில் செய்ய முடியாதவர் அன்ன ச்ராத்தமானால் அடுத்த பக்ஷத்திலும் செய்யலாம்.

தீபாவளி அமாவாஸ்யைவரை பித்ருக்கள் அன்ன ச்ராத்தத்தை எதிர்பார்க்கிறார்களாம். விதிப்படி ஹோமம் செய்து அன்னம் போட முடியாவிடில் அன்னத்திற்கு ப்ரதிநிதியாக வெள்ளி நாணயத்தை அளித்து (அதாவது ப்ராம்மணர்களை வரித்து, ஆஸனாதிகளையும் தக்ஷிணையும் அளித்து) தர்ப்பணம் செய்வதாம். அதே ஹிரண்ய ச்ராத்தம் எனப்படும். அங்ஙனம் பிரதி தினம் செய்ய முடியாதவர் பித்ரு, மாத்ரு திதி அல்லது மஹாபரணீ, வ்யதீபாதம், மத்யாஷ்டமீ முதலிய புண்யகாலத்தில் ஹிரண்யம் செய்வது பழக்கம். ச்ராத்த ப்ராம்மணர்களைப் போல் அல்லாமல், ஸாதாரண ஸமாராதனை போல் அன்று அன்னமிடுவது வழக்கம். அதுவும் தற்சமயம் பலவிடங்களில் நடப்பதில்லை. தக்ஷிணை அளித்து அனுப்புவதுடன் நிற்கின்றது. வீணான செலவுகளைக் குறைத்துக் கொண்டு மஹாளயத்தை அன்ன ச்ராத்தமாகச் செய்வதே உத்தமம். ஹிரண்யமாகவாவது செய்து அன்னமிட வேண்டும். 16 நாட்களிலும் தர்ப்பணத்தையேனும் விடாமல் செய்து ஒரு நாளாவது ஹிரண்ய ச்ராத்தம் செய்ய வேண்டும். அதனால் ஸகலவிதமான நன்மையும் பெறவேண்டும்.



# மஹாளயம் செய்வதால் உண்டாகும் பலன்



1. ப்ரதமையில் ச்ராத்தம் செய்தால் தனலாபமுண்டாகும்.
2. த்விதீயை ச்ராத்தம் ஸந்ததியைத் தரும்.
3. த்ரீதீயா ச்ரார்த்தம் நல்ல வரன் அல்லது நல்ல மருமகளைத் தரும். அல்லது கோரிய வரத்தைத் தரும்.
4. சதுர்த்தி ச்ராத்தம் நமது பகைவர்களை அகற்றும்.
5. பஞ்சமீ ஸம்பத்தை உண்டாக்கும்.
6. ஷஷ்டி கர்த்தாவைப் பிறர் பூஜிக்கும்படிச் செய்யும்.
7. ஸப்தமீ பரலோகத்தில் ஒரு தேவ கோஷ்டிக்குத் தலைவனாகச் செய்யும்..
8. அஷ்டமீ உயர்ந்த புத்தியை அளிக்கும்.
9. நவமீ நல்ல மனைவியைத் தரும். துஷ்ட மனைவியை நல்லவளாகச் செய்யும். அடுத்த பிறவியிலும் நல்ல மனைவியைத் தரும்.
10. தசமீ நம் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும்.
11. ஏகாதசீ ஸகல வேத வித்யைகளையும் தரும்.
12. த்வாதசீ ஸ்வர்ணத்தைத் தரும்.
13. த்ரயோதசீ ஸந்ததி, மேதை, பசு, புஷ்டி, ஸம்ருத்தி நீண்ட ஆயுள் முதலியவைகளைத் தரும்.
14. வஸ்த்ரம் அல்லது அக்னி (தற்காலத்தில் தோன்றிய ரயில், மோட்டார் போன்ற விபத்து) இவைகளால் இறந்தவர்களுக்குச் சதுர்த்தசியில்தான் மஹாளய ச்ராத்தம்செய்ய வேண்டும். அதே அவர்களுக்கு இன்பத்தைத் தரும்.
15. அமாவாஸ்யை ச்ராத்தம் ஸகல இஷ்டங்களையுமளிக்கும்.
16. அடுத்த ப்ரதமை தர்ப்பணம் முன் செய்தவைகளில் உள்ள குறைகளை நீக்கிப் பூர்ணமாகச் செய்யும்.

ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம்.

# ...கோலா'கலத் திருவிழா?!

...ா ஆட்சியின் போது
...விலிருந்து
...யற்றப்பட்ட
...-கோலா கம்பெனி
...து மீண்டும் தனது
...னையைத்
...பிருக்கிறது. நமது
... குளிர்பானங்களுக்குச்
...க வந்திருக்கும் இந்த
...-கோலா பிறந்து
... வரலாறு என்ன?

...ஒரு சின்ன பயோ-டேட்டா. (பெப்சி ரசிகர்கள்
... ஃபெர்னாண்டஸ் ஒதுங்கிக் கொள்ளவும்.)

...கோ-கோலா பிறந்த இடம்



பெயர் : கோகா- கோலா
வயது : 108
பிறந்த இடம் : அமெரிக்காவில், ஜார்ஜியா மாநிலம் அட்லான்ட்டாவில்
வசிப்பது : கிட்டத் தட்ட் உலகம் முழுக்க (சீனா உட்பட!)
கண்டுபிடித்து முதலில் ருசி பார்த்தவர் : ஜான் ஸ்டித் பெம்பர்டன்







பெம்பர்டன் ஒரு ஃபார்மஸிஸ்ட். திடீரென்று ஒரு நாள், தம் வீட்டுக் கொல்லையில் சில தழைகளைப் போட்டுக் காய்ச்சி அதன் டிகாக்ஷனை ஒரு கெட்டிலில் விட்டு வைத்துக் குடித்துப் பார்த்தார். ருசியாக இருந்தது. தெரு முனையில் இருந்த ஜாக்கப் ஃபார்மஸியில் கொண்டு போய் வைத்துக் கொண்டு, போகிற-வருகிறவர்களிடம் எல்லாம் "சாம்பிள் பாருங்கள்!" என்று குடித்துப் பார்க்கச் சொன்னார்.

"ஆகா, பிரமாதம்!" என்று எல்லாருமே சொன்னார்கள். ஒரு தம்ளர் 5 சென்ட் என்று விற்பனை செய்தார் பெம்பர்டன். இந்தச் சாறுடன் சோடா வாட்டர் தயாரிக்கப் பயன்படும் கார்பனேடட் நீரைக் கலந்து குடித்த போது, சுவை அலாதியாய் இருந்தது.

'ருசியானது. புத்துணர்ச்சி அளிப்பது' என்கிற பாராட்டும் சேர்ந்து கொண்டது.

பெம்பர்டன் கண்டுபிடித்த பானத்துக்கு அவர் ஆப்த நண்பர் ராபின்சன் ஒரு பெயர் சூட்டினார்.

கோகா-கோலா.

பெயரைச் சூட்டியதோடு நிற்காமல், அந்த எழுத்துக்கள் எப்படி இருக்க வேண்டும் என்று எழுதியே காண்பித்தார் ராபின்சன். அதுதான் இன்றைக்கு உலகம் முழுக்கத் தெரிந்த டிரேட் மார்க் ஆகி விட்டது.

உள்ளூர் 'அட்லாண்டா ஜர்னல்'லில் முதல் விளம்பரம் வெளியாயிற்று. ஆரம்பத்தில் ஒரு நாளைக்கு 9 தம்ளர்கள் அளவுக் குத்தான் விற்பனை. (அப்போது பெம்பர்டனுக்குத் தெரியாது - இது உலகையே ஒரு கலக்குக் கலக்கப் போகிறது என்று!)

1888ல், இறப்பதற்கு முன், பல பாகஸ்தர்களுக்குத் தம் கண்டுபிடிப்பின் உரிமையைக் கொஞ்சம் கொஞ்சமாக வழங்கினார். பிறகு அட்லான்டாவிலேயே காண்ட்லர் என்பவரிடம் மீதி பங்குகளை விற்றார். காண்ட்லர் லேசுப்பட்ட ஆளில்லை. வெளியே இருந்த பங்குகளை எல்லாம் வாங்கி வளைத்துப் போட்டார். காண்ட்லர் கைக்கு முழு கண்ட்ரோலும் வந்து விட்டது!

நான்கு வருடங்களுள் கோகா-கோலா பத்து மடங்கு விற்பனை ஆகத் தொடங்கியது. அமெரிக்கா முழுவதும் தொழிலகங்கள் தொடங்கப்பட்டன.

1895-ல் காண்ட்லர் பெருமையுடன், "இப்போது அமெரிக்காவின் ஒவ்வொரு மாநிலத்திலும் கோகா-கோலா கிடைக்கிறது!" என்று அறிவித்தார்.

கண்ணாடி தம்ளர்களில் விற்கப்பட்டு வந்த கோக் விரைவில் புட்டிக்குள் புகுந்து கொண்டது. நிறைய குளிர்பானங்கள் மார்க்கெட்டுக்கு வரவே, கோகா – கோலாவுக்கு என்று வித்தியாசமாக ஒரு பாட்டில் தேவைப்பட்டது. பாட்டிலின் இடுப்புப் பகுதி சிறிதே குறுகி, விரல்கள் வசமாகப் பிடிக்கும் வகையில் ஒரு பாட்டிலை உருவாக்கிக் கொடுத்தது ரூட் கிளாஸ் கம்பெனி. இது 1916ல். இதற்கு அமெரிக்க பேடன்ட் கிடைத்தது எப்போது தெரியுமோ? 1977ல்!

கோகா கோலா தயாரிப்பு உரிமை சில பல கைகள் மாறினாலும் அதன் விற்பனை உயர்ந்து கொண்டே வந்தது. விளம்பரங்கள் ஏராளமாகச் செய்யப்பட்டன. மருந்துக் கடை வாசல்களில் எல்லாம் பெரிய கட்-அவுட்டுகள். (ஜெ-க்கு முன்னோடி கோகா-கோலாதான்!) உலகெங்கும் அதன் பாட்டிலிங் சாம்ராஜ்யங்கள் பெருகின.

இரண்டாவது உலகப் போரின் போது, கோகா-கோலாக்காரர்கள் அமெரிக்கப் படை வீரர்களுக்கு ஒரு சலுகை அளித்தார்கள். ராணுவ உடை அணிந்த வீரர்கள், அவர்கள் எங்கே இருந்தாலும் 5 சென்ட் விலையில் கோகா-கோலா குடிக்கலாம். (ஐந்து பிலியன் பாட்டில்கள் இப்படி விற்பனை ஆயின!)

1988ல், ஓர் அமெரிக்க நிறுவனம் எடுத்த சர்வேயில், கோகா-கோலாதான் உலகிலேயே அதிகமாக அறியப்பட்ட, விரும்பப்பட்ட குளிர்பானம் என்ற தகவல் வெளியானது.

இந்தியாவில் 16 வருடங்களுக்குப் பிறகு, (ஜார்ஜ் ஃபெர்னாண்டஸையும் மீறி) கோகா-கோலா இப்போது நுழைந்து விட்டது. காரணம் மன்மோகன் சிங்கின் தாராளமயமாக்கல்தான். தடாலடியாக நுழைந்து, மற்ற பிராண்டுகளை மிரள வைத்துக் கொண்டிருக்கும் கோகா-கோலாவுக்கு இங்கே இடம் கொடுக்க வேண்டுமா என்று கேட்கப்படுகிறது. ஒரு குளிர்பானத் தயாரிப்புக்குப் பன்னாட்டு நிறுவனம் ஏன்?

"டேஸ்ட் சார், டேஸ்ட்! உலகம் முழுக்க இதுதான் உசத்தியானது என்று ஒப்புக் கொள்ளும் போது, நம் நாடு மட்டும் ஏன் இரண்டாம்பட்சத்தை ஏற்க வேண்டும்? எத்தனையோ விஷயங்களில் அவர்களைப் பார்த்துப் பிரமித்துப் போய் நிற்கிறோம். அவர்களுடைய வசதியும், வாழ்க்கையும் இங்கேயும் வராதா என்று ஏங்குகிறோம். கோகா-கோலா ஒரு சின்ன ஆறுதல்.

## அமெரிக்காவில் இருந்து தஞ்சைக்கு வந்த ருத்ராட்சமாலை!

தஞ்சை மாவட்டம் திருப்பாலத்துறையில் வசித்து வரும் எழுத்தாளர் கலாநிதி. இவருக்குப் பேனா நண்பர் அமெரிக்காவைச் சேர்ந்த ஹானலுலுவில் வசிக்கும் "ரெனால்டு டி ப்யூ. வயது 29. இவர் 130 அடி நீளமுள்ள ரூ.7 ஆயிரம் மதிப்புள்ள ருத்ராட்சமாலை ஒன்றை கலாநிதிக்கு அனுப்பியிருக்கிறார். தஞ்சைப் பெரிய கோயிலுக்கோ, அல்லது வேறு சிவாலயத்துக்கோ அன்பளிப்பாக வழங்குமாறு கேட்டுக் கொண்டுள்ளார். இதனை தினசரி நூற்றுக்கு மேற்பட்ட பக்தர்கள் வந்து தரிசித்துச் செல்கின்றனர்!

தகவல்: டி.எம்.முருகானந்தம்.

அவ்வளவுதான்!'' என்கிறார்கள் இதன் ரசிகர்கள்.

"நான் அறிந்தவரை இதில் BVO கலப்பு இல்லை. அதனால் உடலுக்கு ஊறு ஏதும் விளைவிக்காது. அதிலும் மிஞ்சி மிஞ்சிப் போனால் ஒரு நாளைக்கு இரண்டு கோகா- கோலா குடிப்பாரா ஒருவர்? அதனால் உடல்நலத்தைப் பொறுத்தவரை 'கோக்' ஒரு தடை அல்ல!'' என்கிறார் பிரபல மருத்துவர் ஒருவர். ஆயினும் 'ஆஸ்பரின்' போன்ற சில மாத்திரைகளைக் கோகா கோலாவுடன் கலந்து அருந்தும் போது ஒருவித போதை தருவதால்தான் இளைஞர்கள் விரும்புகிறார்கள் என்றும் சொல்கிறார்கள்.

எப்படியிருந்தாலும் 'இந்தியத் தண்ணீரை எடுத்து, இந்தியர்களிடமே விற்று, அமெரிக்கா பணத்தை எடுத்துக் கொண்டு போகிறது. இதுதான் கோகோ-கோலா' என்று ஜார்ஜ் பெர்னாண்டஸ் கூறுவதிலும் நியாயமிருக்கிறது!

காரணம், கோகோ-கோலாவும் பெப்சியும் இந்தியாவுக்குள் காலடி எடுத்து வைத்ததால், முற்றிலும் இந்தியாவிலேயே தயாரிக்கப் பட்ட குளிர்பானங்களின் விற்பனை கணிசமான அளவுக்குப் பாதிக்க ஆரம்பித்திருக்கிறது. அதோடு, பல கோடிக்கணக்கான ரூபாய்களைச் செலவழித்து, அந்த அந்நிய கம்பெனிகள் இரண்டும் செய்து கொண்டிருக்கும் விளம்பரங்களைப் பார்த்தால், இந்தியாவில் கோகோ-கோலா அல்லது பெப்சிகோலா மட்டும்தான் இருப்பது போன்ற பிரமையை ஏற்படுத்தி, மற்ற இந்திய குளிர்பானங்களையெல்லாம் மறக்கடிச் செய்கிற முயற்சியாகத்தான் தெரிகிறது.

இல்லையென்றால் ஒரு சராசரி இந்தியன் ஆண்டொன்றுக்கு மூன்று குளிர்பானங்கள் மட்டுமே குடிக்கிறான் என்கிற நிலையில், (அமெரிக்காவில் நானூறு!) இந்த அந்நியக் கம்பெனிகள் எந்த நம்பிக்கையில் இங்கே வந்துள்ளன? கூடிய விரைவிலேயே ஒரு சராசரி இந்தியன், பாரம்பரியமாகக் குடித்துக் கொண்டிருக்கும் மோர், பதனீர், இளநீர், எலுமிச்சை ஜூஸ் போன்ற ஆரோக்கியமான – விலை மலிவான – பானங்களையெல்லாம் கூட பின்னுக்குத் தள்ளி விடலாம் என்கிற நம்பிக்கையில்தான்!

உலகின் மிகப் பெரிய நுகர்வோர் சந்தைகளுள் ஒன்றான இந்தியாவுக்குள் நுழைய அயல் நாட்டு நிறுவனங்கள் துடித்துக் கொண்டிருக்கின்றன. நாம் விழிப்புடன் இல்லாவிட்டால் அவை நம்மையே விழுங்கிவிடும்!

**- எஸ்.வி.என்.**

# மணிக்கொடி

ஜோதிர்லதா கிரிஜா

நாட்டு விடுதலைப் போராட்டத்தில் ஆணுக்கு நிகராய்ப் பெண்ணும் பங்கேற்க வேண்டியதன் அவசியம் பற்றிப் பேசினாள் அஞ்சனா. மிதவாதம் இன்னும் ஐந்நூறு ஆண்டுகள் ஆனபிறகும் சுதந்திரம் பெற்றுத் தராது என்று கூறி, மிதவாதிகளைக் கடுமையாகச் சாடினாள். அதி தீவிரவாதிகள், கொல்லுவது என்பதை ஒரு கொள்கையாகக் கொள்ளவில்லை என்றும், தற்காப்பு, கட்டாயம், வேறுவழியற்ற நிலை ஆகியவற்றின் பொருட்டு மட்டுமே கொலை செய்வதாகவும், எனவே அவர்கள் பயங்கரவாதிகள் எனும் பெயரால் அழைக்கப்படலாகாது என்றும் பேசினாள். பேச்சின் இந்தக் கட்டத்தின் போது அவளுக்கு நரேந்திர நாத் பானர்ஜியின் ஞாபகம் மிக அதிகமாக வந்தது.

அந்தச் சிறிய கூட்டத்தில் ஐந்து பெண்கள் இருந்தார்கள். "நாடுதழுவிய இயக்கம் எதுவாக இருந்தாலும் ஆண்கள், பெண்கள் ஆகிய இருபாலரும் பங்கு பெற்றாலன்றி, அது வெற்றி பெறாது. என்று பெண் ஆணை விடத் தாழ்ந்தவள் என்ற எண்ணத்தை ஆண்களும் பெண்களும் கை விடுகிறார்களோ அன்று தான் நாடு உண்மையான சுதந்திரம் பெற்றதாக ஆகும். உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். 1905-ஆம் வருஷம் காசியில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் மகா நாட்டுக்கு நம் சுப்பிரமணியபாரதியார் சென்றிருந்த போது, சுவாமி விவேகானந்தரின் சிஷ்யையான சிஸ்டர் நிவேதிதாவைச் சந்தித்து உரையாடினார். மகாநாடு முடிந்து திரும்பும் போது வழியில் கல்கத்தாவில் இவர்களது சந்திப்பு நிகழ்ந்தது. சிஸ்டர் நிவேதிதா, 'உங்களுக்குக் கல்யாணம் ஆகி விட்டதா?' என்று நம் பாரதியாரை விசாரித்தார். 'ஆகி விட்டது. எனக்கு ஒரு பெண் குழந்தை கூட உண்டு' என்றார் பாரதியார். 'அப்படியானால் உங்கள் மனைவியைக் காங்கிரஸ் மகா நாட்டுக்கு நீங்கள் ஏன் அழைத்து வரவில்லை?' என்று நிவேதிதா அம்மையார் வினவ, நம் பாரதியார், 'பொது இடங்களுக்கெல்லாம் நம் ஆண்கள் தங்கள் மனைவிமாரை அழைத்துச் செல்லுவதில்லையே' என்றார். 'என்னது? அழைத்துச் செல்லுவதில்லையா? ரொம்ப அழகாய் இருக்கிறது உங்கள் பேச்சு. சுதந்தரத்தைப் பற்றி 'நீங்கள்' பேசுகிறீர்களா? நல்ல வேடிக்கை. மக்களின் ஒரு பாதி சுதந்திரம் மறுக்கப்படும் போது மறுபாதிக்கு அது எவ்வாறு கிடைக்கும்? நீங்கள் வேறு, உங்கள் மனைவி வேறு என்று ஒருபோதும் எண்ணாதீர்கள். அவளை உங்கள் வலக்கையாகக் கருதி, உங்கள் முழு மனத்தாலும் அவளை நேசியுங்கள். பாரதமாதா அடிமைச் சங்கிலியில் கட்டுண்டிருக்கிறாள். அவள் குழந்தைகள் எல்லாருமே துணிந்து போராடித்தான் அவளை விடுதலை பெறச் செய்ய வேண்டும்' என்றார். இதற்குப் பிறகுதான் நம் பாரதியார் பெண் விடுதலையில் அதிக நாட்டம் கொண்டார் என்று சொல்லுகிறார்கள். ஆக, இது போன்ற பொதுப் போராட்டங்களில் பெண்களும் - படித்த பெண்களாவது - கண்டிப்பாக ஈடுபட வேண்டும். தேச விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொள்ளும் பெண்களின் எண்ணிக்கை கொஞ்சம் கொஞ்சமாகவேணும் அதிகரிக்க நாம் முயற்சி எடுக்க வேண்டும்... வந்தே மாதரம்..." என்று பேசி விட்டு அஞ்சனா அமர்ந்தாள். மங்கலான வெளிச்சத்திலும் நெருப்புக் கங்குகள் போல் ராமசாமியின் பெரிய விழிகள் ஒளிர்ந்து கொண்டிருந்ததை ஓரத்து விழிகளால் பார்த்து ரசித்தபடியே அவள் முகத்து வேர்வையைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டாள். ராமசாமி ஒரு பாராட்டுப் புன்னகையை அவளை நோக்கி வீசி விட்டுச் சத்தம் எழாத படி கைகளை இணைத்துத் தட்டினார். பெண்கள் அனைவரும் அவளைப் பார்த்து வாயாரச் சிரித்துத் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

அடுத்து மணவாளநாயுடு பேசினார் தமக்கு இலக்கணமாகவெல்லாம் பேசத் தெரி



யாது என்ற பீடிகையுடன் பேச்சுத் தமிழில் அவர் கிண்டலும் கேலியும் ஆவேசமுமாய் வெளுத்துக் கட்டியதை அனைவரும் வெகுவாக ரசித்தனர்.

"நாயுடுகாரு ஆளுக்குப் பத்து நிமிஷம் - ஜாஸ்தி போனா பதினஞ்சு நிமிஷந்தாங் காணும் ஒதுக்கி இருக்கு. நீர் பாட்டுக்குப் பேசிண்டே போகாதேயும். பெண்கள் காலா காலத்துல அவங்கவங்க வீட்டுக்குப் போய்ச் சேரணும்..." என்று கூட்டத்திலிருந்து ஒருவர் குரல் கொடுத்ததும், மணவாளநாயுடு மிகவும் விரைவாகத் தமது சொற்பொழிவை முடித்து விட்டு, "வந்தே மாதரம்" என்று குரல் எழுப்பி உட்கார்ந்தார்.

கடைசியாக வந்தனா எனும் பெண் நன்றி கூற, கூட்டம் முடிந்தது. மணவாள நாயுடு, "ஏம்மா, உங்க பேரு வந்தனான்னு இருக்கிறதுனாலதான் வந்தனம் கூற உங்களைத் தேர்ந்தெடுத்தாங்களோ?" என்று கூறித் தமது நகைச்சுவைக்குத் தாமே அட்டகாசமாய்ச் சிரித்தார்.

**வ**ழக்கம் போல் எல்லாரும் அவரவர் பாதைகளில் பிரிந்து செல்ல, மணவாளனையும் ராமசாமியையும் அஞ்சனா தன் காரில் ஏற்றிக் கொண்டாள். முதலில் மணவாளன் இறங்கிக் கொண்டார். மணவாளனும் இன்னொருவரும் பக்கத்துப் பக்கத்து வீடுகளில் வசித்ததால் இருவரும் ஒருசேரக்

கடைசியில்தான் இறங்குவார்கள். இன்று அந்த நபர் வராததோடு மணவாளன் தாம் கடைக்குப் போக வேண்டும் என்று சொல்லி ஒரு பெரிய கடை வாசலில் இறங்கிக் கொண்டார். இதற்கு முன்னர் நிகழாத வகையில் காரில் அஞ்சனாவும் ராமசாமியும் மட்டுமே இருந்தனர். கார்க் கண்ணாடியில் தெரிந்த அவரது முகத்தைத் தன்னையும் மீறிச் சில தடவைகள் அஞ்சனா பார்த்து விட்டாள். காரில் பின்னிருக்கையில் உட்கார்ந்து தெருவை வேடிக்கை பார்த்தபடி வரும் ராமசாமி தன் கணவராக இருப்பின், முன்னிருக்கையில் தனக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டு பேசிச் சிரித்தபடி வருவார் என்ற எண்ணம் அவளைத் தாக்கியது. அவள் சிலிர்த்துக் கொண்டாள். தகாத எண்ணம் என்று மனத்துள் சொல்லித் தன்னைக் கண்டித்துக் கொள்ளுபவள் போல் தலையைக் குலுக்கிக் கொண்டாள்.

அதுநாள் வரையில் தாம் உணர்ந்தறியாத ஓர் இறுக்கத்துக்கு ராமசாமியும் ஆளாகி இருந்தார். அஞ்சனாவுடன் தனியாகக் காரில் பயணம் செய்ய நேர்ந்த நிலை அதற்குக் காரணமாக இருக்கலாம் என்ற எண்ணம் வந்தது. பின்னிருக்கையில்தான் அமர்ந்திருக்கிறோம் என்றாலும் நாலு பேர் பார்த்தால் என்ன பேசுவார்களோ என்ற அச்சம் உடனெழுந்தது. ஊர் வம்பால் அந்தப் பெண் பாதிக்கப்படாதிருக்க வேண்டும் என்ற கவலை தோன்றியது.

தமது வீட்டைக் கார் கடந்து விட்டதை அப்போதுதான் ராமசாமி கவனித்தார். "மிஸ் அஞ்சனா, எங்கே யோசனை? கார் எங்காத்தைத் தாண்டிடுத்து" என்றார் கூவலாக. அஞ்சனா சட்டென்று பிரேக் போட்டுக் காரை இரண்டு வீடுகள் தள்ளி மூன்றாவது வீட்டு வாசலில் நிறுத்தினாள்.

"ஸாரி" என்றாள்.

அந்த வீட்டு வாசலில் வீட்டுக்கார அம்மாள் நின்றிருந்தாள். அவள் பார்வை ஆழமாக இருவர் மீதும் விழுந்தது.

## 16

சிவப்பிரகாசத்தின் திடீர் வருகை அதிகாரபூர்வமானதாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணினார் ராஜாராமன். முந்தைய வருகையின் போது அரைகுறையாகச் சோதனை செய்து விட்டுக் கடமையைச் செய்ததாய்ப் பேர் பண்ணி விட்டுப் போன அவன், இன்று முனைப்புடன் அதைச் செய்வதற்கு வந்திருக்கிறானோ என்று நினைத்த போதே, கோட்டுப் பைக்குள் தாம் வைத்துக் கொண்டிருந்த நரேந்திரநாத் பானர்ஜியின் கடிதம் ஒரு சுமையாய்க் கனக்கத் தொடங்கியது போல் அவர் உணர்ந்தார்.

மௌனமாகவே அவர் சுட்டிக்காட்டிய நாற்காலியில் உட்கார்ந்து கொண்ட சிவப்பிரகாசம், "எப்படி இருக்கீங்க, சார்?" என்றான் புன்சிரிப்புடன்.

"நன்னாருக்கேன், சிவப்பிரகாசம். நீங்க எப்படி இருக்கீங்க?"

"நானும் நல்லாருக்கேன், சார்."

"உங்க தம்பி, ஞானப்பிரகாசம்?"

"அவனும் நல்லாருக்கான்."

"அவரு வரல்லியா?"

"இல்லே சார். இது பிரைவேட் விசிட், சார். எனக்குத்தான் உங்களைப் பார்க்கணும்."

"ஏதாவது கேஸ் விஷயமாவா?"

"இல்லே சார்...." என்று சொல்லி விட்டு அவன் அவரைப் பார்த்துச் சிரித்தான். அவர் மௌனமாக அவனைப் பார்த்தபடி இருந்தார்.

"....எனக்கும் உங்க இயக்கத்துல சேரணும்னு, சார் நான் போலீஸ் டிபார்ட்மென்டுல இருக்கிறதால அங்ஙன இருந்தபடியே உங்களுக்கு மறைமுகமான உதவிகளைச் செய்ய முடியும்னு நினைக்கிறேன்."

ராஜாராமன் சட்டெனத் தோன்றிய வியப்புக் கலந்த மலர்ச்சியுடனும் ஆழமான புன்சிரிப்புடனும் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"நிஜமாவா, சிவப்பிரகாசம்? நிஜமாவா சொல்றீங்க? இல்லே, என்னை ஆதாரங்களோட பிடிக்கிறதுக்கு ஏதானும் சதியா?" என்று கேட்டு விட்டு அவர் வாய் விட்டு நகைத்தார்.

"நான் சதிகாரனா, இல்லாட்டி நிஜமாவே சொல்றேனாங்கிறது உங்க உள்மனசுக்குத் தெரியும், சார்."

"தெரியுது, சிவப்பிரகாசம். நான் கேட்டது வேடிக்கைக்கு. தப்பா எடுத்துக்காதீங்க. அது சரி, இப்படி எங்க இயக்கத்துல வந்து சேர்றேன்கிறீங்களே, அதனால உங்களுக்குத் தொல்லை ஏற்படாதா? உங்க டிபார்ட்மென்ட்ல கண்டுபிடிச்சுட்டாங்கன்னா?"



அதிகாரி (அமைச்சரிடம்) : 'சொன்னதைச் செய்வோம்' என்று சொல்லி நீங்க மந்திரியானது உண்மைதாங்க; அதுக்காக மரம் நடு விழாவிலே மரம்தான் நடுவேன் செடி நடமாட்டேன்னு பிடிவாதம் செய்தா எப்படிங்க?''

- எஸ். ராஜேந்திரன்



''மானேஜர் காலையிலிருந்து 'சம்திங் ராங் சம்திங் ராங்' அப்படின்னு சொல்றாரே, ஏன்?''

''அவருக்கு வர வேண்டிய சம் திங்கை தவறுதலா கிளார்க் வாங்கிட் டாராம்!''

- கி. சந்திரமோகன்

"கண்டுபிடிக்க முடியாதபடி ஜாக்கிர தையா இருப்பேன் சார், நான் ரகசியப் போலீஸ் இலாகாவில இருக்கிறதுனால மாறு வேஷங்கள்ல சுத்தற வசதி எனக்கு உண்டு. அதை எங்க டிபார்ட்மெண்டையே ஏமாத்த நான் பயன்படுத்திப்பேன்."- சிவப்பிரகாசம் சிரித்தான்.

"உங்க தம்பிக்கு இது தெரியுமா? அவரும் இதுல சேர்றதா இருக்காரா, சிவப்பிரகாசம்?"

"அவனுக்குத் தெரியாது, சார் அவன் ஒரு டைப். அவங்கிட்ட நான் சொல்லல்லே. டிபார்ட்மெண்டுக்காக உழைச்சுப் பெரிசா முன்னுக்கு வரணும்கிற ஆர்வம், அவங்கிட்ட நிறைய இருக்கு. அவன் என் வழிக்கு வர மாட்டான்னு எனக்கு நல்லாவே தெரியும். அதனால அந்தப் பேச்சை அவன்கிட்ட நான் எடுக்கவே இல்லே. அது ஆபத்தாக் கூட முடியலாம்."

"அப்ப? ரெண்டு பேரும் எதிர் எதிர்ப் பாசறைகள்ல இருக்கப் போறீங்க?"

சிவப்பிரகாசம் புன்னகை புரிந்தான்.

"ஒருநாள் உன் தம்பியே திடீர்னு உன்னைப் பத்திக் கண்டுபிடிச்சுடறான்னு வச்சுக்க. அப்ப?"

"இப்ப பேசின மாதிரியே நீங்க என்னை 'நீ'ன்னே பேசுங்க, சார்."

"ஐ'ம் சாரி, சிவப்பிரகாசம். பேச்சுவாக்குல நீன்னு வந்துடுத்து."

"அப்படியே இருக்கட்டும். சாரி எல்லாம் சொல்லாதீங்க, சார்... அப்படியே அவன் கண்டுபிடிக்கிறான்னு வையிங்க. அண்ணன் கிறதுக்காக அவன் ஒருக்கா என்னைக் கண்டுக்காம இருந்துடக்கூடும். இல்லாட்டி அண்ணன்னு கூட பார்க்காம தன் கடமையைச் செஞ்சான்கிற பேருக்கும், பிரமோஷனுக்கும் ஆசைப்பட்டு அவன் என்னைக் காட்டிக் கொடுத்தாலும் கொடுக்கக்கூடும். அதுக்கு நான் தயாரா இருக்க வேண்டியதுதான், சார்! வேற வழியே இல்லே. அப்படியெல்லாம் யோசிச்சு யோசிச்சுத் தயங்கிட்டிருந்தா இது மாதிரி இயக்கத்துலயெல்லாம் சேர்ந்து வேலை செய்ய முடியுமா, சார்?"

"அப்ப, எங்க காங்கிரஸ் கட்சியில நீயும் ஒரு மெம்பர் ஆறே?"

''நம்ம காங்கிரஸ் கட்சின்னு சொல்லுங்க, சார்."

"ரைட். நம்ம காங்கிரஸ் கட்சி. இன்னும் ஒரு முக்கியமான கேள்வி, சிவப்பிரகாசம்."

"கேளுங்க, சார்."

"காங்கிரஸ்ல சேரணும்கிற எண்ணம் எப்படி உனக்கு வந்தது? என்ன காரணம்?"

"என்ன சார் இது? நீங்க எதுக்கு அதுல இருக்கீங்களோ அதே காரணத்துக்காகத்தான். வெள்ளைக்காரங்களை இந்த நாட்டை விட்டு வெளியேத்தணும்கிற ஒரே காரணத்துக்காகத்தான். சார், நான் ஒரு துண்டுப் பிரசுரம் படிச்சேன்... அதுவும் ஒரு காரணம்... இந்தாங்க, நீங்களும் பாருங்க..." என்றபடி சிவப்பிரகாசம் தனது டயரியிலிருந்து அதன் அட்டை மடிப்பில் செருகி வைத்திருந்த இளஞ்சிவப்பு வண்ணத் தாள் ஒன்றை எடுத்து விரித்து அவரிடம் கொடுத்தான்.

அதைக் கையில் வாங்கியதுமே ராஜாராமன் சிரித்தார் : "இது நாங்க அச்சடிச்சு விநியோகிச்ச நோட்டீஸ்தான், சிவப்பிரகாசம். இன்னொரு வேடிக்கையான விஷயம் சொல்லட்டுமா?" என்று தொடங்கிய அவர் அன்று அவன் தன் தம்பியுடன் தமது வீட்டைச் சோதனை இட வந்த போது கூடத்தில் தம் மகள்களுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தவன் நரேந்திரநாத் பானர்ஜி என்பதையும் அவன் சம்பந்தப்பட்ட விஷயங்களையும் அவனிடம் விரிவாகத் தெரிவித்தார். லண்டனிலிருந்து பிரான்சுக்குத் தப்பி ஓடிய தம் மகன் தற்போது எங்கிருக்கிறான் என்பதே தெரியவில்லை எனக் கூறிக் கண்கலங்கினார்.

அப்போது அவரது அறைக் கதவு தட்டப்பட்டது. அவசரமாய்க் கண்களைத் துடைத்துக் கொண்டு அவர் எழுந்து போய்க் கதவைத் திறந்தார். கதவுக்கு வெளியே காவல் துறை அதிகாரி ஒருவர் நின்றிருந்தார். ஆங்கிலோ இந்தியர் என்பது பார்த்த மாத்திரத்தில் தெரிந்தது. உடுப்பிலிருந்து அவர் டெபுடி சூப்பரின்டென்டென்ட் என்பதும் அவருக்குப் புரிந்தது. ராஜாராமன், "குட்மார்னிங்" என்று கூறி விட்டுத் திரும்பிப் பார்த்தார். சிவப்பிரகாசம் எழுந்து நின்று கொண்டிருந்தான். டி.எஸ்.பி.யைப் பார்த்ததும் விறைப்பாக நின்று சல்யூட் அடித்தான். அந்தச் சில கணங்களுக்குள் ராஜாராமன் ஏதேதோ எண்ணிக் கலங்கிப் போனார். சிவப்பிரகாசத்தை நம்பவும் முடியாமல் நம்பாதிருக்கவும் முடியாமல் அவர் ஆடிப் போனார்.

(தொடரும்)

ராமசாமி பற்றிய இனிய எண்ணங்களில் தன்னை மறந்து காரை அவரது வீட்டைத் தாண்டி ஓட்டி விட்ட அஞ்சனா வெட்கமடைந்தாள். அவரது வீட்டைத் தாண்டி மூன்றாவது வீட்டு வாசலில் கார் நின்றதும் அவ்வீட்டு வாசலில் நின்றிருந்த அம்மாள் விழிகளை விரித்துப் பார்த்தாள். அஞ்சனாவுக்குத் தவிப்பாகப் போயிற்று.

"ஐ'ஆம் சாரி. வண்டியை ரிவர்ஸ்ல எடுக்கட்டுமா?"

"வேணாம். நான் இறங்கி நடந்து போய்க்கிறேன்" என்றவாறு கார்க் கதவின் கைப்பிடியைத் தொடப் போன ராமசாமியிடம்,

காரின் பின்புறத்தையே வெறித்துப் பார்த்தவாறு சில விநாடிகள் நின்ற அவ் வீட்டுக்கார அம்மாள் செல்லம்மா, 'கலி முத்திப் போச்சு' என்று சொன்னபடி தன் வீட்டுக்குள் போனாள். குஞ்சம்மாவின் வீட்டு வாசற்பக்கம் எட்டிப் பார்த்து அங்கு யாரும் இல்லை என்பதைத் தெரிந்து கொண்ட பிறகே உள்ளே போனாள்.

காரை ஓட்டிக் கொண்டிருந்த அஞ்சனா சொல்லி முடியாத மகிழ்ச்சியில் இருந்தாள்.

சில நொடிகள் மவுனத்தில் கடந்த பின்னர் ராமசாமி தொண்டையைச் செருமிக் கொண்டார்.



"வேணாம். ஒரு நிமிஷம்... ஒண்ணு பண்றேளா? இன்னிக்கு எங்கூட எங்காத்துக்கு வாங்களேன். எங்கப்பா உங்களைப் பார்க்கணும், பார்க்கணும்னு சொல்லிண்டே இருக்கார். நானும் இதோ அதோன்னுண்டிருக்கேன். எப்பவும் கடைசியா நீங்க இறங்கறதில்லே. இன்னிக்குத் தோதா அமைஞ்சிருக்கு. என்ன சொல்றேள்? ஆத்துல சொல்லிட்டுத்தான் வரணும்னா வண்டியை ரிவர்ஸ்ல எடுக்கறேன்..." என்றாள் அஞ்சனா.

'ஆத்துல சொல்லிட்டுத்தான் வரணும்னா...' என்னும் சொற்கள் தம்மைக் கேலி செய்தாற்போல் தோன்றியதில், ராமசாமி, "அதெல்லாம் ஒண்ணுமில்லே. இப்பவே வரேன்," என்று கூற, கார் விரைவு எடுத்துப் பறந்தது.

"உங்ககிட்ட ஒரு பெர்சனல் விஷயம் பேசணும். பேசலாமா? தப்பா எடுத்துக்க மாட்டேளே?"

அஞ்சனாவுக்கு இதயம் படபடத்தது. "தப்பா எதுக்கு எடுத்துக்கிறது? சும்மா சொல்லுங்கோ."

"....நான் பேசறது கொஞ்சம் அதிகப்பிரசங்கித்தனமானதுதான். பிடிக்கலைன்னா, வாய் விட்டு வெளிப்படையாச் சொல்லிட்டா, மேற்கொண்டு பேச மாட்டேன், மிஸ் அஞ்சனா."

"நான் உங்களைத் தப்பாவே எடுத்துக்க மாட்டேன், சார், சொல்லுங்கோ."

"பொம்மனாட்டிகள்கிட்ட அவா வயசைக் கேக்கக் கூடாதுன்னு சொல்லுவா. அது நாகரிகம் இல்லே. இருந்தாலும் கேக்கறேன்.

உங்களுக்கு ஒரு இருபத்தஞ்சு வயசு இருக்குமா?"

"கிட்டத்தட்ட கரெக்டாச் சொல்றேள். இருபத்தஞ்சு முடிஞ்சு இருபத்தாறாவதுல இருக்கேன் இப்ப. ஏன், சார்?"

"காலாகாலத்துல கல்யாணம் பண்ணிண்டுடணும்மா. ஊர்ல நாலு பேர் நாலு விதமாப் பேசுவா. தவிர..."

"ஒரு நிமிஷம். இப்ப உங்களோட நான் கார்ல போறதைப் பார்க்கிறவா கூடத்தான் நாலு விதமாப் பேசுவா. ஆனா நமக்குத் தெரியுமோல்லியோ நாம தப்பு எதுவும் பண்ணலைன்னு?"

ஜோதிர்லதா கிரிஜா

கணும். என்னை மன்னிச்சுடுங்கோ..."

"பெரிய பெரிய வார்த்தையெல்லாம் சொல்லாதீங்கோ, மிஸ் அஞ்சனா. நான் இப்ப உரிமை எடுத்துண்டு பேசினது ஒரு சகோதரன் மாதிரிதான்... என்ன இருந்தாலும்..."

அவரை மேலே பேச விடாமல் அஞ்சனா இடைமறித்தாள். "நான் உங்களை சகோதரன்னு நினைக்கல்லே, சார்... ஒரு நண்பர்னு



நெஞ்சில் பளாரென்று அடி வாங்கியது போல் அவருக்கு இருந்தது. முகம் கணத்துக்கும் குறைவான நேரத்தில் களை இழந்து போயிற்று. என்னதான் படித்த பெண்ணானாலும் இப்படி வெடுக்கென்றும் பளிச்சென்றும் அவள் எதிர்க்கேள்வி போடுவாள் என்பது அவரது எதிர்பார்ப்புக்கு அப்பாற்பட்ட விஷயமாக இருந்ததால், அவர் அதிர்ந்து போனார். 'ஏன் இப்படி ஒரு பேச்சைத் தொடங்கினோம்?' என்று ஆகிவிட்டது அவருக்கு. மேற்கொண்டு பேச்சை எப்படித் தொடருவது என்பது புரியாத கனத்த மவுனத்தில் அவர் ஆழ்ந்து போனார்.

சொல்லி முடித்த மறு கணமே அப்படி ஓர் எதிர்க் கேள்வியைத் தான் தொடுத்திருக்கலாகாது என்று அஞ்சனாவுக்குத் தோன்றியது.

"ஐ'ஆம் சாரி, சார். நான் அப்படி வெடுக்னு கேட்டிருக்கக் கூடாது. நீங்க அந்தப் பேச்சை எடுத்தது என்னோட நல்லதுக்காக, ஒரு நண்பர்ங்கிற முறையிலன்னு புரிஞ்சுண்டு நான் நாவடக்கத்தோட பதில் சொல்லி இருக்

தான் நினைக்கிறேன். கூடப் பிறந்தா மட்டுந்தான் சார் சகோதரன். அது என்னமோ தெரியல்லே. முன்னபின்ன தெரியாதவாளை சகோதரன், சகோதரின்னு சொல்றதெல்லாம் எனக்கு அபத்தமா தோண்றது..." - இவ்வாறு சொன்ன போது அஞ்சனாவின் நெடிய பார்வை கார்க் கண்ணாடி வழியே அவர் பார்வையில் கலந்தது. இன்னதென்று புரியாத குழப்பத்தின் தாக்குதலில், ராமசாமி அவள் கண்களைக் கணநேரத்துக்கு மேல் பார்த்துக் கொண்டிருக்க முடியாமல் கார்க் கதவு வழியாகத் தெருவைப் பார்த்தார்.

"சரி, சார். இப்ப சொல்லுங்கோ. என்ன கேக்க வந்தேள்?"

"வேணாம்மா. அயல் ஸ்திரீகள்கிட்ட எனக்குப் பேசத் தெரியல்லேன்னு நினைக்கிறேன், விட்டுடுங்கோ...."

அஞ்சனா காரின் வேகத்தைக் குறைத்தாள். தெருவில் ஆள்நடமாட்டமோ பிற வண்டிகளின் போக்குவரத்தோ அந்த நேரத்தில் இல்லை. மெதுவாகத் தலை திருப்பினாள். சிறுத்துப் போன முகத்துடன் உட்கார்ந்து கொண்டிருந்த அவரைப் பார்த்ததும்

அவள் மனம் கரைந்து போனது. உணர்ச்சி வயப்பட்டு விட்ட அஞ்சனா, இன்னது செய்கிறோம் என்ற உணர்வு அற்றுப் போய்த் தன்னிருக்கையின் முதுகில் சற்றே ஒதுங்கிப் பதிந்திருந்த அவரது கையில் தன் இடக் கையை வைத்து, "ஐம் சாரி... ப்ளீஸ். சொல்ல வந்ததை மனசு விட்டுச் சொல்லிடுங்கோ" என்றாள்.

ராமசாமி பதற்றத்துடன் தமது கையை இழுத்துக் கொண்டார். அப்போதுதான் அஞ்சனாவுக்குத் தனது செய்கையின் அதீதம் புரிந்தது. அவள் முகம் சிவந்து விட்டது.

"மறுபடியும் இதுக்காகவும் சேர்த்து சாரி, சார். நான் வேணும்னுட்டு செய்யல்லே, சார். தப்பா எதுவும் எடுத்துக்காதீங்கோ... சீக்கிரம் நான் கல்யாணம் பண்ணிக்கணும்னு சொல்ல வந்தேள், அதானே?"

ராமசாமிக்கு நெற்றியில் சூடு கண்டது. 'என்ன பெண் இவள்! கொஞ்சம் கூட யோசிக்காமல் பிற ஆடவனின் கையைத் தொட்டு விட்டு 'சாரி' என்கிறாளே. பெண்கள் நிறையப் படித்தால் பால்பேதம் கூடப் போய் விடுமோ...?' அவர் சிரமப்பட்டுத் தம்மை ஒரு நிலைப்படுத்திக் கொண்டு பேசினார் :

"ஆமாம்மா! எனக்குத் தெரிஞ்ச நல்ல பையன் ஒருத்தன் இருக்கான். உங்க அப்பா கிட்ட அவனைப் பத்திப் பேசலாமோன்னு பார்த்தேன். உங்ககிட்ட ஒரு வார்த்தை முன் கூட்டி கேட்டுத் தெரிஞ்சு வெச்சுக்காம அந்தப் பேச்சை உங்கப்பாகிட்ட நான் எடுக்கப்படாதில்லியா? அதான் கேட்டேன்..." என்றார் புன்னகையுடன்.

கார்க் கண்ணாடியில் அவரைப் புன்னகையுடன் ஏறிட்ட அஞ்சனா, சரியாக அரை நிமிட மவுனத்துக்குப் பிறகு, "நான் கல்யாணமே பண்ணிக்கிறதா இல்லே, சார்" என்றாள். கார் இப்போது அதிக விரைவு எடுத்து ஓடலாயிற்று.

"பின்னே சரிம்மா" என்று சுருக்கமாய் எதிரொலித்து விட்டு மவுனமானார் அவர். விரிவாக அதுகுறித்துத் தன்னுடன் வாதாடுவார் என்று எதிர்பார்த்த அஞ்சனாவுக்கு அவரது இரண்டு சொல் பதிலும் மவுனமும் தாங்கமுடியாத ஏமாற்றத்தைத் தந்தன. அதை ஏற்க விரும்பாதவளாக, "கல்யாணம் பண்ணிண்டா அப்புறம் காங்கிரஸ், கீங்கிரஸ்னெல்லாம் வெளியே வந்து சேவை செய்ய முடியுமா, சார்? அதான்" என்றாள்.

அவர் புன்னகை பூத்தார். "நீங்க சொல்றது ஓரளவுக்கு உண்மைதான்."

"ஓரளவுக்கு இல்லே சார், முழுக்க முழுக்க. அப்பாவையும் அம்மாவையும் திருப்திப்படுத்தறதுக்காகக் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு வச்சுக்குங்கோ. எனக்கு வர்றவன் என்னோட நடவடிக்கைகளுக்கு எதிர்ப்புக் காட்டாதவனா இருக்கணுமே? இப்ப உங்க வீட்டையே எடுத்துக்குங்கோ. உங்க மிஸஸுக்கு நீங்க காங்கிரஸ்ல இருக்கிறது பிடிக்காட்டாலும், உங்களால அவர் அபிப்பிராயத்தைச் சட்டை பண்ணாம உங்க வழியில போக முடியறது. ஆனா ஒரு பொண்ணோட நிலைமை இப்படி இல்லியே? புருஷனோட அபிப்பிரயாத்துக்கு மாறா நடந்துண்டுட்டு இந்த நாட்டில ஒரு பொம்மனாட்டியால எதிர்நீச்சல் போட்டு மீள முடியுமா, சார்? சொல்லுங்கோ. அதுக்கு என்ன வழி? எனக்கு வர்ற புருஷன் உங்களை மாதிரி இருக்கணும். அது ஒண்ணுதான் வழி..."

இந்தச் சொற்களைக் கேட்ட மறு வினாடியில் தம் விழிகளைத் தாழ்த்திக் கொண்டார் ராமசாமி. ஏற்கெனவே சிவந்த முகம் மேலும் சிவந்து விட்டது.

அஞ்சனா, சொல்ல வந்ததைச் சொல்ல மறந்து, நினைவுபடுத்திக் கொண்டவள் போல், "அதாவது அந்த ஆளும் தேசபக்தி உள்ளவராகவும், பொண்டாட்டியையும் தேச

சேவை செய்ய அனுமதிக்கிறவராகவும் இருக்கணும்... இல்லியா?'' என்றாள்.

கார் ஓடிக் கொண்டிருந்தது. அவர் பதில் சொல்லச் சில வினாடி நேரம் அவகாசம் கொடுத்த பிறகு, அவர் ஒன்றுமே சொல்லாதிருக்கவே, "என்ன சார் பேசாம இருக்கேள்? நான் சொல்றது சரியா இல்லியா?'' என்று சிரித்தாள் அஞ்சனா.

"ரொம்பக் கரெக்டும்மா.''

காரை அவள் தன் வீட்டுக்கு முன்னால் நிறுத்திய பிறகும் அதிலிருந்து இறங்காமல் இருந்தார் ராமசாமி. ''என்ன சார் யோசனை? எங்காம் வந்தாச்சு'' என்று அவள் சிரித்ததும் அவர் இறங்க முற்பட்டார்.

# 17

காலணிகளை வழிநடையில் உதறி விட்டு, ராமசாமியும் அஞ்சனாவும் அந்தப் பெரிய பங்களாவுக்குள் நுழைந்தார்கள். கூடத்தில் சோபா ஒன்றில் பத்திரிகை படித்த படி உட்கார்ந்திருந்த பாமா இருவரையும் பார்த்ததும் எழுந்து கொண்டாள்.

"அப்பா வந்தாச்சா?'' என்ற அஞ்சனா, "வாங்க, சார் இதுதான் எங்கம்மா...'' என்று தாயை ராமசாமிக்கு அறிமுகப்படுத்தினாள்.

ராமசாமி, "நமஸ்காரம்'' என்றார் கைகளைக் கூப்பி.

"இப்பத்தான் அஞ்சு நிமிஷத்துக்கு முந்தி வந்தார். காலலம்பப் பின்கட்டுக்குப் போயிருக்கார்.''

அப்போது மேல்துண்டில் முகமும் ஈரக் கைகளையும் துடைத்தவாறு ராஜாராமன் அங்கு வந்தார். ராமசாமி எழுந்து நின்றார். பாமா உள்ளே போனாள்.

"அப்பா இவர்தான் மிஸ்டர் ராமசாமி.''

ராஜாராமன் விரைந்து சென்று அவருடைய இரு கைகளையும் பிடித்துக் குலுக்கினார்.

"உட்காருங்கோ, உட்காருங்கோ. ரொம்ப நாளா உங்களைச் சந்திக்கணும்னு. இன்னிக்குத்தான் வாய்ச்சுது...'' என்றபடி அவரும் உட்கார்ந்தார்.

''நான் உள்ளே போய்க் காப்பிக்குச் சொல்லி விட்டு வறேம்ப்பா.''

"காப்பி குடிக்கிற நேரமா இது? வேணாம், மிஸ் அஞ்சனா.''

''முதமுத எங்காத்துக்கு வந்திருக்கேள். நன்னாருக்கே?'' என்றவாறு அஞ்சனா விரைந்து உள்ளே சென்றாள்.

"அம்மா அவருக்குக் காப்பி வேணும்.''

''கலந்துண்டே இருக்கேன். நீ வந்து சொல்லணுமா என்ன? உங்கப்பா வேணாம்னுட்டார். இருந்தாலும் அவருக்கும் அரைகப் கலக்கறேன். நீயும்குடி. பேசி முடிச்சுட்டுச் சாப்பிட வர்றதுக்குக் கொஞ்ச நாழியாகுமோல்லியோ? நீ போ. நான் கொண்டு வரேன்.''

''நல்ல அம்மா'' என்று பாமாவின் கன்னத்தில் தட்டினாள் அஞ்சனா.

"பேசிப் பேசியே அப்பாவும் பொண்களும் அம்மாவை ஏமாத்துங்கோ.''

அஞ்சனா சிரித்துக் கொண்டே கூடத்துக்குப் போனாள். போய் ராஜாராமனுக்கு அருகே அமர்ந்து கொண்டாள். மூவரும் ஆங்கிலத்தில் உரையாடினார்கள்.

"மிஸ்டர் ராமசாமி இப்படியே நாம் கூட்டங்கள் போட்டுப் பேசிக் கொண்டிருந்தால் மட்டும் போதுமென்று நீங்கள் நினைக்கிறீர்களா? உருப்படியாக ஏதாவது செய்ய வேண்டாமா? நம்மைப் பார்த்து வெள்ளைக்காரன் பயப்படும்படி ஏதாவது செய்தாலொழிய நரேந்திரநாத்தின் நடவடிக்கைகள் மாதிரி - அவனுக்கு நம்மீது பயம் வருமா?''

"வராதுதான். ஆனாலும், நாம் தற்போது செய்ய வேண்டியதெல்லாம் பிரசாரம் மட்டுமே என்பது என் கருத்து. பிரசாரத்தால் முதலில் மக்கள் மனங்களில் தேசபக்தியை விதைக்க வேண்டும். அதன் பிறகு நாடு முழுவதும் பரவலான அளவிலும் அதிகமான எண்ணிக்கையிலும் வெள்ளைக்காரனை அச்சுறுத்த வேண்டும். எங்கோ இங்கொன்றும் அங்கொன்றுமாக நடக்கும் பயங்கர

## அருள்வாக்கு

**ஒரு நல்ல காரியம் நடக்க வேண்டுமானால் அதை மூன்று தினுககளில் நடக்குமாறு பண்ணலாம். ராஜாங்கம் உத்தரவு போடுவது போலக் கட்டளை செய்வது ஒன்று. இதற்குப் ''பிரபுஸம்மிதை'' என்று பெயர். பிரபுவான யஜமானன் வேலைக்காரனுக்கு ஆர்டர் பண்ணுவது பிரபுஸம்மிதை. பண்ணாவிட்டால் தண்டனை உண்டேயென்று, பிடித்தாலும், பிடிக்காவிட்டாலும் பயத்தோடு கட்டளைப் பிரகாரம் காரியத்தைப் பண்ணியாக வேண்டும். இப்படி அதிகார ஸ்தானத்திலிருந்து கொண்டு உத்தரவாகப் போடாமல் ஒரு சிநேகிதன் நம்மிடம் ஒரு காரியத்தைச் செய்யச் சொன்னாலும் செய்கிறோம். இங்கே பயம் இல்லை. அன்பாலேயே செய்கிறோம். நமக்கு நல்லதையே நினைக்கும் சிநேகிதன் அவன் என்ற நம்பிக்கை இருப்பதால் செய்கிறோம். இப்படி நம்மிடம் நல்ல மனஸ் உள்ள சிநேகிதனுக்கு 'ஸௌஹ்ருத்' என்று**

பெயர். அதனால் நம் ஸகா மாதிரியான ஸ்தானத்திலிருந்து கொண்டு நம்மை நல்ல காரியத்தில் ஏவுவது ''ஸுஹ்ருத் ஸம்மிதை''. இதை விடவும் சுலபமாகக் காரியத்தைச் சாதித்துத் தரவல்லது எது என்றால் பத்தினியின் பிரிய வசனம்தான். எஜமானின் உத்தரவு பாரமாக இருக்கிறது என்றால், அதையே சிநேகிதன் சொல்லும் போது லகுவாகிறது. இதைவிடவும் லேசாகி விடும், இதையே பத்தினி சொல்கிற போது. இது 'காந்தா ஸம்மிதை' எனப்படும். காந்தா என்றால் பத்தினி.



வேதம் பிரபுஸம்மிதம், புராணங்கள் ஸுஹ்ருத் ஸம்மிதம், காவியங்கள் காந்தா ஸம்மிதம் என்று சொல்வதுண்டு. காவியம் என்ன செய்கிறது? கவி என்ன செய்கிறான்? யதார்த்தத்துக்கு கண், காது, மூக்கு வைத்து ஜோடனை பண்ணி அனைவரும் ரசிக்கும்படியாகச் செய்வதே கவியின் காரியம். ஸுஹ்ருத் (நண்பன்) போல் உள்ளதை உள்ளபடி மட்டும் சொல்லாமல், புருஷன் நல்ல வழியில் போக வேண்டுமென்பதற்காகக் காந்தாவானவள் (பத்தினி) கூட்டியும், குறைத்தும், மாற்றியும் கூடப் பேசி அவனுக்கு இதமாக இருக்கும்படியாக 'நைஸ்' பண்ணி விஷயங்களைச் சொல்லி அவனை சரிபண்ணுவாள் என்பது ஐதிஹ்யம். இந்த காந்தாவின் ஸ்தானத்தில் காவியமும், பிரபுவின் ஸ்தானத்தில் வேதமும், இரண்டிற்குள் நடுவான ஸுஹ்ருத்தின் ஸ்தானத்தில் புராணங்களும் இருந்து கொண்டு நமக்கு தர்மங்களைச் சொல்கின்றன.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

வாதச் செயல்களால் அவன் அசைய மாட்டான் என்பதே எனது கருத்தாகும்."

''மிஸ்டர் ராமசாமி சொல்லுவது தானப்பா சரி."

"உண்மைதான். அதே நேரத்தில் ஆங்காங்கு நரேந்திரநாத், சாவர்க்கர் போன்றவர்களின் நடவடிக்கைகளும் நடந்து கொண்டுதான் இருக்க வேண்டும். சிறுகச் சிறுக அவன் மனத்தில் பயத்தை ஏற்படுத்துவதிலும் நமது சுதந்திரம் துரிதப்படும்."

பாமா கொண்டு வந்த காப்பியை ருசித்து அருந்தியவாறே சுவாரஸ்யமாக அரசியல் பேச, நேரம் போனதே தெரியவில்லை.

திடுமென்று விழித்துக் கொண்டவராக ராமசாமி, "ஒன்பது மணியாயிடுத்தே, அப்ப நான் கெளம்பட்டுமா? உங்க மிஸஸ் கிட்ட சொல்லிடுங்கோ. நான் வரேன், மிஸ் அஞ்சனா!" என்று கூறியவாறு எழுந்தார்.

இருவரும் வாசல் வரை சென்றார்கள். "ஆமா? ஒம்பது மணிக்கு மேல எப்படி ஆத்துக்குப் போவேள்? நான் கார்ல கொண்டு விடறேன்" என்றார் ராஜாராமன். வலுக்கட்டாயமாக அவரைத் தம் காரில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டார். அஞ்சனா கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே போனாள்.

அப்போது கூடத்துக்கு வந்து சோபாவில் உட்கார்ந்த பாமா, "அந்த ராமசாமிக்கு எத்தனை வயசு இருக்கும்?" என்றாள்.

"தெரியாதும்மா."

"கல்யாணம் ஆனவர்தானே?"

மடியில் இருந்த வார ஏடு ஒன்றைப் புரட்டிக் கொண்டிருந்த அஞ்சனா சட்டென்று தலை உயர்த்திப் பார்த்தாள். பாமாவின் பார்வை நீட்சியாக அவள் மீது பதிந்திருந்தது.

"ஏம்மா? எதுக்குக் கேக்கறே? அவருக்குக் கல்யாணம் ஆகி ஒரு அஞ்சு வயசுப் பிள்ளை கூட இருக்கு."

பாமாவிடமிருந்து ஒரு பெருமூச்சு கிளம்பியது. "பிரும்மசாரிப் பிள்ளையா இருந்தா உனக்குப் பார்க்கலாமேன்னுதான்."

அஞ்சனா பதில் சொல்லவில்லை. மறுபடியும் பத்திரிகையைப் புரட்டலானாள். ஆனால் அவள் முகம் சற்றே சிவந்ததைக் கண்டு பாமா வியப்படைந்தாள். எப்போது திருமணம் பற்றிப் பேசினாலும், 'உனக்கு வேற வேலை கிடையாது' என்றோ, அல்லது 'நான் கல்யாணம் பண்ணிக்கிறதா இல்லே, இப்போதைக்குன்னு எத்தனை தரம் சொல்றது?' என்றோ கத்தும் வழக்கமுள்ள அஞ்சனா, மவுனமாக இருந்ததும் அதைவிட அவள் முகம் சிவந்ததும் பாமாவை இன்னதென்று மிக இலேசாய்ப் புரிந்ததன் விளைவான கலவரத்திலும் ஆழ்த்தின.

"அவனோட பொண்டாட்டியோடல்லாம் பேசிப் பழகி இருக்கியா?"

"ஓ. பார்த்திருக்கேன். ஆனா, பழகி இருக்கேன்னு சொல்ல முடியாதும்மா" என்றாள் அஞ்சனா. அம்மாவுக்கு ஏதோ நெருடல் என்பதை உள்ளுணர்வாய்ப் புரிந்து கொண்டதன் விளைவாக, 'நல்ல மாதிரி' என்ற சொற்களைச் சேர்த்துக் கொண்டாள்.

*(தொடரும்)*

போட்டிக் கதை - 5

# காந்தீயம் தோற்பதில்லை

தஞ்சை மகேஷ் ப்ரியன்

நதியூரின் அரசமரத்தடி மேடையிலிருந்து, ஆற்றங்கரையோர படுவவரை... எல்லோருடைய உதடுகளும் ஓய்வின்றி அதைப் பற்றியே... அந்தக் கொடுமையைப் பற்றியே வார்த்தைகளைச் சிந்தின.

"கண்ணுசாமி வாத்யாரு பாவம்யா...! ஊருலயே அவருதான் புண்ணியவான். அவருக்குப் போயி எடைஞ்ச குடுக்கறான்க, பாவிங்க. ஏழேழு சென்மத்துக்கும் அவனுவ கொலம் நாசமாப் போவ..."

"ஒண்ணா, ரண்டா.. மூணற வேலி! அவ்ளோ சவுக்குக் கன்னுங்களையும் பச்சைப்புள்ளய வெட்றாப்ல, வெட்டிப் போட்டுட்டானுவளே! அவன்க பாடை கௌம்பி, வூட்ல கள்ளி மொளைச்சி... கரு நாவம் புத்து வெய்க்க..."

"போன மொற இப்படிதான்கெ! நாஞ் சொல்றது அஞ்சாறு வருஷத்துக்கு முந்தின அருதப்பழசு கத. அப்போ... பாவிப் பயல்கெ ஊருலெ.. மழையே பேயாம... ஏழை, பாளைங்க அல்லாடுனிச்சிங்க...! நாவு நனைக்கத் துளியூண்டு தண்ணீ கூட கெடைக்கலை. கொளம், குட்டையெல்லாம் நெருப்பாட்டம் தகதகத்துப் போச்சு. சேரிப்பயல்கெல்லாம் சேந்து கொடும்பாயி கட்டி இழுத்தான்கெ. பொண்டுக மாரியாத்தா கோவில்லெ ஒப்பாரி வெச்சு, மூக்கைச் சிந்தி, கட்டி அழுதாளுக...! ஊம். தெனறுபுடிச்ச வானம் கண்ணத் தொறக்கவேயில்ல...

"அப்போதான், கண்ணுசாமி வாத்யாரு ஊருக்கு வந்த புதுசு. ஊர்லெ பெரிய மனுஷன்கெ எவனுமே சேரிப்பாளையத்துக்கு ஒதவாதத பாத்துப் புட்டுக் கண்ணுகலங்கி, கை குடுக்க முன்ன வந்தாரு. தாம் வூட்டு சோத்துக்குன்னு கொஞ்சத்த வெச்சுக்கிட்டு, மீதி நெல்லையெல்லாம் சேரியிலெ கொண்டாந்து சப்ளை பண்ணினாரு. அதோட குடிதண்ணி மோல... தங் கொல்லையிலெ, இருக்கற கெணறயே வுட்டாரு மவராசன்.

"பாத்தான்கெ பெரிய மனுஷன்கெ. பொறுக்கலை அவனுங்களுக்கு. 'சேரிப்பயல்களுக்கு நம் மாளு, நம்ம கொலம், மேல்சாதிக் காரன் இவன் எப்படி அவனுவள கொல்லைவரை வுட்டான்? எதோ நெல்ல குடுத்தான். அத்தோட வுட வேண்டியதுதானே? வுட்டா நாளக்கியே வூட்டுக் குள்ளே கொண்டாந்து சேரிநாய்ங்களை குடி வெச்சிடுவான் போல்ருக்கே...!' அப்படின்னு கொதிச்சி.. ராவோட ராவா... கண்ணுசாமி வாத்யாரோட வெக்கப்போரு மூண கொளுத்தி வுட்டு, குடிதண்ணி கெணத்துலயும் பாசானத்தக் கொட்டிப்புட்டான்கெ!"

"அடி ஆத்தி...! அப்றோம்...?"

"யாரு செஞ்ச புண்ணியமோ, காளியாத்தா மாயையாலே... விடியக்காலை நாலு மணிக்கே அவரு மவன் அசலூரு போறதுக் காக... கெணத்துல தண்ணி மொண்டு குளிக்கபோக... அதான் படிச்ச வெவரமான புள்ளையா.. நாத்தத்தை வெச்சுக் கண்டுபுடிச்சுட்டு. வெவகாரம் ஊருபூரா பரவி, தீயாட்டம் எரிஞ்சிச்சி. அல்லோலம்தான்."

"மேல... சொல்லு..."

"அப்றோமென்ன... அவரு மவன்தான் தாண்டி தலைகீழா குதிச்சி போலீஸ்கிட்டக்க சொல்வி, பாசானம் கலந்தவன்களப் புடிச்சி முதுவுத் தோலை உறிச்சிடலாம்னு துடிச் சிச்சி. அதுக்கெல்லாம் கண்ணுசாமி வாத் யாரு வுடலை. குறுக்கே படுத்து மறிச் சிட்டாரு. 'யார்டா கலந்துருக்கப் போறா...? யெல்லாம் நம்ம சொந்தக்காரப்பயல் கெதானே? போலீஸ்சுன்னு போய்ட்டா, பெறவு கோர்ட்டு, கேசுன்னு அலையணும். இன்னிக்கி மாட்டி வெச்சாச்சுன்னா, நாள பின்ன அவனுவ மொவத்துல முழிக்க வேணாமா? வுடுடா, போனா போவட்டும்'னு அழாத கொறையா மவன அடக்கிப் புட்டாரு. வெகாரமும் அத்தோட அடங்கிப் போச்சுன்னு வெச்சிக்கயேன். ஆனா... இந்த மொற என்ன ஆவுதோ...?"

சடாரென அத்தனை உதடுகளும் ஒட்டிக் கொண்டன. வார்த்தைகள் சமாதியாயின. மௌனம். எதுவுமே தெரியாத பாணியில், அவரவர் வேலையில் கவனம்.

காரணம், தூரத்தில், கண்ணுசாமி வாத்யார், நடந்த சம்பவத்தின் தடயம் இல்லாத முகம். கவலைபடராத நடை. கனமான உடம்பின் கம்பீரமான குலுங்கலோடு, புன் முறுவல் மிளிர வந்து கொண்டிருந்தார்.

"எலேய் வேலு..."

"கூப்ட்டிகளா சாமீ..."

"ஆமாண்டா! பத்துப் பதினைஞ்சு

ஆள்களை வெச்சுக்கிட்டு வெட்டிக் கெடக் கற, சவுக்குக் கன்னுங்களையெல்லாம் கொல் லையை விட்டு அப்புறப்படுத்திடு. எம்மவன் ஊர்லயிருந்து வந்து... கொல்லையைப் பாத் துப்புட்டான்னா ரகளை பண்ணிடுவான்."

அந்த வார்த்தைகளைக் கூறுகிறபோதே சிதறும் புன்னகை. விழிகளில் வழியும் பெரு மிதம், துள்ளல், துடிப்பு! மீசையை நீவிக் கொண்டார்.

வெய்யிலில் வழுக்கைத் தலை பளபளத் தது, கதிரவன் தன் முகத்தை அதிலே பார்க் கிற அளவுக்கு. காது மடல்களில் பூத்த வியர் வைத் துளிகளைக் கைவிரல்களால் சுண்டிச் சிதறியவாறே -

"ஒரு ரெண்டு ரூபா கூலியாட்களுக்கு ஏத்திக் கொடுத்தேங்கறதுக்காகத்தானே இப் படி பண்ணிட்டான்கெ? இன்னைக்கு சாயங் காலம் இதையெல்லாம் சுத்தப்படுத்திட்டு

---

**"யோவ், குடிகாரக் குமரேசனோட வீட்டுக்கு எப்படிப் போகணும்?"**

**"சரியாப் போச்சு, நீதான்யா குடி காரக் குமரேசன்!"**

**"அது தெரியுது, அவன் வீட்டுக்குப் போக வழி எப்படின்னுதானே கேட்கி றேன்!"**

**— எம். அசோக்ராஜா**

---

வர்ற ஆட்களுக்கு மூணு ரூபா ஏத்தித் தர் றேண்டா கூலி. மறுபடியும் என்ன பண்றானு வன்னு பார்க்கறேன்..!"

கர்ஜனை.

வாலிபம் தாண்டிய கிழச்சிங்கத்தின் கம் பீரம். என்னதான் பண்ணிவிடுவார்கள் என் கிற அலட்சியம்.

ஒன்றன்மேல் ஒன்றாய் வெட்டி வீழ்ந்து கிடந்த, பருவத்தைத் தொடும் முன்பே பாழாகி விட்ட சவுக்குக் கன்றுகளின் மீது நடந்து கொல்லையை விட்டு வெளியே வந்த வரின் விழிகள், உதடுகள், காதுமடல்கள் என மேனி பூராவும் படபடப்பு. விவகாரம் யாருக்குத் தெரியக்கூடாது என நினைத் திருந்தாரோ அவனுக்குத் தெரிந்து விட்ட பயம். கால்கள் தடுமாறின. தன் எதிரே முறைப்பாய் நின்றிருந்த துரையரசனை - தன் மகனை நோக்கினார்.

"ஏம்பா... இப்படி பண்றீங்க...?"

துரையரசன் பொருமினான். இள இரத்தம். புறமுதுகு காட்ட வெட்கப்படும் வாலிப வனப்பு. முகமெங்கும் கோபரேகை கள்.

"எப்படி...?"

கண்ணுசாமி வாத்தியார் மெல்லிய குரலில் மகனைக் கேட்டார், எதுவுமே தெரியாதவராய்.

"வெளையாடுறீங்களாய்யா? இன்னமும் நீங்க மாறலை. மாறவும் போறதுல்லே. சவுக் குக் கொல்லையை நாசம் பண்ணிட்டு எவனோ ஜாலியா இருக்கான். நீங்க என் னடான்னா... எனக்கும் சொல்லி விடாம, அவனுங்களுக்கும் எதுவுமே ஏற்பாடு பண் ணாம, சவுக்கு கன்னுங்களை சுத்தப்படுத்திக் கிட்டு ச்சே..! பத்திக்கிட்டு எரியுது எனக்கு. துவசம் பண்ணினவன்களை விட, இப்ப உங்க மேலதான் ஆத்திரம் வருது..."

"துரையரசா பாத்து, பாத்து! நீ கத்துற கத்துலே.. இருதயம் தெறிச்சிடப் போவுது. மெதுவாப் பேசுடா. ஏங் கோபப்படறே? என்ன ஆயிட்டு இப்போ...?"

"என்ன, ஆயிட்டா? ச்சே! ஏண்டா உங்க ளுக்கு மகனாப் பொறந்தோம்னு இருக்கு. நம்ம வீட்டு சேதியை மூணாம் மனுஷன் மூலமாத் தெரிஞ்சி ஓடி வர்ற நெலயில நானிருக்கேங்கறதை நெனைக்கறப்போ... நாக்கைப் புடுங்கிக்கிட்டுச் சாகலாமான்னு கூட தோணுது. சரி சரி... புறப்படுங்க. போலீஸ் ஸ்டேன் வரைக்கும் போய்ட்டு வந்திடுவோம்."

'போலீஸ் ஸ்டேஷன்' என்றதுமே கண்ணு சாமி வாத்யாருக்குக் குபீரென வியர்த்தது. நிமிர்ந்தார்.

"போலீஸ் ஸ்டேஷன் எதுக்குடா? அவ னுங்க வந்து என்னத்தப் பண்ணிடப் போறாங்க. துண்டாப் போன சவுக்குக் கன் னுங்க, திரும்ப எந்துரிச்சு நின்னுடவா போவுது? நல்லவன், கெட்டவன், அறிஞ் சவன், அறியாதவன்.. சம்பந்தமேயில்லா தவன், எல்லாரையும் போட்டு நாலு நாளைக்கு பெல்ட்டால வீறுவான்கெ. காரணகர்த்தா வேற பக்கமா... சொகுசா இருக்க, அப்பாவிங்களோட வயித்தெறிச்சல் நமக்கெதுக்கு?"

"எனக்கு உங்க சொற்பொழிவு தேவை யில்லை. இப்ப நீங்க எங்கூட ஸ்டேஷனுக்கு வரப் போறீங்களா இல்லியா...?"

துரையரசன் இறுதியான குரலில் கேட் டான்.

"நான் வர முடியாது."

"அப்பா...!" கத்தினான்.

"கத்தாதே! நம்ம சவுக்குக் கொல்லையை நாசம் பண்ணினது யாருன்னு நெனைக்கறே...? எல்லாம் நம்ம பயல்கதான். அவனுங்க பகை நமக்குத் தேவையா? நாமளும் தெனமும் ஸ்டேஷனுக்கு அலைஞ்சிகிட்டு இருக்க முடியுமா...?"

"அப்படின்னா... நீங்க ஸ்டேஷனுக்கு வர மாட்டிங்க?"

"ஆமா..."

"ரொம்ப சந்தோஷம். ஆனா... நான் விட மாட்டேன். ஸ்டேஷனுக்குப் போயி... சந்தேகமான பசங்கமேலயெல்லாம் கம்ப்ளைண்ட் எழுதிக் கொடுத்துட்டு வந்தா அவங்க ஆக்ஷன் எடுக்காமலா போயிடுவாங்க?"

துரையரசன் ஆக்ரோஷமாய்ச் சீறி நகர -

"நில்லு! உன் இஷ்டப்படி நீ கம்ப்ளைண்ட் குடு. வேணாங்கலை. அதே மாதிரி... அவனுங்க விசாரணைக்கு எங்கிட்ட வர்றப்போ... 'சரியா வளரலை. அதான் வெட்டிப்புட்டேன். கடலை போடலாம்னு தோணுச்சி, அதான்...! எம்மவனுக்கு எதுவுமே தெரியாது. அவன்கிட்டே யாரோ புரளி கிளப்பி விட்ருக்காங்க. அதோட அவன், அன்னைக்கு ஊருலயே இல்லே'ன்னு என் இஷ்டம் போல, சொல்றதையும் தடுக்காதே!"

விஷமமாய்ப் பார்க்க -

துரையரசன் தலையில் அடித்துக் கொண்டான்.

"என்ன எழவோ செய்ங்க! எனக்கென்ன? நீங்க இனி இப்படியே இருந்தா, இன்னைக்கு சவுக்குகன்னுங்க வெட்டுப்பட்டது மாதிரியே நாளைக்கு உங்க தலையும் வெட்டுப்படத்தான் போவுது. நான் வர்றேன்."

துரையரசன் ஓடும் ரயிலாய்த் தடதடத்து வெளியேறினான்.

துரையரசனுக்கு டவுனில் வேலை. மனைவி, குழந்தை எல்லோரும் அங்கேதான் இருக்கிறார்கள். கண்ணுசாமி வாத்யார் மட்டும்தான் இங்கே கிராமத்தில் இருக்கிறார். வீடு, வாசல், நிலங்கள், வாத்தியார் வேலை வேறு. ரிடையர் ஆக இன்னும் வருஷங்கள் இருக்கின்றன. அப்புறம் எப்படி டவுனுக்குப் போக முடியும்? துரையரசன் மட்டும் எப்போதாவது வருவான். அப்பாவைப் பார்த்துப் போவான். இந்த முறை முதல் இனி வருவானோ, மாட்டானோ?

வந்தாலும் சரி. வரவில்லையென்றாலும் சரி. -

மனதைப் பாறையாக்கி கொண்டார்.

**வி**டாத மழை. ஆற்றில் வெள்ளம். சின்னதாய் மழை ஓய்ந்த போது பள்ளியை விட்டு வீட்டுக்குப் புறப்பட்டார் கண்ணுசாமி வாத்தியார்.

மேகங்களின் சூழ்ச்சியால் கறுமை படர்ந்த மாலை நாலரை மணி. அப்பிக் கிடந்த நிசப்தம். தொலைதூரப் பனங்காட்டு நரிகளின் ஓலம். மேனியை உரசிப் பறக்கிற பழந்தின்னி வௌவால்களின் படபடப்பு.

வேகம் கூட்டி நடந்தார்.

கால்கள் ஈரமண்ணில் பின்னின. வழுக்கியது. குடை எடுத்து வராததன் அலட்சியம், நிறைய அவஸ்தையைத் தந்தது. கதர் வேஷ்டி, சட்டை உடம்போடு ஒட்டி ஒட்டி இம்சை பண்ண... தேக்கு மரப் பின்னணியில் -

ஆற்றங்கரையோர பாதையைக் கடந்து கொண்டிருந்த போதுதான் அது நிகழ்ந்தது.



"அந்த ஆளும் கட்சி எம்.எல்.ஏ. அமெரிக்கா போனது தப்பாப்போச்சு!"

"ஏன்?"

"அமெரிக்காவிலுள்ள சுதந்திரதேவி சிலைக்கு 'அம்மா' வோட பேரைச் சூட்டணும்னு அறிக்கை விட்டிருக்காரே!"

— எஸ். முகம்மது யூசுப்

திமுதிமுவென கூட்டமாய் ஏழெட்டு பேர். கைகளில் சவுக்குக் கட்டை. முகத்தில் கொலைவெறி. கண்களில் சாராயச் சிவப்பு. அவருக்கு முன்னே மறித்தபடி நின்றார்கள்.

"ஏய்ய் கிழவா... நில்லு."

நின்றார்.

"என்ன...?"

"ரண்டு ரூபா ஏத்தினதோட நிறுத்தாம, திரும்ப மூணாக்கிட்டியே? உம்மனசுல என்னதான் நெனைச்சுக்கிட்டே, ம்... விட்டா நாளைக்கு சேரிநாய்ங்களுக்கு பொண்ணுக் குடுத்து, பொண்ணு எடுத்து, மச்சான் மாமாவா ஆக்கிடுவே போலிருக்கே...?"

முதலில் நின்று அகங்காரமாய்ப் பேசியவன் யாரென்று தெரிந்தது. அவன் பழைய பிரசிடெண்ட் பரமுவின் மகன். பரமு வேறு யாருமில்லை. அவருடைய ஒன்று விட்ட முறைப்பெண்ணைக் கட்டியவன்தான்.

கண்ணுசாமி வாத்தியாருக்கு உடம்பு சூடானது.

"இப்ப என்ன பண்ணணும்னு வந்துருக்கிங்க? நான் அப்படி என்ன தப்புப் பண்ணிட்

டேன்? காலையிலேர்ந்து சாயங்காலம் வரைக்கும். ஏய்க்காம உண்மையா உழைக்கிற உழைப்பாளிங்களோட கோரிக்கையை ஏத்து.. ஒரு ரண்டு ரூவா கூலியை ஏத்திக் குடுத்தேன், அவ்ளோதான். எம்மனசுக்கு நியாயமாப்பட்டது, செஞ்சேன். இதக் கேட்க, என் உரிமையில தலையிட நீங்க யாரு? நான் என்ன கம்மாக்கரையில நின்னு கன்னிப் பொண்ணுங்க கையப் புடிச்சி இழுத்தேனா? இல்லே... எவன் சொத்தையாச்சும் களவா டிட்டேனா? நான் உழைக்கறேன். உழைக்கற வங்களையும் மதிக்கறேன். இது தப்பா? இதுக்குப் போயி என்ன மறிச்சி... ச்சே! எனக்கா இவ்வளவு கட்டைங்க... அரி வாள்ங்க? ஒரு சின்னக் கத்தி போதாது..."

"ஏய்- இவன்கிட்ட என்னடா பேச்சு? ஒரு வாட்டி கெணத்துல வெஷம் வெச்சுப் பாத் தோம். மறுவாட்டி சவுக்குக் கொல்லையை நாசம் பண்ணினோம். இவன் திருந்தலை. இனியும் திருந்தப் போறது இல்லே... வெட்டுங்கடா... இவனை..."

பரமு மகன் கத்தினான்.

அடுத்த நிமிஷம் -

வெண்ணெய்க் கட்டியைச் சீவுவது மாதிரி அவருடைய உடம்பு பூராவும் 'சதக்' 'சதக்' என மாறி மாறி... அரிவாள்கள் சீற சவுக்கட்டைகள் முழங்காலிலும், தோள் பட்டையிலும் இறங்க -

இரத்தம் பீறிட்டது.

கண்ணுசாமி வாத்தியாரின் பூ உடம்பு துவண்டது. துடித்தது. ஆனால் அத்தனைக் கும் அவர் ஓடவோ, தப்பிக்கவோ நினைக்க வில்லை. கத்தவும் இல்லை. கதறவும் இல்லை.

இரத்தச் சகதியாய் அவர் கிடக்க-

அந்த வெறிபிடித்த கூட்டம் நகர முயன் றது.

"போதும். கெழவன் இனி பொழைக்க மாட்டான். பொறப்புடுங்கடா!"

திடீரென கண்ணுசாமி வாத்தியாரின் உடம்பில் சலனம். துடிப்பு.

குபீரென எழுந்து நின்று, தடுமாறி விழுந் தார்.

உதடுகள் சிரமாய் விரிந்தது. கண்களில் நீரோட்டம்.

"ஏய்... ஒரு நிமிஷம் நில்லுங்கடா...!"

நின்றார்கள். திரும்பினார்கள்.

"கெழம் என்னவோ சொல்லப் போவுதுடா!"

"என்னோட உடம்பைத் தூக்கி ஓடுற இந்த ஆத்துல போட்டுட்டுப் போங்கடா... பாவிங்களா! 'கண்ணுசாமி வாத்தியாரு ஆத்து வெள்ளத்துல அடிச்சிக்கிட்டு போய்ட் டாரு'ன்னு பேராகட்டும். ஏந்தெரியுமா...?"



கணவன் : இன்னைக்குத்தான் சரகு காப்பி நல்லா இருக்கு... ரொம்ப காலத்துக் குப் பிறகு.

மனைவி : அடப்பாவமே...! வேலைக் காரிக்கு வெச்சிருந்த காப்பியை எடுத்து நீங்க குடிச்சிட்டீங்களா?

— சீர்காழி வி. ரேவதி

பேச முடியவில்லை. சிரமப்பட்டுப் பேசினார்:

"கீழ்சாதிகாரங்கல்லாம் எனக்கு நீங்க பண்ணின அக்கிரமம் தெரிஞ்சிச்சின்னா சும்மா இருக்க மாட்டான்கெ. துடிச்சி எழு வான்கெ. கையில கம்பு, கழி, அரிவாள்னு எடுத்துக்கிட்டு... சீறிப் பாய்வான்கெ. ஊரே இரத்தக் களறியா, சாம்பல்மேடா ஆயி டும்டா! என்னால.. என்...னால... மத்தவங்க... பாழாகறத நா... நா... விரும்பலை. இனியா வது... வெட்டு, குத்து, வன்முறை இல்லாம இருங்க... ம்... தூக்குங்க. தயவுசெஞ்சி... தூக் குங்க. ஆத்துல என்உடம்பை வீசிட்டுப் போங்க..."

கைகளைக் குவித்து கண்ணீரோடு அவர் கெஞ்சிய கெஞ்சல், துடித்த துடி, பதறிய பதறல்.

பரமுவின் மகன் ஒரு வினாடி அவரையே பார்த்தான்.

'சாகும் தருவாயிலும், தன்னால மத்த வங்க பாழாகக் கூடாது'ங்கற அவருடைய வார்த்தைகள் முள்முள்ளாய் உறுத்த, உள்ளுக் குள் ஏதோ இளகியது.

நிமிர்ந்தான்.

"எலேய், வாத்யாரைத் தூக்குங்கடா..."

தூக்கினார்கள். ஆற்றை நோக்கி நடந்தார் கள்.

"நில்லுங்கடா. நான் ஆத்துல வீசறதுக்கு தூக்கச் சொல்லலை. அவரை ஆசுபத் திரிக்குக் கொண்டு போவத்தான் தூக்கச் சொன்னேன்."

அத்தனை வலியிலும் மனசுக்குள், கண்ணுசாமி வாத்யாருக்கு உற்சாகம் பீறிட...

"காளி.. போயி... காளைமாட்டு வண்டிய சுருக்கா கொண்டாடா!"

பரமுவின் மகன் உரக்கக் கத்தினான்.

அந்த கத்தலில்தான் எத்தனை மிருது, மென்மை, பணிவு! கண்ணுசாமி வாத்தி யாரை போல!

“விபத்து போன்ற அவசரக் காலங்களில், விமானப் பணிப்பெண்களை சரியாக வேலை செய்ய விடாமல் புடைவை தடுக்(கு)கிறது. இதனால் அவர்கள் வேகமாகச் செயல்படத் தகுந்தபடி சல்வார் கமீஸ் போன்ற வேறு டிரஸ்கள் வழங்குவது பற்றி யோசிக்க வேண்டும்!”

- இப்படியொரு ஆலோசனையை வழங்கியிருப்பவர் நீதிபதி வி.ஏ. மோஹ்தா. போன வருடம் ஔரங்காபாத் அருகே 53 உயிர்களைப் பலிவாங்கிய விமான விபத்துக்கான பின்னணியை ஆராய்ந்த அவர், 25 விபத்துத் தவிர்ப்பு ஆலோசனைகளை வழங்கினார். அதில் ஒன்றுதான் இந்தப் ‘புடைவைப் புறக்கணிப்பு’!

உண்மையில் புடைவை உடுத்துவதென்பது பெண்களின் அவசரப் பணிகளுக்கு இடைஞ்சலான ஒரு விஷயம் தானா? “புடைவையும் ஓரளவுக்கு அவசர கால நடவடிக்கைகளுக்கு முட்டுக்கட்டையாக இருக்கலாமே தவிர, அதை விடப் பூதாகரமான பிரச்னைகளெல்லாம் இருக்கின்றன!” என்கிறார்கள், விமானப் பயணிகள் பாதுகாப்புச் சங்கச் செயலாளர் கும்மடி ஜே. சத்ய நாராயணாவும் தலைவர் சுதாகர் ரெட்டியும்.

உதாரணமாக அவர்கள் ஒன்றைச் சுட்டிக்காட்டுகிறார்கள். “விமானங்களின் எமர்ஜென்சி வாசல் அருகே, வயதில் மிகவும் சிறியவர்களோ, வயதானவர்களோ அமரக் கூடாது. அந்தக் கதவைத் திறக்கக்கூடிய பலசாலிகளாக இருப்பவர்கள் மட்டுமே அமரலாம் என்பது விதி. ஆனால், இது நடைமுறையில் எந்த அளவுக்குக் கடைப்பிடிக்கப்படுகிறது?” என்று கேட்கிறார்கள், அவர்கள்.

‘‘நீதிபதி தமது அறிக்கையின் ஆலோசனைகளில் ஒன்றாகச் சேலை பற்றிக் குறிப்பிட்டிருந்தாலும் அது பற்றிய அறிவிப்பு ஒன்றும் எங்களுக்கு வரவில்லை!” என்கிறார் இந்தியன் ஏர் லைன்சின் தலைமை விமானப் பணிப் பெண்ணான எல்லிஸ் தாஸ்.

• வீணா



இருபது வருடங்களாகப் பறக்கும் இவர், ‘‘புடைவை என்பது நமது பாரம்பரியத்தின் சின்னம். இந்தியப் பெண் என்று சொல்லும்போதே புடைவை கட்டிய உருவம் தானே நினைவுக்கு வரும்! எனவே, இதை நான் ஒரு போதும் இடைஞ்சலாகக் கருதியதில்லை. மற்ற பணிப் பெண்களும் இவ்வாறு கருதுவதாகத் தெரியவில்லை” என்கிறார்.

இருப்பினும் இப்போது புதிதாக இறகு முளைத்திருக்கும் ஜெட் ஏர்வேஸ், தமானியா

ஏர்வேஸ் போன்றவை, தங்கள் விமானப் பணிப்பெண்களுக்குப் புடைவை யூனிஃபாரம் கொடுக்கவில்லை.

"முதலில் நாங்கள் 'காரா' என்ற சைனீஸ் எம்ப்ராய்டரி வேலைப்பாடுகளுடைய சிவப்பு வெயிஸ்ட் கோட், முழுக்கை வெள்ளை ப்ளவுஸ், சிவப்பு - கறுப்புப் புள்ளிகள் போட்ட சாம்பல் நிற ப்ளீட்டட் ஸ்கர்ட் - இந்த பார்சி உடையைத்தான் ஏர்ஹோஸ்டஸ்களின் யூனிஃபாரமாக வைத்திருந்தோம். இப்போது சிவப்பு ஸ்கார்ஃபும் நீல ஒன் பீஸ் உடையுமாக மாற்றியமைத்திருக்கிறோம்!'' என்கிறார் தமானியா ஏர்வேஸின் மக்கள் தொடர்பு அதிகாரி ஜி.எஸ். பிரசாத்.

"புடைவை மிகப் புராதனமான உடைகளில் ஒன்று; புதுமைக்கும் பொருந்தி வரும் என்றாலும் எங்கள் விமானப் பணிப்பெண்கள், பல ரோஜாக்களுக்கு மத்தியில் ஒரு லில்லி மலர் போல -சர்வீஸில் மட்டுமல்ல; தோற்றத்திலும் தனித்துத் தெரிய வேண்டாமா? அதனால்தான் பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்ட யூனிஃபாரத்தைக் கொடுத்திருக்கிறோம்!" என்கிறார் ஜெட் ஏர்வேஸின் இன்ஃ பிளைட் பொது மேலாளரான நவல்ராய்.

# ரோஜாக்களுக்கு மத்தியில் ஒரு லில்லிமலர்!

"ஏர்ஹோஸ்டஸ் விஷயத்தை விடுங்க. எங்களைப் போன்ற பள்ளி - கல்லூரி மாணவிகளுக்குப் புடைவை ஒரு பிரச்னைதான்!" என்கிறார் கல்லூரி மாணவியான வீணா நாராயணன்.

"இரு சக்கர வாகனங்களில் செல்லும் போது, திடீரென்று பிரேக் போட்டுக் காலைக் கீழே ஊன்றி நிற்கிற சமயங்களில் புடைவை நிச்சயமாகத் தடுக்கத்தான் செய்கிறது. சல்வார் என்றால் இந்தத் தொல்லைகள் ஏதும் இல்லை. அதோடு, புடைவைத் தலைப்பு சக்கரங்களில் சிக்கிக் கொள்ளுமோ என்கிற பயமும் இல்லையே!" என்கிறார் வீணா.

"இதுபோன்ற பிரச்னைகள் வராமலிருப்பதற்காக இரு சக்கர வாகனங்களை ஓட்டுபவர்களுக்கு 'செயின் கார்டு', பின்னால் உட்காருபவர்களுக்கு 'சாரி கார்டு' என்று இரண்டு கவசங்களைப் பொருத்தித் தருகிறோமே!" என்கிறார் ராம்கே ஏஜென்சீஸின் உரிமையாளர் ஆர். ஆர். மனோகர்.



* சுதாகர் ரெட்டி



* சத்யநாராயணா

"இந்தப் பிரச்னையை நாங்கள் தீர ஆலோசித்து அலசியிருக்கிறோம்; கணக்கெடுப்பு கூட நடத்தியிருக்கிறோம்!'' என்கிறார் செயின்ட் எப்பாஸ் பெண்கள் மேல்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி பாலின் டேனியல்.

"இன்றைய பள்ளி மாணவிகள் பெரும்பாலும் சைக்கிளில்தான் வருகிறார்கள். அதற்குப் பாவாடை தாவணியும் சரி, புடைவையும் சரி, நிச்சயமாக இடைஞ்சல்தான். அதோடு இத்தனை துணிகளையும் இந்தத் தண்ணீர் பற்றாக்குறைக் காலத்தில் துவைத்தெடுப்பதும் சிரமமானது. ஆனால் சல்வார் அப்படியில்லை. விலையும் மலிவு. பராமரிப்பதும் சுலபம். உடலையும் முழுமையாக மறைக்கும் ஆடையாக இருப்பது இன்னொரு வசதி.

"இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டுதான், பாவாடை - தாவணி, சேலை போன்ற நமது பாரம்பரியச் சின்னங்களை வருத்தத்தோடு ஒதுக்கி வைத்து விட்டு, சல்வார் கமீஸை உடுத்தச் சொல்லியிருக்கிறோம்!" என்கிறார் திருமதி டேனியல்.

"நமது பாரம்பரிய உடையான வேஷ்டியை விட்டு விட்டுத் தங்கள் வேலைகளுக்கு வசதியாகப் பாண்ட் - சட்டைக்கு ஆண்கள் மாறின மாதிரி, நாங்களும் மாறிக் கொண்டிருக்கிறோம்; இதிலென்ன தவறு?" என்பது தான் இன்றைய இளம்பெண்களின் பதில்.

**- நிர்மலா சக்ரவர்த்தி**

பேசிய டாக்டர் பதிலளிக்கிறார்

# இந்த மன உளைச்சலுக்கு என்ன மருந்து?

**என். சுந்தரராசன், தஞ்சாவூர்.**

● **எனக்கு 20 ஆண்டுகளாக அடிவயிறு மிகவும் கனமாக உள்ளது. நாளாக நாளாக கனம் அதிகரித்து வருகிறது. எல்லா மருத்துவ சோதனைகளும் நார்மல் ஆக இருக்கிறது. அடிவயிறு கனமாக இருக்க என்ன காரணம்? தற்சமயம் சரியாகச் சாப்பிட முடிவதில்லை.**

●● மலச்சிக்கலைப் பூரணமாக நீக்க வேண்டும். அதற்குரிய முயற்சிகள் எடுத்தாக வேண்டும். மலச்சிக்கலுக்கு ஒரு முக்கிய காரணம், போக வேண்டிய சமயத்தில் போகாமல், அசந்தர்ப்பத்தின் காரணமாகத் தள்ளிப் போடுவதுதான். இன்னொன்று, ஆகாரம் குறைவாகச் சாப்பிடுவது. அதிக உணவு உண்டால் தான் மலம் வெளியேறும்; உணர்ச்சித் தூண்டுதல் (Ballast) ஏற்படும். அதைத் தருகிற ஃபைபர் டயட் (கீரை, பச்சைக் காய்கறி) சாப்பிட வேண்டும். பழங்கள் சாப்பிட வேண்டும். இரவு இரண்டு கோப்பை நீரும் பருக வேண்டும். காலையில் எழுந்தவுடன் இரண்டு கப் நீர் பருக வேண்டும். சிறிது உலாவி விட்டு வர வேண்டும்.

இவை தவிர தவிட்டு பிஸ்கட்டுகளை (Bran Biscuits) சாப்பிடலாம். Isaphgool எனும் உமி வகையைச் சேர்ந்த ஒரு பவுடரை நீரில் கலந்து பருகலாம். இந்தச் சிக்கல் தீர்ந்தாலே அடிவயிறு கனம் குறையும்.

**எல். கதிரேசன், சென்னை - 1.**

● **எனக்கு 19 வயதில் கொட்ட ஆரம்பித்த முடி இன்னும் நின்றபாடில்லை. மூன்று வருடங்களாகக் கொட்டியதில் ஏறக்குறைய வழுக்கை. இதனால் மன உளைச்சல். எந்த வேலையும் ஒழுங்காகச் செய்ய முடிவதில்லை. இனிமேலாவது கொட்டாமலிருக்க என்ன செய்ய வேண்டும்?**

●● நல்ல உணவைச் சாப்பிடுங்கள். இரத்தச் சோகையை, இரும்புச் சத்து கொண்ட டானிக் மூலம் நிவர்த்தி செய்ய முடியும். தலையில் இருக்கும் சருமத்தை நன்றாக மஸாஜ் செய்து வந்தால் முடிகளுக்கு ரத்த ஓட்டம் அதிகரித்து, முடி ஆரோக்கியமாக இருக்க வாய்ப்பு அதிகம்.

மிஸ்டர் கதிரேசன், உங்கள் செயல்பாடுகள் பிறரைக் கவர்கிற மாதிரி இருந்தால் போதுமே? தலை வழுக்கை பற்றியும், புறத்தோற்றம் பற்றியும் வீணாகச் சிந்தித்து, உங்கள் வளமையான எதிர்காலத்தைப் பாழாக்கிக் கொள்ளாதீர்கள். அறிவாளிகள், சுறுசுறுப்பு மிக்கவர்கள், தொழில்துறை, விஞ்ஞானத்தில் வெற்றி கண்டவர்கள் எல்லாருமே ஏறக்குறைய வழுக்கைதான். கவலையை உதறுங்கள்!

**புலவர். ச. மு. விமலானந்தன், திருப்பத்தூர்.**

● **நோய் எதிர்ப்புச் சக்தி இன்மையால் பல நோய்கள் வருகின்றன என்றும், அதற்கான மருந்து கண்டறியப்பட்டுள்ளதாகவும் தெரிகிறது. அந்த மருந்தின் பெயர் என்ன?**

●● நோய் எதிர்ப்புச் சக்தி தரும் இம்யுனோகுளோபின் இஞ்செக்ஷன் இருக்கிறது. முதலில் ஒரு இஞ்செக்ஷன் போட்டுக் கொண்டு, பிறகு ஒரு மாதத்துக்கு அப்புறம் ஒன்று போட்டுக் கொள்ள வேண்டும். அடுத்த இஞ்செக்ஷன் ஆறு மாதத்துக்குப் பிறகு. சாதாரணமாக ஒருவகை ஜாண்டிஸ் வந்தால் நோய் எதிர்ப்புச் சக்தியைக் கூட்ட இந்த இஞ்செக்ஷனைப் போடுவார்கள். வேறு சில நோய்களுக்கும், எதிர்ப்புச் சக்தியை அதிகரிக்க இது கொடுக்கப்படுகிறது. ஆனால் நடைமுறையில், இவ்வளவு சக்தி வாய்ந்த மருந்துகளைச் சிறு சிறு நோய்களுக்கும் கூடப் போட்டுக் கொள்ளுவது உசிதமானது அல்ல.

- டாக்டர் பி. ஆர். சுப்பிரமணியம்





# மணிக்கொடி

**கா**ர் நின்றதும், "உள்ளே வந்துட்டுப் போலாம் சார், என்னோட ஃபேமிலி மெம்பர்ஸை உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன்...." என்றார் ராமசாமி. ராஜாராமன் இறங்கினார். ரேழியில் விசாலமும் குஞ்சம்மாவும் கதவைத் திறந்து விட்டு விட்டு நின்றிருந்தனர். ராமசாமியுடன் வந்து கொண்டிருந்த அயலாரைக் கண்டதும் இருவரும் உள்ளே விரைய முற்பட்டார்கள்.

"வாங்க, சார்."

இருவரும் உள்ளே வந்து நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள்.

"விசாலம், குஞ்சம்மா, ரெண்டு பேரும் வாங்கோ..."

இருவரும் வந்ததும் ராமசாமி அவர்களை அறிமுகப்படுத்திவிட்டு, "அஞ்சனாவுடைய அப்பா மெட்றாஸ்ல பிரபல வக்கீல் ராஜாராமய்யர்..." என்றார். ஒருவருக்கொருவர் 'நமஸ்காரம்' பரிமாறிக் கொண்டார்கள்.

"உங்க பையன் எங்கே?"

ஜோதிர்லதா கிரிஜா

## அருள்வாக்கு

அநுமானம் என்பது என்ன? தூரத்தில் மலையிலே புகை தெரிகிறது. புகை மட்டும்தான் தெரிகிறது. நெருப்பு தெரியவில்லை. முன்னே இருக்கிற பாறைகள் நெருப்பை மறைக்கின்றன. அதனால் மேலே புகை மாத்திரம் தெரிகிறது. ஆனாலும் நாம் நம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் மலையிலே இருக்கிற காட்டில் நெருப்புப் பிடித்துக் கொண்டிருக்கிறது என்று ஊகித்து விடுகிறோம். இதுதான் 'அநுமானம்' என்பது. இங்கே நெருப்புக்கு 'ஸாத்யம்' என்றும் அதை நாம் அனுமானிப்பதற்கு அடையாளமாயிருக்கிற புகைக்கு 'ஸாதனம்', 'லிங்கம்', 'ஹேது' என்றும் பெயர்.

இப்போது நாம் அநுசரிக்கிற மதமான வேதாந்தத்தின்படி குருவிடமிருந்து உபதேசம் (சிரவணம்) பெற்றபின் அதை மனனம் பண்ண வேண்டும். மனனம் என்பது ஆசாரியர் மூலமாகக் கேட்டதைப் புத்தியில் ஏற்படும் யுக்தியைக் கொண்டு நினைத்து நினைத்துப் பார்ப்பது. இதிலே அநுமானம்தான் விசேஷமாகக் கைகொடுக்கிறது. அநுமானத்தால் தானே, பிரத்யக்ஷமாக அறிய முடியாததை வேறு காரணங்களைக் கொண்டு அறிய முடி

"கங்காதரன் தூங்கிட்டானா, குஞ்சம்மா?"

"ஆமா. இப்பத்தான் தூங்கினான்."

"அப்ப நான் வறேம்மா. எல்லாரும் ஒரு நாள் நம்மாத்துக்கு வாங்கோ. என்ன?" என்றவாறு கைகூப்பிக் கொண்டே ராஜாராமன் எழுந்து விட்டார்.

"குடிக்கிறதுக்கு ஏதாவது கொண்டு வரட்டுமா? முதமுதல் வந்திருக்கேள். கொஞ்சம் பாலாவது குடிச்சுட்டுத்தான் போகணும்" என்று குஞ்சம்மா விரைவாக நடக்கலானாள்.

"இப்ப ரொம்ப அகாலமாயிடுத்தும்மா. ஆத்துக்குப் போய்ச் சாப்பாடு சாப்பிடணும். எனக்காக எல்லாரும் காத்துண்டிருப்பா..." என்ற ராஜாராமன் நடக்கத் தொடங்கினார்.

ராமசாமி சிரிப்புடன் அவரைப் பின் தொடர்ந்து வழியனுப்ப வாசலுக்குப் போனார்.

"சார், நான் வந்திருந்தப்ப உங்க ரெண்டாவது பொண்ணு கண்ணுலயே படல்லியே?"

"அவ காஞ்சிபுரத்துக்கு எக்ஸ்கர்ஷன் போயிருக்கா. நாளைக்கு வந்துடுவான்னு நினைக்கிறேன். அப்ப நான் வரட்டுமா?" என்றபடி கார் இருக்கையில் ஏறி அமர்ந்து ராஜாராமன் அதைக் கிளப்பினார். ராமசாமி கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே வந்தார்.

எல்லோரும் சாப்பிட்டானதும் அடுக்களையைக் கழுவித் தள்ளிய குஞ்சம்மா கூடத்துக்கு வந்து, நாத்தனாருக்கு அருகே தன் பாயை விரித்துப் படுத்துக் கொண்டாள்.

ராமசாமி உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்த அறையிலிருந்து வந்த விளக்கு வெளிச்சம் கூடத்தின் பாதி வரையில் மங்கலாய்ப் பரவி இருந்தது. தம்பி மனைவியின் புறமாக ஒருக்களித்த விசாலம், "அவங்கிட்டப் போய் அதைப் பத்திக் கேக்கப் போறியா என்ன?" என்றாள் மெதுவான குரலில்.

"பின்னே? கேக்க வேண்டாமா? இதே மாதிரி நான் நடந்துண்டா கேக்காம இருந்துடுவாரா உங்க தம்பி?"

"படபடக்காதே, குஞ்சம்மா. என்னைக் கேட்டா நீ கேக்காம இருந்துடறதுதான் நல்லதும்பேன். ஏதோ இதுவரைக்கும் ஒரு கசமுசப்பு இல்லாம அமைதியாப் போயிண்டிருக்கு. எனக்கும் கோவந்தான் வந்தது. ஆனா, இப்ப யோசிச்சுப் பார்க்கிறப்ப சும்மா இருந்துடலாம்னுதான் தோணறது. அப்புறம் உன்னிஷ்டம் குஞ்சம்மா. நீயாச்சு, உன் ஆம்படையானாச்சு."

"எனக்கு அவர் மேல அவநம்பிக்கைன்னெல்லாம் ஒண்ணுமில்லேக்கா. ஆனாலும் ஊர்ல நாலு பேர் நாலு விதமாப் பேசக் கூடாதோல்லியோ? அதுக்கு நாம இடங் கொடுக்கலாமா?"

"எனக்குத் தெரியாது, குஞ்சம்மா. அவன் என் தம்பிதான். ஆனாலும், ஆம்படையான் பொண்டாட்டி விஷயத்துல மத்தவா தலையிடறதும் சரி இல்லே. உனக்கு எப்படித் தோணறதோ அப்படிச் செய். என் அபிப்பிராயம் இன்னதுங்கிறதை ஒருதரம் நான் சொல்லியாச்சு. மறுபடியும் மறுபடியும் என் வாயைப் பிடுங்காதே. அப்புறம் நாளைக்கு ஏதானும்னா, நீங்கதானேக்கா கேக்க வேணாம்னேள் அப்படிம்பே."

குஞ்சம்மா இதற்குப் பதிலேதும் சொல்லாமல் விட்டத்தை வெறித்தபடி படுத்துக் கொண்டிருந்தாள். சற்றுப் பொறுத்து விசாலத்தின் சன்னமான குறட்டை கேட்கத் தொடங்கியது. ராமசாமியின் அறை விளக்கு இன்னமும் எரிந்து கொண்டிருந்ததைக் கவனித்த குஞ்சம்மா ஓசைப்படாமல் எழுந்து அவரது அறைக்குப் போனாள்.

"படுத்துக்கல்லே?"

"தூக்கம் வரல்லே. அதான் படிச்சிண்டிருக்கேன்."



கிறது? பரமாத்ம ஜீவாத்ம ஸ்வரூபங்கள் நம் கண் முதலியவற்றுக்குப் பிரயத்யக்ஷமாகத் தெரியவில்லை. மூக்காலோ, வாயாலோ அவற்றை அறிய முடியவில்லை. மோக்ஷஸ்வரூபமும் தெரியவில்லை. கடைத்தேறுவதற்குரிய வழியும் தெரியவில்லை. இவைகளையெல்லாம் அநுமானத்தால்தான் தெரிந்து கொள்ள வேண்டும். தெரிந்த ஒன்றை வைத்துக் கொண்டு தெரியாதவற்றைத் தெரிந்து கொள்ளுவது அநுமானம். இடி இடிப்பதால் மேகம் உண்டென்று அநுமானிக்கிறோமே, அது போல.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

''ஏன் தூக்கம் வரல்லே?'' என்ற குஞ்சம்மா அவரை உற்று நோக்கியபடி எதிரே உட்கார்ந்தாள்.

"நீ ஏன் இன்னும் தூங்கல்லே?"

"எனக்கும்தான் தூக்கம் வரல்லே."

"உனக்கு ஏன் தூக்கம் வரல்லே?"

"என்னமோ வரல்லே."

"அதேதான் எனக்கும். எனக்குத் தூக்கம் வராததுக்கு மட்டும் ஒரு காரணமிருக்குமா என்ன?"

''மனசுல குழப்பமும் சஞ்சலமும் இருந்தாலும் தூக்கம் வராது. அப்படிச் சஞ்சலப்படற ஆத்துக்காரரைப் பத்திக் கவலைப்படறவாளுக்கும் தூக்கம் வராது. இல்லியா?"

ராமசாமி செய்தித்தாளை மேசை மீது போட்டு விட்டுக் குஞ்சம்மாவை அகல விழிகளால் ஏறிட்டார்.

''நீ என்ன சொல்றே,. குஞ்சம்மா? சஞ்சலமாவது, குழப்பமாவது? புரியும்படியாப் பேசு."

"சத்தம் போட்டுப் பேசாதங்கோ. அக்கா முழிச்சுண்டுடப் போறா" என்று எச்சரித்த குஞ்சம்மா, எழுந்து போய்க் கதவைச் சாத்தி விட்டு அவர் கால்களுக்கருகே அமர்ந்து அவற்றைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டாள்.

''என்ன குஞ்சம்மா இது? என்ன பண்றே?"

"நீங்களே கதின்னு இருக்கிற என்னை ஏமாத்திடாதேங்கோன்னு கேட்டுக்க வந்திருக்கேன்..." என்ற குஞ்சம்மா அழத் தொடங்கினாள். தம் கால்களை அணைத்தபடி இருக்கும் மனைவியின் செய்கையுடன் அஞ்சனா, கார் இருக்கை முதுகில் பதிந்திருந்த தமது கை மீது ஓர் உணர்ச்சி வேகத்தில் தனது கையைப் பதித்தது நினைவில் வர, ராமசாமிக்கு முகம் வெளுத்தது. 'யாராவது கவனித்து இவளிடம் சொல்லி விட்டார்களா என்ன? அதற்குள்ளாகவா?' - அவர் இடிந்து போனார்.

## 18

தம் வீட்டு வாசலில் காரை நிறுத்தி இருக்க வேண்டிய அஞ்சனா ஏதோ யோசனையில் மூன்றாவது வீட்டு வாசலில் தாம் கூவிய பிறகு பிரேக் போட்டுக் காரை நிறுத்தியதும், அப்போது அந்த வீட்டு வாசலில் அந்த அம்மாள் நின்று கொண்டிருந்ததும் இப்போது ராமசாமிக்கு ஞாபகம் வந்தன. அவர் சன்னமாய்ப் பெருமூச்சு விட்டபடி குஞ்சம்மாவின் தலையைக் கோதினார்.

"குஞ்சம்மா இதோ பாரு. நீ என்ன சொல்றே, எதுக்கு இப்படிக் குமுறி அழறே? முதல்ல அழறதை நிறுத்து. எம்மேல இப்படி ஒரு சந்தேகமும் பயமும் ஏற்படற அளவுக்கு என்ன ஆச்சுங்கிறதையும் சொல்லு. அதுக்கு அப்புறம் நான் உன் சந்தேகங்களுக்கெல்லாம் பதில் சொல்றேன்..." - இவ்வாறு சொன்னபடி குஞ்சம்மாவைத் தொட்டுத் தூக்கி அவர் கட்டிலில் உட்கார வைத்தாலும், அவரது இதயம் படபடத்துக் கொண்டிருந்தது.

"எல்லாம் அந்த உங்களோட சிநேகிதி அஞ்சனாதேவியைப் பத்தினதுதான்'' - இவ்வாறு சொன்னவாறே கண்களைத் துடைத்துக் கொண்டு அவரை ஆழமாக நோக்கிய குஞ்சம்மா, அவருள் தாங்க முடியாத அதிர்வு அலைகளை எழுப்பினாள். வெகுளித்தனமும் குழந்தைத்தனமான பேச்சுமாக அவள் அவ்வப்போது உருப் பெற்றாலும், அவளுள் ஆழமான உள்ளுணர்வுகள் உறங்குவதை, ராமசாமி முதன் முதலாகப் புரிந்து கொண்டார்.

“மடியில கனம் இருக்கிறவாளுக்குத் தானே வழியில பயம்? எனக்கு மடியில கனம் இல்லே. அதனால மனசுல எந்தக் கள்ளமும் இல்லே.”

“உங்க மடியில கனமில்லாம இருக்கலாம். ஆனா ஊர் உலகத்து மனுஷா என்ன பேசுவாளோங்கிற பயம் கொஞ்சமாவது இருக்கணுமோல்லியோ?”

“யார் அந்த ஊர் உலகத்து மனுஷா? எதிர்ச் சாரியில் மூன்றாவது வீட்டு மாமி தானே? சரி. அந்த மாமி என்னதான் சொன்னா?”

“ ‘வசம்பு வேணும்; இருக்கா’ன்னு கேட்டுண்டு வந்தா. அக்கா பாத்ரூமுக்குப் போயிருந்தப்ப, ‘உங்கிட்ட கொஞ்ச நாளா ஒரு விஷயம் சொல்லணும்னு. எங்க தனியாப் பார்த்துச் சொல்ல முடியறது? இன்னிக்கு எப்படியாவது சொல்லிடறதுன்னுதான் வந்தேன். உங்க நாத்தனார் வர்றதுக்குள்ள சொல்லிடறேன். அது யாரு அந்தப் பொண்ணு செவப்பா, லட்சணமா கார்ல உங்க ஆத்துக்காரரைக் கூட்டிண்டு உங்காத்தைத் தாண்டிண்டு போறாளே?’ அப்படின்னா. எனக்கு ஒரு மாதிரியாயிடுத்து. இருந்தாலும் மூஞ்சில எதையும் காட்டிக்காம...”

“நீயா? மூஞ்சில எதையும் காட்டிக்காம இருந்தியா? அந்தச் சமர்த்து உனக்குக் கிடையாதுடி, குஞ்சம்மா. சரி, சொல்லு...”

“ ‘வக்கீல் ராஜாராமய்யரோட பொண்ணு அஞ்சனா தேவி மாமி. காங்கிரஸ்ல சேர்ந்திருக்கா. அடிக்கடி மீட்டிங் கீட்டிங்னு அலையறா. எங்காத்துக்கு எல்லாம் கூட வந்திருக்கா. ஏன்? எதுக்குக் கேக்கறேள்?’ அப்படின்னேன். ‘அவளையும் உங்காத்துக்காரரையும் இணைச்சு ஊர்ல வம்பு பேசறா. அதனால நீ ஜாக்கிரதையா இருந்துக்கோ. தப்பா நெனச்சுக்காதடி பொண்ணே... நான் வரேன்” அப்படின்னுட்டு நான் பதில் சொல்றதுக்குள்ள விடுவிடுன்னு போயிட்டா...”

“அந்த மாமி தப்பா எடுத்துக்காதேன்னு சொன்னாளே தவிர, நீ தப்பா எடுத்துண்டு கண்ணைக் கசக்கணும்கிறதுதான் அவளோட எண்ணம்.”

“சரி விடுங்கோ... ஏன்னா? நான் உங்களை ஒண்ணு கேக்கட்டுமா?”

“ஒண்ணென்ன? ஒம்பது கேளேன்...”

“ஒம்பதெல்லாம் தாங்காதுன்னா. இன்னும் ஒண்ணே ஒண்ணு வேணும்.”

ராமசாமி கண்களைக் கொட்டாமல் அவளைப் பார்த்தார்.

“கங்காதரனோட விளையாடறதுக்கு இன்னொண்ணு வேண்டாமா?” என்று கேட்டு விட்டுக் குஞ்சம்மா தன் முகத்தை இரு கைகளாலும் பொத்திக் கொண்டாள்.

குஞ்சம்மா வெளியே சென்றதும் ராமசாமி சிந்தனை வயப்பட்டார். கங்காதரனின் பிறப்புக்குப் பிறகு கடுமையான பிரும்மச்சரிய விரதம் காத்து வந்த அவர், அஞ்சனாவை மறந்து தன்னோடு நெருக்கம் கொள்ள வேண்டும் என்ற மனத்தத்துவரீதியிலான அசட்டுத்தனத்தால் அவள் கங்காதரனோடு விளையாட ஒரு தம்பியோ தங்கையோ வேண்டுமென்று வெளிப்படையாகவே சொல்லி விட்டது அவரை அயர்த்திக் கொண்டிருந்தது. கருச்சிதைவு, பிள்ளைப்பேறு என்று ஒவ்வொரு முறையும் செத்துப் பிழைத்து இறுதியில் ஒரு வழியாகத் தாய்மை எனும் பதவியை அடைந்து விட்டிருந்த குஞ்சம்மாவுக்கு இன்னுமொரு பிரசவ வலியைத் தர அவர் தயாராக இல்லாமையாலேயே கடுமையான ஒழுக்கத்தைக் கடந்த ஐந்தாண்டு காலமாக மேற்கொண்டிருந்தார்.

‘போச்சு. எல்லாம் போச்சு’ என்று தமக்குள் முனகிக் கொண்டார். குஞ்சம்மாவின் இன்றைய அசட்டுத்தனமான மனப்போக்கினால் விளைவு ஏதும் ஏற்பட்டு விடாதிருக்க வேண்டுமே என்று கவலைப்பட்டார். அவர் மீதான தனது உரிமையை நிலைநாட்டுதலே அவளது இன்றைய நடத்தைக்கு அடிப்படை என்பது அவரைப் புன்னகை புரியவைத்தது. தொடர்ந்து அஞ்சனாவைப் பற்றிய ஞாபகங்களும் அவர் உள்ளத்தில் கிளர்ந்தன. ‘அந்தப் பெண் என்ன கொஞ்சங்கூடத் தயக்கமே இல்லாமல் அப்படி சட்டென்று என் கை மேல் தன் கையை வைத்து விட்டாள்...’ ஆழ்ந்து யோசித்த போது இன்றைய அவளது செயலில் வித்தியாசமாக எதையோ அவரால் உணர முடிந்தது.

‘எனக்கு வர்ற புருஷன் உங்களை மாதிரி இருக்கணும். அது ஒண்ணுதான் வழி...’ என்று அவள் சொன்னது அவரது செவிகளில் திரும்பத் திரும்ப ஒலிக்கலாயிற்று.

அவர் உறங்குவதற்கு அன்று வெகுநேரமாயிற்று.

# 19

நரேந்திரநாத் பானர்ஜியிடமிருந்து ராஜாராமனுக்கு ஒரு நீண்ட கடிதம் வந்தது.

‘அன்புள்ள அய்யா!

நமஸ்கார்.

எப்படி இருக்கிறீர்கள்? அம்மா எப்படி இருக்கிறார்? அமராவதி, அஞ்சனாதேவி இருவரும் வழக்கமான உற்சாகத்துடன் இருக்கிறார்கள் என்று நம்புகிறேன். ஒரு மிகச்

“இந்தப் பழக்கடைக்காரர் கொஞ்சம் ‘குழப்பமான டைப்’னு நினைக்கிறேன்..!”

“ஏன்...?”

“ரஸ்தாளி மாம்பழம், மல்கோவா மாதுளை, பங்கனபல்லி வாழைப்பழம் கிடைக்கும்’னு போர்டு எழுதிப் போட்டிருக்கார் பாருங்க...!”

- ஜூனியர் தேஜ்



சுவையான விஷயம் பற்றித் தெரிவிக்கவே இந்தக் கடிதத்தை எழுதுகிறேன்.

தென் ஆப்பிரிக்காவில் வக்கீல் தொழில் நடத்தி வரும் மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி என்பவர் பற்றிய சுவாரசியமான தகவல்கள் கிடைத்துள்ளன. 'இந்திய சுயராஜ்ஜியம்' எனும் தலைப்பில் குஜராத்தி மொழியில் இவர் ஒரு நூலை எழுதி வெளியிட்டுள்ளார். எனக்குக் குஜராத்தி எழுதப் படிக்கத் தெரியாவிட்டாலும் பேசினாலோ, படித்தாலோ புரிந்து கொள்ளுவேன். இதைப் படித்து என் குஜராத்தி நண்பன் ஒருவன் சொன்ன போது மெய்சிலிர்த்துப் போனேன். அதன் ஒவ்வொரு சொல்லும் ஆணி அடித்தாற்போல் விழுந்துள்ளது. இந்த மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி இந்தியாவுக்குத் திரும்பி வந்து திலகரின் இடத்தை நிரப்பினால் எவ்வளவு நன்றாக இருக்கும் எனும் எண்ணம் அதைப் படிக்கும் ஒவ்வோர் இந்தியனுக்கும் வரும். அந்த அளவுக்கு அது ஓர் அற்புதமான புத்தகமாகும். இந்தப் புத்தகத்தை மகராஷ்டிர மாகாணம் தடை செய்துள்ளது என்பதிலிருந்தே இது எத்தகைய புரட்சிகரமான ஒன்றாக இருக்க வேண்டும் என்பதைத் தாங்கள் புரிந்து கொள்ளலாம்.

"இந்திய சுயராஜ்ஜியம்" என்னும் இவரது அருமையான நூலைப் படித்த பிறகு எங்கள் தீவிரவாதக் கொள்கை மட்டுமே சரி என்பதாக இதுகாறும் நாங்கள் கொண்டுள்ள நம்பிக்கையை மறுபரிசீலனை செய்யும் எண்ணம் வரத்தான் செய்கிறது. காந்தியோடு ஒப்புதல் இல்லாவிட்டாலும், அவர் சொல்லுகிறவற்றுக்கு உள்ள அழுத்தமும் ஆழமும் அவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும் எனும் ஆர்வத்தை விளைவிக்கவே செய்கின்றன. ஒருவேளை காந்தியைப் பற்றி ஏற்கெனவே நீங்கள் நிறையக் கேள்விப்பட்டுள்ளீர்களோ என்னவோ, அப்படியானால் கொல்லன் பட்டறையில் ஊசி விற்பதாக ஆகும்.

நான் நலமாக இருக்கிறேன். என் கடிதங்களால் தங்களுக்கு ஏதேனும் தொல்லை ஏற்பட வாய்ப்பு உண்டா என்பதை அறிய எனக்கு வாய்ப்பில்லை. உங்களையெல்லாம் பார்க்க மிக ஆவலாக இருக்கிறது. இனி எப்போது பார்க்கப் போகிறேனோ. அருணாசலம் பற்றிய தகவல் தெரிய இங்கிலாந்துக்கும் சென்னைக்குமிடையே செல்லும் கப்பல் தொழிலாளர்கள் மூலம் இரகசியக் கடிதப் பரிமாற்றதுக்கு வழி உள்ளதென்று சொன்னேனே, அது நினைவிருக்கிறதல்லவா? அந்த வழியில்தான் நீங்கள் முயன்று பார்க்க வேண்டும். சென்னைத் துறைமுகத்தில் செபாஸ்டியன் என்று ஒரு பியூன் இருக்கிறான். அவன் ஓர் அலுவலரிடம் பியூனாக இருப்பதால் டெலிஃபோனில் அவனோடு நேரடியாகத் தொடர்பு கொள்ள முடியும். ஆனால் காலை ஒன்பதுக்குள் கூப்பிடுவது நல்லது. ஒன்பதரைக்கெல்லாம் அவனுடைய அதிகாரி வந்து விடுவார். அந்த ஆளின் வீட்டு விலாசம் எனக்குத் தெரியும். அதையும் கீழே கொடுத்துள்ளேன். நீங்கள் அவனோடு தொலைபேசியில் பேசுங்கள். அவனது வீட்டு விலாசத்துக்கு ஒரு தபால் வருமென்றும் அதன் வெளி உறையைக் கவனமாய்ப் பிரித்தால் அதனுள்ளே இன்னோர் உறை இருக்குமென்றும் அதை இங்கிலாந்துக்குச் செல்லும் கப்பல் ஊழியர்களுள் ஒருவனாகிய பீட்டர் ஜேம்சிடம் சேர்த்து விடுமாறும், பீட்டர் ஜேம்ஸே அதற்குரிய கூலி தருவான் என்றும் கடிதத்தில் கூறுங்கள். இதற்குள் நானும் அண்ணன் இந்திரநாத் பானர்ஜிக்கு இது பற்றி எழுதுகிறேன். இங்கிலாந்துக்குக் கப்பல் வந்து சேர்ந்ததும் அவன் பீட்டர் ஜேம்சுடன் தொடர்பு கொண்டு கடிதத்தை அவனுக்குரிய வழியில் பெற்றுக் கொண்டு பணமும் கொடுத்து விடுவான். உங்கள் மகன் விஷயமாக நீங்கள் அவனை விசாரிக்கலாம். அவன் அனுப்பும் பதில் அடுத்த கப்பலில் சென்னைத் துறைமுகப் பியூன் செபாஸ்டியனுக்கு வரும். நீங்கள் கப்பல் வந்த பிறகு அவனோடு மறுபடியும் தொடர்பு கொண்டு கடிதத்தைப் பெற வேண்டும். ஜாக்கிரதையாகத் திட்டமிடப்பட வேண்டிய காரியம். (உறைமீது 'எக்ஸ்-ஒய்' எனும் எழுத்துக்களைத்தான் நீங்கள் எழுத வேண்டும். பெயரையன்று.)

தங்கள் அன்பு மகன்,

..........................................

கடிதத்தை ஒளித்து வைத்து விட்டு ராஜாராமன் சென்னையிலிருந்து இங்கிலாந்துக்குக் கப்பல் புறப்பட இருக்கும் நாளைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டார். 'கொஞ்சம் பிசகினாலும் போதும், மாட்டிக் கொள்ள நேரும்' என்னும் அச்சத்தால் அவருக்குள் ஒரு படபடப்பு ஏற்பட்டது. லண்டனில் இந்தியா விடுதியில் தங்கி இருக்கும் இந்திரநாத் பானர்ஜிக்கு அவர் உடனே கடிதம் எழுத உட்கார்ந்தார். இந்தக் கடிதத்தின் விளைவு எதிர்பாராத ஒன்றாக இருக்கப் போகிறது என்று அவரது உள்மனம் எதனாலோ இரைந்து கூவியது.

(தொடரும்)



முற்றும் இருள் சூழ்ந்த மேடையில், ஒரு சிறிய விடிவெள்ளி போன்ற விளக்கு உயிர் பெற்றது. திடீரென்று ஆவேசம் கொண்டாற்போல், கிடார் ஸ்ருதி உயர, ஒரு கட்டைக் குரல் அதிஅற்புத உற்சாகத்தோடு ஆங்கிலத்தில் மைக்கைக் கடிக்க, 'மிஸ் ரோஸலீனா ஃப்ரம் பாம்பே' என்கிற அந்தக் கடைசி வாக்கியம் மட்டும்தான் என் காதுகளில் விழுந்தது.

விளக்குகள் மெள்ள வெளிச்சம் தர, மேடை நடுவில் ஒரு பொம்மை மெள்ள உயிர் பெறுகிற மாதிரி இருந்தது. விஸ்கி, சிகரெட் மணம் கலந்த விசில்கள் கூரையைப் பிய்த்தெறியப் புறப்பட்டன.

அந்தப் பெண் குனிந்து நிமிர்ந்து வணக்கம் சொல்கையில் என் பக்க மேஜைக்காரன்,

## சுபமூகா

நாற்காலியைத் தள்ளி விட்டு, தடுமாறி நின்று, 'ஹுய்' என்று கூச்சலிட்டு, 'டான்ஸ்' என்கிற மாதிரி என்னவோ செய்தான். அந்தப் பெண்ணை விட்டு விட்டு அவனை ஆச்சரியமாய்ப் பார்த்த நான், குமாருக்கு பெரிய ஆச்சரியமாய் தெரிந்திருக்க வேண்டும்.

"பிடிக்கலியா? போயிடலாமா?" என்றான்.

'பிடிக்கலை' என்று மனசு சொல்லச் சொன்னாலும், என் வயது மறுத்தது. எந்த அர்த்தத்தையும் கொடுத்து விடாத மாதிரி ஜாக்கிரதையாகத் தலையை ஆட்டி விட்டு திரும்ப மேடையை நோக்கினேன்.

கண்களைக் கூசச் செய்கிற வெண்மை - அவள் உடலெங்கணும்! சிக்கனமான உடைகள். அதி சிக்கனம்! ஆனால் அழகில் நேர் எதிர் - இவ்வளவு அழகை வைத்துக் கொண்டு இவள் ஏன் இங்கு ஆட வந்தாள் என்று அசட்டுத்தனமாக ஒரு கேள்வி மனத்



தில் முள் ஆனது.

பக்கத்து மேஜைக்காரன் என்னவோ இந்தியில் உயர்குரலில் கத்த, 'ஷ்ஷ்...' என்று இன்னொரு மேஜை மிரட்டியது. விநாடியில் விஸ்கி பாட்டில் உடைந்து பறந்தது. 'ச்ச்லிங்...' 'ஆய்ஊய்' கூச்சல்கள்...

குமார் என் கையைப் பற்றி இறுக்கி இழுத்து எழுந்தான். எதிரே ஓடி வருகிறவர்கள் மேல் முட்டி மோதி, திசை புரியாமல் ஓடினோம்... சே! ஏன் வந்தேன் இதற்கு?

எனக்கு அப்பா, அம்மா ஞாபகம் வந்தது..

அவசரமாக எழுந்து விட்டாலும் உடனே போய் இப்போது சாதித்தாக வேண்டியது ஏது மில்லை. இன்னும் ஒரு மணி நேரத்தை நான் கழித்தாக வேண்டும். அடுத்த ஷோவுக்கு, என் விரல்கள் கிடாரில் நடனம் புரிய வேண்டும். ஒரு மணி நேரம் வாசிக்க, மூன்று மணி நேரங்கள் வீணாக்க வேண்டும். ஐநூறு கொடுக்கிறார்கள். வேலையில்லாப் பட்டதாரிக்கு ஐநூறு அமிர்தம் அல்லவா? அதுவும் பகுதி நேரம்!

இந்தியன் செக்ஷன் என்று அரை மணி நேரம் - கேபரே ஒரு மணி நேரம் - அப்புறம் அரை மணி நேரம் உணவு இடை வேளை - திரும்ப அடுத்த காட்சி - இந்தியன் செக்ஷனுக்கு மட்டும் கிடார் வாசித்து விட்டு, கேபரே எல்லாம் பார்க்காமல் ரொம்ப நல்ல பிள்ளையாக வெளியே வந்து விடுவேன். இன்று குழுவின் பாடகன் குமார் வம்புக்கிழுத்தான். 'நீ ஆம்பிளையான்னு எனக்குப் பெரிய சந்தேகம்!' என்றான். 'அவனவன் கேபரேன்னு அலைஞ்சுகிட்டு அம்பது ரூபா கொடுத்து வர்றான். ஃப்ரீயா கூப்பிட்டாக் கூட வேணாம்னு ஓடுறியே! நாளைக்கு டாக்டர் கிட்டே செக் பண்ணிக்க!' என்றான். வீராவேசமாக மீசை முறுக்கி விட்டுக் கொண்டு, 'இந்தியன் செக்ஷன்' ஆனதும் வெளியே வராமல் அங்கேயே தங்கி விட்டேன்! நடுவில் இப்படி ஓடி வந்ததற்கும் குமார் நிச்சயம் இன்னொரு டாக்டர் முகவரி கொடுக்கக்கூடும்.

எனக்கும் சின்ன வயதில் டாக்டர் ஆக வேண்டும் என்று ஆசை இருந்தது. ஆனால், B.Sc., STATISTICS கிடைத்ததே பெரிய பகீரதப் பிரயத்தனமாகப் போய் விட்டது.

'கம்ப்யூட்டர் ப்ரோகிராமர் ஆகி கத்தை கத்தையா பணம் கொண்டு வந்து காட்டறேன்!' அப்பாவிடம் சொல்லி விட்டு, ஊர் விட்டு வந்தது ஞாபகத்தில் மின்னியது...

அப்பா -

தேற்றம் 1, தேற்றம் 2 என்று தன்னைத் தேற்றிக் கொண்டு விட்ட - வாழ்க்கையில் வேறெதுவும் பெரிதாக வேண்டாம் என்று முடிவு செய்து கொண்டு விட்ட - ஏணிப் படி! 'ஏன் இப் படி?' என்று நான் எத்தனையோ முறை சாடிய உயர் நிலைப்பள்ளி ஆசிரியர்! பள்ளியின் குண்டூசி கூட வீட்டுக்கு கொண்டு வராமல், 'பிழைக்கவே தெரியலீங்க உங்களுக்கு!' என்று அம்மாவால் குத்திக் காட்டப்பட்டவர்.

அப்பா இப்போது என்



''ஃபிலிம் இன்ஸ்டியூட்ல படிச்சதா அவர் சொல்றதை ஏன் யாரும் நம்ப மாட்டாங்குறாங்க?''

''பின்னே, புரொடியூசர் கோர்ஸ் படிச்சதால சொல்லித் திரியறார்!''

- கமுதி எஸ். சேதுராமன்

னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருப்பார்? பையன் வெளிநாடு போவதற்கு தயாராகிக் கொண்டிருப்பான் என்று கூட நினைக்கக்கூடும். அவருக்கு நான் பெங்களூர் வருவதே பிடிக்கவில்லை. இதே ஒரு வெளிநாடு அவருக்கு!

அவரைப் பொறுத்தவரை நான் - விரல் வைத்தால் கடிக்கத் தெரியாத ஜந்து! பெங்களூருக்குத் தனியே அனுப்ப பயப்பட்டு, ("அங்க போய் 'கன்னடத்தில்' பேந்தப் பேந்த விழிக்கக் கூட உனக்குத் தெரியாது!") அவரும் கூட வந்து, என் கைகளைப் பிடித்து, தன் தம்பியின் கைகளில் வைத்து, 'குரு.. உன்னையே நம்பி..' என்று வசனமெல்லாம் பேசி விட்டுப் போனவர்! அவர் நிச்சயம் அனுமானிக்க முடியாத விஷயம் - நான் இங்கு இந்த கேபரே கிளப்பில் கிடார் வாசிப்பது!

கல்லூரி நாட்களில் விளையாட்டாக கற்றுக் கொண்ட வித்தை! இப்போது வேலைக்கு அப்ளிகேஷன் போட, அட்லீஸ்ட், இன்னொருவர் கை எதிர்நோக்க வேண்டிய கட்டாயத்தில் நானில்லை.

அப்பா சொன்ன மாதிரி வாத்தியாராகப் போயிருந்தால் இந்தத் துன்பம் எல்லாம் ஏன் என்று மனசில் தோன்றத்தான் செய்தது. வீம்பு! 'உங்க மாதிரி எல்லாம் கஷ்டப்பட நான் தயாரா இல்லை!' என்று பெரிய மனிதன் மாதிரி பேசி விட்டேன். எனக்கு ஒரு காரணம் வேறு கிடைத்து விட்டது. 'லஞ்சம் கொடுத்தால் வாத்தியார் பதவி கிடைக்கும்' என்கிற அந்த ஒரு கொழு கொம்பையே பற்றிக் கொண்டு அந்த வெள்ளத்திலிருந்து தப்பி விட்டேன். 'லஞ்சம் கொடுத்து, என் தன்மானத்தை அடகுவைத்து சேர மாட்டேன்!' என்று வீரவசனம் பேசி விட்டேன். என் தாயும் வீரத் திலகம் இட்டு விட்டார்! 'இவர் மாதிரி பட்டிக்காட்டுலே கிடக்க வேண்டாமப்பா! நீ பெரிய ஆளாய் வாழணும். நீ நடந்து வந்தா, இந்த ஊர்ப் பயல்கள் எந்திரிச்சு நிக்கணும்!' என்று கோட்டை கட்டினாள். நான் மாடிப்படியில் ஒரு சாட்டையை வைத்துக் கொண்டு ஸ்டைலாக நின்று கொண்டிருப்பது போல் மனக் கண்களில் காட்சியை ஓட விட்டான்.

பெங்களூர் சித்தப்பா குரு வேலை செய்யும் தொழிலகத்தில் ஒரு வேலை காலி இருப்பதாகவும், அதற்கு கம்ப்யூட்டர் தெரிந்திருக்க வேண்டும் என்றும் தெரியப் போக, எனக்கு குஷியோ குஷி! என்னவோ அப்பாயிண்ட்மென்ட் ஆர்டரே வந்து விட்ட சந்தோஷம்!

அந்தக் கனவுக் குமிழி ரொம்ப நாட்களுக்குத் தாக்குப்பிடிக்காமல் தன்னை முடித்துக் கொண்டது. எனது சித்தப்பாவை விடப் பெரிய பதவிக்காரர் ஒருவர் தனது ஒண்ணு விட்ட மச்சினியின் ஒண்ணு விட்ட தம்பிக்கு அந்தப் பதவியை சிபாரிசு செய்து விட்டார்!

அப்போதுதான் குமாரின் அறிமுகம் கிடைத்தது. சித்தப்பாவின் நண்பருடைய மகன். ஒரு இசைக் குழுவின் பிரபல பாடகன். தமிழன்தான்! ஆனால் பிறப்பிலிருந்து பெங்களூர் என்பதால் தமிழைக் கடித்துக் குதறுவான். அவன் இசைக் குழுவில் சேர்ந்து 'சும்மானாச்சுக்கும்' கிடார் வாசிக்கப் போக, தொடர்ந்து வரச் சொல்லி விட்டார்கள். பகுதி நேரப் பணி. முழுமனதுடன் ஒப்புக் கொண்டேன்...

நான் திரும்ப 'டாக் ஆஃப் தி டவுன்' நுழைந்த போது, இசைக் குழு நண்பர்கள் எல்லோரும் எழுந்து நின்று கை தட்டினார்கள். நான் சுற்றுமுற்றும் பார்த்து, யாராவது கவனிக்கிறார்களா என்று கவனித்து, முகத்தை மூடி செம்மையை மறைக்கப் பார்த்தேன்.

"என்னப்பா? சாமியாரைக் கெடுத்துட்டீங்களேப்பா!" என்றார் ஸ்டீபன் - ட்ரம்மர்!

நான் கண்களை இறுக மூடிக் கொள்ள, பக்கென்று எல்லோரும் சிரித்தார்கள்.

எனக்கு திடீரென்று அந்த ஆசை மின்னலெனத் தோன்றியது. வாழ்க்கை இப்படியே இருந்து விட்டால் நன்றாக இருக்கும் அல்லவா? எதற்கு கால்கள் தேய எல்லா கம்பெனி படிக்கட்டுகளும் ஏறி இறங்க வேண்டும்? எப்போது சுதந்திரம் கிடைத்தது? யார் எவரைக் கொன்றார்கள்? அந்த மேட்ச்சில் எத்தனை ரன்? எந்த மலையில் யார் ஏறினார்கள்? இப்படியெல்லாம் தலையை உடைத்துக் கொண்டு போய் பதில் சொல்லி...

இன்னும் இதே துறையில் முன்னேறி, காலூன்றி விட்டால்?

இண்டியன் செக்ஷன் முடித்துக் கொண்டு நான் கிளம்பிய போது, மானேஜர் கூப்பிடுவதாக எனக்கு யாரோ சொல்ல, அவரது அறைக்குச் சென்றேன். அவரை கிளப்பில் சேர்ந்த அன்றைக்குப் பார்த்தது. அவ்வளவே! இன்றுதான் இரண்டாவது முறையாக! 'எதற்காகக் கூப்பிடுகிறார்?!'

அவர் குடித்திருந்தார் என்பதை அவரது கண்கள் சிவப்பாக சொல்லிக் கொண்டிருந்தன.

"உனக்கு டிரம்ஸ் வாசிக்கத் தெரியுமா?"

"தெ... தெரியாது சார்!"

"ம்... தெரியாதா? எல்லாம் கத்து வைச்சிருக்கணும் இல்லியா? நாளைக்கு ஒருத்தன் வரலைன்னா, இன்னொருத்தன் அட்ஜஸ்ட் பண்ணணும் இல்லியா?"

"ஆ...மா சார்!"

"கேஷ்லே பணம் வாங்கிக்க. நாளையிலிருந்து வர வேணாம்!"

எதன் மீது நாம் அதிகம் ஆசை வைக்கிறோமோ அது நமக்கு நிலைத்திருப்பதில்லை. இசைத் துறையில் மேன்மேலும் முன்னேற வேண்டும் என்கிற அதி அற்புத ஆசை ஏன்தான் வந்ததோ என்று தோன்றியது. உண்மை என்னவெனில், கிரிக்கு வேலை கொடுப்பதற்காக என்னிடமிருந்து அது பறிக்கப்பட்டது! கிரி - பல குரலில் பேசி மகிழ்விப்பவன்! கிடார், டிரம்ஸ் எல்லாம் வாசிப்பான். கீபோர்டு பரிச்சயம் வேறு! அவன் இருந்த கிளப்பில் ஏதோ தகராறு வர, 'பைபை' சொல்லி விட்டு வந்து விட்டான். சமயத்தை கைவிடாமல் அவனை இழுத்துக் கொண்டு, என்னை வெளியே துப்பினார்கள். அவ்வளவே!

அப்பா மனத்தில் தோன்றி, 'போட்டி உலகம்டா இது!' என்று சொல்லி மறைந்தார்.

நானும் அந்த மாதிரி திறமைசாலியாக இருந்திருந்தால் எங்கு போனாலும் சிறப்பு இருந்திருக்கும் என்று ஒருகணம் தோன்றியது. ஆனால், பெரும் சாகரத்தின் பெரிய அலைக்குப் பின்னால் இன்னும் பெரிய பெரீஇஇய அலைகள் தோன்றிக் கொண்டே இருந்தன. முடிவு இல்லாத போட்டி அல்லவா இது?

சாகசப் பறவை போல் வானத்தை நோக்கி மழைத் துளிக்காக காத்துக் கொண்டே நிற்பது தேவையா? இப்போதைக்குக் கொஞ்சம் கார்ப்பரேஷன் குழாய்த் தண்ணீர் ஒரு வாய் போட்டுக் கொண்டால்

They are cute
they are elegant



elegant®

T-SHIRTS, JEANS & CASUAL WEAR

**BHARAT HOSIERY MILLS**

**FACTORY**: KHETANI MILL COMPOUND, 107/A-4, BAZARWARD, SONAPUR LANE, BAIL BAZAR, KURLA (W), BOMBAY-400 070. Tel: 5145029/5142427.

**SALES OFFICE**: DADAR-MANISH MARKET, SHOP NO. 113, 114, GROUND FLOOR, SENAPATI BAPAT MARG, OPP. DADAR RAILWAY STATION (W), BOMBAY-400 028.

Campaign/BHM 06/94



"என்னை மாதிரி துரதிர்ஷ்டசாலி யாரும் இருக்க மாட்டாங்க."

"ஏன்?"

"கல்யாணப் பந்தியில், என் முறை வரும் போது, அப்பளம் தீர்ந்து போயிடும். கொண்டு வரும் போது, அடுத்தவனிட்டேயிருந்து ஆரம் பிச்சிடுவான்...!"

- ஆர். வசந்தகுமார்.

குறைந்தா போகும்?!

அந்தக் கடிதத்தை எழுதுவதற்கு எனக்கு கூசிப் போனது. உடம்பில் ஒட்டுத் துணி இல்லாமல் எழுதுகிற மாதிரி கற்பனை! என்னுள் நான் தோற்றுப் போய் விட்டேன் என்பதை வெளிப்படையாகச் சொல்லாவிட் டாலும், அந்தக் கடிதத்தைப் படிக்கும் போது அப்பா புரிந்து கொள்வார் என்று தோன் றியது. கடிதத்தை தபால் பெட்டியில் சேர்க் கப் போகும் போது கூட, போடுவதா வேண் டாமா என்று நிதானித்தேன்.

என் கடிதம் போன ஒரு வாரத்துக்குள் ளாகவே அப்பா உடனடியாக புறப்பட்டு வரும்படி தந்தி கொடுத்து விட்டார். 'பார்க்க' வேண்டியவர்களைப் 'பார்த்து' ஏதாவது செய்திருப்பார் என்று தோன்றியது. என்னை யறியாமல் தலைதாழ்ந்தது.

நான் பெட்டியை எடுத்துக் கொண்டு கிளம்பிய போது, சித்தப்பா கடைசி முயற்சி யாகச் சொன்னார்.

"நீ இங்கே இருக்கிறதாலே எனக்கொண் ணும் பாரம் இல்லை. கொஞ்ச நாள் இருந்து இன்னும் நீ முயற்சி செய்யலாம்!"

என் கண்களில் நீர் துளிர்த்தது.

"நான் ஓய்ஞ்சுட மாட்டேன் சித்தப்பா!" என்று மட்டும் சொன்னேன்.

என்ன செய்வது? போட்டி உலகம்!

இன்னொரு போட்டி - சிபாரிசு வருவதற் குள் இதையாவது தக்கவைத்துக் கொள்ள வேண்டும்.

எல்லோருக்கும் கையாட்டி விட்டு, பெட் டியை எடுத்துக் கொண்டு, செருப்பைத் தேடிய போது, கதவடியில் அந்த கவர் கண் களில் பட்டது. கடந்த வாரம் இண்டர் வியூவுக்குப் போயிருந்த கம்பெனி பெயர் கவரின் மேல்!

அவசர அவசரமாக பெட்டியை வைத்து விட்டு, கவரை எடுத்துப் பிரித்தேன். என் னுள் உற்சாகம் உற்பத்தியானது.

"சித்தப்பா - ட்ரிப் கேன்சல்ட்!" என்று கூவினேன். அந்த அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டருக்கு முத்தம் கொடுத்தேன்!

தபாலாபீசுக்கு ஓடினேன். அப்பாவுக்கு இரண்டு வரி தந்தி கொடுத்தேன். கடிதம் எழுதியிருக்கலாம்தான்! ஆனாலும் அப்பா தந்தி கொடுத்ததற்குப் பதிலாக நானும் தந்தி கொடுக்க வேண்டும் என்று அற்பமாக அப் போது தோன்றியது. என் வெற்றிச் செய்தி சீக்கிரமாக அப்பாவை எட்ட வேண்டும்: 'நான் வாத்தியாராக ஏணிப்படி வேலை செய்யப் பிடிக்கவில்லை அப்பா!' என்று மனசுக்குள் சொல்லிக் கொண்டேன்.

அந்த ஏசி ரூம் குளுமை மனசுக்குள் ளும் ஊடுருவிய மாதிரி தெரிந்தது. எம்.டி. அறை! கம்பெனி பற்றி நிறைய பேசினார். தேர்வில் நான் அருமையாக செய்திருந்ததை மனதாரப் பாராட்டினார். என் வேலையைப் பற்றி விரிவாக விளக்கம் கொடுத்தார்.

வாரம் கடந்தது. வேலை முடிந்து வீட் டுக்கு வந்த போது குஷியாகிப் போனேன் - அப்பாவும் அம்மாவும்!

அப்பாவின் முகத்தில் பெருமிதம்.

"சொன்ன மாதிரியே செஞ்சு காட் டிட்டே! வெரிகுட்!" என்று தட்டிக் கொடுத் தார். எனக்குக் காலரைத் தூக்கி விட்டுக் கொள்ள கைகள் துறுதுறுத்தன.

"சேர்ந்த ஒரு வாரத்துக்குள்ளேயே கம் பெனியில் நல்ல பேர் அப்பா! இதுக்கு முன் னாலே இருந்த ப்ரோகிராமர்ஸை விட நான் அருமையானவன்னு எல்லோரும் பேசிக்கி றாங்க!'

தினம் இரண்டு அல்லது மூணு மணி நேரம் எல்லா எக்ஸிகியூட்டிவ்ஸுக்கும் எப் படி டேட்டா என்ட்ரி அப்புறம் பிராசஸிங் பண்றதுன்னு சொல்லிக் கொடுக்கணும். நான் கொடுக்கிற விளக்கங்களைப் பார்த்து எம்.டி. மனம் திறந்து பாராட்டினார்!" என் றேன்.

"தந்தை எட்டடி பாய்ஞ்சா பையன் பதி னாறு அடியாவது இருக்கணுமில்லியா? சொல்லப் போனா, உன் வேலை கூட ஒரு மாதிரி வாத்தியார் வேலைதான்னு சொல்லு!"

அப்பா புன்னகையுடன் சொன்னார்.

அந்தப் புன்னகையின் பின்னால் ஒளிந் திருந்தது பூரிப்பா, இல்லை, கேலியா?

புரிந்து கொள்ள முடியவில்லை!



## 20

நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தன. சிவப்பிரகாசம் ராஜாராமனை மாறுவேடங்களில் அவ்வப்போது சந்தித்துக் கொண்டிருந்தான். அவன் போட்ட மாறுவேடங்கள் அவரை அயர்த்தின. அவன் தமக்கு எதிரில் வந்து நின்ற போது சட்டென்று அடையாளம் தெரிந்து கொள்ள முடியாமல் திணறினார். எனவே ஒரு குறிச் சொல்லை அவன் சொல்ல வேண்டும் என்று இருவரும் ஏற்பாடு செய்து கொண்டார்கள். ஒருமுறை அந்தக் குறிச்சொல்லைச் சொல்லுகையில் அருகே இருந்த மனிதரோ மனிதர்களோ அடுத்த தடவை அவன் வரும் போது இருப்பின், சங்கேதச் சொல் என்று ஊகிக்கக்கூடும் என்பதால் மூன்று சொற்களுக்கு ஏற்பாடு செய்து கொண்டார்கள்.

நரேந்திரநாத் பானர்ஜி சொல்லிக் கொடுத்த யோசனைப்படி ராஜாராமன் சென்னைத் துறைமுகப் பியூன் செபாஸ்டியனின் ஒத்துழைப்புடன் லண்டனுக்குக் கடிதத்தை யனுப்பியாகி விட்டது. அங்கிருந்து கப்பல் வரும் நாளுக்காக இப்போது காத்துக் கொண்டிருந்தார். இதையெல்லாம் அவர் கொஞ்சம் தயங்கிய பிறகு சிவப்பிரகாசத்திடமே கூறினார். கப்பல் திரும்பி வந்ததன் பின்னர் லண்டனிலிருந்து இந்திரநாத் பானர்ஜி அனுப்பும் கடிதத்தை அது இன்னாருக்குப் போகிறது என்பது செபாஸ்டியனுக்குத் தெரியாவண்ணம் பெறுவது எப்படி என்பதுதான் அவரை அலைக்கழித்துக் கொண்டிருந்தது.

இந்திரநாத்துக்கு எழுதிய கடிதத்தில் உறைமீது தாம் அவனுக்கு எழுதியது போன்றே 'ஒய்' என்னும் ஆங்கில எழுத்தை எழுதுமாறு அவனிடம் கேட்டுக் கொண்டிருந்தார். எனவே கப்பல் வந்த பிறகு செபாஸ்டியனோடு ஃபோன் தொடர்பு கொண்டு 'ஒய்' எனும் குறியீடு உறைமீது உள்ள கடிதத்தை இன்ன இடத்தில் அவன் வைக்க வேண்டும் என்பதைத் தெரிவிக்க வேண்டும் என்று முடிவு செய்து வைத்திருந்தார். ஆனால், எந்த இடம் என்பதைத்தான் அவரால் இன்னும் தீர்மானிக்க முடியவில்லை.

மறைந்திருந்து தம்மைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பை அவனுக்கு அளித்து விடலாகாது என்பதால் அதற்குச் சிவப்பிரகாசத்திடமே யோசனை கேட்டார். முகவாயைத் தேய்த்தபடியும், கன்னத்தைச் சொறிந்தவாறும் சில வினாடிகளை ஆழ்ந்த யோசனையில் கழித்த பிறகு விரலைச் சொடுக்கினான்.

"நான் உங்களுக்கு இதுல உதவ முடியும்."

"நீ போலீஸ்காரனாச்சே, சிவப்பிரகாசம்? நீ

**ஜோதிர்லதா கிரிஜா**





போய் இதுல சிக்கினா உன்னோட வாழ்க்கை, தொழில் எல்லாமே பாழாயிடும்ப்பா."

"அதெல்லாம் நீங்க கவலையே படாதீங்க, சார். போர்ட் ட்ரஸ்டுக்கு வெளியில ஒரு பெரிய வேப்ப மரம் இருக்கு. அதுக்குக் கீழே ஒரு சதுரக் கல்லு மேல ஒரு பிள்ளையார் சிலை இருக்கு. அந்தச் சிலைக்குப் பின்னால சின்னதா ஒரு இடைவெளி இருக்கும். அங்க ஒரு செங்கல்லை வெச்சு அதுக்கு அடியில் உங்களுக்கு வந்த கவரை வெச்சுடச் சொல்லலாம். அந்த அரசமரத்தடிப் பிள்ளையாருக்குத் தோப்புக்கரணம் போட எத்தனையோ பேரு வருவாங்க. நானும் அவங்கள்ள ஒருத்தனாப் போய்த் தோப்புக்கரணம் போட்டு, ஒரு தோதான நேரம் பார்த்துக் கல்லுக்கு அடியிலேருந்து கவரை அமுக்கிடுவேன். பக்கத்துல நம்பர் ப்ளேட் மாறின என்னோட மோட்டார் பைக் இருக்கும். அதுல உடனே கௌம்பிடுவேன்."

"என்ன வேஷத்துல போறதா இருக்கே, சிவப்பிரகாசம்?"

"பெரிசாத் தொங்கு மீசை வச்சுப்பேன். பட்டை பட்டையா விபூதியைக் குழைச்சு நெத்தி முழுக்கப் பூசிப்பேன். நடுவில பெரிசா ஒரு குங்குமப் பொட்டும் வச்சுப்பேன். கழுத்துல புரள்ற தலைமுடி டோப்பா வெச்சுப்பேன். நேர் வகிடு. சாதாரண வெள்ளை வேட்டி, ஜிப்பா. அம்புட்டுத்தேன். எவனாலயும் கண்டுபிடிக்க முடியாது சார். நீங்களே எத்தினிவாட்டி முழிச்சிருக்கீங்க?"

"அப்படியே வெச்சுப்போம். ஆனா அந்த செபாஸ்டியன் போலீஸ்கிட்டேருந்து - அதா



# கனவு

**சகாப்தம் படைத்த சரித்திரத் தொடர்கதை!**

கோபுலுவின் உயிரோட்டமுள்ள வண்ணப்படங்களுடன்

வது வெள்ளைக்கார அரசாங்கத்துங்கிட்டே ருந்து - பரிசுக்கும் பணத்துக்கும் ஆசைப் பட்டு, முன்கூட்டி அவங்களுக்குத் தகவல் கொடுத்து அங்க வந்து காத்திருக்கப் பண்ணி உன்னைக் கையும் கவருமாப் பிடிச்சுட்டாங் கன்னா?"

"அப்படி ஏதாச்சும் நடந்தா அவனோட உயிருக்கே ஆபத்துன்னு பலதரம் எச்சரிக்கை பண்ணி இருக்கிறதா நரேந்திரநாத் பானர்ஜி சொல்லி இருக்காரில்ல? அதை நம்பி எறங்க வேண்டியதுதான்!"

"உன் தம்பி ரொம்ப ட்யூட்டி உணர்வு உள்ளவன், இல்லியா? சப்போஸ், அவனுக் குத் தெரிஞ்சு போறதுன்னு வெச்சுக்கோ. காட்டிக் கொடுப்பானா? சொந்த அண் ணன்னு பார்ப்பானா?"

"அவன் ரொம்ப ட்யூட்டி எண்ணம் உள்ள வந்தாங்க. அதனால, அவன் எப்படி நடந்துப் பான்கிறதைப் பத்தி என்னால சரியா ஊகிக்க முடியல்லீங்க. என்னதான் இருந்தாலும் கூடப் பிறந்த அண்ணனாச்சேன்னு கூடவா பார்க்க மாட்டான்?" என்று அவன் சிரித் தான்.

தன் தம்பியைப் பற்றிய முற்றும் சரியான கணிப்பு சிவப்பிரகாசத்துக்கு இல்லை என் பதை அவன் இரண்டு விதமாகவும் பேசியதி லிருந்து புரிந்து கொண்டதில் ராஜாராமனின் கவலை அதிகரித்தது.

"நீங்க கவலையேபடாதீங்க, சார். நான் பார்த்துக்கறேன்" என்று அவருக்கு ஆறுதல் கூறி விட்டு அவன் புறப்பட்டுப் போனான்.

"அஞ்சு வருஷம் கழிச்சு மறுபடியும்



## அருள்வாக்கு

காய்கறித் தோட்டம் போடுவதற்கு என்ன பலன்? கத்திரிக்காய் ஸாம்பார், வெண்டைக்காய் கறி இத்யாதி தானே? ஒருத்தருக்கு இந்த ஸாம்பாரும் கறியும் வேண்டியிருக்கவில்லை. ஆனாலும் அவருக்கு என்னவோ வேதனை - புத்ர சோகம். business - இல் loss மாதிரி என்னவோ ஒன்று. அது தெரியாமலிருக்க, வெட்டி, கொத்தி ஏதாவது கார்யம் பண்ணி மறக்கடிக்கலாமென்று காய்கறித் தோட்டம் போடுகிறார். அதற்காக, தோட்டம் போடுவதன் பலன் என்ன என்று கேட்டால், 'புத்ர சோக நிவ்ருத்தி' என்று சொல்லலாமா?

இப்படித்தான் ஒரு கர்மாவின் இஹாமுத்ர பலன் (இஹ - அமுத்ரபலன்: பூலோக, ஸ்வர்க்கலோக இன்பப் பயன்கள்.) வேண்டாமென்று கர்மா செய்கிறவன் பெறும் சித்த சுத்தியைக் கர்ம பலனாகச் சொல்வதில்லை. அது ஈச்வர ப்ரஸாதமாக அவன் பெறுவதே.

"நேர்ப் பலன் தனக்கு வேண்டாமென்றிருந்தும், நம்முடைய ஆக்ஞை என்பதாலும், ஸமூஹ ஒழுங்கை உத்தேசித்தும் நம்முடைய ப்ரீதிக்காகவே இவன் இவ்வளவு நன்றாகக் கர்மாநுஷ்டானம் செய்கிறானே! இந்த மனோபாவத்துக்காக இவனுடைய சித்தத்தின் அசுத்தங்களைப் போக்குவோம்" என்று ஈச்வரனே அநுக்ரஹிப்பதுதான் சித்த சுத்தி.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

உண்டாயிருக்கா குஞ்சம்மா. ஒரு பிரசவத்துக்கும் இன்னொரு பிரசவத்துக்கும் இடையில் இவ்வளவு பெரிய இடைவெளி இருக்கிறது நல்லதில்லேன்னு சொல்லுவா. அதனால அவளை முன்னெப்போதையும் விட இன்னும் அதிக ஜாக்கிரதையோட கவனிச்சுக்கணும், ராமசாமி" என்று விசாலம் கவலையாகச் சொன்னது கேட்டு,

"ஆகட்டும், அக்கா. டாக்டர் ராமலட்சுமி ரெட்டிகிட்ட கூட்டிண்டு போய்க் காமிக்கிறேன்..." என்றார்.

மறுநாளே டாக்டர் ராமலட்சுமி ரெட்டியிடம் குஞ்சம்மாவை அவர் அழைத்துப் போனார். ஏதோ மருந்துகளையும் மாத்திரைகளையும் எழுதிக் கொடுத்த டாக்டர், உடம்பு கவலைப்படும்படியாக இல்லை என்று அறிவிக்க, ராமசாமிக்கு அப்பாடா என்றிருந்தது. குஞ்சம்மாவுக்குந்தான்.

வழியில், "ஏன்னா, இந்தத் தரம் பொண் பொறக்கணும்னு வேண்டிக்குங்கோ..." என்று அவள் சொன்னது கேட்டு அவருள் சிரிப்புப் பொங்கியது.

"இனிமே வேண்டிண்டு எந்த லாபமுமில்லே. அது என்னிக்கோ முடிவு செய்யப்பட்டு விட்டது. இதெல்லாம் நம்ம இஷ்டப்பட்டபடியா நடக்கும்? பொண்ணு பிறந்தா உன்னாட்டமே அழகா இருக்கணும்!"

"நல்லதுதான்; பொறக்கப் போறது ஒரு சகுந்தலை மாதிரி அழகான பொண்ணா இருக்கட்டும். பாரதத்துக்கு ஒரு பரதனை அவள் தந்த மாதிரி இவளும் சாதனை புரியட்டும்" என்றாள்.

சென்னைத் துறைமுக அரசமரத்தடிப் பிள்ளையாரின் சிலைக்குப் பின்னாலிருந்து உறையை எடுத்துச் செல்ல வேண்டிய நாள் நெருங்க நெருங்க சிவப்பிரகாசம் பரபரப்பில் இருந்தான்.

அன்று மாலை ஞானப்பிரகாசம், "உங்கிட்ட ஒரு சுவாரசியமான ரகசியம் சொல்லணும், அண்ணே" என்றான்.

"என்னது?"

"லண்டன்லேருந்து ஒரு ரகசியத் தபால் இங்க நம்ம மெட்றாஸ்ல ஒருத்தருக்கு நாளைக்கு வருது. அதைத் துறைமுகத்துக்குப் பக்கத்துல இருக்கிற அரசமரத்தடிப் பிள்ளையாருக்குப் பின்னாடி செபாஸ்டியன்னு ஒரு ஆளு கொணர்ந்து வைக்கப் போறான். அவன் வெச்சதுக்குக் கொஞ்ச நேரத்துக்குப் பெறகு அதனோட சொந்தக்காரன் வந்து எடுத்துக்கிட்டுப் போவானாம். அது என்ன லெட்டருன்னு கண்டுபிடிக்கலாம்னு இருக்கேன்..."

சிவப்பிரகாசத்துக்கு நெஞ்சுக்குள் உலக்கையால் இடிபடுகிற படபடப்பு உண்டாயிற்று.

"அப்படியா? உனக்கு யாரு சொன்னாங்க?"

"செபாஸ்டியன்னு சொன்னேனே, அவனைத் தெரியும் எனக்கு. அவன்தான் சொன்னான். அதுக்காகப் பத்து ரூபா கேட்டிருக்கான். தரேன்னிருக்கேன்."

"எதுனாச்சும் வம்பில மாட்டிக்காதே, ஞானப்பிரகாசம்."

"அதெல்லாம் நீ ஒண்ணும் கவலையே படாதேண்ணே. இது மாதிரி ஏதாச்சும் செஞ்சு சீக்கிரமாப் பிரமோஷன் வாங்கணும்..."

"உன்னிஷ்டம்" என்று சொல்லி விட்டு அவனைத் தடுப்பது எவ்வாறு என்ற சிந்தனை

யில் ஆழ்ந்தான் சிவப்பிரகாசம்.

## 21

ராஜாராமன் தமது அலுவல் அறையில் அமைதியற்று உட்கார்ந்து கொண்டிருந்தார். அன்று லண்டனிலிருந்து வரும் உறை அவர் கைக்கு வர வேண்டிய நாள். அதற்காகவே, தான் விடுப்பு எடுத்துள்ளதாய் முந்தைய நாள் அவரைச் சந்தித்துச் சிவப்பிரகாசம் சொல்லிப் போயிருந்தான். நாற்காலியின் முதுகில் சாய்வதும், நிமிர்வதும் எழுந்து நிற்பதும் நடப்பதும் கதவு திறக்கப்படுகிற போதெல்லாம் படபடப்புக் கொள்ளுவதுமாய் அவர் பரபரத்துக் கொண்டிருந்தார்..

கடைசியில் ஒருவழியாக சிவப்பிரகாசம் வந்து சேர்ந்தான். மாறுவேடத்தில் இருந்ததால் சைகை செய்தான்.

அவன் நாற்காலியில் உட்காருவதற்குக் கூட நேரம் கொடுக்காமல், "கவர் வந்து சேர்ந்துடுத்தா, சிவப்பிரகாசம்?" என்றார் தாங்க முடியாத ஆவலுடன்.

"ஒருவழியாக் கொணாந்துட்டேன், சார். அதுக்கு முன்னாடி ஒரு சின்னக் களேபரம், சார்" என்றபடி தன் சட்டைப் பைக்குள் பத்திரமாய் வைத்துக் கொண்டிருந்த 'ஓய்' என்ற பெரிய ஆங்கில எழுத்து எழுதப் பெற்றிருந்த உறையை எடுத்து அவரிடம் கொடுத்த அவன் பெருமூச்சு விட்டான்.

"வீட்டுக்குப் போய்ப் படிக்கலாம்னு தோணுது, சிவப்பிரகாசம். இங்க, ஆபீஸ்ல வேணாம். என்ன சொல்றே?"

"ஒருவிதத்துல அது சரிதான் சார்."

"என்னமோ களேபரம்னு சொன்னியே? என்னப்பா?"

தம்பி ஞானப்பிரகாசத்துக்குச் செய்தி அந்த செபாஸ்டியன் வாயிலாகவே தெரிந்து விட்ட உண்மையை அவன் தெரிவித்ததும், "அடத் துரோகி" என்று ராஜாராமனின் உதடுகள் முனகின.

"அப்புறம்?"

"இன்னிக்குக் காலையில காப்பியில தூக்க மாத்திரையைப் பொடிச்சுக் கலக்கிக் குடுத்துட்டேன். 'கண்ணை என்னமோ திடீர்னு அசத்துதுண்ணே. கொஞ்சம் படுத்துட்டுப் போறேன். ஒம்பதுக்கு எழுப்பு'ன்னு சொல்லிட்டுப் படுத்தான். நான் கதவைச் சாத்திட்டு கிருதாவும் தொங்கு மீசையும் ஒட்ட வெச்சுக்கிட்டு டோப்பா முடியோட பைக்குல போய் அந்தக் கடுதாசை எடுத்துக்கிட்டு வந்துட்டேன்... ஞானப்பிரகாசத்துக்கு உடம்பு சரியில்லாததால அவன் எழுப்ப எழுப்பத் தூங்கிட்டே இருக்கான்னு சொல்லி அவனுக்கும் லீவு சொல்லிட்டேன்..."

"அந்தப் பய செபாஸ்டியன் கொஞ்ச தூரத்துல நின்னுண்டு அப்ப உன்னைக் கவனிச்சிருப்பான்னு சொல்லு."

"கவனிச்சானோ, இல்லாட்டி போயிட்டானோ. அதைப் பத்தி என்ன, சார்? கவர் நம்ம கைக்குக் கிடைச்சுடுச்சு. அப்படியே கவனிச்சிருந்தாலும் என்னை அவனால கண்டு பிடிக்க முடியாதே இன்னார்னு? ஆனா அவனை நான் இன்னொரு மாறுவேஷத்துல போய் நாலு தட்டுத் தட்டலாம்னு இருக்கேன். காட்டிக் கொடுத்தா அவனோட உயிருக்கே ஆபத்து விளையும்கிற எச்சரிக்கையையும் மீறி இப்படி நடந்துக்கிட்டிருக்கானே? அவனைச் சும்மா விடலாமா? ஒரு வாரத்துக்கு எந்திரிக்க முடியாதபடி பண்ண வேண்டாமா?"

ராஜாராமன் எழுந்து நாற்காலி முதுகில் தொங்கிக் கொண்டிருந்த கறுப்புக் கோட்டை எடுத்து மாட்டிக் கொண்டார்.

"நீங்க முதல்ல போய் உங்க காரைக் கிளப்புங்க, சார். நான் பின்னாலேயே என் வீட்டுக்குப் போறேன்."

ராஜாராமன் நன்றி கண்களில் தெரியக் கையசைத்து விடைபெற்றுத் தம் காரில் ஏறிக் கொண்டார். வழக்கத்தை விடவும் விரைவாகக் காரை ஓட்டிக் கொண்டு வீட்டை யடைந்து பரபரப்புடன் உள்ளே போனார்.

அறைக்குள் நுழைந்ததும் கட்டிலில் உட்கார்ந்த ராஜாராமன் மூக்குக் கண்ணாடியை எடுத்து மாட்டிக் கொண்டு பதற்றத்துடன் அந்த உறையைப் பிரித்தார்.

அன்புள்ள ஐயா,

இக் கடிதத்தை எழுதுபவன் இந்திரநாத் பானர்ஜியின் நண்பன். என் பெயர் தங்களுக்குத் தெரிய வேண்டியதில்லை. ஏனெனில் அதை வெளியிடல் எனக்கு ஆபத்தில் முடியலாம். இந்திரநாத் தற்போது இந்தியா விடுதியில் இல்லாததால் கப்பல் தொழிலாளி பீட்டர் ஜேம்சிடமிருந்து தங்கள் கடிதம் என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. தங்களைப் பொறுத்தவரையில் வேற்றாளான நான் அதைப் பிரித்துப் படித்ததற்குத் தங்களிடம் முதலில்

---

"ஆசைக்கு ஒண்ணு, ஆஸ்திக்கு ஒண்ணா?"

"ஊஹூம்... லஞ்சத்துக்கு ஒண்ணு, சம்பளத்துக்கு ஒண்ணு...!"

- ஆர். மணிவண்ணன்






**உதவியாளர் : நூல் நிலையங்கிற போர்டை ஏன் சார் வாசக சாலைன்னு மாத்தச் சொல்றீங்க?**

**நூலகர் : பல பேர் நூல்கண்டு ஸ்டாக் இருக்கான்னு கேட்டுக்கிட்டு வர்றாங்களே, அதனாலேதான்...!**

**- தஞ்சாவூர் ராஜ்பாரதி**

---

மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன். தங்களுக்கு உதவுவது மட்டுமே எனது நோக்கம்.

தங்கள் மகன் அருணாசலம் பிரான்ஸ் நாட்டில் இல்லை என்னும் திட்டவட்டமான தகவல் எங்களுக்கு மேடம் காமாவிடமிருந்து வந்து வெகுநாளாயிற்று. ஆனால் அத்தகவல் வந்த நேரத்தில் இந்திரநாத் பானர்ஜி எங்களுடன் இல்லை. இருந்திருந்தால் எப்படியாவது அந்தத் தகவலைத் தன் தம்பி நரேந்திரநாத் மூலம் தங்களையடையச் செய்திருப்பான். அருணாசலம் பிரான்சையடையாததால் மிக மோசமான நிலைக்கு அவன் ஆளாகி இருக்கலாம் என்று நாங்கள் அஞ்சுகிறோம். ஒன்று கண்டுபிடிக்கப்பட்டு, வேறு எங்கேனும் சிறை வைக்கப்பட்டிருக்கலாம். அல்லது... ஐயா, அடுத்த சாத்தியக்கூறு பற்றி யோசிக்கையில் எனது கை நடுங்குகிறது. விநாயக் தாமோதர் சாவர்க்கருக்கு நேர்ந்தது போல் அவன் சுடப்பட்டிருக்கலாம். சாவர்க்கர் சுடப்பட்டும் தப்பி விட்டார். ஆனால் உங்கள் மகன் தப்பினானா இல்லையா என்பது தெரியவில்லை. நான் எழுதுவது வெறும் யூகத்தின் பேரில்தான். நான் நினைப்பது தவறாக இருக்கக்கூடும். ஆனால், தப்பி மட்டும் இருந்தால் செய்தி எப்படியும் எங்களுக்கு வந்து சேர்ந்து விடும். ஐரோப்பிய நாடுகள் சிலவற்றில் எங்களுக்கு ஆதரவாளர்கள் இருக்கிறார்கள். ஆக, ஒன்று அவன் சுடப்பட்டிருக்கலாம். அல்லது. அந்தமானிலோ அல்லது திலகர் சிறைவைக்கப்பட்டுள்ள பர்மாவைச் சேர்ந்த மாண்டலேயிலோ சிறை வைக்கப்பட்டிருக்கலாம். அருணாசலம் உயிரோடு இருக்கிறான் என்றே நாங்கள் நம்புகிறோம். தங்களுக்கு அதைரியமூட்டும் இக் கடிதத்தை எழுதாமல் என்னால் பொய்களைச் சொல்ல முடியும். ஆனால் தகப்பனாராகிய தங்களுக்கு உண்மை தெரிந்திருக்க வேண்டும் என்பதாலேயே மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு இதை எழுதுகிறேன். இளைஞனாகிய அருணாசலம், இந்தியா சுதந்திரம் பெற்றதும் சிறையிலிருந்து விடுபட்டு விடுவான் என்று நாம் நம்புவோமாக. அல்லது நன்னடத்தைக்காக அதற்கும் முன்னாலேயே கூட அவன் விடுவிக்கப்பட்டு, மறுபடியும் நமது போராட்டத்தில் இன்னும் அதிக முனைப்புடன் கலந்து கொள்ளவும் கூடும்.

இந்திரநாத் பானர்ஜி தற்போது எங்களுடன் இல்லை எனும் செய்தியால் தாங்கள் குழப்பமடைந்திருக்கக்கூடும். அவன் உயிருடனேயே இல்லை ஐயா, உயிருடனேயே இல்லை! அவன் தம்பி நரேந்திரநாத் ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருப்பதால் அவனுடனும் எங்களால் தொடர்பு கொள்ள இயலாதிருக்கிறது. அவன் அப்பாவின் கல்கத்தா விலாசத்துக்கு எழுதலாமென்றால், வயோதிக காலத்தில் தாங்குவாரா என்று கவலையாக இருக்கிறது. மேலும் அவர் மகனைக் காவல் துறை தேடிக் கொண்டிருப்பதால் அவருக்கு வரும் கடிதங்கள் சோதனைக்கு ஆட்படலாமல்லவா? அதனாலும் எங்களுக்குத் தயக்கமாக இருக்கிறது.

இந்திரநாத் பானர்ஜி இறந்ததற்குக் காரணம் சரியாகத் தெரியவில்லை. அடித்துப் போடப்பட்டு இறந்து போனான். வெள்ளையர்கள் சிலர் இந்தியரை இழிவாகப் பேசியதைத் தாங்க முடியாமல் அவன் பதிலடி கொடுத்து வார்த்தைகளால் சாடினான் என்ற செய்தி எங்களுக்குத் தெரிய வந்தபிறகு மறுநாள் எங்கள் விடுதியின் வாசலில் அவன் அடித்துப் போடப்பட்டுக் கிடந்தான். மருத்துவம் பயனளிக்காமல் இறந்து போனான். 'என் தம்பியைச் சந்திக்க நேர்ந்தால் உன் அண்ணன் வந்தே மாதரம் என்று சொல்லிக் கொண்டேதான் உயிர் விட்டான் என்ற உண்மையை மறக்காமல் அவனிடம் சொல்லுங்கள். அவன் ரொம்பப் பெருமைப்படுவான்' என்று சொல்லிக் கொண்டே அவன் கண் மூடினான்.

உங்கள் மகன் அருணாசலத்தைப் பொறுத்த வரையில் உங்களுக்கு நல்ல செய்தி கிடைக்க வேண்டும் என்பதே எங்கள் பிரார்த்தனை. வந்தே மாதரம்...

**கை**யெழுத்திடப்படாத அக்கடிதத்தைப் படிக்கும் போதே ராஜாராமனின் பார்வை கண்ணீரால் மங்கியது. அவருக்கு அந்த அறை சுழல்வது போல் இருந்தது. கண்கள் இருண்டு, அறைச் சுவர்கள் தம்மை நோக்கி நகர்வன போல் தோன்றியது. கடைசியில் சமாளிக்க அவர் செய்த முயற்சி பயனற்றுப் போக, அவர் கட்டிலிலிருந்து உருண்டு கீழே தடாலென்று விழுந்தார்.

(தொடரும்)

'சுடர்மணி சலவை நிலையம்.'

வாசலில் அழுக்கடைந்த பழைய தகர போர்டு. மிகப் பழங்காலத்து மேஜை. அதன் மீது அடுக்கி விரிக்கப்பட்ட பழைய போர் வைகள். மேஜை ஓரத்தில் ஒரு இரும்பு வளை யம். அதன் மீது கரி கொட்டி பற்றவைக்கப் பட்டு 'சூடு' வரக் காத்திருக்கும் இஸ்திரி பெட்டி. அருகில் வடிவேலு.

கட்டம் போட்ட முழுக்கால் சட்டை, முழுக்கை சட்டை சகிதம் கம்பீரமாய் நடந்து வரும் மகனைப் பார்த்து மனம் பூரித்தான் வடிவேலு.

"வாங்க தம்பீ..."

'பெரிய படிப்புப் படிச்சி... கைக்கு ஒசந்த புள்ளையை வா.. போன்னு பேசறது மரி யாதை இல்லே' என்று மனதிற்குள் நினைத் துக் கொள்ளும் வடிவேலு, சென்ற வருடம் கல்லூரிப் படிப்பைப் பாதியில் முடித்து விட்டு, பரீட்சை எழுதாமலே... சதா அரசி யல்... கட்சிக் கூட்டம் என்று அலையும் மக னைக் கூட பெருமையுடன் நினைத்து 'வாங்க தம்பி' என்றும்... மனைவி காத்தாயி யிடம் கூட 'பெரிய தம்பி சாப்பிட்டுப் போயிட்டாங்களா...' என்றும்தான் கேட்பது வழக்கம்.

"அவசரமா பத்து ரூபா இருந்தாக் கொடு..." கடையின் வாசலில் நின்று, உள்ளே வந்தால் கூட அது 'கேவலம்' என்பது போன்ற உணர்வில் தமிழ் மணி உத்தரவு போல சப்தமாய்க் கேட் டான்.

"இதோ..." ஓடிப் போய் கல்லாப் பெட்டி திறந்து அதன் உள்ளே இருந்த நோட்டுகளில் அழுக்குப் படாத... கசங் காத... நல்ல நோட்டாக ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து பவ்யமாய் நீட்டினான்.

கமலா கந்தசாமி

பணம் எதற்கு என்று கூறா மலும், 'வரட்டுமா' என்று மரி யாதைக்குக் கூட கேட்காமலும் தமிழ்மணி சென்றாலும் அது பற்றி மனதில் எந்த சஞ்சலமும் இல்லாது... மடிப்புக் கலையாத சட்டையில் மகன் நடக்கும் அழகில் மயங்கிய வடிவேலு, "தம்பி..." மெல்ல கூப்பிட்டான்.

'என்ன' என்பது போல் திரும்பினாள் தமிழ்மணி.

"வேலை விசயமா... நம்ப எம்.எல்.ஏவைப் பாத்தீங்களா..."

பதினோரு மணி காலைக் காட்சியில் ஓடும் மலையாளப் படத்துக்கு நேரமாகி விட்ட அவசரத்தில் வேகமாய் நடக்க ஆரம்பித்த தமிழ்மணி, "வீட்ல வந்து சொல்றேன்" என்று அலட்சியமாய்ப் பதில் சொல்லி விட்டு வேகமாய் தியேட்டரை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

காலையில் குளித்து, அப்பா ஆசையாய்ப் 'பொட்டி' போட்டு வைத்த பேண்ட்-சட்டை மாட்டி, கான்வென்ட் ஸ்கூல் வரைக்கும் போகிற பெண்கள் பின்னால் ஜொள்ளு வழிய நடந்து, மலையாளப் படம் காலைக் காட்சி பார்த்து, மதியம் சாப்பிட்டு ஒரு குட் டித் தூக்கம் போட்டு, சாயந்திரம் நாலு மணிக்கு அவசரமாய் முகம் அலம்பி, வேறு சலவைச் சட்டை மாற்றி, நாலு பத்துக்கு எல்லாம் கான்வென்ட் வாசலில் ஆஜர் ஆகி... பின் தன் கட்சி ஆபீஸ் வந்து விடு வான். இரவு பத்து மணி வரையில் 'இளை ஞர் அணி' அலுவலகம்தான் கதி. வரப் போகும் கண்டனக் கூட்டம், சைக்கிள் பேரணி, சென்னைப் பேரணி, இடைத்தேர் தல் பிரசாரம்... என்று கட்சிப் பணி டிஸ் கஷன்... இடையிடையே கூட்டம்... அதில் 'இளைஞர் அணி துணைச் செயலர்' என்ற



# அழுக்கு

பதவியோடு மேடை ஏறிக் கொஞ்சம் காட்டமான பேச்சு...

'தம்பி... கொன்னுட்டே' என்று முதுகில் தட்டி, எம்.எல்.ஏ., வட்டச் செயலர் பாராட்டுக் கிடைக்கும் போது... சொர்க்கமே கையில் வந்தது போல் மகிழ்வான் தமிழ்மணி.

**ப**டம் முடிந்த போது வயிறு பசித்தது. வீட்டின் உள் நுழைந்ததுமே, கருவாட்டுக் குழம்பு வாசனை மூக்கைத் துளைத்தது.

"என்னம்மா சாப்பாடு ரெடியா?" - கேட்டான் தமிழ்மணி.

"தம்பி... அவசரமாய் கேரியரில் சாப்பாடு தர்றேன். அப்பாவுக்குக் கடையில் கொண்டு போய் கொடுத்துட்டு வந்துர்றியா? அவுக... காலையில சாப்பிடாம போயிட்டாக..." என்றாள் அவன் அம்மா காத்தாயி.

"போம்மா... உனக்கு வேற வேலை இல்லே. எனக்கு சாப்பாடு எடுத்து வச்சிட்டு, நீயே போயிட்டு வந்துடு..." என்றபடி கையில் தட்டை எடுத்துக் கொண்டு வந்து சமையல் அறையில் உட்கார்ந்தான்.

"வெய்யில்டா... காலுக்கு செருப்புக் கூட இல்லே..."

"என்னால முடியாது.. லாண்டரிக் கடைக்குப் போறது வெக்கமா இருக்கு..." - முகம் சுழித்தான் தமிழ்மணி.

"ஏய்... அவரு சம்பாதிச்சதில சமைச்சதைச் சாப்பிட மட்டும் வெக்கமா இல்லையா உனக்கு? அவர் அழுக்கு மூட்டை சுமந்து... ஆத்துல முதுகு ஒடிய துவைச்சி.. அனல் நெருப்புல வெந்து பொட்டி போட்டுச் சம்பாதிக்கிற காசில தண்டச்சோறு சாப்பிட்டு ஊர் சுத்திறியே... அது வெக்கமா இல்லே..."

பல நாள் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து, மகன் மீது இருந்த கோபத்தில் வெடித்தாள் காத்தாயி.

"இந்தா கெழவி.. என்னா வாய் நீளுது.. புட்டுப் புடுவேன் மோரையை..." என்று தட்டைத் தூக்கி அம்மா மீது வீசினான்.



தட்டின் நுனி மூக்கில் வெட்டி லேசாய் ரத்தம் கசிந்தது. தட்டு சுவரில் மோதி நெளிந்தது. அது பற்றி கொஞ்சமும் கவலைப்படாது வேறு தட்டு எடுத்துத் தானே போட்டுச் சாப்பிட்டு விட்டுப் படுத்துத் தூங்கியும் போனான் தமிழ்மணி.

'ச்சே... நமக்குப் போய் இப்படி ஒரு புள்ளையா? என்ன பாவம் செய்தேன் மாரியாத்தா...? மனதிற்குள் முணுமுணுத்துக் கொண்டு, கொஞ்சமாய் மகன் மீதம் வைத்திருந்த சாதத்தை எடுத்துக் கொண்டு கடைக்குச் சென்றாள் காத்தாயி.

புதிதாய் சாலையில் போட்ட கப்பிக் கல் முள்ளாய் காலில் குத்த, வெய்யிலில் உருகிய தார் காலில் ஒட்ட நடந்தாள்.

வேர்த்துக் களைத்து வரும் மனைவியைப் பார்த்து, "என்ன ராக்கு... மூக்கில ரத்தம்?" என்று வடிவேலு பதறிக் கேட்டான்.

"எல்லாம் உங்க புள்ளையாண்டான் செய்ததுதான்" என்றாள் ராக்காயி.

"நீ.. ஏதும் புள்ளேகிட்டே எக்குத்தப்பா பேசியிருப்பே..." வடிவேலு மனைவி மீது கோபப்பட.....

"உங்களால் தாங்க... அவன் இப்படிக் கெட்டுப் போறான். படிப்பையும் பாதியில விட்டுட்டான். கடையில வந்து பொட்டி போட்டாலும் நாலு காசு கிடைக்கும்... கண்டபடி ஊர் சுத்தறான்..." என்றாள் ராக்காயி.

"என்னடி புரியாம பேசறே. காலேஜ்ல படிச்ச புள்ளே... அவன் ஏண்டி இந்த அழுக்கைத் தொடணும். நம்ம தலையெழுத்து நம்மோட தொலையட்டும். ஏதாவது கவர்மெண்டு வேலைக்குப் போகணும்டி...."

"சரி... நல்லதுதான். அதுக்கு இப்படி கட்சி... அரசியல்... கூட்டம்னு சதா சுத்தறானே... வேலை தானா கெடைச்சிடுமா?"

"சும்மா இரு புள்ளே... நம்ம எம்.எல்.ஏக்கு தம்பி மேல உசிரு. மந்திரிகிட்டே சொல்லி வேலை வாங்கித் தந்துடறேன்னு சொல்லியிருக்காரு... சீக்கிரம் கெடச்சிடும். இன்னைக்குக் கூட தம்பிகிட்டே சொல்லி எம்.எல்.ஏவைக் கேட்கச் சொல்லியிருக்கேன்..."

"என்னமோ போங்க... நீங்களும்.. உங்க புள்ளையும்..." என்று அந்தப் பேச்சிற்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தாள் ராக்காயி. வடிவேலு சாப்பிட்டு முடித்ததும், பாத்திரம் எடுத்துக் கொண்டு திரும்பினாள்.

குட்டித் தூக்கம் முடிந்து... எழுந்த தமிழ்மணி, டிரஸ் மாற்றி அவசரமாய் கான்வெண்ட் வாசலுக்கு வந்தான். பக்கத்து மெக்கானிக் ஷெட்டில் தனது புல்லட் மோட்டார் சைக்கிளை ரிப்பேருக்கு கொடுத்துவிட்டு எம்.எல்.ஏ. நின்றார்.

"வணக்கம் அண்ணே..." என்றான் தமிழ்மணி.

"என்னப்பா... எப்படி இருக்கே?" தோழமையுடன் தோளில் கை போட்டார் எம்.எல்.ஏ.

"நல்லா இருக்கேன் அண்ணே..." நெளிந்தான். தோளில் கை போட்டு எப்படி இருக்கே... என்று கேட்டதிலேயே புளகாங்கிதம் அடைந்தான்.

"அண்ணே... வேலை விஷயமாய்..." மெல்ல தமிழ்மணி ஆரம்பிக்க...

"என்னடா பெரிய வேலை? மந்திரியே நாற்பது ஐம்பதுன்னு கேட்கிறார்... அதுவும்.. அவர் மச்சினி மகனுக்கு நான் சொல்லி வச்சிருந்த வேலையைப் போட்டுட்டாராம். அதனால் என்ன... வேலைக்குப் போயிட்டா உன்னை மாதிரி கட்சிக்கு ஆளுங்க யாருடா கிடைப்பாங்க...? வேறு ஒரு நல்ல ஐடியா



## படிக்கிற வயசுல

காமெடி இல்லாத பாண்டியராஜன் படம். விறுவிறுப்பான சண்டைக் காட்சிகளிலும், நெஞ்சைத் தொடும் வசனங்களிலும் முயற்சி பளிச்சிடுகிறது.

படிக்கிற வயதில் வேறு சேஷ்டைகள்

இருக்கு. சாயந்திரம் ஆபீசுக்கு அவசியம் வா..."

என்ற எம்.எல்.ஏ. அதற்குள் பைக் சரியாகி விடவே அதில் ஏறி அமர்ந்து கம்பீரமாய் சப்தமிட வண்டியைக் கிளப்பினார்.

மாலை ஊரைச் சுற்றியவனுக்கு, எம்.எல்.ஏ. பார்க்கச் சொன்னது நினைவிற்கு வந்ததும், கட்சி ஆபீஸ் சென்றான்.

கண்கள் சிவக்க, சிகரெட் புகைத்து... கோபமாய் யோசனையுடன் இருந்த எம்.எல்.ஏ., தமிழ்மணியைப் பார்த்ததும், "தமிழ்மணியா? வா... வா" என்று ஏக அமர்க்களமாய் வரவேற்றார்.

"உட்கார் தமிழ்மணி..."

தயங்கித் தயங்கி எதிரே உட்கார்ந்தான். 'ஏதோ வேலைக்கு வாய்ப்புச் சொல்லப் போகிறார்' என்ற நம்பிக்கையுடன் காத்திருந்தான்.

"நீ என்ன செய்றே.. நம்ம பசங்க எல்லாரையும் ராத்திரிக்கே ஒண்ணு சேர்க்கிறே... நம்ம கட்சியில் இருந்து பிரிஞ்சவனுங்க ஊர்வலம் போறானுக. அதைத் தடுக்கணும்..." என்ற எம்.எல்.ஏ. அந்த வன்முறைக்குப் புதிய திட்டம் வகுத்தார். அதனை விளக்கினார்.

தமிழ்மணிக்கு ஏமாற்றமாய் இருந்தது. வேலையை எதிர்பார்த்தவனுக்கு... காலியாய் இருப்பதாகச் சொன்ன வேலை மந்திரியின் உறவினர்க்குப் போக... இப்போது அடியாள் வேலைக்கு அழைக்கும் எம்.எல்.ஏ. மீது லேசாய்க் கசப்பு வந்தது. ஆயினும் வெளிக்காட்டிக் கொள்ளாமல், "சரிண்ணே..." என்று மெல்ல இழுத்தான்.

"இதை சரியாய் முடித்திடு.. சிறுதொழில்

*கூடாது என்பதே மெஸ்ஸேஜ். கூடவே கொஞ்சம் மதஒற்றுமையையும் மிக்ஸ் பண்ணி ஷூட் பண்ணியிருக்கிறார்கள்.*

*மனத்தில் விஜய் பதிகிறார். காவேரிக்கு வாழ்வு. டைட்குளோசப்பில் பொலபொல கண்ணீர் உகுத்து அதிர்ச்சி காட்டுகிறார்.*

*மஞ்சுளா, விஜய்குமார், எஸ்.எஸ். சந்திரன் - மூன்று பேரும் மூன்று விதத்தில் அய்யர் பாஷையை கடித்துக் குதறுகிறார்கள்.*

*கேட்கும் போது பாடல்கள் நன்றாக இருப்பது போல் தோன்றினாலும் நினைவில் நிற்க மறுக்கின்றன.*

*நல்ல விஷயம் சொல்ல ஆசைப்பட்ட டைரக்டர் சார், முதலில் எம் வாழ்த்துக்கள். ஆனால் சீன்களில் ஒன்று கூட வெயிட்டாகவேயில்லையே! என்ன பண்ணலாம்? வெளியே வரும் போது பாதிப்பே இல்லை சார்.*

**- துளசி**

மானியம் வந்துருக்கு... அதுல உன் பெயரை சிபாரிசு செய்துடறேன். சொந்தமா கடை வைக்க மேஜை... எலெக்ட்ரிக் அயர்ன் பாக்ஸ் எல்லாம் இலவசமா கிடைக்கும். அதோட மானியமும் கிடைக்கும். நீயே ஒரு லாண்டரிக் கடை வைக்கலாம் தமிழ்மணி..."

எம்.எல்.ஏ.யின் வார்த்தை நெருப்பாய்ச் சுட்டது.

''இல்லேண்ணே... அது எனக்குப் பிடிக்கலே... ஏதாவது கவர்மெண்ட் ஜாப்...'' தமிழ்மணி முடிக்கு முன்பு அவசரமாய்க் குறுக்கிட்டார் எம்.எல்.ஏ.

"என்னடா... பெரிய வேலை? ரெவின்யூ ஸ்டாம்ப் உத்யோகம்...? சொந்தமா தொழில் பண்ணலாம். கட்சி வேலையும் பார்த்துக் கலாம்..." என்று எம்.எல்.ஏ. பேசிக் கொண்டு இருக்கும்போதே, "ஸார்... தம்பி... வந்துருக்கு... உங்களைப் பார்க்கணுமாம்..." - ஒருவர் வந்து அவசரமாய்ச் சொன்னார்.

வாசலில் எட்டிப் பார்த்தார் எம்.எல்.ஏ. அங்கே... கல்லூரியில் பி.ஈ. படிக்கும் அவர் மகன் சுரேஷ்!

'ஒரு நிமிடம்' என்றபடி வெளியில் வந்த எம்.எல்.ஏ.. மகனை இந்த இடத்தில் எதிர் பார்க்காதவராய்...

"என்ன சுரேஷ்... இங்கெல்லாம் வரக் கூடாதுன்னு உனக்குச் சொல்லி இருக்கேன் இல்லே" என்று கடிந்து கொண்டார்.

"இல்லேப்பா... நாளைக்கு காலேஜ் டூர்... போகணும். பணம் வேணும். ராத்திரி நீங்க பாட்டுக்கு கட்சி ஆபீஸ்ல தங்கிட்டா... அதுதான்..."

''சரி.. இந்தா ஆயிரம் இருக்கு.. போதுமா?'' அவசரமாய் சட்டைப் பையில் இருந்து பத்து புத்தம் புதிய நூறு ரூபாய் நோட்டுகளை எடுத்துக் கொடுத்தார். "இன்று நைட்டே கிளம்பிடு..." என்றார்.

''இல்லே... நாளைக்குப் போனால் போதும்...''

''நோ. சொன்னால் கேளுடா. இன்றைக்கு.. ஒரு சின்ன கலவரத்துக்கு ஏற்பாடு பண்ணிட்டு இருக்கேன். அதுல உனக்கு எதுவும் ஆயிடக் கூடாது. நைட் திருவள்ளுவர்ல காலேஜ் போயிடு. என்ன சரியா?'' என்று மகனை அனுப்பி வைத்தார் எம்.எல்.ஏ.

சுரீர் என்றது தமிழ்மணிக்கு.

தன் மகனை முன்ஜாக்கிரதையாக அனுப்பி வைக்கிறார். கலவரத்தில் அடிபட நம்மைப் போன்றவர்களைத் தூண்டுகிறார். தன் மகன் படித்து பெரிய என்ஜினியர் ஆக வேண்டும். ஆனால் தொண்டன் வேலைக்குப் போயிடக் கூடாது. மானியம் வாங்கி... லாண்டரிக் கடைதான் வைக்கணுமாம்...

எம்.எல்.ஏ.யின் மனத்தின் அழுக்கு எண்ணம் தமிழ்மணிக்குப் புரிந்தது.

"என்ன தமிழ்மணி... பத்து மணிக்கு எல்லாரையும் இங்கே கொண்டாந்துடு. விஸ்கி பார்ட்டி இருக்கு. அது முடிஞ்சதும்... நாளைக்கு ஊர்வலத்துக்குக் கிளம்பிட்டு இருக்குற ஏழெட்டுப் பசங்க.. கை.. காலு எல்லாம் லேசா ஒடச்சி வச்சிடுங்க..." என்று எம்.எல்.ஏ. கூறியதைக் காதில் கூட வாங்கிக் கொள்ளாது வேகமாய் நடந்தான் தமிழ்மணி. 'இந்த மனஅழுக்குப் பிடித்த கேவலப் பணியில் ஈடுபடுவதை விட... அழுக்குத் துணி துவைத்து சொந்தமாய் நாலு காசு சம்பாதிப்பது கேவலம் இல்லை...' என்பது தெளிவாய்ப் புரிந்தது.

**வி**யர்வையில் நனைய பொட்டி போடும் வடிவேலு அந்த நேரத்தில் மகனைப் பார்த்த ஆச்சரியத்தில், "யாரு தம்பியா... வாங்க தம்பி... ஏதும் பணம் வேணுமா தம்பி?'' அவசரமாய் ஓடிப் போய் கல்லாப் பெட்டியைத் திறந்தான்.

"இல்லேப்பா.. வேண்டாம்'' என்றான் தமிழ்மணி.

"என்ன... பணம் வேண்டாமா?'' மகனை ஆச்சரியத்துடன் வடிவேலு பார்த்தான்.

"அப்பா... நீங்க டயர்டா இருப்பீங்க... வீட்டுக்குப் போய் ரெஸ்ட் எடுத்துக்குங்க... நான் அயர்ன் பண்றேன்..''

'பேசுவது தமிழ்மணியா?' புரியாமல் வடிவேலு மகனை நோக்க, தமிழ்மணிக்கு மனசு அழுக்கு நீங்கி விட்டது என்பது வடிவேலுவுக்குப் புரியா விட்டாலும், தமிழ்மணிக்கு உலகத்தின் அழுக்கு அதிகம் புரிந்தது.



உள்ளே வந்து, அம்மா அருகே இல்லை என்ற மகிழ்ச்சியுடன், சட்டென்று கதவைத் திறந்து கொண்டு நுழைந்து தாழிட்டாள். அருகே மேசை மீதிருந்த குளிர்ந்த நீரை எடுத்து அவர் முகத்தில் வீசினாள். மறுபடியும் தண்ணீர் அடிப்பதற்கு முன்னால் தரையில் சுழன்று கொண்டிருந்த தாள்களை எடுத்துப் பார்த்தாள். மேலெழுந்தவாரியாகப் படித்து விட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டு அவற்றை ராஜாராமனின் மேசை இழுப்பறையில் இருந்த நாட்குறிப் பேட்டின் உள் அட்டைக்குள் மறைப்பாகச் செருகினாள். பிறகு மறுபடியும் அவர் முகத்தில் இரண்டு தரம் தண்ணீரை வீசினாள்.

ராஜாராமன் மெல்லக் கண் விழித்துப் பார்த்தார். நடந்ததை ஞாபகப்படுத்திக் கொண்டபின் கண்களைத் துடைத்துக் கொண்டு சுற்றிலும் பார்த்தார்.

"அப்பா அந்தக் கடுதாசித் தாள் ரெண்டையும் எடுத்து உங்க டயரி அட்டையில கண் மறைவாச் சொருகி வெச்சிருக்கேம்ப்பா. நான் இன்னும் சரியாப் படிக்கல்லே. மேலாகத்தான் பார்த்தேன். அம்மாவுக்குத் தெரிய வேண்டாந்தானே?"

"ஆமா. முதல்ல ரூம் கதவைத் திறந்துடு. உங்கம்மா வந்தா சந்தேகப்படுவா."

அஞ்சனா எழுந்து போய்க் கதவைத் திறந்த அடுத்த நிமிடத்தில் பாமா அங்கு வந்தாள்.

"அம்மா அப்பாவுக்கு மயக்கம் போட்டுடுத்து. சீக்கிரம் ஒரு கப் காப்பி எடுத்துண்டு வாம்மா."

பாமா ஓடினாள். ஐந்தே நிமிடங்களில் கண் கலங்கியவாறு காப்பியுடன் வந்து, அவர் கையில் அதைக் கொடுத்து விட்டு, "என்னன்னா ஆச்சு? எதுனால இப்படி மூர்ச்சை போட்டுடுத்து? நீங்க சம்பாதிச்சதும் போறும், சேர்த்து வெச்சதும் போறும்னா. பேசாம ஆத்துல இருங்கோ இனிமே. உங்களுக்கு உள்ளூறக் கவலை. மனசுல வெச்சுண்டு மறுகறேள்..." என்ற பாமா கண்கலங்கிப் போனாள்.

கட்டிலுக்கு அருகே இருந்த முக்காலியில் கால்கள் இடறியதில் அதுவும் கீழே சாய்ந்து விழ, அடுத்த கணத்தில் அந்த ஓசை கதவுக்கு வெளியே நாற்காலியில் அமர்ந்திருந்த அஞ்சனாவின் செவிகளையடைந்து, அவளது முதுகுத் தண்டை நிமிர்த்தியது.

அவள் உடனே எழுந்து போய்க் கதவைத் தட்டி, "அப்பா, அப்பா என்னப்பா சத்தம்?" என்றாள்.

பதில் இல்லை. கதவிடுக்கு வழியாக உள்ளே பார்த்தவள் திடுக்கிட்டுப் போனாள். முக்காலியும் அவரும் அருகருகே சாய்ந்து கிடக்க, தரையில் இரண்டு தாள்கள் மின் காற்றில் சுழன்றபடி இருந்தன. அவளுக்குப் புரிந்து விட்டது - ஏதோ மோசமான செய்தி என்று. பாமா கொல்லைப்புறத்தில், கிணற்றடிப்பக்கம் சென்றிருந்ததால் அவளுக்கு அவர் விழுந்த ஓசை கேட்டிருக்க வாய்ப்பில்லை. அஞ்சனா விரைந்து செயல்பட்டாள். துணி உலர்த்தும் கொடிக் கம்பை எடுத்துக் கொண்டு, வெளியே வாசற்பக்கமாகச் சுற்றிச் சென்று, சன்னல் வழியாக அதை உள்ளே நுழைத்து, மெதுவாக உட்புறத் தாழ்ப்பாளை நீக்கினாள். பிறகு கம்புடன்

ஜோதிர்லதா கிரிஜா

அவளைப் பார்த்ததும் அவருக்கு அழுகை பொத்துக் கொண்டு புறப்படும் போல் ஆயிற்று. அடக்குவது கடினமாக இருந்தது. கட்டிலில் ஏறிப் படுத்துக் கொண்டு, சுவர்ப் பக்கமாய்த் திரும்பிக் கொண்டார்.

"நான் பார்த்துக்கறேம்மா. நீ போ. நீ இங்கேயே நின்னுண்டு அழுதியானா அப்பாவுக்குத் தாங்காது."

"டாக்டருக்கு வேணா ஃபோன் பண்ணி வரவழையேன்."

"அதெல்லாம் வேண்டாம், பாமா. அசதிம்மா. வேற எதுவும் இல்லே... நீ போ. எனக்கு ஒண்ணுமில்லே. ஒரு அரை மணியில சரியாப் போயிடும்."

"நீ உங்கப்பா பக்கத்துலயே உக்காந்திருடி, அஞ்சனா. ஒரு அரை மணி கழிச்சு வரேன்."

பாமா போனதும் அஞ்சனா கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டு விட்டு, அந்தத் தாள்களை எடுத்து மறுபடி படிக்கலானாள்.

படித்து முடித்ததும், கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியாமல், "என்னப்பா இது? இப்படி எழுதி இருக்கானே?" என்றாள்.

ராஜாராமன் கன்னங்களில் வழிந்த கண்ணீருடன் மகள் புறமாய்த் தம் கையை நீட்டி அவள் கையைப் பிடித்துத் தம் மார்பின் மீது வைத்துக் கொண்டார். அவரது மேல் துண்டைத் தனது மறுகையால் எடுத்த அஞ்சனா, அதனால் அவர் கன்னங்கள் வழியே உருண்ட கண்ணீரை ஒற்றி எடுத்தாள்.

"அழாதங்கோப்பா. அருணுக்கு அப்படியெல்லாம் ஒண்ணும் ஆயிருக்காது. ஜெயில்ல தான் இருப்பான். ஒருநாள் தப்பிச்சுண்டு வந்து திடீர்னு நம்ம முன்னால நின்னு அசத்தப் போறான், பார்த்துண்டே இருங்கோ."

"உன்னோட நம்பிக்கை பலிக்கட்டும்மா. பலிக்கட்டும்."

ராஜாராமனின் குரல் சன்னமாக ஒலித்ததைக் கேட்டு அஞ்சனாவுக்கு உள்ளூர அச்சமாக இருந்தது. அவரது அதிர்ச்சியின் கனத்தை அவளால் உணர முடிந்தது. அவளது கவலை அதிகமாயிற்று.

அஞ்சனா அவரை மேலும் சமாதானப்படுத்த வாய் திறப்பதற்கு முன், யாரோ வாசற்பக்கத்திலிருந்து, "சார், சார்" என்று கூப்பிட்ட குரல் கேட்டது. அஞ்சனா எழுந்து போனாள்.

கதவுக்கு அப்பால் தாடியும் மீசையுமாக நெற்றி முழுவதும் திருநீற்றுடன் அழுக்கு உடைகள் அணிந்தபடி ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான்.

"யாருங்க? என்ன வேணும்?"



அவன் அவளுக்குப் பதில் சொல்லாமல் சட்டென்று உள்ளே புகுந்து கதவைச் சாத்தித் தாளிட்டான். காய்ச்சல் வந்தவனுடையவை போல் ஒளிர்ந்த அவன் விழிகளும் அவனது திடீர்ச் செயலும் விளைவித்த அதிர்ச்சியில் அஞ்சனாவுக்குக் கணம் போல் வாயடைத்துப் போய் விட்டது.

## 22

சுதாரித்துக் கொண்டு குரல் எழுப்புவதற்கு அஞ்சனா முயன்ற போது அந்த மீசை-தாடி மனிதன் கடகடவென்று சிரிக்கத் தொடங்கினான்.

"என்ன, மிஸ் அஞ்சனா பயந்து போய் விட்டீர்களா? இவ்வளவுதானா சுதந்திரப் போர் வீராங்கனையின் துணிச்சல்?'' என்று அந்த மனிதன் ஆங்கிலத்தில் கேலியாக வினவியதும் அஞ்சனாவின் முகத்தில் சிரிப்புத் தோன்றியது.

''ஓ, மிஸ்டர் நரேந்திரநாத் வாருங்கள், வாருங்கள்...."

"நான் நரேந்திரநாத் இல்லை. எனக்கு ராம் என்று பெயர். மறந்து விட்டீர்களா?"

"இல்லை நரேன், மறக்கவில்லை. ஆனால் இப்போ நாம் தனியே தானே இருக்கிறோம் என்ற துணிவில்..."

"சரி, அம்மா சௌக்கியமா? என்று கேட்டுக் கொண்டே அவன் முன்னால் நடக்க, அஞ்சனா பின்தொடர்ந்தாள். சமையற்கட்டில் அடுப்பருகே ஏதோ செய்து கொண்டிருந்த பாமா, "அஞ்சனா, இங்க சீக்கிரம் ஓடி வா. எந்தக் கடங்காரனோ சமையற்கட்டு வாசப்படியில நிக்கறான்..." என்றவாறு கையில் இருந்த கரண்டியைக் கீழே போட்டு விட்டுக் கதவு மூலையிலிருந்து விளக்குமாற்றைக் கையில் எடுத்துக் கொண்டு அவனை நோக்கி ஓங்கினாள்.

"அடிங்கோம்மா, நல்லா அடிங்கோ! ப்ரும்ஸ்டிக் கால எந்த அம்மா பிள்ளையை அடிப்பாங்கோ? அடிங்கோ, அடிங்கோ..." என்று அவன் முதுகை அவள் அடிப்பதற்கு வாகாய்க் . குனிந்து கொள்ள, பாமா விளக்குமாற்றைக் கீழே போட்டாள்.

''நீயா? நன்னாருக்

குப்பா! பயந்தே போயிட்டேன். எங்கே போயி ருந்தே இத்தனை நாளும்?''

நரேந்திரநாத் சட்டென்று நெடுஞ்சாண் கிடையாக அவளுக்கு முன்னால் விழுந்து, கால்களில் தன் தலையைப் பதித்து இப்படி யும் அப்படியும் உருட்டினான். அவள் கால் களை இரு கைகளாலும் பற்றிக் கொள்ளவும் செய்தான்.

"எழுந்திருப்பா, எழுந்திரு.''

எழுந்தவனின் கண்கள் கலங்கி இருந்தன. அவனது பரவசத்தையும் கள்ளமற்ற சிரிப் பையும் பார்த்துப் பாமாவுக்கும் கண்கள் கலங்கின.

"நன்னாருப்பா. நன்னாரு. இந்த அக்கப் போர் வேலையையெல்லாம் விட்டுட்டு, ஒரு நல்ல வேலையாத் தேடிண்டு, சீக்கிரமே கல் யாணம் பண்ணிக்கோ. சவுக்கியமா இரு. இந்தக் காங்கிரஸ் மண்ணாங்கட்டி இதெல் லாம் உனக்கு வேண்டாம். யாரோ என் னமோ பண்ணிண்டு போகட்டும். வாழப் போற குருத்துக்கள்ளாம் இப்படி வருங் காலமே இல்லாம லோலோன்னு நாயா அலையப்படாதுப்பா.''

"எல்லாரும் அப்படி நெனச்சா எப்ப டிம்மா? வெல்லக்காரனை வெரட்ட வாணாமா?''

"சரி, சரி. உன் தமிழால நீ என்னையே விரட்டிடுவே போலேருக்கு. ஒண்ணு பண் ணேன். தமிழைக் கொலை பண்ற மாதிரி இங்கிலீஷையும் கொலை பண்ணி வெள் ளைக்காரங்க முன்னால போய்ப் பேசு. அடுத்த நிமிஷம் எல்லா வெள்ளைக்காரங் களும் லண்டன்ல போய் நிப்பாங்க. அதைச் செய் முதல்ல.''

"மாஜி படா தமாஷ், படா தமாஷ்...'' என்று சிரித்தான் நரேன்.

"வாருங்கள்,'' என்று அஞ்சனா அழைக்க, இருவரும் ராஜாராமன் படுத்திருந்த அறையை அடைந்தார்கள்.

**கா**லடியோசை கேட்டு அவர் தலை யைத் திருப்பிப் பார்த்தார்.

"அப்பா, யாருன்னு கண்டுபிடியுங்கோ, பார்ப்போம்!''

"தெரியலியே... சிவப்பிரகாசமோன்னு நெனச்சேன். ஆனா அவன் நல்ல உயர மாச்சே?'' அவர் அவனைக் கூர்ந்து பார்த் தார்.

''இன்னா சார் இது? இன்னுமா தெரில்ல?'' என்று நரேந்திரநாத் திருவாய் மலர்ந்ததும், "அடேடே. வாப்பா, வா, வா. உக் காரு'' என்று தம்மையும் அறியாமல் தமிழில் அவனோடு பேசிய அவருக்குச் சட்டென்று இந்திரநாத்பானர்ஜியின் நண்பன் எழுதிய கடிதம் நினைவுக்கு வர உடனே கண்கலங் கினார்.

''அஞ்சனா, கதவைச் சாத்து சொல் றேன்...''

## அருள்வாக்கு

**நா**ம் இருக்கிற நிலையில் லோகத் தைப் பொய்யென்று நினைத்துக் கொள்ள முடியவில்லை என்பதால், ''சரி, மெய் யென்றுதான் வைத்துக் கொள்'' என்று சொல்லி, லோக க்ஷேமத்துக்கான கர்மாக் களை வேதம் கொடுத்திருக்கிறது. நாம் உள்ள நிலையில் அரூபமான ஒரே பரமாத் மாவை அபேதமாக உபாஸிக்க முடிய வில்லை என்பதால், அநேகம் தேவதை களின் உபாஸனைகளை அது கொடுத் திருக்கிறது. ஆனால் இப்படிக் கர்மாவும் உபாஸனையும் பண்ணும்போதே, 'லோக மெல்லாம் அடிப்பட்டுப் போய், கர்மாவும் நின்று விடுகிற ஞானநிலை நமக்கு வர வேண்டும்; பல தேவதைகளை உபாஸிப்ப தாக இல்லாமல், பரமாத்மாவுக்கு அன்னிய மாக நாம் என்றே ஒன்று இல்லை என்று கரைகிற நிலை நமக்கு வர வேண்டும்; அதற்குப் படியாக நமக்கு சித்த சுத்தியும்; மனஸின் ஐகாக்ரியமும் (ஒருமுனைப்

"இங்க வேணாம்ப்பா. அப்புறம் அம்மா வுக்கு இல்லாத பொல்லாத சந்தேகமெல்லாம் வரும். மொட்டை மாடிக்குக் கூட்டிண்டு போறேம்ப்பா...'' என்ற அஞ்சனா கடிதம் இருந்த நாட்குறிப்பேட்டைக் கையில் எடுத்துக் கொண்டு நரேந்திரநாத்பானர்ஜி பின்தொடர, மாடிப்படிகளில் ஏறினாள்.

"என்ன, அஞ்சனா? ஏதேனும் விசேஷ மான செய்தியா? உங்கள் அண்ணனைப் பற்றியதா?''

அஞ்சனா மௌனமாக மொட்டை மாடி யையடைந்து உட்கார்ந்த பிறகு அந்தக் கடி தத்தை எடுத்து அவனிடம் கொடுத்தாள். படித்துக் கொண்டிருக்கையிலேயே அவன் கண்கள் குபுகுபுவென்று பொங்கி விட்டன. கண்ணீர் மடைதிறந்தாற்போல் வழியலா யிற்று.

"தாதா, தாதா'' என்றவாறு அவன் அழத் தொடங்கினான். 'தாதா' என்றால் வங்காளி யில் மூத்த சகோதரன் என்பதாய் அஞ்சனா புரிந்து கொண்டாள். அவளுக்கும் கண்கள் கலங்கின. ஆண் பிள்ளை எவனும் இப்படிக் குலுங்கிக் குலுங்கி அழுது பார்த்திராத அஞ்சனா திகைத்துப் போனாள்.

"எங்கள் அப்பா இதைத் தாங்கவே மாட் டார், அஞ்சனா, தாங்கவே மாட்டார். அவ ரிடமிருந்து இதை மறைத்துத்தான் வைக்க வேண்டும். வேறு வழியே இல்லை... என்னு டைய அண்ணன் மிக நல்லவன். என்னை விட உயரமாகவும் நிறமாகவும் இருப்பான். நல்ல பலசாலி. இளைஞர்கள் உடம்பை வலிமையுடன் வைத்திருக்க வேண்டும் என்று



பாடும்) ஏற்படுவதற்காகவே, இந்தக் கர்மாக்களையும் உபாஸனைகளையும் வேதம் கொடுத்திருக்கிறது' என்ற அறிவோடு பண்ண வேண்டும். அப்படியில்லாமல், வெறுமே லௌகிகமான க்ஷேமத்தை உண்டாக்கிக் கொள்வது, தேவதைகளிடம் கொடுக்கல் - வாங்கல் வியாபாரம் மாதிரி யக்ஞம் கொடுத்து நன்மை பெறுவது என்று இதோடேயே நிறுத்திக் கொண்டால், ஸத்யஸாக்ஷாத்காரம் கிடைக்கவே கிடைக்காது. தேவலோகத்துக்குப் போனாலும், ஆத்மஸுகம் என்ற ஸத்ய ஸாக்ஷாத்கார ஆனந்தம் அதில் கிடைக்காது; மேலும் தேவலோக வாஸமும் நம் புண்ணியம் தீர்ந்தவுடன் முடிந்து, நாம் மறுபடி பூலோகத்தில் கர்ப்பவாஸம் பண்ணுவதற்காகத் திரும்பித்தானாக வேண்டும். ஓர் அளவுக்கு நம் இப்போதைய மனப்பான்மைக்கு விட்டுக் கொடுத்தும், நம்மை இன்றுள்ள நிலையிலிருந்தே சிறுகச் சிறுக (gradual-ஆக)ப் பக்குவப்படுத்தவுமே கர்மாவும், உபாஸனையும் வேதத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

அடிக்கடி சொல்லுவான். வெள்ளைக்காரர்களை விரட்ட வேண்டுமென்றால் நாம் மனத்தால் மட்டுமின்றி உடலாலும் வலிமை பொருந்தியவர்களாக ஆக வேண்டும் என்பது அவனுடைய கருத்து. ஆனால் உடல் வலிமையுள்ளவர்களில் சிலருக்கு இருக்கும் ஆணவமோ, முன்கோபமோ பிறரை வம்புக்கு இழுக்கிற குணமோ அவனுக்குத் துளியும் கிடையாது. எதிராளி சீண்டினாலும் பொறுமையை இழக்காதவன்... எதற்காக இவ்வளவும் சொல்லுகிறேனென்றால் அவனது இந்த அநியாயச் சாவுக்கு அவனது திமிரான பேச்சோ செயலோ ஒருபோதும் காரணமாக இருந்திருக்க முடியாது என்பதை உங்களுக்குச் சொல்லுவதற்காகத்தான்."

மறுபடியும் நரேந்திரநாத் அழத் தொடங்கினான்.

"உங்கள் துயரம் எனக்குப் புரிகிறது நரேந்திரநாத். இனி அழுது என்ன லாபம்? போனவர் திரும்பியா வரப் போகிறார்? இப்படியெல்லாம் பிறருக்கு அறிவுரை சொல்லுவது எளிதுதான். தனக்கென்று வரும் போது எல்லாமே வேறுதான். என் அண்ணாவுக்கு என்ன நேர்ந்ததென்று தெரியவில்லை. அவன் உயிருடன் இருக்கிறானா, சிறையில் இருக்கிறானா என்று தெரியவில்லை. என் அம்மாவுக்கு இந்தக் கடிதம் பற்றி நாங்கள் மூச்சுக்கூட விடப் போவதில்லை. எங்கள் அம்மாவைப் பொறுத்தவரையில் அவ்வப்போது லண்டனிலிருந்து அருண் பற்றிய நற்செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன. அவன் படித்தது போதுமென்று எழுதி அவனைத் திருப்பி வரவழையுங்கள் என்று அம்மா பாட்டுப் பாடாத நாளே இல்லை. அப்பாவும் ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லி நாட்களைக் கடத்திக் கொண்டு வருகிறார். இந்த விஷயமும் ஒருநாள் அம்மாவுக்குத் தெரிந்து விடுமோ என்னமோ."

சற்று நேரத்தில் காப்பியுடன் வந்து சேர்ந்த பாமா, "ஏன் இவன் என்னமோ போல இருக்கான்? அழுத மாதிரி இருக்கே? முகமெல்லாம் கன்னிக் கிடக்கு? ஏண்டி, அஞ்சனா? என்ன நடந்தது? அவாத்துல எல்லாரும் சுகந்தானே?" என்றவாறு காப்பிக் கோப்பைகளை இருவருக்கும் முன்னால் வைத்தாள்.

அஞ்சனா, 'அப்புறம் சொல்றேம்மா,' என்பது போல் சைகை செய்தாள்.

இதற்குள் அவளை ஏறிட்டுப் பார்த்த நரேந்திரன், "வேற ஒண்ணுமில்லேம்மா. எங்க எல்டர் ப்ரதர் செத்துட்டான்..." என்றான்.

"அடப்பாவமே, லண்டன்ல படிச்சிண்டிருக்கான்னு சொன்னியே, அந்தப் பிள்ளையாண்டானா?"

"ஆமாம்மா. அவந்தான்."

"சின்ன வயசில்லியோ? எப்படிச் செத்துப் போனான்?"

நரேந்திரநாத் பதில் சொல்லுவதற்குள் அஞ்சனா குறுக்கிட்டு, "ஏதோ விஷக் காய்ச்சலாம்மா. லண்டன் டாக்டர்களுக்கே ஒண்ணும் புரியலியாம்," என்று அவசரமாய்ப் பதிலிறுத்தாள்.

"என்னப்பா பண்றது? கஷ்டந்தான். ஆனாலும் மனசைத் தேத்திக்கத்தான் வேணும்... அஞ்சாறு நாள் இருப்பியோல்லியோ?"

"இருப்பேம்மா. உங்க வீட்லயே. நீங்க

பெர்மிட் செஞ்சா."

"தாராளமா இருப்பா. அழாதே. என்ன செய்யறது? பிறப்புன்னு வெச்ச பகவான் சாவுன்னு ஒண்ணையும் வெச்சுட்டானே?" என்றவாறு பெருமூச்செறிந்த வண்ணம் பாமா இறங்கிப் போனாள்.

நரேந்திரநாத் பானர்ஜி தன் அண்ணனைப் பற்றி அஞ்சனாவுக்குக் கதை கதையாய்ச் சொன்னான். காப்பியைக் குடித்து விட்டுக் கொஞ்ச நேரம் போல் அங்கே இருந்த பிறகு அஞ்சனா, "கீழே போகலாம் நரேந்திரநாத். அப்பா தனியாக இருக்கிறார்" என்றபடி எழுந்தாள். இருவரும் ராஜாராமனின் அறையை நோக்கி நடந்தனர்.

அவரைப் பார்த்ததும் நரேந்திரநாத்தின் உணர்ச்சிகள் மறுபடியும் பொங்கி விட்டன. அவனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமற் போயிற்று.

"அப்பா, அம்மாகிட்டே இவரோட அண்ணா விஷக் காய்ச்சல்ல செத்துட்டதாச் சொல்லி வெச்சிருக்கோம்..."

தமது கையை நீட்டி ஆதரவாய் நரேந்திரநாத் பானர்ஜியின் தோள் மீது வைத்துத் தட்டிய வண்ணம், "நரேன் அழாதே அப்பா. என்ன செய்யலாம்? பிறப்பும் சாவும் நம் கையில் இல்லை. மனசைத் தேற்றிக் கொள். அழாதே, அழாதே" என்று ஆறுதலாய்ப் பேசினார். அவருக்கும் கண்கள் கலங்கின...

பேச்சை திசைதிருப்பக் கருதி, "உன் செலவுகளுக்கெல்லாம் நீ என்ன செய்கிறாய்? எப்படிச் சமாளிக்கிறாய்?" என்று கேட்டார்.

"நான் செய்யாத வேலைகள் இல்லை. ரெயில்வே ஸ்டேஷனில் மூட்டை தூக்குவதிலிருந்து கடையில் கணக்கு எழுதுவது வரையில் எத்தனையோ தினுசான வேலைகளைச் செய்து வருகிறேன்."

"எந்த வேலையானாலும் கேவலமில்லை, நரேன். ஒரு கவலையால் கேட்டேன்."

"எந்த நேரத்தில் போலீஸ் என்னைப் பிடிக்குமோ என்ற கவலையில் சுதந்தரமற்று வாழ்கிறேன், அய்யா. இந்த நாடு முழுவதுமே சுதந்திரம் இழந்த நாடுதானென்றாலும், அதில் திரிந்து வாழும் மற்ற மனிதர்களுக்கு இருந்து வரும் சுதந்தரம் கூட எனக்கு இல்லாது போய் விட்டது." - இவ்வாறு சொல்லி விட்டு அவன் விரக்தியாகச் சிரித்தான்.

அதன் பிறகு சிவப்பிரகாசம் இன்று காங்கிரஸ் இயக்கத்தில் தம் இரகசியக் கூட்டாளி என்றும் காவல் துறையில் இருந்தபடியே சுதந்தர இயக்கத்தில் அவன் ஈடுபட்டுள்ளதையும் அவர் அவனுக்குத் தெரிவித்தார்.

ஏறத்தாழ இதே சமயத்தில் ஞானப்பிரகாசம் கண்களைக் கசக்கியபடி எழுந்து உட்கார்ந்தான்.

"என்ன, சிவா? இப்படி ஒரு தூக்கம் தூங்கிட்டேன்? கண்ணை இருட்டிக்கிட்டு வந்திடிச்சு. காப்பியைக் குடிச்ச அடுத்த நிமிஷத்துலயே கண்ணு சொருகிடிச்சு. காப்பியிலதான் ஏதோ கோளாறுன்னு தோணுது. உனக்கு எதுவும் ஆகலியா?" என்று கேட்டான்.

எச்சில் விழுங்கிய சிவப்பிரகாசம், "இல்லியே, ஞானம்? நான் நல்லாத்தானே இருக்குறேன்? பல நாளத்து அசதியா இருந்திருக்கும்... அதான் தூக்கம் சொக்கிட்டு வந்திருக்கு..." என்றான்.

சில வினாடி இடைவெளிக்குப் பிறகு, "என்னமோ செபாஸ்டியன்னு ஒரு ஆளு பிள்ளையார் சிலைக்குப் பின்னாடி ஏதோ கவர் வைக்கப் போறான், அதை எடுக்கணும்னியே? போகல்லே?" என்றான்.

"இவ்வளவு நேரமமாயிடிச்சே? இன்னுமா அது அங்க இருக்கும்? சொந்தக்காரன் வந்து எடுத்துட்டுப் போயிருப்பான்..." என்றவாறு சோம்பல் முறித்துக் கொண்டே எழுந்த ஞானப்பிரகாசம் பின்கட்டுக்கு நடந்தான்.

வழவழவென்றிருந்த வாயைக் கொப்பளித்து விட்டுத் தண்ணீர் குடிக்க அடுக்களைக்குத் திரும்பியவன் கதவு மூலையில் கசக்கிப் போடப்பட்டிருந்த காகிதத்தைக் கவனித்து, அதைக் கையில் எடுத்தான். மருந்துக் கடையில் ஏதோ மாத்திரையைப் போட்டுக் கொடுத்த காகித உறை. அவனுள் ஏதோ நெருடியது. அதைச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு கூடத்துக்கு வந்தான்.

"உனக்கு லீவ் சொல்லிட்டேன், ஞானம். வேணாக் கான்சல் பண்ணிட்டுப் போய்க்க. இன்னும் அரை நாள் இருக்குதே?" என்ற சிவப்பிரகாசத்தின் மீது ஞானப்பிரகாசத்தின் பார்வை ஆழமாகப் பதிந்திருந்தது. அவனது பார்வையில் ஏதோ வித்தியாசமாய்ப்பட, சிவப்பிரகாசம் கண்மலர்த்தி அவனைப் பார்த்தான். தம்பிக்கு ஏதோ நெருடல் என்பதைப் புரிந்து கொண்டான். அவனது இதயம் படபடத்தது.

(தொடரும்)



"என்ன சார்... இவ்வளவு சீக்கிரம் ரேஷன் கடைக்குக் கிளம்பிட்டீங்க...?"

"பாமாயில் வர்ற கப்பல் மலேசியாவை விட்டுக் கிளம்பிடுச்சாம். சீக்கிரமா போய் 'கியூ'வில் நில்லுங்கன்னு என் மனைவி சொல்றா...!"

- ஏ. வி. கிரி

## ஜோதிர்லதா கிரிஜா

**ச**மையற்கட்டைப் பெருக்கித் தள்ளிய போது அன்று காலை கதவு மூலையில் தான் கசக்கி வீசிய காகித உறை இல்லை என்பதைத் தற்செய லாகத்தான் சிவப்பிரகாசம் கவனித்து வியப் புற்றான். அதை வெளியே வீசிப் போடத் தோன்றாத தனது மடத்தனத்தை நொந்து கொண்டான். தம்பி அதை எடுத் திருக்க வேண்டும் என்று உறுதியாக ஊகித்தான். இனி அவனிடம் எதை யும் மறைக்காமல் நடந்தது நடந்த படி சொல்லி நோட்டம் பார்ப் பதே சரியாக இருக்கும் என்று அவனுக்குத் தோன்றி விட் டது. இல்லாவிடில், ஒரு வரை மற்றவர் வேவு பார்க்கும் அசிங்க விளையாட்டில் முடியலாம். இத் தனை நாளும்

### இதுவரை :

**சு**தந்திரப் போராட்ட தாகம் கொண்ட வீரர்களான ராமசாமி - ராஜாராமன் இருவரும் மாறி மாறிக் கதையைக் கொண்டு போகிறார்கள். ராஜாராமனின் மகள் அஞ்சனாவுக்கு ராமசாமி யின் மேல் ஒருதலைக் காதல். ராமசாமி திருமண மானவர். அஞ்சனா, தன் கணவரை விரும்புவ தறிந்து, ராமசாமியின் மனைவிக்கு வரும் பயங் களும் குழப்பங்களும். இந்த இருமுனைப் பிரச் னையில் சிக்கித் தவிக்கும் ராமசாமி ஒருபுறம்; மறுபுறம், தீவிரவாதியான தன் மகன் லண்டனி லிருந்து பிரான்சுக்கு தப்பிப் போனபின் விவரம் ஏதும் தெரியாமல் கலங்கும் ராஜாராமன். அவ ருக்கு அவ்வப்போது கடிதங்கள் மூலம் நம்பிக் கையும் புதிய போராட்டத் தகவல்களும் தரு பவன் நரேந்திரநாத் பானர்ஜி என்ற தீவிரவாத இளைஞன்.

இந்த நரேந்திரநாத் பானர்ஜி தந்த ஒரு திட்டத்தின்படி தன் மகன் பற்றித் தகவல் அறிய கப்பல் பணியாளர் ஒருவர் மூலம் ராஜாராமன், பிரான்ஸிலுள்ள ந. நா. பானர்ஜியின் சகோதர னுக்குக் கடிதம் அனுப்புகிறார். பதிலும் வருகிறது. அக்கடிதத்தைக் கொண்டு வந்து பத்திரமாகச் சேர்க்கும் பொறுப்பை - தேசபக்தனான சிவப்பிர காசம் ஏற்கிறான். (அவன் ஒரு சி.ஐ.டி. என்ற போதிலும்) சங்கடங்கள் பல கடந்து ராஜாராமன் கைக்கு வந்து சேரும் அக்கடிதம்; இந்திரநாத் பானர்ஜியின் நண்பன் ஒருவனால் எழுதப்பட்டது. ராஜாராமனின் மகன் உயிரோடிருக்கும் சாத்தி யங்கள் மிகக் குறைவு என்ற கசப்பான உண்மை யைச் சொன்ன கடிதம் இது! படித்து முடித்த ராஜாராமன் மயங்கி விழுந்தார்.

இதற்கிடையில் சிவப்பிரகாசத்தின் நடவ டிக்கைகளில், அவனது தம்பி (இவனும் ஒரு சி.ஐ.டி.) ஞானப்பிரகாசத்துக்குச் சந்தேகம் எழு கிறது....

**23**

ஒற்றுமையாகவும் அன்புடனும் அரிய உடன் பிறப்புக்களாய் வாழ்ந்த பெருமையெல் லாம் நசித்துப் போய் விடும்.

குளித்துவிட்டு அவன் வந்த தும், "ஞானம், உங்கிட்ட ஒரு முக்கியமான சங்கதி சொல்ல ணும். நான் ஒரு தப்புப் பண் ணிட்டேன், ஞானம். ஆனா வேணுமனு செஞ்ச தப்பில்லே. தேசத்துமேல உள்ள பக்தியால செஞ்ச தப்புங்கிறதை நீ புரிஞ்சுக்கிட்டா என்னை மன்னிச் சுடுவே..." என்று ஆரம்பித்தான்.

"இதைத்தானே சொல்றே?" என்றவாறு ஞானப் பிரகாசம் சிரிப்பற்ற முகத்துடன் அந்த காகிதக் கிழிசலை எடுத்து அவனிடம் நீட்டியதும் சிவப்பிர காசம் தலையைக் குனிந்து கொண்டான்.

எல்லாவற்றையும் விளக்கி முடித்து விட்டு, அவன் முத்தாய்ப்பாய் "உன்னோட அபிப்பிராயம் என்னவா இருக்கும்கிறது எனக்குத் தெரியல்லே, ஞானம். அதனால ரிஸ்க் எடுத்துக்க விரும்பல்லே... அதான்..." என்று அறிவித்ததும் ஞானப்பிரகாசம் கடுமையான பார்வையால் அவனை ஏறிட்டான்.

"நீ செஞ்சது ரொம்பத் தப்பான காரியம்,

அண்ணே. உனக்கு அவ்வளவு தேசபக்தின்னா, வெள்ளைக்காரன் கையிலேருந்து சம்பளம் வாங்காதே. வேலையை விட்டுட்டுப் போராடு."

கணம்போல் சிவப்பிரகாசம் திகைத்தாலும், அடுத்த வினாடியே சமாளித்தான். "வெள்ளைக்காரன் என்ன தன் சொந்தப் பணத்திலேருந்தா நமக்கெல்லாம் சம்பளம் கொடுக்கறான்? தன்னோட பாதுகாப்புக்காக அவன் வெச்சிருக்கிற போலீசுக்கு நம் நாட்டைக் கொள்ளையடிச்சுக் கிடைக்கிற பணத்துலேருந்து சம்பளம் தர்றான். அதுலயும் தன்னோட ஆட்களுக்கு நம்மை விடப் பல மடங்கு அதிகமாச் சம்பளம் தர்றான். அநியாயக்கார அயல்நாட்டானுக்குத் துரோகம் செய்யறது தப்பே இல்லே, ஞானம். அதை நீ முதல்ல புரிஞ்சுக்க. முதக்கா, 'துரோகம்'கிற வார்த்தையே தப்பு!"

ஞானப்பிரகாசத்தால் பதில் சொல்ல இயலவில்லை. எனினும் ஏறி இறங்கிய அவனது வலப்புருவம் அவன் கோபத்தை யடக்க முயன்றதை வெளிப்படுத்தியது. அடுத்த கணமே அவனும் சமாளித்துக் கொண்டு பேசினான் : "நீ போற வழிதான் சரின்னு நினைக்க உனக்கு எவ்வளவு உரிமை இருக்கோ, அதே அளவு உரிமை நான் போற வழிதான் சரின்னு நினைக்கிறதுக்கு எனக்கும் இருக்கில்ல?"

"ரைட், ஞானம். ஆனா அந்த வக்கில் ராஜாராமன் சார் நமக்காகப் பணம் வாங்காம வாதாடிக் கேஸை ஜெயிச்சுக் கொடுக்கல்லேன்னா இந்த வீடு இன்னிக்கு நமக்குச் சொந்தமாயிருக்குமா? அதை நெனச்சுப்பாரு... ஞானம் உன்னை ஒண்ணே ஒண்ணு மட்டும் வேண்டிக்கிறேண்டா. காங்கிரஸ் இயக்கத்துக்கு எதிராகவும், வெள்ளைக்காரனுக்கு ஆதரவாகவும் நீ வேற என்ன வேணும்னாலும் செய். ஆனா ராஜாராமனுக்கு லண்டன்லேருந்து லெட்டர் வருதுங்கிற விஷயம் மட்டும் யாருக்கும் தெரிஞ்சுடக் கூடாது. இந்த உதவியை உன் அண்ணனுக்கு நீ செய்தா ஆயுசு முச்சூடும் அவன் உனக்கு நன்றி காட்டுவாண்டா."

சிவப்பிரகாசத்துக்குக் குரல் தழுதழுத்துத் தொண்டை அடைத்துக் கொண்டது. கண்களில் நீர் திரை இட்டது. ஞானப்பிரகா






''ஆனாலும் இது ரொம்ப அநியாயம்யா!''
''ஏன், என்னாச்சு?''
''தீபாவளியை முன்னிட்டு நவம்பர் 2 வரை அன்பளிப்பில் 10% தள்ளுபடின்னு ஆபீஸ் வாசல்ல போர்டு மாட்டியிருக்காங்க!''

- டி. எஸ். திருமலைராயன்

சத்தை அது பாதித்தது.

"சரி, அண்ணே. அவரைப் பத்தி நான் எந்தத் துப்பும் போலீசுக்குத் தரவே மாட்டேன். சத்தியமா..." என்றான்.

மாலை வீடு திரும்பிய அமராவதிக்கும் முதலில் நரேந்திரநாத் பானர்ஜியை அடையாளம் தெரியவில்லை. தெரிந்த பிறகு அளவிடற்கரிய மகிழ்ச்சியடைந்தாள். படித்து முடித்ததும் அக்காவைப் போன்றே தானும் தேச விடுதலைப் போராட்ட இயக்கத்தில் முனைப்புடன் ஈடுபட வேண்டும் என்ற இலக்கைக் கொண்டிருந்த அவளுக்கு நரேந்திரநாத் பானர்ஜி ஓர் இலட்சிய மனிதனாய்த் தெரிந்தான். அவனது முதல் கடிதத்தை அவள் பல தடவை படித்துப் படித்து மனப்பாடமே செய்திருந்தாள். அவனுக்கு நேர்ந்துள்ள துயரம் பற்றி அறிய வந்ததும் துடித்துப் போனாள். அவனது உடைந்த குரலும், கண்களின் துயரமும், முகத்தின் வாட்டமும் அவளைப் பெரிதும் பாதித்தன. பாமா அருகே இல்லாத நேரத்தில் அப்பாவுக்கு லண்டனிலிருந்து வந்த கடிதத்தை அஞ்சனா அவளுக்குக் காட்டினாள். அதைப் படித்து முடித்ததும் அமராவதி கிட்டத்தட்ட நரேந்திரநாத்தின் அளவுக்குப் பாதிக்கப்பட்டாள். தன் அண்ணனும் ஒருவேளை சுடப்பட்டு இருந்திருப்பானோ என்ற கற்பனையை அவளால் தாங்கவே முடியவில்லை. அவன் இறந்து தான் போயிருந்திருக்க வேண்டும் என்றும், உயிருடன் இருந்தால் எப்படியாவது தகவல் அனுப்பி இருந்திருப்பான் என்றும் தோன்றிய எண்ணத்தால் அவளுள் துயரம் பெருகியது. ஆயினும் அதை அடக்கிக் கொண்டு, "நாமெல்லாருமாக இணைந்து செயல்பட்டு எப்படியாவது, ஏதாவது செய்தே ஆக வேண்டும், நரேந்திரநாத். சும்மா இருந்தால் வெள்ளைக்காரர்களுக்கு இன்னும் கொழுப்பு ஏறத்தான் செய்யும்" என்றாள்.

"உரிய நேரத்துக்காகக் காத்திருக்கிறேன், அமராவதி. எப்படியும் இரண்டு கொலைகளுக்காக எனக்குத் தூக்குத் தண்டனை நிச்சயம். அத்தோடு இன்னும் சில சாகசங்களைச் செய்து விட்டு ஒரேயடியாகச் சாக எண்ணி இருக்கிறேன்..."

இவ்வாறு சொன்ன போது அவன் விழிகளில் தோன்றிய வெளிச்சம் அமராவதியையும் அஞ்சனாவையும் அயர்த்தியது. இருவருக்கும் 'திக்' என்றது.

"அப்படியெல்லாம் பேசாதீர்கள், நரேந்திரநாத்."

''அதுதான் உண்மை, அமராவதி. உண்மை கசப்பானது மட்டுமில்லை. சில நேரங்களில் அது கொடுமையானதுங்கூட. சாவைப் பற்றிய பயம் எனக்குக் கிடையாது. சாவதற்கு முன்னால் நிறையச் சாதித்து விட வேண்டும் என்பதொன்றே என் கவலை. அதற்காகத்தான் சந்தர்ப்பங்களைத் தேடி, ஓடி ஒளிந்து கொண்டிருக்கிறேன். பயத்தால் அன்று.''

"புரிகிறது, நரேந்திரநாத்" என்று சொன்ன அமராவதியின் கண்கள் நொடிப்பொழுதில் பொங்கி விட்டன.

அப்போது அங்கு வந்த ராஜாராமன், "நரேந்திரநாத், நீ மெட்றாசில் இருக்கிற நாட்களில் எங்கும் வெளியே போகவே கூடாது. என்னைக் கேட்டால் நீ நிரந்தரமாக எங்கள் வீட்டிலேயே தங்கிக் கொள்ளலாமென்பேன். எனக்கு நீ ஒரு சுமையே இல்லை, என் மகனே'' என்றவாறு அவர்களுடன் உட்கார்ந்து கொண்டார்.

நரேந்திரநாத் பானர்ஜி வாய்விட்டுச் சிரித்தான். "அதெப்படி, ஐயா? என்னால் உங்களுக்கு எந்நேரமும் அபாயமும் இன்னலும் விளையலாம். அப்படி நேர்ந்தால் என்னால் என்னை மன்னித்துக் கொள்ளவே முடியாது, ஐயா. எனக்கென்று ஒரு மனச்சாட்சி இருக்கிறதல்லவா?''

''அபாயம் பற்றிய பயம் எங்களுக்கு இல்லை, நரேந்திரநாத்,'' என்றாள் அமராவதி.

"அப்பா சொல்லுகிறபடி செய், நரேந்திரநாத்" என்றாள் அஞ்சனா.

சமையலறையை அடைந்த ராஜாராமன் அங்கேயே சுவரோரத்தில் உட்கார்ந்தார்.

"பாமா... உங்கிட்ட ஒரு விஷயம் சொல்




• கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

லணும்."

"அந்தப் பையனை நம்மாத்துல கொஞ்ச நாள் தங்க வைக்கப் போறேள், அதானே?"

ராஜாராமன் சுற்றுமுற்றும் கவனித்தபின் கைநீட்டி அவள் கன்னத்தை இழைத்து, "இந்த ஒட்டுக் கேக்கற வழக்கத்தை என்னிக் குத்தான் விடுவியோ?" என்றார் சிரிப்புடன்.

"எதையாவது எங்கிட்டேருந்து மறைக்கி றேளோன்னு சந்தேகம். அதான் ஒட்டுக் கேட்கிறேன்."

"எதையும் மறைக்கல்லேன்னு தெரிஞ் சுண்டுட்டியோல்லியோ?"

"அதை யாரு கண்டா...?"

"அது போகட்டும், நீ என்ன சொல்றே?"

"அதான் நீங்களே தீர்மானிச்சுட்டேளே. இருந்துட்டுப் போகட்டும். பாவம். நம்மாத்து வேலைக்காரி வெளியில எதையாவது உள றாம இருக்கணும்."

"மெட்றாஸ்ல வேலை தேடறதுக்காக வந்தி ருக்கான்னு சொல்லணும். சும்மா வந்து உக்காந்திருக்கான்னு சொன்னா இல்லாத பொல்லாத சந்தேகமெல்லாம் வரும்."

அன்று மாலையே செபாஸ்டியன் யாரென்பதை வேறொரு பியூனிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட சிவப்பிரகாசம், அவன் மாலை ஆறு மணிக்கு மேல் அலுவலகத்தை விட்டுக் கிளம்பியதும் அவனைப் பின் தொடர்ந்து போய் அவன் வீடு இருக்கு மிடத்தைக் கண்டுகொண்டான்.

சுமார் எட்டு மணிக்குத் தெருவில் ஆள் நடமாட்டம் இல்லாத நேரத்தில் செபாஸ்டி யனின் வீட்டையடைந்து சிவப்பிரகாசம் கதவைத் தட்டி, 'டெலிக்ராம்' என்று குரல் கொடுத்ததும் அவனே வந்து கதவைத் திறந் தான். அவன் மனைவி பிரசவத்துக்குப் போயி ருப்பதால் வீட்டில் அவன் மட்டும் இருந்த தையும் நாசூக்கான விசாரிப்பின் மூலம் அவன் தெரிந்து கொண்டிருந்தான். எனவே கதவு திறக்கப்பட்ட மறுகணமே புயல் போல் பாய்ந்து உள்ளே சென்று பின்கழுத்தில் ஓர் அடி கொடுத்தான். குப்புற விழுந்து அவன் மீது ஏறி உட்கார்ந்து தலையைத் தரையில் மூன்று தரம் மோதினான். பிறகு கால்களி லும் ஏறி நின்று அழுத்தினான். பின்கழுத் திலும் ஓர் அடி கொடுத்தான். எதிர்பாராத அதிர்ச்சியாலோ என்னவோ செபாஸ்டியன் செயலற்றிருந்தான். பிறகு மெல்ல எழுந்த சிவப்பிரகாசம் தன் மோட்டார் சைக்கிளில் ஏறி விரைந்தான்.

'இனி இந்த ஆள் கவனமாக இருப்பான். கடிதங்களை யாருக்கும் விற்க மாட்டான்' என்று எண்ணிச் சிரித்தபடியே சிவப்பிரகா சம் வண்டியை விரட்டிக் கொண்டு போய் வீட்டையடைந்து நிம்மதியுடன் உட்கார்ந் தான்.

திருவல்லிக்கேணி கடற்கரையில்,

ஒதுக்குப்புறமான ஒரு பகுதியில் அந்தக் காங்கிரஸ் கூட்டம் அரசாங்கத்தின் அனுமதியுடன் நடந்து கொண்டிருந்தது. வடக்கே இருந்து வந்திருந்த ஒரு காங்கிரஸ் தலைவர் ஆங்கிலத்தில் உரையாற்றிக் கொண்டிருந்தார். ஆங்கிலேயர்களின் சூதால், காங்கிரஸ் பிளவுபட்டு வருவது குறித்துக் காரசாரமாய்ப் பேசினார். ஒருவர் தமிழில் பெயர்த்துக் கொண்டிருந்தார். காங்கிரஸை இந்துக்களின் இயக்கம் என்பதாய் ஆங்கிலேயர்கள் சாயம் பூசி முஸ்லீம்களை நம்பவைத்து வருவது பற்றியும் முஸ்லிம்கள் ஏமாந்து விடக் கூடாது என்றும் அவர் சொன்ன போது கூட்டத்தில் திடீரென்று ஒரு சலசலப்புக் கிளம்பியது. கற்கள் வீசப்பட்டன. விளக்குகள் உடைக்கப்பட்டு இருள் சூழ்ந்தது. கம்புகளும் கற்களும் நிறைய விளையாடத் தொடங்கியதில் கூட்டத்தினர் கால் போன போக்கில் சிதறி ஓடத் தொடங்கினார்கள். மேடைக்குக் கீழே முன்வரிசையில் உட்கார்ந்திருந்த ராமசாமியும் அஞ்சனாவும் எழுந்து நின்றனர். மேடையில் இருந்தவர்கள் பத்திரமாக அழைத்துச் செல்லப்பட்டார்கள்.

"சார், போயிடலாம், வாங்கோ" என்றாள் அஞ்சனா.

ராமசாமி முன்னால் விரைந்து நடக்க, அஞ்சனா ஓடியபடி அவரைப் பின்தொடர்ந்தாள். பின்னால் பலத்த காலடியோசை கேட்டது. ராமசாமி திரும்பிப் பார்த்தார். சிலர் மிக விரைவாக ஓடி வந்து கொண்டிருந்தார்கள். சட்டென்று ராமசாமி அஞ்சனாவின் கையைப் பற்றி இழுத்து ஓடத் தொடங்கினார். பக்கத்தில் தென்பட்ட ஒரு பள்ளிக்கூடத்துக்குள் அவளுடன் அவர் புகுந்து விட்டார். பள்ளிக்கூடத்தின் வகுப்பு அறைகள் வெளிப்பக்கம் பூட்டப்பட்டிருந்தன. நல்ல வேளையாக ஓர் அறை, அதன் வெளித் தாழ் சிதைந்திருந்ததால், பூட்டப்படாதிருக்க, அதனுள் அவளை இழுத்துக் கொண்டு அவர் அவசரமாய் ஓடி உட்பக்கம் கதவைச் சாத்தித் தாளிட்டார். சன்னல்களையும் சாத்திக் கொக்கி போட்டார். உள்ளே இருட்டாக இருந்தது. தட்டித் தடவித் தரையில் இருவரும் உட்கார்ந்தனர்.

''நாம இங்கே நுழைஞ்சதைப் பார்த்திருப்பாங்களா சார்?''

"உஷ், மெதுவா, மெதுவா, தெரியலியே... இது மாதிரி சமயங்கள்ள சம்பந்தமே இல்லாம பொறுக்கிகளும் ரவுடிகளும் எரியற வீட்டில பிடுங்கினது ஆதாயம்கிறாப்ல பூந்துடுவாங்க. இப்ப நமக்குப் பின்னால ஓடி வந்தது நம்ம மாதிரியே தப்பிச்சு ஓட்ற கும்பலாக் கூட இருக்கும். ஆனாலும் எப்படி தீர்மானிக்கிறது? அதான் சட்னு இங்க பூந்துட்டேன், மிஸ் அஞ்சனா..."

அறைக்கு வெளியில் சற்றுத் தொலைவில் காலடியோசை கேட்டது.

(தொடரும்)



* கருத்தம்மா

# திரை உலகு காட்டும்

* ஜல்லிக்கட்டுக்காளை



இங்கே குறிப்பிடப்படும் படங்களில் இரண்டொன்று தீபாவளிக்கு ரிலீஸ் ஆகாமலும் போகலாம் என் பதை நினை வில் கொண்டு படிக்க வேண்டு கிறோம்!



• பெரியமருது

## வாணி வேடிக்கை!

பம்பாய் :

**ம**ணிரத்னம் டைரக்ட் செய்யும் படம். கதாநாயகி மனீஷா கொய்ராலா. டினு ஆனந்தும் நடிக்கிறார். இந்து - முஸ்லீம் ஒற்றுமையை வலியுறுத்தும் கதை தான் என்கிறார்கள்.



• ஆணழகன்



## அடுத்த இதழ்....

இரண்டு ஆண்டுகளாக மணிரத்னத்தின் மனத்தில் ஊறிய விதை என்பதால் எதிர்பார்ப்பு ரொம்ப அதிகமாகி விடப் போகிறதே என்ற கவலை தெரிகிறது. அதனால்தான் பாடல் காஸட் கூட ரிலீஸ் ஆகவில்லை என்கிறார்கள். ஜீரோ எதிர்பார்ப்புடன் ரசிகர்கள் படத்தைப் பார்த்தால் அவர்கள் அடையும் திருப்தி அபாரமாக இருக்குமே! ஹிந்தியில் டப் செய்யப்படும் போது பிய்த்துக் கொண்டு போவதற்குரிய சமாசாரங்களை நிறையவே திட்டமிட்டுச் சேர்த்திருக்கிறார்களாம்.

### மணி-ரத்னம் :

தலைப்புத்தான் இப்படியே தவிர, மணிரத்னத்திற்கும் இதற்கும் சம்பந்தமில்லை. இதில் மணியாக ஆனந்த் பாபுவும், ரத்னமாக நெப்போலியனும் நடிக்கிறார்கள். "படம் பிரபலமடைய இது ஒரு யுக்தி என்பதால்தான் இந்தப் பெயரை வைத்தோம். இதற்கு இயக்குனர் மணிரத்னம் எதிர்ப்புத் தெரிவிப்பாரோ என்று எண்ணினோம். ஆனால் அவர் பெருந்தன்மையுடன் அப்படியெல்லாம் செய்யவில்லை" என்கிறார் இப் படத்தைக் கதை வசனமெழுதி இயக்கிய கே. ஜெயபாலன். குயவர் இனத்தைச் சேர்ந்தவராக நெப்போலியன் வருகிறார். அவரது தங்கை மோகனா ஆனந்த் பாபுவைக் காதலிக்கிறார். அந்த ஊர்ப் பண்ணையார் (பம்பாய் இறக்குமதி ஜாபர் ஆசாத்) தன் மகன் எதைக் கேட்டாலும் வாங்கித் தந்து விடுவார். இந்த முறை அவன் கேட்பது மோகனாவை. இதனால் சிக்கல் வருகிறது. இதுதான் கதை.

### நாட்டாமை :

சூரியனுக்குப் பிறகு எந்தப் படமும் 'ஹிட்'டாகவில்லை என்றாலும் சரத்குமாரின் படங்கள் சரசரவென்று ரிலீஸாகிக் கொண்டே இருப்பது ஓர் ஆச்சரியம். 'நாட்டாமை' படத்தில் துணிச்சலுடன் இரட்டை வேடம் ஏற்று நடிக்கிறார் சரத். அண்ணன் - தம்பி பாத்திரங்கள். நேற்றைய கனவுக் கன்னி குஷ்பு மூத்த சரத்தின் ஜோடி. முந்தாநாளைய குழந்தை நட்சத்திரம் மீனா இளைய சரத்தின் ஜோடி. பதினெட்டுப் பட்டிக்கும் ராஜா மாதிரி வாழும் குடும்பம் அது. அண்ணன் சரத்தின் நாட்டாமைக்கு ஊரிலும், வீட்டிலும் மறுபேச்சு இல்லை - இளைய சரத்தை மீனா திருமணம் செய்து கொள்ளும் வரை. தன் கணவன் அண்ணனுக்குப் பயந்து நடுங்குவது மீனாவுக்குப் பிடிக்கவில்லை. பிரச்னை வெடிக்கிறது. குடும்பம் பிரிகிறது. வில்லன் நுழைகிறான். இப்படிப் போகிறது கதை.

### ஆணழகன் :

மகன் பிரசாந்தை அப்பா தியாகராஜன் இயக்குகிறார். இயக்கம் என்பது தியாகராஜனுக்குப் புதிதல்ல. என்றாலும் ஆணழகனை அவர் இயக்குவது தற்செயலானது என்கிறார். "டி.கே. ராஜேந்திரன்தான் இயக்குவதாக இருந்தது. அவர் கீழே விழுந்து பலத்த அடிபட்டுக் கொள்ளவே, நானே இயக்கும்படி நேர்ந்தது" என்கிறார் தியாகராஜன். ஆணழகன் ஜனரஞ்சகமான படமாக இருக்குமாம். தியாகராஜனேதான் கதை, திரைக்கதையை எழுதியிருக்கிறார். "என் மகனைக் காதல் காட்சிகளில் இயக்குவது எனக்கொன்றும் பிரச்னையாக இல்லை. காரணம் இந்தப் படம் குடும்பத்தோடு உட்கார்ந்து கொண்டு ஆரோக்கியமான விதத்தில் ரசிக்கப்பட வேண்டும் என்பதுதான் என் எண்ணம்" என்கிறார்.

### ஜல்லிக்கட்டுக்காளை :

இளைய திலகத்தை முதல் முறையாக இயக்குகிறார் மணிவாசகம். "படத்தில் ஜல்லிக்கட்டெல்லாம் கிடையாது. ஒரு கம்பீரத்துக்காக இப் பெயரை வைத்திருக்கிறோம்" என்கிறார், "கட்டபொம்மன்" என்று ஏற்கெனவே ஒரு கம்பீரப் பெயர் கொண்ட படத்தை இயக்கிய மணிவாசகம். முதலாளியின் மகளைத் தொழிலாளி காதலிக்கிறார். முதலாளி சவால் - தொழிலாளி மறுசவால் என்று திரைக்கதை திட்டப்பட்டிருக்கிறது. மலேசியா வாசுதேவன் கதாநாயகி கனகாவின் அப்பாவாக நடிக்கிறார். "கே.பி. பிலிம்ஸிலே தான் நம்ம அண்ணனோட 'சின்ன தம்பி' ரெகார்டு-பிரேக் செய்தது"; "கனகாவோட நம்மவரு நடிச்ச 'தாலாட்டு கேக்குதம்மா' நல்லா ஓடிச்சு" என்றெல்லாம் இந்தப் படத்தின் வெற்றி வாய்ப்பை சென்டிமென்டாக அலசி நம்பிக்கை கொள்கிறார்கள் பிரபு ரசிகர்கள்!

### கருத்தம்மா :

'கருத்தம்மா'வை 'வெற்றிவேல் ஆர்ட் கிரியேஷன்ஸ்' என்ற பேனரில் இயக்குகிறார்

பாரதிராஜா. (சென்டிமெண்ட்?) ராஜா கதா நாயகன். இரண்டு புதுமுகங்கள் - ராஜ்ஸ்ரீ, மகேஸ்வரி - கதாநாயகிகள். பழைமையில் ஊறிய கிராமத்திற்கு மருத்துவ சேவை செய்யப் போகிறான் டாக்டர் கதாநாயகன். அங்கு நிலவும் பெண் சிசுக் கொலை போன்ற பல அவலங்களை, அங்குள்ள ஒரு பெண்ணின் உதவியுடன், சீரமைக்கிறான். கிராமத்துத் தலைமைக்கு இது பிடிக்க வில்லை. அடிதடி ஆரம்பமாகிறது. அவ னைத் தேடி கிராமத்துக்கு வரும் அவனது அத்தை மகள், கடிந்து கொள்கிறாள் - 'உனக் கேன் வம்பு?' என்று. அவளது பின்னணி, இரு கதாநாயகிகளில் யாரை நாயகன் மணக் கிறான் ஆகியவை சஸ்பென்ஸாம்.

## அவதாரம் :

**நூ**ற்றுக்கும் மேற்பட்ட படங்களில் நடித் துள்ள நாஸர் இயக்குனராக 'அவதாரம்' எடுத் துள்ளார். கதை, வசனமும் அவரே. தெருக் கூத்துக் கலைஞர்களைப் பற்றிய கதை. நாட்டுப்புறப் பாடல்களுக்கு இளையராஜா நயமாக இசையமைத்திருக்கிறாராம். பார்வை யிழந்தவராக ரேவதி நடிக்கிறார்.

## பெரியமருது :

**வி**ஜயகாந்த் படம். இயக்குவது என். கே. விஸ்வநாத். "கிராமியக் கதை. சிறுவன், முரட னாக வளருகிறான். அவன் மாமன் மகள் (ரஞ்சிதா) 'மூளை பலத்துக்கு முன்னே முரட்டு பலம் தோற்று விடும்' என்பதைச் சவால் விட்டு உணர்த்துகிறாள். இதுதான் அடிப் படையான மெஸ்ஸேஜ்" என்கிறார் தயாரிப் பாளர் சங்கிலி முருகன். படத்தின் சிறப்பம்ச மாக ஏழரை நிமிடங்கள் இடம்பெறும் பாடல் காட்சியைக் குறிப்பிட்டார். (இசை - இளையராஜா). கும்மி, ஒயிலாட்டம் என்று பல கிராமியக் கலைகள் இடம்பெறும் காட்சி அது. டூயட்டே கிடையாது என்பதும் குறிப்பிடத்தக்கது.

## புதிய மன்னர்கள் :

**'பு**துவசந்தம்' விக்ரமனின் ஐந்தாவது படம். இளைஞர் சக்தி ஆக்கபூர்வமாகச் செயல்பட ஆரம்பித்தால் அராஜக அரசியல் வாதிகளிடமிருந்து கோட்டையைக் கூடக் கைப்பற்ற முடியும் என்ற கருத்தைச் சொல்ல வரும் ஜனரஞ்சகப் படம் என்று தகவல். தயா ரிப்பு வேலைகள் முற்றிலும் முடிந்து விட்ட நிலையில், டப்பிங் மட்டும் பாக்கி என்று இந்தக் கட்டுரை எழுதும் நேரத்தில் தெரிய வருகிறது. "படத்தின் மிகப் பெரிய பிளஸ் பாயின்ட், ஏ. ஆர். ரகுமானின் இசை; படம்

# துணுக்கு ஸ்பெஷல்!

வெற்றியடைந்தால் அதில் பெரும் பங்கு ரகுமானைச் சாரும்" என்கிறார்கள்.

## வள்ளி வரப் போறா :

**ம**லையாளத்தில் சக்கை போடு போட்ட ஒரு முழு நீள நகைச்சுவைப் படம் தமிழில் மறு உருவம் பெறுகிறது. இங்கே ஹீரோ, பாண்டியராஜன். மோகனா ஜோடி. ஒரு இக் கட்டான சமயத்தில் ஒரு மலையாளப் பெண் ணைத் திருமணம் செய்து கொண்டு விடுகிற பாண்டியராஜன், தமிழ்நாட்டுக்கு வந்து அத னால் என்ன பாடுபடுகிறார் என்பது கதை. படத்தின் சிறப்பம்சம் - முற்றிலும் பிலிம் இன்ஸ்டிடியூட் இளைஞர்கள் தயாரிப்பு என்பது. 'மெட்ரோ' ப்ரியா ஒரு சீனில் தலை காட்டுகிறார்.

## வீரப்பதக்கம் :

**ம**றுபடி மணிவண்ணன், சத்யராஜ் காம்பி னேஷனில் ஒரு படம். இதில் போலீஸ் துறை பற்றி அலசியிருப்பதாகச் சொல்கிறார்கள். கான்ஸ்டபிளாகச் சேர்ந்து, உயரும் சத்யராஜ் கேரக்டர், மணியின் வசனங்களால் பிரமாதமாகப் பாலீஷ் போடப்பட்டிருக்கிற தாம். 'அமைதிப் படை'யைத் தூக்கிச் சாப் பிட்டு விடும் என்கிறார்கள்.

## நம்மவர் :

**க**மல்ஹாசன் கல்லூரிப் பேராசிரியராக நடிக்கும் படம். ஜோடி கௌதமி. முதலில் பொங்கல் ரிலீஸ் என்று சொன்னவர்கள் இப்போது தீபாவளி ரிலீஸ் என்று வெகு சுறுசுறுப்பாகப் படத்தைத் தயார் செய்து கொண்டிருக்கிறார்கள். கதை என்ன என்று கூற மாட்டார்களாம்; சஸ்பென்ஸாம்! இன் னொரு சஸ்பென்ஸ், மகேஷ் என்ற புதுமுகத்தை இசையமைப்பாளராக அறி முகப்படுத்துவது. இவரும் ரஹ்மான் போல இதுவரை விளம்பரப் படங்களுக்கு இசை யமைத்துக் கொண்டிருந்தவர் ("சொட்டு நீலம் டோய்...."). ரஹ்மான் போல இவரும் திரை உலகில் கொடிகட்டிப் பறப்பாரோ?

**— அருண்சரண்யா, கிச்சா.**

# காதலன்

தமிழ் சினிமாவில் ஒரு தொழில்நுட்பப் புரட்சியைக் கொண்டு வந்திருக்கிறார் என்ற அளவில் ஷங்கரை, பக்கம் பக்கமாகப் பாராட்டலாம். இரண்டு பாடல் காட்சிகளில் அனிமேஷனைப் புகுத்தி அசத்தியிருப்பதும் ஸவுண்ட் மற்றும் லைட்டிங்கில் ஜாலம் காட்டியிருப்பதும் இனி வரப் போகும் பல படங்களுக்குக் கோனார் நோட்ஸாயிருக்கும். பணத்தை, கார் நொறுக்கலிலும் குண்டு வெடிப்பிலும் கிருஷ்ணா நதிநீராகச் செலவழித்திருக்கும் குஞ்சுமோனுக்கு (நியாயமாக குஞ்ஞுமோன் என்கிறார் ஒரு மலையாள அன்பர்.) முதலுக்கு மோசம் இருக்காது.

ஆனால் இத்தனை செலவும் பிரும்மாண்டமும் ஒரு பிசாத்து லவ் ஸ்டோரிக்கு ஸாரி க்ரைம் ஸ்டோரிக்கு அநாவசியமாகப்படுகிறது. சும்மா சும்மா சூரைக் கவிழ்ப்பது எரிச்சலாயிருக்கிறது.

கதை என்ன, பார்க்கலாம்

கான்ஸ்டபிள் மகனுக்கு கவர்னர் மகள் மேல் காதல். ஆகவே மோதல். கவர்னர் சாதல். எழுந்து வீட்டுக்குப் போதல்.

ஆட்சியைக் கவிழ்க்க கவர்னரே ரவுடி வேலைகள் செய்யும் அபத்தம் ஒருபுறம் என்றால், இந்த ரோலுக்கு எதற்கு ஒரு கிரிஷ்கர்னாட் என்று கேட்கத் தோன்றுகிறது. கர்நாடக சிவாஜிக்கு ஒரு கௌரவமான ரோலா கிடைக்கவில்லை?

பிறிதொரு டிராக்கில் பிரபுதேவா - நக்மா காதல் துரத்தல்கள். டைரக்டர் மூக்கும் காட்டும் அந்தக் கானகக் காட்சி மட்டும் மனதில் இடம்பிடிக்கிறது. நடுக்காட்டில் கவர்னர் பெண்ணுக்கு தூளி கட்டித் தருவதும், ஒரு புடைவையைக் கொண்டே பாத்ரூம் எழுப்புவதும், தென்னை ஓலையில் கிலுகிலுப்பை செய்து தருவதும் கவிதை. மற்றபடி ஜென்டில்மேன் ஷங்கர், படம் முழுக்கத் தேடினாலும் கிடைக்க மாட்டார்.

வடிவேலுக்கு மகத்தான பிரேக். பிரபுதேவாவுக்கு இணையாக அவர் ஆடும் ஆட்டத்துக்கு விஸிலடிக்காதவர்கள் ஔரங்கசீப் வம்சம்.

பிரபுதேவா? ஆடுகிறார். ஆடுகிறார். ஆடுகிறார். நடிக்க வேண்டிய காட்சிகளிலெல்லாம் ஸ்கிரீனுக்கு முதுகைக் காட்டி விடுவதால் முகபாவம் சரிவரத் தெரிவதில்லை. (டைரக்டரின் புத்திசாலித்தனம்?)

எல்லோரையும் தூக்கிச் சாப்பிட்டு விடும் எஸ்.பி.பி. படத்தின் ஒரே சூப்பர் ஸ்டார். அவர் உடம்பு ஏன் அத்தனை பெரிசாக இருக்கிறது என்பது இப்போது புரிகிறது. உள்ளே ஒரு நடிப்பு ஃபாக்டரி!

இன்னும் சில வருஷங்களுக்குத் தம் முதல் இடத்தை விடப் போவதில்லை ரகுமான். அதென்னய்யா, அத்தனை பாட்டிலும் அப்படி ஒரு ஐஸ்கிரீம டேஸ்ட்?

'எதையும் வித்தியாசமாக' என்ற டைரக்டரின் உன்னத நோக்கம் புரிகிறது. கதையைக் கோட்டை விட்டிருப்பதுதான் பரிதாபம்.

- ஆர்.பி.ஆர்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# மணிக்கொடி

24



## ஜோதிர்லதா கிரிஜா

**ரா**மசாமி தம்மால் இயன்ற அளவுக்குக் கட்டுப்பாட்டுடன் இருந்தார். ஆனால் வெளியே சன்னமாய்க் கேட்ட காலடியோசை கிளர்த்திய அச்சத்தில் அஞ்சனாவுக்கு நெஞ்சு வரண்டு போயிற்று. இருட்டுக்குச் சற்றுப் பழக்கப்பட்டிருந்ததில் இப்போது ஒருவர் முகத்தை ஒருவரால் மங்கலாய்ப் பார்க்க முடிந்தது.

காலடியோசை பலத்துக் கொண்டு வந்தது.

“அந்தப் பொண்ணு இங்கதாண்டா நுழைஞ்சிருக்கணும்.”

“இருக்காதுடா. க்ளாஸ் ரூம் கதவுகள்ளாம் வெளிப்பக்கம் பூட்டி இல்ல இருக்குது?”

“அந்தப் பொண்ணுக்கு முன்னால ஒரு ஆளு ஓடிண்டிருந்தாண்டா. அவளோட ஆளுன்னு நினைக்கிறேன். அவன் அவளைப் பிடிச்சு இழுத்துட்டு ஓடின மாதிரி தெரிஞ்சுச்சு.”

“பக்கத்துல எதுனா வீட்டுக்குள்ள பூந்திருப்பாங்கடா. வாங்க போலாம். நல்ல வேட்டை நழுவிப் போயிடிச்சு....”

இருதயம் வெளியே குதித்து விடுமோ என்கிற அளவுக்கு அஞ்சனாவுக்குப் படபடப்பாக இருந்தது. அவள் தலை தாழ்ந்தது. சற்றுப் பொறுத்துத் தேய்ந்து கொண்டே போன காலடியோசை பின்னர் முற்றாக நின்று விட்டது.

“போயிட்டாங்க, மிஸ் அஞ்சனா. கடவுளாப் பார்த்து உதவி பண்ணினமாதிரி இந்த அறைக்கு வெளித்தாழ்ப்பாள் இல்லாததுனால பூட்டாம இருந்தது. இல்லாதபோனா, அந்த ரவுடிப்பசங்க கிட்ட மாட்டிண்டிருந்திருப்போம்” என்ற ராமசாமி, தொடர்ந்து, “நம்ம மெட்றாஸ்ல இதுக்கு முந்தி இப்படி பொதுக் கூட்டத்துல கல்லெறியறது, கொல்றதெல்லாம் எனக்குத் தெரிஞ்சு நடந்ததே இல்லே. மனுஷா மனசுல, துவேஷத்தையும் விரோதத்தையும் ரொம்ப சுலபமா விதைச்



## அருள்வாக்கு

**ஸாதாரணமாகவே ஒரு இயக்கத்துக்கு அது சொல்கிற எதிர்ப்புக் கார்யத்தை வைத்துத்தான் பொது ஜன ஆதரவு கிடைக்கிறது; இந்த அளவுக்கு அது விதிக்கிற விதிகளுக்கு ஆதரவு கிடைப்பதில்லை. 'வெள்ளைக்காரனை விரட்டு' என்று காந்தி சொன்னதால் எல்லாரும் அவர் கீழே எதிர்ப்புக் கார்யத்தில் ஒன்று சேர்ந்தார்கள். ஆனால் அவர் விதித்த அஹிம்ஸை, ஸத்யம், ஒழுக்கம், ஈச்வர பக்தி முதலானதை எத்தனை பேர் எடுத்துக் கொண்டார்களென்று பார்த்தால் வருத்தமாகத்தான் இருக்கும். வெள்ளைக்காரனிடம் ஏன் நாம் கட்டுப்பட்டிருக்க வேண்டும் என்பதாக, அந்நிய ஆட்சியின் அதர்மத்துக்காக அவ்வளவு இல்லாமல், நம்முடைய ஸ்வேச்சா ஸ்வதந்த்ரங்களில் ஆசையால்தான் பெரிய போராட்டம் நடத்தியது. அந்த காந்தியே நம்மை சில தர்மங்களில் கட்டுப்படுத்துகிறார் என்னும் போது அவற்றை ஏற்றுக் கொள்ள மனஸ் இல்லை. பொதுவாக நம்முடைய தப்பை உணர்ந்து நம்மைத் திருத்திக் கொள்வதை விட, பிறன் தப்பைச் சொல்லி எதிர்ப்பதில் தான் நமக்கு ருசி. நானே உங்களிடம் நாஸ்திகத்தையோ, கள்வர்ஷனையோ எதிர்த்துக் கூட்டம் போடுங்கள் என்று ஒரு வார்த்தை சொன்னால் உடனே பெரிசாக மஹாநாடு நடத்திக் காரஸாரமாகப் பேசி, தீர்மானங்கள் நிறைவேற்றுவீர்கள்; அதுவே, சாஸ்த்ர ஆசாரப்படி இப்படி இப்படி இருங்கள் என்று ஓயாமல் சொன்னாலும், கேட்கத் தோன்றுகிறதா?**

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

சுடலாம். அன்பையும் சகிப்புத்தன்மையையும் ஏற்படுத்தறதுதான் மகா கஷ்டம். இப்ப பாருங்கோ. இந்துக்களையும் முஸ்லிம்களையும் பிரிச்சு பேதம் பண்ணி வெச்சுட்டா, அந்த விரோதத்தைத் தனக்கு ஆதாயப்படுத்திக்கலாம்னு வெள்ளைக்காரன் விஷமத்தைத் தொடங்கிட்டான். சுதேசி இயக்கத்துல மத பேதமே பார்க்காமதான் ரெண்டு சாராரும் கலந்துண்டிருந்தா. 'வந்தேமாதரம்', 'அல்லா-ஹு அக்பர்' ரெண்டுமே கோஷமாக் கேக்கும். இப்ப பாருங்கோ. நமக்குள்ள ஒத்துமை இல்லாம சண்டை போட்டுண்டு இருக்க இருக்க அவனுக்குக் கொண்டாட்டந்தானே!"

"ஏன், சார்? 1884 ஆம் வருஷத்துலேருந்து 1888 ஆம் வருஷம் வரைக்கும் டஃப்ரின்னு ஒரு வைசிராய் இருந்தானாமே? அவன் காலத்துலயே இந்தப் பிளவை ஏற்படுத்திட்டதா எங்கப்பா சொன்னாரே, அது சரி தானா?"

"ரொம்பக் கரெக்டும்மா. அவன் என்ன சொன்னான் தெரியுமோ? 'இந்தியாவில அஞ்சு கோடி முஸ்லிம்கள் இருக்கா. அஞ்சு கோடிங்கிறது வெறும் எண்ணிக்கை இல்லே. ஒரு சக்திவாய்ந்த மக்கள் தொகை. அவாளுக்குன்னு ஒரு நாடே இருக்கக் கூடிய அளவுக்குப் பெரிய எண்ணிக்கை' அப்படின்னு வத்தி வெச்சதே அவந்தாம்மா. முஸ்லிம் லீக் ஏற்பட்டதே அவன் விதைச்ச விதையாலதாம்மா. கிழக்கு வங்காளத்துல நவாப் சலீமுல்லாவை முஸ்லிம் லீகைத் தொடங்க வெச்சதே இவன் மாதிரி ஆட்களோட துண்டுதல்தான்."

வெளியே சந்தடி கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்து கொண்டிருந்தது.

"மிஸ் அஞ்சனா, நான் முதல்ல எட்டிப் பார்த்து நிலைமையைத் தெரிஞ்சுக்கறேன். அதுக்கு அப்புறம் போயிடலாம்."

அஞ்சனா, "சரி" என்றாள். ஆனால் வெளியே சந்தடி கேட்டுக் கொண்டே இருக்கக்கூடாதா என்று அவள் நினைத்தாள். இந்த இரவு விடியாமல் நீண்டு கொண்டே போகாதா என்றிருந்தது அவளுக்கு. ராமசாமியின் இனிய குரலில் புறப்படும் சொற்களைக் கேட்ட வண்ணம் ஆயுள் முழுவதும் கழித்து விடலாமே என்று நினைத்தாள்.

ராமசாமி மெதுவாக எழுந்து கதவருகே சென்று ஓசைப்படாமல் தாழ்ப்பாளைத் திறந்து இரண்டங்குல இடைவெளி ஏற்படுத்திக் கொண்டு வெளியே பார்த்தார். தெருவில் ஆள் நடமாட்டம் தென்படவில்லை.

'மிஸ் அஞ்சனா! தெருவில சந்தடி எது



## வி.ஐ.பிக்களின் வாரிசுகள்!

● ஹரியானாவில் 96 சுங்க இலாகா இன்ஸ்பெக்டர்கள் நியமனத்துக்கு தேர்வு நடந்ததும் வாரியத் தலைவர் திடீரென ராஜினாமா செய்தார். புதிய தலைவர் பதவியேற்றவுடன் நேர்முகத் தேர்வில் தேர்ந்தெடுக்கப்பட்டதாகக் கூறி ஒரு பட்டியலை அரசுக்கு அனுப்பினார். விதிகளின்படி, பட்டியல் வெளியிடப்படவில்லை. பாதிக்கப்பட்டவர்கள் உயர் நீதி மன்றத்தை அணுகிய போது, எல்லா ஃபைல்களும் உடனே அழிக்கப்பட்டு விட்டதாகக் கூறப்பட்டதால் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது. சுப்ரீம் கோர்ட் சி.பி.ஐ. விசாரணைக்கு உத்திரவிட்ட போது திடுக்கிடும் தகவல்கள் வெளியாயின. இலாகா காரியதரிசியின் மகன் உள்பட வி.ஐ.பிக்களின் வாரிசுகள் பட்டியலில் இடம் பெற்றிருந்தனர். உண்மையில் நேர்முகத் தேர்வே நடைபெறவில்லை. நியமனங்களை ரத்து செய்தது சுப்ரீம் கோர்ட்.

ஆதாரம் : ஹிந்து / அ. ஷண்முகசுந்தரம்.

வும் காணோம். நாம கிளம்பிடலாம்னு தோணறது...'' என்று தலைதிருப்பிச் சொல்லி விட்டு அவர் கதவை மேலும் அகலமாய்த் திறந்தார். வெளிக்காற்று உள்ளே புகுந்ததும் இருவருக்குள்ளும் ஒரு புத்துணர்ச்சி பரவியது. சிறிது வெளிச்சமும் வந்தது. இன்னும் கொஞ்சம் எட்டிப் பார்த்த பின், "வாங்கோ மிஸ் அஞ்சனா, போயிடலாம்'' என்றபடி அவர் முன்னால் நடந்தார். அஞ்சனா அவரைப் பின் தொடர்ந்தாள்.

தெருவின் சந்தடியற்ற நிலை அஞ்சனாவுள் ஓர் அச்சத்தைக் கிளர்த்தியது. அவரவர் ஒரு கிலியில்தான் தத்தம் வீடுகளுக்குள் பதுங்கி இருந்தனர் என்பது புரிய, இருவருக்குமே பயமாக இருந்தது.

ஒரு வழியாக வண்டி பிடித்து முதலில் ராஜாராமனின் வீட்டையடைந்தார்கள். ராஜாராமனே கதவைத் திறந்தார்.

"மீட்டிங் நன்னா நடந்ததா?''

"உள்ளே போய்ப் பேசலாம்ப்பா.''

அதுகாறும் தங்களை ஆட்கொண்டிருந்த வலிமையெல்லாம் போய் விட்டாற்போல் அஞ்சனாவும் ராமசாமியும் பொத்தென்று உட்கார்ந்தார்கள்.

அப்போது மாடியறையிலிருந்து நரேந்திரநாத் பானர்ஜியும் சமையற் கட்டிலிருந்து அமராவதியும் அங்கு வந்து சேர்ந்து கொண்டார்கள்.

"தப்பிச்சு வந்தாப் போறும்னு ஆயிடுத்து'' என்று தொடங்கிய அஞ்சனாவும் அவளுடன் அவ்வப்போது சேர்ந்து கொண்ட ராமசாமியும் திருவல்லிக்கேணிப் பொதுக் கூட்டத்தின் போது நடந்த கலவரம் பற்றி விவரித்தார்கள். அவர்கள் பேசத் தொடங்கிய இரண்டாவது நிமிடத்தில் பேச்சின் உணர்ச்சிவேகத்தால் தாக்கப்பட்ட பாமாவும் அங்கு வந்து நின்றுகொண்டாள்.

"தெய்வாதீனமா பக்கத்துல இருந்த பள்ளிக்கூடத்துல ஒரு க்ளாஸ் ரூம் எங்களுக்குன்னே பூட்டாதமாதிரிக் காலியா இருந்தது. அதுக்குள்ள ரெண்டு பேரும் ஓடிப் போய் ஒளிஞ்சுண்டுட்டோம்'' என்ற அஞ்சனாவை, பாமா திகிலுடன் பார்த்தாள்.

"எப்படியோ ஒரு சின்னக் கீறல் கூட இல்லாம தப்பிச்சு வந்துட்டேளோல்லியோ? அது போறும்'' என்றார் ராஜாராமன்.

அதன் பிறகே நரேந்திரநாத்தை ராமசாமிக்கு அவர் அறிமுகம் செய்து வைத்தார்.

"மிஸ்டர் ராமசாமி, இன்னிக்கு நீங்க நம் மாத்துலயே சாப்பிட்டுடலாம். பசியா இருப்பேள்'' என்று ராஜாராமன் உபசரித்ததும், ராமசாமி உடனேயே எழுந்து கொண்டு விட்டார்.

"வேணாம் சார், இன்னொருநாள் பார்த்துக்கலாம். வீட்டுல எல்லாரும் கவலைப்பட்டுண்டிருப்பா. அப்புறம் சாவகாசமா ஒரு நாள் வறேன். நரேந்திரநாத்தோட நிறையப் பேசணும்....''

"அன்னிக்கு மாதிரி நானே உங்களைக் கார்ல கொண்டு போய் விட்டுடறேன்'' என்ற ராஜாராமன், ராமசாமி மறுக்க மறுக்கக் காதிலேயே போட்டுக்கொள்ளாமல் கார்க் கதவைத் திறந்து விட்டார்.

ராமசாமி அன்றிரவு வழக்கம் போல் தமது அறையில் படித்துக் கொண்டிருந்த போது, விசாலம் குறட்டை விடத் தொடங்கியதன் பின், குஞ்சம்மா அவரது அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்தித் தாழிட்டாள். ராமசாமி படிப்பதை நிறுத்திவிட்டு அவளை ஏறிட்டார்.

"வா, குஞ்சம்மா. விசேஷமா ஏதானும்?'' என்றார் சிரிப்புடன். ஆனால் குஞ்சம்மா அழ ஆரம்பிக்கவும், திடுக்கிட்டு, "என்ன, குஞ்சம்மா? என்ன ஆச்சு? எதுக்கு இப்ப அழறே?'' என்றார்.

"இன்னும் என்ன ஆகணும்? இருட்டுல

ஒரு ரூமுக்குள்ள நீங்களும் அவளுமா இருந்துட்டு வந்திருக்கேள். ஊர் சிரிக்கிறதுக்கா? இன்னிக்கே என்காதுக்கு வந்துட்ட சங்கதி நாளைக்கு இந்த மெட்றாஸ் முழுக்கப் பரவிடாதா? பெரிய இடத்துப் பொண்ணு வேற. உங்களுக்கு ஏன்னா புத்தி இப்படிப் போறது? இதுக்கும் ஏதானும் சமாதானம் சொல்லி என்னை ஏமாத்தறதா இருக்கேளா?'' என்று திக்கித் திணறி ஒரு வழியாய்ப் பேசி முடித்த குஞ்சம்மா கேவிக் கேவி அழலானாள். ராமசாமி அதிர்ந்து போனார்.

## 25

குஞ்சம்மாவின் அழுகை, துயரம் ஆகியவற்றைக் காட்டிலும், ஓர் அறையின் உள்ளே கதவைச் சாத்திக் கொண்டு தாமும் அஞ்சனாவும் கொஞ்ச நேரம் இருந்தது பற்றிய செய்தி இவ்வளவு விரைவில் தம் வீட்டுக்கு வந்து சேர்ந்து விட்டதுதான் ராமசாமியை அதிகமாக வியப்புறச் செய்தது. கூடவே தாங்க முடியாத சினம் உண்டாயிற்று. ''இதபாரு, குஞ்சம்மா, நீயும் ஒரு பொண்ணு. அவ நிலைமையில உன்னை வெச்சுப் பாரு. இது மாதிரி ஒரு ஆபத்துல நீயும் சிக்கிண்டேன்னு வச்சுக்கோ. அப்ப தற்செயலா அந்த இடத்துல நம்ம மணவாள நாயுடு உன்னைப் பார்க்கறார். அப்ப அவர் என்ன பண்ணுவார்? உன்னைக் கூட்டிண்டு பத்திரமான இடத்துக்கு ஓடுவாரில்லியா? அப்ப நீ வரமாட்டேன்னுடுவியா? நம்ம ஆத்துக்காரரோட ஃப்ரண்ட், ஒரு சகோதரன் மாதிரிதான் நடந்துப்பார்ங்கிற நம்பிக்கையோட நீ அவர் கூடப் போவியா, இல்லே அஞ்சாறு ரவுடிப்பசங்க கையில சிக்கி நாசமாப் போவியா?''

குஞ்சம்மாவின் பார்வை தாழ்ந்தது. அவள் யோசித்தாள். யோசனையின் விளைவாக அவள் உடம்பு நடுங்கியது. ஐந்தாறு ரவுடிகளின் பிடியில் தான் சிக்கிச் சீரழிவது பற்றிய நினைப்பையே அவளால் தாங்க முடியாது போயிற்று.

உட்கார்ந்திருந்த நிலையிலேயே நகர்ந்து வந்து அவர் கால்களைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, "என்னை மன்னிச்சுடுங்கோ. நான் சொன்னதெல்லாம் தப்பு'' என்றாள்.

"சரி, சரி, எழுந்து இப்படி உக்காரு.''

கட்டிலில் அவருக்கு அருகே உட்கார்ந்து கொண்ட அவள், ''நிஜமாவே வெரி, வெரி சாரின்னா, என்னை ஃபர்கிவ் பண்ணிட்டேள்தானே?'' என்றாள்.




**"புதுசா 'காதலன்' வெடி வந்திருக்குன்னு கொடுத்தீங்க. ஒரு வெடி கூட வெடிக்கவில்லையே!?"**
**"டேக் கிட் ஈஸி!"**

**— வில்லவன் கோதை**

ராமசாமி சிரிப்பையடக்கிக் கொண்டு, "ஃபர்கிவ் பண்ணியாச்சு" என்றார். அப்போது அவரது பார்வை அவளது பெரிய வயிற்றின் மீது விழ, "குஞ்சம்மா! நீ இந்த சமயத்துல அழவே கூடாது, என்ன?" என்றார் பரிவோடு. பின்னர், "அது சரி, அதுக்குள்ள வேலை மெனக்கெட்டு பீச்ல நடந்ததைப் பத்தி உங்கிட்ட யாரு சொன்னா? ஆச்சரியமா இருக்கு எனக்கு. நம்மாத்துல டெலிபோனும் இல்லே. நான் ஆத்துக்கு வந்து சேர்றதுக்குள்ள உனக்கு நியூஸ் வந்துடுத்தே?" என்று கேட்டார்.

"நம்மாத்துல ஃபோன் இல்லாட்டா என்ன? செல்லம்மா மாமியாத்துல இருக்கே?"

"அந்த மாமிக்கு யாரு ஃபோன் பண்ணினா?"

"நீங்க ரெண்டு பேரும் நுழைஞ்ச ஸ்கூலுக்கு எதிராத்து மாடியிலேருந்து செல்லம்மா மாமியோட தங்கை பார்த்திருக்கா. ஸ்கூலுக்குப் பக்கத்துல ஒரு லாம்ப் போஸ்ட் இருக்காமே? அந்த விளக்கு வெளிச்சத்துல க்ளியராப் பார்த்திருக்கா."

"உடனே ஃபோன் பண்ணிட்டாளாக்கும்?"

"அடிதடியும் கலாட்டாவும் தொடங்கிட்ட ஒரு இடத்துலேருந்து நமக்குத் தெரிஞ்சவா தப்பிச்சு ஒரு இடத்துல பூந்துட்டா அவாளோட மனுஷாளுக்கு உடனே தெரிவிக்கணும்கிற நல்ல எண்ணத்துலயும் சொல்லி இருக்கலாமோல்லியோ?"

"நல்ல வேளை, கலாட்டா சீக்கிரமே நின்னுடுத்து. ராத்திரி முழுக்க தங்கி இருந்தா உனக்கு இன்னும் அதிகமான சந்தேகம் வரும்."

"சந்தேகம் வர்றதுக்கு ராத்திரி முழுக்க வேணுமா? அஞ்சு நிமிஷம் போறாதா?"

"சரி, சரி, போய்ப்படு."

குஞ்சம்மா அவரது மூக்கைப் பிடித்து ஆட்டிவிட்டு அகன்றாள்...

**கூ**டத்துப் பெரிய அறையில் வழக்கம் போல் பாமா தன் மகள்களுக்கு அருகே படுத்துக் கொண்டாள். படுத்த கொஞ்ச நேரத்தில் அமராவதி தூங்கிப் போனாள். ஆனால் அஞ்சனாவுக்கும் பாமாவுக்கும் தூக்கம் வரவில்லை. அன்றிரவு கிட்டத்தட்ட அரைமணி நேரம் போல் தாழிட்ட கதவுக்கு அப்பால் ராமசாமியுடன் பேசியபடி கழித்த நிகழ்ச்சியே திரும்பத் திரும்ப அஞ்சனாவுக்கு ஞாபகம் வந்து கொண்டிருந்தது. முக்கால் இருட்டிலும் பளிங்குக் கற்கள் போல் ஒளிர்ந்த அவர் கண்களை அவளால் மறக்க முடியவில்லை.

"என்னடி, அஞ்சனா! இன்னும் தூங்கலியா?"

"இல்லேம்மா."

"அமராவதி தூங்கிட்டாளா?"

அம்மா ஏதோ பேச விரும்புவதைப் புரிந்து அஞ்சனா மெதுவாக அவளைத் தொட்டு அசைத்தாள். அவள் கண்விழிக்கவில்லை.

"தூங்கிட்டாம்மா. ஏன்?"

"உங்கிட்ட ஒண்ணு கேக்கணும்."

"என்னம்மா?"

"ஆமா? இருட்டில அந்த ராமசாமியோட கதவைச்சாத்திண்டு உக்காந்திருந்தியே, அவன் ஒண்ணும் தப்பா கிப்பா நடந்துக்கல்லியே?"

அஞ்சனாவுக்கு ஆத்திரம் சுர்ரென்று தலைக்கு ஏறியது. "அம்மா, அவரைப் பத்தி அப்படியெல்லாம் நினைக்காதேம்மா. அவர் பெர்ஃபெக்ட் ஜென்டில்மன். 'நீ எதுவும் தப்பா அவர்கிட்ட நடந்தியா?'ன்னு கேட்டு உம் பொண்மேல வேணா நீ சந்தேகப்படு."

அஞ்சனாவின் பதில் ஒரு சவுக்கடி மாதிரி பாமாவின் நெஞ்சின்மேல் விழுந்து சாடியது.

"ஆமா, நீ இப்படியே இருந்துடறதுங்கிற உத்ததேசத்தோட இருக்கியாடி? ஏண்டி? இதென்ன விளையாட்டா? வாழ்க்கையோட விளையாடக்கூடாது, அஞ்சனா. ஊர்ல, உலகத்துல இல்லாத வழக்கமா இதென்ன இப்படி ஒரு பிடிவாதம் பிடிக்கிறே? என்ன காரணம்னாவது சொல்லு."

அஞ்சனா சிரித்தாள். "என்னை என் வழியில போகவிடு. இப்ப கல்யாணம்னு ஒண்ணைப் பண்ணிண்டு நீ என்னத்தைப் பெரிசா சாதிச்சே? அண்ணாவைப் பத்திக் கவலை. இப்ப என்னைப் பத்திக் கவலை. இன்னும் கொஞ்ச நாள் கழிச்சு அமராவதியைப் பத்திக் கவலைப்படுவே. கல்யாணத்தோட பலன் இது மாதிரிக் கவலைகள்தான். அதெல்லாம் இல்லாம நான் தேசத்தைப் பற்றி மட்டுமே கவலைப்பட்டுட்டுப் போறேனே?" என்றாள்.

தொடரும்...

# 26

"அண்ணே, சமாசாரம் தெரியுமா?" என்றவாறு காப்பியுடன் சிவப்பிரகாசத்துக்கு எதிரே வந்து உட்கார்ந்துகொண்ட ஞானப்பிரகாசம், அதை ஆற்றத்தொடங்கினான்.

ஏற்கெனவே தனது காப்பியைக் குடித்து முடித்திருந்த சிவப்பிரகாசம், "என்ன, ஞானம்? எதைப் பத்தின சமாசாரம்?" என்றான்.

"போலீஸ் டிபார்ட்மெண்ட்ல இருந்துக்கிட்டே, காங்கிரஸ்காரங்க கட்சியிலயும் ரகசியமா சேர்ந்துக்கிட்டு சில போலீஸ் ஆளுங்க தேசத் துரோக நடவடிக்கைகள்ள ஈடுபட்டுட்டிருக்காங்களாம். அது மாதிரி பண்றதா தெரியவர்றவங்க மேல ரொம்பக் கடுமையான நடவடிக்கை எடுப்பாங்களாம். இன்னிக்கு ஒரு ரகசிய சர்க்குலர் வந்திச்சு. அந்த ராஜாராம் அய்யருக்கு இனிமேற்பட்டு நீ எந்த உதவியும் செய்யாம இருக்கிறது நல்லதுண்ணே. ஒரு தரம் வீட்டைச் சோதனை போட்டதாப் பேர் பண்ணி உதவி பண்ணினோம். அவருக்கு லண்டன்லேருந்து வர்ற லெட்டர்கள் அந்த செபாஸ்டியன் மூலமா அவர் கையைப் போய்ச் சேர்றதுக்கும் உதவி பண்றதா இருக்கே. என்னைப் பொறுத்த வரையில உன்னைக் காட்டிக் கொடுக்கமாட்டேன்னு சத்தியம் பண்ணி இருக்கேன். ஆனா, உன்னைப் பத்தித் தெரிய வந்தா, மத்தவங்க காட்டிக்குடுக்காம இருப்பாங்கன்னு நம்ப முடியாது. அவனவன் ப்ரொமோஷனுக்கு ஆலாப் பறந்திட்டிருக்கான். அதனால நீ கொஞ்சங் கொஞ்சமா இதுலேருந்து விலகிக்கிறது நல்லது."

சிவப்பிரகாசம் பட்டுக்கொள்ளாமல். "பார்க்கலாண்டா" என்றான். ஞானப் பிரகாசம் புதிதாய்த் தோன்றிய கவலையுடன் அண்ணனை ஏறிட்டான்...

விசாலம் உள்ளே வேலையாக இருந்த நேரத்தில் தபால் வந்தது. குஞ்சம்மாதான் எழுந்துபோய் வாங்கினாள். உறைமீது அவளது பெயர் இருந்தது. தனக்கு எழுதுகிறவர் யாருமில்லை என்ற நிலையில் வியப்புடன் அதை உடைத்துக் கடிதத்தை வெளியே எடுத்தாள்.

'உன் கணவன் அந்த அஞ்சனாதேவியுடன் கொட்டம் அடிப்பது தெரியாமல் வீட்டில் நிம்மதியாக உட்கார்ந்துகொண்டிருக்கிறாய். நீ ஓர் அப்பாவிதான். அஞ்சனா தேவி உன் கணவனைப் பார்க்கிற விதமே சரி இல்லை. அவர்கள் இருவரையும் பழக விடாதிருப்பது உனக்கு நல்லது' என்றெழுதி அதன்கீழே 'உண்மை விளம்பி' என்று எழுதப்பட்டிருந்தது.

படபடக்கும் நெஞ்சுடன் அதைப் படித்து முடித்த குஞ்சம்மா கடிதத்தை அவசரமாய்த் தன் புடைவைப் பெட்டியினுள் வைத்து விட்டு உறையைக் கிழித்து வெளியே அதன் துணுக்குகளை வீசினாள்.

'நெருப்பு இல்லாம புகையுமா? ஏதாவது விஷயம் இருந்தே ஆகணும். இல்லாம சும்மாவானும் யாராவது வேலை மெனக்கெட்டு லெட்டர் எழுதுவாளா? ஒரு வேளை அந்தப் பொண்ணுக்கு இவர் மேல ஒரு இதுவோ? இல்லேன்னா, அன்னிக்கு அந்த ஸ்கூல்ல ஒரு ரூமுக்குள்ள ரெண்டு பேரும கொஞ்ச நேரம் இருக்கும்படி ஆனதை வெச்சுப் போதுபோகாதவா கதை கட்றாளோ? எப்படி ஆனா என்ன? இந்தப் பொண்ணு அவரோட பழகறது நல்லதுக்கே இல்லே'.

ஜோதிர்லதா கிரிஜா

கண்கலங்கிப் போய்க் குஞ்சம்மா ஊஞ்சலில் படுத்துக் கொண்டே சற்று நேரம் யோசித்தாள்.

'அவளையே சந்திச்சுப் பேசிடலாமா – 'இத பாருடியம்மா, மகராஜி. எங்க ஆத்துக்காரரை என்னை விட்டுப் பிரிச்சுடாதே' அப்படின்னே சொல்லிடலாமா?'

'உங்க ஆத்துக்காரரை நீ அடக்கி வைடி'ன்னு பதில் சொல்லிட்டான்னா...? அசிங்கந்தான். இவர்கிட்ட மறுபடியும் பேசினா என்ன? மனசு கஷ்டப்பட்டுப் பாரே?...' – கொஞ்ச நேரம் யோசித்த பிறகு ஒரு யோசனை தோன்ற, 'அப்படித்தான் செய்யணும்' என்று தனக்குள் முனகலாய்ச் சொல்லிக் கொண்டாள் குஞ்சம்மா...

மொட்டைமாடியில் உட்கார்ந்து தமிழ் எழுதிப் பழகிக்கொண்டிருந்த நரேந்திரநாத் பானர்ஜியின் முகத்துக்கு அதன் இயல்பான களை பெருமளவுக்குத் திரும்பி வந்திருந்தது. வந்த புதிதில் அண்ணனை எண்ணித் தினமும் அழுதது நின்று போயிருந்தது.

"என்ன, ரொம்ப மும்முரமாய் எழுதுகிறீர்கள் போலிருக்கிறதே?" என்று கேட்டவாறு அமராவதி அவனுக்கு முன்னால் வந்து முழங்கால்களைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்தாள். அவன் எழுதுவதை நோட்டம் விட்டு விட்டு, "உங்கள் கையெழுத்து நன்றாக இருக்கிறது" என்றாள்.

"தலை எழுத்துத்தான் நன்றாக இல்லை."

"உங்கள் தலை எழுத்துக்கு என்ன, நரேந்திரநாத்? மிகவும் பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டிய தலை எழுத்தாக்கும் உங்களுடையது! உங்களைப் பார்த்தால் எனக்கு எவ்வளவு பொறாமையாக இருக்கிறது தெரியுமா? ஓர் ஆணாகப் பிறக்கவில்லையே என்ற ஏக்கம் உங்களைப் பார்க்கும்தோறும் எனக்கு ஏற்படுகிறது, நரேன்! எங்கு வேண்டுமானாலும் சென்று எங்கு வேண்டுமானாலும் படுத்து வாழலாமல்லவா?"

"ஒரு விதத்தில் உண்மை தான்."

சற்று நேரம் போல் இருவரும் மவுனமாகத் தத்தம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்கள். அதன் பிறகு, "அதென்ன கையில் டயரியா? டயரி எழுதுகிற பழக்கம் உண்டா?" என்று நரேந்திரநாத் பானர்ஜி அவள் கையில் இருந்த நாட் குறிப்பேட்டைப் பார்த்தபடி வினவினான்.

"டயரியெல்லாம் எதுவதில்லை, நரேன். பிறர் அறியாது ஒளித்துக் கொண்டாக வேண்டிய எண்ணங்கள் எத்தனையோ மனத்தில் அவ்வப்போது எழுகின்றன. அதிலும் கொஞ்ச நாட்களாக யாருடனும் பகிர்ந்து கொள்ள முடியாத எண்ணங்களாக அவை இருக்கின்றன."

இவ்வாறு ஆழமாக அவனைப் பார்த்தபடி கூறிவிட்டுச் சட்டெனத் தலையைத் தாழ்த்திக் கொண்ட அமராவதியின் முகத்தில் வெட்கம் தெரிந்ததைக் கண்டு நரேந்திரநாத் வியப்படைந்தான். கண்ணிமைக்காமல் அவளைப் பார்த்தபடியே இருந்தான். சில விநாடிகள் கடந்ததும் தலை உயர்த்திய அமராவதி கணத்துக்கும் குறைவான நேரத்துக்குள் மறுபடியும் தன் விழிகளைத் தாழ்த்திக் கொண்டு விட்டாள்.

## 27

அமராவதியின் உள்ளத்து எண்ணங்கள் நரேந்திரநாத் பானர்ஜிக்குப் புரியவே செய்தன. அவனுள் வியப்பும் வேதனையும் பெருகின. தனது ஊகம் சரி தான் என்பது அவளது வாயிலிருந்து வெளிப்படாதவரையில் தான் எதுவும் பேசி விடலாகாது என்றெண்ணிக் காத்திருந்தான். கனமான சில நொடிகள் கழிந்தன. ஆனால் அந்தக் கனத்தில் இறுக்கமோ, வெப்பமோ இல்லை. பரபரப்பும், எதிர்பார்ப்புமே இருந்தன.

"சொல்ல வந்ததை மனம் விட்டுச் சொல்லி விடுங்கள், அமராவதி."

"நான் இன்னும் என்ன சொல்லட்டும் நரேன்! புரியாதவர்களுக்கு அல்லவா சொல்ல வேண்டும்?"

நரேந்திரநாத் பானர்ஜியின் முகத்தில் புன்னகை படர்ந்தது. ஆனால் அதில் மகிழ்ச்சியை விடக் கசப்பே அதிகமாக விரவி இருந்தது.

"அமராவதி, நீ

என்ன சொல்ல வருகிறாய் என்பது எனக்குப் புரியாமல் இல்லை. நான் ஒரு நாடோடி மாதிரி. எந்த நேரத்திலும் தூக்கில் தொங்கக்கூடியவன். ஒரு விலாசம் கூட இல்லாத பரதேசியைப் போன்றவன். எனக்கு அடைக்கலம் கொடுப்பவர்களுக்குக் கூட ஆபத்து வருமோ என்று எப்போதும் கிலியில் இருப்பவன். ஓடத் தயாராக இருப்பவன். திருமணம் என்ற சொல்லைப் பற்றி நினைக்கவும் அருகதை இல்லாதவன், அமராவதி!''

"உங்களைப் பற்றிய அடைமொழிகள் இத்தனைதானா, இல்லை இன்னும் பாக்கி இருக்கிறதா?'' – இப்போதும் அவளது தலை தாழ்ந்தே இருந்தது.

"இன்னும் எவ்வளவோ சொல்லலாம், அமராவதி. ஒரு வேளைச் சோற்றுக்குக் கூட நாதி இல்லாமல் மூட்டை முதற்கொண்டு தூக்கிப் பிழைப்பவன். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், திருமணம் செய்து கொள்ளத் துளியும் தகுதியற்றவன். உன்னைப் போன்ற ஒரு பெண்ணின் வாழ்க்கையை என்னால் பாழ்படுத்த முடியாது, அமராவதி. தயவு செய்து இன்று நடந்த பேச்சை மறந்து விடு. இது சர்வநாசத்தைநோக்கி நம்மை நடத்திச் செல்லக்கூடிய எண்ணம்."

"இல்லை, நரேந்திரநாத்! சோறும் துணியும் மட்டுமே முழுமை பெற்ற வாழ்க்கையாகிவிடுமா என்ன? நாம் எப்படிப்பட்ட மனிதர்களாக வாழ்கிறோம் என்பதுதான் முக்கியம். தேசபக்தி நிறைந்த ஆணும் பெண்ணும் சேர்ந்து நடத்தும் இல்வாழ்க்கை மகத்தானது, மகோன்னதமானது, நரேன்.''

''உன்னுடைய வெளிப்படையான பேச்சு எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது, அமராவதி. உன்னையும் தான். அழகும் அன்பும் அணிகலன்களாய்க் கொண்ட உன்னை எவனுமே மறுதலிக்க மாட்டான். உண்மையில் நான் இன்றிருக்கும் இக்கட்டான நிலையில் மட்டும் இல்லாதவனாக இருந்தால், நானாகவே முதலில் எனது காதலை வெளிப்படுத்தி இருப்பேன். அதுதான் உண்மை. ஆனால் அமராவதி, என்னை வற்புறுத்தாதே, என்னருமை சிநேகிதியே. எனக்குக் கொஞ்சமேனும் மனச்சாட்சி என்பது இருப்பின் நான் உனது காதலை ஏற்கக் கூடாது.'' நரேந்திரன் இதைச் சொன்னபோது பெரிதும் உணர்ச்சிவயப்பட்டுப் போனதால் அவனது குரல் தழுதழுத்தது. கண்கள் இலேசாய்ச் சிவந்தன.

"அமராவதி! உன்பெற்றோர்க்கு உனது இந்தத் தகாத – முட்டாள்தனமான – எண்ணம் தெரியவந்தால் அவர்களது முதல் எதிர்ச் செயல் என்னவாக இருக்கும் என்று உனக்குத் தெரியாதா? நான் உடனே இந்த வீட்டை விட்டு வெளியேறிவிட வேண்டும் என்பதே அவர்களது விருப்பமாகிவிடும். அது உனக்குச் சம்மதமானது தானா? ஆதரவற்ற நிலையில் இங்கு வந்து தங்கி இருக்கும் நான் மறுபடியும் உயிருக்கு ஆபத்தான நிலையில் கண்டபடி சுற்றுவது உனக்கு இணக்கமானது தானா?''

தலையை உயர்த்திய அமராவதி ஒரு நெடிய பார்வையை அவன்மீது பதித்தாள். 'காதலின் அருமை உனக்குத் தெரியவில்லையே! கொஞ்ச நாள் வாழ்ந்தாலும் மனத்துக்கு இசைந்த துணையோடு வாழ்ந்தோம் என்ற திருப்தி முக்கியமா? இல்லாவிட்டால் உயிருடன் அதிகநாள் வாழ்வது முக்கியமா?' என்ற கேள்விகள் அவளது ஆழ்ந்த பார்வையில் தொக்கி நின்றதாய் நரேந்திரநாத் பானர்ஜிக்குத் தோன்றியது. அவன் கணம் போல் வெட்கிப் போனான்.

அமராவதி சிறிது நேரம் சும்மா இருந்தாள். பிறகு, "ரொம்ப சரி நரேன். நீங்கள் சொல்வதிலும் ஓரளவு நியாயம் இருப்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனாலும் அதற்காக உங்களுக்குப் பிடித்த ஒரு பெண்ணை நீங்கள் நிராகரிக்க வேண்டுமா? நாம் காத்திருக்கலாமே? உங்கள் நிலையில் முன்னேற்றமும் ஒரு ஸ்திரத்தன்மையும் ஏற்பட்ட பிறகு நாம் மணந்து கொள்ளுவதில் உங்களுக்கு என்ன தடை?



பேசத் தகுந்த மனிதர் கிடைத்தும் அவரோடு பேசு வதற்கு நீங்கள் தவறி விடுவீர்களேயானால் தகுதியான ஒரு மனிதனை இழந்து விட்டீர்கள் என்று அர்த்தம்.
பேசத் தகுதி இல்லாத ஒரு மனிதர் கிடைத்து அவ ரோடு நீங்கள் பேசிக் கொண்டிருந்தால் உங்களை நீங்கள் இழந்து விட்டீர்கள் என்று அர்த்தம்.
'சிரிக்க ரசிக்க சிந்திக்க' நூலிலிருந்து
பா. குணா.

கஷ்டப்பட்டு பாதி பணக்காரன் ஆகி விடுங்கள் பிறகு முழுப் பணக்காரனாக இந்த உலகம் ஆக்கி விடும்.
- எஸ்டோனியாப் பழமொழி
- ஆர். பார்த்திபன்

எந்தச் செடியின் உபயோகத்தை இன்னும் நாம் அறியவில் லையோ அதையே களை என்கிறோம்.
- யாரோ
அ. ஷண்முகசுந்தரம்.

இன்னும் கொஞ்ச நாட்களுக்கு இந்த வீட்டில் பாதுகாப்பாக இருந்துவிட்டீர்களானால், அதன் பிறகு ஒரு தமிழனைப் போல் தமிழ்ப் பேசப் போகும் உங்கள் மேல் போலீசாருக்கு எந்தச் சந்தேகமும் வரப்போவதில்லை. இல்லையா?" என்றாள்.

அவள் குரலில் தெறித்த பிடிவாதமும் அழுத்தமும் அவன் சொல்லப் போகிற எந்த விளக்கத்தையும் அவள் ஏற்கப் போவதில்லை என்பதை உணர்த்தும் வண்ணமாக இருந்தன. நரேந்திரநாத் பானர்ஜியிடமிருந்து ஒரு பெரு மூச்சு புறப்பட்டது.

மொட்டை மாடிக்கு வரும் கதவுப் பக்கம் கணம்போல் கவனித்து யாரும் வர வில்லை என்பதை நிச்சயப்படுத்திக் கொண்ட பின், அவன் தன் கையை நீட்டி அவள் கண்ணீரைத் துடைத்தான். பிறகு, "சரி, உன் விருப்பப்படியே ஆகட்டும். ஆனால் உன் பெற்றோருக்கு இப்போதைக்கு இது தெரிய வேண்டாம்" என்றான்.

அப்போது யாரோ மாடிப்படி ஏறி வரும் காலடியோசை கேட்க, அமராவதி எழுந்துபோய்க் கைப்பிடிச் சுவரின் மீது ஏறி உட்கார்ந்துகொண்டு தனது நாட்குறிப்பேட்டைப் பிரித்து எதையோ கிறுக்கலானாள். நரேந்திரநாத் பானர்ஜி தமிழ் எழுதியபடி கதவுப் பக்கம் பார்த்தான். வந்து கொண் டிருந்தது பாமாதான்.

"என்ன, நரேன்? உன் தமிழ் எந்த மட் டில இருக்கு? அப்படியும் இப்படியுமா தமிழா ளுக்கே சரியா உச்சரிக்க வராத 'ழ'வை நன்னா உச்சரிக்கக் கத்துண்டுட்டே. கெட்டிக் காரன்தான். சரி...ஆமா? ஏண்டி, அமராவதி, இங்க உக்காந்துண்டு என்னத்தை எழுதிண் டிருக்கே? இவன் படிப்பையும் கெடுக் கறதுக்கா?..."

"அதெல்லாம் கெட்கல்லேம்மா. அது பாட்டுக்குப் படிக்குது, எழுதுது. என்னை ஒண்ணும் தொந்தரவு பண்லே."

"என்னமோ தெரியல்லேப்பா. அசலாத் துப் பிள்ளைகளையெல்லாம் ஆத்துல சேத் துக்குற டைப் இல்லே நாங்க. உம்மேல உள்ள நம்பிக்கையாலதான்... எம்பிள்ளை யையே உன் உருவத்துல பார்க்கிற மாதிரி ஒரு எண்ணத்துலதான்... உன்னை இங்க தங்க வெச்சிருக்கு."

சிறிது நேரம் பொதுவாகப் பேசிக் கொண்டிருந்த பின், "இருட்டத் தொடங் கிடுத்து. கீழே போகலாம்" என்றவாறு பாமா எழுந்தாள். அமராவதியும் நரேந்திரநாத் பானர்ஜியும் சிந்தனையுடன் அவளைப் பின் தொடர்ந்தனர்



**"இவ்வளவு சின்ன வயசிலேயே, நம்ம தலைவருக்கு கூன் விழுந்திருச்சே! பார்த்தாயா?"**

**"கால்லே விழறதுலே, சாதனை படைச்சவர் ஆச்சே! சும்மாவா?"**

**–ஆர்.அப்துல் சலாம்**

---

பாமாவின் சொற்கள் இருவர் சிந்தனையையும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. இது எதில் போய் முடியப் போகிறதோ என்ற கவலை ஏற்பட்டது. அவன் சாடையாக ஓரத்துப் பார்வை பார்த்த போது, அமராவதியின் பார்வையும் கவலையுடன் அவனுடையதைச் சந்தித்து மீண்டது.

அன்றிரவு ராஜாராமனைத் தனியாகப் பார்த்தபோது, பாமா தனது கவலையை அவரிடம் வெளிப்படுத்தினாள். "என்னன்னா, உங்க கிட்ட ஒண்ணு சொல்லணும்."

"சொல்லு."

"நரேந்திரநாத்தை நம்மாத்துல தங்க வெச்சிண்டிருக்கோமே, அக்கம் பக்கத்துல யாரும் நம்ம பொண்ணுகளோட அவனைச் சம்பந்தப் படுத்தி வம்பு பேசாம இருக்கணுமேன்னு கவலையா இருக்கு."

"அக்கம் பக்கத்துக்காரா ஆயிரம் பேசுவா."

"சரி. அக்கம் பக்கத்துக்காராளை விட்டுத் தள்ளுங்கோ. அவனே அமராவதியைக் கல்யாணம் பண்ணி வைங்கன்னு கேட்டுட்டா?"

"இதென்ன அசட்டுக் கேள்வி? அமராவதிக்கும் சம்மதம்னா பண்ணி வெச்சிட வேண்டியது. அவ்வளவுதானே?"

பாமாவின் விழிகள் முழு அளவில் விரிந்தன. "என்னது! என்ன பேத்தறேள்னா? அவன் பெங்கால்காரன். நாம தமிழா. ரொம்ப நன்னாருக்குன்னா நீங்க பேசறது. நீங்களே அவாளைத் தூண்டி விடுவேள் போல இருக்கே? இந்த ஒரு கூத்து நம்மாத்துக்குப் பாக்கி இருக்கா? வேண்டாம். அதை விட அவனை போயிட்டு வாடாப்பான்னு அனுப்பி வெச்சுடலாம்."

ராஜாராமன் அதிர்ந்து போனார். "அப்படி ஏதாவது சந்தேகப் படறியா என்ன?"

"சந்தேகம்னுட்டு இல்லே. ஆனாலும் வயசுப் பையன். வயசுப் பொண்ணு. அஞ்சனா கல்யாணமே வேண்டான்னுட்டா. அதனால அமராவதியைப் பத்தித்தான் கவலையா இருக்கு. பஞ்சும் நெருப்பும் பக்கத்துல பக்கத்துல இருந்தா பத்திக்கத்தானே செய்யும்?"

ராஜாராமன் பேசாதிருந்தார்.

"என்னன்னா பேசாம இருக்கேள்? உங்களுக்கு அதிர்ச்சியா இருக்கா?"

"அப்படி ஒரு உறவு ஏற்பட்டுடுமோங்கிற அதிர்ச்சி இல்லேடி பாமா. 'போயிட்டு வாடான்னு அவனை அனுப்பி வெச்சுடலாம்'னு சொன்னியோல்லியோ? அந்த அதிர்ச்சி... அப்படி ஏதும் மறைமுகமாக்கூட அவன் எதிர்ல சொல்லிடாதே, பாமா. உடனே போயிடுவான். உனக்குத் தெரியாதது இல்லே. ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தா தன்பிள்ளை தானே வளரும் இல்லியா? அவனை நாம காப்பாத்தினா, எங்கேயோ இருக்கிற நம்ம பிள்ளையை வேற யாராவது காப்பாத்துவாடி..." என்று கூறி அவளது மனத்தின் பலவீனமான பகுதியை அவர் தட்டினார்.

பாமாவுக்கு உடனே வாயடைத்துப் போய் விட்டது.

"இத பாரு, பாமா. இன்னொண்ணும் சொல்றேன், கேட்டுக்கோ. அப்படி ஏதாவது அவாளுக்குள்ள ஒரு பிடிப்பு ஏற்பட்டா அவா ஆசைக்கு நாம குறுக்கே நிக்க வேண்டாம். பெரியவளோ கல்யாணம் வேணாம்னுண்டிருக்கா. அவ ஏன் பண்ணிக்கலைன்னு ஆயிரம் கேள்வி கேக்கறதுக்குத்தான் மனுஷா ரெடியா இருப்பாளே தவிர, 'அக்காவுக்கு ஆகாட்டா என்ன? தங்கையை ஏத்துக்கலாம்'கிற எண்ணத்தோட யாரும் வர மாட்டா."

பாமா அவரது அறையைவிட்டு வெளியேறினாள். குசுகுசுவென்று பேச்சுக் குரல் கேட்டது. 'தூங்காமல் அக்காவும் தங்கையும் என்ன பேசுகிறார்கள்?'

பாமா காதுகளைத் தீட்டிக் கொண்டு கவனித்தாள்.

(தொடரும்)

# ஒரு விநாடியும் ஒரு யுகமும்

சத்யராஜ் குமார்

**க**ண்ணாடியில் முகம் பார்ப்பதேயில்லை. ஈரக் கேசத்தை சின்னக் கொண்டை யாய் முடிந்த போது ஜன்னலருகில் முகம் பார்க்கும் கண்ணாடி தெரிந் தது. பழைய நாட்கள் விநாடி மின்ன லாய் ஜெயந்தியின் நெஞ்சை வெட்டி யது.

அப்போதெல்லாம் கண்ணாடி முன் னால் மணிக்கணக்கில் நிற்பாள். நிதான மாய் ஃபேஸ் க்ரீம் தடவுவாள். ஆற அமரப் பவுடர் பூசுவாள். நெற்றி மையத் தில் அழகான சைசில் நடுவிரலால் கவனமாய்க் குங்குமப்பொட்டு. தலை வகிடின் துவக்கத்திலும் குங்குமச் சிவப்பைத் தீற்ற மறக்க மாட்டாள். அன்றாடம் குறைந்தபட்சம் இரண்டு முழம் குண்டு மல்லிகை தலைப் பின்ன லில் செருகியாக வேண்டும். கோத்த பூச்சரத்தைத் தலையின் பின்னால், பக்கவாட்டில் என்று மாற்றி மாற்றி சூடிப் பார்ப்பாள். தாலிக் கொடியை வெளியே எடுத்து, சூரியக் கட்டியாய் மின்னும் மாங்கல்யத்தை மார்புச் சேலை யின்மேல் தவழச் செய்து ரசித்து ரசித் துப் பார்ப்பாள்.

தைப்பதற்கு நிறையத் துணிகள்.

மூச்சுத் திணற வேலை இருக்கிறது. நைந்து போன கந்தலான நினைவுகளை உதறினாள் ஜெயந்தி.

வெள்ளைப் புடைவையை அவசரமாய் உடலுக்குச் சுற்றினாள். ஆபரணமில்லாமல் காதும், கழுத்தும் மூளியாய்க் கிடந்தன. நெற்றியில் பாலைவன வெறுமை.

"அம்மா, துண்டு குடு," என்றது பாத்ரூம், மழலையாய். ஐந்து வயது நிவேதா. குளிக்கிறாள். குளித்தபின் ஜட்டியையும், ஸ்கூல் யூனிஃபார்மையும் ஏதோ அவளுக்குத் தெரிந்த அளவில் துவைக்கக் கூட செய்வாள். அப்படிப் பழக்கியிருக்கிறாள் ஜெயந்தி. தன் வேலையைத் தானே செய்ய வேண்டும். எல்லாமே தெரிந்து கொள்ள வேண்டும். இப்போது குழந்தை. எதிர்காலத்தில் பெண். என்னுடைய நிலைமை இவளுக்கும் வராதென்பது என்ன நிச்சயம்?

சமையல்கட்டும், பூவும் பொட்டும் மட்டுமே உலகமில்லை என்பது புருஷனை இழந்த பிறகுதான் ஜெயந்திக்கு உறைத்தது. கைக் குழந்தையுடன் வாழ்க்கை நீச்சலுக்கு எத்தனை தத்தளித்தாள். நிவேதாவுக்கு புருஷக் கனவுகளையும், கோழிச் சிறகு அரவணைப்பையும் ஊட்டி வளர்க்கப் போவதில்லை.

"உனக்கு எத்தனை தரம் சொல்றது? குளிக்கப் போறப்ப மறக்காம துண்டை எடுத்துக்கோன்னு."

"ஸாரிம்மா. இன்னிக்கு மட்டும் துண்டை எடுத்துக்குடு. ப்ளீஸ்."

நிவேதாவின் கையில் துண்டைத் திணித்தபோது- கதவு தட்டப்பட்டது.

கதர் வேஷ்டி. கதர் ஜிப்பா. நெற்றி நிறைய சந்தனப்பட்டையுடன் வீட்டு சொந்தக்காரர் பரமசிவம்.

"வாங்க. உள்ள வாங்க."

ஹோல்டிங் சேரை விரித்துப் போட்டாள்.

கக்கத்திலிருந்த கறுப்பு லெதர் பையைக் கைக்கு மாற்றினபடி சொன்னார். "அய்யப்பன் கோயிலுக்கு வந்தேன். அப்படியே உன்னைப் பார்த்துட்டுப் போகலாம்ன்னு..."

ஒண்ணாந்தேதியானால் டாணென்று அய்யப்பன் கோயிலுக்கு வருவார். ஜெயந்தி உள்ளே போய் அலமாரியைத் திறந்தாள். பேப்பர் விரிப்புக்குக் கீழே எடுத்து வைத்த பணத்தைக் கவரில் போட்டு அவரிடம் நீட்டினாள்.

புன்னகைப் புரமசிவமானார். "அம்மா ஜெயந்தி, உன்னோட புருஷன் இருந்த வரைக்கும் கூட இவ்வளவு கரெக்டா ஒண்ணாந்தேதி ஒண்ணாந்தேதி வாடகைப் பணம்



கிடைச்சதில்லை."

"உங்களுக்கு மட்டுமில்லைங்க. மளிகைக் கடைக்காரர், பால்காரர் எல்லாருக்குமே மாசக் கடைசில தயாரா பணம் எடுத்து வெச்சிருவேன். அடுத்தவங்க ஒத்தை வார்த்தை சுருக்குன்னு சொல்லிட்டாலும் என்னால தாங்கிக்க முடியாது."

"தெரியும், தெரியும். இங்க வர்றப் போவெல்லாம் எனக்கு ஒரே ஒரு வருத்தம்தான்."

"என்ன வருத்தம்?"

"நெத்தி நெறையப் பொட்டோட, தலை நிறையப் பூ வெச்சு லட்சுமிகரமா சுமங்கலிக்



கோலத்துல இருப்பியே. அப்படியே பார்த்துப் பழகின கண்ணுக்கு இந்தக் கோலத்தை சகிச்சுக்க முடியலைம்மா. சின்ன வயசு, இந்தக் கோலம் உனக்குத் தேவையில்லே. நீ...''

"பரிதாபப் பேச்சுப் பேசி தயவு செஞ்சு என்னை பலவீனப்படுத்தாதீங்க..."

கை குவித்தாள் ஜெயந்தி.

பரமசிவம் மவுனமாய் வெளியேறவும், உமா வரவும் சரியாயிருந்தது.

ஆரம்பத்தில் இருந்த சொற்ப நகைகளை விற்று ஒரே ஒரு தையல் மெஷினை வாங்கினாள் ஜெயந்தி. அக்கம்பக்கப் பெண்களுக்கு ஜாக்கெட் தைத்துக் கொடுத்தாள். ஃபிட்டிங் பிடித்துப் போய் அறிமுகமில்லாதவர்களும் வர ஆரம்பித்தார்கள். அப்படி வந்தவள்தான் மாதர் சங்க பிரசிடென்ட் வத்சலா ரமணன். இவளுடைய தையல் திறமையும், வாழ்க்கை நிலைமையும் புரிந்து ஒரு கார்மென்ட் தொழிற்சாலையுடன் தொடர்பு செய்து தந்தாள். சப் கான்ட்ராக்டில் தைப்பதற்கு துணிகள் கொண்டு வந்து போட்டார்கள். வேலை அதிகமானது. அந்த ஒற்றை மெஷினோடு ராப்பகலாய்த் தேய்ந்தாள் ஜெயந்தி. இன்றைக்கு இன்னொரு தையல் மெஷின் வாங்கிவிட்டாள். உமாவை வேலைக்கு வைத்தாள்.

"ஜெயந்திக்கா, துணிங்க வந்துருச்சா?"

''நேத்து சாயந்தரமே டெம்ப்போலலோடு வந்துருச்சு. காலர் ஸ்டிச்சிங் நீ கொஞ்சம் கவனமாப் பண்ணணும் உமா. நீ தெச்சுப் போட்டதுல அஞ்சு பீஸை ஃபாக்டரில ரிஜெக்ட் பண்ணிட்டாங்க."

"பார்த்துச் செய்யறேன்க்கா."

"பெட்டில துணிங்க இருக்கு. சிவப்பு நூல் போட்டுக்க. தெச்சிட்டிரு. நான் நிவேதாவை ஸ்கூலுக்கு அனுப்பிட்டு வரேன்."

''அம்மா, புராகிரஸ் ரிப்போர்ட்ல கையெழுத்துப் போடணும்."

''மூணாவது ராங்க் வாங்கிருக்கே... ஃபர்ஸ்ட் எப்ப வாங்குவே?"

"அடுத்த மாசம்."

"பார்க்கலாம்."

"டீச்சர் சொல்லிவிட்டாங்க. ஸ்கூல் ஃபீஸ் கட்ட இன்னிக்குதான் கடைசி நாள்ன்னு."

"அடடா! மறந்துட்டேனே. சாயந்தரம் வந்து கட்டிடறேன்."

"அம்மா."

"என்ன?"

"எங்க கிளாஸ்ல எல்லாரும் அப்பா கிட்டதான் கையெழுத்து வாங்கறாங்க. ரமா, உஷா, மாலா எல்லாருக்கும் ஃபீஸ் கட்ட அவங்க அப்பாதான் வருவாங்க. நம்ம அப்பா வர மாட்டாங்களா?"

ஒரு விநாடி கலங்கிப் போனாள் ஜெயந்தி. ஊஹூம். குழந்தை முன்னால் உடைந்து போகக்கூடாது.

"அப்பா வர மாட்டார்டா. நீ சின்னக் குழந்தையா இருக்கறப்ப வானத்துக்குப் போய்ட்டார்."

"ஏன் போனார்?"

"சாமி கூப்ட்டுச்சு. சாமிகிட்ட போய்ட்டார்."

"ஊர்ல சிவகாமிப் பாட்டி செத்துப்

போனாளே அந்த மாதிரி செத்துப் போய்ட்டாரா?"

கீழ் உதட்டைக் கடித்து, "ம்." என்றாள். ஜெயந்தி எல்லாவற்றையும் சமாளித்து விட்டாள். நிவேதாவின் இந்த ஏக்கத்தைச் சமாளிப்பதுதான் சிரமமூட்டுகிறது. நம்பிக்கை இருந்தது. இதையும் சமாளிக்கலாம். இன்னும் கொஞ்சம் பெரியவளானால் மேல் பூச்சற்ற வார்த்தைகளால் உணர்த்தலாம்.

நிவேதாவின் மனசைத் திசை திருப்ப விரும்பி', "அடுத்தவாரம் உனக்கு நாலு நாள் ஸ்கூல் லீவு. தெரியுமா?"

"தெரியும். பூஜா ஹாலிடேஸ்."

"அப்ப நாம ஊருக்குப் போகப் போறோமே. போய் தாத்தாவைப் பார்க்க போறோமே."

"ஹைய்யா."

உற்சாக நிவேதா குதித்தாள்.

ரயில்வே ஸ்டேஷன். பிளாட்பாரங்கள் ஜனத்திரளால் மிதிபட்டன. டீ.வி. பெட்டிகளில் விளம்பர இரைச்சல். நீலகிரி எக்ஸ்பிரஸ் இன்னும் சில நிமிஷங்களில் இரண்டாவது பிளாட்பாரத்துக்கு வரப் போவதாக தலைக்கு மேல் ஒரு அசரீரி.

இரும்பு கர்டர் ஓரமாய் சூட்கேசை வைத்துக் காத்திருந்தாள் ஜெயந்தி. நிவேதா சற்றுத் தள்ளி கலர் கலராய் பல்பு எரியும் எடை பார்க்கும் இயந்திரத்தைக் காட்டி நச்சரித்தாள்.

"அம்மா, நான் வெய்ட் பார்க்கணும்."

"பேசாம இரு. கூட்டத்துல காணாம போயிருவே."

"எதிர்லதான இருக்கு. அம்பது பைசா குடும்மா. மேல ஏறி நின்னா சக்கரம் சுத்தும். சக்கரம் நின்னா காசைப் போடணும். காசைப் போட்டா கார்டு வரும். அம்பது பைசா குடும்மா."

நச்சரிப்பு தாங்காமல் பர்சைப் பிரித்தாள். ஐம்பது பைசா சில்லறையைப் பொறுக்கி நிவேதாவின் கையில் தந்தாள். நிவேதா எடை பார்க்கும் இயந்திரத்துக்கு வேகமாய் ஓடினாள்.

"நல்லாருக்கியா ஜெயந்தி?"

முரட்டுக் குரல். சட்டெனத் திரும்பினாள்.

முள்முள்ளாய்த் தாடி வைத்த அவன் மொச்சைப் பற்களால் நிகோடின் தடயங்களுடன் சிரித்தான். "புருஷன் நான் முள்ளங்கிப்பத்தை மாதிரி முழுசா இருக்கறப்ப உனக்கு இப்படி ஒரு விதவைக் கோலம் தேவைதானா?"

அவனைப் பார்த்ததுமே ஜெயந்தியின் நெஞ்சுக்குள் தீ மூண்டது. மனசுக்குள் அந்த அமில தினம் தெரித்தது.

"ஜெயந்தி, குமுளில ஜீரோ டிகி குளிர். தாக்குப் பிடிக்கவே முடியலை. வர்ற வழில கடலூர்ல உனக்குப் பிடிச்ச குண்டுமல்லியை மறக்காம வாங்கிட்டு வநதேன். எங்கே தலையைக் காட்டு."

ஜெயந்தி அசையாமல் வெறித்தாள்.

"ஏய்? என்ன பேசாம இருக்கே?"

"நீங்க எங்க போனிங்க?"

"குமுளி."

"எதுக்குப் போனிங்க?"

"பிசினஸ் சமாசாரமாத்தான்."

"பொய். பச்சைப் பொய். யாரவ? சொல்லுங்க, யாரவ?"

"ஜெ...ய...ந்தி?"

"எதிர்வீட்டுப் பையன் எப்பவோ சொன்னான். அடுத்த தெரு அல்லி சொன்னா. உன்னோட வீட்டுக்காரர் தியேட்டர்ல, ஓட்டல்ல, பார்க்ல எவளோ ஒருத்தியோட அடிக்கடி சுத்தறார்ன்னு. நான்



*தியோடர் ட்ரீசர் என்ற பிரபல அமெரிக்க எழுத்தாளரை 'டெவினியேட்டர்' என்ற பத்திரிகையின் ஆசிரியராக நியமித்தார்கள். தாம் அனுப்பிய இரு சிறுகதைகள் அங்கு பரிசிலனைக்குக் காத்திருப்பதைப் பார்த்தார். ஆசிரியர் என்ற முறையில் அவை அவருக்குத் திருப்தி அளிக்கவில்லை. உடனே அவற்றைத் தம் விலாசத்துக்குத் திருப்பி அனுப்ப உத்தரவிட்டார்!*

- 'ஹிந்து'விலிருந்து : அ. ஷண்முகசுந்தரம்.

நம்பலை. இந்தத் தடவை நானே கண்ணாரப் பார்த்துட்டேன். பக்கத்து வீட்டுக்காரங் களோட சூலக்கல் மாரியம்மன் கோயிலுக்குப் போயிருந்தேன். பொள்ளாச்சில பஸ் மாறு றப்போ ஆட்டோல அவ கூட நீங்க இழைஞ் சிக்கிட்டுப் போறதை நான் பார்த்துட்டேன். சே, நாப்பது கிலோமீட்டருக்கு அந்தப் பக்கம் எவளோ ஒருத்தி கூட கூத்தடிச்சிட்டு, பத்து நாளா பிசினஸுக்காக குமுளி போயிருந்ததா கூசாம பொய் சொல்றீங்களே?''

"ஏய் சும்மா நிறுத்துடி." அவன் முகம் இறுகினான். "உனக்குத் தெரிஞ்சிருச்சு. ரொம்ப சந்தோஷம். ஆமாடி. நான் அவளை வெச்சிருக்கேன். பொள்ளாச்சில வீடு பார்த்து வெச்சிருக்கேன். நீ பிரசவத்துக்காகப் போயி ருந்தியே, அப்ப பழக்கமாச்சு. என்னைப் பொறுத்தவரை ஒரு புள்ளை பெத்ததுமே உன்னோட கவர்ச்சியெல்லாம் தீர்ந்தது. 'மச்சான் நா புள்ளையே பெத்துக்க மாட் டேன். பெத்துக்கிட்டா அப்புறம் என்னை உங்களுக்குப் பிடிக்காமப் போயிரும்'பா. அவளைத்தாண்டி எனக்குப் பிடிச்சிருக்க."

"த்தூ... இரட்டை வாழ்க்கை வாழற ஒருத்தனுக்குப் பெண்டாட்டியா வாழ நான் விரும்பலை. அவகிட்டயே போய்டுங்க."

"என்னை அனுப்சிட்டு நீ எவனை சேர்த்துக்கலாம்ன்னு பாக்கறே? தழையத் தழைய மல்லிகைப் பூ வெச்சிப்பியே. நெத்தி நெறையக் குங்குமப்பொட்டு வெச்சுப்பியே. இந்தப் பூவும் பொட்டும் உனக்கு நான் போட்ட பிச்சைடி."

ஜெயந்தி நெற்றிப் பொட்டை உள்ளங் கையால் அழுந்தத் துடைத்தாள். கூந்தல் பூவைப் பிய்த்து அவன் முகத்தில் ஆவேச மாய் விசிறியடித்தாள்.

"வேண்டாம். நீங்க போடற பிச்சை எனக்கு வேண்டாம். பூவும் பொட்டும் இல் லாமலே இந்த உலகத்துல என்னால வாழ்ந்து காட்ட முடியும்."

பூச்சரம் முகத்தில் தாக்கிய கோபத்தில் பற்களை நறநறத்தான். அவள் தலைமுடியைக் கொத்தாய்ப் பற்றியுலுப்பி கன்னத்தில் அறைந்தான்.

"போறேண்டி. இனிமே நா உனக்குப் புருஷனா இங்க வர மாட்டேன். போறதுக்கு முந்தி வெடுக்கென்று மாங்கல்யச் சரடைப் பறித்துக் கொண்டு விருட்டென மறைந்து விட்டான். அன்றைக்குப் போனவன்தான்....

"நல்லாருக்கியா?" கிண்டலாக மறு படியும் கேட்டான்.

ஜெயந்தி சலனமில்லாமல் சொன்னாள்.



"டிகிரி வாங்கின பிறகு நான் மேலே என்ன சார் படிக்கலாம்...?"
"தினமும் பேப்பர்லே வேலை வாய்ப்பு விளம்பரங்களை!"
- கார்த்திக் ராஜா

"ரொம்பவே நல்லாருக்கேன்."

"ஊருக்கா கிளம்பிட்டே?"

"ஆமா."

"செலவுக்குப் பணம் வேணுமா?"

விஷச் சிரிப்புடன் பாசாங்காய்ப் பாக் கெட்டில் துழாவினான்.

"அவசியமில்லை. ரெண்டு தையல் மெஷின் வாங்கிட்டேன். ஒரு பொண்ணை சம்பளம் குடுத்து வேலைக்கு வெச் சிருக்கேன்."

"குழந்தை எங்க?"

"அதோ. அங்க எடை பார்த்துட்டி ருக்கா."

"அதுக்கு அப்பான்னா என்னன்னு தெரியுமா?" எகத்தாளக் கேள்வி.

"தெரியும். அவளோட அப்பா சின்ன வயசிலயே செத்துப் போய்ட்டார்ன்னும் தெரியும். அப்படிச் சொல்லித்தான் அவளை வளர்த்திருக்கேன்."

ஜெயந்தி உதட்டில் புன்னகை காட்டி இதைச் சொன்னதும் முகம் இருண்டு போனான். மேலே பேச்சின்றி ஜனக்கும்பலில் கலந்து மறைந்தான்.

எடை மெஷினை விட்டு ஓடி வந்தாள் நிவேதா.

"யாரும்மா அந்த மாமா? உன்கிட்டே என்ன கேட்டார்?"

"அவருக்கு வழி தெரியாதாம். என் கிட்டே வழி கேட்டார். எப்படிப் பேகா ணும்ன்னு நான் அவருக்கு வழி சொன் னேன்."

# மணிக்கொடி 28

காது களைக் கூர்மைப்படுத்திய படி கவனித்த பாமாவுக்கு அஞ்சனாவும் அமராவதியும் பேசிக் கொண்டது முழுவதும் கேட்டது.

"அஞ்சனா, தூங்கிட்டியா?"

"இல்லே."

"உங்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்..."

"சொல்லு. என்ன விஷயம்?"

"அம்மா உன்னைப் பத்தி ரொம்பக் கவலைப்படறா, அஞ்சனா. நீ சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கணும்."

"இத பாரு, அமராவதி. இது என்னோட வாழ்க்கைப் பிரச்னை. கல்யாணத்துக்கும் எனக்கும் சரிப்பட்டே வராது. நான் சுதந்தரப் போராட்டத்துல தீவிரமா ஈடுபடணும்னு நெனச்சிண்டிருக்கேன். அதுக்கெல்லாம் கல்யாணம் இடைஞ்சல். ஆத்துல ஒரு கால், சேத்துல ஒருகால்னெல்லாம் என்னால ரெண்டுங்கெட்டானா நிக்க முடியாதுடி."

அஞ்சனாவின் குரலில் ததும்பிய உறுதியும் அழுத்தமும் அமராவதியின் நெஞ்சினுள் ஆழமாக இறங்கின. கணம் போல், 'நரேந்திர நாத் மீது நான் காதல் வசப்பட்டது தப்போ?' என்று கூட அவளை நினைக்க வைத்து விட்டன. சற்று நேரம் எதுவும் பேசாதிருந்த அமராவதி, "உன்னோட கொள்கைக்கு ஒத்த வரனாப் பார்த்துக் கழுத்தை நீட்டினா தீர்ந்தது. அம்மா வீணாக் கவலைப்பட வேண்டாமோல்லியோ?" என்றாள்.

"அப்படி ஒருத்தர் மேல எனக்கு நோக்கம் விழுந்தது. ஆனா, அவருக்குக் கலியாணம் ஆயி ஒரு கொழந்தையும் இருக்கு. என்னால வேற எவனையும் விரும்பவும் முடியாது..." என்று தனக்குள் சொல்லிக் கசப்புடன் புன்னகை செய்து கொண்ட அஞ்சனா, "ஆமா? அம்மாவோட கவலையைப் பத்தி இப்ப எதுக்கு நீ திடீர்னு கவலைப்படறே?" என்று கேட்டு விட்டு மெல்லச் சிரித்தாள்.

"ஒரு தங்கைங்கிற முறையில கேட்டேன். அவ்வளவுதான். வேற காரணம் எதுவும் இல்லே. நீ எதுக்குச் சிரிக்கிறே அதுக்கு?"

"நீ பொய் சொல்றேடி, அமராவதி."

"அப்படியே வெச்சுக்கோ."

"நான் சொல்லட்டுமா? உன்னை யாரோ லவ் பண்றா. நீயும்தான். அக்காவுக்கு முடியாம தான் பண்ணிண்டா நன்னாருக்காதேன்னு கவலை. அதானே?"

அஞ்சனாவின் ஊகிக்கும் திறன் அமராவதியை அயர்த்தியது. "அப்படித்தான்னு வெச்சுக்கயேன். அதுக்காகவாவது நீ சீக்கிரம் பண்ணிக்கலாமில்லியா?"

"கதையா இருக்கே, என்னை விட்டுட்டு நீ பண்ணிண்டா நான் எதுவும் தப்பா நினைக்கவே மாட்டேண்டி."

"எனக்குக் கோவம் வரும், நீ இது மாதிரிப் பேசினா. ஆமா. இந்த டாபிக்கை நான் எடுத்ததே தப்பு."

"உனக்கு யார் மேலயாவது இஷ்டம்னாச் சொல்லு. நான் அப்பா, அம்மாகிட்ட உனக்காகப் பேசறேன்."

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. விடு, எனக்குத் தூக்கம் வருது."

அதற்குப் பிறகு இருவரும் பேசிக் கொள்ளவில்லை.

பாமாவுக்கு வெகு நேரம் வரையில் உறக்கம் வரவே இல்லை. அஞ்சனாவுக்குத் தோன்றியது போன்றே அமராவதியின் மீது அவளுக்கும் ஐயம் வந்தது. அன்று மாலை மொட்டை மாடியில் நரேந்திரநாத் பானர்ஜியுடன் அவளைப் பார்த்தபோதே அவள் மனத்தில் ஒரு நெருடல் விளைந்திருந்தது. அவன் ஒரு வங்காளியாக இருந்தது அவளால் சற்றும் செரித்துக் கொள்ள முடியாதது. இதே நரேந்திரநாத் அசல் தமிழனாகவே அவர்களது சாதியையும் சேர்ந்தவனாகவே - இருந்தாலும் கூட அவனை மாப்பிள்ளையாக

ஜோதிர்லதா கிரிஜா

ஏற்க அவள் தயாராக இல்லை; எந்த நேர மும் அவன் தூக்கிலிடப்படலாம் என்பதால் கொலைக் குற்றத்துக்காகத் தேடப்பட்டு வரு பவனை மருமகனாக அங்கீகரிப்பது குறித்து அவளால் நினைத்தும் பார்க்க முடிய வில்லை.

இளங்கன்று அச்சமறியாது. துள்ளித்தான் குதிக்கும். குதிப்பதால் ஆபத்து என்பதைத் தாய்ப் பசு உணர்த்தாவிடில் வேறு யார் உணர்த்துவார்கள்?

குஞ்சம்மாவுக்குத் தோன்றிய திட்டம் எளிதாக நிறைவேறும் வகையில் மறுநாள் நாத்தனார் விசாலத்தின் மைத்துனர் களுள் ஒருவர் செங்கல்பட்டில் தவறிப் போக, அவளை ராமசாமி ரெயி லேற்றி அனுப்பி வைத்தார். மாலைக்குள்ளேயே அவள் திரும்புவதாக இருந்தது. அவள் திரும்புவதற்குள் தனது திட்டத்தை நிறை வேற்றிக் கொள்ளக் குஞ் சம்மா ஆயத்தமானாள். ராமசாமி பள்ளிக்குப் புறப்பட்டதும் அவள் டாக்டரிடம் போவதாய்ப் பக்கத்து வீட்டில் சொல்லி விட்டு, வீட்டைப் பூட்டிக் கொண்டு தெருவில் இறங்கி னாள். பெரிதாகி விட்டிருந்த வயிற்றைத் தூக்கிக் கொண்டு தெருவுக்கு வரக் கூச்சமாக இருந் தாலும் அவளுக்கு இதைவிடவும் வாய்ப்பான தருணம் கிடைக்க வழி யில்லை என்பதால் வெட்கப்பட்டுக் கொண்டே அவள் நடந்தாள்.

தன்னைத் தனியாகச் சந்திக்க விரும்பிய பெண்மணி யாராக இருக்கும் என்று வியந்த படியே பியூனிடம், "அவாளை வரச் சொல்லு," என்று ராஜாராமன் ஆவலுடன் கதவைப் பார்த்தார்.

கதவைத் தள்ளிக் கொண்டு வயிறு முன்னே வர ஆயாசத்துடன் அறைக்குள் நுழைந்த குஞ்சம்மாவைப் பார்த்ததும் அவருக்குத் திக் கென்று ஆகியது. ஏதோ விபரீதம் என்பது புரிந்தது. தம்மையும் அறியாது அவர் எழுந்து நின்றார்.

"வாங்கோ, வாங்கோ. ஏது இவ்வளவு தூரம்? மிஸ்டர் ராமசாமி சவுக்கியந்தானே? உக்காருங்கோ..."

முகத்து வியர்வையைப் புடைவைத் தலைப்பால் ஒற்றியபடி, "வேணாம், நான் நின்னுண்டே பேசிட்டுப் போயிடறேன். ஒரே நிமிஷந்தான். அவர் நன்னாத்தான் இருக்கார்... இங்க இப்ப யாரும் வர மாட் டாளே?"

"வரமாட்டா. பியூன்கிட்ட சொல்லி இருக் கேன் யாரும் உள்ளே வரக் கூடாதுன்னு. நீங்க உக்காருங்கோ முதல்ல." - அவளை உபசரித்தவாறே ராஜாராமன் உட்கார்ந்து கொண்டார்.

வேறு வழியின்றி அவள் நாற் காலியின்




விளிம்பில் பட்டும் படாம லும் உட்கார்ந்தாள். பிறகு தன் பையிலிருந்து அந்த மொட்டைக் கடிதத்தை எடுத்து அவரிடம் நீட்டியபடி, "இதைப் பிரிச்சுப் படிக்கிறதுக்கு முன்னாடி நான் சொல்றதை ஒரே ஒரு நிமிஷம் கேட்டுடுங்கோ. நான் எங்காத்துக் காரர் மேல சந்தேகப்பட்டுண்டு இங்க உங்க ளைப் பார்க்க வரல்லே. அவர் ரொம்ப நல்ல மாதிரி. தப்பு வழிக்கெல்லாம் போகப்பட்ட வர் இல்லே. ஆனா இந்த ஊரும் உலகமும் பொல்லாதது... இனிமே நீங்க படிக்கலாம். நான் என்ன சொல்ல வந்தேன்கிறது உங்க ளுக்கு இப்ப புரியும்..." என்று படபட



''சார், 'நேற்று சுமங்கலி கல்யாண மண்டபத்தில் தாலி கட்டும் நேரத்தில் மாப்பிள்ளை ஓடிவிட்டார்' இதற்கு 'தலைப்பு' எப்படி சார் கொடுக்கிறது?''

'' 'மணமகளிடம் இருந்து மயிரிழையில் தப்பிய மணமகன்'னு கொடுத்துடுங்க!''

- சரவணகுமார்



''போலீஸ் வேலைக்கான இண்டர்வியூவுக்குப் போனியே... என்ன கேட்டாங்க?''

'' 'நைட்டுல ஒருவழிப் பாதையில விளக்கு இல்லாம மூணுபேர் ஒரு மொபெட்ல உன் எதிரில் வந்தாங்கன்னா எவ்வளவு மாமூல் வாங்குவே?'ன்னு கேட்டாங்க!''

- ஆர். ரகோத்தமன்

வென்று பேசி விட்டுக் களைப்புடன் பெருமூச்சு விட்டாள்.

அவர் பரபரப்புடன் அந்தக் காகிதத்தைப் பிரித்துப் படித்தார். அவளுடைய உணர்ச்சிகள் துல்லியமாக அவருக்கு விளங்கின. 'உம்ம பெண்ணை எங்க ஆத்துக்காரரோட பழக விடாதீங்கோ' என்று கேட்க வந்திருக்கிறாள். அவருக்குச் சிரிப்பும் கசப்பும் ஒருசேர வந்தன.

"இது உங்களுக்கு வேணுமா, இல்லே கிழிச்சுப் போட்டுடட்டுமா?"

"வேணாம், வேணாம். கிழிச்சுடாதீங்கோ! எனக்கு வேணும், அது. குடுத்துடுங்கோ."

அவர் மவுனமாக அதை மடித்து அவளிடம் கொடுத்தார். ''இதை நீங்க நம்பறேளா?''

"நம்பவே இல்லே. அதான் முதல்லயே சொல்லிட்டேனே, எங்க ஆத்துக்காரர் தப்பு வழிக்கெல்லாம் போகப்பட்டவர் இல்லேன்னு?"

"பின்ன? கிழிச்சுப் போட்டுட்டு கம்னு இருக்க வேண்டியதுதானே? அவர்கிட்ட சொல்லாதேங்கோ. மனசு அடிபட்டுப் போயிடுவார். சொல்லிட்டேளா என்ன?"

"இல்லேல்லே. சொல்லல்லே. சொல்றதாவும் இல்லே."

''என்னை எதுக்குத் தேடிண்டு வந்தேள்னு தெரிஞ்சுக்கலாமா? இதுல நான் என்ன செய்யணும்?'' என்று கேட்டார்.

தனது வேண்டுகோளை எப்படி வெளியிட்டால் அவருக்கு மனம் புண்படாதிருக்கும் என்பதற்கு வழியெல்லாம் ஒத்திகை செய்து கொண்டுதான் வந்திருந்தாளெனினும், இப்போது அவருக்கு முன்னால் உட்கார்ந்திருந்த நேரத்தில் விளைந்த கிளர்ச்சியில் குஞ்சம்மாவுக்கு நாவெழும்ப மறுத்தது. தொண்டை முடிச்சு ஏறி இறங்கியது.

"சொல்லுங்கோ..." என்று அவர் திரும்பவும் கேட்டதும், அவள் தலையைக் குனிந்து கொண்டே, "உங்க பொண்ணு அஞ்சனாவால எங்காத்துக்காரர் பேரு கெட்டுப் போறது. அதனால..." என்று தயங்கினாள்.

"...இது மாதிரி கூட்டங்களையெல்லாம் எங்காத்துக்காரரோட கலந்துக்கிறதை அவா நிறுத்தினா நன்னாருக்கும்... அவளுக்கும் நாளைக்குக் கல்யாணம் கார்த்தின்னு ஆகணும் இல்லியா? இவரை விட்டுத் தள்ளுங்கோ. புருஷா. கல்யாணமும் ஆனவர். ஆனா பேரு கெட்டுப் போன ஒரு பொண்ணை நாளைக்கு யாரு கல்யாணம் பண்ணிப்பா?" - குஞ்சம்மா மூச்சு விடாமல் பேசி விட்டு, முதன் முறையாகத் தலை உயர்த்தி அவரைப் பார்த்துப் புன்னகை செய்தாள். 'எல்லாம் உங்க பொண்ணோட நல்லதுக்கோசரந்தான் சொல்றேன்...' என்னும் பாவம் கண்களில் தெரியும்படி பார்த்துக் கொண்டாள்.

ராஜாராமனும் புன்னகை செய்தார். 'குஞ்சம்மாவுக்கு முழு நம்பிக்கை இல்லாதிருக்க வேண்டும், அல்லது காலப்போக்கில் கணவர் மாறி விட்டால் என்ன செய்வது என்ற அச்சம் அவளுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும்' என்பது புரிய, 'மனைவி எனும் பதவியில் உள்ள பெண் வேறென்ன செய்வாள்?' என்று தோன்றியது. எனினும், 'என் பெண்ணைக் கண்டித்து வைக்கிறேன்' என்றோ 'உங்கள் கணவருடன் இனி இவள் கூட்டங்களிலெல்லாம் கலந்து கொள்ள மாட்டாள்' என்றோ வாக்குறுதியளிக்க அவ



"நம்ம கம்பெனி தயாரிக்கும் பிளேடுகள் ஷார்பா இல்லை'ன்னு புகார்க் கடிதம் வந்தி ருக்கு சார்...!"

"யார்கிட்டே இருந்து?"

"பிக்பாக்கெட் அடிப்போர் சங்கத்தில் இருந்து!"

- த. முகிலன்



"ஒரு ராணுவ வீரனைத்தான் கல்யா ணம் செய்து கொள்வேன்னு சொல்றியே, ஏன்?"

"அவனுக்குத்தான் கட்டளைக்குக் கீழ்ப் படிந்து நடக்கத் தெரியும்!"

- சோம். முத்துக்குமார்

ரால் முடியவில்லை.

இருந்தாலும், அவளுக்கு ஏதேனும் பதில் சொல்லித்தானாகவேண்டுமென்பதால், "இத பாருங்க மிஸஸ் ராமசாமி! எம் பொண்ணு கெட்டவ இல்லே. அவ கல்யாணமே பண் ணிக்கப் போறதில்லேன்னும் தேச சேவையே தன்னோட லட்சியம்னும் சொல்லிண் டிருக்கா. எப்ப நான் கல்யாணம் பண்ணிக்க முடிவு பண்றேனோ அப்ப நானே உங்க கிட்ட வந்து சொல்றேன்னு சொல்லிட்டா. அதனால எம்பொண்ணைப் பத்தின பயம் உங்களுக்கு வேண்டாம். ஏற்கெனவே கல்யா ணம் ஆனவரோட வாழ்க்கையில குறுக் கிட்டுக் குளறுபடியெல்லாம் பண்ணக் கூடிய வளா அவளை நான் வளர்க்கல்லேம்மா. நீங்க கவலையேபடாதேங்கோ," என்றார் சிரித்தபடி.

"அச்சச்சோ. நான் அந்த அர்த்தத்துல சொல்லல்லே..."

"நீங்க எந்த அர்த்தத்துல சொல்லி இருந் தாலும் சரி. நாலு பேர் நாலு சொல்லு வாங்கிறதுக்காக நாம ஒண்ணைச் செய்யற துன்னோ இல்லே செய்யாம இருக்கிற துன்னோ ஆரம்பிச்சா நம் பயித்தியக்காரச் சேஷ்டைகளுக்கு முடிவே இல்லாம போயி டும்மா... ஆனா, நான் உங்களைப் புரிஞ்சுக் காம பேசறேன்னு மட்டும் நினைச்சுடா தங்கோ. உங்க கவலை எனக்கு நன்னாப் புரியறது. உங்களுக்கு உங்க ஆத்துக்காரர் மேல எப்படி முழு நம்பிக்கை இருக்கோ, அதே மாதிரி எம் பொண்ணு மேல எனக் கும் நம்பிக்கை இருக்கு."

"நீங்க என்னைத் தப்பாத்தான் புரிஞ்சுண் டுட்டேள். எனக்கு நன்னாத் தெரியறது..." என்ற குஞ்சம்மாவின் கண்கள் நொடிப் பொழுதுக்குள் நிரம்பி விட்டன. ஒரு பிள்ளைத் தாய்ச்சிப் பெண் அழுவதைக் காண அவ ருக்குச் சகிக்கவில்லை.

அவர் பதற்றத்துடன் எழுந்து நின்று கொண்டார். "என் பொண்ணைப் பத்தின உங்க கவலையும் எனக்குப் புரியறது. தேங்க்யூ வெரி, வெரி மச்... நான் வேணா உங்களை ஆத்துல கொண்டு வந்து விடட் டுமா, கார்ல?"

குஞ்சம்மா எழுந்தாள். கண்களை நன்கு துடைத்துக் கொண்டு, "வேணாம், சார். நானே போய்க்குவேன்" என்றாள்.

அவள் புறப்பட்டுப் போனதும் ராஜா ராமன் சிந்தனை வயப்பட்டார். 'ராமசாமி ராமசாமி' என்று வாய்க்கு வாய் அஞ்சனா அவரைப் புகழ்வதும், அவர் மீது மிகுந்த மதிப்பு வைத்திருப்பதும் மனத்துள் அவ ளுக்கு அவர்பால் ஒரு கவர்ச்சி இருக்குமோ என்று இப்போது அவரை எண்ண வைத் தன. இருந்தாலும் அஞ்சனா மற்றொரு பெண்ணின் இல்வாழ்க்கையில் குறுக்கிட்டுக் குழப்பம் ஏற்படுத்தக்கூடியவள் என்று சந்தே கப்பட அவர் மனம் மறுத்தது.

அவசர அவசரமாய் வீட்டை நெருங் கிய குஞ்சம்மாவுக்கு ஓர் அதிர்ச்சி காத் திருந்தது. பூட்டிய கதவுக்குப் பக்கத்தில், அதை அணைத்தாற் போன்று இருந்த திண் ணையில் ராமசாமி கையில் இருந்த புத்தகம் ஒன்றைப் புரட்டியபடி உட்கார்ந்திருந்தார். குஞ்சம்மாவுக்கு நெஞ்சு உலர்ந்து விட்டது. இதயத் துடிப்பின் ஒலி அதிகரித்துக் கொண்டே போயிற்று. தலை சுற்றுகிறாற் போல் இருந்தது....!

(தொடரும்)

● தந்தையின் சொத்தில் மகளுக்கும் உரிமை உண்டு.

● கணவனின் சொத்துக்களுக்கு மனைவியும் இணையான அதிபதி.

● பெண்களும் இனி குழந்தைகளைத் தத்து எடுக்கலாம்.

● தாயும், குழந்தையின் 'கார்டிய'னாக உரிமை பெறலாம்.

● ஜீவனாம்சத்தின் உச்ச வரம்பு ரூ. 500 என்பது அகற்றப்பட்டது.

● விபசாரத்தில் ஈடுபடும் ஆண்-பெண் இருவருக்கும் சமமான தண்டனை!

● குடும்பத்தின் அளவை நிர்ணயிப்பதில் பெண்களுக்கும் அதிகாரம்!

● சென்சார் போர்டில் 50% பெண்கள்; பெண்களுக்கெதிரான வன்முறை, ஆபாசம் ஒழித்தல்.

மக்கள் தொடர்புச் சாதனங்களில், பெண்களை, **'positive role'**களில் சித்திரித்தல்.

இந்தத் திட்டங்களெல்லாம் நமது நாட்டில்தான் போடப்பட்டுள்ளன. ஆனால் தமிழ்நாட்டில் அல்ல; மகாராஷ்டிர மாநிலத்தில்! இந்த முன்னேற்றத் திட்டங்களை உருவாக்குவதில் பெரும்பங்கு வகித்தவர் ஒரு தமிழ்ப் பெண் - திருமதி சந்திரா ஐயங்கார், ஐ.ஏ.எஸ். (Secretary, Dept. of Women & Child Development & Member Secretary State Women's Commission). அவருடன் ஒரு சந்திப்பு.

**கேள்வி** : பெண்களுக்கான முன்னேற்றத் திட்டங்களை வரையறுக்கும் போது, உங்களின் இறுதிக் குறிக்கோள் எதுவாக இருந்தது?

**சந்திரா ஐயங்கார்** : பெண்களிடம் இயற்கையிலேயே நிறைய ஆற்றல் பொதிந்திருக்கிறது; அதை வெளிப்படுத்துவதில்





**29**

**ந**ரேந்திரநாத் பானர்ஜியின் அண்ணன் இந்திரநாத் பானர்ஜியின் மரணம் பற்றி ராஜாராமனுக்குக் கடிதம் எழுதிய - ஆனால் அக் கடிதத்தில் தனது பெயரை வெளிப்படுத்தாத - ராஜ்குமார் லண்டனில் ஆக்ஸ்ஃபோர்ட் தெருவில் விரைவாக நடந்து கொண்டிருந் தான். அவன் அதன் குறுக்குத் தெருவான பேக்கர் தெருவையடைந்ததும் அங்கே ஒரு கடையின் வாயிலில் அவனுக்காகக் காத் திருந்த சுபேந்திரநாத் தாகூர் வேகமாய் வந்து, அவனுடன் இணைந்து கொண்டான். ஒன்றும் பேசிக் கொள்ளாமலே இருவரும் நடந்தனர். பின்னர் பார்க் தெருவில் திரும்பி, குவீன்ஸ் கார்டனையடைந்து, ஓர் ஒதுக்குப் புறந்தேடி உட்கார்ந்தனர்.

சிகரெட் பற்றவைத்துக் கொண்டபின், "ராஜ்குமார் உன் கடிதம் மிஸ்டர் ராஜா ராமை சென்றடைந்திருக்குமல்லவா?" என்று கவலையுடன் சுபேந்திரநாத் தாகூர் வினவினான்.

"அநேகமாய்ப் போய்ச் சேர்ந் திருக்கும்."

"அவர் மகன் தப்பிச் செல் லும் போது சுடப்பட்டுக் கட லில் முழுகியதாய்க் கிடைத்த செய்தியை நாம் மறைத்தது சரிதானா என்பது இன் னும் என்னைக் குடைந்து கொண்டிருக்கிறது, ராஜ் குமார்."

"என்னைப் பொறுத்த வரையில் நாம் பொய் சொன்னது சரியே, சுபேந்தர். தம் மகன் என் றாவது ஒருநாள் திரும்பி வருவான் என்று எண் ணிக் காத்திருக்கும் அவன் பெற்றோரின் நம்பிக்கையைச் சிதைக்க நான் விரும்ப வில்லை, சுபேந்தர். எனினும் சுடப்பட் டிருக்கக் கூடும் என்றும் சூசகமாய் எழுதியிருந்தோமே?"

சுபேந்திரநாத் தாகூர் மவுனமாய்ப் பெருமூச்சு விட்டவாறு கூறினான். "விநாயக் தாமோதர் சாவர்க்கர் தப்பிச் செல்லுகையில் கண்டுபிடிக்கப்பட்டு சுடப்பட்ட போதிலும் ஃபிரான்ஸ் கடற் கரை வரையில் நீந்திச் சென்று உயிர் தப்பிவிட்டார். இன்று அந்தமான் சிறை யில் இருந்தாலும், ஒருநாள் விடுதலை யாவார் என்ற நம்பிக்கை உள்ளது. ஆனால் அருணாசலமோ கடலில் மூழ்கிச் செத்துப் போனான். என்ன துரதிருஷ் டம், சுறுசுறுப்பான - துடிப்பான - இளை ஞன். இன்னும் இது மாதிரி நம்மில் எத்தனை பேர் சாகப் போகிறோமோ தெரியவில்லை. இவ்வாறு சுடப்பட்டும், தூக்கிலிடப்பட்டும் சாவதற்கா நம் பெற் றோர் நம்மைப் பெற்றார்கள்? என்ன அநியா யம் இது?"

"என்ன செய்வது, சுபேந்தர்...? இன்னொரு சமாசாரம் தெரியுமா உனக்கு?"

"என்ன?"

"ரத்னாகர், நம்மை இந்தியா ஹவுசில் சென்ற ஆண்டு சந்தித்துச் சென்ற மோகன்தாஸ் கரம்சந்த் காந்திக்கு ஒரு கடிதம் எழுதி இருக்கிறான்."

"அட, என்னவென்று?"

"அவர் இங்கு வந்து நம்மைச் சந் தித்துப் பயங்கரவாதத்தைக் கைவிட்டு விட்டு, அகிம்சை வழியில் போராடுமாறு அறிவுரை சொன்னாரல்லவா? அதைச் சாடித் தான். வேறென்ன? எழுதிக் கொஞ்ச நாள் ஆகிறதாம்."

சற்றுத் தொலைவில் லண்டன் போலீஸ் கான்ஸ்டபிள் ஒருவனின் தொப்பி தெரிய இரு வரும் எழுந்து நடக்கத் தொடங்கினார்கள். இந்தியர்களைக் கண்டாலே இப்போதெல் லாம் லண்டன் போலீஸாரின் கெடுபிடி மிகுதி யாக இருந்தது. இந்தியா ஹவுஸை நோக்கி நடக்கும் போது, "காந்தி பதிலெழுதுவாரா இவனுக்கு?" என்று கேட்டான், சுபேந்தர்.

"வரும் என்று ரத்னாகர் நம்பிக் கொண் டிருக்கிறான். ஆனால் எனக்கு என்னமோ

சந்தேகமாகத்தான் இருக்கிறது" என்றான் ராஜ்குமார். "கா்ந்திக்கு எத்தனையோ காரியங்கள். ரத்னாகரின் கடிதம்தானா அவருக்கு முக்கியம்?"

# ஜோதிர்லதா கிரிஜா

ஆனால் இருவருமே அதிசயிக்குமாறு இந்தியா விடுதியை அவர்கள் அடைந்தபோது காந்தியின் பதில் வந்திருந்தது. ரத்னாகர் சிரித்தபடி அதை இருவரிடமும் கொடுத்தான்.

"அன்புமிக்க ரத்னாகர்,

உன் காரசாரமான கடிதம் கிடைத்தது. எனது அகிம்சைக் கொள்கையை நிறையவே கேலி செய்திருக்கிறாய். நீ மட்டுந்தானா? நிறைய பேர் என்னைக் கேலிதான் செய்கிறார்கள். உங்கள் தலைவர்கள் - விநாயக் தாமோதர் சாவர்க்கர் உட்பட - நான் சொன்னவற்றை ஏற்கத்தான் இல்லை. ஒன்று, எனக்குச் சரியாக விளக்கத் தெரியவில்லை. அல்லது என்னைப் புரிந்து கொள்ளும் பக்குவம் உங்களுக்கு இல்லை. எப்படியானாலும், எனது நிலையை எழுத்தில் மறுபடியும் விளக்க இதை ஒரு சந்தர்ப்பமாக எடுத்துக் கொண்டு நன்றி கூறுகிறேன்.

பிற உயிரினங்களைக் கொன்று தின்னாமை மட்டுமே அகிம்சையன்று. என்னைப் பொறுத்த வரையில், அகிம்சை என்பது இன்னும் விரிவானது. எவ்வளவு பயங்கரமான இம்சையையும் எதிர்த்து நிற்கும் வல்லமை வாய்ந்த ஆயுதம், அகிம்சை ஒன்றைத் தவிர வேறு எதுவுமே இல்லை. இந்து மதத்தின் அடிப்படையே அகிம்சைதான். அன்பின் மறு உருவமே அகிம்சை. நான் சொல்லும் அகிம்சை பயன்தர வேண்டுமாயின், அது நமது பேச்சு, செயல், நடத்தை ஆகிய எல்லாவற்றிலுமே ஒளிவிட வேண்டும். அகிம்சையையும் சத்தியத்தையும் கடைப்பிடிக்கிற பாதை மிக நீண்ட ஒன்றாய்த் தோன்றிடினும், அதுவே உள்ளவற்றுள் குறுக்குப் பாதை என்பதே எனது கருத்தாகும். அகிம்சை என்பது முழுக்க முழுக்க ஓர் ஆக்க சக்தி. அது அழிப்பதே இல்லை. ஆயுதத்தாலன்றி அன்பாலேயே எதிரியின் நல்ல எண்ணத்தைச் சம்பாதித்துக் கொடுக்கவல்லது. நடைமுறையில் அகிம்சையைக் கடைப்பிடிக்கும்போது, இறுதியில் எதிரியும் அகிம்சையைக் கடைப்பிடித்தாக வேண்டிய நிலை உருவாகும்.

உங்கள் நாட்டுப்பற்றைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். நீங்கள் போகிற பாதை தான் சரியில்லை. கடவுள் உங்களுக்கு நல்வழியை விரைவில் காட்டுவாராக... அன்புடன், எம்.கே. காந்தி...."

ராஜ்குமார் கடகடவென்று நகைத்தான். "மிக நல்ல மனிதர். ஆனால் அசட்டுத்தனமான கருத்துக்களைக் கொண்டுள்ளார்... அவரை நாம் நிராகரிக்கத்தான் போகிறோம். ஆனாலும் அவர் சொல்லுகிறவற்றை முழுமையாக விவாதிக்காமல் நிராகரிக்க முடிவதில்லை என்பதுதான் அவருடைய தனிச் சிறப்பு எனத் தோன்றுகிறது."

"அதுவே ஒருவகையில் அவருடைய வெற்றிதானே!" என்ற ரத்னாகர் திடீரென்று தன் குரலைத் தாழ்த்திக் கொண்டு, "நண்பர்களே, இன்னொரு மிக முக்கியமான சேதி... இந்தியாவில் கூடிய விரைவில் இங்கிலாந்து இளவரசரின் முடிசூட்டு விழா நடக்க இருக்கிறதல்லவா? அப்போது இந்தியரின் மன நிலையும், வெள்ளையர் மீது அவருக்குள்ள வெறுப்பும் இளவரசருக்கு



## கல்கி தீபாவளி மலர் : விலைமதிப்பற்ற பொக்கிஷம்!

✉ கல்கி தீபாவளி மலர்தான் நம் கையில் இருக்கிறதா அல்லது மூணாறில் நாம் இருக்கிறோமா என்று மனத்தில் ஓர் எண்ணம். படிக்க, பாதுகாக்க ஒரு சிறந்த மலர் எது என்றால் அதுதான் 'கல்கி தீபாவளி மலர்'!

சாத்தூர், எம். செல்லையா.

✉ கல்கி தீபாவளி மலரையும், எங்கள் வீட்டு தீபாவளி இனிப்புகளையும் ஒரே நேரத்தில் சுவைத்தேன். ஆனால் தித்திப்பு என்னவோ தீபாவளி மலரில் தான் மிகுதியாயிருந்தது!

சேலம் - 9, மு. இரவிச்சந்திரன்.

✉ 'தீபாவளி மலர்கள்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதுவதற்காக, நான் முப்பதுக்கும் மேற்பட்ட கல்கி தீபாவளி மலர்களைச் சமீபத்தில் தேடிப் பிடித்துப் பார்த்தேன். கூடவே இந்த வருட கல்கி தீபாவளி மலரைப் பார்த்த போதும் என்னுடைய வியப்பு கொஞ்சமும் குறைய வில்லை. அந்தக் காலத்திலிருந்து இந்தக் காலம்வரை அரை நூற்றாண்டுக்கும் மேலாகக் கல்கி தீபாவளி மலரென்றாலே அற்புதத்திலும் அற்புதம்தான்!

மயிலாடுதுறை, 'சின்னஞ்சிறு கோபு'.

✉ ம. செ.யின் அசத்தலான அட்டைப் படத்தைக் காணவே ஆயிரம் கண்கள் வேண்டும்.

விசலூர் - 1, ஜி. ஜி. கிருஷ்ணன்.

✉ கல்கி தீபாவளி மலர் ஒரு பொக்கிஷம். அதற்குள், ஆசார்ய ரத்தினங்கள், கதா ரத்தினங்கள், ஹாஸ்ய முத்துக்கள் என்று பல நவரத்தினங்கள் உள்ளடங்கியிருக்கின்றன. அடுத்தாற்போல் அமரர் கல்கியின் 'கமலாவின் கல்யாணம்' என்ற கதை ஓர் அமர காவியம். விலை மதிப்பற்ற பொக்கிஷம்.

சென்னை - 4, வெ. முத்துகிருஷ்ணன்.

நன்றாகப் புரியும் வண்ணம் சில அடாவடிக் காரியங்களை அங்குள்ள புரட்சியாளர்கள் செய்யத் திட்டமிட்டுள்ளார்களாம். நேற்று இந்தியாவிலிருந்து வந்த ஒருவரிட மிருந்து வந்த ரகசியத் தகவல் இது" என்றான்.

"இந்தியாவிலிருந்து வந்த தகவல் கொடுத்த அந்த இந்தியர் யார்? யாருடன் அவர் பேசினார்?"

"அவர் பெயர் தாமோதரன் நாயர் என்பது. திருவனந்தபுரத்தில் வக்கீலாக இருக்கிறவராம். நம் ஜெய்சங்கர் சுக்லாவிடம் சொல்லி இருக்கிறார்...."

அப்போது அவர்கள் இருந்த அறையின் வாயிலில் நிழலாடியது. வந்தவன் ஜெய்சங்கர் சுக்லாதான். "போலீஸ் இன்று இந்த விடுதியைச் சோதனை செய்ய இருக்கிறார்கள் என்று திடீர்த் தகவல், விடுதியின் காவலாள் மூலம் தெரியவந்தது. அவர்கள் கண்களில் சிக்கி நமக்கு ஆபத்தையும் நம்மீது சந்தேகத்தையும் ஏற்படுத்தக்கூடியவற்றை அப்புறப்படுத்துவதோ அழித்து விடுதலோ நல்லது. ஒவ்வோர் அறையாகச் சென்று சொல்லி வருகிறேன்," என்று கூறிய பின் அவசர நடையில் அடுத்த அறைக்குப் போனான்.

ஜெய்சங்கர் சுக்லா பக்கத்து அறைக்குள் நுழைந்து சேதியைச் சொல்லிவிட்டு வெளியே வருகையில் அவனை வியப்பு, வேதனை, அதிர்ச்சி, ஆத்திரம் ஆகிய உணர்ச்சிகளில் ஆழ்த்திய மோசமான ஒரு நிகழ்ச்சியை அவன் கண்டு, கேட்க நேர்ந்தது.

விடுதியில் தங்கி இருந்தவர்களின் உபயோகத்துக்காகப் பொதுக் கூடத்தில் ஒரு தொலைபேசி உண்டு. அதில் மிக மெதுவான குரலில், "எஸ் ஸார். நீங்கள் இப்போதே வரலாம். கிட்டத்தட்ட எல்லா மாணவர்களும் விடுதியில்தான் இருக்கிறார்கள். அப்புறம் இன்னொரு விஷயம், ஸார்..." என்று மேலும் சொல்லத் தொடங்கிய மாணிக்லால் திங்ராவின் வாயை இறுகப் பொத்தித் தொலைபேசித் தொடர்பை ஜெய்சங்கர் சுக்லா துண்டித்து விட்டு, அவனை ரத்னாகர், ராஜ்குமார், சுபேந்திரநாத் தாகூர் ஆகியோர் இருந்த அறைக்குத் தரதரவென்று இழுத்துப் போய், அறையின் கதவைச் சாத்தினான்.

"நண்பர்களே, சிரித்துக் கொண்டே மரண தண்டனைக்கு ஆளான - சாவதற்கு முன்னால் வெள்ளையர்களைத் திட்டி அறிக்கையும் விட்ட - மதன்லால் திங்ராவுக்கு இவன் திருஷ்டிப் பரிகாரம். இவனும் ஒரு திங்ராதான். மாணிக்லால் திங்ரா, என்ன அசிங்கம்..." என்றவாறு, மற்ற மூவரும் ஏதும் புரியாது நின்றிருக்க, ஜெய்சங்கர் சுக்லா

மாணிக்லால் திங்ராவைக் கண் மூக்குப் பாராமல் அடிக்கத் தொடங்கினான்.

## 30

வாசற்படியில் கால் வைத்த குஞ்சம் மாவின் முகம் வெளிறி இருந்ததைக் கவ னித்து, ராமசாமி வியப்படைந்தார்.

"என்ன, குஞ்சம்மா? எங்க போயிட்டு வர்றே?"

இதற்குள் ஓரளவு சுதாரித்துக் கொண் டிருந்த அவள், "டாக்டர் வீட்டுக்குத்தான். கொஞ்சம் வலி இருந்தது. அதான்" என்றாள்.

"என்னது? வலியா? வலியோட யாரா னும் தனியாப் போவாளா? இதென்ன அசட் டுத்தனம்?"

"வேற என்ன பண்றது? சாயங்காலம் நீங்க வர்ற வரைக்கும் நான் காத்துண்டா கிடக்கிறது?"

"பக்கத்தாத்துல யாரையாவது துணைக் குக் கூட்டிண்டு போயிருக்கப்படாதா? வர முடியாதுன்னா சொல்லப் போறா?"

குஞ்சம்மா இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல் கதவைத் திறந்து கொண்டே உள்ளே போனாள். ராமசாமி அவளைப் பின்தொடர்ந்தார்.

"ஆமா? நீங்க ஏன் சீக்கிரம் வந்துட் டேள்?"

"எங்க ஸ்கூல் பையன் ஒருத்தன் திடீர்னு டைபாய்ட்ல செத்துப் போய்ட்டான். அத னால அரை நாள் லீவ் விட்டுட்டா. இப்ப நான் குளிக்கணும்."

"சரி. நான் உங்க ட்ரெஸ்ஸை எடுத் துண்டு வரேன். நீங்க குளிக்கப் போங்கோ."

"அது இருக்கட்டும். டாக்டர் அம்மா என்ன சொன்னாள்?"

"அங்க போனதுமே நின்னு போயிடுத்து. வாயுத் தொந்தரவுன்னுட்டா. சுக்குக் கஷாயம் போட்டுக் குடிச்சாப் போறும் னுட்டா. மாத்திரை ஏதும் எழுதிக் கொடுக் கல்லே..."

"சரி, நீ போய்ப் படுத்துண்டு ரெஸ்ட் எடுத்துக்கோ."

குஞ்சம்மா ஓரளவு நிம்மதியடைந்த வளாய் மெல்ல ஒரு பாட்டை முனகியபடி அடுக்களைக்குள் நுழைந்து காப்பி போட லானாள்.

அவளைக் கவனிக்கும் பெண் மருத்துவர் அவள் திரும்பி வருவதற்கு இரண்டே நிமி டங்களுக்கு முன்னால்தான், தற்செயலாக அத் தெருவில் ஒருவரைப் பார்க்க வந்ததாக வும் அப்படியே குஞ்சம்மாவையும் பார்த்து விட்டுப் போகலாமென்று வந்ததாயும் ராம சாமியிடம் சொல்லிச் சென்றது தெரியாமை யால், அவள் பாட்டிலே உற்சாகம் கொப்ப ளித்தது.

காப்பி அருந்திய பிறகு தமது அறைக்குள் நுழைந்து ஒரு புத்தகத்தைப் பிரித்து வைத்துக் கொண்ட ராமசாமிக்குப் படிப்பு ஓட வில்லை. 'இந்தக் குஞ்சம்மா எங்கே போயிட்டு வரா? ஏன் பொய் சொன்னா? ஒருவேளை அஞ்சனாவைப் பார்த்து, 'எங்க ஆத்துக்காரரோட இனிமே நீ பேசிப் பழகி னாத் தெரியும் சேதி' அப்படின்னு சண்டை போடப் போயிட்டு வராளோ? இப்படி அசடா இருக்காளே. அட கடவுளே...'

கொஞ்ச நேரம் கழித்து மணவாள நாயுடு வந்தார். இருவரும் வழக்கம் போல் ரொம்ப நேரம் அரசியல் பேசினார்கள்.

புறப்படும் சமயம், "உங்க மிஸஸை இன் னிக்கு ஹை கோர்ட்டுகிட்ட பார்த்தேனே" என்றார் மணவாளநாயுடு.

"ஆமாமா. டாக்டரைப் பார்த்துட்டு வரப் போயிருந்தா... அது சரி, புதுசா வேற யாரா னும் மெம்பர்ஸ் சேர்ந்திருக்காங்களா?"

அவர் பேச்சை மாற்றியது புரியாமல், "இல்லேங்காணும். சேர்ந்திருந்தா சொல்லி இருப்பேனே... அப்ப நான் வரட்டுமா?" என்றவாறு மணவாளநாயுடு விடைபெற

கணவன் : நான் என்ன தப்பு செய் திருந்தாலும் மன்னிச்சுக்கோ கமலா. அதுக் காக இப்படிக் கோபமா குதிக்காதே!

மனைவி : சே! நான் கோபமா குதிக்க லீங்க. பரதநாட்டியம் ஆடிக்கிட்டிருக் கேன்!

- அரிசி ஸ்ரீராம்

றார்.

மணவாள நாயுடு சொன்னதும், ராமசாமி அவசரமாய்ப் பேச்சை மாற்றிக் கூறியதும் செவிகளில் விழுந்ததில், குஞ்சம்மாவுக்குள் ஒரு சங்கடமான நடுக்கம் பரவியது. 'அப்ப டின்னா இவருக்குத் தெரிஞ்சிருக்கு....' குஞ்சம் மாவுக்குக் கண்களை இருட்டிக் கொண்டு வந்தது. பொய்யே சொல்லியறிந்திராதவளாத லின், அவளது படபடப்பு நொடிக்கு நொடி அதிகரித்துக் கொண்டே போயிற்று. வாசற் கதவைத் தாழிட்டு விட்டு ராமசாமி திரும்பி வந்த போது, குஞ்சம்மா அடுக்களை வாயிற் படியில் படுத்துக் கிடந்தாள். அவள் மயங்கி விழுந்திருக்க வேண்டுமென்று அவள் படுத்துக் கிடந்த நிலையிலிருந்து புலப்பட, அவர் அவசரத்துடன் ஓடிப் போய்க் குளிர்ந்த நீரெடுத்து வந்து அவள் முகத்தில் தெளித் தார். காரணம் அவருக்குப் புரிந்து விட்டதில் அவருள் அவள் பால் ஓர் இரக்கம் சுரந்தது.

சற்றுப் பொறுத்து நினைவு திரும்பப் பெற்ற குஞ்சம்மா, வெட்கமும், அச்சமும், வேதனையுமாக அவரை நோக்கி, "நான் உங்ககிட்டப் பொய் சொல்லிட்டேன்னா" என்று குழந்தை போல் ஒப்புக் கொண்டு அழுதபடியே நடந்ததையெல்லாம் கூறி முடித் தாள். முடிக்கும் வரை அவரது பார்வையைச் சந்திக்காமலும், கட்டிய கழுத்தை விடாம லும் இருந்த அவளைப் பார்க்கப் பார்க்க ராமசாமிக்குப் பரிவு மிகுந்தது.

"போகட்டும், குஞ்சம்மா. நாம ரெண்டு பேருமே எல்லாத்தையும் மறந்துடலாம்... சரியா?"

"ஏன்னா, அந்த அஞ்சனாதேவி உங்களை மயக்கினாலும் நீங்க மயங்க மாட்டேள் தானே?"

"என்னை மயக்கக்கூடிய ஒரே ஆள் குஞ்சம்மாதேவிதான்! என்னோட அஞ்சு வருஷத்துக் கட்டுப்பாட்டையும் நீர்த்துளி பண்ணிட்டு இப்ப வயித்தைப் பெரிசாக் கிண்டு நிக்கற நீதான் அதுக்கு சாட்சி..." என்ற ராமசாமி ஆதரவாய் அவளது நெற்றி மயிர்கற்றையைக் கோதினார்.

"சத்தியமா?" என்ற குஞ்சம்மா தனது வலக் கையை விரித்து நீட்டினாள். ராமசாமி தன் கையால் அதை அழுத்திப் பொத்தி, "சத்திய மாடி, குஞ்சம்மா. சத்தியமா..." என்றார்.

குஞ்சம்மா உடனே எழுந்து போய் அந்த மொட்டைக் கடிதத்தை எடுத்து வந்து அவ ரிடம் காட்டி விட்டுப் பின்னர் அதைத் துணுக்குத் துணுக்காய்க் கிழித்துக் குப்பை யாய் வெளியே வீசிப் போட்டாள்.

(தொடரும்)




# கருணாகரனைக் கலங்க அடிக்கும் புத்தகம்!

சேஷனின் புத்தகம் போலவே இப்போது ஒரு நாடக நூல், கேரளாவில் பெரும் புயலைக் கிளப்பியிருக்கிறது. "சதாபிஷேகம்" எனும் இந்நாடகம், ஒரு பெரிய குடும்பத்திலுள்ள வசதி வாய்ந்த ஒரு தகப்பனுக்கு முட்டாள்தனமாகவும், சோம்பேறித்தனமாகவும் உள்ள ஒரு வாரிசு; இதனால் அக் குடும்பத்திற்கு நேரும் அவலம். இதையெல்லாம் கொண்டு நகைச்சுவை பாணியில் அமைந்திருக்கிறது.

இந்த நாடகம் கேரள முதல்வர் கருணாகரனையும் அவர் மகன் முரளீதரனையும் (எம்.பி.) கிண்டல் செய்து எழுதப்பட்டிருக்கிறது என்று காங்கிரஸ் கட்சியினர் பெரும் பிரச்னையைக் கிளப்பி வருகின்றனர்.

இந்த நாடகத்தை எழுதியவர், பிரபல மலையாள திரைப்படப் பாடலாசிரியரும், திருவனந்தபுரம் வானொலி நிலையத்தின் தமிழ் நிகழ்ச்சி தயாரிப்பாளருமான எஸ். ரமேசன் நாயர். மலையாளத் திரைப்படத் துறையில் பெரும் வசூல் சாதனை புரிந்த "மணிச்சித்திரத்தாழ்" எனும் சினிமாவிற்கு இசையமைத்த எம்.ஜி. ராதாகிருஷ்ணன்தான் இந்த நாடகத்திற்கும் இசையமைத்தார். இந்த இரு பெரும் பிரபலங்களும் இதில் பணியாற்றியிருப்பதால் மலையாள மற்றும் கேரளத் தமிழ் மக்களும் ஆவலுடன் இந்த வானொலி நாடகத்தைக் கேட்டனர். பிரச்னையும் எழுந்தது.

இளைஞர் காங்கிரஸைச் சேர்ந்தவர்கள் திருவனந்தபுரம் வானொலி நிலையத்தின் முன்னால் கொடும்பாவி எரித்தும், மறியல் செய்தும் தீவிரவாத செயல்களில் ஈடுபட்டு வருகின்றனர்.

நாடகம் இப்படியொரு புயலைக் கிளப்பியிருக்கிறது என்றால், புத்தக வெளியீட்டாளர்களும், கேசட் வெளியீட்டாளர்களும் சும்மா இருப்பார்களா? பல லட்ச ரூபாய் கொடுத்து உரிமைகளை வாங்கிய புத்தகத்தையும் கேசட்டையும் வெளியிட்டு விட்டார்கள். புத்தகம் வெளியிடப்பட்ட இரண்டு மூன்று நாட்களிலேயே மூன்று பதிப்புகள் விற்றுப் போய், நான்காம் பதிப்பு அச்சடிக்க வேண்டிய நிலை! கேசட்டும் அமோக விற்பனை!

இத்தனை சர்ச்சைக்கிடையில், முதல்வர் கருணாகரனுடைய நிலை என்ன? கேசட்டை வாங்கிப் போட்டுக் கேட்டார். ஆயினும் கருத்தேதும் சொல்லாமல் கப்சிப் ஆகி விட்டார்.

இதோடு இன்னொரு கவலையும் சேர்ந்து கொண்டது கருணாகரனுக்கு. அது என்ன என்கிறீர்களா?

சில மாதங்களுக்கு முன், ரமேசன்நாயர் திருவனந்தபுரம் தமிழ்ச் சங்க பிரமுகர்களுடன் சென்று, திருக்குறளை மலையாளத்தில் மொழிமாற்றம் செய்திருக்கும் தம்முடைய நூலுக்கு கேரள அரசு பணஉதவி அளிக்க வேண்டுமென்று வேண்டியிருந்தார். இத்தனை நாட்களாக அதற்குப் பண உதவி அளிக்காமல் இருந்து வந்தார் கருணாகரன். இனிமேலும் பண உதவி செய்யவில்லையென்றால் நாடகப் பிரச்னைதான் அதற்குக் காரணம் என்று எதிர்க்கட்சிகள் புயலைக் கிளப்புமே என்கிற கவலைதான்!

திருவனந்தபுரத்திலிருந்து ந. கந்தன்

மாணிக்லால் திங்ராவின் மூக்கிலிருந்து இரத்தம் ஒழுகத் தொடங்கியது. ஜெய்சங்கர் சுக்லா காரணமில்லாமல் அவனை அடிக்க மாட்டான் என்பதால் ராஜூவும் ரத்னாகரும் தடுக்காமல் - ஆனால் திகைப்புடன் - பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இரத்தத்தைப் பார்த்ததும் அவனிடம் தனது கைக்குட்டையைக் கொடுத்த ஜெய்சங்கர் சுக்லா, "நண்பர்களே, இவன் நம்மில் தீவிரவாதிகளைப் பற்றிப் போலீசுக்குத் தகவல் சொல்லிவிட்டு அவர்களது வருகையை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான்... அடேய், மாணிக்லால், 'இன்னும் ஒரு விஷயம்' என்று ஏதோ சொல்லத் தொடங்கினாயே, அது என்ன? மரியாதையாகச் சொல்லிவிடு. இல்லாவிட்டால் அடிபட்டே சாவாய்" என்றான் மிரட்டலாக.

மாணிக்லால் திங்ரா தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டிருக்கையில், நடந்ததை நண்பர்களுக்குச் சொன்னான். "பாதியில் நான் தொலைபேசித் தொடர்பை வெட்டி விட்டதால் எப்படியும் போலீசார் உன்னை அது பற்றியும் கேட்பார்கள். நீ என்ன சொல்லப் போகிறாய்?"

மூக்கை உறிஞ்சிக் கொண்டே, "லைன் கட்டாகிவிட்டதென்று சொல்லுவேன்..." என்றான்.

"இன்னொரு விஷயம் என்று ஏதோ சொல்லத் தொடங்கினாயே, அது என்ன?"

"இந்தியா ஹவுசின் ஆங்கிலேய வாட்ச்மேனே உங்களுக்கு உடந்தை என்பதைத் தெரிவிக்க நினைத்தேன்...."

# மணிக்கொடி

"அட துரோகிப் பயலே! இனி ஒவ்வொரு கணமும் எங்கள் கூட்டம் உன்னைக் கண்காணிக்கும். ஒரு சிறு சந்தேகம் ஏற்பட்டாலும் உன் உயிருக்கு ஆபத்து. மறக்காதே!"

"என்னை மன்னித்து விடுங்கள்." - மாணிக்லால் திங்ரா உதடுகள் துடிக்கப் பேசினான்.

"போலீஸ் இங்கு வருவதற்கு முன்னால் நீ வெளியே போய் விட வேண்டும். அடிபட்ட, வீங்கிய முகத்துடன் நீ அவர்கள் பார்வையில் படக்கூடாது! சரி. நானே உன்னோடு வெளியே வருகிறேன். உன்னை நம்ப முடியாது" என்ற ஜெய்சங்கர் சுக்லா, அவனை இழுத்துக் கொண்டு வெளியேறினான்.



ஜோதிர்லதா கிரிஜா

முன்னெச்சரிக்கையின் விளைவாக விடுதி மாணவர்கள் ஆவன செய்து விட்டதால் சற்றுப் பொறுத்து வந்து சேர்ந்த காவல் துறை ஊழியர்களுக்கு இங்கிலாந்து அரசுக்கு எதிரான பயங்கரவாத நடவடிக்கைக்கான எந்தத் துப்பும் கிடைக்கவில்லை.

விடுதியையே தலை கீழாகப் புரட்டிவிட்டு அவர்கள் போனதும் மாணவர்கள் நிம்மதியாய்ப் பெருமூச்செறிந்தனர்.

நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. குறித்த காலத்தில் துளசியம்மா கங்காதரனைப் போன்றே ஓர் அழகான ஆண்குழந்தையைப் பெற்று விட்டுத் தனக்கு என்ன குழந்தை



## அடுத்த இதழில்......

- **போலிச் சாமியார்களால் ஆன்மிகத்துக்கு ஆபத்து...?**
- **ஒரு பிளாட்பாரச் சிறுவனின் நிஜமான கதை!**

பிறந்தது என்பதைத் தெரிந்து கொள்ளு முன்னரே இறந்து போனாள்.

ராமசாமிக்குக் குஞ்சம்மாவின் மரணம் பற்றிய நம்பிக்கையே வரவில்லை. மொட்டை மாடியில் பழைய நிகழ்ச்சிகளையெல்லாம் அசை போட்ட வண்ணம் ஈஸிசேரில் ஆகாயத்தை வெறித்தபடி மல்லாந்து படுத்திருந்தார். அவர் செவிகளில் கீழே இருந்து கிளம்பி வந்த சின்னஞ்சிறு குழந்தையின் அழுகுரலும் தமக்கை விசாலத்தின் சமாதானக் குரலும் புகுந்து நடந்து விட்டது உண்மைதான் என்பதை அவருக்கு உணர்த்திக் கொண்டிருந்தன.

கொஞ்சம் விவரந் தெரிந்த கங்காதரனை யாராலும் சமாதானப்படுத்த முடியாமல் போயிற்று. 'அம்மா சாமிகிட்ட போயிட்டா' என்ற கூற்றை ஏற்க அவன் தயாராக இல்லை. 'அப்படின்னா அது பொல்லாத சாமி. கெட்ட சாமி. இனிமே நான் சாமிக்கு நமஸ்காரம் பண்ணவே மாட்டேன்' என்று ஆத்திரமாகக் குழந்தை அறிவித்த போது ராமசாமி மலைத்துப் போனார்.

அந்தக் காலத்து நாத்தனார்களுக்கு ஒரு விதி விலக்காய் ஒரு மூத்த சகோதரி போன்று குஞ்சம்மாவுடன் பழகி வந்த விசாலமோ ஒரே வாரத்தில் பாதி உடம்பாகிவிட்டாள்.

குஞ்சம்மாவின் இறுதிச் சடங்கின் போது ராஜா ராமனும் அஞ்சனாவும் வந்தனர். அஞ்சனா வந்தது முதல் திரும்பிப் போகும் வரை கண்ணீரைத் துடைத்தபடியே இருந்தது அவரை வியப்பில் ஆழ்த்தியது. அவள் தம்மோடு பேசிப் பழகுவதைத் தடுக்கக் கோரிக் குஞ்சம்மா ராஜாராமனைச் சந்தித்த சேதி அவளுக்குத் தெரிந்திருக்குமா என்பதைப் பற்றி அவரால் ஊகிக்க முடியவில்லை.

கொஞ்ச நாட்கள் கழித்து விசாலம் அவரது திருமணப் பேச்சை எடுத்தாள். அவளது எண்ணம் வெளிப்பட்ட மாத்திரத்தில் அவர் பொசுக்கி விடுகிறாற்போல் அவளைப் பார்த்தார்.

"இப்ப இல்லேடாப்பா. இன்னும் ஒரு வருஷம் கழிச்சுத்தான். அப்படிப் பார்க்காதே" என்று விசாலம் குழறினாள்.

"இந்தப் பேச்சையே நீ இனிமே எடுக்கக் கூடாதுக்கா. எத்தனை வருஷங்கழிச்சானாலும் சரிதான். குஞ்சம்மா இருந்த இடத்துல வேற யாருக்கும் இடம் கிடையாது. இனிமே நான் முழு மூச்சோட தேச சேவையில ஈடுபடப் போறேன்."

விசாலம் பதில் சொல்லவில்லை. கொஞ்ச நேரம் மவுனத்தில் கழிந்த பிறகு, "ராமசாமி, தயவு செஞ்சு கோவிச்சுக்காம நான் சொல்றதைக் கேளு. உனக்குச் சின்ன வயசுதான். நீ மறுகல்யாணம் பண்ணிண்டுதான் ஆகணும். அந்தப் பொண்ணு அஞ்சனா அடிக்கடி இங்க வறா. அவளைக்கூட நீ பண்ணிக்கலாம். நீ சரின்னு சொன்னா நான் அவளைக் கேட்டுப் பார்க்கறேன்" என்றாள் பயந்தபடி. ஆனால் பார்வை மட்டும் நீட்சியாக அவர் மீது படிந்திருந்தது.

ராமசாமி, அறை வாங்கியவர் போல் விழிகள் விரிய அவளை ஏறிட்டு, "பயித்தியக்காரத்தனமா பேசாதே அக்கா! எனக்குக் கோபம் வரும்! அதுசரி, அந்தப் பெண் அடிக்கடி இங்க வராளா என்ன?"

"ஆமாண்டா, வறா. உன் குழந்தைகளை ரொம்ப நேரம் கொஞ்சிட்டுப் போறா. கங்காதரன் அவகிட்ட பிசினாட்டமா ஒட்டிண்டுட்டான்."

"இதபாருக்கா, நீ பாட்டுக்கு அவகிட்ட எதையாவது பேத்தி வைக்காதே. குஞ்சம்மா இடத்துல வேற எவளையும் என்னால நினைச்சே பார்க்க முடியாது. தெரிஞ்சதா?" ராமசாமியின் குரல் இரைந்து வெளிப்பட்டது.

ஒரு கட்டத்தில் நரேந்திரநாத், அமராவதி, அஞ்சனா ஆகிய மூவரும் மொட்டை மாடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த போது, அவன் அஞ்சனாவிடம் தாங்கள் இருவரும் காதலிப்பது பற்றி வெட்கப்பட்டுக் கொண்டே தெரிவித்து விட்டான். அஞ்சனாவுக்கு உண்மையில் அது பேரின்ப அதிர்ச்சியாகத்தான் இருந்தது.

"அமராவதி காதல் வயப்பட்டிருப்பதாக நான் ஓரளவுக்கு ஊகிச்சேன், ஆனா அது நீங்கன்னு எனக்குத் தெரியலை. [illegible] சாமர்த்தியமாத்தான் இருந்து [illegible] [illegible]

ரெண்டு பேரும்."

"ஆமாம் அஞ்சனா, இப்போதைக்கு உங்கம்மாவுக்கு இது தெரியவே கூடாது. சமயம் வரும் போது சொல்லிக்கலாம். அந்த நேரத்துல உங்க சிபாரிசு எங்களுக்கு ரொம்பத் தேவையா இருக்கும். உதவி செய்வேளில்லையா?" என்று கேட்டுச் சிரித்த அவனை ஒரு புதிய பாசத்துடன் அஞ்சனா நோக்கினாள்.

அப்போது பாமா அங்கு வந்தாள். நடையில் ஒரு பரபரப்பு இருந்தது. மூச்சு வாங்கியதில் அவள் உணர்ச்சிவயப்பட்டிருந்ததும் தெரிந்தது.

"நரேந்திரநாத் பானர்ஜி இங்கு இருக்கிறானா அப்படின்னு இங்கிலீஷ்ல கேட்டுண்டு ஒருத்தன் வந்திருக்கான். வடக்கத்திக்கார னாட்டமா இருக்கு. எனக்கு இங்கிலீஷ் தெரியாத மாதிரி, 'இரு இரு'ன்னு ஜாடையாலே பதில் சொல்லிட்டு வந்திருக்கேன். திண்ணையில உக்காந்திண்டிருக்கான். சி.ஐ.டி. கூட இது மாதிரி வரலாமில்லியா? அதனால நீங்க யாராவது போய்ப் பார்த்து ஜாக்கிரதையா விசாரியுங்கடி."

"ஒண்ணு பண்ணுங்க, நரேன். நானும் அமராவதியும் போய்ப் பேசறோம். நீங்க நைஸா ஜன்னல் வழியா எட்டிப் பார்த்து உங்க ஆள்தானான்னு கவனிங்க."

"அநேகமா எங்க ஆளாத்தான் இருக்கும், அஞ்சனா. முதமுத உங்க வீட்டுக்கு வந்தப்ப நான் இங்க வர்றதாச் சொல்லிட்டு அட்ரெஸ் குடுத்துட்டுத்தான் வந்தேன்."

நரேந்திரநாத் எழுந்தான். "அமராவதி! எங்க ஆளா இருந்தா விசில் அடிக்கிறேன். இல்லாட்டி, சீமையற்கட்டுப் பரண்மேல ஏறிப் படுத்துடறேன். எதுக்கும், அம்மா, பரண்ல ஏறிக்கிறதுக்கு வசதியா அங்க ஒரு நாற்காலி போட்டு ரெடியா வையுங்கம்மா, ப்ளீஸ்...."

மூவரும் கலைந்து செல்ல, நரேந்திர நாத் திண்ணையை ஒட்டிய அறைச் சன்னல் வழியே மிகுந்த கவனத்துடன் பார்த்தான்.

## 32

"சார்! முத்துசாமி அய்யர்னு ஒருத்தருக்கு உங்களைப் பார்க்கணுமாம், சார்...."

"வரச்சொல்லு" என்று அனுமதித்து விட்டு ராஜாராமன் கதவின் புறமே பார்த்தபடி இருந்தார்.

கதவைத் திறந்து கொண்டு முத்துசாமி நுழைந்ததும், "வாப்பா, முத்து, எப்படி இருக்கே? லண்டன்லேருந்து எப்ப வந்தே?" என்றார்.

முத்துசாமி வெள்ளைக்காரன் நடத்தும் கம்பெனியில் ஓர் உயர்தர அதிகாரி. இந்திய சுதந்திரத்தைப் பற்றிய அக்கறை ஏதும் இல்லாதவர். வெள்ளைக்காரனே அனைத்துலக மக்களிலும் அறிவாளி, உலகத்தை ஆளப் படைக்கப்பட்டவன் என்பது அவருடைய அசைக்க முடியாத கருத்து. எனவே காங்கிரஸ் இயக்கம், தேசவிடுதலை போன்றவற்றை ராஜாராமன் அவருடன் விவாதிப்பதில்லை. ஆனாலும் முத்துசாமி தாமாகவே இவரை வம்புக்கு இழுத்து நன்றாக வாங்கிக் கட்டிக் கொண்டு போவார்.

"இந்தா உனக்குப் பிடிச்சது. ஓவல்டின் பிஸ்கட்ஸ். லண்டன்ல வாங்கினேன். பெட்டியைக் கண்டா எனக்கு உனக்குன்னு பிச்சுப் பிடுங்கிடுவா. அதனால பழைய லண்டன் நியூஸ் பேப்பர்ல பாக்கெட்டைச் சுத்தி எடுத்துண்டு வந்தேன்...." என்றவாறு அவர் கொடுத்த பொட்டலத்தை ராஜாராமன் நன்றி கூறிப் பெற்றுக் கொண்டார்.

"அப்புறம்? லண்டன்ல எம்பிள்ளை படிச்சிண்டிருக்கிறது ஞாபகம் இருக்கோல்லியோ?"

"இருக்குப்பா. ஆனாலும் டைட் ஷெட்யூல். அதனால இண்டியா ஹவுஸுக்குப் போக முடியல்லே...."

'நல்ல வேளை நீ போகாதது' என்று தமக்குள் நினைத்துக் கொண்டே ராஜாராமன்,

---

"யோவ், ரௌடி ரெங்கன் என்னய்யா சொல்லிட்டுப் போறான்?"

"தன்னுடைய சுயசரிதை புத்தகமா வரப் போறதுன்னு மெரட்டிட்டுப் போறான் ஸார்!"

— கே.வி.



"பரவாயில்லேப்பா. அதனால என்ன?" என்றார்.

''இண்டியா ஹவுஸ்ல இண்டியன் டெர்ரரிஸ்ட்ஸ் சிலர் இருக்காப்ல இருக்கு. கொஞ்சம் கெடுபிடி பண்ணிண்டிருக்கான் வெள்ளைக்காரன்னு கேள்வி."

''அப்படியா? எனக்குத் தெரியாது. அருண் அதுபத்தி எதுவும் எழுதல்லே."

மேலும் சிறிது நேரம் பொதுவாகப் பேசிக் கொண்டிருந்த பிறகு முத்துசாமி விடை பெற்றார். 'பிஸ்கட் பொட்டலத்தைப் பிரிக்கும் போது அதைச் சுற்றிக் கொண்டு வந்த நாளிதழ் தாளிலும் கொஞ்சம் கவனம் செலுத்துப்பா. செய்தியை நேரடியா உன்னிடம் சொல்ல முடியாமத்தான் இந்த யுக்தியைக் கையாண்டேன்' என்று எண்ணிக் கொண்டே போனார்.

அவர் போன பிறகு ராஜாராமன் மேஜை மீதிருந்த பிஸ்கட் பொட்டலத்தை எடுத்துப் பிரித்தார். ஓவல்டின் பிஸ்கட் அவருக்கு ரொம்பப் பிடிக்கும். வீட்டுக்குப் போகும் வரை காத்திராமல் பொட்டலத்தைப் பிரிப்பதை எண்ணி சற்று வெட்கப்பட்டவாறு, ஓர் ஆர்வத்தில் லண்டனிலிருந்து வெளியான அந்தச் செய்தித்தாளைப் புரட்டினார். அதில் இருந்த செய்தி அவரைப் பேரதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. அப்படியே மேசைமீது தலையைக் கவிழ்த்துக் கொண்டு விம்மி விம்மிக் கண்ணீர் விடலானார்....

தள்ளாடியபடி உள்ளே நுழைந்த ராஜாராமனை அஞ்சனா, அமராவதி, நரேந்திர நாத் பானர்ஜி ஆகிய மூவருமே கலவரத்துடன் பார்த்தனர்.

"என்னப்பா ஒரு மாதிரி இருக்கேள்? உடம்பு சரி இல்லையா?" என்றவாறு சோபாவிலிருந்து இரண்டு பெண்களும் எழுந்தார்கள்.

"தலைவலிம்மா, டாக்டர் கிட்ட போயிட்டுத்தான் வரேன். அம்மாகிட்ட சொல்லிப் பெரிசுபடுத்தாதங்கோ, காப்பி குடிச்சா சரியாப் போயிடும், மாத்திரையும் சாப்பிட்டாச்சு...."

"அப்பா! இன்னிக்கு ஒரு முக்கியமான விஷயம் இருக்கு. நரேந்திரநாத் கிளம்பிப் போயிடப் போறார் - கல்கத்தாவுக்கு. இன்னிக்கு அவரோட ஃப்ரண்ட் ஒருத்தர் வந்திருந்தார். நாளைக்கே கிளம்பணுமாம். தோற்றத்தை மாத்திக்கிறதுக்கு வேற விதமான தாடி, மீசை, டோப்பால்லாம் கொண்டு வந்து குடுத்துட்டுப் போயிருக்கார்'' என்றாள் அஞ்சனா பரபரப்புடன்.

(தொடரும்)



ஜோதிர்லதா கிரிஜா

# மணிக்கொடி

ராஜாராமன் அதிர்ந்தார்.

"ஏம்ப்பா? எதுக்கு இப்ப கல்கத்தா?"

"ஆமா, சார். எங்க ஆர்கனைசேஷன்ல நாங்க செய்ய வேண்டிய காரியங்கள் இன்னும் எத்தனையோ இருக்கு. எப்படியும் எனக்குத் தூக்குத் தண்டனை நிச்சயம். போலீஸில் சிக்குவதற்கு முன் திட்டமிட்ட சில காரியங்களை நிறைவேற்றுமாறு தலைவரின் ஆணை."

'எப்படியும் எனக்குத் தூக்குத் தண்டனை நிச்சயம்' என்ற சொற்கள் அமராவதியின் செவிகளை முற்றுகை இட்டன. அவள் விழிகள் உடனே நிறைந்துவிட, அவள் தலையைக் குனித்து கொண்டாள்.

ராஜாராமனின் உணர்ச்சிகளும் பொங்கின. மகன் பற்றிய அதிர்ச்சியான சேதியைச் சுமந்து கொண்டு அழமுடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்த அவருக்கு, இப்போது ஒரு வடிகால் கிடைக்க, தம் இரு கைகளையும் அவனை நோக்கி நீட்டினார். நரேந்திரநாத் பாய்ந்து எழுந்து வந்து அவர் கைகளுள்





அடைக்கலமானான்.

"என் அன்பு மகனே! நீ கட்டாயம் போய்த்தான் ஆகவேண்டுமா? உன் பங்குக்கு நீ இரண்டு அராஜக வெள்ளையர்களைத் தண்டித்தாகிவிட்டது. இன்னும் என்னப்பா? வேண்டாம். போகாதே. மறுத்துவிடு...." என்றவாறு குரல் தழுதழுக்கக் கூறிய அவர், அவனை இறுக அணைத்துக் கொண்டு கண்ணீர் பெருக்கினார். அமராவதியும் அஞ்சனாவும் அவரது உணர்ச்சி பொங்கிய நிலை கண்டு ஸ்தம்பித்துப் போனார்கள்.

அப்போது அங்கு வந்த பாமாவும் மலைத்துப் போனாள். இன்னதென்று விளக்க முடியாத துயரத்தின் பிடியில் சிக்கிப் போன அவளும் சோபாவில் உட்கார்ந்து கொண்டு அழலானாள்.

அன்றிரவு முழுவதும் அமராவதி ஒரு காரணத்தாலும் ராஜாராமன் வேறொரு காரணத்தாலும் உறங்க முடியாது தவித்தார்கள்....

கெடியாரத்தில் மணி இரண்டு அடித்ததும், அமராவதி மெல்ல எழுந்தாள். நரேந்திரநாத்தின் அறையை நோக்கி நடந்தாள்.

நரேந்திரநாத் பானர்ஜி மறுநாட்காலை எல்லாரிடமிருந்தும் பிரியாவிடை பெற்றுப் புறப்பட்டான்.

அன்று ஞாயிற்றுக் கிழமையாதலால் அமராவதி கல்லூரிக்குச் செல்லவில்லை. ஆக, எல்லாருமே வீட்டில் இருந்தார்கள்.

பிற்பகலில் பாமா குட்டித்தூக்கம் போட்டுக் கொண்டிருந்த நேரத்தில் அஞ்சனாவுக்கும் அமராவதிக்கும் மட்டும் வாயில் விரல் வைத்து ராஜாராமன் சமிக்ஞை செய்ததும் இருவரும் அவரது அறைக்குச் சென்றார்கள். ராஜாராமன் கதவைச் சாத்தித் தாழிட்டு விட்டுக் கட்டிலில் உட்கார்ந்து ஒரு சின்னக் குழந்தையைப் போல் குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்கினார். இரு பெண்களும் அவருக்கு இரு புறங்களிலும் உட்கார்ந்து, "அப்பா, அப்பா! என்னப்பா ஆச்சு? எதுக்குப்பா அழறேள்?..., உங்க மூஞ்சி நேத்துலேர்ந்தே சரியாவே இல்லே. என்னப்பா? அருணுக்கு ஏதாவதா?" என்று மாற்றி மாற்றி வினவ, அவர் தமது கோட்டில் உட்புறப் பையிலிருந்து லண்டன் நாளிதழின் அந்தப் பக்கத்தை அவர்களிடம் கொடுத்தார்.

"முத்துசாமின்னு என்னோட ப்ரண்டும்மா, நேத்து லண்டன்லேர்ந்து வந்தான். எனக்காக ஓவல்டின் பிஸ்கட் பொட்டலம் வாங்கிண்டு வந்தான். பாக்கெட்டோட வெளிப்புறம் தெரிய வேணாம்னுட்டு அதை லண்டன் நியூஸ் பேப்பர்ல - ஆறுமாசத்துக்கு முந்தின பேப்பர்ம்மா இது - வெச்சு சுத்திக் கொண்டு வந்து குடுத்தான். அவனும் கவனிக்கல்லேன்னு நினைக்கிறேன். அதைப் பிரிச்சதும்... அருணோட படத்தை அதுல பார்த்ததும்...." - மேலே பேச முடியாமல் அவர் துண்டை வாயில் வைத்துப் பொத்திக் கொண்டு அழத் தொடங்கிய நேரத்தில் இருவரும் செய்தியைப் பார்த்து விட்டுத் தாங்களும் அழ ஆரம்பித்திருந்தார்கள்.

'இந்தப் புகைப்படத்தில் இருக்கும் அருணாசலம் இந்தியன். பார்-அட்-லாவுக்கு லண்டனில் இந்தியா ஹவுசில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தவன். அடுத்த ஆண்டில் இந்தியாவுக்குச் செல்ல இருக்கும் மன்னர் ஐந்தாம் ஜார்ஜுக்குக் கறுப்புக் கொடி காட்டும் பாவனையில் அப்போதே இயன்றால் துப்பாக்கியால் அவரைச் சுட்டு விடவும் திட்டம் தீட்டிய குற்றத்துக்காகப் பிடிபட்டுக் கப்பலில் அவனுக்குச் சொல்லப்படாத இடத்துக்கு அழைத்துச் செல்லப்பட்ட போது தப்பி ஓட முயன்று துப்பாக்கியால் சுடப்பட்டுக் கடலில் மூழ்கி இறந்தான். இவனைப் போன்றவர்கள் பற்றிய தகவல்களை இங்கிலாந்து அரசுக்குக் கொடுப்பவர்க்குத் தக்க சம்மானம் வழங்கப்படும்.

மூவரின் மவுனமான அழுகையில் கன

மான சில நிமிடங்கள் கழிந்த பிறகு, "அம்மாவுக்கு இது தெரியவே கூடாது..." என்றார் ராஜாராமன்.

"நிரந்தரமா எப்படிப்பா மறைக்க முடியும்? அம்மாவுக்கு இல்லாத பொல்லாத சந்தேகமெல்லாம் வருமேப்பா?" என்றாள் அமராவதி.

"அது வரச்சே வரட்டும். அது வரைக்கும் நாம பொய் சொல்லிச் சமாளிச்சிண்டிருக்க வேண்டியதுதான்."

இரண்டு நாட்கள் சென்றன. பாமாவுக்குப் பொழுது போகவில்லை. பழைய தமிழ்க் கதைப் புத்தகம் ஏதாவது கிடைக்கிறதா என்று தேடி, விக்கிரமாதித்தன் கதைப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு கூடத்துக்குப் போய்ச் சுவரில் சாய்ந்து உட்கார்ந்து கால்களை நீட்டிக் கொண்டு அதைப் பிரித்தாள். பிரிந்து கொண்ட பக்கத்தில் இருந்து அந்த லண்டன் ஆங்கில நாளிதழின் கத்தரித்து மடிக்கப்பட்ட பக்கம் விழுந்தது.

'அட, அருண் மாதிரி இருக்கானே இந்தப் பையன்?" என்று வாய் விட்டுச் சொல்லிக் கொண்டே புகைப்படத்தின் கீழே அச்சாகி இருந்த செய்தியை எழுத்துக் கூட்டிப் படித்தாள்.

பாமாவுக்குள் ஒரு படபடப்புத் தோன்றி அதன் தீவிரம் வினாடிக்கு வினாடி அதிகரித்துக் கொண்டே போயிற்று. மண்டைக்குள் சுருசுருவென்று ஒரு குடைச்சல் உண்டாயிற்று. வேர்க்கவும் தொடங்கிற்று.

'அருண், அருண்! என் கண்ணே... என் தங்கமே...' என்று அரற்றத் தொடங்கிய அடுத்த நொடியில் பாமாவின் தலை சரிந்தது. அவள் கையில் பற்றியிருந்த லண்டன் நாளிதழ் நழுவியது.

## 33

இரண்டு மாதங்களில் ராஜாராமன் பாதி உடம்பாகி விட்டிருந்தார். வேலைக்காரி தங்கம் தம்மோடு தொலை பேசி தொடர்பு கொண்டு பாமா விழுந்து கிடப்பது பற்றிய தகவலைச் சொன்னது; வீடு திரும்பிய தாம் அவளது மயக்கத்துக்கான காரணத்தை அறிந்தது; பிறகு மனநிலை முற்றும் சரி இல்லாது போய்விட்ட அவளை மனநல மருத்துவ விடுதியில் சேர்த்தது... எல்லாம் வரிசையாக அவர் நினைவில் நிழற்படங்களாய் வந்தன.

நல்ல வேளையாக அமராவதிக்குத் தேர்வு முடிந்து கல்லூரி மூடப்பட்டிருந்தது. இதனால் வீட்டை நிர்வகிப்பதில் அஞ்சனாவும் அவளும் பங்கேற்க முடிந்தது. வாரந்தோறும் மூவரும் ஞாயிற்றுக் கிழமைகளில் மருத்துவ விடுதிக்குப் போய் பாமாவைப் பார்த்து வந்தார்கள். நாளுக்கு நாள் அவளது சிரிப்பும் அழுகையும் அதிகமாகிக் கொண்டிருந்தனவே தவிர, முன்னேற்றத்துக்கான எந்த அறிகுறியும் இல்லை. 'தெளிவது ரொம்பக் கஷ்டம்' என்று சொல்லிவிட்டார்கள்.

அந்த வீடே களை இழந்து விட்டிருந்தது. எல்லோரும் நடைப்பிணங்களாய் வளையவந்தனர்.

ஒரு நாள் இரவில், "அஞ்சனா! உங்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும். ஆனா எப்படி வாய்விட்டுச் சொல்றதுன்னு தெரியல்லே. அதனால இந்த லெட்டர்ல எல்லாத்தையும் எழுதி வெச்சிருக்கேன். படிச்சுப் பாரு...." என்ற அமராவதி தன் தலையணைக்கு அடியிலிருந்து நான்காக மடிக்கப்பட்டிருந்த காகிதம் ஒன்றை எடுத்து அவளிடம் கொடுத்தாள்.

அஞ்சனா திகைப்புடன் அதைப் பெற்றுக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள்.

"என் எதிர்ல படிக்காதே. உன் ரூமுக்குப் போய்ப்படி...."

அஞ்சனா எழுந்து போனாள்.

"அன்புள்ள அஞ்சனா,

"இந்தக் கடிதத்தை எப்படித் தொடங்குவது என்றே தெரியவில்லை. அம்மாவுக்குப் பைத்தியம் பிடித்து அவர் மருத்துவ விடுதியில் நிரந்தரமாக இருக்க நேர்ந்துள்ளது என்னால் அவளுக்கு விளைவதற்கு இருந்த துன்பத்திலிருந்து ஒரு தப்புதலாக இருக்கப் போகிறது என்பதை நினைக்கும் போது ஒரு வகையில் ஆறுதலாகத்தான் இருக்கிறது. அஞ்சனா! எனது நிலையை எப்படி உனக்கு விளக்குவதென்றே தெரியவில்லை.

**"தொகுதியைச் சுற்றிப் பார்த்திட்டு வந்த நம்ம அமைச்சர், மக்கள் கொடுத்த மனுக்களை உடனே பைசல் பண்ணிட்டார்!"**

**"ஆச்சர்யமாயிருக்கே! எப்படி சாதிச்சார்?"**

**"மனுக்களை பழைய பேப்பர்க்காரன் கிட்ட போட்டுட்டார்!"**

**— சோம. முத்துக்குமார்**



வார்த்தைகளுக்காகத் திண்டாடுகிறேன். ஒரே வரியில் சொல்ல வேண்டுமாயின், நான் இப்போது கர்ப்பமாக இருக்கிறேன்....."

அஞ்சனா சவுக்கடி வாங்கியவள் மாதிரி நிமிர்ந்து உட்கார்ந்து நிலைகுத்திப் போனாள். அவளுக்குப் புரிந்து போயிற்று. ஆவலுடனும் கவலையுடனும் மேற்கொண்டு படித்தாள் :

"தப்பு என் மேல்தான். நரேன் புறப்படுவதற்கிருந்த நாளுக்கு முந்திய இரவில் அவருடன் தனிமையில் இருக்க விரும்பி நான் அவரது அறைக்குப் போனேன்.

"பிரிவாற்றாமையால் குமுறி அழுத என்னைச் சமாதானப்படுத்தும் முயற்சியில் அவர் என்னைத் தொட நேர்ந்தது. அந்த நெகிழ்ச்சியில் நாங்கள் மனம், அறிவு இரண்டுக்குமிடையிலான போராட்டமே இன்றி ஒருவரை மற்றவர்க்கு இழந்தோம் என்பதே உண்மை. உண்மை எதுவானாலும், தவறு என்பதாய் இதனை மதிப்பிட்டால், அதன் முழுப் பொறுப்பும் என்னுடையதே.

"எப்படியோ, நேரக்கூடாதது, தப்பானது என்றெல்லாம் இந்த உலகம் நெறிப்படுத்தி வைத்திருப்பது நிகழ்ந்து விட்டது. அதை உலகுக்குத் தெரியாமல் அழிக்க நான் விரும்பவில்லை. நரேனின் குழந்தையைச் சுமக்க நேர்ந்ததைப் பெறற்கரிய பேறாகவே நான் கருதுகிறேன் - உலகம் என்ன சொன்னாலும் சரி. மேலும், இது தவறு என்பதன் கீழ் வந்தாலும், அந்தத் தவறுக்கு எந்த வகையிலும் சம்பந்தப்படாத ஓர் இளங்குருத்தை அபவாதத்திலிருந்து நான் தப்புவதன் பொருட்டு அழிப்பது எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் நியாயமானதாக எனக்குப் படவில்லை...."

அஞ்சனா சிலிர்த்துக் கொண்டாள்.

"எனது அடுத்த பிரச்னை அப்பாவிடம் இதை எப்படிச் சொல்லப் போகிறேன் என்பதே. அப்பா எப்படி இதை எடுத்துக் கொள்ளுவார் என்பதோ எந்த அளவுக்குப் பாதிக்கப்படுவார் என்பதோ எனது ஊகிக்கும் திறனுக்கு அப்பாற்பட்டதாக உள்ளது. அந்தப் பொறுப்பை உன்னிடமே விடலாம் என நினைக்கிறேன்.

"என்னைப் பற்றி நீ இழிவாக நினைக்க மாட்டாய் என்றே நம்புகிறேன். உன் உதவி கிடைக்கும் என்றும் எதிர்பார்க்கிறேன். உன் எண்ணங்களை நீ மனம் விட்டு என்னிடம் கூறலாம். என்னை நீ கண்டித்தாலும் நான் தவறாக எண்ண மாட்டேன். ஆனால் எனது முடிவில் மட்டும் எந்த மாற்றமும் இராது...."

கடிதத்தை அஞ்சனா திரும்பவும் ஒரு முறை படித்தாள். படித்து முடித்ததும் அன்றொரு நாள் ஒரு பள்ளிக்கூடத்தில் அறைக்குள் இருட்டில் கதவு தாழிடப்பட்ட நிலையில் ராமசாமியும் தானும் அமர்ந்திருந்த காட்சி அவளது நினைவுத் திரையில் நகர்ந்தது. 'ஒரு வேளை அமராவதி மாதிரியோ அல்லது வேறு வகையிலோ நான் தவறி இருந்தால், இருட்டின் துணையில், தனிமையின் பலவீனத்தில் அவரும் தவறிழைத்திருப்பாரோ?' என்ற கேள்வி அவளுள் எழுந்தது. ஆனால் அக்கேள்வி எழுந்த மறுகணமே அவள், 'ராமசாமி அப்படிப்பட்டவரே இல்லை. அதற்காக நரேன் குறையுள்ளவன் என்று ஆகாது. அவர்கள் இருவரும் காதலர்கள். பிரியப்போகிற தருணத்தின் மனச்சுமையில் இருந்த நேரத்தில் அப்படி நடந்து விட்டது. அதையும் இதையும் ஒப்பிடுவதே தவறு. மேலும் ராமசாமி மணமானவர்....' என்று எண்ணி சமாதானமடைந்தாள்.

அவள் திரும்பி வந்து அமராவதியின் அருகே படுத்துக் கொண்டாள்.

"எல்லாம் நான் பார்த்துக்கறேன். நீ கவலைப்படாதே, அமராவதி..."

இருவரும் வெகு நேரம் வரையில் உறங்கவில்லை. பேசிக் கொள்ளவும் இல்லை. ஆனாலும் மனங்கள் விழித்திருந்த நிலையில் தத்தமக்குள் பேசிக் கொண்டிருந்தன.

மறுநாளே அஞ்சனா ராஜாராமனைத் தனியாகச் சந்தித்தாள்.

"அப்பா! உங்ககிட்ட ஒரு முக்கியமான விஷயம் சொல்லணும். கொஞ்சம் அதிர்ச்சியான விஷயம்..."

"இனிமே எந்த அதிர்ச்சியும் என்னை எதுவும் பண்ணாதும்மா. சொல்லு. மலையையே முழுங்கிட்டு உக்காந்துண்டிருக்கேன். கடப்பாரை ஒரு பெரிய விஷயமா என்ன?" என்று கேட்டு விட்டு ராஜாராமன் கைப்புடன் சிரித்தார்.

அஞ்சனா சில நொடிகளுக்கு மௌனமாக இருந்தாள்.

(தொடரும்)

• விஞ்ஞான மேதையான தாமஸ் ஆல்வா எடிசனின் மனைவி, "நீங்கள் ஓய்வு ஒழிவு இல்லாமல் வேலை பார்த்து விட்டீர்கள். எந்த இடத்திலிருந்தால் இந்த உலகத்தையே மறந்துவிட முடியுமோ அங்கே நாம் போகலாம்" என்றாள். "சரி, நாளை போகலாம்" என்றார் எடிசன்.

மறுநாள் காலை அவர் தமது ரசாயன சாலைக்கே திரும்பிவிட்டார்

'ஹஹ்ஹா...ஹோ...ஹோ...' நூலிலிருந்து
— ஆர். பிரகாஷ்.

**டிரஸ்ட் ப்ளஸ்** எனில்

60 நிமிடங்களில் பணத்தைத் திருப்பித் தரும் சேவை



## INVITES DEPOSITS

Fixed Deposits will be accepted at the following rates of interest and subject to the terms and conditions as indicated in the form of application of deposit available at the administrative Office and other branch offices of the Company

### DEPOSIT SCHEMES

| CUMULATIVE DEPOSIT SCHEME | | | FIXED DEPOSIT SCHEME | |
|---|---|---|---|---|
| Period in Months | For Rs. 1000 Deposit Amount Payable on Maturity | Effective Annual Yield | Period in Months | Rate of Interest per annum Monthly Quarterly |
| 12 Months & 1 Day | Rs. 1150/ | 15.00% | 12 Months & 1 Day | |
| 24 Months & 1 Day | Rs. 1321/ | 16.05% | 24Months & 1 Day | |
| 36 Months | Rs. 1518/- | 17.27% | 36 Months | |
| 48 Months | Rs. 1745/ | 18.63% | 48 Months | 14% 14.16% |
| 60 Months | Rs. 2006/ | 20.12% | 60 Months | |

| RECURRING DEPOSIT SCHEME (Minimum Rs. 500/-) | | | |
|---|---|---|---|
| Period in Months | Rate of Interest Per Annum | Maturity Value (for Rs. 500) | For Every Additional Rs. 100/ |
| 12 Months & 1 Day | | Rs. 6480/ | Rs. 1296/ |
| 24 Months & 1 Day | 14% | Rs. 13915/ | Rs. 2783/ |
| 36 Months | | Rs. 22470/- | Rs. 4494/ |

1 Interest warrants payable at par at all branches of SBI

Information required to be specified as per Non-Banking Financial Companies (Reserve Bank) Direction, 1977 and Non Banking Financial Companies and Miscellaneous Non-Banking Financial Companies (Advertisement) Rules, 1977, are given below

A. Name of the Company : The Investment Trust of India Ltd

B. Date of Incorporation : 2nd August 1946

C. Business carried on by the Company and its subsidiaries with details of branches or units, if any

Business : Hire Purchase Financing, Investments, Leasing, Industrial Financing, Mortgage Financing etc

Subsidiary : I.T.I. Pioneer AMC Ltd. And I.T.I. Capital Markets Ltd

Branches : Refer to Head Office

D. Brief Particulars of the Management of the Company

The Company is managed by the Managing Director under the supervision, direction and control of the Board of Directors

E. Name, address & occupation of the Directors

Mr B.H KOTHARI, Chairman & Managing Director, "Kothari Bagh", 11, Nungambakkam High Road, Madras-600034, Industrialist. Mr. A.L. MUDALIAR, "Avanti", 858, Poonamallee High Road Kilpauk, Madras - 600010, Business Executive & Management Consultant Mr G.K SUNDARAM "Rasakondalu" Circuit House Road, Coimbatore 641 018, Industrialist Mr G CHIDAMBAR 10 A, Janakpuri, 2nd St. Off Velachery Road, Madras 600 032, Former Managing Director-LIC Mr N SRINIVASAN, T-18, Sixth Avenue, Besant Nagar, Madras 600 090, Chartered Accountant Mr SAM GANAPATHI, No. 27, "Ashok Crescent", D.L.F Kudap Enclave, Phase-1, Gurgaon, Haryana 001 Former Chairman of BIFR Mr C.R RAMAKRISHNAN, "Meenakshi" No 4 Sir P.S. Sivaswami Road, Mylapore, Madras 600 004, Former Joint Managing Director of Larsen & Toubro Ltd. Mr M R SHAH, A-23/24, Woodlands Apartments, Peddar Road, Bombay 400 026, Business

"சொல்லும்மா. என்ன சொல்லப் போறே?"

"அமராவதியைப் பத்தின விஷயம்ப்பா."

"நரேன்னாம்மா?"

அஞ்சனா ஆச்சர்யத்துடன் தகப்பனாரை நிமிர்ந்து பார்த்தாள். "எப்படிப்பா ஊகிக்க முடிஞ்சது?"

"என் வயசுக்கும் அனுபவத்துக்கும் கொஞ்சம் மதிப்பு கொடும்மா. நரேன் என்னிடம் விடைபெற்ற போது, அவன் விரல்கள் ஒன்றில் அமராவதியின் மோதிரம் பளபளத்தது. இவள் வேறு புதுசா ஒரு மஞ்சள் கயிற்றைக் கழுத்தில் கட்டிக் கொண்டிருக்கா. அதை என் பார்வையிலேர்ந்து மறைக்க தலைப்பை இழுத்து போர்த்திக்கிறா. ஏதாவது கேட்கலாம்னு பார்த்தா என் கண்களைச் சந்திக்கவே பயந்தவள் போல ஒதுங்கிப் போறா...."

"இந்த லெட்டரைக் கொஞ்சம் பொறுமையாப் படிச்சுப் பாருங்கோப்பா. வாய்விட்டு எங்கிட்டப் பேச முடியாம அமராவதி எழுதிக்குடுத்த லெட்டர்...."

அவர் அதை வாங்கி கண்ணாடியை எடுத்து மாட்டிக் கொண்டு படிக்கலானார்....

படித்துவிட்டு அதை மடித்து அவளிடம் திருப்பிக் கொடுத்த அவர், "உங்கம்மா மகா புத்திசாலி. அன்னிக்கே எங்கிட்ட எச்சரிக்கை பண்ணினா.... நரேனும் அமராவதியும் காதலர்கள் என்கிறதை என்னால தாங்கிக்க முடியல்லேன்னு மட்டும் நெனச்சுடாதே, அஞ்சனா. உனக்குத் தெரியும் - எனக்குச் சாதி, மதம், மாகாணம், மொழி இதெல்லாம் விதிக்கிற பேதங்கள்ள துளிக்கூட நம்பிக்கையே கிடையாது. ஆனா, எந்த நேரமும் தூக்குல தொங்கப் போற ஒருத்தன் கிட்ட.. இப்படி.. இனிமே நரேனைச் சந்திக்கிறதுக்கான வாய்ப்புக் கூட நமக்குக் கிடைக்காம போகலாம்...." என்றவாறு விம்மினார்.

"வருத்தப்படாதீங்கோப்பா."

"இதுக்கு மேல வருத்தப்படவே ஒண்ணும் இல்லே, அஞ்சனா. அத்தனை பட்டாச்சு. நீயே பார்த்து என்ன செய்யணுமோ செய்" என்றார் ராஜாராமன் விரக்தியாக.

"அமராவதியை அழைச்சுண்டு வேறே ஊருக்குப் போய், கொஞ்ச நாள் இருந்துட்டு வரலாமா அப்பா?"

"திரும்பி இங்கேதானே வந்தாகணும் அஞ்சனா? வெளியே தெரியாமல் போயிடுமா? இல்லே, ஊர் வாயை மூடித்தான் வைக்க முடியுமா? தப்போ சரியோ நடந்தது நடந்துடுத்து. கஷ்டமோ நஷ்டமோ சந்திக்க வேண்டியதுதான்."

அஞ்சனாவுக்கும் அவர் சொல்வது சரியென்றே பட்டது. 'எப்படிச் சமாளிக்கப் போகிறோம்' என்ற திகைப்பு ஒருபுறமிருந்தாலும் அமராவதிக்குக் குழந்தை பிறந்து, அதைக் கையிலெடுத்துக் கொஞ்சப் போகிறோம் என்று எண்ணிய போது ஒரு பரவசக் கிளுகிளுப்பும் ஏற்பட்டது!

## 34

ராஜாராமனின் மகன் வெள்ளையரால் சுடப்பட்டு இறந்து போனதையும் அதனால் அவர் மனைவிக்கு மூளை பிசகிவிட்டதையும் அவரிடமிருந்து அறிந்து வருந்திய சிவப்பிரகாசம் இப்போதெல்லாம் அடிக்கடி அவரைச் சந்தித்து வந்தான்.

தூத்துக்குடியில் வெள்ளைக்காரனுக்கு எதிராய்ச் சுதேசிக் கப்பலோட்டி அவனது சதியால் பலத்த இழப்புக்கும் இன்னலுக்கும் உள்ளாகித் தற்போது சிறையில் வாடும் வ. உ. சிதம்பரனாரின் நண்பர்களால் நடத்தப்பட்டு வந்த பாரதமாதா சங்கத்தில் அவன் உறுப்பினராய்ச் சேர்ந்திருந்தான்.

"என்ன, சார்? எப்படி இருக்கீங்க?" என்றவாறு எதிரே வந்து உட்கார்ந்த சிவப்பிரகாசத்தை அவர் புன்னகையுடன் ஏறிட்டார்.

"இருக்கேம்ப்பா. நீ தூத்துக்குடி போற விஷயம் என்னாச்சு?"

"அதைச் சொல்றதுக்குத்தான் சார் முக்கியமா வந்தேன். இன்னிக்கு கிளம்பறேன். பாரதமாதா சங்கத்து ரகசியக் கூட்டத்துக்குப போறேன்கிறது என் தம்பிக்குத் தெரியாது, சார். நீங்க யாரையோ பார்த்துப் பணம் வசூல் பண்ணிட்டு வாறதுக்காக அனுப்...

ஜோதிர்லதா கிரிஜா




"தூத்துக்குடியில் ஆங்கில அரசாங்கத்துக்கு எதிராக நடந்த பாரதமாதா சங்கம் எனும் அமைப்பின் ரகசியக் கூட்டம் வளைத்துப் பிடிக்கப் பட்டது. தப்பி ஓட முயன்ற போது ஆறு பேர் சுடப்பட் டனர். அவர்களுள் காவல் துறையைச் சேர்ந்த புலனாய் வுத் துறை அலுவலக ஊழியன் சிவப்பிரகாசம் என்பவனும் ஒருவன். இவன்தான் உண் மைப் பெயரை மறைத்து, மாணிக்கவாசகம் என்ற பெய ரில் மாறுவேடத்தில் இருந் தான். தேசபக்தியின் பெயரி லான தீவிரவாதம் காவல் துறைக்குள்ளேயும் ஊடுருவி யுள்ள புதிய தகவலால் அரசு அதிர்ந்து போயிருக்கிறது. இதனை முளையிலேயே நசுக்காவிட்டால் விபரீதம் விளையும் என்பதால் அரசு இன்னும் கவனமான நடவடிக் கைகளை மேற்கொள்ளத் தீர் மானித்துள்ளது.

"பாரதமாதா சங்கம் எனும் இச்சங்கத்துக்கு நாடு முழுவ தும் உறுப்பினர்கள் என்று தெரிய வந்துள்ளது. தூத்துக் குடியில் உள்ளது ஒரு கிளை தான் என்றும் தெரிகிறது. இவர்கள் துர்க்கை எனும் பெண் கடவுளை பவானி எனும் பெயரால் வழிபடுபவர்கள். பவானி சிலைக்கு முன்னால் தாங்கள் மேற்கொள் ளும் காரியத்தை விவரித்துச் சூளுரைத்து அவரவர் உடலிலிருந்து இரத்தம் எடுத்து நெற்றியில் பூசிக் கொள்ளுகிற அளவுக்கு இவர்கள் தீவிரவாதிகள் என்பதும் இவர் களிடமிருந்து கைப்பற்றப்பட்ட அறிக்கை கள், அச்சடித்த சிறு ஏடுகள் ஆகியவற்றி லிருந்து தெரிய வந்துள்ளது.

"மாறு வேடத்தில் இருந்த சிவப்பிரகாசம் அதே இலாகாவைச் சேர்ந்த அவனுடைய தம்பி ஞானப்பிரகாசத்தாலேயே சுடப் பட்டான் என்பதை விதி என்பதா இல்லை அதுதான் நியாயம் என்பதா? சுடப்பட்ட பின் உயிர் பிரிவதற்கு முன்னால் தான் யார் என்பதைச் சிவப்பிரகாசம் வெளிப்படுத்த, அவனைச் சுட்டுவிட்ட ஞானப்பிரகாசம் அதிர்ந்து போனான். அண்ணன் இறந்த தும் தானும் தனது நெற்றிப் பொட்டில்

நீங்கன்னு சொல்லி வெச்சிருக்கேன்."

''சரிப்பா.... போயிட்டுப் பத்திரமா வா.''

"இது நான் கலந்துக்கற அவங்களோட முதல் ரகசியக் கூட்டம். போலீஸ்காரனான என்னைச் சேர்த்துக்க ஆரம்பத்துல ரொம்ப வும் தயங்கினாங்க."

''அதுல ஆச்சர்யப்பட ஒண்ணுமில் லியே, சிவப்பிரகாசம். ஆனா நீ உன் உழைப் பால அவங்களோட மதிப்பையும் மரியா தையையும் ரொம்ப சீக்கிரம் அடைஞ்சு டுவே!''

**வா**ழ்த்தி அனுப்பிய ராஜாராமன், மறுநாள் மாலை ஆங்கில நாளிதழில் சிவப் பிரகாசத்தைப் பற்றிய அந்த அதிர்ச்சியான செய்தியைப் படித்து பதறிப் போனார்.

சுட்டுக் கொண்டு அந்த இடத்திலேயே மாண்டான்...."

படித்ததையே திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டு ராஜாராமன் சிலையாக அமர்ந்திருந்தார்.

**(மணிக்கொடி முதல் பாகம் முற்றிற்று.)**

இரண்டாம் பாகம்

# 35

**'எஸ்.** எஸ். மகாராஜா' எனும் அந்தக் கப்பலில் பயணம் செய்த அந்த ஒற்றைக் கைதிக்குள் பொங்கிய உணர்ச்சிகள் விவரிக்க இயலாதவை. அவனது பார்வை இங்குமங்கும் சுற்றிச் சுழன்று கொண்டே இருந்தது. அவனது தாங்க முடியாத பரபரப்புக்குக் காரணம், அந்தக் கப்பல் அப்போது நங்கூரம் பாய்ச்சி நின்றது சென்னைத் துறைமுகத்தில் என்பதுதான்!

"என்ன சுற்றிச் சுற்றிப் பார்க்கிறாய்?" என்று பக்கத்தில் நின்றிருந்த மற்றொரு கைதி வினவ, "இங்கே மதராசில்தான் என் நண்பர்கள் இருக்கிறார்கள். தற்செயலாய்க் கண்ணில்படுகிறார்களா என்றுதான் பார்க்கிறேன். அது வீண் ஆசை என்பதை நான் அறிவேன். இருந்தாலும் ஆவலையும் ஏக்கத்தையும் அடக்கிக் கொள்ள முடியவில்லை, மல்ஹோத்ரா!" என்றான் அவன்.

"நீ ரொம்பவும் ஆழமானவன், நரேன். நண்பர்கள் என்று சொன்னவர்களில் ஒரு பெண் நிச்சயமாக இருக்கிறாள் என்று நினைக்கிறேன். அப்படித்தானே?"

"அப்படித்தான் வைத்துக் கொள். கப்பல் எப்போது புறப்படும்?"

"இன்னும் மூன்று மணி நேரத்துக்கு மேல் இருக்கிறது, நரேன்."

இத்தனை ஆண்டுகளாகச் சென்னைக்கு வர முடியாமற் போன ஏமாற்றத்தை விடவும் சென்னைத் துறைமுகத்தில் கப்பலில் இருந்தபடி யாரையும் சந்திக்க முடியாமல் போக வேண்டியுள்ள ஏமாற்றம் அதிகக் கொடுமையாக அவனுக்குத் தோன்றியது.

"உனக்கு இடக்கை வெட்டுப்பட்ட விஷயம் உன் நண்பர்களுக்குத் தெரியுமா, நரேன்?"

"தெரியும். கடிதம் எழுதித் தெரிவித்து விட்டேன்."

"சென்னையிலிருந்து நீ புறப்பட்டு வந்து பதினேழு ஆண்டுகள் ஆகப் போகின்றன. அவர்கள் வாழ்க்கையில் ஏதேனும் மாற்றங்கள் ஏற்பட்டிருப்பின் அவை உனக்குத் தெரிய வழி இல்லையே, நரேன்? ஹார்டிஞ்ச் குண்டெறி வழக்கில் தலைக்கு ஏழு ஆண்டுகள் சிறைத் தண்டனை பெற்று அலிப்பூர்ச் சிறையில் இருந்தோம். அங்கிருந்து தப்பிய பின், மறுபடியும் காகோரி மெயில் கொள்ளையில் சம்பந்தப்பட்டதால் இப்போது அந்தமானுக்குக் கடத்தப்பட்டுக் கொண்டிருக்கிறோம்..."

"சரி, அதற்கென்ன? நீ பேசுவது புரியவில்லை. விண்டு பேசு, மல்ஹோத்ரா."

"இத்தனை ஆண்டு இடைவெளியில் அவள் வாழ்க்கையில் ஒரு மாற்றமோ திருப்பமோ ஏற்பட்டிருந்தால்? அதாவது, அவளுக்குத் திருமணம் ஆகி இருந்தால்?"

யாரோ ஒரு சட்டித் தணலை எடுத்துத் தனது வெற்று மார்பில் கொட்டி விட்டாற் போல் அவன் துடித்துப் போனான்.

"அப்படி ஒருபோதும் நடந்திருக்காது, மல்ஹோத்ரா. நீ அவளை யறிய மாட்டாய். ஒருவேளை அப்படி ஒரு கட்டாயம் ஏற்பட்டிருந்தால், உயிரை விட்டிருப்பாளே தவிர, இன்னொருவனை மனத்தாலும் நினைக்க மாட்டாள்!"

மல்ஹோத்ரா பதில் சொல்லவில்லை. சற்றுப் பொறுத்து, "நீ நினைப்பது சரியாக இருந்தால் எனக்கும் மகிழ்ச்சிதான்" என்றான்.

கப்பலில் கைதிகளுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த சிற்றறையில் இருந்தபடி இருவரும் வெளியே வேடிக்கை பார்த்தார்கள்...

**அ**ப்போதுதான் அந்த

அற்புதம் நிகழ்ந்தது. கல்லூரி மாணவர்களும் மாணவிகளுமாய்ச் சிலர் தங்கள் ஆசிரியர், ஆசிரியையுடன் கப்பலுக்குள் புகுந்தார்கள். கப்பலுக்குள் நுழைந்து பார்க்க வேண்டும் என்பது அவர்களது நெடுநாள் அவா. மூன்று மாதங்களுக்கு ஒருமுறை இப்படி வெளியே சென்று எதையேனும் வேடிக்கை பார்ப்பதை அந்த வகுப்பினர் வழக்கமாய்க் கொண்டிருந்தார்கள். இன்று அவர்கள் கப்பலைத் தேர்ந்தெடுத்தது நரேந்திரநாத் பானர்ஜியின் பெரும் பேறுதான்.

கைதிகள் இருந்த சிற்றறை வெளியே பூட்டப்பட்டிருந்தது. ஆனால் அவ்வறையில் இரண்டு சாளரங்கள் இருந்தன. ஒன்று கப்பலின் உட்புறம் பார்க்க வசதியாகவும் மற்றொன்று கடல் பக்கம் வெளியே பார்க்க வசதியாகவும் இருந்தது. மாணவ மாணவிகளின் சிரிப்பும் கும்மாளமும் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

அறைக்கு வெளியே தற்செயலாக அந்தப் பக்கம் வந்த காவலாள், மாணவ மாணவிகள் அவ்வறைக்குள் நோக்குவதைக் கண்டு, "அவர்கள் அரசாங்க விருந்தாளிகள். அந்தமானுக்குப் போகிறார்கள் சுதந்திரம் வாங்க!" என்று கிண்டலாய்ச் சொல்லி விட்டு அப்பால் நகர்ந்தான்.

ஆர்வம் காட்டாமல் ஏனைய மாணவ மாணவிகள் நகர, பவித்திரா, தனக்கு அருகே இருந்த கங்காதரனிடம் மெதுவாக, "எட்டிப் பார்க்கலாமா, கங்கா? இவர்கள் சுதந்திரப் போராட்ட வீரர்கள் எனில் வணக்கம் செலுத்த விரும்புகிறேன்" என்றாள்.

உள்ளே எட்டிப் பார்த்து இருவரும் கைதிகளை நோக்கிக் கும்பிட்டார்கள்.

"என்னால் இவர்களைப் போல் கும்பிட முடியாது. ஏனெனில் எனக்கு ஒரு கை இல்லை," என்ற நரேந்திரநாத் பானர்ஜியைப் பவித்திரா வியப்பு, அதிர்ச்சி, மகிழ்ச்சி ஆகியவை ததும்பிய விழிகளால் ஏறிட்டாள்.

மெதுவான குரலில், "உங்கள் பெயர் நரேந்திரநாத் பானர்ஜியா?" என்றாள்.

"ஆமாம். உங்களுக்கு எப்படி என் பெயர் தெரியும்?"

"என்னுடைய அம்மா உங்களைப் பற்றிச் சொல்லி இருக்கிறார்."

"உங்களுடைய அம்மாவா? யார் அது?"

"அமராவதி" என்ற பவித்திரா கலங்கிப் போன விழிகளால் அவனை நோக்கிப் பரவசத்துடன் புன்னகை செய்தாள்.

நரேந்திரநாத் பானர்ஜியின் மயிர்க்கால்கள் குத்திட்டு நிற்கலாயின. அவன் விழிகளில் நீர் திரண்டது.

"ரூம்ல தனியா உக்காந்துண்டு என்னப்பா பண்ணிண்டிருக்கேள்?" என்றபடி அஞ்சனா ராஜாராமனின் அறைக்குள் நுழைந்து அவரது கட்டிலில் உட்கார்ந்தாள்.

"வேறென்னம்மா பண்ணப் போறேன், பேப்பர் படிச்சிண்டிருக்கேன். காந்தி லேட்டஸ்ட்டா என்ன சொல்லியிருக்கார்னு பார்க்கறேன்."

"ஏம்ப்பா? காந்தியால வெள்ளைக்காரனை விரட்ட முடியுமாப்பா? எனக்கென்னமோ நம்பிக்கை வர மாட்டேங்கறது."

"நமக்கு ஆபத்பாந்தவரா வந்திருக்கார், தென் ஆப்பிரிக்காவிலேர்ந்து. எந்த அளவுக்கு ஜெயிக்கப் போறாரோ தெரியல்லே."

"மாண்டலே ஜெயில்லேருந்து விடுதலை ஆகி வந்த திலகர் செத்துப் போயிட்டது நமக்குப் பெரிய நஷ்டம்ப்பா. அவரும் இருந்தா நன்னாருக்கும்."

"நன்னாத்தான் இருக்கும்! ஏன்னா ரெண்டு பேரும் ரெண்டு துருவங்களா இருந்துண்டு மோதிப்பா. வெள்ளைக்காரனுக்கு இன்னும் குஷிதான். நாம நமக்குள்ளே சண்டை போட்டா அவங்காட்டுல மழை."

"இந்த நாடு கெட்டுக் குட்டிச்சுவரானதே அதனாலதானேப்பா? ஏம்ப்பா? காங்கிரஸ்லயே மிதவாதிகள் தீவிரவாதிகள்னு ரெண்டு கட்சிகள். இது போறாதுன்னு அன்னிபெசன்ட் ஹோம் ரூல் லீக்னு ஒண்ணைத் தொடங்கினாங்க. அதுவும் போறாதுன்னு திலகர் வேற இண்டியன் ஹோம் ரூல் லீக்னு இன்னொண்ணைத் தொடங்கி வெச்சார். இப்படித் தலைக்குத் தலை நாட்டாமை பண்ணிண்டிருந்தா வெள்ளைக்காரனுக்கு இன்னும் நாம மட்டமாத்தானேப்பா போவோம்?"

"அம்மா, அஞ்சனா, நீ சொல்றது ஒரு விதத்துல சரின்னாலும், எப்பவுமே ரெண்டு புத்திசாலிகள் ஒண்ணு சேர மாட்டாம்மா. அது ஒரு மனுஷ மனத்தத்துவம்."

"ஆனா இப்ப ஹோம் ரூல் இயக்கம் இல்லாததுனால காந்தியே சாதிச்சுடுவார்னு நீங்க நம்பறேளாப்பா?"

"அப்படியும் சொல்லிட முடியாதும்மா. இப்ப ஜவாஹர்லால் நேரு இருக்கார். அவருக்கும் காந்திக்கும் நிறைய கருத்து வேறுபாடு இருக்கு...."

"காந்தி மாதிரி அகிம்சை, அகிம்சைன்னுண்டு கிடந்தா சுதந்திரம் இந்த யுகத்துல நடக்கிற காரியமில்லே."

"சிவில் டிஸ்ஒபிடியன்ஸ் மூவ்மென்ட்ங்கிற பொதுஜனச் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கி அகிம்சை வழியிலதான் ஜனங்கள் செயல்படணும்னார். ஜனங்கள் அமைதியான முறையில ஊர்வலம் போனாலும் போலீஸ்காரன் சும்மா இருப்பானா? தடியடிப் பிரயோகம் பண்ணினான். தடியால அடிச்சா ஜனங்கள்தான் கையைக் கட்டிண்டு சும்மா இருப்பாளா? காந்தி சொல்றபடி நடக்கணும்னா - அதாவது ஒருத்தன் அடிச்சாலும் அவனைத் திருப்பி அடிக்காம இருக்கிற அளவுக்குப் பொறுமையா இருக்

கணும்னா - அதுக்கு ஒரு பக்குவம் வேணும். சௌரிசாவ்ராவில ஊர்வலம் போனப்போ ஜனங்கள் சும்மா இருந்தாளோ? இல்லே. திருப்பி அடிச்சா, அடி வாங்கின போலீஸ் காரன் சும்மா இருப்பானா? சுட்டான். ஜனங்கள்ள சிலர் செத்தா, அவங்க துப் பாக்கிகள் காலியாயிடுத்துன்னு தெரிஞ் சதும், ஜனங்கள் என்ன செய்தா? அவா ளைத் துரத்திண்டு ஓடினா. போலீஸ்காரா ஒரு கட்டடத்துக்குள்ள பூந்துண்டு கதவைச் சாத்திண்டா. உடனே இவா அந்தக் கட்ட டத்துக்கே தீ வெச்சுட்டாளே. அதனோட ரிசல்ட்? இருபத்திரண்டு போலீஸ்காரா செத்துப் போனா. 'அமைதியாச் சண்டை போட்றது'ங்கிற வார்த்தைப் பிரயோகமே தப்பு. கடைசியில சட்ட மறுப்பு இயக் கத்தையே நிறுத்தி வெச்சுட்டதா காந்திஜி அறிவிக்கும்படி ஆச்சு. தக்க நேரத்துல மறு படியும் தொடங்குவேன்னும் அறிக்கை விட்டார்... இந்த இடைக்காலத்துல அது பத்தி நிறையப் பிரசாரம் பண்றார். சமூகக் கேடுகள் பத்தியும் பிரசாரம் பண்ணிண் டிருக்கார்; எழுதறார்."

அப்போது தொலைபேசி மணிய டிக்க, அஞ்சனா எழுந்து சென்று பதிலிறுத் தாள்.

"பெரியம்மாவா? நான்தான் பவித்ரா பேசறேன்."

"என்ன, பவித்ரா?"

"நான் போர்ட் ட்ரஸ்ட்லேருந்து பேச றேன். எஸ். எஸ். மகாராஜாங்கிற கப்பலைப் பார்க்கிறதுக்காக எங்க க்ளாஸ் ஸ்டூடென்ட்ஸ், டீச்சர்ஸ் எல்லாருமா இங்க வந்தோம். அப்ப ஒரு அதிசயமான சந்திப்பு நடந்தது. யாரைச் சந்திச்சேன்னு சொல்லு, பார்ப்போம்?"

"யாரைடி?"

"எங்கப்பா! நரேந்திரநாத் பானர்ஜியைப் பார்த்தேன், பெரியம்மா! கப்பல்ல அவரை யும் இன்னும் சில கைதிகளையும் அந்த மானுக்குக் கொண்டு போறா. கப்பல் புறப் பட இன்னும் ரெண்டு மணி நேரம்தான் இருக்கு. அதுக்குள்ள, தாத்தா, நீ, அம்மா மூணு பேரும் கார்ல உடனே வந்தா பார்க் கலாம். அம்மாகிட்ட சொல்லு. உடனே கிளம்புங்கோ!"

"சரிடி, உடனே வரோம்," என்ற அஞ் சனா அமராவதியிடமும் ராஜாராமனிட மும் சேதியைச் சொல்ல, அமராவதி உணர்ச்சிகளின் கொந்தளிப்பில் சிக்குண்டு அரை மயக்கமாய் உட்கார்ந்து போனாள். ராஜாராமன் அவசர அவசரமாக போர்ட் டிரஸ்டில் இருந்த தமது நண்பர் நாராயண அய்யருக்கு அனுமதிக்காக ஃபோன் செய் தார். அடுத்த மூன்றாவது நிமிடத்தில் மூவ ரும் காரில் பறந்தார்கள்.

(தொடரும்)

● மு. பாலகுமார், ஸ்ரீவில்லிபுத்தூர்.

*? இலங்கை பல்கலைக் கழகம் ஒன்று டாக்டர் பட்டம் அளிக்க முன்வந்ததை சந்திரிகா வேண்டாம் என்று மறுத்திருக்கிறாரே?*

! சகட்டுமேனிக்கு வாங்கி அடுக்கிக் கொண்டால் அவருக்கும் நம்ம ஊர் அரசியல்வாதிகளுக்கும் இடையில் வித்தியாசமில்லாமல் போய் விடுமே? அது சரி, தேர்தலில் ஜெயித்ததுமே டாக்டர் பட்டம் என்றால், அந்தப் பல்கலைக் கழகத்துக்கும் நம்ம ஊர் பல்கலைக் கழகங்களுக்கும் வித்தியாச மில்லை போலிருக்கே!

● கே. பாரதி, மணலூர்பேட்டை.

*? சேஷனுக்கு கறுப்புக் கொடி காட்டியதன் மூலம் அ.தி.மு.க. வினர் சாதித்தது என்ன?*

! அந்த ஞாயிறு முழுவதும் மாநகரின் பிரதான நெடுஞ்சாலையில் போக்குவரத்தை ஸ்தம்பிக்கச் செய்து, மக்களின் கழுத்தறுத்தார்களே, போதாதா?



* பனிப்போர்...



# முதல்வர்-கவர்னர் பனிப்போர் முடிவது எப்போது?

● அருண் இளம்பரிதி, திருச்சி.

*? முழுப்பக்க விளம்பரம் என்றாலே முகம் சுளிக்கச் செய்கிற இந்நாளில் ஜே.ஆர்.டி. டாட்டாவுக்கு 29.11.94ல் முழுப்பக்க விளம்பரம் பார்த்ததும் என்ன தோன்றியது?*

! காக்கைகளின் கத்துதல்களுக்கு மத்தியில் குயிலின் கானம் கேட்ட சந்தோஷம் ஏற்பட்டது.

● க. பழனிவேல், உ. நெமிலி.

*? "இன்று தெய்வீக ஆட்சி நடைபெறுவதற்கு மழை பெய்வதே சாட்சி" என்று அறநிலையத்துறை அமைச்சர் பேசியிருப்பது பற்றி?*

! கொலை, கொள்ளைகளும்தாம் ஏராளமாய் நடக்கிறது. அதற்காக சாத்தான் ஆட்சி நடப்பதாகச் சொல்லி விட முடியுமா என்ன!

● எஸ். குமார், காரைக்குடி.

*? எதிர்க்கட்சிகளின் தலையாய கடமை எது?*

! எதிர்ப்பது - அர்த்தமுள்ள விதத்திலும் பொதுமக்களுக்குத் தொல்லை தராத முறையிலும்.

● மு. ரவிச்சந்திரன், சேலம்.

*? "தான் என்ற அகந்தையும் அகம்பாவமும் சேஷனுக்கு அதிகரித்து விட்டது" என ஜெ. அறிக்கையொன்றில் கூறியிருப்பது குறித்து...?*

! ஊனமுற்றோர் நலனுக்கான மாநாட்டில் கூட உலகத் தலைவியாகத் தன்னைக் காட்டிக் கொண்டு, மயன் மாளிகையையும் மலர் தூவிய வரவேற்பையும் எதிர்பார்க்கும் ஜெ., தமக்குப் போட்டியாக அகந்தைக்கு இன்னொருவர் தோன்றுவதை விரும்பவில்லை என்பது தெளிவு.

● முகவை முத்துசாமி, தொண்டி.

*? புரியாத புதிராக தங்களுக்குத் தோன்றுவது எது?*

! தாஜ் ஹோட்டல் தாக்குதலைக் கூட, ஆமோதிக்காவிட்டாலும் புரிந்து கொள்ள முடியும்; ஆந்திரா தேர்தலின் போது வன்முறைகளைக் கூட, விரும்பாவிட்டாலும் புரிந்து கொள்ள முடியும்; ஒருசில மக்களின் உணர்வுகள் தூண்டி விடப்பட்டிருப்பதாக. ஆனால் நாகபுரி டெஸ்டின் போது மேற்கிந்திய அணி மீது பார்வையாளர்கள் கற்களையும் ஆரஞ்சு தோலிகளையும் வீசி அவமதித்ததைப் புரிந்து கொள்ளவே முடியலை. சாமி! அதுவும் மேற்கிந்திய அணி தோற்றுக் கொண்டிருக்கும் போது! இந்த அளவுக்கு நமது பண்பாடு சீரழியக் காரணம் என்ன! யோசிப்போம்.

● எம். ஜெயமுருகன், ரிஷிவந்தியம்.

## 36

**அ**ஞ்சனா காரை அதிகபட்ச விரைவில் ஓட்டிக் கொண்டிருந்தாள். பின்னிருக்கையில் ராஜாராமனுடன் உட்கார்ந்திருந்த அமராவதியின் உணர்ச்சிகள் உலகத்தின் மிகச் சக்தி வாய்ந்த மொழி என்று ஒன்று இருக்குமாயின் அதன் சொற்களுக்குள் கூட அடங்காதவையாக இருந்தன.

"ஏம்பா, அது அவர்தானா, இல்லே, இவ பாட்டுக்கு வேற யாரை யாவது தப்பாப் புரிஞ்சுண்டு கூப்பிட்டுட்டாளா?"

"பதறாதேம்மா. போய்ப் பார்த்தா தன்னால தெரியறது."



# மணிக்கொடி

"அவருக்குச் சாப்பிடறதுககு ஏதாவது எடுத்துண்டு வந்திருக்கலாம். தோணல்லே இல்லே. அவருக்குப் பிடிச்ச வெங்காய அடை தட்டினோம், எடுத்துண்டு வந்திருக்கலாம்."

அஞ்சனாவின் உதடுகள் புன்சிரிப்பால் மேனோக்கி வளைந்தன...

அமராவதி அடையை மறந்தாலும் இன்னொரு முக்கியமான விஷயத்தை மட்டும் மறக்கவில்லை. நரேந்திரநாத்தின் கடிதங்களுக்கெல்லாம் அவ்வப்போது தான் எழுதி வைத்த பதில்கள் அடங்கிய உறையை அவள் எடுத்து வந்திருந்தாள். அவன் விலாசம் தெரியாததால் கடிதங்களைத் தபாலில் அனுப்ப முடியவில்லை. ஆயினும் என்றாவது சந்திக்கும் போது நேரில் தந்து தனது உணர்ச்சிகளையெல்லாம் கொட்டி எழுதியிருந்த கடிதங்களைப் படிக்கச் சொல்லலாம் என்ற எண்ணத்தில் அவற்றைத் தொகுத்து வைத்திருந்தாள். அதை அவனிடம் தர முடியுமா, அனுமதிப்பார்களா என்பதொன்றும் தெரியவில்லை. முயன்று பார்க்கலாமே என்ற ஆசையில் எடுத்து வந்திருந்தாள்.

**க**ப்பலின் நுழைவாயிலில் கங்காதரனுடன் பவித்திரா பரபரப்பே உருவாய் நின்றிருந்தாள். ராஜாராமன் தமது நண்பர் நாராயண அய்யர் உதவியுடன் கப்பல் அதிகாரியை சந்தித்து, நரேந்திரநாத்துடன் சில நிமிஷங்கள் தனிமையில் பேச அனுமதி பெற்றார். அவ்வதிகாரி அச்சிற்றறையில் இருந்த பிற கைதிகளை மற்றொரு சிற்றறைக்கு மாற்றி விட்டு நரேந்திரநாத் மட்டும் அங்கிருக்கப் பணித்தார். ஐந்து பேரும் சன்னல் வழியே நரேந்திரநாத்துடன் பேசினார்கள்.

கன்னத்துத் தழும்பும், நெற்றியின் கீறலும் நரேந்திரநாத் பானர்ஜியின் முகச்சாயலை மாற்றி இருந்தன. ஆனால், தலையில் ஒரு நரை கூட இல்லை.

"நரேன், மை சன், மை டியர் சன்" என்றவாறு உள்ளே கை விட்ட ராஜாராமனை நோக்கிச் சிரித்தபடி அவரது கையைப் பிடித்துக் கொண்ட நரேந்திரநாத், அதை முத்தமிட்டபின், "சன் இல்லே, சார். சன்-இன்-லா" என்று அவரைத் திருத்திச் சிரித்தான். ராஜாராமனால் சிரிக்க முடியவில்லை. சிறு குழந்தை மாதிரி விம்மினார்.

"தமிழை மறக்காம இருக்கேளா?" என்று அஞ்சனா கேட்க, "தமிழை எப்படி மறப்பேன்?" என்ற அவன், ராஜாராமனின் கையை விட்டு விட்டு அஞ்சனாவின் கையை உள்ளே

**ஜோதிர்லதா கிரிஜா**

இழுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டபின் அதை விடுவித்தான்.

"இவன் யாருன்னு பவித்திரா சொன்னாளா?" என்று கங்காதரனைக் காட்டி அஞ்சனா வினவினாள்.

"பவித்திரா! என் மகளின் பெயரா அது? எவ்வளவு அழகான பெயர்! அவளோடு வந்தது சின்னக் குழந்தையாக நான் பார்த்த 'கங்காடமூன்' என்று புரிந்து கொண்டேன்."

அமராவதி துடைக்கத் துடைக்க மேலும் மேலும் பெருகிய கண்ணீரைத் திரும்பத் திரும்பத் துடைத்தபடி நின்றிருந்தாள். அடுத்து அவன் பார்வை ஆழமாக அவள் மீது படிந்ததும், "அப்பா, வாங்கப்பா. அவா ரெண்டு பேரும் கொஞ்ச நேரம் ஃப்ரீயாப் பேசிக்கட்டும்," என்று அஞ்சனா கூறினாள். எல்லாருமே அப்பால் நகர்ந்தனர்.

"அமராவதி மை லவ்! மை ஒன்லி லவ்."

இருவரும் கைகோத்துக் கொண்டு உருகினார்கள்.

"எங்கே, உங்கள் அந்தக் கையைக் காட்டுங்கள்."

முழங்கைக்குக் கீழே துண்டிக்கப்பட்டிருந்த அந்தக் கையை அவன் நீட்டினான்.

"விபத்தில் கை போயிற்று என்று எழுதி இருந்தீர்கள். என்ன விபத்து என்று விவரம் ஏதும் இல்லை."

"நாங்கள் வைத்துள்ள இரகசிய வெடிகுண்டுத் தொழிற்சாலையில் ஒருநாள் ஒரு குண்டு வெடித்து இப்படி ஆகி விட்டது. இன்னொருவனுக்கு இரண்டு கால்களும் போய் விட்டன. ஆனால் அதை எண்ணி வருந்தும் நேரமில்லையே இது. இந்த நிமிஷத்தில் என்னை விட மகிழ்ச்சியானவன் எவனும் இந்த உலகத்தில் இல்லை, அமராவதி. நீயும் அப்படித்தானே?"

"ஆமாம்."

நரேந்திரநாத் பானர்ஜி அவளது கையை அழுத்தினான். அதை முகத்துக்கு எடுத்துச் சென்று கன்னங்களில் தேய்த்துக் கொண்டு கண்ணீர் விட்டான்.

"அமராவதி உனக்கு நான் மிக மிக நன்றி சொல்ல வேண்டும். உன்னைப் பாராட்டவும் வேண்டும்."

"எதற்கு?"

"நம் குழந்தையைப் பெற்று வளர்த்து என்னிடம் காட்டியதற்காக நன்றி. எவ்வளவு அபவாதத்தை நீ ஏற்றுச் சகித்திருப்பாய் என்பது புரிவதால் பாராட்டு. பாவத்தில் பிறந்ததாகக் கருதாமல், 'பவித்ரா' என்று பெயர் சூட்டினாயே அதை எண்ணி எண்ணிப் பெருமிதப்படுகிறேன். அது சரி, அம்மா எங்கே? சந்தடியில் மறந்தே போனேன்."

அவள் சேதியைச் சொன்னதும் நரேந்திரநாத் உடைந்து போனான்.

## மணிக்கொடி - முன்கதை

**சு**தந்திரப் போராட்ட வீரர்களான ராமசாமி – ராஜாராமன் இருவரும் கதையை மாறி மாறிக் கொண்டு போகிறார்கள். ராஜா ராமனின் மூத்த மகன், தனது தீவிரவாத நடவடிக்கைகளால் லண்டனில் இருந்து (படித்துக் கொண்டிருந்தவன்) பிரான்ஸுக்குத் தப்பிப் போய், அங்கு கைது செய்யப்பட்டு இறந்து விடுகிறான். மூத்த மகள் அஞ்சனா, திருமணமாகி, ஒரு குழந்தைக்குத் தகப்பனான, மனைவியை இழந்த ராமசாமியை காதலிக்கிறாள். இளையவளான அமராவதி,

சீக்கிரமே தன்னை தேற்றிக் கொண்டு, "நம் மகள் மிக அழகாக இருக்கிறாள். உன்னைப் போல் நற்குணமுள்ளவளாகவும் தெரிகிறாள்," என்றான். இருக்கிற நேரத்தில் துயரங்களை எண்ணாமல் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ள ஆசைப்பட்டான்.

"உங்களைப் போல் துணிச்சல்காரியும் கூட. கல்லூரிப் படிப்பை நிறுத்தி விட்டு தேச விடுதலை இயக்கத்தில் சேரப் போகிறாளாம்!"

"சபாஷ்! ஆனாலும் புடிப்பை முதலில் முடிக்கட்டும்."

"உங்களின் ஒவ்வொரு கடிதத்துக்கும் அவ்வப்போது நான் எழுதிய பதில்களையெல்லாம் கொண்டு வந்திருக்கிறேன். தரட்டுமா?"

"அதனால் ஆபத்துக்கள் நேரலாம், அமராவதி. அது நியாயமும் இல்லை. நம்மைச் சந்திக்க அனுமதித்த அதிகாரிக்கு அதனால் தொந்தரவு ஏற்படக்கூடும். இப்போது வேண்டாம். பிறிதொரு சந்தர்ப்பம் வாய்க்கவே செய்யும். அப்போது பார்த்துக் கொள்ளலாம்."

"அந்தமான் சிறையில் எத்தனை நாள் இருக்க வேண்டும்?"

"பதினான்கு வருடங்கள்."

"அய்யோ! அதற்குள் நான் கிழவியாகிச் செத்தும் போயிருப்பேன்."

"அப்படியெல்லாம் பேசாதே, அமராவதி. அப்போது, உனக்கு ஐம்பத்தொரு வயதுதான் ஆகி இருக்கும். எனக்கு ஐம்பத்தைந்து ஆகும். இதெல்லாம் ஒரு வயதா?"

"......................"

"பவித்திராவைக் கூப்பிடு அமராவதி. அவளை நான் இன்னும் கொஞ்ச நேரம் பார்த்து அவளது உருவத்தை என் நெஞ்சில் பதித்துக் கொள்ள வேண்டும்."

அவள் கூப்பிட்டதும் பவித்திரா வந்தாள்.

அமராவதியின் கையை விடுவித்து மகளின் கையைப் பற்றி இழுத்துக் கொண்ட

கல்கத்தாவைச் சேர்ந்த தீவிரவாதியான நரேந்திர நாத் பானர்ஜியைக் காதலித்து, திருமணம் முடித்து, ஒரு பெண் குழந்தைக்கும் தாயாகிறாள். இந்நிலையில் நரேந்திரநாத் பானர்ஜி ஆங்கிலேய அரசால் கைதாகிறான். ஒரு கை துண்டிக்கப்பட்ட நிலையில் அந்தமானுக்குச் சிறை செல்லவிருந்தவன், வழியில் சென்னை துறைமுகத்தில் கப்பல் நிற்க, அங்கு கப்பலை வேடிக்கை பார்க்க வந்த பவித்ரா, நரேந்திரநாத் பானர்ஜிதான் தன் தந்தை என்பதைத் தெரிந்து கொண்டு, வீட்டுக்குத் தகவல் தருகிறாள். ராஜாராமன், அஞ்சனா, அமராவதி, யாவரும் பானர்ஜியைக் காண, துறைமுகம் விரைகிறார்கள்.

நரேந்திரநாத் பானர்ஜி, "தேச விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடப் போகிறாயாமே?" என்றான்.

"ஆமாம். உங்கள் மகள் பின் வேறென்ன செய்வாளாம்?"

"அந்தப் பையன் கங்காதரன்?"

"அவரும்தான்."

மகள் கவனிக்காத கணம் பார்த்து இருவரையும் சுட்டிக்காட்டி நரேந்திரநாத், அமராவதியை நோக்கிக் கண்ணடித்தான். அவள் சிரித்தாள். 'இருவரும் காதலிக்கிறார்களா?' என்ற கேள்வியும், 'அப்படித்தான் தோன்றுகிறது' என்ற பதிலும் இருவர் செயல்களிலும் ஊடாடின.

"நேரமாகிறது. நீங்கள் கலைந்து செல்ல வேண்டும் உடனே" என்று வெள்ளைக்கார கப்பல் அதிகாரி அங்கு வந்து தெரிவித்தார்.

# 37

**கா**ரிலிருந்து இறங்கி வீட்டுக்குள் நுழைந்ததும் சோபாவில் பொத்தென்று விழாக்குறையாக உட்கார்ந்த அமராவதி உணர்ச்சிகளின் பிடியில் சிக்கி அழத் தொடங்கினாள்.

"அம்மா, அம்மா, இப்ப எதுக்கும்மா அழறே? இத்தனை வருஷம் பிரிஞ்சிருந்த அப்பாவைச் சந்திக்கிற நாள் வரும்கிற நம்பிக்கையாவது உனக்கு இருந்ததா? இன்னிக்கு நாம் எல்லாரும் அவரைச் சந்திச்சதும் பேசினதும் எவ்வளவு பெரிய அதிருஷ்டம்" என்றபடி அவளுக்கு அருகே நெருங்கி உட்கார்ந்து, கண்ணைத் துடைத்தாள் பவித்திரா.

அமராவதி அழுகையை நிறுத்திக் கண்களைத் துடைத்துக் கொண்டு வேதனையுடன் புன்னகை செய்தாள்.

"நீ சொல்றது சரிதான், பவித்ரா. ஆனா அந்தமான்ல இன்னும் பதினாலு வருஷம் அடைபட்டுக் கிடக்கணுமேங்கிறதை நினைச்சா என்னமோ பண்றது... அவர் பதினாலு வருஷம் கழிச்சு ரிலீஸ் ஆறதுக்குள்ள சுதந்திரம் கிடைச்சுடுமாப்பா?"

ராஜாராமன் சிரித்தார். "அப்படி அதுக்குள்ள கிடைச்சுட்டா, எல்லா அரசியல் கைதிகளையும் உடனடியா விடுதலை பண்ணிடுவாளேம்மா? தண்டனைக் காலம் முடியற வரைக்கும் காத்திண்டிருக்க மாட்டாளே? ஏன்னா அது அப்ப நம்ம சர்க்காரான்னா இருக்கும்?"

"ஏம்ப்பா? நீங்க என்ன நினைக்கிறேள்? இந்தியாவுக்கு எப்ப சுதந்தரம் கிடைக்கும்னு நீங்க நினைக்கிறேள்?" என்றாள் அஞ்சனா.

"காந்தியோட சாத்துவீகச் சட்ட மறுப்புப் போராட்டம், ஒத்துழையாமை இயக்கம் இதுகளோட மதன்லால் திங்ரா, சாவர்க்கர் மாதிரியான ஆட்களோட தீவிரவாத நடவடிக்கைகளும் சேர்ந்தாத்தாம்மா நல்லது. காந்தி மாதிரி ஆட்கள் வெள்ளைக்காரனோட பேசியும் எழுதியும் நாடு நாடாப் பிரயாணம் பண்ணி பிரிட்டனுக்கு எதிரா உலக அபிப்பிராயத்தை உருவாக்கியும் அவாளோட ரத்தம் சிந்தாத வழியில போராடட்டும். இந்தப் புரட்சிக்காரா பாட்டுக்குக் கிடைச்ச சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திண்டு வெள்ளைக்காரனை அடிச்சுப் போட்டும் மிதிச்சுப் போட்டும், 'இனி இந்தியாவில இருக்கிறது ஆபத்துடா. மூட்டை முடிச்சோட ஓடிடறதுதான் நல்லது'ன்னு நினைக்கும்படியான காரியங்கள்ல ஈடுபடட்டும். இப்படி ரெண்டு விதமாவும் தாக்கினா ஒருநாள் அவன் பொறுக்க முடியாம பிச்சுண்டு ஓடத்தான் போறான்."

"ஆனா வன்முறையால அவனை விரட்ட முடியாதுன்னுதானே சரித்திரம் சொல்றது சார்" என்றான் கங்காதரன். எத்தனை எத்தனையோ அரசர்களும், சிற்றரசர்களும், ஏன்? ராணிகளும் கூட, அவனை எதிர்த்துப் போரிட்டிருக்காளே. ஜான்சி ராணி, கிட்டூர் சென்னம்மா, கட்டபொம்மன், மருது சகோதரர்கள், குன்வர் சிங், நானா சாகிப், அஜீமுல்லாகான், ராம் சிங், தத்தியா தோப், பிகாஜி காமா இப்படி எத்தனையோ பேர் இன்னிக்குப் போராடறவாளுக்கு முன்னோடிகளா இருந்திருக்கா, பலன் என்ன? ஒண்ணுமில்லையே!"

"கங்காதரா உனக்கு வாசுதேவ் பல்வந்த் பட்கேயைப் பத்தின சுவாரசியமான கதை தெரியுமோ?"

"என்ன சார்?" என்றான் கங்காதரன் ஆவலுடன்.

"வாசுதேவ் பல்வந்த் பட்கே மகாராஷ்டிர மாகாணத்தைச் சேர்ந்தவன். அரசாங்க உத்தியோகம் பார்த்துண்டிருந்தான். உரிய நேரத்துல மேலதிகாரிகள் - வெள்ளைக்காரா - லீவ் குடுக்காததுனால அவனால தன்னோட அம்மாவை அவளுடைய உயிர் பிரி



''கதாகாலட்சேபம்' பண்ணினவர் இப்போ கச்சேரி பண்ண ஆரம்பிச் சுட்டார்.''

''ஆடியன்ஸுக்கு நடுவில் தட்டு எடுத்து வசூல் பண்ணும்போதே நினைச்சேன்!''

-பரணி

யறதுக்கு முன்னாடி பார்க்க முடியல்லே. அது அவனுக்கு வெள்ளைக்காரா மேல அடக்க முடியாத கோபத்தை உண் டாக்கித்து. அப்புறம் பரோடா மன்னரை வெள்ளைக்காரங்க ஆட்சி பீடத்துலேருந்து சதி பண்ணி இறக்கிட்டதுனால மகாராஷ் டிர மாகாணம் முழுக்க அந்த நேரத்துல ஒரே கொந்தளிப்பில இருந்தது. மோசமான பஞ்சம் வேற அப்ப. பிரிட்டிஷ் அரசாங்கம் பஞ்சத்துல பாதிக்கப்பட்ட ஜனங்களுக்காக எதுவுமே செய்யல்லே. எல்லாமா சேர்ந்து பட்கேக்கு ஆத்திரமூட்டியது. ஐக்கிய வர்த் தினி சபான்னு ஒரு அமைப்பை ஏற்படுத்தி மக்களைச் சந்திச்சு பிரிட்டிஷாருக்கு எதிரா நிறையப் பேரை அணி திரட்டினான். பிரிட் டிஷாருக்கு எதிரா இன்னிக்கு ஆயுதம் ஏந் தற தீவிரவாதிகளுக்கெல்லாம் பட்கேதான் முன்னோடி. கவர்ன்மென்ட் கஜானாக் களைக் கொள்ளையடிச்சுப் பணம் திரட்டி ஒரு படையும் திரட்டிண்டான். பிரிட்டி ஷாரை அப்பப்ப தாக்கினான். கவர்ன் மென்ட் தொடர்பு நிலையங்களையெல்லாம் முடிஞ்சப்பல்லாம் தவிடுபொடியாக்கினான். அவனோட தலைக்கு அரசாங்கம் விலை வெச்சுதுன்னா பார்த்துக்குங்களேன். அவன் பதிலுக்கு என்ன பண்ணினான், தெரி யுமோ?"

"என்ன சார் பண்ணினான்?"

"பம்பாய் கவர்னரைப் பிடிச்சுக் குடுக் கிறவாளுக்கு நானும் பரிசு தருவேன்னு பதி லுக்கு அறிக்கை விட்டான்! அதுல கவர்ன் மென்ட்டையும் பயங்கரமாத் தாக்கி மிரட்டி இருந்தான். கடைசியில அவனைப் பிரிட் டிஷ்காரங்க பிடிச்சுட்டாங்க. அந்தமான்ல சிறை வைக்கிறது கூட ஆபத்துன்னு பயந்து, அவனை ஏடனுக்கு அனுப்பினாங்கன்னா, அவன் மேல வெள்ளைக்காரங்களுக்கு இருந்த பயத்தை நாம ஊகிச்சுக்கலாம். ஏடன்ல ஈவு இரக்கமில்லாத மோசமான நிலையில சிறைவைக்கப்பட்டதால, பட்கே, கடைசியிலே, சாகும் வரை உண்ணாவிரதம் இருந்து 1883 ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் செத்துப் போனான்."

"வருஷம் மாசம், முதற்கொண்டு ஞாபகம் வைச்சிண்டிருந்து சொல்றேளே, சார்! அப்படின்னா எவ்வளவு ஆர்வத் துடிப்பு இருக்கணும் உங்களுக்கு!" என்று கூறியவாறே கங்காதரன் எழுந்தான்.

"என்ன பிரமாதமா சொல்லிட்டேன்? மிஸ்டர் ராமசாமியை விடவா பேசிடப் போறேன்? நான் ரொம்ப விசாரிச்சேன்னு சொல்லு... போன மீட்டிங்ல பார்த்தது. இனி அடுத்த மீட்டிங்லதான் பார்த்துப்போம்..."

"சரி, சார்" என்று கூறி விடைபெற்றான் கங்காதரன்.

பவித்திரா அவனை வழியனுப்பி வைக்க எழுந்து போனாள்.

நடந்து சென்ற இருவரையும் பார்த்தபடி, "ரெண்டு பேரும் நல்ல ஜோடி. இல்லே?" என்றாள் அஞ்சனா மெதுவாக.

"ஆமா, நரேன் கூட எங்கிட்ட கேட்டார் - 'ரெண்டு பேரும் லவ் பண்றாளா'ன்னு. 'அப்படித்தான் தோணறது'ன்னு சொல்லி வெச்சேன். எனக்கு நிச்சயமாத் தெரியல் லேன்னாலும், தனக்கு ஒரு நல்ல பையன் மாப்பிள்ளையா வரப் போறான்கிற சந் தோஷமாவது அவருக்கு அந்தமான் ஜெயில்ல மிஞ்சட்டுமேன்னுதான்" என்றாள் அமராவதி.

(தொடரும்)



''பாடகர் கச்சேரி பண்ணும்போது நடுநடுவில் என்னவோ சொல்றாரே!''

''விளம்பரங்களையும் அவரேதான் சொல்லணும்னு ஸ்பான்ஸர் பண்ற வங்க சொல்லிட்டாங்களாம்!''

- குழல்

● ம. மாரிமுத்து, மதுரை - 3.
*? "மத்திய அரசுக்குத் துணிவிருந்தால் நான் கொடுத்துள்ள அறிக்கைகளின் அடிப்படையில் அ.தி.மு.க. அரசை டிஸ்மிஸ் செய்யட்டும்" என்று தமிழக ஆளுனர் கூறியிருப்பது குறித்து...?*
! கண்ணாடி வீட்டுக்குள்ளிருந்தபடி கல்லெறிய யாருக்குத் துணிச்சல் வரும்? மாநில அரசின் மா ஊழல்களை விட மத்திய அரசின் ஊழல்கள் பிரும்மாண்டமாக இருக்கும் போது, அந்தத் துணிவு வருவது ரொம்பக் கஷ்டம். ஆந்திரா, கர்நாடகா தேர்தல்களில் ஜெயித்திருந்தாலாவது கொஞ்சம் வீரதீரத்தை எதிர்பார்க்கலாம். அதுவும் இல்லையென்று ஆன பிறகு... ஆளுனர் பதவிக்கே ஆபத்து அதிகம்! 'ஜெ'யின் 'சென்னாரெட்டியைத் திரும்ப அழையுங்கள்' கோரிக்கை நிறைவேற்றப்படவே வாய்ப்பு மிகுதி!

● கே. ஆர். சைமன், குலசேகரன்பட்டிணம்.
*? மூன்றாவது டெஸ்ட்டில் இந்தியா தோற்றதற்குக் காரணம் நமது மோசமான போலிங்கா, பேட்டிங்கா?*
! ஏன், மேற்கிந்தியத் தீவுகள் அணியின் 'வெற்றி பெற வேண்டும்' என்ற சங்கல்பத்துடன் கூடிய அபாரமான ஆட்டமாக இருக்கக் கூடாதா, என்ன!

● ஆர். ஜேஸ்மின் ரமேஷ், கம்பம்.
*? "நான் சட்டம் படித்து வழக்கறிஞராக விரும்பினேன்" என்று பள்ளி விழாவில் ஜெயலலிதா பேசியுள்ளாரே?*
! நீதித் துறையின் லாபம்; தமிழகத்தின் நஷ்டம்!

● எஸ். மகேஷ், கர்நால். ❑
*? கர்நாடகத்தில் பி.ஜே.பி. காலூன்றுகிறதே?*
! வேரூன்ற நினைத்தவர்கள் காலூன்றியிருக்கிறார்கள். "நமது தீவிர ஹிந்துத்வக் கொள்கை, முஸ்லிம்களை நமக்கு எதிராக வோட்டளிக்கச் செய்திருக்கிறது" என்று வாஜ்பாயி கட்சிக் கூட்டத்தில் அலசியிருக்கிறார். முஸ்லிம்களை மட்டுமல்ல, ஹிந்துக்களையும் எதிராக வாக்களிக்கச் செய்துள்ளது என்பதுதான் உண்மை. கிராமமோ, பட்டணமோ, இன்று ஹிந்துக்களும், முஸ்லிம்களும் அருகருகே வாழ வேண்டிய நிர்ப்பந்தச் சூழலில், பிளவுகளை வளர்க்கும் கொள்கையை மக்கள் ஆதரிக்கவே மாட்டார்கள். அமைதியாகக் காலம் ஓட்டுவதையே விரும்புவார்கள்.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எஸ். மகேஷ்,
1723, செக்டார் 13,
அர்பன் எஸ்டேட், கர்நால்,
132 001, ஹரியானா.

● ச. ஜான் ரவி, கோவில்பட்டி.
*? போட்டிப் பந்தயங்களைப் பத்திரிகைகள் வெளியிடுவதால் பெருகும் தீமைகளைக் குறித்து அன்றே கவலைப்பட்ட "கல்கி", இன்றைய கல்கி சஞ்சிகையைப் பார்த்தால் என்ன நினைப்பார்?*
! சந்தோஷப்படுவார். காரணம், அவர் எதிர்த்தது கூப்பனுக்குக் கட்டணம் வசூலித்து பகுத்தறிவுப் போட்டி என்ற பெயரில் பணம் பண்ணும் போக்கைத்தான். இன்று அதைவிடக் கேவலமாக, குலுக்கல் முறை போட்டிகள் ஏகமாக நடக்கின்றன. கல்கி கட்டணம் வசூலிப்பதும் இல்லை; லாட்டரி முறையில் பெரும் தொகைகளை, பரிசுகளை வழங்குவதும் இல்லை. கல்கி நடத்தும் போட்டிகள், பொது அறிவைத் தூண்டுவன; மூளைக்கு வேலை கொடுப்பன.

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை.
*? மேற்கிந்திய ஆட்டக்காரர்கள் முறையற்ற வகையில் பந்தெறிந்து நமது வீரர்களைக் காயப்படுத்தியது எந்த வகையில் நியாயம்?*
! வேகப் பந்து வீச்சும் பவுன்ஸர்களும் இன்று கிரிக்கெட்டில் ஒப்புக் கொள்ளப்பட்டவை ஆகிவிட்டன. இதற்காக விசேஷ பாதுகாப்பு உபகரணங்களும் பயன்படுத்தப்படுகின்றன. "குறிப்பிட்ட பந்தைத் தொடாமலிருக்க பாட்டை நகர்த்தி விட்டேன்; ஆனால் மூக்கை நகர்த்திக் கொள்ளத் தவறி விட்டேன்" என்று பிரபாகரே கூறியுள்ளார்.

● அல்யார், சென்னை.
*? முத்தமிழ்க் காவலரின் மும்மொழித் திட்டத்தை வரவேற்கிறீர்களா?*
! 'தமிழ்நாட்டில் தமிழ், பள்ளிகளில் கட்டாயப் பாடமாக வேண்டும்' என்ற அவர் திட்டத்தை நிச்சயம் வரவேற்கிறேன். மறைந்த மேதைக்குப் பாராட்டுக்களை அடுக்கி அஞ்சலி செலுத்தும் அரசியல்வாதிகள், இந்த ஒரு விஷயத்திலாவது ஒற்றுமையாகச் செயல்பட்டு நிறைவேற்றி வைக்கலாம். அல்லாத பட்சத்தில் உதட்டளவில் உருகுவதாகவே இருக்கும்; மனத்தால் அல்ல.


• ...கோதுமை அல்லவா!


• இஞ்சி மொரப்பா...


• எந்தப் பக்கம்?


• லாபமும் நஷ்டமும்!



## மஞ்சு விரட்டு

மனத்தில் நிற்பது திரைக்கதை மட்டுமே.



## அத்தைமக ரத்தினமே

மரத்தைச் சுற்றிப் பாடுவதையும் கரகாட்டத்தையும் இன்னும் எத்தனை படத்தில்தான் பார்ப்பது?



## தி ஜென்டில்மேன்

தமிழிலிருந்த மண் வாசனையை ஹிந்தியில் சுத்தமாக வழித்தெறிந்து விட்டார்கள்.



# 10 மண

கதவைப் பிடித்த படி பவித்திரா கேட்டாள்.

"அப்ப நாளைக்குப் பார்க்கலாமா?"

"உம். இன்னிக்கு உன்னோட வாழ்க்கையில ரொம்ப ரொம்ப சந்தோஷமான நாள், இல்லே?"

"ஆமா. என்னை விட என் பெற்றோருக்குத்தான் இன்னும் அதிக சந்தோஷமா இருந்திருக்கும்."

"உண்மைதான். அப்ப நான் வரட்டுமா?"

"சரி."

கதவைச் சாத்திக் கொண்டு பவித்திரா உள்ளே வந்தாள். வரும்போதே, "பெரிம்மா, தாத்தா ஒரு கதை சொன்னார்; இப்ப நீ சொல்ல வேணும். கொஞ்ச நாளுக்கு முந்தி பூனாவில பரோடா மகாராணி தலைமையில நடந்த அகில இந்திய மாதர் மகாநாட்டில கலந்துண்டியே, என்ன நடந்தது அதுல?"

"இன்னும் கொஞ்ச நாள் கழிச்சுக் கேளுடி!" என்றாள் அமராவதி இடக்காக.

"பொதுவா இந்தியாவில பெண்கள் கொஞ்சங் கூட முன்னேறவே இல்லைங்கிறதைப் பத்தித்தான் எல்லாருமே பேசினோம். ஆனாலும் இருபது இருபத்தஞ்சு வருஷத்துக்கு முந்தி இருந்ததுக்கு இப்ப எவ்வளவோ பரவாயில்லைன்னு நான் பேசினேன். ஆண்களுடைய ஆதிக்கம் யுகம் யுகமா இருந்து வர்ற ஒரு நாட்டிலே அவ்வளவு சீக்கிரமால்லாம் பெண்கள் முன்னேற்றத்தை எதிர்பார்த்துட முடியாதுன்னு சொன்னேன். ஆண்கள் கொஞ்சங் கொஞ்சமாத்தான் மாறுவான்னும் பேசினேன்."

"சரியாத்தான் பேசி இருக்கே..."

"பெண்களுக்குப் பரிஞ்சு காந்தி எழுதற கட்டுரைகள்ளாம் பிரமாதமா இருக்கும்மா, பவித்திரா. நீ அவசியம் படிக்கணும்" என்றாள் அஞ்சனா.

"அவர் வெறும் விடுதலைப் போராட்ட வீரர் மட்டும் இல்லியேம்மா? சமூக சீர்திருத்தவாதியும் ஆச்சே. தீண்டாமை, பெண்ணுரிமை, வரதட்சிணை, பாலிய மணம், கைம்பெண் மறுமணம், கல்வி, மதுவிலக்கு, பர்தாமுறை, பசுவதை, தனி மனித உரிமை, பிரும்மசரியம், ஆரோக்கிய வாழ்க்கைமுறை, வேதங்கள், மதங்கள், இந்து - முஸ்லிம் ஒற்றுமை, மாணவர்கள், போர், பிராமணர் - பிராமணர் அல்லாதாரிடையிலான சண்டை, விஞ்ஞானம், கலை, இலக்கியம், தேவதாசிகள், தொழுநோய், இன்னும் எத்தனையோ தலைப்புக்கள்ளே யங் இண்டியாங்கிற பத்திரிகையில தொடர்ந்து கட்டுரைகள் எழுதியிருக்கார்ம்மா. இன்னும் எழுதறார். அந்தக் கட்டுரைகள்ளாம் அவர் பேச்சுக்கு மறு பேச்சே இல்லைங்கிற மாதிரி படிக்கிறவாளுக்குத் தோணக்கூடிய வகையில எழுதப்பட்ட கட்டுரைகள். அவருக்கு இருக்கிற சிந்தனைகளையும் எழுத்து வேகத்தையும் பார்க்கிறப்ப இந்த நாடு அவரால விமோசனம் அடையலலேன்னா வேற யாரால அடையப் போறதுங்கிற கேள்விதான மனசுல எழறது... ஆனா அவரோட இந்த அகிம்சை ஒண்ணுதான் உதைக்கிறது. அதுவும் கூடப் போகப் போக என்னை மாதிரியான வயசானவாளுக்குப் புரிஞ்சு போகும்னு தோண

# கொடி

றது. உன்னை மாதிரி இளசுகளுக் குத்தான் புரியப் போறதில்லே..." என்று ஒரு ஆவேசத்தோடு பேசி னார் ராஜாராமன்.

"அவருக்கு மகாத்மான்னு யாருப்பா பட்டம் குடுத்தா?"

"கவிஞர் ரவீந்திரநாத் தாகூர் தான் கொடுத்தார். தென்னாப் பிரிக்காவில இருக்கிற இந்தியர் களுக்காக வெள்ளைக் காரங்க ளோட போராடி ஓரளவுக்கு அவர் வெற்றியும் பெற்றதால இந்தியாவிலேயும் அவரால பிரச் னையைத் தீர்க்க முடியும்கிற நம் பிக்கை பரவலா இருந்தது - இப் பவும் இருக்கு. இதனால 1915லேயே தாகூர் அவரை மகாத்மான்னு அழைச்சுட்டார். அது அவரோட பேரோட ஒட் டிண்டுடுத்து... காந்திக்கு அது பிடிக்கல்லேன்னாலும்."

"ரவீந்திரநாத் தாகூருக்கும் காந்திஜிக்கும் சில விஷயங்கள்ள ஒத்துப் போகல்லே, இல் லேப்பா?" என்றாள் அஞ்சனா.

"ஆமாம்மா. முக்கியமா மகாத்மா காந்தி 1921-லே அயல் நாட்டுத் துணிகளையெல்லாம் கொளுத்திடணும்கிற யோசனை சொன்னாரே, அது தாகூருக்குப் பிடிக்கல்லே. இந்தியாவிலே பாதிப் பேருக்கு மேல அரை குறை ஆடை உடுத்தக் கூட முடி யாத வறுமையில இருக்கிறப்ப கோடிக்கணக்கான விலை மதிப் புள்ள துணிகளைத் தீயில போட்டுப் பொசுக்கிறது முட் டாள்தனம்னு அவர் பகிரங்கமா அறிவிச்சார்."

"அதுக்கு காந்திஜி ஒண்ணும் சொல்லல்லையா?"

"கதையாயிருக்கே? சொல்

ஜோதிர்லதா கிரிஜா



லாம இருப்பாரா? கன்னத்துல அடிக்கிற மாதிரி யங் இந்தியா பத்திரிகையில ஒரே வாக்கியத்துல தாகூருக்குப் பதில் சொல்லிட்டார் - அந்நியத் துணிகளை எரிக்கிற யோசனைக்கு எதிரா சொல்லப்பட்ட அத்தனை கருத்துக்களையும் பரிசீலனை செய்ததுக்கு அப்புறமும், வெள்ளைக்காரன் இங்கே வித்திருக்கிற துணிகளை எரிக்கிறதுதான் நாம இனி அவன் துணிகளை வாங்கப் போறதில் லைங்கிறதை அவனுக்கு உணர்த்தறதுக்குச் சரியான வழி அப்படின்னு..."

"ரெண்டு பேர் சொல்றதும் சரி மாதிரி இருக்குப்பா."

"ரெண்டு பெரிய மனுஷா மோதிக்கிறப்ப அப்படித்தாம்மா இருக்கும்" என்றார் ராஜாராமன்.

## 38

செருப்புகளை அவசரமாய் உதறிவிட்டு உள்ளே சென்ற கங்காதரன், "அப்பா, அப்பா" என்று பரபரப்பாய்க் கூவியபடி ராமசாமியின் அறைக்குள் நுழைந்தான்.

ரமணிக்குக் கணக்கு கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்த ராமசாமி, "என்னடா, கங்கா, என்னமோ கொள்ளை போயிட்ட மாதிரி கத்திண்டு வரே?" என்றார் தலை உயர்த்தி.

"கொள்ளை போனது கிடைச்ச மாதிரின்னு சொல்லுங்கோப்பா," என்றவாறு அவன் அவர் எதிரே வந்து நின்றான்.

"உக்காந்து சொல்லு, என்ன ஆச்சு?"

விசாலம் எட்டிப் பார்த்தாள்.

"அமராவதி ஆண்ட்டியுடைய ஹஸ்பண்ட் - அதாம்ப்பா அந்த நரேந்திரநாத் பானர்ஜி அவரைச் சந்திச்சோம். கப்பல்ல அந்தமானுக்குக் கொண்டு போறா..." என்று மூச்சிரைக்கச் சொன்னபடி நாற்காலியில் உட்கார்ந்தவன் மற்ற விவரங்களையும் கூறினான்.

விரிந்த விழிகளுடன் எல்லாவற்றையும் கேட்ட ராமசாமி, "கதையில வர்ற திருப்பம்



மாதிரின்னா இருக்கு? ஆச்சரியத்திலயும் ஆச்சரியம், அவனைத் தூக்கில போட்டிருப்பான்னு நெனச்சு மிஸ்டர் ராஜாராமன் மனசு உடைஞ்சு போயிருந்தார். அந்தப் பொண்ணுந்தான். பாவம். உசிரோடயாவது இருக்கானே, நினைச்சுக்கூடப் பார்த்திருக்க மாட்டா யாருமே இப்படி சந்திக்க வாய்க்கும்னு!" என்றார்.

"யாருடாப்பா கப்பல்ல போறா? அவளை நாசம் பண்ணிட்டுப் போன அந்தக் கடன்காரனா?" என்றாள் விசாலம்.

ராமசாமி அவளை முறைத்தார். கங்காதரன் தலையைக் குனிந்து கொண்டான்.

"ஏண்டாப்பா, கங்கா, நீ அவாத்துக்கா போயிட்டு வரே?"

"ஆமாம், அத்தே."

"அவாள்ளாம் ஒரு மாதிரி கூர்கெட்ட குடும்பம். அடிக்கடி அங்கே போகாதேப்பா. உன்னோட நல்லதுக்குத்தான் சொல்றேன்."

விசாலத்துக்குப் பதில் சொல்ல ராமசாமி வாயைத் திறக்குமுன் கங்காதரன் முந்திக் கொண்டான். "அத்தே, அவாள்ளாம் ரொம்ப நல்ல மனுஷா. ஊர் மனுஷாதான் அவாளோட அருமை தெரியாம கண்டபடி பேசறான்னா, அஞ்சனா மாமியோட இத்தனை வருஷமாப் பழகிண்டு கூர்கெட்ட குடும்பம் அது இதுன்னு நீயும் பேசறியே?"

கலங்கிய விழிகளால் தம்பியைக் கணம் போல் பார்த்தபின் விசாலம் நொடியில் அங்கிருந்து அகன்றாள். ராமசாமி ஆயாசத்துடன் எழுந்து அவளுக்குப் பின்னால் சென்றார்.

"அக்கா.... என்னக்கா நீ? கொழந்தைகள் எதிர்ல கன்னாபின்னான்னு பேசிட்டுப் போறே? அவா மேல உனக்கேன் இத்தனை கடுப்பு? அவா உன்னை என்ன பண்ணினா?










> "ஃபோட்டோ ஆல்பத்தைப் பார்த்துட்டு உங்க மகன் அழறானே... ஏன்?''
>
> "அது அவனோட கல்யாண ஆல்பம்!''
>
> — சோம. முத்துக்குமார்

இல்லே, என்னைத்தான் என்ன பண்ணினா?''

கண்களைத் துடைத்துக் கொண்ட விசாலம், "கங்காவுக்கு இருபத்திரண்டு வயசு ஆறது. அவாத்துப் பொண்ணுக்குப் பதினேழு வயசு ஆயிடுத்துன்னு நினைக்கிறேன். பஞ்சும் நெருப்புமாப் பத்திக்கிற வயசு. ஒரே காலேஜ் வேற. நாளைக்கு அந்தப் பொண்ணைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு நம்மாத்துப் பிள்ளை ஒத்தைக் கால்ல நிக்காம இருக்கணுமேன்னு நினைச்சா எனக்கு ராத் தூக்கம் வருவேனாங்கிறது. நீ என்னடான்னா இதை அற்ப விஷயமா நினைக்கிறே!''

''விஷயம் அற்பமில்லேக்கா. அந்தக் கொழந்தைகள் அப்படி ஆசைப்பட்டு அதுக்கு நாம குறுக்கே நின்னா, அதுக்குப் பேர்தான் அற்பம்.''

"நீ பேசறதெல்லாம் உனக்கே சம்மதமா இருந்தா சரி. நான் பதில் சொல்றதா இல்லே. கண்ட புருஷாளோடயும் மீட்டிங்குக்குப் போறதும், கார்ல சுத்தறதும், கண்ட நேரத்துல வீட்டுக்குத் திரும்பறதும் நல்ல பொம்மனாட்டிகள் செய்யற காரியமா? அக்கா, தங்கை ரெண்டும் அந்த விஷயத்துல ஒரே அச்சுல வார்த்ததுகள். ஊர் முழுக்க சிரிக்கிறது.''

"நீயும் வேணும்னா அவாளோட சேர்ந்துண்டு சிரி. நான் குறுக்கே நிக்கல்லே. ஆனா நான் சிரிக்க மாட்டேன். ஏன்னா அவா மாதிரி நல்லவாளைப் பார்த்துச் சிரிக்கிறவாளுக்கு ஏழேழு ஜென்மத்துக்கும் சாபல்யம் கிடையாது.''

ராமசாமி கோபத்துடன் தமது அறைக்குத் திரும்பினார்.

அறையை விட்டு வெளியே சென்று அப்பாவும் அத்தையும் பேசிக் கொண்டதைக் கேட்டு விட்டே தனது அறைக்குப் போன கங்காதரன், சிந்தனைவயப்பட்டான். 'பெண்களுக்குக் கல்வியறிவு வேண்டும் என்பது இதனால்தான்' என்று அந்தக் கணத்தில் அவனுக்குத் தோன்றியது.

தனது காதலை பவித்திராவிடம் அவன் வெளிப்படையாய்ச் சொல்லி இரண்டே நாட்கள்தாம் ஆயின. அதற்குள் அத்தைக்கு மூக்கில் வியர்த்து விட்டதே என்று வியப்படைந்தான். இரண்டு நாட்களுக்கு முன்னால் கல்லூரியிலிருந்து திரும்பிக் கொண்டிருக்கையில், "பவித்திரா, உங்கிட்ட ஒண்ணு சொல்லணுமே? எப்ப உன்னைத் தனியாப் பார்க்கிறது?'' என்றான் அவன் சிரித்தபடி. உள்ளுணர்வாக இருவருக்குமே தங்களுக்கு ஒருவரையொருவர் பிடித்திருப்பதும், காதல் வெளிப்பாடு அதிகத் தொலைவில் இல்லை என்பதும் புரிந்தே இருந்தன.

எனவே, பளிச்சென்று கேட்டு விட்டாள் பவித்திரா. "இப்ப தனியாத்தானே இருக்கோம்? சொல்லிடேன், 'ஐ லவ் யூ'ன்னு அதானே?'' - தலையைப் பக்கவாட்டில் திருப்பிச் சாய்த்துக் கோணல் பார்வையுடன் அவள் இப்படிக் கேட்டதும் அவன் வியந்துதான் போனான்.

"என்ன அப்படிப் பாக்கறே, கங்கா? நீ இப்படி ஒருநாள் பேசுவேங்கிறது நான் என்னிக்கோ எதிர்பார்த்ததுதான். அதுக்கு என்னோட பதிலும் 'யெஸ்'தான்கிறது உன்னோட உள் மனசுக்குத் தெரியும்...''

"கெட்டிக்காரிதான் நீ.''

"பின்னே? ஒரு கெட்டிக்காரன் தேர்ந்தெடுக்கிற பெண் மக்காவா இருப்பா?''

கங்காதரன் சிரித்தான். அதை எண்ணிய போது இப்போதும் அவன் மனம் கிளுகிளுக்க, தனக்குத்தானே மீண்டும் சிரித்துக் கொண்டான்.

(தொடரும்)

# சுண்டல் தகவலரிடம்

ஒரே சினிமாவுல இவரும் இவர் மனைவியும் நடிப்பாங்களாம்; ஃபைட் சீன்ல நிச்சயம் 'டுப்' போட வேண்டாம்!







**சுண்டல் விநியோகம் போல தினம் ஒரு தகவல் தரும் தென்கச்சி கோ. சுவாமிநாதன் கிண்டல் பேட்டிக்கா அசந்து விடுவார்!**

☹ *"மனைவியைக் கிண்டல் பண்ண முடியலே... அதனாலேதான் தகவலை முடிக்கிற போது, சில சமயங்கள்லே பெண்களைக் கிண்டல் பண்ணி... மனசைத் தேத்திக்க றீங்க... இல்லையா?"*

☺ "மனைவி பண்ற கிண்டல் தாங்க முடியலே... அதனாலேதாங்க அப்படி பண்றேன்! அதுமட்டுமில்லே.... அப்படி அவங்களைக் கிண்டல் பண்ணி, நம்மளை மாதிரி பலபேர் மனசைத் தேத்திக்கறத்துக்கும் உதவியா இருக்கேன். இது ஒரு சமூக சேவை மாதிரி....!

☹ *"உங்கள் குரலின் கவர்ச்சிக்கு ஏதோ லேகியம் சாப்பிடறதாகப் பேசிக்கிறாங்களே... நிஜமா?"*

☺ "ஏங்க... குரல் ஒண்ணுலேயாவது நான் கவர்ச்சியா இருந்துட்டுப் போறேனே... அதுக்குமா ஆபத்து? லேகியத்துக்குத்தான் பெருமை போய்ச் சேரணுமா?

☹ *"விழுந்து விழுந்து சிரிக்கிறாங்களே... அடிபடாதா?"*

☺ "விழுந்து விழுந்து இப்படிக் கடிக்கிறீங்களே.... ரத்தமா வருது?"

☹ *"உங்களுக்கு எதைப் பார்த்தா பயம்? அய்யனார் சிலையையா? கட்அவுட்டையா?"*

☺ "அய்யனார் சிலை மாதிரி காட்சியளிக்கிற கட்அவுட்டை...!"

☹ *"இது என்னங்க சமையல் உப்பு. புளி, காரம்ன்னு எதுவுமே இல்லாமே....' என்று உங்கள் மனைவி ரலிச்சுக்கும்*

# கிண்டல் பேட்டி!

*போது என்ன செய்வீங்க?"*

☺ "இதுக்குத்தான் அப்பவே சொன்னேன்... உனக்குச் சம்பந்தமில்லாத வேலையெல்லாம் செய்ய வேணாம்ன்னு...! கேட்டியா?' அப்படின்னு சொல்லி நானும் சலிச்சிக்குவேன்!"

☹ *"உங்களை ஹீரோவா போட்டுப் படமெடுக்க ஒருத்தர் (தற்கொலை முயற்சிதான்) துணிஞ்சு இறங்கிட்டா... நீங்க யாரை ஹீரோயினா போடச் சொல்லுவீங்க?"*

☺ "அவருடைய முயற்சியில் அவர் சீக்கிரம் வெற்றி பெறச் செய்ய வேண்டியது என் கடமை... என்பதால் என் மனைவியைத் தான் ஹீரோயினாகப் போடச் சொல்லுவேன்!"

☹ *"உங்க வீட்டு ரேடியோ தகவல் நேரத்துலே மட்டும் மக்கர் செய்யறதாச் சொல்றாங்க....?"*

☺ "தகவல் நேரத்துலே மட்டும்தான் மக்கர் செய்யறதில்லே...! அதனாலேதான் விவகாரமே!"

☹ *"1995 லேயாவது தகவல் நிகழ்ச்சியில் பெரிய மாறுதல் கொண்டு வரணும்ன்னு கையெழுத்து சேகரிப்பு இயக்கம் நடந்தால்....?"*

☺ "முதல் கையெழுத்து நான் போடுவேன்!"

☺ ☺ ☺ ☺ படம் : **யோகா**

---

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# ஜோதிர்லதா கிரிஜா



## 39

"அப்பா! இன்னிக்கு பள்ளிக்கூடத்தில் போலீஸ்காரங்க வந்தாங்க. காம்பவுண்டு சுவர்ல 'வெள்ளைக்காரங்கல் லாம் கொள்ளைக்காரங்க'ன்னு எழுதி இருக்காயாரோ. அது சம்பந்தமா விசாரிக்கிறதுக்கு வந்தாங்க" என்று உற்சாகமாகச் சொல்லிக் கொண்டு வந்த மகன் ரமணியை ராமசாமி அண்ணாந்து பார்த்தார்.

"அப்புறம்?"

"ஹெட்மாஸ்டரைப் பார்த்துக் கொஞ்ச நேரம் பேசிட்டுப் போயிட்டா. பெரிய வகுப்புகளுக்கு மட்டும் ஒரு இன்ஸ்பெக்டர் வந்து, 'வெள்ளைக்காரங்களுக்கு எதிரா எழுதறது யாருன்னு தெரிய வந்தா கடுமையான நடவடிக்கை எடுப்போம், அப்புறம் எந்தப் பள்ளிக்கூடத்துலயும் சேரமுடியாதபடி பண்ணிடுவோம்'னு மிரட்டிட்டுப் போனார்."

ரமணியின் அனுபவம் பற்றி கேட்டதும் ராமசாமிக்கு கல்கத்தா ராமச்சந்திர அய்யரின் நினைவு வந்தது.

"ரமணி, 'ராமச்சந்திர அய்யர், ராமச்சந்திர அய்யர்'னு எதிர்ச் சாரியில கோடி வீட்டில ஒருத்தர் இருந்தாரே, உனக்கு ஞாபகம் இருக்கா?"

"அவருக்கு என்னப்பா?" என்று கேட்டுக் கொண்டு அப்போது கங்காதரனும் அங்கு வந்து உட்கார்ந்து கொண்டான்.

"கல்கத்தா சர்வகலா சாலைல ரொம்ப வருஷங்களுக்கு முந்தி அவர் படிச்சிட்டிருந்தப்ப நடந்த சமாசாரம், இப்ப நான் சொல்லப் போறது. ஆலிவர் ஸ்மித்னுட்டு ஒரு இங்கிலீஷ் ப்ரொபசர் இருந்தார். இந்தியர்களுக்கு இந்தியாவைப் பத்தி இழிவா என்னமோ சொல்லி இருக்கார். இந்தியர்களுக்கு இலக்கியமே தெரியாதுன்னுருக்கார். அவ்வளவுதான். வந்துதே கோபம், அந்த ராமச்சந்திரனுக்கு. நன்னா விடுவிடுன்னு விட்டான். அப்பல்லாம் - ஏன்? இப்பவும்தான் - வெள்ளைக்கார ப்ரொபசரையெல்லாம் யாரும் எதிர்த்துப் பேசமாட்டா. இவன் பேசவே, ப்ரொபசர் இவன் கன்னத்துல அடிச்சுட்டார். ராமச்சந்திரன் திருப்பி வாத்தியாரை அடிச்சுட்டான். ஆனா, 'சார்! எங்கள் தாய்நாட்டைப் பற்றித் தாக்குறைவாகப் பேசியதற்காக இந்த அடி. ஆனாலும் குரு ஸ்தானத்தில் இருப்பவரை அடித்து விட்டதற்காக இந்த நமஸ்காரம்,' அப்படின்னு சொல்லிட்டு அவர் கால்ல விழுந்து நெடுஞ்சாண்கிடையா நமஸ்காரம் பண்ணிக் கும்பிட்டு, அப்படியே கல்கத்தா சர்வகலா சாலைக்கும் பெரிசா ஒரு கும்பிடு போட்

# மணிக்கொடி

டுட்டு வந்துட்டான். அதனாலதான் அவருக்குக் கல்கத்தா ராமச்சந்திரய்யர்னு பேரா யிடுத்து.''

"இப்ப நம்ம நாட்டுக்குத் தேவையானது இந்த மாதிரி துடிப்புதாம்ப்பா. சும்மா வெள்ளைக்காரனுக்குப் பின்னால கெஞ்சிண்டு அலையறது இல்லே. நீங்க வேணாப் பாருங்கோ, இந்த காந்தி தோத்துத்தான் போகப் போறார். கடைசியில எங்கள மாதிரி தீவிரவாதிகளாலதான் நம்ம நாட்டுக்கு சுதந்திரம் வரப் போறது."

"நானெல்லாம் கூட உன்னாட்டமா பேசிண்டிருந்தவன்தாண்டா. அவர் இந்தியாவுக்கு வந்ததுலேருந்து செஞ்சுண்டு வந்திருக்கிற சில காரியங்களையும் சில வெற்றிகளையும் பார்க்கிறப்ப, அவர் வழியில போனா என்னன்னு எனக்கே தோண ஆரம்பிச்சுடுத்து."

"எதெதுலேப்பா அவருக்கு வெற்றி கிடைச்சுது? என்னமோ சம்பரான், சம்பரான்கறாளே அது ஒண்ணு, இல்லியா?'' என்று ரமணி ஆவலுடன் விசாரித்தான்.

"ஆமாம், சம்பரான்னு பீகார்ல ஒரு இடம். அங்க, அவுரிச்செடிங்கிற நீலச் சாய உற்பத்திப் பயிர்களின் விளைச்சல், குறிப்பிட்ட அளவுக்குக் கீழே போயிடுத்துன்னா விவசாயிகள் வரி கட்டத் தேவை இல்லேன்னு ஒரு சட்டம். அந்த வருஷத்துல - 1917ல - விளைச்சல் இல்லாததுனால நாங்க வரி கட்ட மாட்டோம்னா விவசாயிகள். அதிகாரிகள் சம்மதிக்கலே. காந்திஜி இந்தப் போராட்டத்துக்குத் தலைமை தாங்கினார். சர்தார் வல்லபாய் படேலும் இதுல கலந்துண்டார். காந்திஜி அப்ப இந்தியாவுக்குப் புது மனுஷரா இருந்தாலும் மக்கள் அவருடைய தலைமையை விரும்பி ஏத்துண்டா. முதல்ல காந்திஜியை ஜெயில்ல வெச்ச வெள்ளைக்காரன் கடைசியில வழிக்கு வந்தான்!"

"போங்கப்பா. இதெல்லாம் சுண்டைக்காய்ப் பிரச்னைகள். இது மாதிரி சின்ன விஷயங்கள்ள விட்டுக் குடுத்து, வெள்ளைக்காரன் காந்தியை ஏமாத்திண்டிருக்கான். அது அவருக்குத் தெரியல்லே," என்று கங்காதரன் சிரித்தான்.

"அட, போடா பைத்தியக்காரா! அப்படி இல்லே. தென் ஆப்பிரிக்காவில சில போராட்டங்களை நடத்தி, அங்க இருக்கிற வெள்ளைக்கார அரசாங்கத்தைப் பணிய வெச்சாரோல்லியோ? அதே மாதிரி இங்கே இருக்கிற மக்களிடத்துலயும் அவருக்குச் செல்வாக்குப் பெருகிடுமோன்னு வெள்ளைக்காரன் வயித்துல நெருப்பைக் கட்டிண்டிருக்கானாக்கும்!''

"ரௌலட் சட்டத்துக்கு எதிராக்கூட ஒரு சத்தியாக்கிரகம் நடத்தினாரில்லேப்பா?"

"ஆமா. யாரை வேணா, எப்ப வேணா அரெஸ்ட் வாரண்ட் இல்லாமயே கைது பண்ணிண்டு போய் ஜெயில்ல வைக்கலாம்னு ஒரு காட்டுமிராண்டிச் சட்டத்தை அமுல் படுத்தறதுக்காக ரௌலட்ங்கிற வெள்ளைக்காரன் தலைமையில ஒரு கமிட்டியை வெள்ளைக்காரன் இங்கிலாந்துலேருந்து அனுப்பினான். அதை எதிர்த்து நாடு முழுக்கக் கூட்டங்கள் நடந்தது."

"முக்கியமானதை விட்டுட்டேளேப்பா? அப்படிக் கைது பண்ணப்பட்ற ஆளுக்கு வக்கீல் வெச்சு வாதாட உரிமை கிடையாதுன்னானே!"

"ஆமாமா. காந்திஜி தன்னோட ஆட்சேபணையை எடுத்துச் சொன்னார். ஆனா அரசாங்கம் கேக்கல்லே. 1919 ஆம் வருஷம் பிப்ரவரி மாசம் அந்த ரௌலட் சட்டத்த அமுல்படுத்திட்டா. மார்ச் மாசம் காந்திஜி நாடு முழுக்கவும் ஹர்த்தால் பண்ணணும்னு கேட்டுண்டார். அவர் கட்டளைப்படி இந்தியா முழுக்கக் கடையடைப்பு நடந்தது. வெள்ளைக்காரன் அசந்துட்டான். ஆனாலும் சட்டத்தை என்னவோ அவன் வாபஸ் வாங்கிக்கல்லே. அந்த சந்தர்ப்பத்துலதான் ஜாலியன்வாலா பாக் படுகொலை நடந்தது."

அந்தக் கொடிய சம்பவம் பற்றி ஏற்கெனவே நன்கு அறிந்திருந்த விசாலம், காய் நறுக்குவதை நிறுத்திவிட்டு நிமிர்ந்து பார்த்து, "ஏம்ப்பா அந்த ராட்சசன் ஜெனரல் டையரை யாருமே தண்டிக்கலையா?" என்று கேட்டாள்.

"தண்டிக்கிறதா? அவனுக்குப் பிரிட்டிஷ் சர்க்கார்ல பாராட்டும் பரிசும் கொடுத்தா! ஆனா வெள்ளைக்காராள்ளயும் நல்லவா இருக்கா. பெர்ட்ராண்ட் ரஸ்ஸல்னு ஒரு

## இக்கால அரசியலைத் தோலுரித்துக் காட்டியது!



♦ இந்திரா பார்த்தசாரதியின் "வேதபுரத்து வியாபாரிகள்" இக்கால அரசியலைத் தோலுரித்துக் காட்டியதோடு மட்டுமல்லாமல், அனைத்துத் தரப்பு மக்களும் படித்துப் பாதுகாக்க வேண்டிய கதையாகவும் அமைந்தது.
காரைக்குடி, எஸ். குமார்.

♦ எங்கள் சொந்த ஊரான வேதபுரத்தைப் பற்றியும் எங்கள் மகாராணியைப் பற்றியும் அவரது தோழியைப் பற்றியும் விவரமாக எழுதிய இந்திரா பார்த்தசாரதிக்கு வேதபுர வாசி என்கிற முறையில் நன்றியைக் காணிக்கை யாக்குகின்றேன்.
தஞ்சாவூர் - 7, வளர்மதி ஆசைத்தம்பி.

♦ வேதபுரம் என்ற அந்தப் பழம்பெருமை மிக்க நாட்டிற்கு, அபூர்வா என்ற அழகுமிக்க அந்நிய நாட்டுப் பெண்ணொருத்தி அரசியாகி ஆட்சி நடத்தும் விதத்தை ரசித்துப் படித்து, மருதுவின் ஓவியங்களைப் பார்த்து மகிழ்ந்து வந்த எங்களுக்கு, அபூர்வாவின் ஆட்சி இனி எப்படி நடக்கப் போகிறதோ என்று யோசிக்கச் செய்து விட்டது.
சிறுமுகை, ஜி. கதிரேசன்.

♦ "வேதபுரத்து மக்கள் நேரிடையாகவோ, மறைமுகமாகவோ உண்மைகளை எழுதினாலும் சொன்னாலும் அதை உதாசீனப்படுத்துவதை வழக்கமாகக் கொண்டவர்கள்; கடவுளைக் காண முடியாதவர்கள்; கடவுளாய் நடித்தவர்களைக் கடவுளாக மதிக்கும் வழக்கமுடையவர்கள். உப்புப் போட்டு சாப்பிடுவதையே மறந்து விட்டவர்கள்.
- "பேராசிரியர் கல்கி வாசகன்" (வேதபுரத்து மக்களின் பழக்க வழக்கங்கள் பக். 420-421)
காடாம்பாடி, ஆர். ஷகிவேல்ச்சாமி.

அறிஞர். அவர் ஜெனரல் டையரை 'ரத்த வெறி பிடிச்ச பேய்'னு வர்ணிச்சுக் கண்டிச்சார். பிரிட்டன்லயே சில பத்திரிகைகள்ள பஞ்சாப் கவர்னரைக் கண்டிச்சு எழுதினா. கர்னல் வெட்ஜ்வுட், பெதிக் லாரன்ஸ், மேஜர் கிராஹம் போல். இது மாதிரி சில பிரிட்டிஷ் பெரிய மனுஷாள்ளாம் இந்தியாவில பிரிட்டன் செய்யற கொடுமைகளை நிறையக் கண்டிச்சா. அதனால பிரிட்டிஷ் தண்டிச்சுட்டதாப் பேர் பண்ணித்து."

"இதையெல்லாம் கேக்கறப்ப கொதிக்கிற தேப்பா! உங்களைக் கூடப் பிடிச்சுண்டு போய் ரொம்ப நாளுக்கு முந்தி ஜெயில்ல வெச்சா இல்லே? ஜெயில் எப்படிப்பா இருந்தது?"

"குழந்தையும் குட்டியுமா இருக்கிற நமக்கு எதுக்குடா இந்தக் காங்கிரசும் கத்திரிக்காயும்னு தலைதலையா அடிச்சுண்டேன். உங்கப்பா கேட்டானா? கேக்கல்லியே. அதோட பலன், ரெண்டு வருஷம் ஜெயில்ல இருந்துட்டுப் பாதி உடம்பும் சிரங்கும் சீக்குமா வந்து சேர்ந்தான். அவனோட பழைய உடம்பைத் திருப்பிக் கொண்டு வரதுக்குள்ள நான் பட்ட பாடு இருக்கே.... ராமராம" என்று விசாலம் அலுத்துக் கொண்டாள்.

"உங்களை எதுக்குப்பா ஜெயில்ல வெச்சா?"

"உனக்கு வாஞ்சிநாதன் பற்றி தெரியுமோல்லியோ. அதான் ஆஷ் துரையைச் சுட்டுக் கொன்றவன். வாஞ்சிநாதன் பத்தின ரகசிய சுற்றறிக்கை ஒண்ணு சென்னைல விநியோகமாச்சு. ஒரு பிரதியை நம்மாத்துல போலீசார் தேடிக் கண்டுபிடிச்சுட்டாங்க. அதனால எனக்கு ரெண்டு வருஷ ஜெயில் வாசம் கிடைச்சுது! அப்ப நீ ரெண்டு வயசுக் குழந்தைடா, ரமணி...."

"ஒரு சின்னக் குழந்தையையும் ரெண்டுங் கெட்டான் கங்காவையும் வெச்சுண்டு உங்கப்பா திரும்பி வர்ற வரைக்குழ் நான் பட்ட பாடு இருக்கே.... ஏழேழு ஜென்மத்துக்கும் போறுண்டாப்பா."

ரமணியின் நெற்றியில் சிந்தனைக் கோடுகள் படர்ந்தன.

## 40

கங்காதரனைப் பொறுத்த மட்டில் ஒன்றில் மட்டும் அவன் உறுதியாக இருந்தான். படிப்பை முடிக்காமல் எந்தப் போராட்டத்திலும் ஈடுபடக்கூடாது என்பதே அது. தேசம், விடுதலை, போராட்டம் என்றெல்லாம் சக நண்பர்களுடன் விவாதித்து வந்த கங்காதரன், அவர்கள் படிப்பை விட்டுக் களத்தில் குதித்த போது அவன்

மட்டும் அவ்வாறு செய்யாதிருந்தமைக்காக அவர்களால் கிண்டல் செய்யப்பட்டதுண்டு. ஆனால் கங்காதரன் அவர்களது கேலியைச் சட்டை செய்யவில்லை. வெள்ளைக்காரனை எதிர்ப்பதற்கு வெறும் கைவலிமை மட்டும் போதாது, கல்வி வலிமையும் வேண்டும் என்று அவன் திடமாக நம்பினான். அதனால்தான் தனது ஆவலை வெகுபாடு பட்டுக் கட்டுப் படுத்திக் கொண்டு படிப்பைத் தொடர்ந்து கொண்டிருந்தான்.

"அப்பா! படிப்பை முடிச்சுட்டு நானும் களத்துல குதிக்கலாம்னு இருக்கேன். வடக்கே போகலாம்னு நினைக்கிறேன். அங்கதான் நிறையப் புரட்சி இயக்கங்கள் இருக்கு. எங்க காலேஜுக்கெல்லாம் அடிக்கடி துண்டுப் பிரசுரங்கள் தபால்ல வருது. இன்னாருக்குன்னு பேரு போடாம, 'சீனியர் மோஸ்ட் ஸ்டூடன்ட் இன் பி.ஏ. க்ளாஸ்'னோ, இல்லே, 'ஃபர்ஸ்ட் ரேங்க் ஸ்டூடன்ட்'னோ அட்ரெஸ் பண்ணி வருது. வங்காளத்துல இருக்கிற சிட்டகாங்லேருந்து வருது. அங்க சூர்யாசென் என்கிற ஒரு ஸ்கூல் டீச்சர் இண்டியன் ரிபப்ளிகன் ஆர்மின்னு ஒரு புரட்சிப் படையை ஏற்படுத்தி இருக்காராம். அங்கே போய்ப் பார்த்து அதுல சேரலாமான்னுட்டு ஓர் எண்ணம். நீங்க என்னப்பா சொல்றேள்?"

ராமசாமிக்கு இதயத் துடிப்பு ஒரு முறை நின்றுவிட்டுத் துடிக்கத் தொடங்கியது. 'அப்படியானால் இவனை நான் இழக்கப் போகிறேனா? குஞ்சம்மா இன்றைய தேதியில் உயிரோடு இருந்தால் எப்படியெல்லாம் அழுது புரண்டு ஆகாத்தியம் பண்ணி இவனைத் தடுக்கப் பார்ப்பாள்' என்று அவரது எண்ணம் ஓடியது.

"படிப்பு முடியட்டும். இதைப் பத்தி அப்புறமா யோசிச்சு ஒரு முடிவுக்கு வரலாம். நீ சொல்ற சூர்யா சென்னைப் பத்தி நானும் கேள்விப்பட்டிருக்கேன், கங்கா. 'ஒரு டீச்சரா இருந்துண்டு இவ்வளவு சாதிக்கிறார். நாமும்தான் டீச்சரா இருக்கோம். என்ன சாதிச்சோம்?' அப்படின்னு நான் நினைச்சுக்கிறதுண்டு. 'உடற்பயிற்சிக்கான க்ளப்'னு ஒரு அமைப்பை ஏற்படுத்திட்டு அதுல சின்னச் சின்னப் பசங்களுக்கெல்லாம் கத்திச் சண்டை, குத்துச் சண்டை, துப்பாக்கி சுடறது இதுலேயெல்லாம் தக்க ஆள்களை வெச்சு ட்ரெய்ன் பண்ணிண்டிருக்கார்னு கேள்வி."

"நானும் அண்ணா கூடவே கிளம்பிச் சிட்டகாங்குக்குப் போயிடறேனேப்பா? ஒரே த்ரில்லா இருக்கு இப்பவே" என்றான் ரமணி.




## பெண்களைப் பாரா விரதர்!

**இயற்கை எழில் கொஞ்சும் கோதையூர். தென் குமரியில் உள்ளது. எங்கள் தெருவில் ஓர் அதிசய மனிதர். இரவு, பகல், மழை, வெயில் என்று எல்லா நேரத்திலும் குடையை விரித்துத் தமது முகத்தை மறைத்துக் கொண்டுதான் செல்வார். ஆபீஸுக்கும் அப்படியே. பால்காரி, தயிர்க்காரி என்றாலும் குடையால் முகத்தை மறைத்துக் கொண்டுதான் வாங்குவார். காரணம், அவர் முகத்தை எந்தப் பெண்ணும் பார்க்கக்கூடாது; அவரும் பெண்களைப் பார்க்கக்கூடாது என்பதுதான். எனவே, என்ன முயன்றும் என்னைப் போன்ற பெண்களால் அவர் முகத்தைப் பார்க்க முடிந்ததேயில்லை. இதனாலேயே அவரைக் 'குடைச்சாமி' என்று கேலி செய்வோம். எதற்காக இப்படியொரு விரதம்? அவருடைய மனைவி ஓடிப் போய்விட்டதுதான் என்று ஊர்ப் பெரியவர்கள் சொன்னார்கள். இது முப்பது ஆண்டுகளுக்கு முன்பு நடந்ததுதான் என்றாலும் இன்றைக்கும் என்னால் மறக்க முடியவில்லை!.**

**பம்பாய் - 88, எஸ். விஜிபிரியா**

---

"இதோ பாரு, ரமணி, ஒரு வீட்டுக்கு ஒருத்தர்தான் போகலாம். எல்லாரும் ஓடிட்டா அப்புறம் குடும்பத்துக்குன்னு செய்ய வேண்டிய கடமைகளை யாரு செய்யறது? எனக்கும் உங்க அத்தைக்கும் வயசாயிண்டிருக்கு. கங்கா பெரியவன். அவனே படிப்பை முடிச்சுட்டுத்தான் சேரப் போறான். நீ பாட்டுக்கு அதிகப் பிரசங்கித்தனமால்லாம் மனசை அலையவிடாதே, படிப்பைக் கவனி."

''படிப்பு முடிஞ்சதும் கௌம்பிடுவேம்ப்பா... உங்க ஆசீர்வாதத்தோட" என்றான் கங்காதரன்.

அவரது நாட்டுப் பற்று, சுதந்திர ஆர்வம், கொள்கைப் பிடிப்பு இவற்றையெல்லாம் கடந்து, ராமசாமி கண்களில் இலேசாக நீர் திரை இட்டது. அதை மகன்கள் கவனித்துவிடாதிருப்பதற்காக விழிகளைத் தாழ்த்திய படி எதிரே இருந்த புத்தகத்தை எடுத்து மடியில் வைத்துக் கொண்டு புரட்டினார்.

"என்னப்பா பேசாம இருக்கேள்?"

"போயிட்டு வா, கங்கா. ஜாக்கிரதையா மட்டும் இருக்கணும். உணர்ச்சிவசப்பட்டு ஆபத்துல சிக்கிக்கக் கூடாது. அநாவசியமா காயம் பட்டுக்கிறது, உயிருக்கு அபாயம் ஏற்படுத்தக்கூடிய சாகசங்கள்ள ஈடுபடறது இதெல்லாம் வேண்டாம். என்னிக்கோ ஒரு நாள் சாகத்தான் போறோம். ஆனா அநாவசியமா சாகக்கூடாது. நிறைய சாதிக்கிற வரைக்கும் உயிரோட இருக்கப் பார்க்கணும்... இதை மட்டும் எப்பவும் ஞாபகம் வெச்சுக்கோ."

"சரிப்பா."

அன்றிரவு முழுவதும் ரமணி தூங்காமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். பதினேழு வயது வாலிபத் துள்ளலிலும், அச்சமறியா நிலையிலும் சிட்டகாங்குக்குப் புறப்பட்டுப் போய் அந்தப் பள்ளிக்கூட வாத்தியார் சூர்யா சென்னை எப்படியாவது கண்டு பிடித்துச் சந்தித்து, அவரது கூட்டத்தினருள் தானும் ஒருவனாக இடம் பிடிக்க வேண்டும் எனும் பரபரப்பு அவனுள் பொங்கியது. கங்காதரனைத் தான் முந்திக் கொள்ள வேண்டும் என்று முடிவெடுத்தான். கங்கா படிப்பை முடித்துவிட்டு தேச சேவையில் ஈடுபட்டு விட்டால் பிறகு தனக்கு வாய்ப்புக் கிட்டாது. அப்பா சொன்னது போல குடும்பக் கடமையைத்தான் தானே ஏற்க வேண்டியிருக்கும்!

அவன் இரவு இரண்டு மணிக்கு எழுந்து ஒரு பேனாவையும் தாளையும் தேடி எடுத்தான். மறுநாள் காலை அந்த வீட்டுக்குச் சோகம் ததும்பிய நாளாக விடிந்தது.

(தொடரும்)

---

டைரக்டர் : நான் எடுக்கிற ஒவ்வொரு படமும் ஒருத்தரையாவது கண்டிப்பா பாதிக்கும்.

நண்பர் : தயாரிப்பாளரைத்தானே சொல்றீங்க...?

— சீர்காழி வி. ரேவதி



நமது ஏற்றுமதியாளர்களில் உற்பத்தி முழுமையையும் ஏற்றுமதி செய்வோர், பகுதி அளவில் ஏற்றுமதி செய்வோர் என்று இரு பிரிவினர் உண்டு. நூறு சதமும் ஏற்றுமதி செய்வோரின் கூட்டமைப்புக்கு 1995-ம் ஆண்டின் தலைவராக ஜெம் கிரானைட்ஸ் வீரமணி தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

அவருக்கு வாழ்த்துச் சொல்வதுடன் நில்லாது, ஒரு நாவல் சுருக்கம் போல் அமைந்துள்ள அவருடைய வாழ்க்கையையும் கவனிப்பது, சுயமுன்னேற்ற நூல்கள் பலவற்றைப் படிப்பதை விடவும் மேலானது.



* வீரமணி

# வெற்றிமணி ஒலிக்கும் வீரமணி!

முடி ஏற்றுமதி செய்து கொண்டிருந்தார் ஒருவர். திடுமென்று ஒருநாள் அந்த வியாபாரம் அரசுடைமையாக்கப்பட்டது! இவருக்கு ஏகப்பட்ட நஷ்டம். இவர் சார்பில் வழக்கு நடத்திக் கொண்டிருந்தேன். நாலு மாதங்கள் நடந்து கேஸ் ஜெயித்தது.

சில காலம் சென்று மறுபடி வந்தார். "உன்னால்தான் நான் வழக்கிலிருந்து விடுபட்டு, ஜப்பான் போக முடிந்தது" என்று கூறி ஒரு காமிராவைக் கொடுத்து விட்டு அதற்கு ரூ. 650 பெற்றுக் கொண்டார். "போன இடத்தில் ஒரு புதிய தொழில் செய்ய வாய்ப்பு இருப்பதைக் கண்டு கொண்டு வந்திருக்கிறேன். அதாவது, கருங்கல்லை ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்யலாம். அவர்கள் அங்கே சமாதிக்கு அதைப் பயன்படுத்துகிறார்கள். உங்கள் மாவட்டமான சேலம் - தர்மபுரி பகுதியில் கல் நிறையவே இருக்கிறது."

"எனக்கு வியாபாரத்தில் விருப்பமில்லை. வக்கீல் தொழிலில் முன்னேற வேண்டும் என்பதுதான் என் குறிக்கோள். என் தகப்பனாரிடம் சேலத்துக்கு அழைத்துப் போகிறேன். அவர் அங்கே கடலை எண்ணெய் மில் வைத்திருக்கிறார். நீங்கள் அவரிடம் பேசுங்கள்!" என்று அவரை அப்பாவிடம் அழைத்துப் போனேன்.

அப்பாவும் அவரும் பேசினார்கள். அப்பாவுக்கு இந்தத் தொழிலில் நான் ஈடுபடுவதில் விருப்பமில்லை என்று சொல்லி விட்டார்.

என் தம்பிகள் இரண்டு பேரும் அப்பாவுக்கு உதவியாக இருந்து கொண்டிருந்தார்கள்.

இதற்குப் பிறகு சுமார் ஒரு வருடம் கழித்து என் தகப்பனாரின் கடலை எண்ணெய் தொழில் சில பாதிப்புகளுக்கு உள்ளானது. விலைகள் திடீர் ஏற்றம் இறக்கம் என்று ஒரு நிலையான சூழ்நிலை இருக்கவில்லை.

எனக்கு மறுபடி கல் ஏற்றுமதித் தொழில் நினைவுக்கு வந்தது. தம்பிகளை வேண்டுமானால் இந்தக் கல் தொழிலில் ஈடுபடுத்தி, அவர்களுக்கு ஒரு வழிகாட்டி விட்டு நாம் வக்கீல் தொழிலில் தீவிரமாக இருக்கலாம் என்று முடிவு எடுத்தேன். விசாரித்தேன்.

கல் எடுக்க என்ன செய்ய வேண்டும்?

500 ரூபாய் கட்டி, குத்தகைக்கு விடும் பழக்கத்தை நிறுத்தி விட்டதாகவும், முதல் முறையாக நிலத்தை ஏலம் விடப் போவதாகவும் சொன்னார்கள். ஏலம் என்றால் எப்படி? பணம் எத்தனை தேவை? ஒன்றும் தெரியவில்லை.

## கிராமச் சுவை

பூம்புகார் கோவில் ஒன்றில் அவர் நாதஸ்வரம் வாசிப்பார். பிரபலமானவர் அல்ல! ஆனால் நாதஸ்வரத்தில் சில தங்க டாலர்கள் தொங்கிக் கொண்டிருக்கும். அவரே செய்து மாட்டியுள்ளாரென்று கிண்டல் செய்வோர் உண்டு.

அன்று வழக்கம் போல் கோவிலில் அவர் வாசித்துக் கொண்டிருந்த போது வழக்கத்துக்கு மாறாக நான்கு பேர் அவர் எதிரே உட்கார்ந்து ரசித்துக் கொண்டிருந்தனர். வித்வானுக்கு ஏக குஷி! இதுவரை யாரும் அவர் வாசிப்பை உட்கார்ந்து ரசித்ததில்லை. வாத்தியத்தை அப்படியும் இப்படியும் அசைத்து, பிரமாதமாக வாசித்தார்!



முடிந்ததும் இளைஞர்கள் எழுந்து போக, வித்வான் நாதஸ்வரத்தை உறையில் இட முற்பட்ட போது பயங்கர அதிர்ச்சி! தங்க டாலர்கள் அபேஸ்!

அந்த இளைஞர்களின் ரசனை வாசிப்பில்தான் இருந்தது என்று எண்ணி ஏமாந்தோம் என்று ரொம்ப வருத்தப்பட்டார் அவர்!

— ஆர். சுந்தரவேலு, பூம்புகார்.

என்னிடம் இருந்த சேமிப்புத் தொகை, நண்பர்களிடம் வாங்கிய தொகை, சகோதரர்களிடம் இருந்து கொஞ்சம் பணம் என்று எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு பெண்ணாகரம் போனோம். நிலத்தைப் பார்த்தோம். அதற்கு தர்மபுரியில் ஏலம் வைத்தார்கள். நாங்கள் ஏதோ 2000, 3000 இருக்கும் என்று நினைத்தோம். 73 ஏக்கர் நிலம் 46100 ரூபாய்க்கு ஏலம் போயிற்று! யாரோ சிலர், நாங்கள் அதை எடுத்து விடக் கூடாது என்றே போட்டியாக இதைச் செய்தார்கள். நாங்கள் விடவில்லை.

எப்படியோ பணம் கட்டி ஏலத்தில் எடுத்தோம்.

ரோடு போட்டு, இடத்தைச் சீராக்கி எடுப்பதே ஆறு மாத வேலையாகி விட்டது. கடன் பளு தாங்க முடியவில்லை. வழக்கறிஞர் தொழிலிலாவது கொஞ்சம் சேர்க்க முடிந்தது. இதில் எதிர்காலம் எப்படி இருக்கப் போகிறது என்றே தெரியாது! கல்லை உடைக்க ஆரம்பித்தோம்.

விற்பது எப்படி?

ஜப்பானில் கற்களை விற்கும் ஒரு சென்னை நண்பரை எங்களுக்கு அறிமுகப் படுத்தினார்கள். அவர் மிகக் குறைந்த விலைக்குக் கேட்டார். 12000 ரூபாய்க்கு வியாபாரம் படிந்தது. 6000 ரூபாய் ரொக்கமாகவும், 6000 ரூபாய்க்கு செக்கும் கொடுத்தார் அவர். செக் திரும்பி விட்டது!

12000 ரூபாய் கிடைத்திருந்தாலே, ஒரு ரூபாய் கூட லாபம் இருந்திருக்காது. பயங்கர நஷ்டம்! தம்பிகளை வேறு இந்தத் தொழிலுக்கு இழுத்துக் கொண்டதில் அப்பாவுக்குக் கோபம்.

பிறகு சில ஜப்பான் கம்பெனிகளை அணுகினோம். அவர்களிடம் ஆர்டர் வாங்கிய பிறகு, வங்கிகளை அணுகினோம். அவர்கள் ஆதரவு கொடுத்தார்கள். அவர்களுக்கு ஒழுங்காகத் தவணைகள் கட்டி வந்தோம்.

தர்மபுரி அருகே லக்கியம்பட்டியில் ஒரு தொழிற்சாலை வைத்தோம். இந்தியாவில் தயாரிக்கப்பட்ட இயந்திரங்களையே உபயோகித்து, கையால் பாலிஷ் போட்டு, கற்களை ஏற்றுமதி செய்தோம்.

74ல் மறுபடி ஒரு பயங்கரப் போராட்டம்.

அரபுநாடுகள் எல்லாம் பெட்ரோல் விலையை மூன்று - நான்கு மடங்கு உயர்த்தி விட்டன. எனவே ஜப்பான் பொருளாதாரத்தில் சறுக்கல் ஏற்பட்டது. அவர்கள் இந்த கிரானைட்டுகளை ஆடம்பரப் பொருளாகக் கருதி, வாங்குவதை நிறுத்திக் கொண்டார்கள்.

ஓர் ஆண்டுக் காலம், எங்களுக்கு ஏற்றுமதிக்கு ஒரு ஆர்டர் கூடக் கிடையாது!

இந்தச் சூழ்நிலையில் நாங்கள் கற்களைத் தயார் செய்து விட்டோம். 400 தொழிலாளர்களுக்குச் சம்பளம் கொடுத்தாக வேண்டும். வங்கிக் கடன் சுமார் 20 லட்ச ரூபாய் திருப்பிச் செலுத்தியாக வேண்டும். வழக்கறிஞர் தொழிலையும் விட்டாயிற்று. சகோதரர்களின் வாழ்க்கையைப் பாழடித்து விட்டேனோ என்ற உள்ளக் குமுறல்....

திடீரென்று வேறொரு ஜப்பான் நண்பர் எனக்கு அறிமுகமானார். அவர், புகழ்பெற்ற மிட்சுபிஷி கம்பெனியுடன் தொடர்பு கொண்டவர். அவர்கள் கொடுத்த ஆர்டருக்கு, ஒரு கம்பெனி ஒழுங்காகக் கற்கள் சப்ளை செய்யவில்லை. "200 கியூபிக் மீட்டர் கல் உடனடியாகத் தேவை. உங்களால் சப்ளை செய்ய முடியுமா?" என்று கேட்டார்.

அப்போது நாங்கள் வேறு ஒரு ஜப்பான் கம்பெனியுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தோம். அதனால் ஜெம் கிரானைட்ஸ் பெயரில் ஒப்பந்தம் செய்து கொள்ளாமல், சென்னை எண்டர்பிரைசஸ் என்று புதிய பெயரில் ஒப்பந்தம் செய்து கொண்டேன். கற்களை ஜெம் கிரானைட்ஸிலிருந்து எடுத்துக் கப்பலேற்றி அனுப்பி, கடனை எல்லாம் அடைத்தேன். தொழிலாளர்களுக்குக் கூலியைக் கொடுத்தேன். தேக்க நிலையிலிருந்து மறுபடி இந்தத் தொழிலை இயக்க நிலைக்குக் கொண்டு வந்தேன்!

இந்த அனுபவம் ஒரே ஒரு நாட்டுக்கு ஏற்றுமதி செய்வதில் ஆபத்து இருப்பதைப் புரிய வைத்தது. சுமார் 50 வெளிநாட்டுத் தூதரகங்களுக்குக் கடிதம் எழுதி, அங்கே உள்ள இறக்குமதியாளர்களின் விலாசத்தை எழுதுமாறு கேட்டுக் கொண்டேன். சாம்பிள்கள் அனுப்பினோம். குவாரியில் கல் வெட்டி எடுப்பதைப் படங்கள் எடுத்து, கூடவே அனுப்பி வைத்தேன்.

இத்தாலி, ஜெர்மன், இங்கிலாந்து, ஸ்வீடன், அமெரிக்கா ஆகிய நாடுகளில் இருந்து ஆர்டர்கள் வந்தன.

இவ்வாறு ஏற்பட்ட தொடர்புகளுள் அந்த இங்கிலாந்து நண்பர் பெயர் பில் மக்கே. ஸ்காட்லாந்துக்காரர். அபர்டீன் நகரைச் சேர்ந்தவர். என்னால் என்றைக்கும் மறக்க முடியாத நண்பர்.

என் அழைப்பை ஏற்று ஒரு ஜெர்மன் நண்பருடனும் ஓர்அமெரிக்க நண்பருடனும் வந்தார் பில் மக்கே. எங்கள் தொழில் முறை, கடுமையான உழைப்பு, தவிர கப்பலுக்காகக் காத்திருந்து ஏற்றுமதி செய்வதையும், பார்த்து வியந்தார்.

"என் செலவில் நீங்கள் இங்கிலாந்து வர வேண்டும். அங்கே நவீன உத்திகள் கையாளப்படுவதைக் கற்றுக் கொள்ளுங்கள்!" என்றார் பில்.

நான் என் செலவில் லண்டனுக்கு வருவதாகச் சொன்னேன். "அங்கிருந்து வேறு இடங்களுக்கு அழைத்துச் செல்லும் செலவை சிறகடிக்க ஆசை மட்டுமே நீங்கள் ஏற்றால் போதும்!" என்றேன்.

அபர்டீன் நகரில் மகனும், மகளும் உடன் வர பில் மக்கே வரவேற்றார். நகரைச் சுற்றிக் காட்டினார்கள். அபர்டீன் நகருக்கு கிரானைட் சிடி என்றே பெயர். ஒரு காலத்தில் உலகம் முழுதுக்கும் கிரானைட் கொடுத்த நகரம்!

கட்டடங்கள், சர்ச்சுகள் எல்லாமே கற்களால்தான்.

மறுநாள் ஐரோப்பிய நாடுகளுக்குச் சுற்றுப் பயணம். "நீ போட்டுக் கொண்டிருக்கும் இந்தக் கோட்டுடன் அங்கே எல்லாம் சென்றால், அவர்கள் உனக்குத் தர வேண்டிய மரியாதையைக் காண்பிக்க மாட்டார்கள். உனக்கு வேறு கோட்டு வாங்க வேண்டும்!" என்று சொல்லி, ஒரு ரெடிமேட் ஸூட்டை 250 பவுண்டு விலையில் வாங்கிக் கொடுத்தார்.

இத்தாலி, ஜெர்மனி, பிரான்ஸ், டென்மார்க், ஸ்வீடன் எல்லாம் முதல் வகுப்பில் விமானத்தில், அவர் செலவில் அழைத்துச் சென்றார். போகிற இடங்களிலீ எல்லாம் ஐந்து நட்சத்திர ஓட்டலில்தான் தங்கினோம். அவர் மனைவியும் கூடவே வந்தார்.

ஸ்வீடன் நாட்டுக்குப் போன போது, அங்கே உள்ள நவீன குவாரிகளுக்கு அழைத்துச் சென்று, டிரில் செய்வது, கம்ப்ரஸரை ஆபரேட் செய்வது என்று எல்லாவற்றிலும் என்னைப் பயிற்சி பெற வைத்தார்.

ஒருவரை நண்பராக ஏற்றுக் கொண்டு விட்டால், எந்த அளவுக்கு அவர்கள் உதவி செய்கிறார்கள் என்பதை நினைத்தாலே வியப்பாக இருக்கிறது.

ஸ்வீடன் நாட்டு நண்பர், அவர்கள் வழக்கப்படி, என்னை அவர்கள் வீட்டுச் சமையல் அறை வழியாக வரவேற்று, சமையலறை வழியாகவே வழியனுப்பி வைத்தார். 'எங்களுக்கு என்று தனியாக எதையும் சமைத்துச் சாப்பிடுவதில்லை. எங்களிடம் ரகசியம் எதுவும் இல்லை' என்று உணர்த்துகிற பண்பாடாம் அது!

மூன்று பேரும் சேர்ந்து ஒரு கம்பெனி உருவாக்கி, இந்தியாவிலிருந்து கற்களைத் தருவித்து வியாபாரம் செய்யலாம் என்று பில் மக்கே தெரிவித்தார்.

எட்டு மாடிக் கட்டடம் ஒன்றில் இயங்கிக் கொண்டிருந்த வழக்கறிஞர்கள் நிறுவனம் ஒன்றுக்குக் கூட்டிக் கொண்டு போனார். சுமார் 200 வழக்கறிஞர்கள் அங்கு பணியாற்றிக் கொண்டிருந்தார்கள்.

இந்தியாவிலிருந்து நான் முதலீடு செய்வது என்பது இந்திய அரசாங்கத்தின் அநுமதியைப் பொறுத்தது. எனவே என் பங்குக்கு உண்டான லாபத்தைப் பிறகு பங்கு முதலீடாக மாற்றலாம் என்று பில் மக்கே சொன்னார்.

அடுத்த நாள் காலை பத்து மணிக்கு எங்கள் மூவரின் அறைக்கும் மூன்று தனித்தனி கவர்களில் பத்திரங்கள் வந்து விட்டன!

இது நடந்தது 1976ல்.

நான் இந்தியாவுக்குத் திரும்பிய நேரம்

எனக்குச் சோதனையான காலம்.

எமர்ஜென்ஸி அமலில் இருந்தது!

என் சகோதரியின் கணவர் செ. கந்தப்பன் திராவிட முன்னேற்றக் கழக ஆட்சியின் போது, வாட்டர் போர்டு சேர்மனாக இருந்தவர், மிசாவில் கைதாகிச் சிறையில் இருந்தார்.

அவர் பேரில் விசாரணைகள், வழக்குகள். அதனால் என் வீடு, என் அலுவலகம் எல்லாம் சோத்தனையிடப்பட்டு, இருக்கிற காகிதங்கள், ஃபைல்கள் எல்லாவற்றையும் இன்கம்டாக்ஸ்காரர்கள் எடுத்துச் சென்று விட்டார்கள். "இவை எல்லாம் கந்தப்பனுக்குத் தொடர்பு உள்ளவை!" என்று அபாண்டமாகச் சொன்னார்கள்.

நான் சூழ்நிலையை விவரித்து பில் மக்கேவுக்கு எழுதினேன். என் நம்பிக்கைகள் தவிடு பொடியாகி, எதிர்காலம் இருண்டதாகி விட்டதாகவும், என்னைச் சிறிது காலம் மறந்து விடும்படியும் எழுதினேன்.

மூன்று ஆண்டுகள் ஆயின, நான் நிரபராதி என்றும், என் சகோதரியின் கணவருக்கும் என் வியாபாரத்துக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை என்றும் நிரூபிக்க. சிறிய அளவில், பழைய ஜப்பானிய தொடர்பு நண்பர்களுக்குக் கற்கள் ஏற்றுமதி செய்து சமாளித்துக் கொண்டிருந்தேன்.

திடீரென்று ஒருநாள் பில் மக்கேயிடமிருந்து உடனடியாக தில்லிக்கு வரும்படி ஒரு தந்தி வந்தது. அங்கே அரசு மாறி விட்டது. பில் மக்கேயும் ஸ்வீடன் நண்பர் ஸ்வென் வேலேயும் வந்திருந்தார்கள். நான் தில்லி போய்ச் சேருவதற்கு முன்னாலேயே நிதியமைச்சரிடம் பேசி அனுமதி பெற்று விட்டார்கள்! பிறகு வர்த்தக, தொழில் அமைச்சர் எல்லோரிடமும் என்னை நவீனப் பயிற்சி பெற்றவன் என்று முறையாக அறிமுகப்படுத்தினார்கள்.

அன்றைக்கு ஸ்வீடனில் வித்திட்ட கம்பெனி, உருவாயிற்று.

சில தினங்கள் சென்றன. ஒருநாள் என் சகோதரர் என்னிடம், 'பில் மக்கேவுக்கு ஏதாவது ஆயிற்று என்றால் என்ன செய்வாய்?' என்கிற ரீதியில் நாள் முழுக்க என்னிடம் பேசிக் கொண்டிருந்தார். பிறகுதான் கடைசியில் பில் மக்கே இறந்து விட்டார் என்ற தந்தி வந்திருப்பதைச் சொன்னார்.

பல நாட்கள் நான் சரியாக உறங்க முடியவில்லை. உணவு கூட அருந்த முடியவில்லை. 'எதற்காக இந்த மனிதர் நம் மீது மட்டும் இத்தனை அன்பு செலுத்தினார்? அக்கறை காட்டினார்?' என்று என் மனசுக்குள் குமுறிக் கொண்டே இருந்தேன். ஒருவாறு ஆறுதல் அடைந்ததும் பில் மக்கேவின் மனைவி டோரதியிடம் போனில் பேசி என் ஆழ்ந்த வருத்தங்களைத் தெரிவித்தேன்.

> "ரங்கசாமி கொடுத்த 'மாமூல்' அநியாயமா போயிடிச்சா? எப்படி சார்?"
>
> "ஸ்டேஷன்ல உள்ளே வெளியே விளையாடி அவன்கிட்டயே தோத்துட்டேன்!"
>
> — விஜயலட்சுமி பிரட்ரிக்

அடுத்த தடவை இங்கிலாந்து சென்ற போது, அவர் கல்லறைக்குப் போய்க் கண்ணீர் அஞ்சலி செய்தேன்.

உலகின் பல நாடுகளுக்கும் நான் கற்களை ஏற்றுமதி செய்ய ஆரம்பித்தேன். தமிழ்நாட்டில் மீண்டும் கற்களை வெட்டி எடுக்க முடியாத சூழ்நிலை தோன்றிய போது, வேறொரு நண்பருடன் கர்நாடகாவுக்குச் சென்று கற்களை ஏற்றுமதி செய்ய ஆரம்பித்தேன். அவை உலக அளவில் புகழ் பெற்றன.

79 ஆம் ஆண்டு வாக்கில் இயந்திரங்கள் சிலவற்றை இறக்குமதி செய்து தொழிற்சாலை அமைத்தேன். பெரிய அளவில் ஏற்றுமதிகளைச் செய்தேன்.

80-ஆம் ஆண்டு மீண்டும் அபர்டீன் நகருக்குச் சென்று பில்மக்கேயின் குடும்பத்தாரைச் சந்திக்கப் போனேன். முன்பு இருந்த பிரம்மாண்டமான வீட்டை விட்டு விட்டு, ஒரு சிறிய இடத்தில் மாறி விட்டிருந்தார்கள். பில் மக்கேயின் நினைவு ஒரு சோக ரேகையாக முகத்தில் படர, டோரதியும் குழந்தைகளும் என்னை வரவேற்ற காட்சி என் மனத்தை விட்டு அகலவில்லை. மேற்கத்திய நாடுகளில் தாம்பத்திய உறவு வலு இல்லாதது; கணவன் போய் விட்டால் வேறொரு ஆணுக்கு எளிதில் இடம்கொடுக்கும் மனோபாவம் அவர்களிடம் உண்டு என்றெல்லாம் தவறாக நாமெல்லாம் நினைக்கிறோமே என்ற உணர்வு என்னைச் சஞ்சலப்படுத்தியது.

இந்தத் தொழில் சற்றுக் கடினமான தொழில்.

சீனப் பெருஞ்சுவர், தாஜ்மஹால், எகிப்து பிரமிடுகள் எல்லாமே கற்களால் ஆனவை. மனித நாகரிகத்தின் வளர்ச்சியைக் கற்கள் தான் அடையாளம் காட்டுகின்றன. உலகின்



பல நாடுகளில் பல நினைவுச் சின்னங்களுக்கு நானும் காரணமாயிருக்கிறேன் என்ற பெருமை எனக்கு உண்டு.

பல எதிர்பார்ப்புகள், கனவுகளோடு என் சகோதரர்களையும் இந்தத் தொழிலில் அறிமுகப்படுத்தி வைத்தேன். முன்னேறி வந்த நேரத்தில் -

மறுபடி வந்தது ஒரு சோதனை.

பத்து ஆண்டுகளுக்குக் குத்தகைக்கு எடுத்தாலும், தமிழக அரசாங்கம், ஆறே மாதங்கள் நோட்டீஸ் கொடுத்து, குத்தகையை விலக்கிக் கொள்ள முடியும் என்று உத்தரவு பிறப்பித்தார்கள்.

இது எல்லாருக்கும் பொருந்துமா என்றால், அதுதான் இல்லை! என்னுடைய குத்தகைக்கு மாத்திரம்தான் இந்த உத்தரவு. நூற்றுக்கணக்கானவர்கள் இந்தத் தொழிலில் வெற்றிகரமாக ஈடுபட்டிருக்க, என் சகோதரியின் கணவர் சார்ந்திருந்த கட்சியின் காரணமாக, நான் தனிமைப்படுத்தப்பட்டேன். புறக்கணிக்கப்பட்டேன்.

உங்களுக்குச் சொந்தமமாக என்னதான் திறமை இருந்தாலும், உங்கள் உறவினரோ, நண்பரோ அரசியலில் எதிர் அணியில் இருந்து விட்டால், அவரால்தான் நீங்கள் உயர்ந்தீர்கள், உங்கள் திறமை என்பதெல்லாம் இரண்டாம்பட்சம்தான் என்று கேவலமாக மதிப்பீடு செய்யும் குணம் இங்கே மட்டும்தான் இருக்கிறது!

எனக்கு எந்தவித அரசியல் தொடர்பும் இல்லாத நிலையில் கூட, என் மீது அரசியல் சாயம் பூசப்பட்டது. எதற்கு வம்பு என்று நான் வேறு மாநிலத்துக்கும் தொழிலை விஸ்தரித்திருந்ததால் தப்பிப் பிழைத்தேன்.

இதில் ஒரு வேதனையான வேடிக்கை என்னவென்றால் -

நான் பாடுபட்டுப் பாதை போட்டு, கற்களைக் கண்டுபிடித்த நிலத்தைத்தான், பிறகு வந்த தமிழக அரசு, தங்கள் தொழிலைத் தொடங்க, நான் கண்டுபிடித்த கல்லின் மீதே கூடம் ஏற்றி, சாமி கும்பிட்டார்கள்!

நான் உயர்நீதி மன்றம் சென்றேன். அன்றைக்கு எட்டு லட்ச ரூபாய் விலைமதிப்புடைய, இன்று 25 லட்ச ரூபாய் மதிப்புடைய கற்களை எனக்குத் திரும்பக் கொடுக்க வேண்டும் என்று உயர்நீதி மன்றம் உத்தரவிட்டது. இன்று வரை அந்தக் கற்களும் எனக்குத் திரும்ப வரவில்லை. அதற்கான ரூபாயும் என்னிடம் தரப்படவில்லை!

நான் கோர்ட் அவமதிப்பு வழக்குத் தொடர்ந்திருந்தால், 'வீரமணி இந்த அரசுக்குத் தொல்லை தரும் நோக்கத்திலேயே இந்த வழக்கைத் தொடுத்திருக்கிறார்' என்று எண்ணுவார்கள் என்பதற்காக அதை அப்படியே விட்டு விட்டேன்.

தமிழ்நாடுதான் இப்படியென்றால் வேறு மாநிலம் சென்று தொழில் தொடங்கினேனே, அங்கேயும் ஆபத்து வந்தது.

தொழிலில் புகழும், வெற்றியும் பெற்று விளங்கும் போது வேறு நாடுகளில் பாராட்டுக்களைக் குவிக்கிறார்கள். சரித்திரத்தில் இடம்கொடுக்கிறார்கள்; சிலை வைக்கிறார்கள். மரியாதை செய்கிறார்கள். இங்கே?

எங்களுக்குச் சொந்தமான ஆறு சுரங்கங்கள், வேறு ஒருவருக்குச் சொந்தமான நாலு சுரங்கங்கள் எல்லாவற்றையும் அரசாங்கம் எடுத்துக் கொண்டு விட்டதாக எனக்கு ஒரு நோட்டீஸ்!

கோடிக்கணக்கான ரூபாய்களை நான் வங்கியில் கடனாகப் பெற்று முதலீடு செய்திருந்தேன். இது நடந்தது 84ல்.

அப்போதுதான் முழுக்க முழுக்க எக்ஸ்போர்ட் ஓரியண்டட் யூனிட் ஆக நான் அமைக்க விண்ணப்பித்திருந்தேன்.

உச்சநீதி மன்றம் சென்றேன். அரசு, உச்சநீதி மன்றத்தில் என் வாதத்தை கேட்டு, ஆணையை வாபஸ் பெற்றது. பிறகு -

கர்நாடகாவிலிருந்து ஆந்திரா சென்றேன்.

லட்சக்கணக்கான வருடங்கள் கேட்பாரற்றுக் கிடந்த நிலம். அரசுக்கு விரோதமாகச் சாராயம் காய்ச்சும் இடம். இவற்றில் சங்கடங்களைப் பார்க்காமல், ஊன் உறக்கமில்லாமல், தேடி அலைந்து கற்கள் வெட்டி எடுத்த அனுபவங்களை எண்ணிப் பார்க்கிறேன். ரயிலில் உறங்குவதற்குக் கூட இடம் கிடைக்காமல், இரண்டாம் வகுப்பில் டாய்லெட்டுக்குப் பக்கத்தில் நியூஸ் பேப்பரை விரித்துப் படுத்துப் பயணம் செய்த நாட்கள் எத்தனை, எத்தனை!

ஆனால் இந்தப் பயணங்களும், போராட்டங்களும் வீண் போகவில்லை என்பதே இப்போது ஆறுதலாகத் தோன்றுகிறது.

பேட்டி, கட்டுரை : **சாருகேசி**

# மணிக்கொடி

## 41

ராமசாமி, கங்காதரன், ரமணி ஆகிய மூவரும் அந்தக் கூடத்தில் அருகருகே படுத்துக் கொள்ளுவது வழக்கம். சற்றே தள்ளினாற்போல் விசாலம் படுத்துக் கொள்ளுவாள்.

அதிகாலையில் எழுந்த கங்காதரன் அருகில் ரமணி இல்லை என்பதைக் கவனித்தான்.

மேசை மீது தாள்பளுவின் கீழ் வைக்கப்பட்டிருந்த கடிதம் அவனது பார்வையில் பட்டதும், கங்காதரன் அதைப் படபடப்புடன் எடுத்துப் பிரித்தான்.

'அன்புள்ள அப்பா,

அநேக நமஸ்காரங்கள். எனதருமைத் தாய் நாட்டுக்காக - பாரதமாதாவை அந்நியரின் கொடுங்கோன்மையிலிருந்து விடுவிப்பதற்காக - நானும் எனது பணியைச் செய்யப் புறப்பட்டு விட்டேன். என்னைப் பற்றிக் கவலைப் பட வேண்டாம். அண்ணாவுக்கு நீங்கள் சொன்ன புத்திமதியை நானும் நினைவில் வைத்துக் கொண்டே என் காரியங்களைச் செய்வேன். சிட்டகாங் நோக்கித் தான் செல்லுகிறேன். சூர்யாசென் பயிற்சிக் கூடத்தில் பதின்மூன்று-பதினான்கு வயதுச் சிறுவர்கள் கூட இருக்கிறார்களாம். எனக்கோ பதினேழு வயது ஆகிறது. இவ்வளவு சின்னவர்கள் துப்பாக்கிப் பயிற்சியில் ஈடுபடும் போது என்னால் சும்மா இருக்க முடியவில்லை.

என் செலவுக்காக உங்கள் பர்சிலிருந்தும் பெட்டியிலிருந்தும் முன்னூறு ரூபாய் எடுத்துக் கொண்டிருக்கிறேன். இது திருட்டுதான். மன்னிக்கவும். வெற்றிவாகை சூடித் திரும்ப உங்கள் அன்பு மகனை வாழ்த்துங்கள். கங்காதரனிடமும் சொல்லுங்கள். அத்தை அழுவார். அவரைச் சமாதானப்படுத்த வேண்டியது உங்கள் பொறுப்பு. நான் வருகிறேன். சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு ஓடிப்போய் என்னைத் தேட வேண்டாம். நான் வேறு வழியில் சிட்டகாங்கை அடைவதாக இருக்கிறேன். மறுபடியும் என் பணிவான நமஸ்காரங்கள்.

உங்கள் அன்புள்ள,
ரமணி....'

கங்காதரனுள் வியப்பும் வெட்கமும் பெருகின. 'என்ன துணிச்சல்' என்று பெருமையாகவும் இருந்தது.

"அப்பா, அப்பா! இதைப் பாருங்களேன்," என்று ஓட்டமும் நடையுமாகப் போய் முகம் துடைத்தபடி கூடத்துக்கு வந்து கொண்டிருந்த அவரிடம் அவன் ரமணியின் கடிதத்தைக் கொடுத்தான்.

"என்னடா? எதுக்கு இப்படி அலறிண்டு ஓடி வரே?" என்றவாறு அதை வாங்கிப் படிக்கத் தொடங்கிய ராமசாமி சட்டென்று தம்மை ஆட்கொண்ட தளர்வில் பக்கத்திலிருந்த நாற்காலியில் உட்கார்ந்தார்.

"என்ன, ராமசாமி? என்ன கடுதாசி கையிலே?" என்று கேட்டுக் கொண்டே விசாலம் அங்கு வந்து விட்டாள்.

அத்தை மயக்கம் போட்டு விழப் போகிறாளே என்ற பயத்தில் கங்காதரன் அவளை வலுக்கட்டாயமாகத் தரையில் உட்கார்த்தினான்.

"அக்கா, நான் இப்ப சொல்லப் போறதை நீ பதறாம கேக்கணும். என்ன?"

"என்னடா சொல்லப் போறே?"

"... நம்ம ரமணி கல்கத்தா பக்கம் ஓடிப் போயிட்டான்."

"என்னது? ஓடிப் போயிட்டானா? ரமணியா? என்னடா சொல்றே?"

"ஆமாம்க்கா. ஓடித்தான் போயிட்டான். இந்தா, நீயே படிச்சுப்பாரு. கடுதாசி எழுதி வெச்சுட்டுப் போயிருக்கான்" - கண் கலங்கியபடி தன்னிடம் ராமசாமி நீட்டிய கடிதத்தை நடுங்கிய கைகளில் வாங்கிக் கொண்டு விசாலம் கண்களை மலர்த்திக் கொண்டு அதைப் படிக்கத் தொடங்கினாள்.

படித்துக் கொண்டிருக்கையிலேயே பொங்கிப் பொங்கி அழுதாள்.

"கொழந்தைகள் எதிர்லயே அந்த மணவாள நாயுடுவோட இவன் சுட்டான், அவன் செத்தான்னு சதா சர்வகாலமும் வியாக்கியானம். சின்ன வயசுல பதியறதுதானே மனசுல தங்கும்? ஓடிட்டான்! அடியே, குஞ்சம்மா!

ஜோதிர்லதா கிரிஜா

நீ மகராஜி, இந்தக் கஷ்டங்களையெல்லாம் அனுபவிக்காம பகவான்கிட்டப் போய்ச் சேர்ந்துட்டே. என்னோட தலை எழுத்து, எல்லாத்தையும் உனக்குப் பதிலா நான் அனு பவிச்சுண்டு இருக்கேண்டியம்மா, நான் அனுபவிச்சுண்டு இருக்கேன். கடவுளே. இப் படியும் புத்தி போகுமோ ஒரு பிள்ளைக்கு! போன பிள்ளை உசிரோட திரும்புவான் கிறதுதான் என்ன நிச்சயம்?''

"அக்கா! ரமணி கெட்டிக்காரன். பத்திர மாத் திரும்பி வந்துடுவான். நீ வேணாப்பாரு," என்று தமக்கே ஏற்படாத நம்பிக்கையைத்



தமக்கைக்கு ஊட்ட முயன்றவாறு ராமசாமி தாமும் கண்கலங்கிப் போனார்.

தம்பியின் துணிச்சலான முடிவும், கடிதமும் படிப்பை முடித்த பிறகே தேச விடுதலைப் போராட்டத்தில் இறங்க வேண் டும் என்பதாய்த் தான் செய்து வைத்திருந்த முடிவு தவறானதோ என்று கங்காதரனை நினைக்க வைத்தன. ஆனாலும் படிப்பு முக் கியமில்லையோ, படிப்பாளிகள் நாட்டுக்குத் தேவை இல்லையோ? மாணவர்களை அர சியலில் காந்தி ஈடுபடுத்தக்கூடாது என்று அன்னிபெசண்ட் கூட அறிக்கை விட்டாரே? யார் சொல்லுவது சரி? காந்தி சொல்லுவதா இல்லாவிட்டால் அன்னிபெசண்ட் சொல் லுவதா? அப்பா சொல்லுவது மாதிரி இரண்டு புத்திசாலிகள் ஒரே மாதிரி நினைக்க மாட்டார்களோ? இந்த இரண்டு பேரில் யார் சரி, யார் தப்பு என்பதைக் காலம்தான் உணர்த்த வேண்டும்.... யோசிக்க யோசிக்கப் படிப்பை முடித்துக் கொண்டு பிறகு களத்தில் குதிக்க வேண்டியதுதான் என்கிற தன் பழைய முடிவைத் திரும்பவும் மனத்துள் அவன் உறுதிப்படுத்திக் கொண் டான்.

ரமணி கடிதம் எழுதிவைத்து விட்டு ஓடிப் போய்விட்டதைப் பற்றி ராஜாராம னின் வீட்டாரிடம் சொல்ல அவன் மனம் பரபரத்தது. முக்கியமாய்ப் பவித்திராவிடம் சொல்ல அவன் துடித்தான். அன்று மாலை




கங்காதரன் பவித்திராவின் வீட்டுக்குப் போனான். கல்லூரியில் அவள் தன்னைத் தேடி இருப்பாள்; வராதது வியப்பளித்திருக் கும் என்றெண்ணியபடி அவன் அவள் வீட் டினுள் நுழைந்த போது மாலை மணி நான்கு ஆகியது. வீட்டில் அஞ்சனாவும் அமராவதி யும் மட்டும் இருந்தார்கள்.

எடுத்த எடுப்பில் அவன் சேதியைச் சொன்னதும் அஞ்சானவும் அமராவதியும் வியந்து திடுக்கிட்டார்கள்.

"இவ்வளவு சின்ன வயசுல இப்படி தீவி ரமா? உங்கத்தையும் அப்பாவும் அழுதிருப் பாளே?" என்றாள் அஞ்சனா.

"அத்தை அழுது தீர்த்துட்டா. அப்பாவுக் குக் கண் கலங்கித்து. வெளியில காட்டிக்காம இருக்கார்னு தோணறது" என்ற கங்காதரன் மற்ற விவரங்களையும் தெரிவித்தான்.

''பவித்திராவை வளர்த்து ஆளாக்க வேண்டிய பொறுப்பு மட்டும் எனக்கு இல் லாம இருந்திருந்தா நானும் சூர்யாசென் மாதிரி ஒருத்தர் நடத்தர இயக்கத்துல கண்டிப்பா சேர்ந்துதான் இருப்பேன். வெள் ளைக்காரா பண்ற அக்கிரமங்களைப் பார்க் கிறப்ப கொதிக்கிறதே'' என்றாள் அமராவதி.

"நீயும் தேசவிடுதலைப் போராட்டம் அது இதுன்னு கௌம்பினா உங்கப்பா, பாவம், அப்புறம் என்ன பண்ணுவார்? மனசுக்குள்ள இருக்குமோல்லியோ - அவரும் ஒரு விடுத லைப் போராட்டக்காரர்னாலும்?" என்றாள் அஞ்சனா.

கங்காதரன் பதில் சொல்லவில்லை.

சற்றுப் பொறுத்துக் கல்லூரியிலிருந்து பவித்திரா வந்து சேர்ந்தாள். அவளிடமும் கங்காதரன் கடிதத்தைக் காட்டி, ரமணி செய் ததைச் சொன்னான். பவித்திரா வியந்து போனாள்.

"படிப்பை முடிக்காம இப்படிப் போயிட் டானே?'' என்று அங்கலாய்த்தாள்.

எல்லாரும் உட்கார்ந்து கொஞ்ச நேரம் வெள்ளைக்காரன் செய்ததும் இன்னும் செய்து வருவதுமான அக்கிரமங்கள் பற்றிப் பேசினார்கள். சற்றுப் பொறுத்து அஞ்சனா வும் அமராவதியும் எழுந்து போக, தனித்து விடப்பட்டதும், "பவித்திரா! உங்கிட்ட முக் கியமான ஒரு விஷயம் சொல்லணும்" என் றான் கங்காதரன்.

''என்ன, கங்கா? என்ன சொல்லப் போறே? நீயும் நம்ம நாட்டு விடுதலைப் போர்ல படிப்பு முடிஞ்சதும் குதிக்கப் போறே? அதானே?''

"அதுதான் ஏற்கெனவே உனக்குத் தெரி யுமே? இது வேற," என்ற கங்காதரன் ஆழ மாக அவளை நோக்கினான். பிறகு, "இப்ப வேண்டாம். நாளைக்குக் காலேஜ்ல சொல் றேன்'' என்றான்.

"அதென்ன இவ்வளவு தயங்கறே? ஒரு சீரியஸான விஷயம் ஆரம்பிச்சுட்டு இப்படி சஸ்பென்ஸ் வைக்கிறேயே, கங்கா? இது நன் னாருக்கா? எனக்கு இன்னிக்கு ராத்திரி பூரா சிவராத்திரிதான்."

"இல்லே, பவித்திரா! என்னை வற்புறுத் தாதே. நாளைக்குக் கட்டாயம் சொல்லிட றேன்... இன்னும் சொல்லப் போனா, நான் சொல்ல நினைக்கிறதையெல்லாம் ஒரு லெட் டரா எழுதிக் குடுத்துடறேன்... நேர்ல சொல் றதுக்கு எனக்குத் தைரியம் வரமாட்டேங்க றது....."

அவன் எழுந்து நடக்கத் தொடங்கி னான். பவித்திரா வேறு வழி இல்லாமல் அவனைப் பின்தொடர்ந்து வாசலுக்குச் சென்று வழியனுப்பினாள்.

## 42

சென்ட்ரலுக்கு வந்து அப்பா தேடக் கூடாது என்பதற்காக வேறு வழித்தடத்தில் தான் சிட்டகாங் போவதாய்க் கடிதத்தில் ரமணி குறிப்பிட்டிருந்த போதிலும், கல்கத்தா போய் அங்கிருந்து ஜாதிமல்லி சிட்டகாங் செல்ல அவனுக்கு வேறு வழி ஏதும் தெரிய வில்லை. எனவே கிளம்பி அன்று பூராவும் சென்னையில் ஒரு புறநகரில் தங்கியபின். மறுநாள் புறப்பட்டுக் கல்கத்தா செல்லும் இரயிலில் மூன்றாம் வகுப்புப் பயணச் சீட் டுடன் ஏறிக் கொண்டான். கையில் மாற்று டைகளும் சில புத்தகங்களும் இருந்த துணிப் பை மட்டுமே. பணத்தை மேல் சட்டைப் பையில் பாதியும், கால் சட்டைப் பையில் பாதியுமாய்ப் பத்திரம் கருதி வைத்துக் கொண்டான்.

இரயில் பெட்டியில் ஏறி உட்கார்ந்ததிலிருந்து அது கிளம்பியவரையில் அவன் இதயம் தடதடத்துக் கொண்டிருந்தது. ஒரு வழியாய்க் காதுகள் கிழிய ஊதியபின் புகை விட்டுக் கொண்டு அது புறப்பட்ட பிறகு தான் அவனுக்கு அப்பாடா என்றிருந்தது.

யாரேனும் தெரிந்தவர்கள் பார்வையில் பட்டுவிடக் கூடாது என்பதற்காக அவன் கூட்டம் இல்லாத பெட்டியில் ஏறி இருந்தான். ஒரு கண்ணோட்டம் விட்டு, அந்தப் பெட்டியில் தன்னையும் சேர்த்து ஐந்தே பேர்கள் இருந்ததைக் கண்டான். இரண்டு இளைஞர்கள், இரண்டு முதியவர்கள். இளைஞர்கள் இரண்டு பேரும் ரவுடிகள் போன்று தோற்றங் கொண்டிருந்தனர். அவன் மனத்தில் இனம் புரியாத அச்சத்தை அவர்கள் கிளப்பினார்கள். தனியாகப் பயணம் செய்து கொண்டிருந்ததால் விளைந்துள்ள அச்சம் என்று சமாதானமடைய முயன்றான், முடியவில்லை. இருவரும் அவனை அடிக்கடி பார்த்துத் தங்களுக்குள் தாழ்ந்த குரலில் உரையாடிக் கொண்டது அவனது அடிவயிற்றில் ஒரு கலக்கத்தை விளைவித்தது.

"தம்பி எங்கிட்டுப் போறாப்ல?" என்று பெரியவர் விசாரித்தார்.

"கல்கத்தாவுக்குப் போறேன்..."

"தனியாவா போறே?"

"ஆமா."

"கல்கத்தாவில யாரு இருக்காங்க?"

ரமணி எச்சில் விழுங்கினான். அடுத்த வினாடியே சுதாரித்துக் கொண்டு "எங்க அத்தை இருக்கா. அவளுக்கு உடம்பு சரி இல்லை. அதான் போறேன்" என்றான். "நீங்க ரெண்டு பேரும் எந்த ஊருக்குப் போறீங்க?"

"நாங்க கூடுர்லே இறங்கிடுவோம், தம்பி. இன்னிக்கு என்னவோ வண்டியில் கூட்டத்தையே காணோம். ஒருக்கா இன்னும் போகப் போக சனம் ஏறுமோ என்னமோ.... ...ஏந் தம்பிங்களா, நீங்க ரெண்டு பேரும் எந்த ஊருக்குப் போறீங்களாம்?" என்று அவ் விளைஞர்களை நோக்கிப் பெரியவர் கேட்டார்.

இருவரில் ஒல்லியாகவும் உயரமாகவும் - அதனாலோ என்னவோ சற்றுக் கூனலுடனும் - இருந்தவன் உடனே, "கல்கத்தாவுக்கு போறோம், பெரியவரே," என்று பதில் சொன்னான்.

"இந்த தம்பியும் கல்கத்தாவுக்குத்தான் போகுதாம். கேட்டுட்டிருந்தியள்ள? கொஞ்சம் பாத்துக்குங்க. அறியாப் பிள்ளையா இருக்கான்."

"சரிங்க, பெரியவரே. நல்லாவே கவனிச்



"அந்த ஆள் இவரை பீஸ் பீஸா கிழிச்சுட்டான். டாக்டர்கிட்டே கூட்டிக்கிட்டுப் போனாங்க."

"அப்புறம்?"

"டாக்டர் இவரை **Fees, Fees**-ஆ கிழிச்சுட்டார்."

- வெ. ராஜாராமன்

சுக்குறோம்," என்று அடுத்தவன் குறுக்கிட்டுச் சொல்லி விட்டுத் தன் நண்பனைப் பார்த்துச் செய்த புன்னகையில் கள்ளம் இருந்ததாய்ப் புலப்பட்டதில் ரமணிக்கு நா உலர்ந்து போயிற்று.

அக்கம்பக்கத்துக்காரர்களுக்கெல்லாம் ரமணி ஓடிப் போய் விட்ட சேதி தெரிய வந்து, நிறையப் பேர் வந்து 'துக்கம்' விசாரித்து விட்டுப் போனார்கள். ஆறுதல் சொன்னார்கள்.

விசாலம் இளைக்கத் தொடங்கி இருந்தாள். கண்களுக்குக் கீழ் கருவளையங்கள் தோன்றத் தொடங்கிவிட்டன. முகத்துக் களை போய்விட்டது. கண்களில் எந்நேரமும் ஒரு வெறித்த பார்வை குடி கொண்டிருந்தது.

ராமசாமியின் துயரம் இப்படியெல்லாம் பெரிய அடையாளங்களுடன் வெளிப்படா விட்டாலும், அவரது முகம் வாடித்தான் போய் விட்டது. உள்ளூற மறுகினார் என்பது தளர்ந்த அவரது நடையில் துல்லியமாக வெளிப்பட்டது.

ரமணி புறப்பட்டுப் போன பதின்மூன்றாம் நாள் ராமசாமியின் பெயருக்கு ஒரு தந்தி வந்தது. பரபரப்புடன் அதைப் பிரித்துப் படித்தவர் விழிகளிலிருந்து கண்ணீர் பெருகியது.

"என்ன தந்தி அது, ராமசாமி?" என்று கேட்டபடி தம்பியை நெருங்கிய விசாலம் அவரது கண்ணீரைக் கவனித்ததும் பதறிப் போனாள்.

"ரமணி வந்துடுவான். நான் போய்க் கூட்டிண்டு வரணும்," என்றார் மொட்டையாக.

விசாலம் ஒன்றும் புரியாமல் அவரைப் பார்த்தாள்.

*(தொடரும்)*

# பொங்கல் ரிலீஸ் - பம்பர் அறுவடை!

கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த எல்லா ரசிகர் மன்றங்களிலும் மீண்டும் பரபரப்பு. 'டாப் செவன்' என்று கருதப்படும் எல்லா கதாநாயகர்களின் படங்களும் கிட்டத்தட்ட பொங்கல் அன்று ரிலீஸ் ஆகின்றன. 'கிட்டத்தட்ட' என்ற வார்த்தைக்குக் காரணம் கார்த்திக் நடிக்கும் 'நந்தவனத் தேரு' ரிலீஸ் தள்ளிப் போடப் பட்டிருக்கிறது. வெவ்வேறு காரணங்கள் சொல்லப்பட்டாலும் 'உலகத் தமிழ் மாநாட்டுக் காகச் சில குட்டிப் படங்களை எடுக்கும் பணியை மாநில அரசு இயக்குனர் உதயகுமாரிடம் ஒப்படைத்ததுதான் அதிகப் பொருத்தமான காரணமாகத் தெரிகிறது.

கதாநாயகர்களில் கமல், ரஜினி, சத்யராஜ், வியஜகாந்த், சரக்குமார், பிரபு ஆகியோரின் படங்கள் ஊர்வலம் வருகின் றன. இயக்குனர்களில் பாக்யராஜ், மணிரத்னம், பாலுமகேந் திரா, வாசு, சந்தானபாரதி, வி.சேகர் போன்ற திறமைசாலி களின் கைவண்ணங்கள் சின்ன கவுண்டர் இந்தப் போட்டிக் களத்தில் குதித்துள்ளன.

பால்காரராகவும், பாடகராகவும் ரஜினிகாந்தை இயக்கி வெற்றி கண்ட சுரேஷ் கிருஷ்ணா, அவரை ஆட்டோ டிரை வராக பாட்ஷாவில் தோன்ற வைத்து, ஹாட்-ட்ரிக் அடிக்கும் நம்பிக்கையில் உள்ளார். படக் கதையைக் கேட்டால் 'உறம்' ஹிந்திப் படம் நினைவுக்கு வருகிறது. ('உறம்' படத்தில் அமிதா பின் தம்பியாக ரஜினி தோன்றினார்) பாட்ஷா படத்தில் ஊறுகாயாகப் பயன் படுத்தப்பட்டிருப் பது கதாநாயகி நக்மா மட்டுமல்ல, இந்து-முஸ்லீம் ஒற்றுமையும் கூடவாம்.

பாடல்கள் தேவா-வைரமுத்து காம்பினேஷன். மீட்டருக்கு மேல் போட்டுக் கொடுக்க ரசிகர்கள் தயாராயுள்ள போது ஆட்டோ பிரேக் டவுன் ஆகிவிடுமா என்ன!

இயக்குனர் வாசுவிடம் அஸோஸியேட்டாகப் பணி புரிந்து வந்த அருள், தனித்து இயக்கும் முதல் படம் வேலுச் சாமி. 'நாட்டாமை' அளித்த வெற்றித் தெம்பில் சரத்குமார் ரசிகர்கள் இந்தப் படத்தையும் நம்பிக்கையோடு எதிர்பார்க் கிறார்கள். எண்ணெய் நாட்டிலிருந்து (துபாய்) வந்த வெண் ணெய் வினிதா ஒரு கதாநாயகி. சரத்தின் மீது ஒருதலைக் காதல் கொள்பவர். மற்றொரு நாயகி ஸ்ருதி. 'ஸ்ரீ கிருஷ்ணா' டீ.வி.தொடரில் ராதையாக வரும் பம்பாய் நடிகை... பொள் ளாச்சியில் படப்பிடிப்பு நடந்தது என்று சொன்னால் 'பழைய நியூஸ்' என்று சூள் கொட்டுவீர்கள். என்றாலும், அங்கு சரத், சிறுத்தை ஒன்றுடன் போராடி வெல்லும் காட்சி படமாக்கப் பட்டிருக்கிறது என்பது தெரியுமா? சிறுத்தையை ஜெயித்தவர் சினிமா ஜல்லிக்கட்டில் தேறி வருவாரா பார்க்க வேண்டும்!

கமலின் சொந்தத் தயாரிப்பில் பாலுமகேந்திரா முதன் முறையாக இயக்கப் பொறுப்பை ஏற்கிறார். படம்: 'சதி லீலாவதி' சதியாகத் தோன்றுபவர் கல்பனா. ரமேஷ் அரவிந்த் அவரது பதி. அவரைக் கோவலனாக்கும் மாதவியாக ஹீரா. படத்தில் கல்பனாவுக்கு ஆதரவாக, யுத்தக் கொடி பிடிக்கும் தம்பதியராக கமல்-கோவை சரளா. கமல் பானரில் கதாநாயகனாக நடிக்க ஒப்பந்தமானதற்காக ரமேஷ் அரவிந்த் மகிழ்ந்து போயிருக்கிறார். அதே சமயம் "நான்கு காட்சிகளில் மட்டுமே முதலில் நடிப்ப தாக இருந்த கமல் கதையின் போக்கால் கவரப்பட்டு ஒரு முக்கியமான பாத்திரத்தை ஏற்று நடிக்க, இது கிட்டத் தட்ட கமல் படமாகிறது" என்கிறது ராஜ் கமலின் முன்னோட்டம். கமலின் இந்தப் படத்துக்கு இசை (வேறு யார்?) இளையராஜா. வசனகர்த்தா கிரேஸி மோகன். சிரிப்புடன் சிந் தனை ஃபார்முலா போலும்!

மெல்லிசை மன்னர் கள் மீண்டும் இணைந்த முதல் படம் என்கிற வகை யில் செய்திகளில் அடிபட் டது 'எங்கிருந்தோ வந்தான்'. தொடர்ந்து ஏழு நிமிடங் களுக்கு தூய கர்நாடக இசையில் டைட்டில் சாங் எஸ்.பி.பி.யின் குரலில் ஒலிக் குமாம். விநியோகஸ்தர் களாக இருந்த வி.எஸ்.ஆர். பிக்சர்ஸின் முதல் தயாரிப்பு இது. இயக்கம் சந்தான பாரதி. கொலைக்குற்றம் சாட்டப்பட்ட ஒருவன் தன் நல்ல நடத்தையால், அன் பால், ஒரு பகுதியின் மக்கள் அனைவரையும் கவர்கிறார் என்பதே கதை. கவர்பவர் சத்யராஜ். கவர்பவரைக் கவர்பவராக ரோஜா. எல் லோரும் சேர்ந்து ரசிகர் களைக் கவர்ந்தால் சரிதான்!

அடக்கி ஆளும் அம்மா, பொருமும் மனைவி ஆகியோருக்கிடையே சிக்கி அவதிப்படும் நாயகனைப் பற்றிய குடும்பப் போராட் டப் பின்னல்தான் 'நான் பெத்த மகனே'. 'நான் புடிச்ச மாப்பிள்ளை'க்குப் பின் குடும்பப் பட இயக்

குனர் சேகரின் இயக்கத்தில் நிழல்கள் ரவி கதாநாயகப் பதவி பெற்றிருக்கிறார். ராதிகா, ஊர்வசி, மனோரமா ஆகியோருக்கு முக்கிய ரோல்கள். படத்தின் ஹைலைட்டுகளில் ஒன்றாகக் குறிப்பிடப்படுவது – எட்டு கிழவிகளுக்கு இந்தப் படம் முழுதும் ரன்னிங் ரோலாம்! படம் தள்ளாடாது என்று நம்புவோம்!

ஒருவழியாக 'பம்பாய்' ரிலீஸாகிறது. 'ரோஜா'வின் நாடு தழுவிய வெற்றிக்குப் பிறகு, மணிரத்னம்–ரஹ்மான்-அரவிந்த் சாமியின் இந்த இணைப்பு முயற்சியை வட இந்தியாவில் (கூட) எதிர்பார்க்கிறார்கள். விளம்பரப் பட உலக வித்தகர் ராஜீவ் மேனன் இதில் ஒரு காமெரா புரட்சியே நிகழ்த்தியுள்ளாராம்! மனிஷா கொய்ராலா, டினு ஆனந்த் போன்ற இந்தி முகங்களும் இடம் பெறுகிறார்கள். நாசருக்கும் அழுத்தமான ரோலாம். பம்பாய் குண்டு வெடிப்புச் சம்பவங்களின் மையத்தில் இந்து–முஸ்லிம் ஒற்றுமையை அடிக்கோடிட்டிருக்கிறார்கள்.

"நான் பேசுவதை விட, என் படங்கள் பேசுவதையே விரும்புகிறேன்" என்று சொல்லும் இயக்குனரின் சமீபத்திய அபூர்வ பேட்டியிலிருந்து ஒரு கேள்வி பதில்:

**கேள்வி:** தமிழரான நீங்கள் பம்பாய் குண்டுவெடிப்பு நிகழ்ச்சிகளை மையமாக வைத்துப் படம் பண்ண நினைத்தது எப்படி?

ப: நான் இந்தியன். பம்பாய் இந்தியாவில் தானே இருக்கிறது!

'கட்டுமரக்காரன்' பட இயக்குனர் பி.வாசு. "படத்தில் சென்டிமென்ட்டான காட்சிகளுக்குப் பஞ்சம் இருக்காது" – இது நம் கமென்ட் இல்லை; இயக்குனரின் ஒப்புதல் வாக்குமூலம்! கட்டுமரக்காரனாக வரும் பிரபுவின் வலையில் சிக்கும் இரு மீன்களில் ஒருவர் சங்கவி. மற்றவர் பம்பாய் வரவான கரினா குரோவர் – ஹேமா – அஞ்சலி (இந்த வரிசையில் அவரது பெயர் மாற்றப்பட்டிருக்கிறது) சரிந்து வரும் பிரபுவின் மார்க்கெட்டை 'கட்டுமரக்காரன்' தூக்கி நிறுத்தட்டும்.

பாட்டி கதை தொடக்கம், பாக்யராஜ் படத் தலைப்பு. "ஒரு ஊர்ல ஒரு ராஜகுமாரி". 'ராஜகுமாரி மாதிரி ஒருத்தி உனக்கு மனைவி ஆவாள்' என்று பாட்டி சொல்லப் போக, அதை நாயகன் நம்புகிறான். நிஜமான ராஜகுமாரியே (மீனா) ஒரு வேலைக்காரி போல அவனது வாழ்க்கையில் குறுக்கிடுகிறாள்! கதையில் ஈர்க்குச்சி பலம் தான் இருக்கிறது! என்றாலும் பாக்யராஜுக்கு நம்பிக்கை பலம்! "உழைப்பினால் ஒருவன் உயரும்போது அவனுக்கு சமூகத்தில் கிடைக்கும் மதிப்பே தனிதான் என்பதையும், கல்யாணம் என்பது காதலை அடிப்படையாகக் கொண்டிருக்கக் கூடாது என்பதையும் படத்தில் சுட்டிக் காட்டியிருக்கிறேன்" என்கிறார்.

'தடா'வின் தவறான பிரயோகத்தையும், ஆன்மிகத்தைத் தவறான முறையில் பயன்படுத்துபவர்களையும் (பிரேமானந்தா போன்ற கெட்–அப்பில் வில்லன் உண்டு) ஒரு பிடிபிடிக்கிறார் விஜய்காந்த். படம்: கறுப்பு நிலா. கேப்டனின் படங்கள் சமீபத்தில் இறங்குமுகத்தையே கண்டுவருவதால் துவண்டிருக்கும் அவரது ரசிகர்கள் இந்தப் படத்தால் உற்சாகம் பெறும் நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். 'ஊமை விழிகள்' அரவிந்தராஜ்தான் இப்படத்தை இயக்குகிறார். குஷ்பூவை நாயகியாகக் கொண்ட இப்படத்தின் சிறப்புக் காட்சிகளில் ஒன்று கோவாவில் படமாக்கப்பட்ட ஹெலிகாப்டர் சண்டைக் காட்சியாம்!



கிளைமாக்ஸ் சண்டைகள் ஒருபக்கம் இருக்க, பாக்ஸ் ஆஃபீஸ் யுத்தத்தில் எந்தப் படம் ஜெயிக்கப் போகிறது என்பதுதான் இன்று சம்பந்தப்பட்ட பலரின் நகங்களைக் காணாமல்போகச் செய்து கொண்டிருக்கிறது!

– **அருண் சரண்யா**

# வட்டமேஜை

## கால்பக்க கருமித்தனம் நீடூழி வாழ்க!

♦ ஊழல் நடந்தால் என்ன, ஊதாரித்தனம் பெருகினால் என்ன, என் கவனம் நாற்காலி மீதுதான் என்கிற எண்ணத்தோடு, தான் தோன்றித்தனமாகக் கோலோச்சி வரும், நரசிம்மராவுக்கு அருமையான அறிவுரை வழங்கியுள்ளீர்கள் தலையங்கத்தில்!

கும்பகோணம், கே. என். பாலகிருஷ்ணன்.

♦ தலையங்கம் சிந்திக்க வைத்தது. ஊழலில் சிக்கியது ஒரு ஆள் அல்லது இரண்டு பேராக இருந்தால் நடவடிக்கை எடுக்கலாம். முக்கால்வாசிப் பேர் ஏதாவது ஒரு முறைகேட்டில் சம்பந்தப்பட்டு இருப்பதால் யாரை நீக்குவது என்பதே ராவின் குழப்பம். மிதமிஞ்சிய மெஜாரிட்டி, அரசாங்கத்தையே ஊழல் செய்யத் தூண்டும். மெஜாரிட்டிக்கு கையேந்தும் அரசால் ஊழலைத் தடுக்க முடியாது. ஆசீர்வாதம் தான் செய்ய முடியும்.

தஞ்சாவூர்,
வளர்மதி ஆசைத்தம்பி.

♦ பார்த்திபன் கனவில் 'கல்கி' காட்டியிருக்கும் விரசமில்லாக் காதல், 'மணிக்கொடி'யில் வரும் மென்மையான காதல், 'காதல் தடியா' சிறுகதை, வாழ்வைக் காதலிக்க வழிகாட்டும் சுமந்த் குமார் பற்றிய கட்டுரை, காரத்துக்குள் இனிப்பைக் கீர்தலிக்கச் சொல்லும் ந.வே. அருள் கவிதை, உலகளந்தானைக் காதலிக்கும் ஆண்டாள், உலகையே காதலிக்கச் சொல்லும் தெரசா... இது சிரிப்புச் சிறப்பிதழா? காதல் சிறப்பிதழா?

திருவண்ணாதபுரம்,
முகதி. சுபா.

♦ ஆந்திர அண்ணாவுக்கு, தமிழகத் தங்கை தந்த 'அட்வைஸ்'கள் சிரிப்புச் சிறப்பிதழின் ஹைலைட்!

காளையார்கோவில்,
கே. பாண்டியராஜன்.

♦ நேரடி 'சிரிப்'போர்ட்டில் 1928ல் இளைஞர்களுக்கு வைத்த போட்டியின் முடிவை ஒரு கிழவர் ஆசிரியரிடம் வந்து கேட்பது செம சிரிப்பு!

மணியக்காரன்பாளையம்,
கோ. கல்யாணசுந்தரம்.

♦ முதல் பக்க சிரிப்புக் கும்பலுக்கிடையில் 'அட! நம் பிரதமரும் சிரிக் கிறார்!' ஆச்சரியந்தான் போங்கள்!

திருச்சிராப்பள்ளி,
ச. நாகராஜன்.

♦ மூன்று படங்களுக்கு கால் பக்கத்தில் விமர்சனமா? சபாஷ்! உங்கள் கருமித்தனம் நீடூழி வாழ்க!

திருச்சி - 20,
எஸ். வி. பார்த்தசாரதி.

♦ கல்கியில் வெளிவரும் போட்டிக் கதைகள் ஒவ்வொன்றும் வைரம் போல ஜொலிக்கின்றன என்பதற்கு சோமசேகர பாகிமானின், 'மரம் வைத்தவர்கள்' மேலும் ஓர் எடுத்துக்காட்டு. யதார்த்தமான அழகுநடை.

சென்னை - 24,
வை. ஆனந்தராஜ்.

♦ 'அன்னை தெரசாவின் காலை நேரப் பிரார்த்தனை' என்ற தலைப்பில் நான் எழுதி வெளியிட்ட 'கவின் மிகு கல்கத்தா' என்ற நூலிலிருந்து, ந.க. பரமசிவம் தொகுத்ததை வெளியிட்டிருக்கிறீர்கள். அத் தகவலில் அதை எழுதியவன் என்ற வகையில் என் பெயரையும் வெளியிட்டிருக்கலாமே?

சென்னை - 17,
மு. செல்வராசன்.

**(வாசகர்கள் தகவல் துணுக்குகள் எழுதி அனுப்பும் போது முழு விவரங்களையும் குறிப்பிட வேண்டுகிறோம். - ஆர்.)**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-

# மணிக்கொடி

43

ஜோதிர்லதா கிரிஜா

அந்தமானின் சிறைச் சாலையில் நரேந் திரநாத் பானர்ஜியும் அவனு டைய நண்பர்களும் அடைக்கப்பட்ட அன்றே முன்னாள் கைதி விநாயக் தாமோ தர் சாவர்க்கர் இருந்த சிறையறைக்குரிய ஜமேதாரின் அறிமுகம் அவர்களுக்குக் கிடைத்தது. அவருடன் பேச்சுக் கொடுத்து அவரைப் பற்றி விசாரிக்க வேண்டும் எனும் ஆவல் அவர்கள் யாவருக்குமே ஏற்பட்டது. சாவர்க்கர் அடைக்கப்படிருந்த சிறையறை யின் கதவு இலக்கம் ஏழு என்பதை அவரிட மிருந்து தெரிந்து கொண்ட அவர்கள் தங் கள் அறைகளிலிருந்து அழைத்துச் செல்லப் பட்டபோது அவ்வறையை ஒருவகை பக்தியு டன் கடந்தார்கள்.

"ஜமேதார்! நீங்கள் அன்பானவராய்த் தெரிகிறீர்கள்," எனும் பாராட்டு மொழியு டன் ஒரு வாய்ப்பான கணத்தில் பேசத் தொடங்கிய நரேந்திரநாத் பானர்ஜி, "விநா யக் தாமோதர் சாவர்க்கர் இங்கு சிறைப்பட் டிருந்த போது நடந்த சம்பவங்களைச் சொல் லுவீர்களா? அவரை நாங்கள் பெரிதும் போற்றுகிறவர்கள்" என்று பீடிகை போட்டு விட்டு ஆவலுடன் அவரது முகத்தைப் பார்த்தான்.

நடுத்தர வயதில் இருந்த அந்த ஜமேதார் உண்மையில் அன்புள்ளம் கொண்டவராகத் தான் இருந்தார். "விநாயக் தாமோதர் சாவர்க் கர் மட்டுமின்றி அவருடைய மூத்த சகோத ரர் கணேஷ்ராவ் சாவர்க்கரும் இங்கேதான் சிறைப்பட்டிருந்தார். அந்தச் செய்தி உங்





ஏமாந்தோம்; எச்சரிக்கிறோம்!

**சமீபத்தில் தாதர் எக்ஸ்பிரஸ் ஏஸி பெட்டியில் என் கணவரும் நானும் பயணம் செய்தோம். ரயில் புறப்பட சில நிமிஷங்கள் இருந்தபோது சீருடை அணிந்த ஒருவர் "பெட் ரோல் வேணுமா?" என்று அனைவரிடமும் விசாரித்தார். படுக்கை தேவைப் பட்டவர்கள் எல்லோரும் ஆளுக்குப்பத்து ரூபாய் தந்தோம். வண்டி புறப்பட்ட பிறகு கண்டக்டரிடம் பெட்ரோல் கேட்டால், "நான் இன்னும் ரவுண்ட் வந்து பணமே வாங்கலையே" என்றார். பிறகுதான் சீருடையில் யாரோ வந்து ஏமாற்றி விட்டது தெரிய வந்தது. மறுபடி ஆளுக்குப் பத்து ரூபாய் அழுதோம்!**

**— ரா. லக்ஷ்மி**

---

களுக்குத் தெரியுந்தானே? நான்தான் ரோல் காலின் போது ஒருவரை ஒருவர் மிக அருகில் பார்த்து ஓரிரு வார்த்தைப் பரிமாற்றம் செய்து கொள்ள அவர்களுக்கு உதவினேன். இதில் வேடிக்கை என்ன தெரியுமா? தம்பி விநாயக் தாமோதர் சாவர்க்கர் அங்கேயே மற்றொரு சிறையறையில் அடைபட்டிருந்த விஷயம் அண்ணன் கணேஷ்ராவ் சாவர்க் கருக்கு அதுவரையில் தெரிந்திருக்கவில்லை. தம்பியைப் பார்த்து அண்ணன் வியப்பும் அதிர்ச்சியும் - ஏன்? வேதனையும்தான் - அடைந்தார். ''அண்ணா!'' எனும் ஒரு சொல்லை மட்டுமே அந்தச் சந்திப்பின் போது விநாயக் தாமோதர் சாவர்க்கரால் உச் சரிக்க முடிந்தது. ரோல் காலின் போது யாரும் பேசக்கூடாதாகையால் நான் அதற்கு மேல் அவர்கள் பேசிக்கொள்ள அனுமதிக்க முடியாது போயிற்று."

அந்த ஜமேதாரைக் கட்டித் தழுவ வேண் டும்போல் நரேந்திரநாத் பானர்ஜிக்கு இருந் தது.

''உண்மையில் நீங்கள் மிக நல்லவர், ஜமேதார்."

"ஒரு மனிதாபிமானம்தான். வேறொன் றும் பெரிதாக இல்லை. நண்பனே... அதுசரி, விநாயக் தாமோதர் சாவர்க்கர்தான் 1921லேயே இங்கிருந்து விடுதலையாகி இந்தியாவுக்குக் கொண்டு செல்லப் பட்டு விட்டாரே. அங்கு நீங்கள் அவரைச் சந்தித் துப் பேசவே இல்லையா?"

"ரத்தினகிரி ஜில்லாவில் அவரை வைத் திருக்கிறார்கள். அதாவது சிறை என்றில்லா மல் அந்த ஜில்லாவை விட்டு அவர் வெளியே எங்கும் போகக் கூடாது என்று கட்டுப்படுத்தி வைத்திருக்கிறார்கள். ரத் தினகிரியில் அவரை எங்களால் சந்திக்க முடியவில்லை. எங்கு சென்றாலும் போலீ சார் தொடர்ந்தார்கள். நாங்கள் அனை வருமே தேடப்பட்டு வந்தவர்களாயிற்றே?"

"இங்கே அண்ணனும் தம்பியும் பேசிக் கொள்ள முடியாது; ரகசிய கடிதப் பரிமாற் றம் செய்துகொள்ள நான் உதவினேன். ஆனால் அக்கடிதங்களைப் படித்துவிட்டுத் தான் அவர்கள் கையில் கொடுப்பேன். ஏனெனில், ஆபத்தான கடிதப் போக்குவரத் தாக இருப்பின், நான் மாட்டிக் கொண்டு விடக் கூடாதல்லவா? அதற்காகத்தான்."

"இரண்டு சகோதரர்களும் இங்கே கடு மையாக வேலைவாங்கப்பட்டார்களா?..."

''பின்? தென்னைமரப் பட்டைகளை உளியாலும் மரச்சுத்தியாலும் அவர்கள் துண்டுகளாக்க வேண்டும். கொஞ்ச நாட்கள் கழித்து இருவருக்கும் செக்கு இழுக்கும் வேலை தரப்பட்டது. ஒரு நாள் அவ்வாறு எண்ணெய் செக்கை இழுக்கும் போது விநாயக் தாமோதர் சாவர்க்கருக்கு ரொம் பவும் தாகம் ஏற்பட்டு விட்டது. வேர்த்து விறுவிறுத்த நிலையில் குடிக்கத் தண்ணீர் கேட்டார். கைதிகளின் மேற்பார்வையாளர், 'ஒரு கைதிக்கு நாள் ஒன்றுக்கு இரண்டு தம்ளர் தண்ணீர்தான் தரப்படவேண்டும். நீயோ இன்று மூன்று தம்ளர் குடித்தாகிவிட் டது. இனியும் கேட்டால் எப்படி?' என்று இரக்கமற்று மறுத்துவிட, சாவர்க்கர் அரை மயக்கத்துடன் சாய்ந்தார். அவரை மறு படியும் கிளப்பி அந்த அதிகாரி செக்கிழுக்க வைத்தார். இவற்றையெல்லாம் பார்க்கும் போது கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆனால் கூலிக்கு வேலை செய்யும் நாங்கள் செய்யக் கூடியது என்ன?"

நரேந்திரநாத் பானர்ஜியின் கண்களில் நீர் நிறைந்து போயிற்று.

"ஒரு முறை விநாயக் தாமோதர் சாவர்க் கருக்குத் தற்கொலை செய்துகொள்ளும் எண் ணம் கூட வந்ததாம். 'வெட்டியாகச் சிறை யில் காலம் முழுவதும் கழித்தபடி இருப்ப தால் நாட்டுக்கு என்ன லாபம்!' என்ற எண் ணத்தால் வந்த சோர்வு. ஆனால் முடிவில் எப்படியோ அந்த மனப்பான்மையை அவர் ஜெயித்து விட்டார்... ஆனால், அவர் மாதிரி எல்லாராலும் உறுதியுடன் இருக்க முடிய வில்லை. நிறைய இந்திய அரசியல் கைதிகள் தற்கொலை செய்து கொண்டுள்ளார்கள். நிறையப் பேருக்குப் பைத்தியம் பிடித்துள் ளது.

நரேந்திரநாத் பானர்ஜியின் விழிகளில் விளிம்பு கட்டி நின்ற கண்ணீர், திவலை களாய் அவன் கன்னங்களில் உருண்டு விழுந்து சிதறிற்று.

"அப்புறம் உங்கள் விநாயக் தாமோதர் சாவர்க்கர் சிறையின் சுவர்களில் அரசியல் பாடங்களை எழுதிச் சக கைதிகளுக்குப் போதித்தார். அதற்கான அடையாளங்கள் அச்சுவர்களில் இன்னமும் இருக்கின்றன. ஒரு வாய்ப்பான நேரத்தில் நான் உங்களுக் குக் காட்டுகிறேன்."

"ஆச்சரியமாயிருக்கிறதே! என்ன பாடம் நடத்தினார்?"

"அரசியல், பொருளாதாரம் போன்றவற் றில். 'இந்தியா நிச்சயம் ஒருநாள் அன்னிய ஆதிக்கத்திலிருந்து விடுதலையடையவே செய்யும். அப்போது நாட்டை ஆளவேண் டிய பொறுப்புக்கு நாம் ஆளாகும்போது இந்தப் பாடங்கள் நமக்கு உதவியாக இருக் கும்...' என்று அவர் சொல்லுவதுண்டு."

அப்போது காலடிச் சத்தம் கேட்க, "ஜெயிலர் வருகிறார். நீங்கள் வேலை செய் யுங்கள்," என்றார் ஜமேதார். கைதிகள் அனைவரும் மும்முரமாய்த் தங்கள் மரம் வெட்டுதல், செக்கிழுத்தல், கல்லுடைத்தல் போன்ற வேலைகளில் ஈடுபடத் தொடங் கினார்கள்.

## 44

சாப்பாட்டுக்கான மணியடிக்க, அனைவரும் முகத்து வேர்வையை வழித்துத் துடைத்துக் கொண்டே எழுந்து நடக் கலானார்கள். ஜமேதார் கைதட்டியதும் சில சிறைக்காவல் ஊழியர்கள் அங்கு தோன்றி, கைதிகளுக்கு முன்னும் பின்னும் துப்பாக்கி ஏந்தியவாறு நடந்தார்கள்.

வேலையில் ஈடுபடாத தருணங்களிலும் பேசமுடியாத சமயங்களிலும் நரேந்திரநாத் பானர்ஜியின் சிந்தனை பவித்ராவையும் அம ராவதியையும் பற்றியதாகவே இருந்தது. பவித் ராவைச் சந்தித்த பின்னர் தான் ஒரு பொறுப் பான தகப்பன் என்ற உணர்வு தன்னிடம் மேலோங்கிவிட்டதாய் அவனுள் ஒரு சிலிர்ப் புப் பரவியது. 'நான் ஒரு தந்தை... நான் ஒரு தந்தை... அதிலும் திருமண வயதை நெருங்கிக் கொண்டிருக்கும் அழகான, தேசபக்தி நிறைந்த, படித்த பெண்ணின் தந்தை....'– நரேந்திரநாத்துக்கு உடனே சென்னைக்கு எப்படியாவது பறந்து போய்விட முடியாதா என்றிருந்தது. 'என் அன்பு மகளைப் பார்த் துக் கொண்டே இருக்க... அவள் செயல் களைக் கவனித்துக் கொண்டே இருக்க... நிழலாய் அவளைத் தொடர்ந்து அவளுக்கு

ஒரு பாதுகாப்பாய் இருக்க... இன்னும் அவள் தேவைகள் இன்னின்ன வென்பதை அறிந்து அவற்றையெல்லாம் கூடுமான வரையில் செயல்படுத்த...'– நரேந்திரநாத்தின் விழிகளில் ஈரம் படர்ந்தது.

மகளைச் சந்தித்ததும் அமராவதி பற்றிய நினைவுகள் சற்றே பின்னுக்குத் தள்ளப்பட்டு விட்டனவோ என்று அடுத்த கணத்தில் அவன் ஒரு குற்ற உணர்வுடன் நினைத்து வெட்கமுற்றான். 'இல்லை, இல்லை. அமராவதி எப்போதும் எனது நினைவில் தோன்றியவாறாக இருந்து எனது நெஞ்சத்தோடு நெஞ்சமாக அப்படியே உறைத்து விட்டவள். தனியாக அவளை நினைப்பது என்பதே அபத்தமானது என்கிற அளவுக்கு என்னில் கரைந்து விட்டவள்' என்று எண்ணிய நரேந்திரநாத், விழிகள் நனைய உணர்ச்சி வசப்பட்டபடி நடந்தான்.

சாப்பாட்டுக் கூடத்துக்குச் செல்லும் பாதையில் ஓர் அறை தென்பட்டது. அங்கு சுவரில் தொங்கவிடப்பட்டிருந்த இரும்பு விலங்குகள் சன்னல்வழியாக நரேந்திரநாத்தின் பார்வையில் பட்டன. சற்றே தயங்கி நின்று தினுசு தினுசான அந்த விலங்குகளைப் பார்த்த பின் நகர்ந்தான்.

"என்ன பார்க்கிறீர்கள்? உமக்கு மாட்டப்படும் விலங்குகளிலிருந்து அவை மாறுபட்டவை. இவற்றில் ஒரு வகை விலங்கினைக் கைதிக்குப் பூட்டினால், அவனால் கொஞ்சங் கூடக் குனிய முடியாது. எப்போதும் விறைப்பான நிலையில் நிற்கத்தான் வேண்டி இருக்கும். க்ராஸ் பார் ஃபெட்டர்ஸ் என்று ஒரு வகை. அவை கால்கள் இரண்டையும் பிணைப்பவை. அந்த நிலையில் கால்களைத் தேய்த்துத் தேய்த்து அங்குலம் அங்குலமாகத்தான் நகர்ந்தாக வேண்டும். அடி எடுத்து வைத்தல் என்பதே முடியா்த காரியம். இப்படிப்பட்ட விலங்குகளே மாற்றி மாற்றி விநாயக் தாமோதர் சாவர்க்கருக்கு மாட்டப்பட்டன."

நரேந்திரநாத் பானர்ஜிக்கு இரத்தம் சூடு கொண்டது. கண்கள் சினத்தில் விரிந்து சிவந்தன. "அட பாவிகளா!" என்று முணுமுணுத்தான்.

ஜமேதார் அவனது சிந்தனையில் குறுக்கிட்டார். "இன்னொரு வகை விலங்கு கூட உண்டு. சுவரில் பதிந்துள்ள வளையங்களில் சாவர்க்கரின் கைகளைக் கோத்துப் பூட்டி விடுவார்கள். ஆக, சுவரோடு கைகள் பதிந்திருக்கும் நிலையில் அவரால் சுவரையே பார்த்தபடி நின்று கொண்டிருக்கத்தான் முடியும்."

தன் மனத்துள் விளைந்த அதிர்ச்சியில் நரேந்திரநாத் பேசாதிருந்தான். இதற்குள் சாப்பாட்டுக் கூடம் வந்துவிட எல்லாரும்

அதனுள் புகுந்தபின் கூடத்தின் கதவு பூட்டப்பட்டது. தரையில் வரிசையாகப் போட்டு வைக்கப் பட்டிருந்த – துப்புரவாய்த் துலக்கப்படாத – கறை படிந்த அலுமினியத் தட்டுக்களையும், தூசு படிந்த தரையையும், அதில் தத்தித் தத்திப் பறந்த ஈக்களையும் பார்த்ததும் நரேந்திரநாத்துக்கும் அவனுடைய தோழர்களுக்கும் குமட்டிக் கொண்டு வந்தது.

“பசி வயிற்றைக் குடைகிறது. வெறும் இலைகளைக்கூட நான் தின்னத் தயாராகத் தான் இருக்கிறேன்.” என்று மல்ஹோத்ரா சிரித்தான்.

அலுமினியத் தட்டுகளில் களியும் பச்சை வெங்காயமும் பரிமாறிக் கொண்டிருந்த ஊழியனை அணுகிய நரேந்திரநாத், “கை கழுவிக்கொள்ள வேண்டுமே? தண்ணீர்த் தொட்டி இருக்கிறதல்லவா?...” என்றான். பக்கத்தில் இருந்த பழைய கைதிகள் சிரித்தார்கள்.

“குடிப்பதற்கே இங்கு தண்ணீரை ஆளுக்கு இத்தனை கோப்பை என்று அளந்து தான் தருகிறார்கள். கையாவது கழுவுவதாவது?”

எல்லாவற்றுக்கும் ஒரே கையைப் பயன்படுத்துவதால் தனது வலக்கை மற்றவர்களுடையதை விட அதிக அசுத்தமாக இருக்கும் என்று எண்ணி, அதை துப்புரவாக்க சோப்புக் கேட்டுப் பார்க்க வேண்டுமென்று நினைத்திருந்த நரேந்திரநாத்துக்கு இந்தப் பேச்சு வலுவான அறைமாதிரி வந்து விழுந்தது.

“மண்ணிலும் மரத்திலும் இரும்பு ஆயுதங்கள் பிடித்து வேலை செய்து விட்டுக் கைகழுவாமல் சாப்பிடுவதா? இதென்ன அக்கிரமம்?”

“அங்கே என்ன பேச்சு? என்ன வாக்குவாதம்?” என்று அதிகாரமாக வினவியபடி மேற்பார்வையாளன் அங்கு வந்தான்.

“இவருக்குக் கை கழுவத் தண்ணீர் வேண்டுமாம்.”

“பாத்ரூமுக்குப் போய்க் கழுவிக் கொள்.”

“அங்கே குழாயில் தண்ணீர் வரலையே!”

“உன் மூத்திரத்தில் கைகழுவிக் கொள் என்றேன்...”– இவ்வாறு சொல்லி விட்டு அந்த வெள்ளைக்காரன் சிரிக்க, நரேந்திரநாத்தின் உடம்பு முழுவதும் அதிர்வு கண்டது. புலிபோல் உக்கிரத்துடன் பாய்ந்து அவனது முகத்தில் ஒரு குத்துவிட்டான். தாக்கப்படுவோம் என்பதை எதிர்பாராது அசட்டையாக இருந்ததால் நிலைகுலைந்து மல்லாந்து விழுந்த அவன், துப்பாக்கிக்காக இடுப்புப் பட்டியில் தனது கையை ஆவேசத்துடன் வைத்தான்.

(தொடரும்)

தமது 32-வது பிறந்த நாளை ரசிகர்களுடன் கொண்டாடி வித்தியாசப் படுத்தினார் நெப்போலியன். அன்றைய தினத்தை முழுக்க முழுக்க ரசிகர்களுடனேயே கழித்தார்; ரசிகர்களுக்கு விருந்தும் கொடுத்தார். "தலைவா! நீங்க எந்த கேரக்டரில் வேண்டுமானாலும் நடிங்க. ஆனா, இந்த அரிவாள் தூக்கற கேரக்டரில் மாத்திரம் நடிக்காதீங்க..." என்று ரசிகர்கள் அன்போடு கேட்டுக் கொண்டார்களாம்.

"எனக்கு இலக்கணம் பிடிக்கும்; தலைக்கனம் பிடிக்காது. சதையை நம்பிப் படம் எடுக்காமல் கதையை நம்பி எடுக்கிறேன். தடம் மாறாமல் ரசிகர்களின் மனத்தில் இடம் பிடிக்கிறேன். வார்த்தையில் மட்டும் இல்லை; வாழ்க்கையிலும் நான் எதிர்நீச்சல் போடுகிறேன்!'' இப்படியொரு பதிலை நம்மிடம் சொன்னவர் யாராய் இருக்குமென்று இந்நேரம் தெரிந்திருக்குமே! கரெக்ட்! டி. ராஜேந்தர் தான்!



* குஷ்பு : வித்தியாச வேடம்!

## ராஜ்கிரணைக் கோபப்பட வைத்தவர்!

"என் ராசாவின் மனசிலே படத்திலிருந்து இப்போதைய எல்லாமே என் ராசாதான் படம் வரை அவனுக்குச் சான்ஸ் கொடுத்தேன். ஆனால் வரம் கொடுத்தவன் தலையிலேயே கையை வைக்கிறான். தனக்கு உடல்நிலை சரியில்லையென்பதால் இன்று வருகிறேன், நாளை வருகிறேன் என்று சொல்லிச் சொல்லியே என்னைப் பொள்ளாச்சியில் நான்கு நாட்கள் காக்க வைத்துவிட்டான். சென்னைக்கு வந்து பார்த்த போது அவன் வேறு படப்பிடிப்புகளில் கலந்து கொண்டிருக்கிறான். எதற்காக என்னிடம் பொய் சொல்ல வேண்டும்? எனக்கே அல்வாவா? இனி அவன் என் படங்களில் நடிக்க மாட்டான்!" - இப்படிக் கோபப்பட்டுச் சொன்னவர்: ராஜ்கிரண். கோபப்பட வைத்தவர் : வடிவேலு.

ஆடு, மாடு, கோழி, யானை, பாம்பு, குரங்கு என்று வைத்து ராமநாராயணன் மட்டும்தான் படமெடுப்பாரா? என்னாலும் முடியும் என்று 'சின்னத் தங்கம்' மூலம் நிரூபிக்கிறார் ஸ்ரீபத்மம்.

மாதுரி நடத்திக் கொண்டிருந்த துணிக்கடையும் சினிமாவைப் போலவே காலைவாரி விட்டு விட்டதால் கடையை விற்பனை செய்து விட்டார்.

* நெப்போலியன் : 32வது பிறந்த நாள்



தாம் ஒன்றும் துணிக்கடை பொம்மை அல்ல; தம்மாலும் கேரக்டர் ரோல்களில் நடிக்க முடியும் என்பதை 'முத்துக் குளிக்க வாரீயளா' படத்தின் மூலம் குஷ்பு நிரூபித்திருப்பதாகச் சொல்கிறார்கள்.

— ராம் கம்பர்

ஓர் ஆள் இல்லாத நேரத்தில் அவரது பெட்டியையோ பையையோ குடைந்து உள்ளே என்ன இருக்கிறது என்று ஆராய்வது அநாகரிகமே என்றாலும், தன் சொந்த மகளின் விஷயத்தில் நாகரிகத்தை மீறும் முடிவுக்கு அமராவதி வந்தாள். பவித்ரா கல்லூரிக்குப் போயிருந்த வேளையில் - பிற் பகலில் அஞ்சனா குட்டித் தூக்கம் போட்டுக் கொண்டிருந்த போது, அவள் மகளின் அறையைச் சோதிக்கலானாள். கடைசியில் அவள் தேடியது கிடைத்து விட்டது.

அவள் துணிகள் வைக்கும் டிரங்குப் பெட்டியிலிருந்து அது கிடைத்தது.

'அன்புள்ள பவித்ரா,

எவ்வளவு மனச்சுமையுடனும் தாங்க முடியாத துயரத்துடனும் இக் கடிதத்தை நான் எழுதுகிறேன் என்பதை நீ அறிய மாட் டாய். நேரில் உன்னிடம் இது பற்றி விரி வாகச் சொல்ல நினைத்தும் உன்னைப் பார்த் ததும் எனக்கு வாயடைத்துத்தான் போய் விட்டது.

அப்போது நமக்குக் கல்யாணம் ஆகி விட் டிருந்தால், உனது நிலை மிக மோசமானதாக இருக்கும். இதில் எனக்குச் சம்மதமில்லை.

என் பவித்ரா இளவயதிலேயே விதவை யாகி, அவளை மணக்க எவனும் முன்வராத நிலையில், தனிமையில் வாடிச் சீரழிந்து போவதை என்னால் கற்பனை கூடச் செய்ய முடியாது. எனவே உன் மீதுள்ள காதலை நசுக்கி விடுவது எனும் தவிர்க்க முடியாத தீர்மானத்துக்கு நான் வந்து விட்டேன்.

சிறு வயதுப் பிணைப்பைத் தவிர நாமி ருவரும் மிக மிகத் தூய்மையானவர்கள். நமது பார்வைகள் கூடப் பரிசுத்தமானவையாகவே இது வரையில் இருந்து வந்துள்ளன. இனியும் இருக்கும். உலகத்தில் காதல் ஒன்றுதான் ஆண் - பெண் இடையே மலரக்கூடிய அன்பா என்ன? நான் அப்படி நினைக்க வில்லை. நல்ல நண்பர்களாக இருப்போம்.

பவித்ரா, அறிந்தோ அறியாமலோ நான் உன் உள்ளத்தில் ஏற்படுத்தி இருக்கக்கூடிய சலனங்களுக்காக என்னை அன்பு கூர்ந்து மன்னித்து விடு. காதல் முறிவைப் பெரிதாக

# 45 மணிக்கொடி

பவித்ரா எனது காதலை உன்னிடம் நான் வெளியிட்ட மூன்றாவது நாளே இப்படி ஒரு கடிதத்தை எழுதும் துர்ப்பாக்கியத்துக்கு ஆளாவேன் என்று நான் நினைக்கவே யில்லை.

வாஞ்சிநாதனைப் பற்றி நீ கேள்விப் பட்டிருக்கிறாய்தானே? அவர் ஓர் இளம் மனைவியை வாழ முடியாதவளாக விட்டு விட்டு இறந்து போன அவலம் குறித்து நான் நேற்று வரையில் சிந்தித்தே பார்க்கவில்லை. அதற்காக நான் மிகவும் வெட்கமும் வேதனையும் படுகிறேன். அந்தப் பெண் தன் கணவனுடன் ஒரு நாள் கூடச் சேர்ந்து வாழ்ந்ததாய்த் தெரியவில்லை என்று பேச் சுவாக்கில் என் அப்பா சொன்ன போது, எனக்குச் சுருக்கென்றது. மகாத்மா காந்தி விதவைகளின் திருமணம் குறித்து எவ்வளவு தான் எழுதியும் பேசியும் வந்தாலும் நம் ஜனங்கள் அவ்வளவு இலேசில் மாற மாட் டார்கள் என்பது உனக்குத் தெரியும். சுதந்திரப் போராட்டக் களத்தில் குதிக்கப் போகும் எனக்கு, நாளைக்கு ஏதேனும் நேர்ந்தால் உனது நிலை என்ன என்பதை நினைத்துப் பார்த்ததுமே என் மனம் அதிர்ந்தது.

எடுத்துக் கொள்ளாதே. நாட்டில் இன்று ஏராளமான பிரச்னைகள் உள்ளன. நமது காதல் அவற்றுக்கு முன்னே அற்பமானது. மிக மிகச் சிறியது. அதைப் பொருட்படுத்தா திருக்க நாம் கற்க வேண்டும். அதற்குரிய மனப்பக்குவத்தை நாம் அடைய வேண்டும்.

'நானும்தானே நாட்டு விடுதலைப் போராட்டத்தில் குதிப்பதாக இருக்கிறேன்?' என்று நீ கேட்கக்கூடும். பெண்களின் நிலை சந்தர்ப்பங்களாலும் சூழ்நிலைகளாலும் மாறக்கூடியது. எங்கள் நிலை அப்படி இல்லை. ஒருவேளை மணவாழ்க்கைக்கு நீ உன் குடும்பத்தினரால் கட்டாயப்படுத்தப் படலாம். அப்போது நான் உனக்கு ஒரு பிரச்னையாவதை என்னால் தாங்க முடியாது. எனவே நமது பழைய நிலையை மறந்து விடு. இது உனது நம்மைக்காகவே... என்றும் உன் அன்பு நண்பன், கங்கா..."

கடிதத்தை இரண்டாவது தடவை படித்து விட்டு, மடித்து முன்பு இருந்தபடியே வைத்து விட்டுப் பெட் டியை மூடிய அமரா வதி, பெருமூச்சு விட்ட படி கூடத்துக்குப் போய்

திர்லதா கிரிஜா

அஞ்சனாவுக்குப் பக்கத்தில் படுத்துக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தாள்.

கங்கா புத்திசாலி என்று அவளுக்கு நிச்சயமாய்த் தோன்றிற்று. அதனால்தான் 'பெண்களின் நிலை சந்தர்ப்பங்களாலும் சூழ் நிலைகளாலும் மாறக்கூடியது' என்று இரத் தினச் சுருக்கமாய்ச் சொல்லி விட்டான் தன் கடிதத்தில். 'என்னுடைய நிலை, அப்படித் தானே மாறிப் போயிற்று. யாரும் நிர்ப் பந்திக்கவில்லைதான். அப்பாவையும், அஞ் சனாவையும், என் வயிற்றில் வளர்ந்து வந்த குழந்தையையும் உத்தேசித்து நானாகவே தான், நான் மேற்கொள்ள நினைத்திருந்த வாழ்க்கையைக் கைவிட்டேன். வயிற்றில் வளர்ந்து வந்த கருவுக்கு முன்னால் வேறு எந்த இலக்கும் எடுபடாது போயிற்று. என்ன தான் சமத்துவம் பேசினாலும், தமக்கென்று இயல்பாக உள்ள அதிகப்படியான பாச உணர்வாலும், பொறுப்பு உணர்வாலும் பெண், சிலவற்றை விட்டுக் கொடுக்கும்படி ஆகி விடுகிறது. உணர்ச்சிபூர்வமான அன்பு செலுத்துதல் என்ற நிலைக்கு முன்னால் வேறு எதுவும் பெண்ணைப் பொறுத்த மட்டில் அடித்துச் செல்லப்பட்டு விடுகிறது. அதனால்தான், தான் எடுத்துக் கொள்ள விரும்பும் உரிமைகளைப் பெரும்பாலும் அவள் விட்டுக் கொடுக்கவோ இழந்து விடவோ நேர்கிறது... இவ்வாறு காலங்கால மாக விட்டுக் கொடுத்து வந்துள்ள நிலையை அவளது கடமை என்று மற்றவர் நிர்ப்பந் திக்க நேர்ந்து விட்டது...' - தனது மனம் செய் யத் தொடங்கி விட்ட ஆராய்ச்சி குறித்து அவளே சிரித்துக் கொண்டாள்.

**பெ**ஜவாடா இரயில் நிலையத்தை ராமசாமியும் மணவாள நாயுடுவும் அடைந்த போது, அதிகாலை ஆறரை மணி ஆகியது. நிலையத் தலைவர் சத்தையாவை உடனேயே இருவரும் சந்தித்தார்கள். வண்டி கூடூரைத் தாண்டி விரைவு கொண்டதும், ரமணியுடன் பயணம் செய்து கொண்டிருந்த இரண்டு இளைஞர்கள் அவனிடமிருந்த பணத்தைப் பிடுங்க முயன்றதாகவும் ரமணி அவர்களை எதிர்த்துப் போராடியதில் பலத்த காய மடைந்து விட்டதாகவும், ஒரு பாலத்தில் ரெயில் வேகம் குறைந்த போது, இரண்டு ரவுடிகளும் குதித்து ஓடி விட்டதாகவும் திக் பிரமை பிடித்துப் போனவன் போன்ற நிலை யில் பெஜவாடா நிலையத்தில் ரெயில் நின்ற தும் ரமணி சில பயணிகளால் கண்டுபிடிக் கப்பட்டதாகவும், அதன் பிறகு தாம் அவனை மருத்துவ விடுதியில் சேர்த்ததாக வும் அவன் தன்னினைவு பெற்ற பின்னரே அவருக்குத் தகவல் தர முடிந்ததாகவும் அவர் தெரிவித்தார். தம் உதவியாளரிடம் பணியை ஒப்படைத்து விட்டு, அருகிலேயே இருந்த மருத்துவ விடுதிக்குச் சத்தையா இருவரையும் அழைத்துப் போனார். ராமசாமி அவரது கையைப் பிடித்துக் கொண்டு கண்ணீருடன் பன்முறை நன்றி சொன்னதை அவர் அடக் கத்துடன் ஏற்றார்.

வழியில், "இப்போது கொஞ்சம் பர வாயில்லையா, மிஸ்டர் சத்தையா?" என்று ராமசாமி விசாரித்தார்.

"எவ்வளவோ பரவாயில்லை. நீங்கள் இங் கேயே தங்கிச் சிகிச்சை செய்வதாக இருந் தாலும் சரி, அல்லது மெட்றாசுக்கு அழைத் துப் போனாலும் சரி. ஆனால் மெட்றாஸ் தான் நல்லது."

"இதுவரையில் நீங்கள் என் மகனுக்காக எவ்வளவு தொகை செலவு செய்திருக் கிறீர்கள்?"

சத்தையா புன்னகை புரிந்தார். "அவன் சேர்க்கப்பட்டிருப்பது சர்க்கார் ஆஸ்பத்திரி. செலவெல்லாம் அவர்களுடையதே. அவனை அங்கு வண்டியில் எடுத்துப் போனது, கடந்த ஒரு வாரமாகச் சாப்பாடு, அதாவது வீட்டிலிருந்து கஞ்சி அனுப்புவது போன்ற சின்னச் சின்ன உதவிகளையே செய்துள்ளேன். அதற்கு ஆன தொகை மிக மிக அற்பமானது. அது மனிதாபிமானமுள்ள எவரும் செய்திருக்கக்கூடியது. அதை நீங்கள் பெரிதுபடுத்தலாகாது, மிஸ்டர் ராமசாமி."

"தேங்க்யூ, மிஸ்டர் சத்தையா."

**ரா**மசாமியைப் பார்த்ததும் ரமணி மெதுவாய்ப் படுக்கையில் எழுந்து உட் கார்ந்தான். மிகவும் இளைத்தும் கறுத்தும்

"நம்ம தலைவர் வீர பாண்டிய கட்ட பொம்மன் படத்தை பல தடவை பார்த்திருப்பார் போலிருக்கு!"

"எப்படி சொல்றே?"

"ஒரு பதவி போட்டுத் தாங்க தலைவரே'னு கேட்டதுக்கு, எனக்கு கட்-அவுட் வைத்தாயா, காலில் விழுந்தாயா, பேப்பரில் விளம்பரம் கொடுத்தாயா'னு வசனம் பேசினாரே!'

– எஸ். முகம்மது யூசுப்



போயிருந்தான். முகத்தில் குற்ற உணர்வும் வெட்கமும் பெரிய அளவில் வெளிப் பட்டன. தன் படுக்கையை அணுகிக் கொண்டிருந்த அவரது முகத்தை நேருக்கு நேர் பார்க்க முடியாமல் தலையைக் கவிழ்த்துக் கொண்டு, அவன் கண்ணீர் விடத் தொடங்கினான். அவனது வலக்காலில் பல மான கட்டுப் போடப்பட் டிருந்தது.

ராமசாமி அவனுக்கு அருகே உட்கார்ந்து அவன் தோளில் கை போட்டுக் கொண்டார். மணவாள நாயுடு, ''அழாதேப்பா, ரமணி. உன்னோட ஆர்வம் அந்தக் காலத்துலயே எங் களுக்கு வந்திருந்தா இந் நேரம் இந்த நாடு சுதந்திரம் அடைஞ்சிருக்கும்...'' என் றார்.

''கால்ல பலமான அடியா?''

''ஆமாம்ப்பா. ரெண்டு பேரும் மாத்தி மாத்தி அடிச்சு நொறுக்கிட்டாங்க.''

''ஆமா, மிஸ்டர் ராம சாமி. குறைஞ்சது இன்னும் ஒரு மாசமாவது பெட்ல இருந்தாகணும். பெஜவாடாவை விட மெட்றாஸ் பெட் டர்னு நினைக்கிறேன். நான் வேனுக்கு ஏற்பாடு பண்ணிக் குடுத்துடறேன். நீங்க அவனை அங்கேயே கூட்டிண்டு போயி டலாம். உங்களுக்கும் நிம்மதியா இருக்கும்.''

அவர்கள் பேசிக் கொண்டிருக்கை யிலேயே படுத்துக் கொண்ட ரமணி தன்னை யும் அறியாது கண்ணயர்ந்தான்.

''தினமும் செடேடிவ் தர்றாங்க. அதான் பையன் தூங்கிட்டான்.''

''அவன் எதிர்ல உடனே விவரமா கேக்க வேண்டாம்னு இருந்தேன். கால் முறிவுன் னீங்களே? அப்ப...''

''ஆமா. இனி அவன் காலைச் சாச்சு சாச் சுத்தான் நடப்பான்னு டாக்டர் சொல் லிட்டார்.''

ராமசாமியின் கண்கள் நொடிக்கும் குறைவான நேரத்துள் நிறைந்து விட்டன.

''டேக் இட் ஈஸி, ஈஸி. என்ன பண்ண முடியும், மிஸ்டர் ராமசாமி? ஏதோ இந்த மட்டும் தப்பினானே உங்க பிள்ளை? அதை நினைச்சு சந்தோஷப்படுங்கோ. ரெயில் லேருந்து உருட்டித் தள்ளி இருந்தாங்கன்னா? இல்லே, மண்டையில அடிச்சு, மூளை கலங்கி இருந்தா? அதுக்கெல்லாம் இது எவ் வளவோ பரவாயில்லேல்லே? அப்படி நெனச்சுத்தான் நாம ஆறுதல் அடையணும்.''

ஞானம் மிக்க சத்தையாவின் மொழிகள் அந்த நேரத்தில் ராமசாமியின் துயரத்தைக் கணிசமான அளவுக்குக் குறைக்கவே செய் தன. இருப்பினும், 'சுதந்திரப் போராட்டத் துல ஈடுபடப் போறேனாக்கும், சூர்யாசென் னோட படையில சேரப் போறேனாக்கும் னெல்லாம் சொல்லிட்டிருந்த பையனுக்கு இனி அதைச் செய்ய முடியாத நிலை ஏற் பட்டது பெரிய துரதிருஷ்டந்தான்...' எனும் எண்ணம் வரவே செய்தது.

''இன்னிக்கு நீங்க ரெண்டு பேரும் நம்ம வீட்லயே தங்கலாம். இங்கேயே என்னோட குவார்ட்டர்ஸ் இருக்கு. வசதியானது. கூச் சப்படாம தங்கணும்...'' என்றவாறு சத்தையா இருவர் தோள்கள் மீதும் கைவைத்தார்.

மறுநாளே சத்தையா ஏற்பாடு செய்து கொடுத்த வேனில் ரமணியுடன் ராம

சாமியும் மணவாளநாயுடுவும் புறப்பட்டார்கள்.

## 46

ரமணியின் முறிந்த கால் உட்காயம் ஆறவும், எலும்பு ஒட்டவும் சரியாக இரண்டு மாதங்கள் போலாயின. ஒரு கால் குட்டையாகிப் போனதில் அவனால் விரைவாக நடக்கக்கூட முடியாமல் போயிற்று. அந்த ஆண்டு அவனது படிப்பும் தடைப்பட்டு விட்டது.

ஒருநாள் காலையில் கங்கா அவனுக்குக் காப்பி எடுத்து வந்து கொடுத்து விட்டு, அவனுக்கு எதிரே தானும் கையில் காப்பியுடன் உட்கார்ந்து, ''என்ன, ரமணி? எப்படி இருக்கே? கால் இப்ப முழுக்க முழுக்கவே சரியாயிடுத்து இல்லியா?'' என்று கேட்ட போது, அவன் கசப்புடன் வாய் விட்டுச் சிரித்தான்.

“நடக்க முடியறது, ஆனா ஓட முடியாதே. வெள்ளைக்காரனை விரட்றதுக்கும் ஓட முடியாது, அவன் துரத்தினா தப்பிக்கிறதுக்கும் ஓட முடியாது. அதை நினைச்சுட்டாத்தான் ஒரு மாதிரியா இருக்கு'' - இவ்வாறு சொல்லி விட்டு ரமணி கடகட வென்று சிரித்த போது, கங்காவுக்குப் பாவமாக இருந்தது.

அப்போது அங்கு வந்த விசாலம் “எப்பவும் அந்த வெள்ளைக்காரன் ஞாபகந்தானா? விட்டுத் தள்ளு. நீ ஒருத்தன்தான் இந்த தேசத்துல வீரனா? வேற எத்தனையோ பேரு இருக்கா. அவா பாத்துப்பா'' என்றாள்.

“ஓடியாடக் கால் இல்லாம இப்ப நான் நொண்டியாயிட்டதால இனிமே கட்டாயமா நான் காந்தி வழியிலதான் போயாகணும். வேற வழியே இல்லே.”

“வேணாம், வேணாம். பேசாம படிச்சுட்டு ஒரு நல்ல வேலையாத் தேடிண்டு, ஆத்துக்கு அடங்கின பிள்ளையா இருடா. அது போறும். காந்தி வழியில வெள்ளைக்காரனோட சண்டை போட்றதுல மட்டும் ஆபத்து இருக்காதா என்ன? அதுலயும்தான் ஆபத்து இருக்கும்.”

ரமணி பதில் சொல்லாவிட்டாலும் கங்காவைப் பார்த்துச் சிரித்தான்.

“அவன் கேக்க மாட்டான், அத்தே!'' சிரிக்கிறான் பாரு.”

“எல்லாம் எனக்குத் தெரியுண்டா. அண்ணனுந் தம்பியும் கூட்டு. உங்க ரெண்டு பேருக்கும் சாது மாதிரி தெரியற உங்கப்பா தான் குரு. எல்லாம் தெரிஞ்சுதான் இருக்கு எனக்கு.'' - விசாலத்துக்குத் தொண்டை அடைத்தது. உதடுகள் துடிக்க அவள் அங்கிருந்து போய் விட்டாள்.

ரமணியின் முகத்தில் இருந்த குறும்புச் சிரிப்பு மறைந்து, அதில் ஒரு தீவிரம் குடி கொண்டது.

கங்கா இப்போதெல்லாம் பவித்ராவின் வீட்டுக்குப் போவதில்லை. கல்லூரியில் மட்டும் வழக்கம் போல் சந்தித்த போது பேசிக் கொண்டார்கள். பேச்சில் இருந்த பழைய மலர்ச்சியும் துள்ளலும் அடியோடு காணாமற்போய் விட்டிருந்தன. கடனுக்காகவும் பழகி விட்ட குற்றத்துக்காகவும் பேசிக் கொள்ளுகிற நிர்ப்பந்தப் பேச்சாகவே அது இருந்தது.

கங்காவுக்குத்தான் குற்ற உணர்வு அதிகமாக இருந்தது. தனது கடிதத்துக்குப் பவித்ரா எழுதிக் கொடுத்த பதில் கடிதம் அடிக்கடி அவனால் படிக்கப்பட்டு அவனுக்கு மனப்பாடமே ஆகி விட்டது என்றாலும் வீட்டில் ஓய்வாக இருக்கும்போதெல்லாம் நாளுக்கு ஒரு தரமாகிலும் அதை எடுத்துப் படித்து விடுவதை அவன் தனது வழக்கமாகக் கொண்டு விட்டான்.

அன்புள்ள கங்கா,

உங்கள் கடிதத்தைப் படித்தேன். மூன்று தடவை படித்தேன். உங்கள் கோணத்திலிருந்து நீங்கள் சரியான முடிவுக்கே வந்திருப்பதாய் உங்களுக்குத் தோன்றலாம். ஆனால் நீங்கள் எழுதியுள்ள விஷயங்களை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

காதல் எனும் உணர்வு அப்படியெல்லாம் இலேசில் அழிக்கக்கூடிய உணர்வு இல்லை



*“பஞ்சாயத்துத் தேர்தலுக்கும் எனக்கும் ராசியில்லே?”*

*“எப்படி சொல்றீங்க?”*

*“போன பஞ்சாயத்துத் தேர்தல்லே நிற்கறதுக்கு எனக்கு வயசு போதாதுன்னு சொல்லிட்டாங்க... வர்ற பஞ்சாயத்துத் தேர்தல்லே நிற்கலாமானு கேட்டா... வயசான காலத்திலே நீங்க எதுக்கு நிற்கணுங்கறாங்களே?”*

*- எஸ். பொன்னுசாமி*

என்பது உங்களுக்கே தெரியும். தெரிந்து கொண்டே அப்படி நீங்கள் எழுதி இருப்ப தால் அதைப் படித்ததும் எனக்குச் சிரிப்புத் தான் வருகிறது. உங்கள் மனத்துக்கே சம்மதம் இல்லாத ஒன்றை நீங்கள் எழுதும் போது, அந்த எழுத்தில் வலுவே இல்லாது போகிறது. எதற்காக இந்தப் பொய் வேடம்? உங்களை இழந்த பின் மறுமணம் செய்து கொள்ள நான் சம்மதிக்க வேண்டாமா? உங்களை மணம் செய்து கொண்டபின் விதவையாகி வாழ்வை இழப்பதற்கும், உங்களை மணம் செய்து கொள்ளாமலே பறிகொடுத்து வாழ்வை இழப்பதற்குமிடையே எந்த வித்தியாசமும் இருப்பதாக நான் நினைக்க வில்லை.

நீங்கள் என் மீது கவலை கொண்டு எழுதி இருப்பவையெல்லாம் நான் உங்கள் மேல் கவலைப்படுவதற்கான விஷயங்களும் கூட என்பதை எப்படி மறந்து போனீர்கள்? ஒருவேளை சுதந்திரப் போராட்டத்தில் குதித்தபின் எனது மரணம் முதலில் நேர்ந் தால், உங்கள் நிலையும் என்னுடையது போன்றதுதானே? நான் இறந்த பின் உங் களுக்கு என்ன நேருமோ அது எனக்கும் நேர்ந்து விட்டுப் போகட்டுமே.

சுதந்திரப் போர்க்களத்தில் குதித்த பின் நமக்குள் தொடர்பு என்பது அறவே விட்டுப் போகவும் கூடும். நீங்கள் ஒரு பக்கமும் நான் ஒரு பக்கமும் திசை தப்பிச் சிதறி வாழவும் நேரலாம். தெய்வாதீனமாக நம் வாழ்நாள் முடியுமுன் இந்தியா சுதந்திரம் பெற்றால், நாம் சந்திப்பது கைகூடலாம். அதுவரையில் நாம் காதலிக்கவே கூடாது என்று நமக்கு நாமே தடைவிதித்துக் கொள்ள வேண்டி யதன் அவசியந்தான் என்ன?

உங்கள் கடிதம் என்னைப் பெரிதும் வருத்துகிறது. இனி இது போன்ற கடிதம் ஏதும் எனக்கு எழுத வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். நீங்கள் என்னைக் காதலிப்பதைத் தொடர்வதோ நிறுத்துவதோ உங்கள் விருப்பம். ஆனால் என்னைத் தடை செய்ய நீங்கள் யார்? அது எனது சுதந்திரம்.

இப்படிக்கு, என்றும் உங்கள் பவித்ரா...'

பவித்ராவின் கடிதத்தை எடுத்துப் படித்தபோதெல்லாம், 'என்னைத் தடை செய்ய நீங்கள் யார்? அது எனது சுதந்திரம்' எனும் வாக்கியங்களின் மீதே அவனது பார்வை திரும்பத் திரும்பப் பதிந்தது, கண்கள் பனித்தன. மனத்தைத் திடப்படுத் திக் கொண்டு, மறுபடியும் ஒரு நடை அவள் வீட்டுக்குப் போக வேண்டியதுதான் என்று அவன் முடிவு செய்தான்.

(தொடரும்)

# பாட்ஷா

கொஞ்சம் நாயகன். கொஞ்சம் தளபதி. இங்கே தர்மதுரை. அங்கே ரிக்ஷாக்காரன். தொட்டுக் கொள்ள இந்து - முஸ்லிம் ஒற்றுமை. கட்டிக் கொள்ள நக்மா. விஸிலுக்கு, வீரம். விழி நிறைய, செண்ட்டிமெண்ட்.

ஆட்டோ டிரைவர் மாணிக்கத்தின் பூர்வாசிரமப் பெயர் பம்பாய் தாதா பாட்ஷா. அநீதியை ஒழிக்க அங்கே போர். அலட்சியப் பார்வை. அநாயாச ஸ்டைல். எக்கச்சக்க குண்டு வெடிப்புகளில் நாஸிக் விஷயம் தண்ணீராக்கப்பட்டிருக்கிறது.

வழக்கம் போல சாகும் தருவாயில் சத்தியம் வாங்கும் சினிமா அப்பா. வீரம் மிக்க பாட்ஷா சாந்த சொரூபி ஆவதும் தவிர்க்க முடியாமல் கிளைமாக்ஸில் மறுபடி வீரம் காட்டுவதும் சொச்சக் கதை.

தங்கைக்கு மெடிக்கல் காலேஜ் அட்மிஷன் வாங்க ரஜினி போகும் ஒரு சீனில் மட்டும் டைரக்டர் என்றொரு பிரகிருதியும் இருப்பது தெரிகிறது. மற்றபடி கே.பியின் சிஷ்யருக்கு, குரு பேரைக் காப்பாற்றும் ஐடியா இல்லை போல் இருக்கிறது.

அழகுப்புயல் நக்மாவுக்கு உடம்பு ஜோராக வளைகிறது. சகட்டு மேனிக்குக் கனவு கண்டு, ஆடித் தள்ளுகிறார். நடிப்பதற்கு இன்னும் கொஞ்சம் வாய்ப்புக் கிடைத்திருந்தால் ஒருவேளை சரக்கு புரிந்திருக்கும்.

பாராட்டுக்குரியவர்கள் இரண்டு பேர். எடிட்டர்களான கணேஷ் - குமார். இப்படியொரு பரிபூரண மசாலாவை அலுப்பூட்டாமல் தொகுத்த கரங்களுக்கு யார் தங்கக் காப்பு போடப் போகிறார்கள்?

நாலைந்து முறை திரும்பத் திரும்ப வருவதால் ஒரு பாடல் காதில் நிற்கிறது. ஒளிப்பதிவாளரின் சாமர்த்தியத்தால் ஒன்று கண்ணில் நிற்கிறது. மிச்சம், காற்றில் போகிறது.

ரஜினி என்ன பண்ணினாலும் ரசிக்கிற நிலைக்கு ரசிகர்கள் வந்து விட்டார்கள். இனிமேலாவது ஏன் சற்று மாறுபட்டு முயற்சி செய்யக் கூடாது?

- ஆர்.பி.ஆர்.

*ஜோதிர்லதா கிரிஜா*

# மணிக்கொடி

கங்காதரன் நுழையக் கதவு திறந்தவள் பவித்திராதான். இருவரும் ஒருவரையொருவர் விழுங்கி விடுகிறாற்போல் பார்த்துக் கொண்டார்கள். பின்னால் காலடியோசை கேட்டதும், சட்டெனத் திரும்பிய பவித்திரா, இயல்பாக இருக்கும் முயற்சியில், "மழை வரும் இன்னிக்கு. ஏன் இத்தனை நாளா வரவே இல்லே?" என்றவாறு நடந்தாள்.

"ரொம்ப வேலை. நிறையப் படிக்க வேண்டி இருந்தது. ரமணிக்கு வேற உடம்பு சரி இல்லையே? அதான்" என்று காலடி யோசைக்குரிய அமராவதிக்கும் சேர்த்துச் சொன்னபடி அவனும் அவளுக்குப் பின்னால் நடந்தான்.

"பாவம் பையன்" என்றபடி ராஜாராமனும் அங்கு வந்து உட்கார்ந்தார். "என்னமோ நெனச்சுப் புறப்பட்டான். அது எப்படியோ முடிஞ்சுடுத்து. அந்த ரவுடிகளோட சண்டை போடாம, பேசாம கைப்பணத்தை எடுத்துக் குடுத்திருந்தான்னா இது மாதிரி ஆயிருக்காது."

"ஆனா அது கோழைத்தனமில்லையா, மாமா?"

"உண்மைதான் கங்கா. அஹிம்சைங்கிறது அநீதிக்குப் பணிஞ்சு போறதில்லேன்னு இப்போ நீயும் ரமணியும் நன்னா புரிஞ்சிண்டிருக்கணுமே. காந்திஜியின் சாத்துவீகப் போராட்டம் பற்றி உங்க அபிப்பிராயமே மாறியிருக்கணுமே?"

"கொஞ்சம் கொஞ்சமா புரியறது மாமா. நேத்து கூட அப்பா ஒரு விஷயம் சொன்னார். நம்ம காந்தி உசிருக்கெல்லாம் வெள்ளைக்காரனால எந்த ஆபத்தும் வராது. இப்ப கொஞ்ச நாளா அமளிப் பட்டுண்டு கிடக்கிற முஸ்லிம் லீக், இந்து மகாசபா இது மாதிரியான அமைப்புக்களாலதான் காந்தி மாதிரி தலைவர்களுக்கு ஆபத்து அப்படீன்னு."

"ஆனாலும், இப்படி நமக்குள்ள பிளவு பண்ணினது வெள்ளைக்காரனோட கைங்கரியந்தானே? அவன் நேரடியாக் கொல்ல மாட்டான். நமக்குள்ளே சண்டை மூட்டி விட்டு அடிச்சிண்டு சாவுங்கடான்னுடுவான். சிப்பாய்க் கலகத்தின் போது கூட ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே இருந்த ஒற்றுமையைப் பார்த்ததும்தானே வெள்ளைக்காரனுக்கு அடி வயித்துல கலக்கம் உண்டாச்சு? அதனோட விளைவுதான் அவன் சில முஸ்லிம் தலைவர்களைக் கூப்பிட்டு, அவா மனசைக் கலைச்சு, தனித் தொகுதி ஆசையெல்லாம் காட்டினது. வடக்கே எத்தனை இந்து - முஸ்லிம் கலவரங்கள்! எத்தனை சாவுகள்! நாசங்கள்!



பிரிக்க ஆள் (சூழ்ச்சியில் வெள்ளைக் காரனை விஞ்சவே முடியாதுடா."

"இப்பா பாரதியின் - தாவமாயின் பிறவு வேறு வந்துவிடு ஆகவே, மாமா! காங்கிரஸைக் கூட பிராமணர்களே இயக்குவதா பேசுகிறார்களே!"

"பேசுகிறாதான். அதுல பிராமணா [illegible] இருக்கிறாங்க [illegible] கொண்டன பேசுவா. கங்கா, அனா நிறைய தான் - பிராமினகளும் அதுல இருக்காங்கயா. திரு. வி. கல்யாணசுந்தர முதலியார், முத்துரங்க முதலியார், ஈ.வே. ராமசாமி நாயக்கர், டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு, வ. உ. சிதம்பரம் பிள்ளை, மாடசாமிப்பிள்ளை, [illegible] பிள்ளை, முத்துக்குமாரசாமிப்பிள்ளை, [illegible] தலைமேல் வேலை அடுக்கிண்டே போகலாம். அது சரி, நீ என்ன பண்றதா இருக்கே?" என்றார் ராஜாராமன்.

கங்கா திகைப்புடன் அவரை நோக்கினாள். 'இவருக்கு நம் விஷயம் தெரியுமா' என்பது போல் பவித்ராவைத் திரும்பிப் பார்ப்பதை அவளால் தவிர்க்க முடியவில்லை.

## 47

அந்த வெள்ளைக்கார ஊழியன் துப்பாக்கியை உருவி எடுப்பதற்காக நொடிக்குள் தனது இடுப்புப் பட்டியில் கை வைத்ததைக் கவனித்த சில கைதிகள் ஒருசேர அவன் மீது விழுந்து அம் முயற்சியிலிருந்து அதைத் தடுத்து விட்டார்கள். இதற்குள் சேதி பரவ, கொஞ்சமும் தாமதமின்றி உயர் அதிகாரி அவ்விடம் வந்து சேர்ந்தார்.

நடந்ததை மல்ஹோத்ரா ஆத்திரத்துடன் அவருக்கு விளக்கினான்.

"எங்கள் நிலையில் உங்களை வைத்துப் பாருங்கள், சார்! மூத்திரத்தில் கையைக் கழுவி விட்டுச் சாப்பிடு என்று இந்த மனிதா சொல்லச் [illegible]?"

"மிஸ்டர் நிக்கல்சன்! நீங்கள் எனது அறைக்குச் செல்லுங்கள்," என்று முதலில் உத்தரவிட்ட அந்த அதிகாரி அலெக்சாண்டர், "இனி ஒரு தொட்டியில் தண்ணீர் வைக்கப்படும். ஆனால் நீங்கள் சிக்கனமாகத் தண்ணீரைச் செலவு செய்ய வேண்டும். நிக்கல்சனின் சார்பில் நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று கூறி அவர்களையெல்லாம் வியப்பிலும் அவர் பற்றிய மதிப்பிலும் ஆழ்த்திய பின் அங்கிருந்து நீங்கினார். கைதிகள் யாவருக்கும் உடனேயே கை கழுவ அங்கிருந்த தொட்டி தண்ணீரால் நிரப்பப் பெற்றது.

"அந்த நிக்கல்சனைப் பற்றி சாதாரணமாக நினைக்காதீர்கள். அவன் பொல்லாதவன். இன்று நடந்ததை மனதில் கொண்டு நிச்சயமாக நமக்கு - முக்கியமாக உங்களுக்கு பெரிய தொல்லைகள் தரக்கூடியவன். இனி அவன் வம்புக்குப் போகாதிருப்பது உங்க [illegible]" என்று [illegible] ஒருவன் ஜதீந்திரநாதனிடம் எச்சரித்தான்.

"[illegible] எதும் நடக்காததை வைத்து நீங்கள் நிம்மதியாக இருந்து விட வேண்டாம். நிக்கல்சன் பழிவாங்கும் பாம்பு. இன்று அவனை அடக்கி வைத்த மிஸ்டர் அலெக்சாண்டர் கூடிய விரைவில் வேறு இடத்துக்கு மாற்றலாகிப் போய் விட இருப்பவர். அடுத்து எவன் வருவானோ தெரியாது. அவன் இந்த நிக்கல்சனைப் போன்றவனாக இருப்பின், நாம் தொலைந்தோம். அதனால் பொறுமையாக இருக்க வேண்டும்..." என்றான்.

பவித்ராவிடம் தான் கொண்டிருக்கும் காதலைப் பற்றித்தான் கேட்கிறாரோ என்று ஒருகணம் திகைத்தபின் ராஜாராமனுடைய கேள்வியின் உட்கிடையைக் கங்கா புரிந்து கொண்டாள்.

"நான் ஏற்கெனவே தீர்மானிச்சுட்டது தானே, மாமா? வடக்கே போயிடலாம்னு இருக்கேன். அங்கதான் தீவிரவாதிகள் -

[illegible] பயங்கரவாதிகள்[illegible] நான் [illegible]
[illegible] மாட்டேன் - நிறைய [illegible]
[illegible]
தான் இருக்கு. அங்க போனதான் உருப்
[illegible]
பதில் சொன்ன அவனது விழிகள் கணம்
போல் பவித்திராவின் மேல் பட்டு விலகின.
[illegible]
காதலர்களின் மீது மாற்றி மாற்றி விழி
களைப் பதித்துக் கொண்டிருந்தனர்
[illegible]
[illegible] இருக்கேன், தாத்தா"
"[illegible]
களை நினைச்சிண்டிருந்தேன். நிஜமா
[illegible]
தானே?"
"ஆமா, தாத்தா."
"[illegible]
அந்நாட்ல நீயா? இத பாரு பவித்ரா. ஒரு
[illegible]
தப்பான முடிவுக்கு வந்திருக்கேன். நானும
ஒரு காலத்துல தீவிரவாதியா இருந்தவன்
தான். இப்ப நிறைய மாறிட்டேன். பயங்கர
வாதத்தால [illegible]
[illegible] அந்த வெற்றி
யெல்லாம் தற்காலிகமானதாத்தான் இருக்
கும். நிரந்தரமான வெற்றி வேணும்னா
அதுக்குக் காந்தி வழிதான் நல்லது."
"நீங்க பேசறது வேடிக்கையா இருக்கு,
மாமா. அமைதியாக் கோஷம் போடறதும்,
[illegible] அதுக்காக
ஜெயில்ல இருந்துட்டு ரிலீசாறதுமா சுதந்திரம்
வாங்கிக் குடுக்கும்?"
"காலப் போக்குல நிச்சயமா வாங்கிக்
கொடுக்கும்."
"போங்க, மாமா நீங்களும் உங்க காந்தி
யும்! இந்தியன் பயத்துனால திருப்பி அடிக்
காம இருந்தா என்ன, இல்லே சகிப்புத் தன்
மையால திருப்பி அடிக்காம இருந்தா
என்ன? அதனோட விளைவு என்னமோ
ஒண்ணுதான். இந்தியன் பயந்தாங்கொள்
ளின்னுதான் வெள்ளைக்காரன் முடிவு
கட்டுவான். அதனால அவனுக்குக் கொழுப்
பும் திமிரும் இன்னும் ஜாஸ்திதான் ஆகும்.
நீங்க காந்திக்கு வக்காலத்து வாங்கறது
எனக்கு வேடிக்கையா இருக்கு. இப்ப திலகர்
போயாச்சு. அதனால, இனி நாங்க [illegible]
சந்திரபோஸைத்தான் நம்பறதா இருக்கோம்."
"அவரும் பெரிய தலைவர்தான். நான்
மறுக்கல்லே. ஆனா வெறுங்கையை ஓங்கி
வெள்ளைக்காரனை விரட்ட முடியுமா?"
"அதுக்குத்தான் தீவிரவாதிகள் அங்
கங்கே வெடிகுண்டு தயாரிக்கிறா. ரா[illegible]

பிகாரி கோஷ் இப்ப ஜப்பான்ல இருக்கார். மேடம் காமா கோஷ்டி பிரான்ஸ்ல இருக்கு. செண்பக ராமன் ஜெர்மனியில இருக்கார். அமெரிக்காவில தலைமை அலுவலகத்தோட ஜப்பான், பிலிப்பைன்ஸ், மலேயா, சீனா இந்த நாடுகள்ளேயெல்லாம் கிளைகளோட கதர் பார்ட்டி செயல்பட்டுண்டு இருந்தப்ப எவ்வளவு பெரிய புரட்சியை இந்தியாவில 1915 ஆம் வருஷம் நடத்தறதுக்கு இருந்தது அந்த இயக்கம்? பல அயல்நாடுகளுடைய ஒத்துழைப்போட சீக்கியர்கள் பெருவாரி யான அளவில இருந்த அந்த கதர் பார்ட்டி ராஷ்பிகாரி கோஷ் தலைமையில இந்தியா பூரா ஒரு பெரும் புரட்சிக்குத் திட்டம் போட்டது உங்களுக்குத் தெரியுமோல் லியோ? அந்த வருஷம் பிப்ரவரி மாசம் 21-ஆந் தேதி இந்தியா முழுக்க வெடிச்சிருக்க வேண்டிய அந்தப் புரட்சி கடைசியில புஸ் வாணமாயிடுத்து. கிர்பால்சிங்குங்கிற துரோகியால நிறைவேறாமயே போயிடுத்து. ஆனாலும், அதுக்கு அப்புறம் வெள்ளைக் காரன் அடிவயித்துல ஒரு கிலி ஏற்பட்டுத் தானே இருக்கணும்? வெற்றிகரமா நடந் திருக்க வேண்டிய இன்னொரு சிப்பாய்க் கலகம்னா அது?"

"ஒத்துக்கறேன். ஆனா அது புஸ்வாண மானதோட விளைவு என்ன? அந்த லாகூர் சதித் திட்டத்தால எத்தனை இளைஞர்கள் தூக்கில தொங்கினா? எத்தனை பேர் நாடு கடத்தப்பட்டா? இதெல்லாம் அந்த இளை ஞர்களுக்கும் அவாளைச் சேர்ந்த குடும்பங் களுக்கும் எவ்வளவு பெரிய சோகம்? இதெல் லாம் காந்தி வழியில போனா இல்லே தானே? காந்தி வழிங்கிறது சிறுகச் சிறுக நிலையான வெற்றி. உங்க வழியில போனா கிடைச்சாலும் கிடைக்கலாம், இல்லே இப்ப சொன்ன லாகூர் சதித் திட்டம் மாதிரி புஸ் வாணமாப் போனாலும் போயிடலாம்."

"இதெல்லாம் அந்தக் காலத்து அத்தைப் பாட்டி உபதேசங்கள். இந்தக் காலத்துல எடு படாது."

"வெள்ளைக்காரங்கள்லாம் நாக்கைப் பிடுங்கிக்கிற மாதிரி அன்னிபெசன்ட் ஒரு கேள்வி கேட்டாங்க - முதல் உலகப் போர் ஆரம்பிச்சப்போ. 'எத்தனையோ நாடுகளை அடிமைப்படுத்தி வெச்சிருக்குற உனக்கு ஜெர்மனியை சர்வாதிகார நாடுன்னு சொல்றதுக்கு வெக்கமாயில்லையா? முதல்ல இந்தியாவை விடுவிச்சுட்டுன்னா நீ மத்த அடிமை நாடுகள் பத்திப் பேசணும் அப் படின்னு கேட்டாங்களே. அவனால என்ன பதில் சொல்ல முடிஞ்சுது?"

"மாமா, அவனால பதில் சொல்ல முடியல்லேங்கிறது இந்தியாவுக்கு சுதந்திரம் வர வழி வகுத்துடாது. அவனுக்குச் சூடு சொரணை இருந்தா உடனேயே இந்தியா வுக்கு சுதந்திரம் குடுத்திருப்பானே? குடுக்க லியே? இதிலேருந்து என்ன தெரியறது? அடி ஒண்ணுக்குத்தான் அவன் மசிவான்னு தானே?"

"இல்லே. அன்னிபெசன்ட் மாதிரியும், பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் மாதிரியும், லெனின் மாதிரியும் இன்னும் பல உலகத்தலைவர் களும் ஒட்டுமொத்தமாப் பிரிட்டனைக் குற்றவாளிக் கூண்டுல நிறுத்திப் பேசவும் எழுதவும் தொடங்கினதும், அவமானம் தாங்காம ஒரு நாள் அவன் மூட்டையைக் கட்டிடுவான்."

இருவரும் சண்டை போடாத குறை யாகச் சொல்லாடியதைக் கேட்டு ரசித்தபடி இருந்த அமராவதி, "போறும், போறும். திருப் பித் திருப்பி அதையேதான் ரெண்டு பேரும் சொல்லிண்டிருக்கப் போறேள். நிறுத் துங்கோ. காது வலிக்கிறது" என்றாள் விளை யாட்டாகக் காதைப் பொத்தியபடி.

"அப்பா, காந்தி சொல்ற வழியும் இல் லாம கங்கா ஆதரிக்கிற சூர்யாசென் வழியும் இல்லாம, ரெண்டுக்கும் நடுவாந்தரமா ஒரு வழி இருக்குன்னு தோணறதுப்பா" என்றாள் அஞ்சனா.

"என்னம்மா?"

"கர்னல் நீல்ங்கிற வெள்ளைக்காரனோட வெண்கலச் சிலையை சமீபத்துலே சேதப் படுத்தினோமே, ஆளுக்கு ஆள் மாத்தி மாத்தி? அதைச் சொல்றேன். காந்தி வழி மாதிரி மசமசன்னும் இல்லே; பயங்கரவாதம் போல் ரத்தம் சிந்த வைக்கிற வழியும் இல்லே."

"பெரிம்மா! சிப்பாய்க் கலகத்தப்ப அந்த நீல் பண்ணாத அக்கிரமம் இல்லியாமே?" என்று கேட்டாள் பவித்ரா.

"ஆமாம்மா. இங்க மெட்றாஸ் ரெஜி மென்ட்லேருந்துதான் அவன் சிப்பாய்க் கலகத்தப்ப அனுப்பப்பட்டிருக்கான். போற வழியிலயெல்லாம் கூட அவன் பண்ணின அக்கிரமங்கள் கொஞ்ச நஞ்சமில்லையாம். தேமேன்னு இருந்த மனுஷாளையெல்லாம் சுட்டுத் தள்ளிண்டே போயிருந்திருக்கான். வழியில எத்தனையோ கிராமங்களுக்கெல் லாம் தீ வெச்சு நாசப்படுத்தி இருக்கான். சிப்பாய்க் கலகத்துல அவன் ஒரு தீரனா நடந்துண்டான்னு சொல்லி இங்க மவுண்ட் ரோட்ல அவனுக்குச் சிலை வெச்சான் வெள்ளைக்காரன். மாவீரன், வீரமரணம் அடைஞ்சான்னெல்லாம் அவனோட சிலைக்குக் கீழே புகழ்மொழி வேற. 'அதுல

புகழ்ங்கிற வார்த்தைக்கே இடமில்லே, புகழ்ங்கிற வார்த்தையையே கொச்சைப்படுத் தறது'ன்னு காந்தியே எழுதினார். தினம் ரெண்டு ரெண்டு பேராப் போய் அந்தச் சிலையைச் சேதப்படுத்தினா.. ஆனா உடைக்க முடியல்லே. காந்தி கூட, 'உடைக்க முடியல்லேன்னா களிமண்ணை அதும் மேல அப்புங்கோ'ன்னார்னா பாத்துக்க யேன்! சிலையைச் சேதப்படுத்தினவா எல்லாருக்கும் ஜெயில் தண்டனை கிடைச் சுது... தென்னாற்காட்டைச் சேர்ந்த முருகப் படையாச்சியும் அவரோட மனைவி அஞ் சலையம்மாளும் கைக் குழந்தையோட ஜெயிலுக்குப் போனா!''

**ச**ற்றுப் பொறுத்து ராஜாராமன் சொன் னார் : ''என்னைக் கேட்டா பவித்ரா வடக்கே போய் தீவிரவாதியா மாறக் கூடா துன்னுதான் சொல்லுவேன். அஞ்சனா கூட ஏதேதோ பண்ணி இருக்கா. ஆனா உன்னை மாதிரி ஊர் விட்டு ஊர் போய்த் துப்பாக்கி ஏந்துவேன்னு அவ புறப்படல்லே. ஏதோ உள்ளூர்லயே இருந்துண்டு கூட்டங்களுக்குப் போய்ப் பேசறது, பிரசாரம் பண்றது, துண்டுப் பிரசுரங்கள் விநியோகிக்கிறது இது மாதிரி பண்ணிண்டிருந்தா. இன்னத் தேதி வரையிலும் பண்ணிண்டிருக்கா. படிக்காத ஜனங்களுக்கு தேசபக்தியை ஊட்றது தேச விடுதலைப் போராட்டத்தோட சேர்த்தி தான். நீ என்ன சொல்றே, கங்கா?''

''ஒருவிதத்துல நான் உங்க கட்சி, மாமா. பெண்கள் இது மாதிரி காரியங்களுக்கெல் லாம் லாயக்கில்லே. நம்ம பவித்ராவுக்கு சீக் கிரம் கல்யாணம் பண்ணிடுங்கோ!''

இவ்வாறு பதில் சொன்ன கங்கா அங் கிருந்த யாவரையுமே சில கணங்களுக்கு வாயடைத்துப் போகச் செய்து விட்டான்.

சில நொடிகளுக்குப் பிறகு அமராவதி யும் அஞ்சனாவும் பவித்திராவைக் கவனித்த போது அவள் முகத்தில் ஒரு கடுமை தென்பட்டதைப் புரிந்து கொண்டார்கள். ராஜாராமன் கூடச் சிரித்தபடி பவித்திரா வைத்தான் பார்த்துக் கொண்டிருந்தார்.

''இத பாரு, கங்கா. நீ ஒண்ணும் என் னோட சொந்த விஷயத்துல எல்லாம் தலை யிட வேண்டாம், அபிப்பிராயமும் சொல்ல வேண்டாம். நான் உன் பெர்சனல் விஷயத் துல ஏதாவது பேசறேனா?'' என்று பவித்திரா அவனைப் பார்த்து ஆத்திரமாக வின வினாள்.

அஞ்சனாவும் அமராவதியும் சாடை யாக ஒருவரை ஒருவர் நோக்கிப் புன்னகை புரிந்து கொண்டார்கள்.

(தொடரும்)

# பிறந்த நாள், ஆண்டு விழா, மற்றும் 'அப்பாயின்ட்மென்ட்' இவைகளை நினைவில் கொள்ளாத நபர்களுக்காக.

"லக்ஷ்மி ஸ்டார்" ஆட்டமாடிக்காக உங்கள் குறைந்த கால டிபாசிட்களை புதுப்பிக்கும் திட்டம்

**சேவையில் - நட்புடன்**

# LVB

'லக்ஷ்மி ஸ்டார்'

46 நாட்களுக்கு ஆட்டமாடிக்காக புதுப்பிக்க வசதி கொண்ட டிபாசிட் திட்டம்.

குறைந்த கால டிபாசிட்களை புதுப்பிக்காமல் வட்டி இழந்த நாட்களை மறந்து விடுங்கள்!

'லக்ஷ்மி ஸ்டார்' இந்த குறையை நீக்கி ஆட்டமாடிக்காக புதுப்பித்து வட்டி ஈட்டு தொகையில் இடைவெளி ஏற்படாமலும், நீங்கள் விரும்பும் கால வரம்பு வரைக்கும் புதுப்பிக்க உதவுகின்றது.

'லக்ஷ்மி ஸ்டார் டெபாசிட் திட்டம்'

ஏனென்றால் - உங்களின் அதிக வட்டி ஈட்டு தொகையில் என்றும் எங்கள் கவனம்.

ஜி.வி. ராவ்
சேர்மன்.



**லக்ஷ்மி விலாஸ் வங்கி லிமிடெட்.**
சேலம் ரோடு, காத்குப்பாறை,
கரூர் - 639 006. தமிழ்நாடு.



**பகுதி பணம் எடுத்தல்.**
இத்திட்டத்தில் அவசரத் தேவைக்கு பணம் எடுக்க வசதியுள்ளது. மீதி தொகை தொடர்ந்து வட்டி ஈட்டுகின்றது.

HOW TO INCREASE YOUR MEMORY POWER

உயர்வான சேவையை நட்புடன் ... LVB

48

ஜெயசங்கர் சுக்லாவும் ரத்னாகரும் கல்கத்தா விக்டோரியா மெமோரியலைச் சுற்றி அமைந்திருந்த பெரிய தோட்டத்தின் ஆள் நடமாட்டம் இல்லாத ஒதுக்குப் புறத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

அன்று ஞாயிற்றுக் கிழமை. திங்களைத் தவிர மற்ற எல்லாக் கிழமைகளிலும் விக்டோரியா மெமோரியல் பார்வையாளருக்காகத் திறந்து வைக்கப்பட்டிருக்கும். வெள்ளிக்கிழமைப் பார்வையாளர்களுக்கு மட்டும் எட்டணாக் கட்டணம் உண்டு. மற்ற நாட்களில் இலவசம். 1921 ஆம் ஆண்டில் ஏழு லட்சத்து அறுபதாயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்டது விக்டோரியா மெமோரியல். வெள்ளையரின் பாரம்பரியப் பெருமைகளைப் பறைசாற்றுவதற்கென்றே கட்டப்பட்டதென்பது அதனுள் நுழையும் போதே எவர்க்கும் விளங்கிவிடும். பரந்து விரிந்த தோட்டத்தின்



நுழைவாயில், மன்னர் ஏழாம் எட்வர்டின் பெயரால் ஓர் அழகான வளைவுடன் அமைந்திருந்தது. அங்கேயே அரசி விக்டோரியாவின் வெண்கலச் சிலை. கர்சான் பிரபுவின் சிலையும் கூட. அதனுள் காட்சிப் பொருள்களாக வைக்கப்பட்டிருந்த ஏராளமான சமாசாரங்கள் விக்டோரியா காலத்துச் சரித்திரச் சான்றுகள். அவரது பெருமைகளைப் பறை சாற்றுபவை. எண்ணிறந்த வண்ணச் சித்திரங்களைத் தன்னுள் அடக்கிய, நெடியமாடங்களையுடைய முதல் தளம் கண்கொள்ளாக் காட்சியாகும். ஆனாலும், ஜெய்சங்கர் சுக்லாவுக்கும் ரத்னாகருக்கும் இவற்றில் ஈடுபாடு இல்லை என்பதோடு இவற்றை இருவரும் ரசித்ததே கிடையாது. இன்னும் சொல்லப் போனால் விக்டோரியா மெமோரியலைப் பார்க்குந்தோறும் இருவருக்கும் பற்றி எரியும்.

"ரத்னாகர், இந்த மாபெரும் நினைவுச் சின்னத்தைத் தரைமட்டமாக்கும் நாள் என்று வரும்? வருமா, அல்லது வராமலே இருந்து விடுமா?" என்றான் ஜெய்சங்கர் சுக்லா.

"உன் கேள்வியே சரி இல்லை, சுக்லா. இந்த நினைவுச்சின்னங்களை நாம் ஒரு போதும் அழிக்கவே கூடாது. நமது பழைய சரித்திரத்தை நமக்கு எப்போதும் ஞாபகப்படுத்த வேண்டிய சின்னங்கள் இவை. மறுபடியும் இந்த நாடு அன்னியர் வசப்பட்டு அழியக் கூடாது என்று சதா ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கும்."

"ஒரு வகையில் நீ சொல்வதும் நியாயம் தான். இந்த மாளிகையைப் பார்த்ததும் ஏற்பட்ட ஆத்திரத்தில் உன்னிடம் சொல்ல வந்த முக்கியமான விஷயத்தை மறந்து போனேன். ரத்னாகர், நம் 'தோஸ்த்' மாணிக்லால் திங்ரா - நம்மை லண்டன் போலீசாரிடம் காட்டிக் கொடுக்க முயன்று என்னிடம் அடி வாங்கினானே அவன் - கல்கத்தா போலீஸ் இலாகாவில் அதிகாரியாக இருக்கிறானாம். நாம் மாறு வேடங்களில் சுற்றுவதால் அவன் இன்னும் நம்மைக் கண்டுபிடிக்கவில்லை என்று தோன்றுகிறது. அவனும் போலீஸ் உடுப்பென்ன, தலைமுடி வெட்டல் என்ன, தொப்பி என்ன, திருத மீசை என்ன என்று மாறி இருப்பதால் கண்ணில் பட்டும் நாம் புரிந்து கொள்ளவில்லையோ என்று நினைக்கிறேன்."

"ஆச்சரியமான விஷயந்தான்."

அப்போது சுபேந்திரநாத் தாகூர் அங்கு வந்து அவர்களுக்கு அருகே அமர்ந்தான் : "எது ஆச்சரியமான விஷயம்?"

இருவரும் சொன்னார்கள். "அப்படியானால் நமது மாறுவேஷங்களில் நாம் இன்னும் அதிகக் கவனத்துடன் இருக்க வேண்டும். குரலைக் கூட மாற்றிக் கொள்ள வேண்டும்."

"லண்டனில் மாணிக்லால் திங்ரா நம்மைக் காட்டிக் கொடுத்த போதே நாமெல்லாம் மாட்டிக் கொண்டிருக்க வேண்டியது. மோசமான திருப்பம் ஏற்படாது காப்பாற்றியது சுக்லா தான். அவன மட்டும் சமயோ

ஜோதிர்லதா கிரிஜா

சிதமாகத் தன் அப்பாவுக்கு லண்டன் வாழ் தேசபக்தர்களைத் திட்டிக் கடிதம் எழுதி உறையில் போட்டு ஒட்டித் தபாலில் சேர்க்க இருந்தது போல் தயாராக வைத்திருந்திரா விட்டால் நாம் மாட்டி இருப்போம். உற்சாகத்துடன் அதை எடுத்துப் பிரித்த வெள்ளைப் போலீஸ் அதிகாரிக்குப் பெரிய ஏமாற்றந்தான்!"

பதினேழு ஆண்டுகளுக்கு முன்னால் லண்டனில் இந்தியா ஹவுசில் நடந்தவற்றை எண்ணி மூவரும் புன்னகை பூத்தார்கள்.

"ஆனாலும் அவ்வப்போது லண்டன் போலீசாரின் தொல்லைகள் ஏற்பட்டுக் கொண்டேதான் இருந்தன. ஒவ்வொரு தடவையும் மாட்டிக் கொள்ளாது அதிருஷ்ட வசமாய்த் தப்பினோம்."

"தப்பி ஒரு வழியாகப் படிப்பையும் முடித்து இங்கு வந்தபின் பெரிதாய் என்ன சாதித்தோம், சில வெள்ளைக்காரர்களை அடித்துக் காயப்படுத்திய குற்றத்துக்காகத் தேடப்பட்டு வருகிறோம் என்பதைத் தவிர? இப்போது மாறு வேடங்களில் சுற்றிக் கொண்டிருக்கிறோம்."

"ராஜதானிதோறும் ஒரு சூர்யாசென்னாவது இருக்க வேண்டும். அப்போதுதான் அகில இந்திய அளவில் செயல்பட முடியும். இங்கே வங்காளத்தில்தான் பெரும்பாலான அதிரடிச் செயல்கள் நடக்கின்றன. அதனால்தான் வங்காளத்தை முதலில் ஒடுக்கி விட வேண்டும் என்பது வெள்ளைக்காரனின் சதியாக இருந்து வருகிறது. 1912இல் இந்தியத் தலைநகரத்தைக் கல்கத்தாவிலிருந்து தில்லிக்கு அரசு மாற்றியதன் நோக்கமே நம்மை ஒடுக்க வேண்டும் என்பதும், தலைநகரம் வங்காளத்தில் இருப்பது முக்கியமான வெள்ளையர்க்குத் தலைவலியாகலாம் என்பதும்தான்!

"டில்லி தர்பார் நடந்த பிறகு சில நாட்கள் கழித்து ஹார்டிஞ்சின் மீது குண்டை வீசி எறிந்தது ராஷ் பிகாரி கோஷ் என்று ரொம்பப் பேர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படி இல்லை. உங்களுக்குத் தெரியுமா?"

"அட... இதென்ன புதுக்கதை? பின் யார் எறிந்தார்கள்?"

"ராஷ்பிகாரி கோஷ்தான் எறிவதாக இருந்தது. எனினும் இருவர் தயார் நிலையில் இருந்தார்கள். ஆனால் கடைசியில் அந்த வாய்ப்புக் கிடைத்தது அவருடைய மிக நெருங்கிய கூட்டாளி வசந்தகுமார் பிஸ்வாசுக்குத்தான். ஒரு பெண்ணைப் போல் சேலை உடுத்தி முக்காடிட்டுக் கொண்டு கூட்டத்தில் கலந்து குண்டை எறிந்து விட்டு ஓடி விட்டாராம். ஆனால் திட்டமிட்டது ராஷ்பிகாரி கோஷ் ஆனதால் சர்க்கார் இவருக்குத்தான் வலை வீசியது. ஆனால் அவர் அகப்படவில்லை."

"இன்னொன்று தெரியுமா உனக்கு... ராஷ்பிகாரி கோஷ் எப்படி ஜப்பானுக்குத் தப்பிப் போனார் என்பது? ரொம்பவும் தேடப்பட்டவராக இருந்ததால் அவர் குடுமியும் பூணூலுமாய் ஒரு புரோகிதர் வேடத்தில் கல்கத்தாவில் குண்டு வீச்சு நிகழ்ச்சிக்குப் பிறகு வாழ்ந்து வந்தார். பி.என். தாகூர் எனும் பெயரில் தனக்குத் தேவைப்பட்ட பயணக் காகிதங்களை அடைய ஏற்பாடு செய்து கொண்டார். அந்தச் சமயத்தில் கவி ரவீந்திரநாத் தாகூர் ஜப்பானுக்குப் போவதாக இருந்தது. இது கல்கத்தா முழுவதும் தெரிந்திருந்த செய்தி. எனவே ரவீந்திரநாத் தாகூரின் காரியதரிசியாகத் தம்மை வெளிப்படுத்திக் கொண்டு, அவருக்கு முன்னதாக



ஜப்பானுக்குப் போய், டோக்கியோவில் அவருக்கான தேவைகளைக் கவனிப்பதற்குச் செல்லுவதாக அவர் கூற, பத்திரமான பிரிட்டிஷ் பாஸ்போர்ட் அவருக்குக் கிடைத்து விட்டது!"

"அட!" எல்லாரும் மகிழ்ச்சியுடனும் பாராட்டும் வகையிலும் சிரித்தார்கள்.

அப்போது அகமத்கான் அங்கு வந்து அவர்களுடன் சேர்ந்து கொண்டான்.

"என்ன, அகமத், ஒரு மாதிரியாக இருக்கிறாய்?" என்று அவனது களையிழந்த முகத்தைப் பார்த்து ரத்னாகர் விசாரித்தான்.

"சற்று முன்னால் நியூ எம்பைர் தியேட்டருக்கு அருகே ஒரு சிறு இந்து - முஸ்லிம் கலவரமாம். அதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன்."

"இந்து - முஸ்லிம் ஒற்றுமை என்பது இனி ஒரு கனவுதான். அதுவும் பகற் கனவு." - ரத்னாகர் பெருமூச்சு விட்டான்.

"கல்கத்தாவில் சற்று முன்னால் 144 சட்டம் போட்டிருப்பது உங்களுக்குத் தெரியாதா? ரேடியோ கேட்கவில்லை?" என்ற அதட்டலான குரலைக் கேட்டதும் நால்வரும் திரும்பிப் பார்த்தார்கள். வலக்கையில் பிடித்திருந்த உருட்டுத் தடியால் இடது உள்ளங்கையில் தட்டியபடி காவல் துறை உடுப்பில் நின்றிருந்தவன் மாணிக்லால் திங்ரா என்பதை அவர்கள் புரிந்து கொண்டார்கள். திகைத்தார்கள்.

## 49

கங்கா வாய்விட்டுச் சிரித்தான்.

"அவனை எதுக்கும்மா கோவிச்சுக்கறே?" என்றார் ராஜாராமன். அவர் குரல் முழுவதையும் வியப்பு ஆக்கிரமித்திருந்தது. பவித்ரா அவ்வளவு கடுமையாய்க் குரல் உயர்த்தியும் வெடுக்கென்று பேசியும் அவர் கேட்டதே இல்லை.

"பவித்ரா படிப்பை முடிச்சுட்டுத் தீவிரவாத இயக்கத்துல சேரப் போறதாச் சொல்லிண்டிருக்கா. அவளைப் போய் நான் சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கோன்னு சொன்னா கோவந்தானே வரும், மாமா?" என்ற கங்கா மறுபடியும் சிரித்தான்.

"இதுல என்ன சிரிப்பு வேண்டியிருக்கு, கங்கா? சிரிக்காதே. எனக்குப் பத்திண்டு வருது. கடைசியில் நீயும் எல்லாரையும் போலப் பொண்ணுகளை மதிக்காத ஆம்பளதான்னு தோண்றது, உங்களால மட்டுந்தான் சாதிக்க முடியும்னு நினைக்காதே. மேடம் காமா இல்லியா? அன்னி பெசன்ட் இல்

லியா? ஜான்சி ராணி இருக்கலையா? சித்தூர் ராணி எவ்வளவு பெரிய வீராங் கனை?" - பவித்திரா முடிக்குமுன் கங்கா சிரித்துக் கொண்டே இடைமறித்தான்.

"சித்தூர் ராணியும், ஜான்சி ராணியும் படைபலம் உள்ள ராணிகள், பவித்ரா."

"அன்னி பெசன்ட்? மேடம் காமா?.... கைக்குழந்தையும் கையுமா ஜெயிலுக்குப் போன படிக்காத அஞ்சலையம்மா? சூர்யா சென்னோட ரிபப்ளிகன் ஆர்மியில இருக் கிற பெண்கள்? தென் ஆப்ரிக்காவில காந்தி யோட போராட்டத்துல கலந்துண்ட வள்ளி யம்மா? இவாள்ளாம் கூட ராணிகளா!"

"அடியம்மா. உனக்கு இம்புட்டுக் கோவம் வருதே. கங்கா இப்ப என்ன சொல் லிட்டான்? உனக்குச் சீக்கிரம் கல்யாணம் பண்ணி வைக்கச் சொன்னான். முடியா துன்னு சொல்லிட்டுப் போயேன். இந்தாத் துல யாரும் உன்னை வற்புறுத்தப் போற தில்லே. நாட்டுக்கு சுதந்திரம் இருக்கோ இல் லையோ, இந்த வீட்டுக்கு அது நிறைய இருக்கு... அது சரி, கங்கா, பெண்கள் சுதந் திரப் போராட்டத்துல குதிக்கக்கூடாதுன்னு நீ சொன்னதே இல்லியே? இப்ப என்ன திடீர்னு?" என்றாள் அஞ்சனா.

✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤

**ஒரு போரை முடிவுக்குக் கொண்டு வருவதற்கான சிறந்த வழி அதைத் தொடங்காமல் இருப்பதுதான்.**

**— ஐரிஷ் பழமொழி.**

**தகவல் : கே. நடராஜன்**

✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤

"கொஞ்ச நாள் ஜெயில்ல இருந்துட்டு வந்த சில தேசபக்தர்களை எனக்குத் தெரி யும். பெண் கைதிகள் நடத்தப்பட்ற விதம் சரி இல்லைன்னு சொன்னா. உள்ளூர்ப் போலீசும் சரி, வெள்ளைக்காரப் போலீசும் சரி, அழகான இந்தியப் பெண்கள் கிட்ட முறைகேடா நடந்துக்கறாளாம். சின்னச் சின்ன அத்துமீறல்லேருந்து 'ரேப்' வரையில நடக்கிறதாம். இதை நம்ம பெண்கள் வெளி யில சொல்லிக்குவாளா? இது ஒரு பெண் ணுக்கு எவ்வளவு பெரிய வேதனையான விஷயம்! அதனாலதான் சொல்றேன். இத் தனை நாளும் இப்படியெல்லாம் நடக்கற துன்னு எனக்குத் தெரியாது. தெரிஞ்ச பிற் பாடு என்னோட அபிப்பிராயம் மாறிடுத்து."

"கொஞ்ச நேரத்துக்கு முந்தி எங்கிட்ட கன்சிஸ்டென்ஸி இல்லே, ஸ்திரபுத்தி இல் லேன்னு கேலி பண்ணினே. இப்ப பாரு. கொஞ்ச நாளுக்கு முந்தி நீ நினைச்சது சரி இல்லைன்னு இப்ப புரிஞ்சதும் மாத் திண்டுட்டே. அதே மாதிரிதான் நானும்" என்றார் ராஜாராமன்.

"வக்கீலாச்சே, மாமா, நீங்க. எப்படி மடக் கலாம்னு காத்திண்டிருந்து கரெக்டாப் பிடிச் சுட்டேள்!" என்று சிரித்தான் கங்கா.

"நீ சொல்றதெல்லாம் சரின்னே வச்சுப் போம். அதுக்கு நான் கல்யாணம் பண்ணிக்க வேண்டிய அவசியமென்ன? நான் கல் யாணம் பண்ணிக்கணும்னு புத்தி சொல்ற துக்கு நீ யாரு?" என்று கேட்டாள் பவித்ரா.

கங்கா தலையைக் குனிந்து கொண்டான்.

"என்னடி இது, பவித்ரா, எடுத்தெறிஞ்சு பேசறே? கங்காவைப் பார்த்தா நீ யாருன்னு கேக்கறே? ரொம்ப நன்னாருக்கு?" என்றாள் அமராவதி.

கங்கா இயல்பாகப் பவித்திராவை நோக்கிச் சொன்னான். "யாருன்னா கேக் கறே? சின்ன வயசுலேருந்து ஒரே பள்ளிக் கூடத்துல மட்டுமில்லாம இப்ப ஒரே காலேஜ்லயும் சேர்ந்து படிச்சிண்டிருக்கிற சிநேகிதன் நான்."

பவித்ரா தலை உயர்த்தி அவனை ஒரு பார்வை பார்த்துவிட்டு எழுந்து போய் விட்டாள். அவள் கண்கள் நொடிப் பொழு தில் நிறைந்து விட்டிருந்ததை யாரும் கவனித்துவிடக் கூடாது என்பதற்காகவே அவள் எழுந்து போய் விட்டதை உணர்ந்த கங்கா தனக்குள் மிகவும் சங்கடப்பட்டான்.

பவித்ராவைப் பின் தொடர்ந்து ராஜா ராமனும் சென்றார்.

சில நொடிகள் மௌனத்தில் கழிந்த தும், "என்னப்பா ஒண்ணுமே சொல்லாம உக்காந்துண்டிருக்கே?" என்றாள் அஞ்சனா.

"இதோ பாரு, கங்கா. நீ எதுவும் சொல் லாமயே எங்களுக்குப் புரியறது. உனக்கும் பவித்ராவுக்கும் ஒருத்தரை ஒருத்தர் ரொம்பப் பிடிச்சுப் போயிடுத்து. சரிதானா? அதை ஒருத்தருக்கொருத்தர் சொல்லிண்டுட் டேள் போலேருக்கு. இப்ப இந்த சுதந்திரப் போராட்டத்துல குதிக்கிறதா இருக்கிறது னால, நீ பின்வாங்கறே. மத்த எத்தனையோ தீவிரவாதிகள் மாதிரி உனக்கும் ஏதாவது ஆயிட்டா, என்ன பண்றது, பவித்ரா சின்னப் பொண்ணாச்சேன்னு திடீர்னு உம் மனசு உறுத்தத் தொடங்கி இருக்கு. அதானே?" என்றாள் அமராவதி.

கங்காவின் முகம் ஜிவு ஜிவு என்று சிவப் பேற மௌனமாயிருந்தான்.

ஓரிரு நிமிடங்களில் காலடியோசை கேட்டு மூவரும் திரும்பினார்கள். ராஜா ராமன்தான் சிரிப்புடன் வந்து கொண்டிருந் தார்.

"பவித்ரா என்ன சொல்றா?" என்று அமராவதி ஆவலுடன் விசாரித்தாள்.

அவர் உடனே கூறாது கங்காவைப் பார்த்து "என்னப்பா, கங்கா? உன் லெட்டரையே எங்கிட்ட பவித்ரா காட்டிட்டா... என்ன வெக்கப்படறே? இன்னிக்கு நேத்திக்குத் தெரிஞ்சவாளா நாம? அதை எங்கிட்ட காட்டினதுக்காக அவகிட்ட கோவிச்சுக்காதேப்பா... அந்த லெட்டர் அவ கைக்குக் கிடைச்சுட்டதுக்கு அப்புறம் அது அவளோட சொத்து."

கங்கா பேசாமல் இருந்தான். ராஜாராமன் கடிதத்தின் சாரத்தை மகள்களுக்குச் சொன்னார். இருவரும் தெரியாதது போல் கேட்டுக் கொண்டார்கள்.

" 'அவன் சொல்றதெல்லாம் நியாயம்தானேம்மா? அதுக்கு எதுக்கு அழறே'ன்னு கேட்டேன். 'என்னால கங்காவைத் தவிர வேற யாரையும் மனசால கூட நினைக்க முடியாது. அவனாலயும் முடியாது, தாத்தா. சும்மாவானும் பொய் சொல்றான். இதுக்கு நீங்கதான் ஒரு வழி சொல்லணும், தாத்தா' அப்படிங்கறா....."

"நீங்க என்ன சொன்னேள்?"

"உங்கம்மா, பெரியம்மா எல்லாரோடயும் கலந்து பேசித்தான் முடிவு பண்ணணும். இதுக்கு இடையில நீ மனசு தளரக் கூடாது'ன்னு சொல்லிட்டு வந்திருக்கேன். கங்கா....."

"என்ன, மாமா?"

"உன்னால அவளை மறக்க முடியாது தானே?"

"அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே, மாமா. தேசத்துக்காக எல்லாத்தையும் மறக்கத்தான் வேணும். எதையும் துறக்கவும் வேணும்."

"அப்படியா? ரொம்ப சரி. உன்னோட லெட்டருக்கு அவ பதில் எழுதினாளா?"

"இதோ இருக்கு மாமா." - கங்கா தன் சட்டைப் பையிலிருந்து அந்தக் கடிதத்தை எடுத்து அவர் கையில் கொடுத்தான்.

அதை வாங்கி மகள்களும் கேட்பதற்காக இரைந்து படித்த பின், "அவ லெட்டரைப் பையிலேயே வெச்சுண்டு அலையற நீயா அவளை மறக்கப் போறே? உம்?" என்று சிரித்த ராஜாராமன் அதை அவனிடம் திருப்பிக் கொடுத்தார்.

அஞ்சனா, மெதுவான குரலில், "இப்படி காதலர்கள் எழுதிண்ட கடிதங்களை அவா கிட்டேருந்தே பிடுங்கிப் பெரியவா படிச்ச வீடு இது ஒண்ணுதான்னு நினைக்கிறேன்," என்று சிரித்தாள். கங்கா முகத்துச் சிவப்புக் குறையாமல் உட்கார்ந்திருந்தான்.

(தொடரும்)

மறந்து போனார்கள் டாக்டர்கள். விளைவு?

சட்டென்று கண்பார்வை போய்விட்டது ஜெயஸ்ரீக்கு.

இரண்டு நாட்கள் பெரும் போராட்டத்திற்குப் பிறகு ஒரு வழியாகப் பார்வை திரும்ப- கண்ணாடி அணிய வேண்டிய கட்டாயம். அப்போதும் நிற்காமல் கண்ணில் வடியும் நீர். ஆயுள் முழுக்க மருந்து போட்டுக் கொள்ள வேண்டிய நிலை.

மனம் தளரவில்லை ஜெயஸ்ரீ. விதியோடு ஒரு போராட்டம் நடத்திப் பார்க்க முடிவு செய்து கொண்டார். வலது கையை இழந்தாலும், இடது கரத்தால் எழுதிப் பார்த்துப் பழகிக் கொண்டார். கூடவே கார்ட்டூன் வரையவும்!

கார்ட்டூன்கள் வரைவது தொடர்பான சில சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்வதற்காக பிரில்லியன்ட் டுடோரியல்ஸ் அதிபரும் பிரபல கார்டூனிஸ்ட்டுமான தாணுவை அணுகினார்.

ஜெயஸ்ரீயின் நிலை கண்டு பாதிக்கப்பட்டு, "கார்ட்டூன் வரைவதை ஹாபியாக வைத்துக் கொள். என் நிறுவனத்திலே உனக்கு வேலை தருகிறேன்" என்ற தாணு, ஜெயஸ்ரீயின் இருண்ட வாழ்க்கைப் பாதைக்கு நியான் விளக்குப் போட, பிரில்லியன்ட் நிறுவனத்தில் கிளார்க்காகச் சேர்ந்தார் ஜெயஸ்ரீ!

தமது தளராத உறுதியாலும் விடா முயற்சி, உழைப்பினாலும் இழித்துப் பேசியவர்களே வியக்கும் வண்ணம் திறமை காட்டினார்!

ஜெயஸ்ரீ, தன் நிலைமையை விளக்கி, உதவி கோரி பிரதமருக்கு மனு அனுப்பிய போது, டெல்லிக்கு வந்தால் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்வதாகப் பதில் வந்தது.

குடும்பப் பொறுப்புகளால் உடனே டெல்லி போக முடியாத சூழலில், கொஞ்சம் கழித்துப் போக, "உடனே வராததால் உதவி சாத்திமில்லை" என்று சொல்லி விட்டார்கள்.

வேறு வழியின்றி, மாநில அரசுக்கு இவர் உதவி கோரி விண்ணப்பிக்க, "விபத்தால் ஏற்பட்ட ஊனத்துக்கு உதவ சட்டத்தில் இடமில்லை'' என்று முதலமைச்சர் செய்ய மறுத்துவிட்டார்!

மேற்கு மாம்பலத்தில் ஒருவர் கருணையுடன் 150ரூபாய் வாடகையில் வீடு தர, தமது கார்ட்டூன்களைக் கொண்டு, வாழ்த்து அட்டைகள் தயாரித்தும் பிரில்லியன்ட் பணி மூலம் கிடைக்கும் வருவாயைக் கொண்டும் நடமாட முடியாத அப்பா, வயதாகிவிட்ட அம்மா, மனவளர்ச்சியற்ற சகோதரி உள்ளிட்ட குடும்பத்தைக் காப்பாற்றி வருகிறார் ஜெயஸ்ரீ.

''வயதான உங்கள் பெற்றோரை ஏதாவது முதியோர் இல்லத்திலும் சகோதரியை மனவளர்ச்சி குன்றியோருக்கான இல்லத்திலும் சேர்க்கலாமே!'' என்று யாராவது கேட்டால், "எனக்கு என்ன கஷ்டம் வந்தாலும் சரி; நான் இருக்கும் வரை எப்படியும் உழைத்து, என் குடும்பத்தை நானே காப்பாற்றுவேன். கஷ்டங்கள் எந்த உருவில் வந்தாலும் தாங்கும் துணிவு எனக்கு இருக்கிறது!'' என்று தன்னம்பிக்கையுடன் சொல்கிறார் ஜெயஸ்ரீ.

**-வி.சுபாஷ்சந்திரன்,**
**எஸ்.சந்திரமௌலி.**

படங்கள்: **யோகா**



குரலை உடனே மாற்றிக் கொண்ட ஜெய்சங்கர் சுக்லா, "வீ ஆர் வெரி, வெரி, சாரி, சர். 144 சட்டம் போட்டிருப்பது பற்றி எங்களுக்கு எதுவும் தெரியாது—" என்று கூறி நண்பர்களுக்குக் கண் ஜாடை காட்டினான. நால்வரும் இரண்டிரண்டு பேராய் இரண்டு தனித்தனிப் பாதைகளில் பிரிந்து நடக்கலானார்கள்.

சிறிது தொலைவு நடந்த பிறகு, கோணலாயத் திரும்பிய தெரு முனையில் நின்று, சாடையாக ரத்னாகர் கவனித்தபோது, மாணிக்லால் திங்ரா தலை குனிந்து சிகரெட்டைப் பற்றவைத்தபடி அதே இடத்தில் நின்றிருந்தார். இருவரும் குறுக்குப் பாதையில் திரும்பி மறைந்தார்கள்.

ஆனால் ஜெய்சங்கர் சுக்லாவும் அகமதுகானும் அதே பாதையில் நேராக நடந்து கொண்டிருந்தார்கள். உடனே திரும்பிப் பார்க்கக்



கூடாது என்று இருவரும் தங்களுக்குள் தீர்மானித்திருந்தார்கள். அதன்படி இருவரும் திரும்பியே பார்க்காமல் — ஆனால் மிக விரைவாக — நடந்து கொண்டிருந்தார்கள். ஓரிரு நிமிஷங்களில் மாணிக்லால் திங்ரா தனது மோட்டார் சைக்கிளை வளைத்து ஒடித்துத் திருப்பி, இருவரையும் வழி மறிக்கிறாற் போல் அதை நிறுத்திவிட்டு, அதனின்று இறங்கி அவர்களை நோக்கிப் புன்னகை செய்தான்.

"ஹலோ, ஜெய்சங்கர், சவுக்கியமா?" என்று மாணிக்லால் திங்ரா தொப்பியைக் கழற்றிக் கையில் பிடித்தபடி வினவியதும் ஜெய்சங்கர் சுக்லா திணறித்தான் போனான்.

"நான் போலீசில் தற்சமயம் இருந்தாலும் பழைய மாணிக்லால் திங்ரா இல்லை. மாறிவிட்டேன், எனக்கும் தேச பக்தி உண்டு. போலீசில் இருந்தபடியே விடுதலைப் போராட்ட இயக்கத்தினருக்கு மறைமுக உதவிகளைச் செய்து வரும் அரசு ஊழியர்களில் நானும் ஒருவன். என்ன அப்படிப் பார்க்கிறாய்? நம்பமுடியவில்லையா?" என்றான் மாணிக்லால் திங்ரா. முகத்தில் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது.

ஜெய்சங்கர் சுக்லாவுக்குக் குழப்பமாகவும் திகைப்பாகவும் இருந்தது. என்ன பதில் சொல்லுவதென்று தோன்றாததால் அவன் மௌனமாக நின்றான்.

"நீ அகமத்கான்தானே?"

"ஆமாம்."

"பல ஆண்டுகள் ஆகிவிட்டாலும் நீங்கள் அதிகம் மாறவில்லை. நானும் அவ்வளவாக மாறவில்லை என்று நினைக்கிறேன். சரிதானே?"

ஜெய்சங்கர் சுக்லாவும் அகமத்கானும் அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்கள்.

"என்னை நம்புங்கள், நண்பர்களே. மனிதர்கள் எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. அன்று லண்டனில் நான் செய்தது யோசிக்காமல் செய்த அசட்டுக்காரியம். என் மனம் அப்போது பக்குவப் பட்டிருக்கவில்லை. படிப்பை முடித்தபின் இந்தியாவுக்கு வந்து, நேரில் பார்த்த பிறகு வெள்ளைக்காரர்கள் மீது உங்களுக்கெல்லாம் இருந்த கோபத்தின் நியாயம் எனக்குப் புரியத் தொடங்கிற்று. சூர்யா சென்னுக்கு மறைமுகமாய் நான் அவ்வப்போது உதவுவது உண்டு. என்னை நம்புவதும் நம்பாததும் உங்கள் விருப்பம்... நான் வரட்[illegible]"

மாணிக்லால் [illegible] சைக்கிளின் இருக்கையில் தாவியமர்ந்தபடி வாய்விட்டுப் பெரிதாய்ச் [illegible] அவன் சிரித்த சிரிப்பில் தெருவில் நடந்து போய்க் கொண்டிருந்த ஒரு மனிதன் நின்று திரும்பிப் பார்த்துவிட்டுப் போனான்.

# மணிக்கொடி

## ஜோதிர்லதா கிரிஜா

**நா**ட்கள் நகரலாயின. அவ்வாண்டு இளைஞர்களின் இரகசியக் கூட்டம் ஒன்றில் — ஆண்டிறுதித் தேர்வு முடிந்த பின்னர் — கங்கா கலந்து கொண்டான். தமிழ்நாட்டு இளைஞர்கள் மட்டும் கூட்டிய கூட்டம் அது. வங்கத்து இளைஞர்போல் மற்ற ராஜதானிகளின் இளைஞர்கள் விறுவிறுப்பாகச் செயல்படாததைப் பேச்சாளர் எல்லாருமே சுட்டிக் காட்டினார்கள். முடிவில் வங்கத்துடன் தொடர்பு கொண்டு, அங்கு புரட்சிக் குழுக்கள் செயல்படும் தினுசில் தாங்களும் குழுக்களை அமைக்க வேண்டும் என்று ஒரு மனத்துடன் அவர்களால் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

கூடிய விரைவில் பத்து இளைஞர்கள் கல்கத்தாவுக்கு அனுப்பப்படுவர் என்று அவ்வமைப்பின் தலைவர் சுப்பிரமணிய ராஜ் தெரிவித்தார். கட்டான உடலும், முழுமையான ஆரோக்கியமும் கூரிய கண் பார்வையும் விரைவாக நடக்கும் சக்தி உள்ளவராகவும் அந்தப் பத்துப் பேர் இருப்பர் என்றும் அவர் கூறிய போது, நல்ல உயரமும் வயதை மீறிய வளர்ச்சியும் கொண்ட தான், நிச்சயமாக அந்தப் பட்டியலில் இடம் பிடிக்க முடியும் என்கிற பெருமை கங்காவுக்கு உடனே உண்டாயிற்று.

டிசம்பர் 22 ஆம் நாளில் காந்தியடிகள் சென்னைக்கு வந்து சேர்ந்தார். அப்பா ராமசாமியுடன் கங்காவும் அவரைப் பார்க்க சென்ட்ரலுக்குப் போனான். கூட்டமான கூட்டம். கங்கா அசந்து போனான். [illegible]களுக்கு இவ்வளவு [illegible] கூடும் என்பதே அவனுக்கு வியப்பான செய்தியாக இருந்தது. பொக்கைவாய்ச்

சிரிப்புடன் காரில் ஏறிய அவரைப் பார்த்தவன் பார்த்துக் கொண்டே இருந்தான். அவரது சிரிப்பும் கூட்டத்தைப் பார்த்து அவர் செய்த கையசைப்பும் அவன் மனத்தை என்னவோ செய்தன. தனக்கு மிகவும் நெருக்கமான — தன்னை மிகவும் நேசிக்கும் பாட்டனாரைப் பார்க்கும்போது ஒரு பேரனுக்கு ஏற்படக்கூடிய பாச உணர்வு, தனது நெஞ்சில் பரவியதாக அவனுக்குத் தோன்றியது. உடல் முழுவதும் ஒரு சிலிர்ப்பு ஊர்ந்தது.

சென்ட்ரலை விட்டு வெளியே வருவதற்குப் படாதபாடு பட வேண்டி இருந்தது. ஒருவழியாக வெளியே வந்ததும் "அப்பா! காந்தி பேசறதைக் கேக்கணும்ப்பா...." என்றான்.

"என்னடா, காந்தியைப் பார்த்து நீயும் மயங்கிட்டியா?"

"அப்படின்னு இல்லேப்பா. யாரையுமே சரியாத் தெரிஞ்சுக்காம நிராகரிக்கக்கூடாது இல்லியா? அதுக்குத்தான். அவரோட பேச்சைக் கேட்டா ஓரளவுக்கு அவரைப் புரியுமில்லியா? அதுக்கும்தான்."

"உன்னை ரொம்ப இம்ப்ரெஸ் பண்ணிட்டாரில்ல?"

கங்கா சிரித்தபடி ஒன்றும் சொல்லாதிருந்தான்.

"கங்கா!"

கங்கா திரும்பினான். "ஒரு நிமிஷம் இப்படி வறியா?" என்று கேட்டுக் கொண்டு நின்றவன், அன்று இளைஞர்களின் கூட்டத்தை நடத்திய சுப்பிரமணியராஜ்தான்.

ராமசாமியிடம் பார்வையாலேயே விடை பெற்றுக் கொண்டு கங்கா அப்பால் நகர்ந்து போனான்.

சில நொடிகளில் திரும்பிப் பார்த்த கங்கா, "நீங்க போங்கப்பா. நான் அப்புறமா வரேன்," என்று குரல் கொடுத்த பின், சுப்பிரமணிய ராஜுவுடன் விரைவாக நடக்கலானான்.

# 51

"நரேன், உனக்குத் தெரியுமா? அந்த நல்ல வெள்ளைக்கார அதிகாரி அலெக்சாண்டரை இந்தியாவுக்கு மாற்றிவிட்டார்களாம். இன்னும் ஒரு வாரத்துக்குள் அவர் கிளம்பிப் போக இருக்கிறார்," என்று பிற்பகல் சாப்பாட்டு நேரத்தின்போது மல்ஹோத்ரா சொன்ன தகவல் நரேந்திரநாத் பானர்ஜிக்கு அதிர்ச்சியாக இருந்தது. வாயருகே கொண்டு சென்ற கவளத்தைத் திரும்பவும் தட்டில் போட்டு விட்டு, "உண்மையாகவா?" என்றான் கண்கள் விரிய.

"ஆமாம். வெள்ளைக்கார சென்ட்ரிகள் சிலர் பேசிக் கொண்டார்கள்."

"அலெக்சாண்டர் வித்தியாசமான மனிதர். வரும் புது ஆள் அப்படி இருப்பானென்று சொல்ல முடியாது. அவன் பொல்லாதவனாக இருந்தால், நிக்கல்சனுக்குக் கொண்டாட்டந்தான். என்னைத் துன்புறுத்தவும், அளவுக்கு மீறிய தொல்லைகளை எனக்குத் தரவும் முற்படுவான்."

ஆண்டுக்கு இரண்டு கடிதங்கள்தாம் எழுதலாம் என்று சொல்லப்பட்டிருந்ததால், கொஞ்சநாள் கழித்து எழுதலாம் என்று நரேந்திரநாத் பானர்ஜி எண்ணி இருந்தான் — உடனேயே எழுதிப் போட்டு விட்டால் பிறகு ஆண்டு முடிவுவரை இன்னும் ஒரே ஒரு கடிதம்தான் எழுத முடியும் என்பதால். அலெக்சாண்டர் மாற்றிச் செல்லவிருப்பது

---

## மவுண்ட்பேட்டனின் ராஜதந்திரம்!

ஹிமாசல கவர்னர் சுதாகர் ராவ் நாயக் சிம்லா ராஜ்பவனில் (முன்னாள் வைசிராய் மாளிகை) பிரதான வாயில் போலவே மற்றொரு வாயில் இருப்பதைக் கண்டு வியந்து விசாரித்தபோது அறிந்த தகவல் :

பாகிஸ்தான் பிரிவினைக்கான ஒப்பந்தம் அங்குதான் கையெழுத்தாயிற்று. ஏற்பாடுகளின்போது ஜின்னா இந்தியத் தலைவர்களைப் பின் தொடர்ந்து தாம் பிரவேசிப்பது தம் கௌவரத்துக்கு இழுக்கு என்றும் தாமே முதலில் நுழைய வேண்டும் என்றும் பிடிவாதம் பிடித்தார். இதை நேருவிடம் எப்படிச் சொல்வது என்று தவித்த மவுண்ட்பேட்டன் சுவரை இடித்து, சந்தடியின்றி அதே பாணி அலங்காரங்களுடன் மற்றொரு வாயிலை உருவாக்கினார். (இந்த ஏற்பாடு பற்றி அறியாமலே) நேருவும், ஜின்னாவும் ஒரே நேரத்தில் தத்தம் குழுவினருடன் மாளிகைக்குள் பிரவேசித்தனர். அக்கால கட்டத்தில் எத்தனையோ சிக்கல்களை மவுண்ட்பேட்டன் சாதுரியமாகச் சமாளித்ததற்குச் சான்றாக அந்த இரண்டாவது வாயில் விளங்குகிறது!

- டெக்கான் ஹெரால்ட்

தகவல் : அ. ஷண்முகசுந்தரம்




**தொண்டர் 1 :** 'சிங்கத்தின் குகைக்குள்ளேயே சென்று வெற்றிவாகை சூடிவரும் தலைவரே வருக வருக'ன்னு எதுக்கு பேனர் கட்டியிருக்காங்க?

**தொண்டர் 2 :** வேற ஒண்ணுமில்லை. நம்ம தலைவர் டாக்டரிடம் சின்னதா ஒரு ஆபரேஷன் பண்ணிக்கிட்டு வர்றார். அதுக்குத்தான் இத்தனை அமர்க்களம்!

- கே. சரவணகுமார்

தெரிந்ததும் அந்த மனிதரின் நல்லியல்பைத் தனக்கு ஆதாயப்படுத்திக் கொள்ளும் எண்ணம் அவனுக்கு வந்தது. தனது கடிதத்தை இந்தியாவுக்கு எடுத்துச் சென்று, தபால் மூலம் அமராவதிக்கு அனுப்ப ஒப்புக் கொள்ளுவாரா என்பது கேள்விக்குரியதுதான். இருந்தாலும் கேட்டுப் பார்க்க விழைந்தான்.

சிறையறைகளைப் பார்வையிட அவர் வந்தபோது, அவருடன் காதுகேளாத ஒரு சென்ட்ரி மட்டும் அப்போது இருந்தான். நரேன் நட்புணர்வுடன் அவரை இந்தியப் பாணியில் கும்பிட்டான்.

"உள்ளங்கைகளைச் சேர்த்து இப்படிச் செய்வதற்கு ஏதேனும் அர்த்தம் உண்டா?" என்று அவர் சிரித்தபடி வினவினார்.

"ஒரு கை நான், மற்றொரு கை நீங்கள்! உங்கள் மீது எனக்கு நட்பு உண்டு என்று சொல்லுவதே இரு கைகளின் இணைப்புக்கு அர்த்தம்."

"அழகான விளக்கமாயிருக்கிறதே!"

"ஐயா, என் மனைவிக்குக் 'கடிதம் ஒன்று' எழுதித் தருகிறேன். நீங்கள் மதராஸை அடைந்ததும் அங்கு தபாலில் சேர்த்து விட வேண்டும். இயலுமா, ஐயா?"

அலெக்சாண்டரின் இளம்பச்சை விழிகள் அவனைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தன. உதடுகளை உள்மடித்தபடி சில கணங்களுக்குப் பதில் சொல்லாதிருந்தபின், "சரி, ஆனால் உன் நண்பர்களுக்குக் கூட இது தெரியக் கூடாது. சட்டப்படி அது குற்றம்," என்றார் மெதுவான குரலில்.

நரேந்திரநாத் பானர்ஜியின் கண்களில் ஈரம் பரவிற்று. மறுபடியும் அவன் கைகூப்பி, "மிக்க நன்றி, ஐயா. மிக்க நன்றி. நான் உங்களை மறக்கவே மாட்டேன்," என்றான். அவன் குரல் தடுமாறித் தழுதழுத்தது. "இதன் மூலம் இவ்வாண்டு நான் வீட்டுக்கு அதிகப்படியாக ஒரு கடிதம் எழுத முடியும்...."

அன்றிரவு மெழுகுவர்த்தியின் மங்கிய ஒளியில் 'சுவர் மூலைச் சந்திப்பில், சிறைக் காவலனின் உதவியால் தாளும் எழுதுகோலும் பெற்றுக் கடிதம் எழுதிய நரேந்திரநாத் பானர்ஜி, மறுநாள் சிறைக்கு வந்த அலெக்சாண்டரிடம் அதை நீட்டினான்.

"படித்துவிட்டுத்தான் உன் மனைவியிடம் இதை நான் சேர்ப்பேன். ஏற்கெனவே சொல்லி இருக்கிறேன்தானே?" என்றவாறு அவர் அதைப் படிக்கலானார்.

மனைவிக்கும் மகளுக்கும் தன் அன்பைக் கொட்டி எழுதிய பிறகு, தனது சிறை வாழ்க்கை குறித்தும் இலேசாகக் கோடி காட்டியிருந்தான். கடைசியாக, "நீ இக்கடிதத்துக்குப் பதில் எழுத வேண்டாம். அப்படி பதில் எழுதினாலும் இக்கடிதம் பற்றி உன் கடிதத்தில் ஏதும் சொல்ல வேண்டாம். இது அதிகப்படியாக நான் எழுதும் கடிதம் என்பதால், இது எப்படி அனுப்பப்பட்டது என்ற கேள்வியும் கிளம்பும், அதனால்தான். அலெக்சாண்டர் என்ற நல்லிதயம் படைத்த அதிகாரிக்குத்தான், நீ இந்த அதிகப்படி கடிதத்துக்கான நன்றி செலுத்த வேண்டும்" என்று முடித்திருந்தான்.

கடிதத்தைப் படித்த பிறகு அலெக்சாண்டர் என்ற பெயரை மட்டும் நன்றாக அடித்து விட்டு, அதை மடித்துக் காற்சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்ட அலெக்சாண்டர், "இதை ஓர் உறையில் போட்டு நானே அனுப்பி விடுவேன். ஆனால் முக்கியமாக ஒன்றை விட்டு விட்டாயே? விலாசம்?" என்றார்.

தலையை வெட்கத்துடன் சொறிந்து கொண்ட அவன், வேறொரு சிறு தாளில் அதை எழுதி அவரிடம் கொடுக்க, அதையும் அவர் 'பைக்குள் வைத்துக் கொண்டார். பிறகு விடை பெற்றுப் புறப்பட்டார்.

"யாருடா அந்தப் பையன்?" என்று கங்கா திரும்பியதும் ராமசாமி அவனிடம் விசாரித்தார்.

"ஹிந்துஸ்தான் சோஷலிஸ்ட் ரிபப்ளிகன்

அசோஸியேஷனுடைய தலைவர்ப்பா. சுப்ர மணியராஜ்னு பேரு."

"சின்னவனா இருக்கான்."

"இருந்தா என்னப்பா? கடுகு சிறுத்தா காரம் போயிடுமா?"

"என்ன, ஏதாவது திட்டமா?"

"ஆமாம்ப்பா. நாளைக்கே நான் புறப்பட ணும்."

"என்னது? நாளைக்கேயா? எங்கடா?"

"கல்கத்தா போறோம்ப்பா. அவன், நான், அப்புறம் சிலர். மொத்தம் பத்துப் பேர் போறோம்."

ராமசாமி திடுக்கிட்டார். நெஞ்சுக்கூட்டுக் குள்ளிருந்து எதுவோ நழுவினாற்போல் பள்ளமாக உணர்ந்தார்.

"போய்?"

"அங்க போனதுக்கு அப்புறந்தாம்ப்பா தெரியும். அங்க போனதும் பகத்சிங், பது கேஸ்வர் தத்தா, சந்திரசேகர் ஆஸாத் இவாளோட தொடர்பு வெச்சுண்டு, மேற் கொண்டு திட்டங்கள் பண்ணுவோம்... மத்த விவரமெல்லாம் சுப்ரமணிய ராஜ்க்குத் தாம்ப்பா தெரியும். கல்கத்தாவிலேருந்து கௌஷிக்ங்கிறவனும், முஷ்டக் அலிங்கிற வனும் வந்திருக்கா. அவாதான் எங்களைக் கூட்டிண்டு போறா?"

"காந்தியை அப்ப நீ பார்க்க முடியாது? 27 முடிய மெட்ராஸ்ல இருக்கப் போறார்?"

"ஏம்ப்பா? காந்தி பேசறதைக் கேட்டா நான் மாறமாட்டேனான்னு உங்களுக்கு ஒரு நப்பாசை, அதானே?"

"அதேதாண்டா, கங்கா. இப்ப நான் மாறல் லியா?"

"நீங்கள்ளாம் சமயம் போல மாறிப் பேள்ப்பா. எங்களால முடியாது. காந்தி வழிக் கும் எங்களுக்கும் கொஞ்சங் கூடச் சரிப் பட்டு வராதுப்பா."

**வி**ஷயத்தைக் கேள்விப்பட்டதும் விசாலம், "வாலு போச்சு கத்தி வந்தது கதையா இருக்கே? அவன் திரும்பி வந்துட் டானேன்னு சந்தோஷப்பட்டுண்டா இப்ப இவன் கௌம்பறேங்கறானா?" — விசாலம் அழக்கூட முடியாமல் பொத்தென்று தரை யில் கைகளை ஊன்றி உட்கார்ந்தாள்.

கங்கா பெட்டியில் துணிகளை அடுக்கிக் கொண்டிருந்தான்.

"அண்ணா!"

திரும்பிய கங்கா, கண்ணீர் வழிய நின்றி ருந்த ரமணியைப் பார்த்து, அதிர்ந்து போனான்.

"ரமணி! என்னடா? எதுக்கு அழறே?"

"என்னால் தாங்க முடியல்லேண்ணா!" என்ற ரமணி, நொண்டிக் கொண்டே பாய்ந்து வந்து, கங்காவின் தோளில் முகம் பதித்துக் கொள்ள, கங்கா அவனது முதுகுப் புறம் தன் கைகளைக் கோத்துத் தாங்கிக் கொண்டான். இருவரும் கட்டுண்டிருந்த அந்த ஒரு நிமிடம் நெடிய நிமிடமாய் நீண்டது.

சற்றுப் பொறுத்து, "ரமணி, நான் அஞ்சனா மாமி வீட்டுக்குப் போய்ச் சொல் லிண்டு வந்துடறேன். நாளைக்குக் கிளம்பணு மில்லியா?" என்று கூறிவிட்டு, கங்கா கிளம் பிப் போனான்.

கதவைத் திறந்த அஞ்சனாவின் விழிகள் கலங்கிக் கிடந்தன.

அவளைப் பின் தொடர்ந்து உள்ளே சென்றவன், "என்ன, ஆச்சு, அஞ்சனா மாமி? ஏன் எல்லாரும் ஒரு மாதிரியா இருக்கேள்?" என்று கேட்டான்.

(தொடரும்)



காதலி : இத்தனை நாள் என்னைக் காதலிச்சதுக்குக் கடைசியா ஒரு உதவி செய்யணும்!

காதலன் : என்ன அது?

காதலி : என்னைக் கைப்பிடிக்கப் போறவர் நல்ல வர்தானான்னு விசாரிச்சுச் சொல்லணும்!

- அம்பை தேவா

"நாம எடுக்கறது லோ-பட்ஜெட் படம்ா இருக்கலாம்! அதுக்காக 'அலிபாபாவும், நாலு திருடர்களும்'னு பேர் வைச்சா மிச்சம் முப்பத்தாறு திருடங்க என்ன ஆனாங்கன்னு மக்கள் கேட்பாங்களே சார்?"

"திருட்டுத் தொழில் அவ்வளவு லாபம் தராததால அவங்கள்லாம் அரசியலில் குதிச்சுட்டாங்கன்னு ஒரு திருடனை விட்டு முதல் சீனிலே வசனம் பேச வைச்சுடுவோம்!"

- பாலு



கையளவு மனசு'- படப் பிடிப்பில்...



இன்றைய சூழ்நிலையில், வியாபார ரீதியில் சில சமரசங்களுக்கு நாம் கட்டுப்பட நேர்வது தவிர்க்க முடியாமல் போகிறது. இந்த 'காம்ப்ரமைஸ்'களுக்குக் கட்டுப்படும் போது கலை செத்துவிடுகிறது. உடனே 'You too K.B.?' என்று கேட்டு விடுகிறீர்கள்."

*அதனால்?*

"நான் நினைத்ததை, நினைத்தபடி, அணு அணுவாக ரசித்து, எந்த நிர்ப்பந்தங்களுக்கும் ஆளாகாமல், என் விருப்பப்படி டீ.வி.யில் தர முடிகிறது. கலைஞனுக்கு வெளிப்பாடு முக்கியமே தவிர, எந்த மீடியமாக இருந்தால் என்ன?

*ஆக, இதுதான் காரணம்?*

"இதுமட்டுமல்ல. பல காரணங்களால் ஒரு படத்துக்கும் அடுத்ததற்கும் நடுவே இடைவெளி – அது சற்று அதிகமாகவும் இருக்கலாம் – ஏற்படலாம். என்னை விடுங்கள். என்னை, நான் படமெடுப்பதை நம்பி எத்தனை ஊழியர்கள், தொழில் நுட்பக் கலைஞர்கள் இருக்கிறார்கள்? அவர்களுக்கு வேலை தரவேண்டிய பொறுப்பு எனக்கு இருக்கிறதல்லவா? இது ஒரு முக்கிய காரணமில்லையா?"

*ஸோ, இனி டீ.வி.தானா?*

"அப்படி அல்ல. இது சௌகர்யமாக இருக்கிறது. சினிமாவைப் போல் பேக்கிரௌண்ட், லொக்கேஷன் என்று சப்ஜெக்டை விட்டு விலகி அலையாமல் டைட்-குளோசப்பில் உணர்ச்சிகளை கண்கள், நாசி, உதடு மூலம் மட்டுமே வரவழைப்பது சவாலாக, சுவாரஸ்யமாக இருக்கிறது. ஆனாலும் சினிமாவை அத்தனை சுலபத்தில் விட்டுவிடுவதா? கைவசமுள்ள டீ.வி. வேலைகள் முடிந்ததும் கமலை வைத்து அடுத்தப் படம்."

—பா. ராகவன்

அலமாரியைத் திறந்து அதிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்துக் கங்காவிடம் கொடுத்தாள், அமராவதி.

"படிச்சுப்பாரு கங்கா, பவித்ராவும் அன்னிக்கு உன் தம்பி பண்ணின மாதிரி லெட்டர் எழுதி வெச்சுட்டுப் போயிட்டா. அவளோட இந்தாத்து வேலைக்காரி தங்கமும் போயிருக்கா."

கங்கா அதைப் பிரித்துப் படிக்கலானாள்.

'அன்புள்ள அம்மா, பெரியம்மா, தாத்தா,

உங்கள் எல்லாருக்கும் பவித்ரா அன்புடன் எழுதிக் கொண்டது. படிப்பை முடித்த பிறகு நான் குதிக்க எண்ணி இருந்த போராட்டத்தில் இப்போதே குதிக்க வேண்டிய கட்டாயம் நிகழ்ந்து விட்டது. வடக்கே செயல்படும் ஒரு தீவிரவாத இயக்கத் தலைவரின் கட்டளைப்படி சென்னையிலிருந்து சிலர் கிளம்பிப் போகிறோம். போய்ச் சேர்ந்த பிறகு எந்த இடம் என்பதைக் கட்டாயம் தெரிவிப்பேன். இப்போது சொல்லக்கூடாது என்பது உத்தரவு. நான் பத்திரமாக இருப்பேன். கவலை வேண்டாம்.

நம் வீட்டு வேலைக்காரி என்னுடன் அவ்வப்போது தேசியவிடுதலைப் போராட்டம் பற்றியெல்லாம் விவாதிப்பது வழக்கம். நீல் சிலை உடைப்புச் சத்தியாகிரகத்தில் முருகப் படையாச்சியும் அவர் மனைவி அஞ்சலையம்மாளும் தங்கள் கைக்குழந்தையுடன் சிறை சென்றது பற்றி ஒரு தரம் அவளுக்குச் சொன்னபோது அவள் மனத்தில் நாட்டுப் பற்றின் வித்து விழுந்திருக்கலாம். தங்கத்துக்கு ஏதும் நேராத வரையில் அவள் என்னைப் பாதுகாப்பாள் என்ற நிம்மதியோடு நீங்கள் இருக்கலாம். நம்பகமான யாரையும் இயக்கத்தில் சேர உடனழைத்து வரலாம் என்பது தலைவரின் அனுமதியாதலின், நான் தங்கத்தை அழைத்துச் செல்லுகிறேன். தங்கம் உங்களிடமெல்லாம் விடை பெற்றுக் கொண்டு, வாழ்த்துக்களோடு புறப்படவில்லையே என்று வருத்தப்படுகிறாள். அது குறித்து உங்களுக்கு எழுதச் சொன்னாள். தன்னை மன்னிக்கச் சொன்னாள். எங்கள் இருவரையும் மன்னிப்பீர்கள் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு.

உங்களிடம் உத்தரவு கேட்டிருந்தால் தந்திருக்க மாட்டீர்கள். இப்போதெல்லாம் நம் வீட்டில் எல்லாருமே காந்தி மயக்கம் கொள்ள ஆரம்பித்திருக்கிறீர்கள். என்னை என் வழியில் போக விடாமல் தடுக்கப் பார்ப்பீர்கள். வாக்குவாதங்கள், கண்ணீர்த் துளிகள், மனக்கசப்பு ஆகியவற்றைத் தவிர்ப்பதற்காகவே நான் சொல்லிக் கொள்ளாமல் கிளம்பி விட்டேன்.

கங்காவைப் பார்க்க வாய்க்கும் போது என் கடிதம் பற்றிச் சொல்லுங்கள். கங்காவின் மேல் எனக்கு எந்த வருத்தமோ மனத்தாங்கலோ கிடையாது என்பதையும் தெரிவியுங்கள்.

நான் சாதனை புரிந்து வெற்றியோடு திரும்ப, உங்கள் அனைவரின் ஆசீர்வாதத்தையும் வேண்டுகிறேன்.

அன்புள்ள,
பவித்ரா.'

கடிதத்தைப் படித்து முடித்த பிறகு கங்காவின் விழிகளில் நீர் படர்ந்தது.

"என்னிக்குக் கிளம்பிப் போனா?"

"நேத்து ராத்திரி படுத்துண்டா. காலம்பர ஆள் இல்லே. தங்கம் கூடப் போறது ஒண்ணுதான் எங்களுக்கு ஒரு ஆறுதல்" என்றாள் அமராவதி.

கடிதத்தை மடித்து அவளிடம் திருப்பிக் கொடுத்த கங்கா, "ஒரு வேடிக்கை தெரியுமா உங்களுக்கு? நானும் கல்கத்தா போறேன். நாளைக்குக் கிளம்பறதா இருக்கேன். அதான் சொல்லிண்டு போகலாம்னு வந்தேன்...."

"ஒரு வேளை அவளும் கல்கத்தாவுக்குத்தான் போறாளோ என்னமோ!" என்று

# மணிக்கொடி

ஜோதிர்லதா கிரிஜா

மலர்ச்சியுடன் குறுக்கிட்டுச் சொன்ன அஞ்சனாவுக்கு, அப்படித் தான் இருக்கும் என்ற நம்பிக்கையில் படபடவென்று வந்தது.

"அங்கதான் தீவிரவாதம் ஜாஸ்தி. ஆனா பஞ்சாப், ஒரிஸ்ஸா இங்கேல்லாமும் இருக்கு. மகாராஷ்டிரத்திலயும் இருக்கு. அதான் போனதும் என்ன இடம்னு எழுதறேன்னிருக்காளேம்மா?" என்றார் ராஜாராமன்.

"அப்ப நான் போயிட்டு வரட்டுமா?" என்ற கங்கா எல்லாரையும் பார்த்துக் கை கூப்பினான்.

**ப**டி இறங்கித் தெருவுக்கு வந்த பிறகு அதுகாறும் அவன் அடக்கிக் கொண்டிருந்த உணர்ச்சிகள் கட்டுப்பாடிழந்து பீறிட்டன. 'கங்கா, உம்மேல எனக்கு எந்த வருத்தமும் கிடையாது. எந்த மனத்தாங்கலும் கிடையாது' என்று அவள் திரும்பத் திரும்பக் கூறுவது போல் அவனுக்குப் பிரமை தட்டியது.

'இல்லே. பொய். நீ பொய் சொல்றே. வருத்தமும் மனத்தாங்கலும் இருந்ததனால தான் சொல்லிக்காம போயிட்டே. நான் பின் வாங்கினது தப்பாவே இருக்கட்டும். அதுக்காக எனக்கு இவ்வளவு பெரிய தண்டனையா? எத்தனை வருஷத்துப் பழக்கம்? சின்ன வயசுலேருந்து பழகின சிநேகிதம் கூடவா செத்துப் போயிடும்? பெண்கள்



கிட்ட எவ்வளவுக்கெவ்வளவு மென்மை இருக்கோ, அவ்வளவுக்கவ்வளவு கல் மனசும் இருக்குன்னு தோணறது!"

**ரா**மசாமி கண்ணிமைக்காமல் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு திடீரென்று உணர்ச்சியின் பிடியில் சிக்கியவராய், "கங்கா, கங்கா...." என்று அரற்றிய வண்ணம் ஒரே பாய்ச்சலில் அவனைத் தம்மோடு சேர்த்துப் பிடித்துக் கொண்டு அவன் தோளில் முகம் பதித்துக் கழுத்தில் முத்தமிட்டார். கங்கா ஆடிப் போனான். மறுநாள் சென்ட்ரலில் நண்பர்களைப் பார்த்து, 'சாரி, என்னால் வரமுடியாது' என்று சொல்லி விடலாமா?' எனும் எண்ணம் கணம் போல் அவனுள் கிளர்ந்து கொள்ள, அவரது அணைப்பு தன்னைப் பலவீனப்படுத்தி விடுமோ என்ற பயமே அவனிடம் அதிகமாக இருந்தது!

"தேசபக்தி அது இதுங்கறேள். ஆனா அவாவா வீட்டுப் பிள்ளைகளை விடுதலைப் போராட்டத்துல கலந்துக்கறதுக்கு அனுப்பற நிலை வர்றப்ப மட்டும் எங்கேப்பா அதெல்லாம் ஓடிப் போறது?... பவித்ரா கூட அவா வீட்டு வேலைக்காரி தங்கத்தோட வடக்கே எங்கேயோ ஓடிப் போயிட்டா. சூர்யா சென்னோட ரிபப்ளிகன் ஆர்மியில சேர்றதுக்குன்னு நினைக்கறேன். அவாத்துலயும் எல்லாரும் அழுது மாஞ்சுண்டிருந்தா நான் சொல்லிக்கப் போனப்ப."

"அட, அப்படியா?"

"ஆமா. உங்களை ராஜாராம் மாமா வரச் சொன்னார்ப்பா. சவுகரியப்படறப்பல்லாம் போங்கோ."

**க**ங்கா புறப்பட்டுப் போனதன் பின் ராமசாமி ராஜாராமனின் வீட்டுக்குப் போய் அவரோடு நிறைய நேரம் பேசிக் கொண்டிருந்தார். காந்தி சென்னையில் தங்கிக் கலந்து கொண்ட பல்வேறு சமூக நிகழ்ச்சிகளிலும் இருவரும் தம் சகாக்களுடன் கலந்து கொண்டார்கள். காந்தியின் ஆணித்தரமான

பேச்சு மழையில் நனைந்து குளிர்ந்து, தங்கள் மனச்சூட்டைப் பெருமளவுக்குத் தணித்துக் கொண்டார்கள். காந்தி சென்னைப் பட்டணத்தையே ஒரு கலக்குக் கலக்கிவிட்டு ஒரு வாரம் கழிந்ததும் பம்பாய் நோக்கிப் பயணமானார்.

பவித்ரா, கங்கா இருவரும் புறப்பட்டுப் போனதன் பின் இருவாரங்கள் சென்ற பிறகும் இரு குடும்பத்தினருக்கும் கடிதம் ஏதும் வரவில்லை. இதனால் இருதரப்பினருக்கும் மாளாக் கவலை மூண்டது. இதற்கிடையே விரைவில் வர இருந்த சைமன் கமிஷனுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் கண்டனக் கூட்டங்கள் நாடெங்கிலும் நடக்கலாயின. வடக்கிலிருந்து வந்த அது பற்றிய பத்திரிகைச் செய்திகளால் இரு குடும்பத்தினரும் திகிலடித்துப் போயினர்.

## 53

சைமன் கமிஷனை எதிர்த்துக் காந்தியடிகளின் ஆணைப்படி நாடு தழுவிய க்டையடைப்பு வெற்றிகரமாக நடந்து முடிந்த செய்தியைக் காங்கிரஸ்காரர்கள் பத்திரிகைகளில் படித்து மகிழ்ந்து அவரது தலைமையின் இன்றியமையாமையை வாயாரப் பரப்பினர். சைமன் கமிஷன் 1928 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 3 ஆம் நாளன்று பம்பாயில் வந்திறங்கியது எனில் அதே பிப்ரவரி மாதம் 12 ஆம் நாளில் வல்லபாய் படேலின் தலைமையிலான விவசாயிகளின் வரிகொடா இயக்கம் மாபெரும் வெற்றியைப் பெற்றது.

அது பற்றிப் பேசிக் கொள்ள வாய்த்த போது, மணவாளநாயுடு ராமசாமியிடம், ''என்னங்காணும்? வல்லபாய் படேல் முரட்டு ஆசாமியாமே? கொலை, கொள்ளைக் கேஸ்கள்ள யமனாமே? ஜட்ஜ்களுக்கெல்லாம் அவர் சிம்ம சொப்பனம்கறாங்க? அவர் போர்சால்ங்கிற ஊர்ல ப்ராக்டிஸ் பண்ணத் தொடங்கினதும் ரெசிடென்ட் மாஜிஸ்ட்ரேட்ஸ் கோர்ட்டையே வெள்ளைக்காரன் ஆனந்த்ங்கிற ஊருக்குத் தூக்கிட்டானாமே?" என்றார் வியப்பாக.

"அவர் ஆனந்த்ல ப்ராக்டிஸ் பண்ணத் தொடங்கினதும் மறுபடியும் போர்ஸாலுக்குத் தூக்கிட்டான் கோர்ட்டை! அது தெரியுமா உமக்கு?.... ஆனா, பாரும், அப்படிப்பட்ட ஒரு முரட்டு ஆளு காந்திக்கு முன்னால அப்படியே மண்டி போடாத குறையாப் பணிஞ்சு போயிட்டாராமே? குஜராத் முழுக்க ஆச்சரியப்படறாளாம். ராஜாராமய்யருக்கு அவரோட பாம்பே ப்ரண்டு ஒருத்தர் எழுதி இருக்கார்."

''காந்தியோட வலது கையாட்டமா ஆயிட்டாராம். அது சரி, இன்னும் கங்கா லெட்டரே எழுதல்லே இல்லே? அந்தப் பொண்ணாவது அவங்களுக்கு எழுதிச்சாமா?"

"இல்லே, நாயுடுகாரு. லெட்டரெல்லாம் எழுதக் கூடாதுன்னு ஏதாவது அவாளுக்குள்ள கட்டுப்பாடு இருக்குமோ என்னமோ. இருந்தாலும் ராஜாராமய்யர் அந்தப் பொண்ணோட ஃபோட்டோவைத் தன்னோட வடக்கத்திக் காங்கிரஸ்கார ப்ரண்ட்ஸ்க்கெல்லாம் அனுப்பி வெச்சிருக்காராம் - கவனிச்சு, தெரியவந்தா தகவல் குடுக்கச் சொல்லி" -

மேலும் கொஞ்ச நேரம் காந்தியடிகளுக்குப் பெருகிவரும் செல்வாக்கு பற்றி வியந்து பேசிக் கொண்ட பின் இருவரும் பிரிந்தார்கள்.

அலெக்சாண்டரின் பதவியில் பதிலுக்கு வந்து சேர்ந்த கிறிஸ்டாபர் முரட்டு ஆளாக இருந்தான். நிக்கல்சனை விடவும் மோசமான ஆளாக இருந்ததைக் கவனித்து அந்தமான் கைதிகள் திகிலடித்துப் போயினர். சாவர்க்கர் காலத்திலும் அதற்குப் பிறகும் தற்கொலை செய்து கொண்டவர்கள், பைத்தியம் பிடித்தவர்கள் ஆகியோரின் எண்ணிக்கை போல் இனிப் பன்மடங்கு பெருகும் என்ற அச்சமான எண்ணம் எல்லாருக்குமே வந்தது. நிக்கல்சனின், தூண்டுதலின் பேரில் சாவர்க்கருக்கு மாட்டப்பட்ட மோசமான விலங்குகள் மாற்றி மாற்றி நரேந்திரநாத் பானர்ஜிக்கு மாட்டப்படலாயின. கிறிஸ்டாபருக்கு அவன் கொடுத்த மனு நிராகரிக்கப்பட்டது. ஒரு முறை சிறைக்கு வந்த கிறிஸ்டாபர், "இங்கு வந்த முதல் நானே

'''உங்களுக்காக என்ன வேண்டுமென்றாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்' என்று மேடையில் சவால் விட்ட மந்திரி ஏன் கோபமாக இறங்கிப் போய்விட்டார்?''

''கூட்டத்திலிருந்த யாரோ ஒருவர் 'உங்க சொத்துக் கணக்கைக் காட்டுங்க போதும்'னு சொன்னாராம்!''

— வி. சிவா



கலகம் தொடங்கியவன் நீதானா? கீழ் அதிகாரிகளிடம் நற்பெயர் பெறத் தவறும் யாருக்கும் மேலதிகாரிகளின் தயவு கிடைக்காது" என்றான்.

"கீழதிகாரிகள் நியாயமாக நடக்காவிட்டால்?" என்று ஆத்திரத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு சிரித்தபடியே வினவிய நரேந்திர நாத் பானர்ஜிக்கு, "இது போன்ற அதிகப் பிரசங்கித்தனமான கேள்விகளால் மேலும் ஒரு விலங்கு மாட்டப்படும்" என்று கூறிச் சிரித்துவிட்டுப் போனான் கிறிஸ்டாபர். முகம் கறுத்துச் சிறுத்துப் பல்லைக் கடிப்பதைத் தவிர அவன் செய்யக்கூடியது வேறெதுவுமில்லாது போயிற்று.

கடைசியில் அமராவதியிடமிருந்து அவனுக்குக் கடிதம் வந்தது. சட்ட திட்டங்களுக்கு உட்பட்ட சாதாரணக் கடிதமாக - விவரங்கள் அற்ற - கடிதமாக அது இருந்தாலும், அவனுக்கு அவளையே நேரில் சந்தித்த புளகிதம் உண்டாயிற்று. அவளை அவன் அறவே பிரிந்த பின் வரும் அவளது முதற் கடிதம்! எல்லாரும் நலம் என்பதைச் சொன்ன பின் அவன் எப்போது இந்தியா திரும்புவான் என்று கேட்கப்பட்ட அர்த்த மற்ற கேள்வியுடன் கடிதம் முடிந்திருந்தது. தனது கடிதம் பற்றி அவள் ஏதும் எழுதக் கூடாது என்பதால் அவள் மவுனம் சாதித் தாளா, இல்லாவிடில் தன் கடிதம் அலெக் சாண்டரால் அவள் விலாசத்துக்கு அனுப்பப் படவில்லையா என்பதைத் தெரிந்த கொள்ள அவனுக்கு வழியே இல்லாது போயிற்று. 'பவித்ரா இப்போது என்ன செய்து கொண் டிருக்கிறாள் என்பது பற்றி ஒரு வரி கூட இல்லையே? எனக்குக் கடிதம் எழுதும் உற்சாகத்தில் அமராவதி மகளை மறந்தே போய் விட்டாளா?'

நரேந்திரநாத் பானர்ஜி உடனே உட்கார்ந்து பதில் எழுதினான். உப்புச் சப் பற்ற கடிதப் பரி மாற்றம் அவனுள் சோர்வை உண்டாக்கிற்று. தான் உயிருடன் இருப்பது பற்றிய தகவலைத் தவிர வேறு எதையும் தராத கடிதம் என்று எண்ணிக் கசப்புடன் சிரித்தான். 'ஏதோ, அந்தத் தகவலையாவது பரிமாறிக் கொள்ள ஆண்டுக்கு இரண்டு முறை அனுமதிக்கிறார்களே!'

இந்தச் சில நாட்களில் விசாலம் இளைத்தும் கறுத்தும் போய்விட்டிருந்தாள். அமராவதியின் பெண்ணும் வடக்கே வேலைக்காரி தங்கத்துடன் புறப்பட்டுப் போய்விட்டாள் என்ற சேதியை ராமசாமி அவளுக்குச் சொன்ன போது அவள் அடங்காத வியப்படைந்தாள். ஒரு நாள் மூன்றாவது வீட்டில் வசிக்கும் செல்லம்மாள், கங்கா



"நம்ம பையன் ஆங்கிலத்துல சுத்த கூமுட்டையாய் இருக்கான்னு நீங்க சொல்றதை என்னால ஒத்துக்க முடியாது."

"ஏன்?"

"பக்கத்து வீட்டு பெண்ணை 'ஹாய் டார்லிங்ன்'னு சொன்னதை என் காதால கேட்டேன்!"

— நியூபாம்பே ஜான்

வும் அந்தப் பெண்ணும் 'ஓடிப் போய்விட்டதாக' ஊரில் பேசிக் கொள்ளுகிறார்கள் என்பதாய்ப் பயந்து கொண்டே - அல்லது பயப்படுவது மாதிரி நடித்துக் கொண்டே - விசாலத்திடம் தெரிவித்த போது அவள் நடுநடுங்கிப்போய்விட்டாள். அப்படியும் இருக்குமோ என்று கூடக் கணம் போல் நினைத்தும் விட்டாள். ஆனால் கங்கா, தான் வளர்த்த பிள்ளை - அப்படி எல்லாம் பண்ணக் கூடியவனில்லை என்ற நம்பிக்கை அடுத்த கணமே அவளுள் தோன்றியது. 'ரொம்ப நன்னாருக்கு, மாமி. ஊர்ல யாரோ கிரிசை கெட்டவா வாய்க்கு வந்ததைப் பேசறான்னா, நீங்களும் அதைப் பெரிசா என் கிட்டவே வந்து சொல்றேளே? அந்தப் பொண்ணு போன இடமே அவாளுக்குத் தெரியாது. எங்காத்துப் பிள்ளையாண்டானாவது கல்கத்தாப் பக்கம் போறேன்னு சொல் விட்டுப் போயிருக்கான்' என்று மறுத்து அவள் வாய்க்குத் தன்னைப் பொறுத்த மட்டில் பூட்டுப் போட்டாள்!

ராஜாராமன் வீட்டிலும் வெளிப்பார்வைக்கு எல்லாம் அமைதியாகத் தெரிந்த போதிலும் ஒவ்வொருவருள்ளும் ஓர் எரிமலை குமுறிக் கொண்டிருந்தது. பவித்ராவிடமிருந்து கடிதம் கூட வராதிருந்ததுதான் அவர்களது கவலைய்யை அதிகரிக்கச் செய்தது.

பர்தோலி இயக்கத்தின் விளைவாக விவசாயிகள் தரவேண்டிய வரி பற்றிய விசாரணைக் குழுவை அமைக்க அவ்வாண்டு ஆகஸ்டு மாதம் இங்கிலாந்து அரசு முடிவெடுத்தது வல்லபாய் படேலின் வெற்றி என்று இந்தியப் பத்திரிகைகள் முழங்கின!

மார்ச்சு இறுதியில் திரும்பிப் போன

சைமன் கமிஷன் மறுப்படியும் அதே ஆண்டின் அக்டோபர் மாதத்தில் திரும்பி வந்தது. கடையடைப்பு, வேலை நிறுத்தம், கறுப்புக் கொடிகாட்டல் ஆகியவை சென்ற தடவையை விடவும் இன்னும் மும்முரமாக நடந்தேறின! அக்டோபர் 30 ஆம் நாளில் லாகூரில் சைமன் எதிர்ப்பு ஊர்வலத்தை நடத்திச் சென்ற 'பஞ்சாப் சிங்கம்' லாலா லஜ்பத் ராய், ஸ்காட் எனும் வெள்ளை அதிகாரியின் ஆணையால் மிருகத்தனமான முறையில் அடித்து நொறுக்கப்பட்டதை அகில இந்தியாவும் கண்டித்தது. அடிவாங்கிய பின், 'என் மீது விழுந்த ஒவ்வோர் அடியும் பிரிட்டிஷ் ஆட்சியின் சவப்பெட்டி மீது அறையப்படும் ஒவ்வோர் ஆணியாகும்' என்றார் லாலா லஜ்பத்ராய்! அந்த ஊர்வலத்தில் மாவீரன் பகத் சிங்கும் அவன் தோழர்களும் இருந்தார்கள்.

படுகாயமுற்ற பஞ்சாப் சிங்கம், லாலா லஜ்பத் ராய், சில நாட்களில் உயிரிழக்க நேர்ந்தது. வடக்கே இயங்கிவந்த தீவிரவாதிகள் பஞ்சாப் சிங்கத்தின் மறைவால் கிளர்ந்து, கொதித்து எழுந்தனர்.

சரியாக ஒரு மாத கால இடைவெளியில் - அதாவது அடுத்த மாதம் பதினேழாம் தேதியன்று - பகத்சிங் தன் தோழர்களாகிய ராஜ்குரு, சந்திரசேகர ஆஜாத், ஜெய்கோபால் ஆகியோருடன் காவல் நிலையத்துக்கு அருகே இருந்த பள்ளி ஒன்றினுள் நுழைந்து காத்திருந்து, ஜெய்கோபால் அடையாளம் காட்டிய வெள்ளை அதிகாரியைச் சுட்டுவிட்டான். ஆனால் அந்த ஆள் ஸ்காட் இல்லை என்பதும், சாண்டர்ஸ் எனும் வேறோர் அதிகாரி என்பதும் பின்னர் தெரியவந்தது.

சுட்டபின் தப்பி ஓடிவிட்ட கும்பலுக்குப் பிரிட்டிஷ் அரசு வலைவிரித்துத் தேடியது.

மேலும் சில நாட்கள் கழித்து, ராமசாமியின் பள்ளியின் ஒரு வகுப்பறையில் வழக்கம் போல் காங்கிரஸ்காரர்கள் சிலரின் கூட்டம் நடைபெற்றது. ராஜாராமனின் மூலம் அறிமுகமான டி.டி. தியாகராஜ முதலியார், அப்துல் சலாம், ரங்கநாத சாஸ்திரி, மணவாளநாயுடு ஆகிய முக்கியமான உறுப்பினர்கள் வந்திருந்தனர்.

"பகத்சிங் மாதிரி ராஜதானிக்கு ராஜதானி பண்ணினா எல்லாம் சரியாயிடும்" என்றார் அப்துல் சலாம்.

"ஒரு கொலையைப் பண்ணிட்டு அப்புறம் ஒளிஞ்சுன்னாய்யா திரிய வேண்டி இருக்கும்? கொலை பண்ணி எதையும் சாதிக்க முடியாதுய்யா. பலாத்காரம் தப்பான



"உங்களுக்குத்தான் ஹிந்தி தெரியாதே! பிறகு ஏன் ஒரு மணி நேரமா ஹிந்தி புரோகிராமை பார்த்துக்கிட்டிருக்கீங்க?"

"இது ஹிந்தி புரோகிராமா? அதான பார்த்தேன்! எங்கே தண்ணியடிச்சதும் தாய் பாஷை மறந்திருச்சோன்னு பயந்துட்டேன்!"

— அரிசி ஸ்ரீராம்

வழி. காந்தி வழி இப்பதானே சூடு பிடிக்க ஆரம்பிச்சிருக்கு? போகப் போகப் பாரும்."

"ஆமா? மோதிலால் நேரு என்ன புதுசா டொமினியன் ஸ்டேடஸ், டொமினியன் ஸ்டேடஸ்னு சொல்ல ஆரம்பிச்சிருக்காரு?"

"அப்படின்னா என்னங்கய்யா?"

"பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குள்ளேயே குடியேற்ற நாட்டு அந்தஸ்தோட இந்தியா இருக்கணும்கிறதா மோதிலால் நேரு ஒரு அறிக்கை தயாரிச்சிருக்காரு. அது சுபாஷ் சந்திர போஸ், ஜவாஹர்லால் நேரு மாதிரி காங்கிரஸ்ல இருக்குற இளவட்டங்களுக்குப் பிடிக்கல்லே. அவங்க பூர்ண சுயராஜ்யம் தவிர வேற எதுக்கும் ஒத்துக்கக் கூடாதுன்றாங்க."

"நியாயந்தானே?"

"அவன் சின்னதுகளுக்கே சம்மதிக்க மாட்டேங்கறான்..., அதனால அவனை விட்டுத்தான் பிடிக்கணும், கொஞ்சங் கொஞ்சமாத்தான் சலுகைகளைக் கேட்டு வாங்கணும், அப்படின்னு பெரியவங்க நினைக்கிறாப் போல."

"டொமினியன் ஸ்டேடஸ் பத்தின பேச்சு வார்த்தைக்காக ஏதோ வட்ட மேஜை மகாநாடு லண்டன்ல நடக்கப் போறதுன்னு பேசிக்கிறாங்களே? அப்படியா?"

"ஆமா. ஆனா காங்கிரஸ் கலந்துக்கப் போறதில்லைன்னு கேள்வி."

"டாக்டர் அம்பேத்கரைக் கலந்துக்கச் சொல்லி வெள்ளைக்காரன் ரொம்ப வற்புறுத்திட்டிருக்கானாமே?"

"அப்ப ஏதோ ப்ளான் பண்றான்னுதான் அர்த்தம்."

- இவ்வாறாகத் தலைக்குத் தலை கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ள மட்டுமே பெரும்பாலும் கூடும் வழக்கமுள்ள அந்தச் சிறு கூட்டம் கொஞ்ச நேரத்தில் கலைந்தது....

(தொடரும்)



முன்னாள் கல்கி ஏஜென்ஸி ஆர்கனைசர் நெல்லை திரு எஸ். கோபாலகிருஷ்ணன் அவர்களின் புதல்வரும், கல்கி நிறுவன வெளியீடுகளின் தற்போதைய ஏஜெண்டுமான சிரஞ்சீவி ஜி. சுப்ரமணியனுக்கும், கூனியூர் ஸ்ரீ எஸ். கைலாசமய்யர் அவர்களின் புதல்வி சௌபாக்யவதி ராஜலக்ஷ்மிக்கும் சமீபத்தில் திருநெல்வேலியில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!

அவ்வாண்டு லாகூரில் நடந்த காங்கிரஸ் மாநாட்டுக்கு ஜவாஹர்லால் நேரு தலைமை தாங்கினார். அவரது தலைமையுரை இந்திய இளைஞர்களுக்கு அகிம்சையின் மகத்துவத்தை வலியுறுத்தியதோடு, வெள்ளைக்காரனுக்கு எதிராக அணிதிரண்டு அனைவரும் போராட வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தியது. முழுச் சுதந்தரமே காங்கிரஸின் குறிக்கோள் என்ற அவரது அறைகூவல் பலத்த கையொலியுடனும் ஆரவாரத்துடனும் ஏற்கப்பட்டது.

காந்தியின் மீது சற்றே அவநம்பிக்கை கொண்டிருந்தவர்களுங்கூட, இளைய நேருவின் கனல் பறந்த பேச்சைக் கேட்டதும் மனம் மாறினார்கள்.

சட்டமறுப்பு இயக்கத்தில் மட்டுமல்லாது, வரிகொடா இயக்கத்திலும் ஈடுபட வேண்டுமெனும் தீர்மானமும் இளைய நேருவின் தலைமையில் நிறைவேறியது. வெறும் பேச்சளவில் இருந்த டொமினியன் நிலை என்பதையாகிலும் அவ்வாண்டு இறுதிக்குள் இந்தியாவுக்குத் தரவேண்டுமென்ற காங்கிரசின் கோரிக்கை இங்கிலாந்து அரசால் நிறைவேற்றப்படாததால், அந்தக் கெடு தீர்ந்துவிட்ட நிலையில், ஜவாஹர்லால் நேரு அவ்வாண்டு டிசம்பர் 31 ஆம் நாளில், ரவி நதித்திடல் நோக்கி மாபெரும் ஊர்வலத்தை நடத்திச் சென்றார். சரியான நள்ளிரவு நேரத்தில் அவ்வூர்வலம் நிகழ்ந்தது. ரவி நதிக்கரையில் மூவண்ணக் கொடி ஏற்றப்பட்டு, பூரண சுதந்திரமே இந்தியாவின் குறிக்கோள் என்பதற்கான சூளுறை அங்கு குழுமி இருந்த கிட்டத்தட்ட மூன்று இலட்சம் மக்களால் மேற்கொண்டு உரைக்கப்பட்டது. வரும் ஆண்டு ஜனவரி 26 ஆம் நாளைச் சுதந்திர நாளாகக் கொண்டாடத் தீர்மானிக்கப் பட்டது. அதன்பின் ஒவ்வோர் ஆண்டும் அக்கொண்டாட்டம் தொடருமென்றும் இளைய நேரு அறிவித்தார். வரும் ஏப்ரல் 6 இலிருந்து 13 ஆம் நாள் வரை 'தேசிய வாரம்' கொண்டாட வேண்டுமென்ற காந்திஜியின் யோசனை ஏற்கப்பட்டது. அவ்வாரத்தில் மதுக்கடைகள் முன்பு மறியல் செய்தலும் அந்நியத் துணி மறுப்புப் போராட்டங்களில் மக்கள் ஈடுபட வேண்டும் என்பதும் காந்திஜியின் விருப்பமாக இருந்தது.

லாகூர் காங்கிரசின் விளைவுகளை 'இந்தியா பிரிட்டனிடமிருந்து விவாகரத்துப் பெற்றது போல் இருக்கிறது' என்று சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் - ராஜாஜி - விமர்சித்தது பெருஞ்சிரிப்புடன் ரசிக்கப்பட்டது.

லாகூர் மாநாட்டுப் பந்தலிலேயே அனைத்திந்திய மதுவிலக்கு மாநாடும் ராஜாஜியின் தலைமையில் நடந்தது. 'சாராயத்தில் நல்ல சாராயம் கெட்ட சாராயம் என்பதாய்க் கிடையாது. சில விரைந்து கொல்லும், சில மெல்லக் கொல்லும். எனினும், 'நல்ல சாராயம்' கிடைப்பதில்லை என்பதற்காக நச்சுச்சாராயத்தைக் குடிக்கத் தயாராக இருப்பவர்களைப் பற்றி நாம் கவலைப்படத் தேவை இல்லை. 'நச்சுச்சாராயம் குடித்துச் செத்தாலும் சாவேனே ஒழிய, சாராயம் குடிப்பதை நிறுத்தமாட்டேன்' என்று கூறிச் சாகும் சிலருக்காக நாம் உயர்ந்த நோக்கத்துக்கான முயற்சியைக் கைவிடலாகாது' எனும் ராஜாஜியின் கருத்துப் பெரிதும் கொண்டாடப்பட்டது.

சபர்மதியில், அடுத்த ஆண்டு - 1930, பிப்ரவரி 14 ஆம் நாளில் - கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில், மகாத்மா காந்தியின் சட்டமறுப்புப் பற்றிய யோசனை ஏற்கப்பட்டது. இந்திய மக்கள் அகிம்சையின் தத்துவத்தைப் பரவலான முறையில் புரிந்து கொள்ளாமையால் அவர்கள் அதற்குத் தகுதி பெறவில்லை என்று அதுகாறும் சொல்லிக் கொண்டிருந்த காந்தியடிகள் தமது கருத்தை மாற்றிக் கொண்டது, காங்கிரஸ் இயக்கம் சாரமற்ற தீர்மானங்களை மட்டும் நிறைவேற்றிக் கொண்டிருக்கிறது என்பதாய் அதன் மீது அதிருப்தி கொண்டிருந்த மற்றத் தலைவர்களுக்கு - முக்கியமாய் இளந்தலைமுறையினர்க்கு - மகிழ்ச்சியளித்தது.

நாடு முழுவதும் மக்கள் கடலோரப் பகுதிகளில் உப்பு எடுக்க வேண்டுமென்று காந்தி அறிவித்தார். வெள்ளை அரசின் உப்புவரிக்கு எதிரான அறப்போராகும் அது என்றார். 'நம் நாட்டுக் கடற்பகுதியிலிருந்து உப்பெடுக்கும் உரிமை நமக்கு உண்டு; அதற்கு நாமெதற்கு வெள்ளைக்காரனுக்கு வரி செலுத்த வேண்டும்' எனும் எளிமையான வாதம் துளியும் கல்வியறிவற்ற மக்கள் மனங்களிலும் கூட ஆழமாக இறங்கியது. அரசிடமிருந்து ஆதாயங்கள் பெறும் சிலவகை ஊழியர்களும், மாணவர்களும், அரசோடு ஒத்துழைத்து வரும் வக்கீல்களும் தத்தம் பணிகளைத் துறக்கவேண்டுமென காந்தியடிகள் அறைகூவல் விடுத்தார். ஆனால், தமது வழக்கத்துக்கு இணங்க, வைசிராய்க்குக் கடிதமெழுதித் தாம் செய்யவிருந்தது பற்றித் தெரிவித்தார்.

நாட்கள் நகர,

மலைக்கொடி

ஜோதிர்லதா கிரிஜா

உப்புச் சத்தியாக்கிரத்தையும் அதன் விளைவு களையும் நாடே பரபரப்புடன் எதிர்நோக்கி நின்றது. இங்கிலாந்து அரசோ இன்னும் அதிகப் பரபரப்புடன் ஆயத்தங்கள் செய்ய லாயிற்று.

நாடு தழுவிய உப்புச் சத்தியாக்கிரகம் நடந்து முடிந்த பிறகு அமராவதிக்கு ஒரு கடிதம் வந்தது.

## 54

உறையின் மீது பவித்திராவின் கையெ முத்தைப் பார்த்ததும் அமராவதிக்குக் கை கால்கள் இயங்க மறுத்தன. அஞ்சனா உறையை உடைத்துக் கடிதத்தை உருவிக் கொண்டே கண்கலங்கினாள்.

*அன்புள்ள அம்மா!*

*சௌக்கியமா? நான் சௌக்கியம். தங்கமும் சௌக்கியம். இத்தனை நாட் களாய்க் கடிதம் எழுதாததற்கு மன்னிக்க வும். இங்கே கட்டுப்பாடுகள் அதிகம். எந்த ஊரிலிருந்து கடிதம் எழுதுகிறேன் என்பதைக் கூடச் சொல்லக் கூடா தென்பது மேலிடத்து உத்தரவு. தபால் முத்திரை சரியாக விழுந்திருந்தால், நீயே பார்த்துக் கண்டுபிடித்துக் கொள்!*

*இந்த ஊரில் உள்ள காங்கிரஸ் அலு வலகத்தில் எங்கள் இயக்கத்தினர் யாவ ரும் அங்கத்தினர்கள். காங்கிரஸ்காரர் களைப் போல் அவர்களின் கூட்டங் களில் கலந்து கொள்ளுவது, ஊர்வலங் களில் கலந்து கொள்ளுவது போன்ற வற்றைச் செய்வோம். ஆனால் காங்கிரஸ் அலுவலகம் வேலை செய்யாத நாட்களி லும், நேரங்களிலும் எங்கள் இயக்கத்தில் இரகசியக் கூட்டங்கள், ஆலோசனைகள் ஆகியவை நடைபெறும்!*

*எனக்கும் தங்கத்துக்கும் தினமும் தேகப்பயிற்சிகள் சொல்லித் தருகிறார்கள். துப்பாக்கிப் பயிற்சியும்தான். பயப் படாதே அம்மா. வெள்ளைக்காரன் என் றாலே அவனைச் சுட வேண்டும் என்ப தில் எனக்கு நாட்டமே இல்லை. பொல் லாதவன் என்று நிச்சயமாய்த் தெரிய வருகிற ஆளை மட்டுமே நானும் தங்க மும் சுடுவதாக இருக்கிறோம்.*

*எங்கள் தலைவர் யார் என்று நீ கேட்கவில்லையே? அவர்தான் சூர்யா சென் எனும் பள்ளிக்கூட ஆசிரியர். பெரும்பாலும் மாணவர்கள்தான் அவர் பயிற்சி அளிக்கும் புரட்சியாளர்கள்.*



கூடிய விரைவில் இந்தியா முழுவதும் பேசப்படப்போகும் ஒரு பெரிய காரியத்தை நாங்கள் செய்யப் போகிறோம். அது இன்னதென்பதை இப்போது நான் சொல்ல மாட்டேன். நடந்து முடிந்த பிறகு, 'இதுதான் நான் அன்று கடிதத்தில் எழுதியது' என்று கட்டாயம் உனக்கு எழுதுவேன்!

அப்பாவிடமிருந்து கடிதம் வந்திருக்குமென்று நம்புகிறேன். அங்குள்ள நிலைபற்றி அறிய எனக்கு மிகவும் ஆவலாக இருந்தாலும், உன்னிடமிருந்து பதில் பெற வழி இல்லாததால், அதை அடக்கிக் கொள்ள வேண்டியதாகிறது. ஒரே ஒரு தரந்தான் பார்த்தேன் என்றாலும், அப்பாவின் முகம் என் உள்ளத்தில் அப்படியே பதிந்துவிட்டது. அந்தத் தழும்பு முகத்தில் ஏற்படுவதற்கு முன்னால் அப்பா மிக அழகாக இருந்திருக்க வேண்டும்.

தங்கம் தன் நமஸ்காரங்களைத் தெரிவிக்கச் சொல்லுகிறாள். எங்களைப் பற்றி நீங்களெல்லாம் கவலைப்பட வேண்டாம். தாத்தாவிடம் என் அன்பைச் சொல்லவும். பெரியம்மாவிடமும்தான். கங்கா வந்தால் இந்தக் கடிதத்தைக் காட்டவும்.

அன்புள்ள,
பவித்ரா.'

கதவு தட்டப்பட்டது. எழுந்து போய்க் கதவைத் திறந்த ராமசாமி வெளியே நின்றிருந்த மணவாள நாயுடுவையும் அப்துல் சலாமையும் உற்சாகமாய் உள்ளே அழைத்து வந்து உட்காரவைத்தார்.

"என்ன ஓய்! காந்தியோட மகிமையைப் பார்த்திரா? தண்டி யாத்திரை அமோகமா நடந்து முடிஞ்சுடுத்து. வேதாரண்யத்துல ராஜாஜி நடத்தின உப்புச் சத்தியாக்கிரகமும் வெள்ளைக்காரனை ஒரு கலக்குக் கலக்கிடுத்து. நாடு முழுக்க இப்படி ஒரு போராட்டம் வெற்றிகரமா நடக்கும்னு வெள்ளைக்காரன் நெனச்சே இருக்க மாட்டான்."

"தோல்வியை இயக்கம் தழுவணும்கிற நோக்கத்தில்தானே காந்தியைப் பிடிச்சு முதல்ல ஜெயில்ல போட்டுட்டான்!"

"ஆனா காந்தியோட சாமர்த்தியம் ஜெயிச்சுடுத்தே! உப்பு எடுக்கக் கடலோரப் பகுதிகள்ல மட்டுந்தான் முடியும். அதனால வேற விதமான சட்ட மறுப்புக்களையும் செய்யலாம்னுட்டாரு. அதனால நாடு முழுக்க சத்தியாக்கிரகம். ஒருத்தர் கைதானா சத்தியாக்கிரகத்துக்கு அடுத்தடுத்து ஒரொரு தலைவரா வந்துக்கிட்டேயிருந்தாங்க. அப்பாஸ் தியாப்ஜிக்கு அப்புறம் நம்ம சரோஜினி நாயுடு வழிநடத்தின யாத்திரையைப் பத்தி அமெரிக்க ஜர்னலிஸ்ட் ஒரு ரிப்போர்ட்

## மோட்டார் சைக்கிள் பரிசுப் போட்டி - 26



இதுதான் கடைசிவாரப் போட்டி!

இந்த முறை பரிசுப் பொருளான மோட்டார் சைக்கிள் பற்றியே போட்டியும் அமைகிறது!

கீழே உள்ள வாக்கியங்களில் மோட்டார் சைக்கிளில் உள்ள உதிரிப் பாகங்களில் சில ஒளிந்து கொண்டிருக்கின்றன. குறைந்தபட்சம் பத்துப் பாகங்களின் பெயர்களையாவது நீங்கள் எழுதியனுப்ப வேண்டும்.

கடந்த 25 வாரங்களாகச் சேர்த்து வைத்திருக்கும் கூப்பன்களையும் இதோடு சேர்த்து மொத்தமாக எங்களுக்கு அனுப்புங்கள். அதிகபட்ச சரியான விடைகளை எழுதி வெற்றிபெறும் ஒருவருக்கு மோட்டார் சைக்கிள் பரிசு! ஒருவருக்கு மேல் அதிகபட்ச விடைகளைச் சரியாக எழுதியிருந்தால் குலுக்கல் முறைதான். ஆறுதல் பரிசுகளும் உண்டு.

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது. உறை மீது "மோட்டார் சைக்கிள் பரிசுத் திட்டம்" என்று குறிப்பிடவும். முடிவு தேதி : 20.3.95.

உதிரிப் பாகங்கள்
ஒளிந்துள்ள வாக்கியங்கள்:

1. டேனியலுக்கு ப்ரேக் டான்ஸ் ஆடப் பிடிக்கும்.
2. அவன் வெறும் சீட்டுக் கட்டு ராஜாதான்.
3. அசோக் மிகவும் டயர்டாக உணர்ந்தான்.
4. பரங்கியர் கூட்டத்தை வெளியேற்றுவோம் என்று முழக்கமிட்டனர் மக்கள்.
5. தனது காதலைப் புரிந்து கொள்ளாத ரமணியை "நீயொரு சரியான டியூப்லைட்!" என்று கத்தினான் பார்கவி.
6. ஈசி சேரில் சாய்ந்தபடியே கேபிள் டி.வி.யில் படம் பார்த்துக் கொண்டிருந்தார் சங்கரன்.
7. மூக்குக் கண்ணாடியைத் துடைப்பது போல் பாஸ் போக்குக் காட்டினார்.

ஒளிந்துள்ள உதிரிப் பாகங்கள்: 1 ......................

2......................3......................4......................

5......................6......................7......................

8......................9......................10......................

பெயர் : ..................................................

முகவரி : ..................................................

..................................................

எழுதி இருக்கான் பாரும், அடாடாடா!"

"பத்திரிகைக்காரங்க யாருமே வரக்கூடாதுன்னு வெள்ளைக்காரன் தடை உத்தரவு போட்டிருந்தானே?"

"வெப் மில்லர்ங்கிற அந்த ஜர்னலிஸ்ட்டை பல்சார் ஸ்டேஷன்ல வலுக்கட்டாயமா ட்ரெய்ன்லேர்ந்து இறக்கி விட்டுட்டாங்க. ஆனா அந்தாளு ஒரு சரக்கு ரயில்ல ஏறிண்டு தராசனா ஸ்டேஷன் வரைக்கும் வந்துட்டு அங்கேருந்து போராட்ட ஸ்தலம் திங்ரி வரைக்கும் கிட்டத்தட்ட ஆறு மைல் தொலைவு நடந்தே போயிருக்காரு... படிக்கிறேன், கேளுங்க... மிஸஸ் சரோஜினி நாயுடு முதலில் எல்லாரையும் மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்யக் கட்டளை இட, எல்லாரும் அப்படியே செய்தார்கள். பிறகு அவர் சொன்னார்: 'காந்திஜியின் உடல் சிறையில் இப்போது இருந்தாலும், அவரது ஆன்மா நம்முடன்தான் இருக்கிறது. இந்தியாவின் கௌரவம் இப்போது உங்கள் கைகளில் இருக்கிறது. எப்படிப்பட்ட நிலையிலும் நீங்கள் வன்முறையில் ஈடுபடக் கூடாது. நீங்கள் அடிக்கப்படுவீர்கள்; ஆனால் நீங்கள் தடுக்கக்கூடாது! அடிகளைத் தவிர்ப்பதற்காக நீங்கள் உங்களின் ஒரு கையைக் கூட உயர்த்தலாகாது.' - அவரின் சுருக்கமான இந்தப் பேச்சுக்குச் சத்தியாக்கிரகிகளிடமிருந்து ஆரவாரக் கூக்குரலும், வாழ்த்தொலிகளும் கிளம்பின. சத்தியாக்கிரகிகளின் அணிவகுப்பு மெதுவாகவும் மௌனமாகவும் அரை மைலுக்கு அப்பாலிருந்த உப்புவண்டல்களை நோக்கிச் சென்றது. சுமார் இருபது பேர் காயம்பட்டவர்களைச் சுமந்து செல்லும் சிவப்புத் துணியாலான தூக்குக் கட்டில்களுடன் தொடர்ந்தனர். அணிவகுப்பின் முதல் வரிசையில் காந்தியின் மகன் மணிலால் காந்தி இருந்தார். உப்புவண்டல்களை நெருங்கும் நேரத்தில் அவர்கள் புரட்சிக் கோஷங்களை எழுப்பினார்கள். "இன்குலாப் ஜிந்தாபாத்" என்ற கோஷத்தைத் திரும்பத் திரும்ப எழுப்பினார்கள்.

காக்கி உடையும் தொப்பியும் அணிந்த நானூறு சூரத் போலீஸ்காரர்கள் உப்பளங்களைக் காத்து நின்றனர். ஆறு வெள்ளைப் போலீஸ் அதிகாரிகள் அவர்களுக்கு உத்தரவிட அங்கு இருந்தனர். போலீஸ்காரர்கள் எல்லார் கைகளிலும் இரும்புப்பூண் போட்ட குண்டாந்தடிகள். உப்பளங்கள் உயரமான தடித்த கம்புவேலிகளால் பாதுகாக்கப்பட்டிருந்தன. அவ்வேலிக்குள் துப்பாக்கி ஏந்திய இருபத்தைந்து போலீஸ்காரர்கள் இருந்தனர். உப்பளங்களை நெருங்க இன்னும் நூறு கஜ தூரம் இருந்த கட்டத்தில் அந்தப் பெருங்கூட்டம் நின்று கொண்டது. அங்கே முழு அமைதி நிலவியது. முதலில் ஒரு சிலர் அடங்கிய அணி உப்பளத்தை நெருங்கியது. ஒரு புதிய சட்டத்தின் பெயரைச் சொல்லிப் போலீசார் அவர்களைக் கலைந்து போகச் சொன்னார்கள். அதைக் காதில் வாங்காமலே அந்தச் சிறு அணி மௌனமாகவும் அமைதியாகவும் முன்னேறியது. வேலியிலிருந்து நூறு கஜ தூரத்தில் நான் நின்றிருந்தேன். அதிகாரிகள் கட்டளை பிறப்பித்தனர். அவ்வளவுதான். பல போலீசார் தங்கள் குண்டாந்தடிகளால் சத்தியாக்கிரகிகளின் மீது சரமாரியாக அடிமழை பொழிந்தார்கள். அடிகள் எல்லாம் அவர்களின் தலைகள் மீதுதான். அடிகளைத் தவிர்க்க யாரும் ஒரு கையைக் கூடத் தூக்கவில்லை. சீட்டுக்கட்டின் சீட்டுக்களை நிமிர்த்தி வைத்து விட்டு, தொட்டால் சரியுமே - அப்படி மளமளவென்று சரிந்தார்கள். பிளந்த மண்டைகளும், உடைந்த தோள்களுமாய், இரத்தம் பீறிட, சிலர் வலியால் முனகியபடியும் சிலர் மயக்கமுற்றும் விழுந்தார்கள். முதல் அணி இவ்வாறு சரிந்ததும் தூக்குத்



"நேத்து என் மனைவிக்கும் எனக்கும் பயங்கர சண்டை. நான் மாமூல் வாங்கறது அவளுக்கு அவமானமா இருக்காம்."

"அப்புறம் எப்படி சமாளிச்சே?"

"ஒரு இருபது ரூபாய் கொடுத்து வாயை அடைச்சேன்!"



- வி. பி. கிருஷ்ணசாமி

தூளிகளுடன் காத்திருந்தவர்கள் காயமடைந்தவர்களைத் தூக்கிக் கொண்டு முதலுதவிக் கொட்டகைக்கு விரைந்தார்கள். அடுத்த அணி வேறொரு தலைமையுடன் புறப்பட்டது. 'திருப்பி அடிக்காதீர்கள். அடிகளைத் தவிர்க்கக் கையைத் தூக்காதீர்கள்' என்று தலைவர்கள் அறிவுறுத்தியவாறாக இருந்தனர். தங்களில் சிலர் சாகவும் கூடும் என்பது தெரிந்திருந்தும் அவர்கள் அமைதி காத்து முன்னேறி அடிவாங்கி விழுந்த வண்ணம் இருந்தார்கள். அவர்கள் முகங்களில் தயக்கமோ அச்சமோ சிறிதும் புலப்படவில்லை. விழுந்த பிறகு யாரும் பெருங்குரலில் கத்தவோ, அழவோ இல்லை. வெறும் முனகல்கள் மட்டுமே கேட்டன...."

"என்னய்யா அநியாயம் இது? இந்த உப்பு வரியில அவனுக்கு வருஷத்துக்கு ஆறு கோடி ரூபா கிடைக்கிறது. அவன் இந்த நாட்டில சுரண்டுற மொத்தத் தொகையோட ஒப்பிட்டா இது சுண்டைக்காய். இதுக்குப் போய் இப்படி விளாசித் தள்ற ராட்சசனா

நாளைக்கு நமக்குச் சுதந்தரம் கொடுக்கப் போறான்? நான் நம்பல்லேங்காணும்..."

"ஜாலியன்வாலாபாக் படுகொலையப்ப காந்தி என்ன சொன்னார்? 'இது ஒரு ஆரம்பந்தான். இன்னும் எவ்வளவோ, மோசமான நிலைகளை நாம சந்திக்க வேண்டி வரும்' அப்படின்னார், இல்லையா?"

மேலும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்த பின் காப்பியைக் குடித்து விட்டு மணவாள நாயுடு புறப்பட்டுப் போனார்...

**அ**வ்வாண்டு ஏப்ரல் மாதம் 10 ஆம் நாள் 'யங் இண்டியா' வில் பெண்களுக்குக் காந்தியடிகள் விடுத்த அறைகூவல் பல்லாயிரக்கணக்கான பெண்களை நூல் நூற்பிலும், மறியலிலும் உடனடியாக ஈடுபட வைத்தது. அதுகாறும் வீட்டைவிட்டு வெளியே போகும் வழக்கமே இருந்திராத பெரிய இடத்துப் பெண்கள், நடுத்தர வர்க்கத்துப் பெண்கள், வைதீகக் குடும்பத்துப் பெண்கள் ஆகியோரெல்லாம் அவர் கூறிய பணிகளில் முனைப்புடன் ஈடுபட்டனர். பெண்களுக்குள் ஏற்பட்ட வியக்கத்தக்க இம்மாற்றத்தால் ஆண்களுக்கு இன்னும் அதிகமாய்ச் சாதிக்க வேண்டும்' எனும் ஆவேசம் வந்தது.

காங்கிரஸ் சட்டவிரோதக் கட்சி என அறிவிக்கப்பட்டது. காங்கிரஸ் அலுவலகங்கள் சூறையாடப்பட்டன. இந்தியா முழுவதுமே சிறைப்பட்டது போன்ற ஓர் உணர்வு மக்களிடம் நிலவியது.

'**கூ**டிய சீக்கிரம் இந்தியா முழுவதும் பேசப்படப் போகும் ஒரு பெரிய காரியத்தை நாங்கள் செய்யப் போகிறோம்' என்று பவித்ரா தனது கடிதத்தில் தெரிவித்ததைப் படித்ததிலிருந்து வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்தாள் அமராவதி. காந்தியடிகள் உப்புச் சத்தியாக்கிரம் தொடங்கிய சில நாட்களில் - ஏப்ரல் 18 ஆம் நாள் - சிட்டகாங் ஆயுதக் கிடங்கு கொள்ளையடிக்கப்பட்டது. தொலைபேசி, தந்தித் தொடர்பகங்கள் அழிக்கப்பட்டு, சிட்டகாங் அறவே துண்டிக்கப்பட்டது. இவற்றைச் செய்த புரட்சியாளர்களுக்கும் வெள்ளையர்க்கும் ஜலாலாபாத் குன்றில் நடந்த போரில் 82 வெள்ளையரும் 11 புரட்சியாளர்களும் மாண்டது ஆகியவை பற்றிய செய்திகளைப் படித்து அமராவதி வீட்டார் மிரண்டு போனார்கள். பவித்ரா தன் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது இதுபற்றித்தான் என்று தீர்மானித்ததில் அவர்களது நிம்மதி அறவே பறி போயிற்று. புரட்சியாளரில் சிலர் தப்பிச் சென்ற செய்தி மட்டும் சிறிது நம்பிக்கையளிப்பதாக இருந்தது.

**சை**மன் கமிஷனின் சிபாரிசுகளை அமல்படுத்துதல் மட்டுமல்லாது வேறு

இந்தியப் பிரச்னைகளையும் விவாதிக்கும் பொருட்டு லண்டனில் ஒரு வட்ட மேஜை மாநாடு கூட்ட இங்கிலாந்து அரசு முடிவெடுத்தது. ஆனால் காங்கிரஸ் அதில் பங்கேற்க முடியாதென்று திட்டவட்டமாக அறிவித்து விட்டது. மற்ற இந்தியக் கட்சிகள் பலவற்றினுடையவும் பிரதிநிதிகள் நவம்பர் 12 ஆம் நாள் தொடங்கி 1931, ஜனவரி 19 ஆம் நாள் வரை நடந்த அம்மாநாட்டில் கலந்து கொண்டார்கள். கூட்டாட்சி அமைப்பு முறையும், இறுதியில் டொமினியன் அந்தஸ்து அளிப்பதும் ஒப்புக் கொள்ளப்பட்டன. அம்மாநாடு நடந்த நேரத்தில் காங்கிரஸ் தலைவர்கள் அனைவருமே உப்புச் சத்தியாக்கிரகத்தின் விளைவாகச் சிறைகளில் இருந்தனர். வட்ட மேஜை மாநாட்டில் கலந்து கொண்ட லிபரல் கட்சியின் தேஜ் பகதூர் சாப்ருவும், சீனிவாச சாஸ்திரியாரும் எந்த முடிவும் எடுப்பதற்கு முன்னால் காந்தி, நேரு ஆகிய தலைவர்களைச் சந்தித்துப் பேச விரும்பினார்கள. பேசவும் செய்தார்கள். இதற்கிடையே காந்தியடிகளையும் மற்ற எல்லாத் தலைவர்களையும் இங்கிலாந்து அரசு ஜனவரி 19 ஆம் நாளன்று சிறையிலிருந்து விடுவித்தது. காந்தியடிகள் பங்கேற்காத எந்த மாநாட்டு முடிவும் இந்திய மக்களுக்குச் சம்மதமாக இராது என்பதை அரசு புரிந்து கொண்டதே இதற்கு அடிப்படையாகும்.

மேற்கொண்டு பேச்சுவார்த்தைக்குத் தம்மைச் சந்திக்க வைசிராய் இர்வின் தயாராக இருந்ததையறிந்த காந்தியடிகள் நாள் குறித்துக் கொண்டு தில்லியில் வைசிராயைச் சந்தித்தார்.

பிப்ரவரி 17 ஆம் நாளிலிருந்து தொடங்கி மார்ச்சு 5 ஆம் நாள் வரை தொடர்ந்த காந்தி-இர்வின் பேச்சு வார்த்தையின் விளைவுகள் எல்லாருக்கும் திருப்தியளித்ததாய்ச் சொல்ல முடியாது. சட்ட மறுப்பு இயக்கத்தைக் கைவிட காந்தியடிகள் ஒப்புக் கொண்டது குறிப்பாக ஜவாஹர்லால் நேருவுக்கும் சுபாஷ் சந்திர போசுக்கும் அறவே பிடிக்கவில்லை. பதிலாக அரசியல் கைதிகள் அனைவரும் சிறைகளிலிருந்து விடுவிக்கப்பட வேண்டுமெனும் நிபந்தனையைக் காந்தியடிகள் விதிக்க, அது ஏற்கப்பட்டது. அடுத்த வட்டமேஜை மாநாட்டில் காங்கிரஸ் கலந்து கொள்ள இவ்வுடன்படிக்கை அடிகோலியது.

காந்தியடிகள் வைசிராய்க்குச் சரிக்குச் சரியான அந்தஸ்துப் பெற்றதில் இந்தியாவெங்கும் மகிழ்ச்சி வெள்ளந்தான்.

இந்தப் பேச்சுவார்த்தை நடந்த போது கங்கா தில்லியின் வீதிகளில் தனக்கு அறிமுகமான புரட்சியாளன் ஒருவனுடன் சுற்றிக் கொண்டிருந்தான்.

(தொடரும்)

## —55—

சாண்டர்ஸ் கொலை வழக்கில் தூக்கிலிடப்படுவதற்கு இருந்த இளைஞர்கள் விஷயத்தில் தலையிட்டுத் தமது செல்வாக்கால் அவர்களது தண்டனையைக் குறைக்க வேண்டுமென்று கம்யூனிஸ்டுக் கட்சி இடைவிடாது வற்புறுத்தியது. வன்முறையில் தமக்கு நம்பிக்கை இல்லாத போதிலும், காங்கிரசிலும், கம்யூனிஸ்ட் கட்சியிலும் இளைஞர்கள் அணிகளிலிருந்து புறப்பட்ட கோரிக்கைக்குச் செவி சாய்க்கக் காந்தியடிகள் முன் வந்து வைசிராய்க்கு வேண்டுகோள் விடுத்தார். வெறும் பேச்சோடு நில்லாமல், 'இவ்விளைஞர்களின் உயிர்கள் பறிக்கப்படாதிருந்தால், நான் மகிழ்ச்சியடைவேன்' என்று காந்தி கடிதமும் எழுதினார்.

அனைவரும் நம்பிக்கையோடு காத்திருந்த போது, 'பகத்சிங் வழக்கில் தீர்ப்பளிக்க வேண்டியது பஞ்சாப் மாகாண அரசாங்கமே' என்று வைசிராய் தெரிவித்து, ஆனாலும் தாம் சிபாரிசு செய்வதாகச் சொன்னதும் 'இது வெறும் கண் துடைப்பே' என்பது புரிந்து போயிற்று. முன்னறிவிப்பு இன்றிச் சில மணி நேரம் முன்னதாகவே பகத்சிங் தூக்கிலிடப்பட்டதும் வெளியாயிற்று.

பகத்சிங்கின் மரணத்தால் இந்தியா முழுவதும் கொந்தளித்தது. கடையடைப்பும் ஊர்வலங்களும் நாடு முழுவதும் நடந்தன.

ஒரு வாரங்கழித்து நடந்த கராச்சி காங்கிரஸில், பகத்சிங் மரணம் குறித்த அனுதாபத் தீர்மானம் நிறைவேறியது. ஆனால், காந்தியடிகள், 'வன்முறை எந்த வடிவத்தில் இருந்தாலும் அதை விரும்பவோ அங்கீகரிக்கவோ காங்கிரஸ் விரும்பாத போதிலும்' என்ற சொற்றொடர் அனுதாபத் தீர்மானத்தைத் தொடங்கும் சொற்களாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்தி அது ஏற்கப்படவும் செய்தார்.

தில்லித் தெருக்களில் கால்போன போக்கில் சுற்றிய பின் ரெயில் ஏறிய கங்காவும் புரட்சிக்கார நண்பன் சுந்தர்லால் நட்கர்னியும் சோர்ந்த முகங்களுடன் கல்கத்தா ஹௌரா நிலையம் வந்து சேர்ந்தனர். ஒரு சிற்றுண்டி விடுதியில் ரொட்டியும் தேநீரும் பருகிய பின் ஹாரிசன் வீதி வரை நடந்து, பின் டிராமில் ஏறி வெல்லெஸ்லி தெரு நிறுத்தத்தில் இறங்கிக் கொண்டு, அருகே இருந்த ஒரு பூங்காவையடைந்து ஒரு மர நிழலில் அமர்ந்தார்கள்.

"சே.... எப்படிப்பட்ட இழப்பு! பகத் சிங் மாதிரி சில வீரர்கள் ராஜதானிக்கு ராஜதானி கிளம்பினால் போதுமே. இந்தியாவில் வெள்ளைக்காரன் இருந்ததற்கான சுவடுகள் கூட அழிந்துவிடும், இல்லையா?" என்றான் கங்கா.

"உண்மைதான். ஆனால் ஒரு கொலையைச் செய்து விட்டு இயக்கத்தின் முக்கியமான சில புள்ளிகள் தலைமறைவாக வேண்டிய கட்டாயம் விளைவதால், இயக்கமே செயலிழந்து போகிறது. அப்படித்தான் பல பயங்கரவாத இயக்கங்கள் முளைப்பதும் வீழ்வதுமாக இருக்கின்றன. ஒரு விஷயம் கவனித்தாயா கங்கா? காந்தியால் காஷ்மீரம் தொடங்கிக் கன்யாகுமரி வரையில் சட்ட மறுப்பு இயக்கமோ, உப்பு எடுக்கும் இயக்கமோ, கதர் இயக்கமோ, ஒத்துழையாமை இயக்கமோ எதுவானாலும் நடத்திவிட முடிகிறது. ஆனால் நம் பயங்கரவாதிகளால் - அதாவது தீவிரவாதிகளால் - அது இயலவில்லை, பார்த்தாயா?"

"நீ சொல்லுவது உண்மைதான், சுந்தர்லால். நான் அது பற்றி யோசித்ததே கிடையாது. பயங்கரவாதிகள் ஆங்காங்கு செயல்பட்டுப் பின் தலை மறைவாகி விடுகிறார்கள் என்பதைத் தவிர கணிசமான அளவில் அவர்களால் நாடு தழுவிய அளவில் எதையும் சாதிக்க முடியவில்லை என்பது உண்மைதான்."

"சில கொலைகளைச் செய்து சிறையில் வாடுவது தவிர மக்களின் இயக்கமாக மலரச் செய்ய முடிவதில்லை."



"நாம் ஒரு முறை காந்தியைச் சந்திக்க வேண்டுமே, சுந்தர்லால்?"

"எனக்கும் கூட ஆசைதான். பார்க்கலாம். இன்று நாம் பேசிக் கொண்டது நமக்குள். என்ன?"

"சத்தியமாக," என்றான் கங்கா.

**ரா**மசாமியின் வகுப்பறையில் வழக்கம் போல அந்த ஞாயிற்றுக்கிழமையும் கூட்டம் நடந்து முடிந்ததும் மணவாளநாயுடுவும் ராமசாமியும் பேசிக் கொண்டே நடந்தார்கள்.

தெருமுனை வந்ததும், "நாயுடுகாரு, வீட்டுக்கு வந்து ஒரு வாய் காப்பி குடிச்சுட்டுப் போம்," என்று ராமசாமி உபசரிக்க, அதற்கென்றே காத்துக் கொண்டிருந்த மணவாள நாயுடு உற்சாகம் பொங்க அவரோடு நடக்கலானார.

ராமசாமியின் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டிருந்த ஓர் இளைஞன் எழுந்து நின்றான். விசாலம் வெளிப்பட்டு வந்து, "என்னமோ கங்காதரன், கங்காதரன் கிறாம்ப்பா. தமிழ் பேசத் தெரியல்லே. நீ விசாரிச்சுட்டு எனக்கும் சொல்லு" என்றாள்.

"என் பெயர் ரங்கையா. கல்கத்தாவில் இருக்கும் கங்காவின் நண்பன். அவன் உங்களுக்கு ஒரு கடிதம் கொடுத்தனுப்பி இருக்கிறான். அதைக் கொடுத்துவிட்டுப் போகத்தான் வந்தேன்," என்றான் ஆங்கிலத்தில்.

"உள்ளே வா அப்பா."

"என்னடாப்பா, ராமசாமி? என்ன சொல்றான்?"

"கங்கா லெட்டர் குடுத்தனுப்பி இருக்கான், இந்தப் பிள்ளையாண்டான் கிட்ட. இவனுக்குக் காப்பி குடுத்தியோ?"

"இதோ, ஒரு நிமிஷத்துல போட்டு எடுத்துண்டு வறேன். கங்கா பத்திரமா இருக்கானாமா?"

எல்லோரும் உட்கார்ந்ததும், "கங்காவின் கடிதம்," என்று தன் கைப்பையினின்று ஓர் உறையை எடுத்து ராமசாமியிடம் கொடுத்தான்.

ராமசாமி அந்த உறையை ஆவலுடன் கிழிக்க முற்பட்ட கணத்தில் மூன்றாவது வீட்டுச் செல்லம்மா ஓட்டமும் நடையுமாக வந்து, "உங்களுக்கு ஃபோன் வந்திருக்கு. ராஜாராமய்யர் கூப்பிடறார். வந்து பேச றேளா?" என்றாள்.

உறையை அப்படியே அலமாரியில் வைத்து மூடிவிட்டு, "கொஞ்சம் இவனோடு பேசிக் கொண்டிருங்கள் நாயுடு காரு. நான் போய் என்னன்னு கேட்டுட்டு வந்துட றேன்," என்ற ராமசாமி விரைந்து எழுந்து செல்லம்மா வீடு நோக்கி நடந்தார்.

"கொஞ்சம் நீங்க உடனே இங்க வாங்கோ. ஒரு முக்கியமான விஷயம்..."

ராஜாராமனின் குரலில் தொனித்த துயரமும் தொய்வும் ராமசாமியை என்னவோ செய்தன. ஏதோ விபரீதம் என்று மட்டும் நிச்சயமாய்ப் புரிந்தது.

"இதோ வந்துட்டேன், சார். இப்பவே கிளம்பி வந்துடறேன்."

"அப்பா, ரங்கா, நீ கொஞ்சம் எனக்காக இங்கேயே இரு. எங்கள் வீட்டில் சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டும். உன்னிடம் நிறையப் பேச வேண்டும் நான். இவர் மிஸ்டர் மணவாள நாயுடு. என்னுடைய நண்பர். நாயுடுகாரு, இவரோடு பேசிக் கொண்டிருங்கள். இதோ வந்துவிட்டேன். மிஸ்டர் ராஜாராமன் அவசரமாய் என்னை வரச் சொல்லுகிறார். எதற்கென்று தெரிய வில்லை. நான் வரட்டுமா?" விசாலத்திடமும் சொல்லிவிட்டு ராமசாமி விரைவாகக் கிளம்பிப் போனார்.

## 56

ராஜாராமன் கண்கள் கலங்கியிருந்தன. "ராமசாமி, காலார நடந்து பக்கத்துல இருக்கிற பார்க்குக்குப் போயிடலாம்," என்றார்.

பல்வேறு கேள்விகளும் சந்தேகங்களும் மனத்தில் எழுந்தாலும் அப்போதைக்குப் பொறுமை காட்டித்தானாக வேண்டும் என்று உணர்ந்த ராமசாமி, "சரி கிளம்புங்கோ" என்றார்.

ராஜாராமன் வீட்டுச் சாவியைப் பக்கத்து வீட்டில் கொடுத்து விட்டு வர, இருவரும் கிளம்பினர்.

கால்மணி நேர நடைக்குப் பிறகு பெரிய பூங்கா வந்தது. இருவரும் அதனுள் சென்று ஓர் ஓரத்துப் பெஞ்சியின் மீது உட்கார்ந்தார்கள்.

"சொல்லுங்கோ ராஜாராமன்! உங்க மனசுல என்ன கவலை?" என்றார் ராமசாமி.

"ஒரு கவலையா ரெண்டு கவலையா, ராமசாமி? முதல்ல பிள்ளையைப் பறிகுடுத்தேன். அப்புறம் பொண்டாட்டிக்குப் பைத்தியம் பிடிச்சு அவளையும் பறி குடுத்த நெலைமைதான். அப்புறம் சின்னப் பொண் கல்யாணம் ஆகாமயே குழந்தை பெத்து ஊராரோட ஏச்சுக்கும் பேச்சுக்கும் எங்க குடும்பமே ஆளாச்சு. அப்புறம் என்னோட மூத்த பொண்ணு. கலியாணமே பண்ணிக்க மாட்டேன்னுட்டா. உங்க மேல அவளுக்குத் தனி அபிமானம் இருந்ததைக் கவனிச்சுட்டுத்தான் அவ விஷயமா ஒரு நாள் உங்களை அப்ரோச் பண்ணினேன்....

"எனக்கு வாழ்க்கையில நேர்ந்த இந்தத் துயரங்களெல்லாம் போறாதுன்னு இப்ப புதுசா... இப்ப புதுசா இன்னொரு கஷ்டம் வந்திருக்கு. எம் பொண்ணுகளுக்குத் தெரியாம எப்படித்தான் நான் அதை மறைச்சு வெக்கப் போறேனா?"

"சொல்லுங்கோ, சார். என்ன கஷ்டம்?"

"இன்னிக்கு மத்தியானத் தபால்ல எனக்கு ஒரு லெட்டர் வந்தது...." மேலே தொடர முடியாமல் அவர் கண்ணீர் விடலானார்.

ராமசாமி அவர் கைகளைப் பிடித்துக் கொண்டார். "உங்க பேத்தியைப் பத்தின ஏதாவது... மோசமான செய்தியா, சார்?"

ராமசாமி அக்கடிதத்தை வாங்கிப் பிரித்துப் படித்தார்.

*'அன்புள்ள நண்பரே,*

*நமஸ்கார். வெள்ளையரை எதிர்த்துப் போராடும் பணியில் உள்ள ரிபப்ளிகன் ஆர்மியின் தளபதிகளுள் ஒருவன் இதைத் தங்களுக்கு எழுதுகிறேன். 'தங்கள் பேத்தி பவித்ரா, அண்மையில் எங்கள் பெண் படையினருடன் சேர்ந்து, வெள்ளைக்காரர்களுடன் நிகழ்த்திய சிறு போரின் போது உயிரிழந்து வீர சொர்க்கம் அடைந்த செய்தியை மிகுந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். எங்கள் படையில் அவள் சேர்ந்த இச் சிறு காலத்துள் இடைவிடாத அக்கறையான பயிற்சியின் விளைவாகக் குறி பார்த்துச் சுடுவதில் மிகுந்த கெட்டிக்காரியாகவும் எங்களிடம் பல நாள் பயிற்சி பெற்ற பெண்களுக்கு ஈடான சுறுசுறுப்புக் கொண்டவளாகவும் செயல்பட்டதையறிந்து மிகுந்த தேசபக்தியுடைய தாங்கள் பெரு*

*மைப்படுவீர்கள் என்பதை நாங்கள் அறி வோம். தங்கள் குழந்தைகளை இவ்வாறு தேசப் பணியில் அர்ப்பணிக்கும் தங்களைப் போன்றவர்களைப் பாரதமாதா என்றும் வாழ்த்துவாள். இந்தியா சுதந்திரம் அடையும் நாள் வெகு தொலைவில் இல்லை என் பதைப் பவித்ரா போன்ற பெண்கள் எங்க ளுக்கு உணர்த்தி வருகின்றனர். இப் பேரிழப் பைத் தாங்கும் சக்தியைத் தாங்கள் பெற நாங்கள் பிரார்த்திக்கிறோம்.*

*தங்கள் உண்மையுள்ள,*

*...........*

கையெழுத்திட்டிருந்தவரின் பெயர் படிக்க முடியாதபடி கிறுக்கலாக இருந்தது. ராமசாமி இரு முறை அதைப் படித்து விட்டுக் கண்கலங்கியபடி அவரிடம் திருப் பிக் கொடுத்தார்.

"அவ - என்னோட ஒய்ப் பாமா - பாக்கியசாலி, மிஸ்டர் ராமசாமி. அவ பாட் டுக்கு எதுவுமே உணரமுடியாத நெலைமை யில பைத்தியக்கார ஆஸ்பத்திரியில உக் காந்துண்டிருக்கா. நாந்தான்....." - ராஜா ராமன் தலையைக் குனிந்து கொண்டு விம்மி னார். ராமசாமி ஆறுதலாக அவர் முதுகைத் தடவிக் கொடுத்தார்.

சற்று நேரங்கழித்து,

"உங்களுக்கு இன்னொரு விஷயம் தெரி யுமா?" என்று கேட்ட ராஜாராமன், கங்கா-பவித்ரா பற்றிய காதல் விவகாரத்தை முழு வதுமாய் அவருக்குச் சொன்னார். ராமசாமி அதிர்ந்து போனார். தமக்கை விசாலம் ஊகித்தபடியே ஆகி இருந்ததை எண்ணி வியப்பும் அடைந்தார். சில நொடிகளுக்கு அவருக்குப் பேச்சே வராது போயிற்று.

கங்கா கடிதம் கொடுத்தனுப்பிய இளை ஞனை வீட்டில் இருக்கச் சொல்லிவிட்டுத் தாம் வந்ததை அதன் பின்னர் அவர் ராஜா ராமனிடம் தெரிவித்தார்.

"அப்ப நாம கௌம்பலாம். இந்த லெட் டரைக் கிழிச்சுப் போட்டுடட்டுமா?"

"வேண்டாம், சார். கிழிக்காதீங்கோ. எங் கிட்ட குடுங்கோ. நான் பத்திரமா வெச்சிருக் கேன். உங்களுக்கு எப்ப தேவையோ அப்ப எடுத்துக்கலாம் நீங்க."

ராஜாராமன் கொடுத்த கடிதத்தை வாங்கித் தம் சட்டைப்பையில் ராமசாமி பத்திரப்படுத்திக் கொண்டார். பிறகு அவரை அவரது வீட்டில் கொண்டுபோய் விட்ட பின் தம் வீடு திரும்பினார்.

"என்னடா, ராமசாமி? என்ன விஷயம்?" என்று அவர் வந்ததும் வராததுமாய் விசா லம் கவலையும் ஆவலுமாய் வினவினாள்.



**''நேத்து உங்க கட்சிக்காரர் மாட்டிக் கிட்டாராமே, எப்படி?''**

**''கடைக்கு ஆஸிட் வாங்கப் போனவரைக் கடைக்காரர் எந்த ஆஸிட் வேணும்னு கேட்ட போது, 'முகத் துல ஊத்தற ஆஸிட்'னு சொல்லி மாட்டிக்கிட் டார்!''**

**— ராதா வாசுதேவன்**

"அவருக்கு உடம்பு சரி இல்லேக்கா. கொஞ்சம் அதைரியப் படறார். அதான் போய்த் தைரியம் சொல்லிட்டு வந்தேன்," என்ற ராமசாமி, ராஜாராமனின் குடும்பம் பற்றி ரங்கையாவுக்குச் சொன்னார்.

மணவாள நாயுடு, "சரி, நீர் கங்காவோட லெட்டரைப் படியும். நான் வரட்டுமா?" என்று ஊஞ்சலிலிருந்து இறங்கினார்.

"இரும் ஓய்! என்ன அவசரம்? ரங்கையா வோட சேர்ந்து நம்மாத்துல சாப்பிடும் இன்னிக்கு" எனற ராமசாமி, பிறகு ஆவ லுடன் கங்காவின் கடிதத்தைப் படித்தார்.

*'அன்புள்ள அப்பா அவர்களுக்கு,*

*கங்கா அநேக நமஸ்காரம், க்ஷேமம். க்ஷேமத்துக்கு எழுதவும் என்று சொல்ல முடி யாது. ஏனென்றால் நான் விலாசமற்றவன். இக்கடிதம் கொண்டு வரும் ரங்கையாவும் எங்கள் இயக்கத்தைச் சேர்ந்தவன்தான். நாங்கள் இரகசியக் காப்புப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டவர்கள். எனவே எங்கள் இயக்கத்தின் பெயர், தலைவர் பெயர் போன்றவற்றை அவனிடம் கேட்டு அவனைத் தொல்லைப்படுத்த வேண்டாம். நான் பத்திர மாக இருக்கிறேன். சுதந்திர உணர்வைப் பொறுத்த மட்டில் வங்காளத்துக்கு இருக்கிற துடிப்பும் ஆர்வமும் வேறு எந்த ராஜதானிக் கும் இல்லை என்று தொன்றுகிறது. என் னைப் பற்றிக் கவலைப்படப் போகிறீர்களே என்பதற்காகத்தான் கடிதம் அனுப்புகிறேன். ரங்கையா எங்கள் இயக்கத்துக்கு மிக மிகப் புதியவன். அதனால் எங்களுக்குள் இன்னும் பழக்கமே ஆகவில்லை. நான் அவனைச் சந் திக்க வாய்த்ததே ஒரு வாரத்துக்கு முன்பு தான். பத்திரிகையில் தன் அம்மாவின் மரணம் பற்றிய விளம்பரத்தைப் பார்த் துவிட்டு அவன் கிளம்பி இருக்கிறான். எனவே அவனை உடனடியாக அனுப்பி விடுங்கள். தங்கச் சொல்லி வற்புறுத்த வேண்டாம். திருச்சியில் அம்மாவின் காரி*



**"என்னங்க! பையன் ஸ்கூல்ல இருந்து வந்ததிலிருந்து, சத்தமே வெளிய வராம வாயத் தெறந்து தெறந்து மூடுறான்!"**

**''பயப்படாதே! பையனை ''சேர்ந் திசை'' பாட ஸ்கூல்ல செலக்ட் பண்ணி பயிற்சி தராங்களாம் அதுதான்!''**

**— ந. பிலிப் செல்வமுத்து**

*யங்கள் முடிந்ததும் திரும்புவான். ஆனால் நாங்கள் சந்திக்க வாய்க்குமா வாய்க்காதா என்பதொன்றும் தெரியாது. நாங்கள் அவ்வப்போது சிதறிப் பிரிந்து கொண்டே இருப்பவர்கள். எனவே முறுக்கு, சீடை என்று கொடுத்தனுப்ப வேண்டாமென்று அத்தையிடம் சொல்லுங்கள். என் அன்பான அத்தைக்கு நமஸ்காரம். ரமணிக்கு என் ஆசீர்வாதம். மிஸ்டர் ராஜாராமன் வீட்டார் எல்லாரையும் கேட்டதாய்ச் சொல்லவும்.*

*உங்கள் அன்புள்ள, கங்காதரன்.'*

கடிதத்தின் சாரத்தை அறிந்து கொண்டதும் விசாலம் அழுத அழுகையில் ஆனந்தக் கண்ணீரும் துயரக் கண்ணீரும் கலந்திருந்தது.

வெளியே போயிருந்த ரமணி அப்போது வீட்டுக்குத் திரும்பினான். ஒருவருக்கொருவர் அறிமுகம் செய்விக்கப்பட்டபின் ரமணி ரங்கையாவின் புரட்சி இயக்கம் பற்றி யறிய ஆசைப்பட்டான். அதன் பிறகு ரமணியின் கால் எவ்வாறு நொண்டியானது எனும் கதை ரங்கையாவுக்குச் சொல்லப்பட்டதும், ரங்கையா, "அடடா! அப்படியானால் பெஜவாடா ஸ்டேஷன் மாஸ்டரிடம் தங்கிப் போனது நீதானா? நான் அப்போது குடிவாடாவில் இருந்தேன். ஸ்டேஷன் மாஸ்டர் சத்தையா என் சொந்த அண்ணாதான்,'' என்றான் வியப்பாக. எல்லாருக்கும் ஒரு கதையின் சுவையான திருப்பத்தைக் கேட்டது போல் இருந்தது.

சாப்பாடு ஆனதும் ரங்கையா புறப்பட்டுப் போனான்.

அவன் போன பிறகு மணவாள நாயுடுவும் சற்று நேரத்தில் புறப்பட்டு விட, ராமசாமி தமது அறைக்குப் போய் அலமாரியில் ஒரு புத்தகத்துள் பவித்ரா பற்றிய கடிதத்தைத் தாற்காலிகமாக மறைத்து வைத்தார். அந்தப் பெண் இறந்தது ஒரு புறம் அவரை வேதனைப்படுத்த, அவளைக் கங்கா மணக்க ஆசைப்பட்டுப் பின் மனச்சாட்சியின் உறுத்தலால் அந்த எண்ணத்துக்கு விடை கொடுத்து அனுப்பினான் எனும் உண்மை மறுபுறம் வாட்டியது.

'என்ன இருந்தாலும் ராஜாராமனின் குடும்பத்துக்கு இத்தனை கஷ்டங்கள் வரக் கூடாது. கடவுளுக்குக் கண் இல்லைதான். இங்கு மட்டும் என்ன வாழ்ந்தது? குஞ்சம்மா முதலில் போனாள். கங்கா திரும்பிவருவான் என்ற நிச்சயம் இல்லை. ரமணி ஓடிப் போய்க் காலை உடைத்துக் கொண்டு வந்தான். விதி யாரைத்தான் விட்டது?'

சிரிப்பும் கும்மாளமுமாய் வீடு திரும்பிய அஞ்சனாவும் அமராவதியும் ராஜாராமனின் சோர்ந்த முகத்தைப் பார்த்து வியப்பும் திகிலும் உற்றனர். அவர்கள் திரும்பத் திரும்பக் கேட்ட கேள்விகள் எல்லாவற்றுக்கும் அவர் அளித்த பதில், 'மனசு எப்பவும் ஒரே மாதிரியே இருக்குமாம்மா?' என்பதுதான்.

சாப்பாட்டின் போது பாயசம் பரிமாறப் பட்டதும், "இன்னிக்கு என்னம்மா பாயசம்?" என்று கேட்ட அவரிடம், "நீங்களா நெனப்பு வெச்சிருக்கேளான்னு பாத்தோம்ப்பா. எப்படிப்பா மறந்தேள்? இன்னிக்கு நம்ம பவித்ராவுக்குப் பொறந்த நாளில்லையா?" என்று அமராவதி சிரிக்க, அவர் அப்படியே உடைந்து அழத் தொடங்கினார்.

"என்னப்பா?", "எதுக்குப்பா இப்ப அழறேள்?" என்று இரு பெண்களும் மாற்றி மாற்றிக் கேட்டதும், ''இன்னிக்கு எழுந்ததுலேர்ந்தே மனசு சரியில்லேம்மா. பவித்ரா ஞாபகமாவே இருக்கு. கொழந்தை எப்படி இருக்காளோ, என்ன பண்றாளோ?" என்று கண்ணீருடன் அரற்றிய அவருக்குப் பேத்திக்குத் துணையாகப் போன தங்கத்தின் ஞாபகம் வந்தது. 'என்ன சுயநலக்காரன் நான். தங்கத்தைப் பற்றி மறந்தே போனேனே,' என்று தமக்குள் வெட்கமடைந்தார்.

"எனக்குக் கூட பவித்ராவைப் பத்தின கெட்ட சொப்பனம் வந்ததுப்பா. ஒரு வேளை ஏதானும் கஷ்டத்துல இருக்காளோ?" என்றாள் அமராவதி.

'சேதியைச் சொல்லி விடலாமா?' என்று கணம் போல் எழுந்த எண்ணத்தை வெகு பாடுபட்டு ராஜாராமன் அடக்கிக் கொண்டார்.

(தொடரும்)

# உள்ளும்

"என்னடி கலா... என்னவோ பர்ஸனலா பேசணும்னு கோவிலுக்குக் கூட்டிட்டு வந்துட்டு, இப்ப பேச எதுவுமே இல்லாத மாதிரி உம்முன்னு இருந்தா என்ன அர்த்தம்?" ஜெயந்தி கேட்டாள்.

"ஜெயந்தி... எனக்காக ஒரு ஹெல்ப் பண்ணணும்... நீங்க..."

"வந்து உட்கார்ந்து அரை மணி நேரமாச்சு. அம்பது தடவை இதையே சொல்லிட்டே.... என்ன ஹெல்ப்ன்னு சொன்னாத்தானே செய்ய முடியும்?"

கலா சிரித்தாள். தயங்கினாள்.

"எவனையும் லவ் பண்ணித் தொலைக்கிறியா?"

"ஆமாக்கா... எப்படி கண்டுபிடிச்சீங்க?"

"ம். அது பெரிய சீக்ரெட் பாரு. நீ இத்தனை தடவை வார்த்தைகளை முழுங்கறப்பவே நினைச்சேன். ஏதோ தப்பு இருக்குன்னு."

## யோகி

"லவ் தப்பா?"

"தப்பு இல்லே. தப்பானவன் மேல் லவ் வந்துட்டா தப்புத்தான்."

"அவர் தப்பானவர் இல்ல. நல்லவர். உங்களுக்கு கூடத் தெரியும்."

"யாரு அது..."

திரும்ப கலா தயங்கினாள். "நா ஒண்ணும் உன் ஆளைத் தட்டிக்கிட்டுப் போயிட மாட்டேன். சரி.. அவர் உன்னை விரும்பறாரா?"

"விரும்பற மாதிரிதான் தெரியறது. ஆனா இன்னும் அவர் அதை வெளிப்படுத்தல."

"யாருடி அந்தப் பரிதாப மனுஷன்?"

கலா முறைத்தாள்.

"நம்ம ஆபீஸுக்கு ஸ்க்ரீன் ப்ரிண்டிங் பண்ணுவாரே... ராமு... அவர்தான்."

"ராமு... ஓகே... உன் அழகுக்கு, உன் படிப்புக்கு சரியான ஜோடிதான். நா எந்த வகையில் உனக்கு ஹெல்ப் பண்ண முடியும்னு நினைக்கிறே?"

"அதான் எனக்கும் தெரியலே."

"சரியாப் போச்சு... இதுக்குத்தானா இத்தனை அறுஅறுத்தே.."

"ப்ளீஸ் ஒரு வழி சொல்லுங்க."

கலாவும் ஜெயந்தியும் ஒரே அலுவலகத்தில்தான் பணிபுரிகின்றனர். நெருங்கின சினேகிதிகள். கலாவுக்கு பின்னால் கலாவின் நிழல் இருக்கிறதோ இல்லையோ ஜெயந்தி இருப்பாள். ஜெயந்திக்குப் பின்னால் அவளின் நிழல் இருக்கிறதோ இல்லையோ கலா இருப்பாள். ஆபீஸில் கூட கேலியாய்க் கேட்டார்கள். 'எங்கே உங்க நிழலை காணோம்?' என்று.

அத்தனை நெருக்கம். இரவு தூங்கும் நேரம் தவிர்த்து இருவரையும் சேர்ந்து இருக்கப் பார்க்கலாம். இருவருக்குமே இன்னும் திருமணம் முடியவில்லை.

# புறமும்

ஜெயந்திக்கு வயசு சற்று அதிகம்தான். இருபத்தி ஏழு. ஆனாலும் இன்னும் ஓர் இடமும் அமையவில்லை.

"ஜெயந்திக்கா... நீங்கதான் ஒரு வழி சொல்லணும். என்னை விட நீங்கதான் அவர்கிட்டே நல்லாப் பேசறீங்க. எப்போதாவது பேசிட்டே இருக்கும் போது அவர் மனசில் நான் இருக்கேனான்னு பாருங்க. என் லவ்வையும் எடுத்துச் சொல்லுங்க."

"நீ என்கிட்ட உதைபடப் போறே. எனக்கு இதுதான் வேலையா? நீ லவ் பண்றதுக்காக அவர் யாரையும் லவ் பண்றாரான்னு துப்பறியச் சொல்றியா?"

"அக்கா.... உதவுங்க..."

"சரி... வாய்ப்புக் கிடைக்கும் போது பேசறேன்..."

இரண்டொரு நாளில் அந்த வாய்ப்பு கிடைத்தது. பஸ் ஸ்டாண்டில் ராமுவைப் பார்த்தாள் ஜெயந்தி. ராமு சோஷியல் டைப் என்று கூற முடியாது. ஜெயந்தியிடம் சற்று ப்ரீயாகப் பேசுவான். கலாவிடம் வழியப் பேசுவான். ஜெயந்தி அதைப் பார்த்து இருக்கிறாள். ராமுவின் அருகே சென்றாள். கலா தனக்கு இப்படி ஒரு வேலை வைப்பாள் என்று ஜெயந்தி எண்ணவில்லை.

ராமு கையில் ஒரு நாவல் வைத்து இருந்தான். காதலுக்காக உயிரைத் துறந்த ஒரு காதலனின் கதை. சரி பேச்சை ஆரம்பிக்கத் தோதாய் அமைந்து விட்டது - அந்தப் புத்தகம்.

"நாவலைக் கொடுங்க" ஜெயந்தி வாங்கினாள்.

"இது மாதிரி ஒருத்தருக்காக ஒருத்தர் உருகறதை எல்லாம் ஏற்றுக் கொள்ள முடியுதா ராமு?"

"ஏன்... ஏற்றுக் கொள்ள முடியாது... உண்மையான காதல் உயர்ந்தது மிஸ் ஜெயந்தி..." ஒருவித அனுபவித்தலுடன் பேசினான் ராமு.

"காதலைப் பற்றி உங்களுக்கு ஓர் உயர்ந்த எண்ணம் உண்டு போல் இருக்கு."

"ஆமா..." என்று ராமு சிரித்தான்.

"அப்போ யாரையாச்சும் லவ் பண்றீங்களா... ரொம்ப வெட்கமும் படறீங்க. அப்ப இருக்கும்."

அதற்கும் சிரித்தான். "ஆமா மிஸ் ஜெயந்தி... உங்ககிட்ட சொல்றதுக்கென்ன. நா ஒரு பெண்ணை லவ் பண்றேன். ஆனா அவங்க் அதை எப்படி எடுத்துப்பாங்கன்னு தெரியலை... நீங்கதான் ஹெல்ப் பண்ணணும். உங்ககிட்ட நானே இதைப் பத்தி பேச எண்ணி இருந்தேன்."

"போச்சுடா" என்று சிரித்தாள் ஜெயந்தி.

"யாரு... அந்த எக்ஸ்?"

ராமு தயங்கினான். பிறகு, "உங்க ப்ரண்ட் கலாதான்" என்றான்.

"மேரேஜ் வரை போகும்தானே இந்தக் காதல். இல்ல, சும்மா ஜாலிக்கு இல்லையே?"

"சீ... அப்படியெல்லாம் கிடையாது..." என்று வேகமாக மறுத்தான். பிறகு, "கொஞ்சம் சொல்லுங்க" என்றான்.

"சரி என்றேன்."

மறுநாள் கலாவிடம் சொன்ன போது சந்தோஷக் கூச்சலிட்டாள். கட்டிக் கொண்டு முத்தமிட்டாள். இவர்களுக்கு போஸ்ட்மேன் போலவே தன்னை ஆக்கி விட்டார்களே என்று எண்ணிக் கொண்டாள். ராமு கவிதையாகக் கடிதம் எழுதிக் கொடுப்பான். கலாவுக்கு கவிதை வராது. "ப்ளீஸ்க்கா... நீங்க நல்லா எழுதுவீங்க. எழுதிக் கொடுங்க!" என்பாள்.

ஜெயந்தி அழகாக குண்டு குண்டான கையெழுத்தில் கவிதை எழுதிக் கொடுத்தாள். சற்றே அவள் விழியில் ஈரம் கசிந்தது.

கலாவின் வீட்டிற்குக் காதல் தெரிய வந்தது. நல்லவேளையாக எதிர்க்கவில்லை. ராமு பண்புள்ளவனாக இருந்ததால் கலா வீட்டில் ஏற்றுக் கொண்டார்கள். ராமு வீட்டிலும் இதைப் பெரிசு பண்ணவில்லை. "நல்லா இருந்தா சரிதான்!" என்றார்கள்.

கல்யாணம் நல்லபடியாய் முடிந்தது. கலாவுக்குத் தொடர்ந்து வேலைக்குச் செல்ல விருப்பமில்லை. வேலையை ராஜினாமா செய்தாள். ராமு அவளது விருப்பத்திற்குக் குறுக்கே நிற்கவில்லை.

ஜெயந்திக்கு சற்று வருத்தம்தான். அவள் வேலையை ராஜினாமா செய்தது.

அன்று ரிஸிக்னேஷன் லெட்டர் கொடுக்க வந்தவள்தான். அதற்குப் பிறகு சந்திக்கவே இல்லை. ஜெயந்திக்கு கலாவைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. நேரம் கிடைக்கவில்லை. போன் பண்ணலாம் என்றால் கலாவின் அக்கம் பக்கத்து வீட்டு போன் நம்பர் தெரியாது.

கலாவாவது போன் பண்ணலாம். சரி.. இன்றாவது போய்ப் பார்க்க வேண்டும் என்று ஆபீஸ் முடிந்ததும் கலாவின் வீட்டிற்குச் சென்றாள். வீட்டில் கலா இல்லை. ராமு மட்டும்தான் இருந்தான்.

"வாங்க... வாங்க" என்றான்.

"கலா எங்கே?"

"அவ அம்மா வீட்டுக்குப் போய் இருக்கா. வந்துடுவா. இருங்க" என்றான்.

“உங்க கிட்ட சொல்றதுக் கென்ன. நா ஒரு பெண்ணை லவ் பண்றேன்.”



“அப்புறம் பார்க்கவே முடியலை. உங்களை மறக்க முடியாது. ரொம்ப உதவியா இருந்தீங்க...” என்று காப்பி போட்டுக் கொண்டு வந்து கொடுத்தாள்.

பத்து நிமிஷம் பார்த்தாள். பிறகு கிளம்பினாள். “நா அப்புறமா வர்றேன்.”

“இருந்து பார்த்துட்டுப் போங்க.”

“இல்ல... வர்றேன். கோவிலுக்குப் போறேன். போயிட்டு திரும்பும் போது வர்றேன்” என்று கிளம்பினாள்.

பக்கத்தில்தான் அம்மன் கோவில். பன்னிரெண்டு வாரம் வெள்ளிக்கிழமை விளக்கேற்றினால் ஏதாவது வரன் அமையும் என்று அம்மாவுக்கு யாரோ சொல்ல அம்மா தன்னிடம் போகும்படி கூற நம்பிக்கை இல்லாவிட்டாலும் அம்மாவிற்காக இந்தக் கடமை.

சாமி கும்பிட்டு விட்டு கலாவின் வீட்டைத் தொட்ட போது, தன்னைப் பற்றிப் பேச்சு அடிபடவே ஜெயந்தி வாசலிலேயே நின்றாள்.

“யாரு ஜெயந்தி வந்தாளா... காப்பி போட்டு கொடுத்தீங்களா... உங்களுக்கு எதுக்கு அந்த வேலை... வந்தா நா இல்லேன்னா அனுப்பி விட வேண்டியதுதானே. அவகிட்ட ஜாக்கிரதையா பேசுங்க. ஆம்பளைங்களைப் பார்த்த வழிவா. அவளுக்கு ஒரு கழுதை வயசாகியும் ஏன் கல்யாணம் ஆகலைன்னு நினைக்கிறீங்க. அவ கேரக்டரை பார்த்துட்டா எவரும் ஒப்புக்க மாட்டாங்க. நா இல்லாதப்ப அவ ஏன் வரணும்? ஏற்கெனவே உங்களைப் பார்த்தா ஈன்னு பல் இளிப்பா.”

“சும்மா இரு. அபத்தமாப் பேசாதே. கோவிலுக்கு வந்தாளாம்...”

“அவ வந்தா ஜாஸ்தி பேசாதீங்க. அப்புறம்...” என்றாள் கண்டிப்பாய்.

ஜெயந்தி சப்தம் போடாது மெல்ல நடந்தாள். அதற்குப் பிறகு அவள் கலாவை சந்திக்கவே இல்லை.

# மணிக்கொடி

## 57

இரண்டாவது வட்டமேஜை மகாநாடு முடிந்து காந்தியடிகள் நாடு திரும்பினார். மகாநாட்டின் முடிவுகளும் விளைவுகளும் அவருக்கு திருப்தியளித்திருக்கவில்லை. டாக்டர் அம்பேத்கர் அரிசனங்களுக்குத் தனித் தொகுதி கேட்டதும், காந்தியடிகளின் மறுப்பு எடுபடாது போய்விட்டதும் அவரைப் பெரிதும் வருத்தி இருந்தன. இந்துக்களான அரிசனங்களைத் தனியாகப் பிரிப்பது இந்துக் களையே துண்டாடுதலுக்கு ஒப்பானது என்று காந்தியடிகள் கருதினார். மதங்களின் பெயரிலான பிரிவுகளையே அவர் விரும்பாத போது, ஒரே மதத்தினரை - அதுவும் 'தாழ்த்தப்பட்டவர்கள்' என்ற அடைமொழியுடன் - பிளவுபடுத்துதலை அவரால் தாங்க முடியவில்லை. இருப்பினும் அம்பேத்கர் இம்மியும் விட்டுக் கொடுக்காததால், அடிகள் கனத்து வலித்த இதயத்துடன் திரும்பி வந்தார். இந்த அழகில் இந்தியாவில் அரசாங்கம் செய்திருந்த அட்டூழியங்கள் அவரை மேலும் துயர் கொள்ளச் செய்தன.

தாம் இல்லாத போது அரசாங்கம் உப்புவரியை அதிகமாக்கியது பெரிய மோசடியாக அவருக்குப் பட்டது. உப்புவரியையே எடுக்க வேண்டும் என்று சத்தியாக்கிரகம் செய்திருந்த அவருக்கு அதனை அதிகப்படுத்தியது எவ்வளவு ஆயாசத்தை ஏற்படுத்தி இருக்கும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

மனங்கசந்து போன நிலையில், காந்தியடிகள் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தாம் மறுபடியும் தொடங்கப் போவதாக அறிவித்தார். அரண்டு போன சர்க்கார் ஜனவரி நான்காம் நாள் அவரைக் கைது செய்து ஏரவாடாவில் சிறை வைத்தது. மேலும் நான்கு அடக்குமுறைச் சட்டங்களையும் இயற்றியது. காங்கிரஸ் தடை செய்யப்பட்ட அமைப்பாகியது!

காந்தியடிகள் இல்லாதபோது, புரட்சியாளர்களால் சில வெள்ளையர்கள் கொல்லப்பட்டிருந்தனர். சுநீதி சௌத்ரி, சாந்தி கோஷ் எனும் இரண்டு இளம் பெண்கள் ஸ்டீவன்ஸ் எனும் ஜில்லா மாஜிஸ்திரேட்டைச் சுட்டுக் கொன்றது நாடெங்கிலும் பரபரப்பாய்ப் பேசப்பட்டது.

1932 ஆகஸ்டில் தீண்டத் தகாதாருக்கென்று தனித் தொகுதிகள் எனும் வகுப்புவாதத் தீர்ப்பை இங்கிலாந்துப் பிரதமர் வழங்கினார். சிறையில் இருந்த காந்தி அதைத் தடுக்க எடுத்த முயற்சிகள் வீணாகவே, சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாக அறிவித்து, செப்டம்பர் 20 ஆம் நாளில் நோன்பைத் தொடங்கி விட்டார்.

காந்தியடிகள் சிறைப்பட்டதன் விளைவாக எழுந்த கலவரங்களில் நாடு முழுவதும் கிட்டத்தட்ட அறுபத்தையாயிரம் பேர்கள் கைது செய்யப்பட்டனர்.

தேசத் தந்தையின் உண்ணாவிரதத்தின் விளைவை எண்ணிப் பார்க்க அஞ்சிய மதன் மோகன் மாளவியா, தக்கர் பாபா, ராஜாஜி, சரோஜினி நாயுடு, எம்.சி. ராஜா, டாக்டர் அம்பேத்கர் ஆகியோர் ஏரவாடா சென்றனர். ராஜாஜியும் அம்பேத்கரும் தனியாகச் சந்தித்துப் பேசித் தீர்வுக்கான நடவடிக்கைகளை எடுக்க முற்பட்டனர்.

அந்த முடிவின்படி கூட்டுத் தொகுதி முறையும், ஆனால் தாழ்த்தப்பட்டவர்க்கு அதிகத் தொகுதிகள் ஒதுக்கப்பட வேண்டும் என்பதும் ஏற்கப்பட்டுப் பூனா உடன்படிக்கை செப்டம்பர் 24 ஆம் நாள் கையெழுத்தானது. காந்திஜியும் தமது உண்ணா நோன்பை நிறுத்திக் கொண்டார். அவ்வாண்டு ஆகஸ்டு நவஜீவன் இதழில் தாழ்த்தப்பட்டவர் என்பதை அரிசன் என்று காந்தியடிகள் குறிப்பிடத் தொடங்கி விட்டிருந்தார். அவரின் முன்னேற்றக் கருத்துக்கு மதிப்பளிக்கும் வகையில் நாட்டின் பல கோவில்கள் அரிசனங்களுக்குத் திறக்கப்பட்டன.

இவ்வாறு காந்திஜியின் சாத்துவிகப் போர் ஒருபுறம் நடக்க, மற்றொரு புறம்



அதே ஆண்டில் 97 பயங்கரவாதச் செயல்கள் நடந்தன. வங்காள கவர்னரைச் சுட முயன்று பிடிபட்ட வீணாதாஸ் எனும் மாணவி தண்டிக்கப் பட்டாள். மிட்னாப்பூர் மாஜிஸ்டிரேட்டு சுடப்பட்டுப் படுகாயமுற்றார். மிகப் பரபரப்பாகப் பேசப்பட்டது சிட்டகாங் ஐரோப்பியர் கிளப், சூர்யா சென்னின் படையால் பிரீதி லதாவின் தலைமையில் தாக்கப்பட்டதாகும். தாக்குதல் நடைபெறு முன்னரே அத்துடன் சம்பந்தப்பட்ட கல்பனா தாஸ் கைது செய்யப்பட்டாள். தாக்குதலில் ஒரு பெண்மணி இறந்தார். பதின்மூன்று பேர் காயமுற்றனர். பிடிபட்ட பிரீதிலதா சயனைட் சாப்பிட்டு இறந்தாள். அவளது சட்டைப் பையில் ஒரு துண்டுச் சீட்டு இருந்தது. அதில், 'நமது போராட்டம் 1930 ஏப்ரல் 18 இல் தொடங்கியது. பாரதமாதா அடிமைப்பட்டிருக்கும் வரை இது தொடரும். புரட்சிக்கார இளைஞர்க்குப் பெண்களாகிய நாமும் உதவ வேண்டும்' என்று எழுதப்பெற்றிருந்தது.

அதே ஆண்டில் சென்னையில் சுதந்தர நாள் விழாவன்று பாஷ்யம் எனும் இளைஞர் நள்ளிரவில் கோட்டையின் உச்சிக்குப் போய்க் கராச்சி மாநாட்டில் வடிவமைக்கப்பட்ட மூவண்ணக் கொடியை நட்டார். பிரிட்டனின் கொடியை அகற்றினார். கொடியின் நடுவே 'பிரிட்டிஷ் அரசுக்கு இன்றே கடைசி நாள்' என்று எழுதியும் வைத்திருந்தார். அவரைப் போல் பம்பாய்க் கூட்டம் ஒன்றிலிருந்து பிரிட்டிஷ் கொடியை நீக்கி மூவண்ணக் கொடியைப் பறக்கவிட்ட ஓர் இளைஞர் பிடிபட்டுப் படுகாயப் படுத்தப்பட்டார். அதே ஆண்டில் திருப்பூரில் குமரன் எனும் இளைஞர் தடை செய்யப்பட்ட ஊர்வலத்தில் கலந்து கொண்டு அடிபட்டு மயங்கிய நிலையிலும் கொடியைப் பிடித்துக் கொண்டே இருந்தார். அவர் மரணமுற்ற பிறகும் கொடி அவர் பிடியிலேயே இருந்தது.

அமைதி ஊர்வலம் சென்ற மக்களையெல்லாம் போலீசார் சகட்டு மேனிக்கு அடித்து நொறுக்கினார்கள். ஆயிரக்கணக்கானோர் நாடு முழுவதும் கைதானார்கள்.

ராமசாமிக்கு கங்காவிடமிருந்து கடிதம் வந்து பல நாட்கள் ஆகிவிட்டிருந்தன. இத்தனை நாட்களில் கங்காவிடமிருந்து அவருக்கு ஒரே ஒரு கடிதம்தான் வந்திருந்தது. குறிப்பிடும்படி அதில் செய்தி இல்லாவிட்டாலும், புரட்சியாளர்களிடையிலேயே சோர்வு ஏற்பட்டிருப்பதை அது தெரிவித்திருந்தது. காந்தியளவுக்கு நாடு தழுவிய

ஜோதிர்லதா கிரிஜா

போராட்டமாகத் தங்களால் செய்ய முடிய வில்லை என்பதை அவர்கள் உணர்ந்து வருவது பற்றியும் கங்கா அதில் குறிப் பிட்டிருந்தான். காந்திஜியின் பால் கங்கா ஈர்க்கப்பட்டுள்ளானோ என்ற இன்பமான அதிர்வை அந்தக் குறிப்பு அவருள் கிளர்த் தியது. அது பற்றிய தகவலைத்தான் அவர் மிகுந்த ஆவலுடன் எதிர் நோக்கினார். ஆனால் அதன் பிறகு அவனிடமிருந்து கடி தமே இல்லை. ஏதாவது அடாவடிச் செய லில் ஈடுபட்டுச் சிறைப்பட்டிருக்கலாமோ என்ற எண்ணம் வந்தது. அப்படியேயானா லும் கைதிகளுக்கும் கடிதம் எழுதும் வசதி இருக்கிறதே என்ற நினைப்பும் வந்ததில், பவித்ரா மாதிரி.... என்று தொடங்கிய எண் ணத்தை முடிக்க விரும்பாமல் அவர் தலை யைக் குலுக்கிக் கொண்டார். 'அப்படி எல் லாம் இருக்காது. இருக்கக்கூடாது. அவன் சிறைப்பட்டிருக்கக்கூடும். எல்லா ஜெயில் அதிகாரிகளும் கடிதம் எழுதும் உரிமையைத் தருவார்கள் என்று சொல்ல முடியாது' என்ற எண்ணத்தில் ஆறுதல் பெற முயன்றார்.

கதவு தட்டப்பட, சிந்தனை கலைந்து வாசற் கதவைத் திறக்க எழுந்தார். இதற்குள் அவரை முந்திக் கொண்டு எழுந்து போய்த் திரும்பி வந்து பாதி வழியில் அவரைச் சந் தித்த விசாலம், "நான் கதவைத் திறக்கல்லே, ராமசாமி. ஜன்னல் வழியாப் பார்த்தேன். தாடியும் தலைப்பாவுமா ஒரு பஞ்சாப்காரன் நின்னுண்டிருந்தான். உடனே வந்துட்டேன். ஒரு வேளை சி.ஐ.டி. போலீசாக்கூட இருக்க லாம். யாருன்னு கேக்காம கதவைத் திறக் காதே" என்று அறிவுரை கூறினாள்.

ராமசாமி வியப்புடன் நகர்ந்தார்.

## 58

சிட்டகாங் ஆயுதக்கிடங்குத் தாக்கு தலுக்குப் பிறகு ஜலாலாபாத் குன்றில் தங்கிக் கொண்ட புரட்சியாளருக்கும் வெள்ளை யருக்குமிடையே நடந்த போரில் பிடிபட்டுச் சிறைத் தண்டனை பெற்றிருந்த ஜெய்சங்கர் சுக்லா, அகமத்கான், சுபேந்திரநாத் தாகூர், ரத்னாகர், ராஜ்குமார் ஆகிய ஐவரும் சிறை யில் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்த அந்த நள்ளிரவு கடந்த நேரத்தில் அதன் கதவை மிக எளிதாய்த் திறந்து கொண்டு உள்ளே வந்த முக்காடிட்ட ஆள், "ஜெய், ஜெய்...." என்று அவனது தோளில் தட்டினான். ஜெய் சங்கர் சுக்லா வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். நிலாக்காலமாதலால்

"என் மனைவிக்கு என்ன வியாதி டாக்டர்?"

"பயப்படாதீங்க போஸ்ட் மார்டத்துலயாவது கண்டு புடிச்சிடலாம்!"

— டி.எஸ். திருமலைராயன்

உயரத்தில் இருந்த சிறு சன்னல் வழியே வெளிச்சம் உட்புகுந்து கொண்டிருந்தது.

"நீங்கள் ஐந்து பேரும் இங்கிருந்து இப் போதே தப்பிப் போய் விடுங்கள், ஜெய்...."

"மாணிக்லால்... ஐ ஆம் சாரி. நீங்கள் இப்போது இன்ஸ்பெக்டர் ஜெனரல்...."

மற்ற நால்வரும் எழுந்து உட்கார்ந்தார் கள்.

"இல்லை, ஜெய். நான் உங்களுடைய பழைய நண்பன் மாணிக்லால் திங்ரா. லண் டனில் வாழ்ந்த காலத்தில் மதன்லால் திங்ரா வுக்குத் திருஷ்டிப்பரிகாரம் என்று உன்னால் வர்ணிக்கப்பட்ட அந்த மாணிக்லால் திங்ரா என்றோ இறந்து விட்டான், ஜெய். நீங்கள் ஐந்து பேரும் உடனே தப்பிப் போய்விடுங் கள். பின் கதவு திறந்து வைக்கப்பட்டுள்ளது."

"இந்தச் சிறையின் காவல்காரன்?"

"அவன் மயங்கிக் கிடப்பதற்கு ஏற்பாடு செய்தாகிவிட்டது, ஜெய். கேள்வி கேட்டுக் கொண்டிருக்காதே. இந்தா, உங்கள் சிறை உடைகளைக் களைந்து விட்டு இந்தப் பைஜாமா குர்தாக்களை அணிந்து கொண்டு புறப்படுங்கள்."

மாணிக்லால் திங்ரா தன்னுடன் எடுத்து வந்திருந்த துணி மூட்டையைப் பிரித்தான்.

ஜெய்சங்கரின் விழிகள் நீரில் மிதந்தன. ஐவரும் சுறுசுறுப்பாக உடை மாற்றம் செய்து கொண்டார்கள்.

"மாணிக்லால், உன்னை நாங்கள் மறக் கவே மாட்டோம். அன்று லண்டனில் நடந் ததை மறந்து விடு."

"அதை நான் என்றோ மறந்து விட்டேன், ஜெய். உங்களைக் காட்டிக் கொடுக்க அன்று எனக்கிருந்த வளராத உள்ளத்தால் முனைந்த நான் இன்று அதற்கு ஒரு சிறு பிராயச்சித்தம் செய்து விட்டதாகவே நினைக்கிறேன். இது போன்ற உதவிகளை வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் தேச பக்தர்களுக்கு நான் செய்வேன்."

ஜெய்சங்கர் கண்ணீர்த்துளிகள் கன்னங் களில் உருண்டு விழ, விரைவாக நகர்ந்து நண்பனை அணைத்துக் கொண்டான். மற்ற நால்வரும் கூட மாணிக்லால் திங்ராவை



அணைத்துக் கொண்டு பிறகு விடை பெற்று நெஞ்சு கொள்ளாத நன்றியுடனும் சுதந்திர உணர்வுடனும் தப்பிப் போனார்கள்.

**வி**சாலத்தின் அறிவுரைப்படி முதலில் ராமசாமி சன்னல் வழியாக எட்டிப் பார்த்தார். வந்திருந்தவன் போலீசாகவே இருந்தாலும் கதவைத் திறந்துதானே ஆக வேண்டும் என்று நினைத்து, "யார் நீங்கள்? யார் வேண்டும் உங்களுக்கு?" என்றார்.

"நான் போலீஸ் டிபார்ட்மென்ட். சி.ஐ.டி. முதலில் கதவைத் திறவுங்கள்" என்று அந்தச் சீக்கியன் கட்டைத் தொண்டையில் அதிகாரமாய்ச் சொன்னான்.

கலவரமடைந்த ராமசாமி கதவைத் திறந்தார். பரண்மீது டிரங்குப் பெட்டியில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த பவித்ரா பற்றிய கடிதம்தான் உடனே அவரது நினைவில் நெருடியது. சீக்கியன் உள்ளே வந்தான். சற்றே ஒதுங்கி அச்சத்துடன் நின்றிருந்த விசாலத்தைப் பார்த்தான். ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து விசாலத்தைக் கட்டிக் கொண்டான்.

"அட, பாவி... அய்யோ. ராமசாமி, இவனைத் தள்ளுடா. குடிச்சுட்டு வந்திருக்கான் போலேருக்கு...."

"முட்டாள்!" என்று கூவியபடி பாய்ந்தார் ராமசாமி. அடுத்த வினாடி தலைப்பாகை, ஒட்டுத்தாடி, மூக்குக் கண்ணாடி ஆகிய இணைப்புகள் எகிறி விழ, தானும் தரையில் மல்லாந்து கிடந்தான் கங்காதரன்.

"வயசாயிண்டிருக்கே ஒழிய, உங்களுக்கு ஆனாலும் பலம் ஜாஸ்திதாம்ப்பா," என்றபடி கங்கா எழுந்து உட்கார்ந்தான்.

அடுத்த கணத்தில் அங்கு எவ்வளவு மகிழ்ச்சியும், இன்பமான அதிர்ச்சியும் நிலவின என்பதை விவரிக்கச் சொற்களுக்கு வல்லமை இல்லை. அளவு கடந்த பரவசத்தைத் தாங்க முடியாமல் விசாலம் உடனே தரையில் உட்கார்ந்து அழலானாள்.

"சாரி, கங்கா. வா, வா. வந்து உக்காந்து எல்லாம் விவரமாச் சொல்லு. வடக்கே போய் இத்தனை நாளும் என்ன பண்ணினே, எந்த அளவுக்கு சாதிச்சே... ஒரு லெட்டர் போட்டிருக்கலாமோல்லியோ?" என்ற ராமசாமி சிரிப்பே உருவானார்.

கங்கா எழுந்து வந்து ஊஞ்சலில் ராமசாமிக்கு அருகே உட்கார்ந்து கொண்டான்.

"அழாதே, அத்தே. எழுந்திரு. உன் கையால காப்பி குடிச்சு எத்தனை நாளாச்சு?"

விசாலம் கண்களைத் துடைத்துக் கொண்டு இலேசான சிரிப்புடன் எழுந்தாள். "இனிமே இந்த வீட்டு வாசப்படிய விட்டு இறங்கு, சொல்றேன்!"

"முதல்ல காப்பி கொண்டாத்தே. அப்புறம் உனக்கும் ஒருதரம் சொல்றேன், என்னோட வீர தீரப் பிரதாபத்தையெல்லாம்."

விசாலம் போனதும், "பெரிசா எதுவும் சாதிக்கல்லேப்பா. வடக்குலயே பயங்கர வாதம் படிப்படியாக் குறைஞ்சு போயிடுத்து. இப்ப கிட்டதட்ட ஒண்ணுமே இல்லேன்னு ஆயிடுத்து. தலைவர்கள்ளாம் செத்தாச்சு. மத்தவாள்ளாம் ஜெயில்ல. தப்பினவா சிதறிக் கிடக்கோம். நீங்க சொல்றது தாம்ப்பா சரி." என்றான்.

"காந்தி வழியைத்தானே சொல்றே?"

"ஆமாம்ப்பா. லெட்டர் குடுத்தனுப்பினேனே, அந்த ரங்கையாவை அப்புறம் நாங்க சந்திக்கவே இல்லே. அவன் என்ன ஆனான்னே தெரியல்லே."

"அவன் ஏதோ விவசாயிகள் போராட்டத்துல கலந்துண்டு ஜெயிலுக்குப் போனதா அவனோட அண்ணா எழுதி இருந்தார்" -

அவனுடைய அண்ணா யாரென்பதை அவனுக்கு அவர் சொன்னார்.

"அட! அது சரி, ரமணி எங்கே?"

"வெளியில போயிருக்கான். வர்ற நேரந்தான்."

"இப்ப சத்தியா நான் காங்கிரஸ்காரம்ப்பா..."

"வெரி குட். காந்தியை எப்பவாது சந்திச்சியா, அல்லது அவர் பேச்சையாவது கேட்டியா?"

"பம்பாய்ல காங்கிரஸ் ஹவுஸ்ல பார்த்தேம்ப்பா. என்னமாப் பேசறார் மனுஷன்! வெட்டு ஒண்ணு துண்டு ரெண்டுதான். எம் பேச்சுக்கு மறு பேச்சே கிடையாதுங்கறாப்ல ஒரு ஆணித்தரமான பேச்சுப்பா. நேரு அவரைப் பத்தி என்ன சொல்றாராம் தெரியுமா?"

"என்ன?"

"நேருவுக்கும் காந்திக்கும் பெரிய அளவில் அபிப்பிராய பேதங்கள் இருக்காம். அடிக்கடி வாக்குவாதம் வருதாம். ஆனா, 'எவ்வளவு மாறுபட்ட அபிப்பிராயம் எனக்கு இருந்தாலும் கடைசியில காந்திஜி



"ஆச்சர்யமாயிருக்கு [illegible], காத்திருக்கிற பேஷண்ட் ஒருத்தருக்கு இருதயம் வெளியில் இருக்கு!"

"அட! பத்து வருஷத்துக்கு முன்னாடி பாதி ஆபரேஷனில் தப்பிச்சு ஓடிட்ட பரமசிவம் திரும்பி வந்துட்டானா!"

— வேதபுரி எஸ். ரமேஷ்

)()()()()()()()()()()()()(

யோட பர்சனாலிட்டி என்னை ஜெயிச்சுடறது'ன்னு ஒரு தரம் சொன்னாராம்ப்பா. நேரு பெரிய இண்டெலெக்சுவல்னு பேரு. அவரே இப்படி மயங்கிப் பொத்துனு விழுந்தா நாமெல்லாம் எந்த மூலைக்குப்பா? அவர்கிட்ட ஏதோ ஒரு வசீகர சக்தி இருக்குப்பா. அந்தச் சிரிப்பு இருக்கே....! எப்பேர்ப்பட்ட முரடனும் அதுக்கு மசிஞ்சுடுவாம்ப்பா."

"அப்ப நீ மசிஞ்சுட்டே?"

"என்னை மறைமுகமா முரடன்கறேள்!"

**வி**சாலம் காப்பியுடன் வந்தாள். "இந்தாடா காப்பியைக் குடிச்சுட்டுக் கைகால் அலம்பிண்டு வா. கொஞ்ச நேரத்துல சமையல் பண்ணிடறேன். ரமணியும் வந்துட்டா, மூணு பேரும் சேர்ந்து உக்காந்து சாப்பிட்டுடலாம்" என்றாள்.

"உன் சமையல் சாப்பிடாம நாக்கு செத்துப் போயிடுத்து. மிளகு குழம்பு பண்ணேன்!"

விசாலம் உள்ளே போனாள்.

"மிஸ்டர் ராஜாராமன் ஆத்துல எல்லாரும் சவுக்கியந்தானேப்பா? அஞ்சனா மாமி? அமராவதி?"

"ம்ம்...."

கங்கா சட்டென்று தலை உயர்த்தி அவரைக் கவனித்தான். ராமசாமியின் முகம் இருண்டதாய் அவனுக்குப் பட்டது.

"அந்தப் பொண்ணு பவித்ரா கிட்டேருந்து கடுதாசி உண்டாமாப்பா?"

இப்போது ராமசாமி அவனைக் கவனித்தார். அவனது பார்வை தாழ்ந்திருந்தது. ஊஞ்சலை உந்தி உந்தி ஆட்டிக் கொண்டிருந்த கால்கட்டை விரல்கள் மீது பதிந்திருந்தது.

"லெட்டர் வந்து கொஞ்ச நாளாயிட்டாப்ல இருக்கு. அவா ஆத்துலயும் இந்த நிமிஷம் வரைக்கும் நாங்க கவலைப் பட்டுண்டிருந்த மாதிரி கவலைப் பட்டுண்டிருக்கா.... சரி. நீ போய்க் கை, கால் அலம்பிண்டு கொஞ்சம் ஓய்வெடுத்துக்கோ. அப்புறம் எல்லாம் பேசலாம்."

**வ**ட்டமேஜை மாநாடுகளின் முடிவு இந்தியாவை ஒரு கூட்டரசு - ஃபெடரேஷன் - ஆக்கும் நிலையை நோக்கிப் போவதான சாத்தியத்தை ஏற்படுத்தியதால், முஸ்லிம்கள் இந்துக்களின் ஆட்சிக்கு உட்பட நேரும் என்று நினைத்து பாகிஸ்தான் தேசிய இயக்கம் இப்போது மேலும் வலுப்பெற்றது.

*1937* இல் அந்தமான் சிறைச்சாலைக் கைதிகள் சிலர் மோசமான உணவு, படிக்கப் புத்தகங்கள் தராமை, மருத்துவ வசதி இன்மை ஆகியவற்றுக்கு எதிராய் உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கினர். இந்த உண்ணாவிரதம் 'ஐம்பத்திரண்டு நாட்கள் தொடர்ந்தது. அவர்களுள் நரேந்திரநாத் பானர்ஜியும் அவன் நண்பர்கள் மல்ஹோத்ரா, தீனதயாள், கிருஷ்ணாராவ் ஆகியோரும் இருந்தனர். சிலரின் நிலை கவலைக்கிடமாகவே, அவர்களுக்கு வலுக்கட்டாயமாக இரப்பர்குழாய்களில் மூக்கு வழியே உணவு செலுத்தப்பட்டது. அப்படியும், மகாவீர் சிங், மோஹித் மோய்த்திரா, மோகன் கிஷோர் ஆகியோர் இறந்தனர். மத்திய, மாகாணச் சட்டசபைகளில் இந்த விஷயம் விவாதிக்கப்பட்டது. அந்தமான் கைதிகளையெல்லாம் இந்தியாவுக்குக் கொண்டு வந்து விட வேண்டுமெனும் வலுவான கோரிக்கை நாடு முழுவதும் மக்களாலும், அரசியல் கட்சிகளாலும் விடுக்கப்பட்டது. ஊர்வலங்கள், கண்டனங்கள், கூட்டங்கள் மூலம் இது விடாமல் வற்புறுத்தவும் பட்டது. காந்திஜியும் இது பற்றிய கோரிக்கையை அரசுக்குச் சமர்ப்பித்தார். கொஞ்சங்கொஞ்சமாய்க் கைதிகளை இந்தியாவுக்கு அனுப்ப அரசும் ஒப்புக் கொண்டது. நரேந்திரநாத் தனது முறைக்காக ஆவலுடன் காத்திருக்கலானான்.

*1938* ஜனவரி *18* ஆம் நாளில் கிளம்பிய கடைசிக் குழுவில்தான் நரேந்திரநாத் பானர்ஜியும் அவன் நண்பர்களும் இடம் பெற்றார்கள். கடைசி நபராகத் தான் இடம் பெற்றது நிக்கல்சனின் கைங்கரியத்தால் என்று நினைத்து நரேந்திரநாத் பானர்ஜி மனத்துள் சிரித்துக் கொண்டான். இந்தியாவுக்குக் கடிதம் எழுத யாரும் அனுமதிக்கப்படவில்லை. 'அங்கு போய் எழுதிக் கொள்ளுங்கள்' என்று கூறிவிட்டார்கள், கடைசியில் அவனும் அவன் தோழர்களும் கல்கத்தா டம்டம் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டார்கள். அங்கே நரேந்திரநாத்துக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது.

(தொடரும்)

கங்கா, ராஜாராமனின் வீட்டுக்கு அடிக்கடி போய் வந்து கொண்டிருந்தான். 'அந்தப் பெண்' அவ்வீட்டில் தற்போது இல்லை என்பதால் விசாலம் அவனது போக்குவரத்துக்கு முகஞ்சுளிக்கவோ முணுமுணுக்கவோ இல்லை.

அந்த வீட்டில் யாருமே மகிழ்ச்சியாக இல்லை என்பதும், குறிப்பாக ராஜாராமன் எதையோ இழந்தவர் போன்று எப்போதும் ஏக்கத்துடன் காணப்பட்டார் என்பதும் கங்காவுக்குப் புதிராக இருந்தன.

ஒரு நாள் பேச்சுவாக்கில், "அப்பா, நான் கொஞ்ச நாள் சுதந்தரப் போராட்டத்துல ஈடுபட்டுட்டு அதுக்கு அப்புறமா ஒரு வேலை தேடிக்கிறதுல உங்களுக்கு ஒண்ணும் ஆட்சேபனை இல்லியே?" என்று கங்கா கூச்சப்பட்டுக் கொண்டே ராமசாமியிடம் வினவிய போது அவர் சிரித்தார்.

"அதெல்லாம் முழுக்க முழுக்க உன்னோட சௌகரியம், கங்கா. நீ பத்திரமாத் திரும்பி வந்தது ஒரு சந்தோஷம். காந்தியவாதியானது ரெண்டாவது சந்தோஷம். இப்ப சத்தியா எங்களோட இருந்துண்டிருக்கிறது மூணாவது சந்தோஷம். போதாதா? இதுக்குமேல எதிர்பார்க்கிறது பேராசை!"

"நாமதான் காந்தியம் - காந்தியம்ங்கறோம். ஆனா போன வருஷம் காங்கிரஸ் மகாசபைத் தலைவரா சுபாஷ் சந்திர போஸைத் தேர்ந்தெடுத்தவா இந்த வருஷமும் அவரையே தேர்ந்தெடுத்துட்டாளே. காந்திக்கு அதுல இஷ்டமே இல்லியாமே?"

"ஆமா, சுபாஷோட ஆவேசம், சுதந்திரத்தை அடிச்சுப் பிடிச்சுத்தான் வாங்க முடியும்கிற எண்ணம் இதெல்லாம் அவருக்குப் பிடிக்காத விஷயம். அதான் ரெண்டாவது தடவையும் அவர் போட்டி போடப் போறதா அறிவிச்சதும், போட்டியே இல்லாம அபுல் கலாம் ஆஸாதைத் தேர்ந்தெடுக்கணும்கிற ஆசையைக் காந்தி வெளியிட்டார். சுபாஷ் விலகிக்கல்லே. ஆனா, ஆஸாத் கௌரவமா விலகிண்டுட்டார். அப்புறம் காந்தி தன்னோட சார்பில் பட்டாபி சீதாராமய்யாவைப் போட்டி போடவெச்சார். ஆனா பட்டாபி தோத்துட்டார். சுபாஷ் ஜெயிச்சுட்டார்! 'பட்டாபியின் தோல்வி என்னோட தோல்வி'ன்னு காந்தி பகிரங்கமா அறிக்கையே விட்டார்."

"பட்டாபியோட தோல்வியால காந்தி அப்படியே ஒடிஞ்சு போயிட்டாராமே?"

"ஆமா. காங்கிரஸ்காராளுக்கே ஏண்டாப்பா சுபாஷைத் தேர்ந்தெடுத்தோம்னு தோண ஆரம்பிச்சுடுத்து. உலகப்போர் ஆரம்பிக்க இருந்ததை சுபாஷ் பிரிட்டனுக்கு எதிராப் பயன்படுத்திக்கத் திட்டம் போட்டு வெளிப்படையாவே பேச ஆரம்பிச்சார். பிரிட்டனுடைய அணிக்கு எதிரா இருந்த இத்தாலி, ஜெர்மனி, ஜப்பான் இந்த நாடுகளுடைய ஆதரவைப் பெறணும்னு அவர் சொன்னது காந்திக்குப் பிடிக்கல்லே. எதிரியோட கஷ்டத்தை நாம ஆதாயப்படுத்திக்கக் கூடாதுங்கிற கொள்கை உள்ளவராச்சே. அதனால, எப்ப தனக்கு செல்வாக்குக் குறைஞ்சுடுத்தோ இனி காங்கிரசோட நடவடிக்கைகள்ளேருந்து முழுக்க முழுக்க விலகிக்கறேன்னுட்டாரே. அதுல சுபாஷ்க்கே சம்மதமில்லியே. என்னதான் காந்தியோட ஆள் தோத்துட்டாலும், காந்தியோட பக்கபலம் இல்லாம தன்னால எதை

ஜோதிர்லதா கிரிஜா

மணிக்கொ



யும் சாதிக்க முடியாதுங்கிறது அவருக்கு நன்னாத் தெரியும்."

"கடைசிலே வேற வழி தெரியாம, சுபாஷ் சந்திரபோஸ் காங்கிரஸ்லேருந்து விலகி ஃபார்வேர்ட் ப்ளாக்னு புதுக் கட்சி ஆரம்பிச் சுருக்காரே, அது காங்கிரஸ் அளவுக்குப் பெரி சாகும்னு நீங்க நெனைக்கிறேளாப்பா?"

"எதுவும் சொல்ல முடியாது, கங்கா. எம். என். ராய் தெரியுமில்லியா உனக்கு?"

"கம்யூனிஸ்ட் ராயைத்தானேப்பா சொல் றேள்?"

"ஆமா. அவர் வேற 'ரேடிகல் டெமாக் ரடிக் பார்ட்டி'ன்னு ஒரு புதுக் கட்சியைக் காங்கிரஸ்லேருந்து சிலரைப் பிரிச்சு உண் ட்டாக்கி இருக்கார். இதெல்லாம் எங்க கொண்டு போய் விடுமோ தெரியல்லே.

அப்போது. ஆமா? அவாத்துப் பொண்ணு பவித்ராவைப் பத்தி என்னமோ பேசிக்கிறாளே?''




என்றவாறு அங்கு வந தாள் விசாலம்.

கங்கா கண்களை மலர்த்தி, "ஊர்ல என்ன பேசிக்கிறா பவித்ரவைப் பற்றி?" என்று கேட்டான்.

"இங்கே இல்லாத காங்கிரஸ் கட்சியா? வடக்கே போய்தான் சேவை செய்யணுமா? அந்தப் பொண்ணு யார் கூடவோ ஓடிப் போயிடுத்து; அதை மறைக்க காங்கிரஸ் சேவைன்னு கதை கட்டி விட்டிருக்கான்னு பேசிக்கிறா" என்றாள் விசாலம்.

# 59

கங்கா கோபத்தைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு ராமசாமியின் பக்கம் பார்த்தான். அவரும் சொல்லிவைத்தாற் போல் அவனைப் பார்த்தார். அவன் வாயைத் திறப்பதற்கு முன்னால் அவர் முந்தினார்.

"இத பாருக்கா. பிறத்தயாரைப் பத்தி அவ தூறு பேசறது ரொம்பத் தப்பு. அந்த அவ தூறைக் கேக்கறது அதைவிடத் தப்பு. ஏன்னா, கேக்கறவா இருக்கிறதுனாலதானே பேசறா?"

ராமசாமியினுள் எதுவோ சிதறிக் கொண் டிருந்தது. நடந்து முடிந்து விட்ட கோரம் தெரியவரின் கங்கா எவ்வளவு அதிர்ந்து போவான் என்ற நினைப்பால் அவரது வயிற் றில் அமிலம் ஊறியது. 'அந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு நினைச்சிருக் கான். இவனைக் காட்டிலும் அது அதிகமாப் பிரியம் வெச்சிருந்திருக்குன்னுதான் அன் னிக்கு ராஜாராமய்யர் சொன்னதைக் கேட்டதும் நினைக்கத் தோணித்து. பாவம் அந்தப் பொண்ணு....' - ராமசாமியின் உள்ளம் மகனைவிட அந்தப் பெண்ணுக்காக அதிகம் உருகியது.

“ஊர்ல பேசிக்கிறதை நான் சொன்னேன். நானாவா இட்டுக் கட்டிப் பேசினேன்.? அதுக்கு எதுக்குடாப்பா உங்க ரெண்டு பேருக்கும் இப்படிப் பொத்துண்டு வருது? ரொம்ப நன்னாருக்கு.”

விசாலம் வலத்தோளை உயர்த்தி அதில் முகவாயை இடித்துக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

கடந்த சில மாதங்களாகவே விசாலம் கங்காவின் கல்யாணப் பேச்சை அவன் இல்லாத போது ராமசாமியிடம் எடுத்திருந்தாள். பவித்ரா பற்றிய சேதி அறிந்தவராக இருந்ததால் அவனிடம் அது பற்றிப் பேசுவதில் அவருக்கு ஒரு தயக்கம் ஏற்பட்டிருந்தது. எனினும் தக்க நேரத்துக்குக் காத்துக் கொண்டிருந்தார்.

கொஞ்சங் கழித்து, “அவாத்து மனுஷான்னாலே இந்த அத்தைக்கு ஒரு இளக்காரந் தாம்ப்பா,” என்றான் கங்கா. அவனது குரலில் ஒரு மனத்தாங்கலும் கசப்பும் விரவி நின்றன.

“ஒண்ணை நீ ஞாபகம் வெச்சுக்கணும், கங்கா. உங்க அத்தை படிக்காதவ. படிக்காத பொம்மனாட்டிகளுக்கு மனசு அவ்வளவு தான். புருஷாளுக்கே இந்த மாதிரி வம்பு பேசற வழக்கமெல்லாம் இருக்கு. எங்க காங்கிரஸ் கூட்டத்துல இருக்கிறவா கிட்டவே நான்தான் பார்க்கறேனே!”

அஞ்சனாவையும் தம்மையும் தொடர்பு படுத்திக் கிளம்பிய வம்புப் பேச்சு, மொட்டைக் கடிதம், குஞ்சம்மாவின் அழுகை எல்லாம் வரிசையாக அப்போது அவருக்கு ஞாபகம் வந்தன.

மேலும் சில வினாடிகள் மௌனமாய்க் கழிந்தன. தக்கநேரம் என்ற ஒன்று தானாக வருமென்று காத்துக் கொண்டிருப்பதற்குப் பதில் அதைத் தாமாக ஏற்படுத்திக் கொண்டால்தானென்ன என்ற எண்ணம் திடீரென்று அவருக்கு வந்தது.

“கங்கா, உங்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்.”

“என்னப்பா?” என்றான் பக்கவாட்டில் முகந்திருப்பி.

“உன் கல்யாண விஷயந்தான்.”

“எங் கல்யாணத்துக்கு இப்ப என்னப்பா அவசரம்?”

“நான் கலியாணம் பண்ணிண்ட வயசோட ஒப்பிட்டா உனக்கு வயசாச்சு, கங்கா! கல்யாணம்னதும் எல்லாருமே....”

“ஒரு நிமிஷம்ப்பா. கல்யாணம்னதும் எல்லாருமே உடனே சொல்ற பதில்தான் அப்படின்னுதானே சொல்ல வந்தேள்? எனக்கு அந்தத் தயக்கமெல்லாம் கிடையாதுப்பா.



ஆச்சு. கூடிய சீக்கிரம் நம்ம நாட்டுக்குச் சுதந்திரம் கிடைச்சுடும்னுதான் தோணறது. பாரதமாதாவுடைய கைவிலங்கை முறிச்சுட்டு அதுக்கு அப்புறம் நான் கால் விலங்கு - அதாவது கால்கட்டுப் போட்டுக்கறேம்ப்பா. அது வரைக்கும் அந்தப் பேச்சே வேண்டாம். ப்ளீஸ். என்னைப் புரிஞ்சுக்குங்கோ.”

ராமசாமி சன்னமாகப் பெருமூச்சுடன் அந்தப் பேச்சுக்கு ஒரு தற்காலிக முற்றுப் புள்ளி வைத்தார். இருவருடைய உரையாடலும் நின்றுவிட்டாலும் ஊஞ்சல் மட்டும் கிறீச்சிட்டுக் கொண்டிருந்தது.

சிறிது நேரம் சென்று, “கங்கா! ஜெயிலில் உனக்கு எந்தவிதமான கொடுமையும் நடக்கல்லேன்னு நீ சொன்னது பொய்தானே? என்னோட மன நிம்மதிக்காகத்தானே அப்படிச் சொன்னே?” என்று கேட்டார் ராமசாமி.

“அதைத் தெரிஞ்சுண்டு இப்ப என்னப்பா பண்ணப் போறேள்?”

“ஒரு கவலைதாண்டா. இங்க பெல்லாரி ஜெயிலில் என்ன அக்கிரமங்கள் பண்ணிருக்கா தெரியுமோ? பயங்கரம். அண்டர் வேரோட நிக்க வெச்சு அடிச்சிருக்கா. அப்படி நிக்க முடியாதுன்னவாளை ரெண்டு மடங்கு அடிச்சு நொறுக்கி இருக்கா. சிறைக் கதவைத் தாண்டிண்டு சின்ன ஓடை மாதிரி ரத்தம் வெளியில ஓடியிருக்குன்னா பாத்துக்

கயேன்!''

"அந்த அளவுக்கு அலிப்பூர் ஜெயிலில் எங்க பேட்ச்சுக்கு எதுவும் நடக்கல்லேப்பா. ஆனாலும் கொடூரமாத்தான் நடத்தினா. அதையெல்லாம் எதுக்குப்பா இந்த நல்ல வேளையில நினைக்கணும்? விடுங்கோ."

ராமசாமி பேசாதிருந்தார்.

''காந்தியைப் பற்றிச் சொல்லுங்கோ, அப்பா! எப்பேர்ப்பட்ட மனுஷன்! அவர் சிரிப்பிலே ஒரு தெய்விகம். ஒரு தாய்க்குரிய அரவணைப்பு, அதே சமயம் தந்தைக்குரிய கண்டிப்பு.... நமக்குச் சுதந்திரம் கிடைச்ச பிறகும் நமக்கு வழிகாட்ட அவர் நீண்ட காலம் இருக்கணும்....''

''காந்தி மட்டுமில்லாம, வேற சில மகான்களாலேயும் சில அற்புதங்கள் இங்க கொஞ்ச காலமாவே நடந்துருக்குடா. ராஜா ராம் மோகன்ராய், வீரேசலிங்கம் பந்துலு, ஜஸ்டிஸ் ரானடே தம்பதிகள், லூயி விவியன் டெரோஸியோ, நாராயண குருப், ராமலிங்க அடிகள், ராமகிருஷ்ண பரமஹம்சர், விவே கானந்தர், பக்ருத்தீன் தியாப்ஜி, மீர்ஸா குலாம் அகமத், சுவாமி தயானந்தர், சுவாமி சிரத்தா னந்தர் இப்படி அடுக்கிண்டே போகலாம். இதெல்லாம் மட்டுமில்லாம, சீக்கியர்கள் பார்சிகள் இவாள்ளயும் மதச் சீர்திருத்த இயக்கம் ஏற்பட்டுது. நீ கவனிச்சா ஒண்ணு தெரியும். போன நூற்றாண்டுலேருந்தே இந்தி யாவைப் பல வழிகள்ளயும் தூக்கி நிறுத்த றதுக்கான முயற்சிகளைப் பல பெரியவா செஞ் சுண்டு வந்திருக்கா. நாடு முழுக்க, கிட்டத் தட்ட எல்லா ராஜதானிகள்ளேயும் இது மாதிரி சமூக சீர்திருத்தவாதிகள் தோணி இருக்கான்னா அது எப்பேர்ப்பட்ட ஆச்சரி யம்? எவ்வளவு பெருமையான விஷயம் நம்ம இந்தியாவுக்கு?''

கங்கா சிரித்தான். "இதுல பெருமைப் படறதுக்கு என்னப்பா இருக்கு? நம்ம சீரழி வைத்தான் இவாளோட பிறப்பும் உழைப்பும் காட்றதுன்னு நான் நினைக்கிறேன். அடி யோட சாஞ்சு விழுந்து கிடந்த இந்தியாவைச் சமூக ரீதியிலயும், மத ரீதியிலயும் தூக்கி நிறுத்த இத்தனை பெரியமனுஷா இங்க பிறந்து தொண்டு செஞ்சாக வேண்டிய நிர்ப் பந்தம் ஏற்பட்டிருந்திருக்குன்னுதான் அதுக்கு அர்த்தம். அரசியல் ரீதியில் தூக்கி நிறுத்த காந்தி வந்திருக்கார். நீங்க சொல்றாப்ல அவர் சமூக ரீதியிலயும் இந்தியாவுக்குத் தொண்டு செஞ்சிண்டிருக்கார். மனுஷா மோசமான நிலையில இருக்கிற நாடுகள்ளதான் மகான் கள் பிறக்கிறா!''

கங்காவின் வாதங்களில் இருந்த நியா யம் அவரை வாயடைக்கச் செய்தது.

"ராஜா ராம்மோகன் ராயோட அண்ணா பொண்டாட்டியை - அவளுக்கு இருபது வயசுக்குள்ளதான் இருக்குமாம் - அவரோட அண்ணா செத்ததும் அவரோட சேத்துக் கொளுத்தறதுக்காக அவளைப் பலவந்தமாப் பாடையில வெச்சிருக்கா. தீ மூட்டினதும் சூடு பொறுக்கமாட்டாம அந்தப் பொண்ணு அலறிண்டு எழுந்துருக்கு. அவளை மறுபடி யும் அழுத்தி எரிச்சுட்டாளாம். மன்னி மேல ராஜா ராம்மோகன் ராய்க்கு ரொம்பப் பிரி யம். ஆனா சின்னப் பையனான அவரால் எதுவுமே பண்ண முடியலே. சதியை ஒழிக்க ணும்கிறது அன்னிக்கு அவர் மனசில விழுந்த தீர்மானமாம். இது உங்களுக்குத் தெரிஞ்சிருக்கலாம். ஆனா இன்னொரு விஷயம் உங்களுக்குத் தெரிஞ்சிருக்காதுன்னு நினைக்கிறேன். பெங்கால்ல கொஞ்சநாள் இருந்ததுனால தெரிய வந்த விஷயம்."

"என்ன?''

"ஒரு பொண்ணை அவ புருஷனோட சேர்த்து இப்படி எரிச்சதும், அவளுக்குச் சொந்தமான நகைகள்ளாம் யாருக்குச் சொந் தம்னு ஒரு கேள்வி கிளம்பித்தாம். எனக்கு, உனக்குன்னு எல்லாரும் சண்டை போட்டுப் பாளோல்லியோ? புரோகிதர்கள் அதுக்குச் சாமர்த்தியமா ஒரு வழி கண்டுபிடிச்சா. என் னன்னு ஊகிக்க முடியறதா பாருங்கோ.''

சில விநாடிகள் யோசித்தபின், "தெரி

யல்ல'' என்றார் ராமசாமி.

''இதுமாதிரி கணவனோட்ட சேர்த்து எரிக்கப்படற பொண்ணுக்குச் சொந்தமான நகை நட்டுகள்ளாம் இறுதிக் காரியம் பண்ற புரோகிதருக்நச் சொந்தம்னுட்டா!''

''அட, கண்றாவியே. கேக்கறதுக்கே நாராசமான்னா இருக்கு?''

''நாராசமாத்தான் இருக்கு. ஆனா அதுதான் உண்மை. அப்பா, வெள்ளைக்காரங்களுக்கு நாம அடிமைப் பட்டுக் கிடக்கிறது கேவலம்னாலும், அவனால இந்த நாட்டுக்கு எத்தனையோ வழிகள்ள விமோசனங்கள் ஏற்பட்டிருக்குங்கிறதை நாம மறுக்கலாமா? சதியை ஒழிக்கறதுக்கு ராஜா ராம்மோகன் ராய்க்கு வைசிராய் வில்லியம் பென்டிங்க் எவ்வளவு ஒத்துழைப்புக் குடுத்துச் சட்டமே கொண்டு வந்தார்! தங்கிட்ட வேலை செய்யறதுக்குக் கிளார்க்குகள் வேணும்கிறதுக்காக அவா நமக்கு இங்கிலீஷ கத்துக் குடுக்க முன்வந்தான்னாலும், அதனால நாம எவ்வளவு பயனடைஞ்சிருக்கோம்? ஆங்கிலம் மூலம் சரித்திர நிகழ்ச்சிகளை நாம தெரிஞ்சுக்க நேர்ந்ததுனாலயே கூட நமக்குச் சுதந்திர உணர்ச்சி அதிகமாச்சுன்னும் சொல்லலாம். இல்லியா?''

''நீ சொல்றதுலயும் ஒரு பாய்ண்ட் இருக்கு, கங்கா,'' என்றார் ராமசாமி.

## 60

புரட்சியாளர்க்கும் போலீசாருக்குமிடையே நடந்த சண்டையில் கைதான தங்கம் கல்கத்தா பிரசிடென்சி சிறைச்சாலையில் ஏனைய பெண் கைதிகளுடன் வைக்கப்பட்டாள். பவித்ராவின் மறைவு அவளை விவரிக்க இயலாத அளவுக்குக் கலக்கி இருந்தது. அமராவதியின் பிரசவ அறையில் உடனிருந்து குழந்தை பவித்ராவை முதன் முதலாய்க் கையில் ஏந்தியவள் தங்கந்தான். குழந்தை குட்டி இல்லாத அவளுக்குப் பவித்ரா கடவுள் கொடுத்த வரம் என்பதாக ஒரு பரவசம் இருந்து வந்தது. அதனால்தான் பிடிவாதக் காரியான அவள் புரட்சி, அது, இது என்று சொல்லிக் கொண்டு கிளம்ப முற்பட்ட போது அவளுக்கு அருகே இருந்து அவளைக் கவனித்துக் கொள்ளும் நோக்கத்துடன் - அஞ்சலையம்மாவின் உதாரணத்தைச் சொல்லிக் கொண்டு - அவளும் புறப்பட்டு விட்டாள். பெரும் பாலும் அவளது பராமரிப்பிலேயே பவித்ரா வளர்ந்ததால் ஒரு பெற்ற தாய்க்கு ஈடான பாசத்தைத் தங்கம் அவள் மீது கொண்டிருந் தாள். அவளது மறைவு தங்கத்துக்குத் தாங்க முடியாத அதிர்ச்சியாக இருந்தது.

பவித்ராவின் வீட்டாருக்குத் தகவல் போயிற்றா என்பது பற்றி அவளுக்கு ஏதும் தெரியவில்லை. ஆனால் அவர்களுக்கு அது தெரியாமலிருப்பதே நல்லதென்றுதான் இவள் நினைத்தாள். சக பெண் கைதிகளுடன் பவித்ராவைப் பற்றிப் பேசுவதும் அழுவதும் புலம்புவதுமே பெரும்பாலும் அவளது பொழுது போக்காக இருந்து வந்தது. அந்தக் கட்டத்தில்தான் அந்தமான் சிறைச்சாலையில் அடைபட்டுள்ள அரசாங்கக் கைதிகள் கல்கத்தா டம்டம் சிறைச்சாலைக்குக் கடந்த சில நாட்களாய்க் குப்பல் குப்பலாய்க் கொண்டு வரப்பட்டுள்ளனர் எனும் செய்தி அவள் காதுகளில் விழுந்திருந்தது. உடனே அவளுக்கு அமராவதியம்மாவின் தாலிகட்டாத புருசன் நரேந்திரநாத்தின் ஞாபகந்தான் வந்தது. தொடக்க காலத்தில் அவன் பற்றிய உண்மைகளை அவர்கள் மறைத்து வைத்திருந்தாலும், பின்னர் அவர்கள் வீட்டிலேயே நிலையாகத் தங்கத் தொடங்கிவிட்ட பிறகு தங்கள் குடும்பத்தில் ஒருத்தியாகவே அவளைக் கருதி, 'நாராயணா' என்று அவர்கள் கூப்பிட்ட இளைஞனின் பெயர் உண்மையில் நரேந்திரநாத் பானர்ஜி என்பதையும், அவனைப் பற்றிய மற்ற விவரங்களையும் அவளுக்குச் சொன்னார்கள். அவளைப் பொறுத்த வரை 'நரேன் தம்பி' என்றுதான் குறிப்பிடுவாள். இப்போது அந்தமானிலிருந்து வந்துள்ள கைதிகளில் அவனும் கட்டாயம் இருப்பான் என்று நினைத்தாள்.

நரேந்திரநாத் பானர்ஜி தமிழ் எழுதப் படிக்கக் கற்றதை அவள் அறிந்திருந்ததால் அவனுக்குக் கடிதம் எழுதியனுப்பத் தீர்மானித்தாள். அவளுடைய சக பெண் கைதிக்கு டம்டம் சிறையில் காதலன் இருந்தான். அவனுக்கு அவள் ஓர் ஆள் மூலம் கடிதம் கொடுத்து அனுப்பிவரும் செய்தி தெரிய வர, அவளைப் பயன்படுத்திக் கொள்ள அவள் தீர்மானித்தாள். அவள் மூலம் அந்த ஆளின் உதவியால் டம்டம் சிறைச்சாலை யில் ஒரு கை இல்லாத, நரேந்திரநாத் எனும் பெயருள்ள, அந்தமான் கைதி ஒருவன் இருப்பதாய்க் கேட்டுத் தெரிந்து கொண்டதும், அவளுள் பரபரப்பு ஏற்பட்டது.

(தொடரும்)



''அம்மாவுக்கு ஆறு நாளா நீ சாப்பாடே போடலையாமே?''
''நீங்கதானே மாசக் கடைசி... கொஞ்சம் சிக்கனமா இருன்னு சொன்னீங்க...!''
- எஸ். எஸ். பூங்கதிர்

# மணிக்கொடி

**கொ**ஞ்சம் கொச்சையான தமிழில் இருந்த அந்தக் கடிதம் தெரிவித்த செய்தியை நரேந்திரநாத் பானர்ஜியால் செரிக்க முடியவில்லை. 'பவித்ரா புரட்சிக்காரங்களோட நடந்த சண்டையில செத்துப் போயிடிச்சு. அவங்க வீட்டுக்குத் தகவல் போச்சா இல்லியான்னு எனக்குத் தெரியாது. நான் அதோட துணைக்கு இங்க வந்தேன். நானும் மாட்டிக்கிட்டு இப்ப பிரசிடென்சி ஜெயில்ல இருக்கேன். நமக்கெல்லாம் எப்ப விடுதலையோ தெரியல்ல. கூடிய சீக்கிரம் காந்தி சிறைக்கு வந்து நம்மோட பேசப் போறாருன்னு தெரியுது. அவரு சொல்ற வழிதான் நல்லதுன்னு என் கண்ணு பவித்ராவைப் பறிகுடுத்ததுக்குப் பெறகுதான் தெரியுது. எனக்கே இப்படி இருக்குதே, பெத்த உங்களுக்கு எப்படி இருக்கும்?' - தங்கம் அந்த அதிர்ச்சியான சேதியைத் தனக்குச் சொல்லாமலே இருந்திருக்கலாம் என்று நரேந்திரநாத் பானர்ஜிக்குத் தோன்றியது.

முந்தைய வாரந்தான் அமராவதியிடமிருந்து அவனது கடிதத்துக்குப் பதில் வந்திருந்தது. பவித்ரா கல்கத்தாவில் - அல்லது வேறு இடத்தில் அவனைப் போன்றே சிறைப்பட்டிருக்கக்கூடும் என்று அவள் எழுதி இருந்தாள். 'அவளுக்கு விஷயமே தெரியாதா, இல்லாவிடில் எனக்குத் தெரியவிடாமல் மறைக்கிறாளா?' கல்கத்தாவுக்குப் புறப்பட்டு வந்து ஜெயிலில் அவனை ஒரு முறையேனும் பார்க்க விரும்புவதாய் அவள் எழுதி இருந்தாள். தீவிரவாதிகளுக்குப் பார்வையாளரோடு சந்திப்பு அனுமதிக்கப்படுவதில்லை என்று அவன் அவளுக்கு எழுதிப் போட்டான்.

தங்கத்திடமிருந்து வந்த கடிதத்தின் வாசகம் - பவித்ரா புரட்சிக்காரங்களோட நடந்த சண்டையில செத்துப் போயிடிச்சு... - திரும்பத் திரும்ப அவன் மண்டையைப் பிளந்து விடுகிறாப்போல் காதுகளுள் சுற்றிச் சுற்றி ஒலித்தது. அன்று சென்னையில் கப்பலுக்குள் கங்காதரனோடு சிரித்துப் பேசிக் கொண்டு நின்ற பவித்ரா அவன் கண்களுக்குள் திரும்பத் திரும்ப வந்தாள். அவனது சதைகள் அதிர்ந்தன. கண்ணீர் திமிறிப் புறப்பட்டுத் துளித் துளியாய் உதிர்ந்தது.

**ஏ**ப்ரல் மாதம் பதினோராந் தேதியன்று காந்தியடிகள் டம்டம் சிறைச்சாலைக்கு வருகை தந்து கைதிகளின் கூட்டத்தில் பேசினார். அந்தச் செப்பு நிற உடம்பிலும், பொக்கை வாய்ச் சிரிப்பிலும் நரேந்திரநாத் பானர்ஜி உள்ளம் பறிகொடுத்தான்.

'பயங்கரவாதத்தால் எந்தப் பயனும் இல்லை. நமக்கும் நாம் எதிர்த்த எதிரிகளுக்குமிடையே நிரந்தரமான மனக்கசப்பு மட்டுமே அதனால் மிஞ்சும். நான் சொல்லுகிற வழியில் வெற்றி காண்பதில் தாமதம் ஏற்படலாம். ஆனால் அந்த வெற்றி நிலையானது. எதிரியையும் வெற்றி கொண்டு நண்பனாக்கி நாளைக்கு நமக்கே அவனை உதவ வைப்பது. பலாத்காரத்தால் விளையும் நிரந்தரப் பகை என்பது இதில் அறவே இல்லை. உயர்ந்த இலக்குகளையடையும் வழியும் உயர்ந்ததாக இருப்பதில்தான் மனிதனின் சிறப்பு இருக்க முடியும். கெட்டவர்களின் மனத்தை அன்பால் கவர முயல வேண்டும்....'

ஒரு கைதி குறுக்கிட்டுக் கேள்வி கேட்டான் : 'கீதையில் கிருஷ்ண பரமாத்மா வேறு மாதிரியாகச் சொல்லுகிறாரே? நியாயத்தை நிலைநாட்ட உறவினர்கள், ஆசிரியர்களையெல்லாம் கூட அடித்து நொறுக்கலாம், தப்பில்லை என்கிறாரே?"

"அவர் கிருஷ்ணர், பரமாத்மா என்று நீங்களே சொல்லி விட்டீர்களே. அவர் வேறு மாதிரிதான் சொல்லுவார்."

"அவர் பரமாத்மா. நீங்கள் மகாத்மா."

கைதிகள் சிரித்தார்கள். ஆனால் காந்தியடிகளுக்குச் சிரிப்பு வரவில்லை.

"நான் வெறும் துராத்மா. எனக்கு தெரியாத்தனமாக மகாத்மா என்று பட்டம் கொடுத்து விட்டார்கள். நான் ஒரு சாதாரண ஆள். மகாத்மா என்று நீங்கள் அடைமொழி இட்டு அழைப்பதை நான் விரும்பியதே இல்லை. ஏனெனில் அது உங்களுக்கும் எனக்குமிடையே ஒரு பெரிய இடைவெளியை உண்டாக்கி விடுகிறது. நான் ஏதேனும் செய்யச் சொன்னால், 'அய்யா, எங்க

ஜோதிர்லதா கிரிஜா

ளால் முடியாது. உங்களால் முடிகிறதென்றால் அதற்குக் காரணம் நீங்கள் மகாத்மா, நாங்களோ சாதாரணமானவர்கள் என்று கூறித் தப்பித்துக் கொள்ளப் பார்க்காதீர்கள். என்னால் எது முடியுமோ - செய்ய முடிந்திருக்கிறதோ - அதை மட்டுமே உங்களையும் செய்யச் சொல்லி நான் கெஞ்சுகிறேன் என்பதை மறவாதீர்கள். கூடிய விரைவில் உங்களையெல்லாம் விடுவித்து விடச் சொல்லி வைசிராயிடம் கேட்டிருக்கிறேன். விடுதலையாகி வெளியே வந்ததும் பழைய பயங்கரவாதப் பாதையில் போகாமல் எங்கள் சத்தியாக்கிரகத்தில் கலந்து இந்தியாவின் விடுதலைக்காகப் போராடுவீர்கள் என்று நம்புகிறேன்...''

காந்தியடிகளின் கனிவான, உணர்ச்சிமயமான பேச்சால் பெரிதும் பாதிக்கப்பட்ட ஒரு புரட்சியாளன், ''மகாத்மாஜி! என்னைப் பொறுத்தவரையில் இனி வன்முறை என்ற சொல்லுக்கே என் வாழ்க்கையில் இடமில்லை இது சத்தியம்'' என்று முகத்து நரம்புகள் புடைக்க, ஆவேசத்துடன் அங்கிருந்த மேசை மீது ஓங்கித் தட்டினான்.

"உன்னுடைய இந்த முடிவை - வன்முறையைக் கைவிட்டு விட்டதான அறிவிப்பை - இவ்வளவு வன்முறையோடு மேசை மீது ஓங்கி அடித்துத்தான் சொல்ல வேண்டுமா?" என்று காந்தியடிகள் வினவ, அங்கே சிரிப்பொலி கிளம்பியது.

நரேந்திரநாத் பானர்ஜியின் செவிகளில் காந்தியடிகளின் சுருக்கமான ஆனால் அழுத்தம் திருத்தமான - பேச்சு வெகு நேரம் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

## 61

**போ**லந்தின் மீது ஜெர்மனி படை எடுத்ததும், போலந்தின் நேச நாடுகளான பிரிட்டனும் பிரான்சும் ஜெர்மனிக்கு எதிராய்ப் போர் முழக்கம் செய்தன. முதலில் நடுநிலைமை வகித்த இத்தாலியும் ஜப்பானும் போரில் ஜெர்மனியின் பக்கம் சேர்ந்தன.

காங்கிரசின் அதிகார பூர்வமான அறிக்கை, 'யாரைக் கேட்டு நீ இந்தியாவை இந்தப் போரில் ஈடுபடுத்தினாய்? நாங்கள் ஜெர்மனி, இத்தாலி நாடுகளை ஆதரிக்கவில்லை. ஆனால் உன்னையும் எங்களால் ஆதரிக்க முடியாது' என்ற ரீதியில் சொல்லமைப்பைக் கொண்டிருந்தது. இந்தியாவின் சம்மதம் இல்லாமல் இந்தியாவைப் போரில் ஈடுபடுத்த முற்பட்ட பிரிட்டனின் அதிகப் பிரசங்கித்தனத்தைக் கண்டிக்கும் வகையில் அது இருந்தது.

அதுமட்டுமின்றி, இந்திய சுதந்திரம் பற்றிய உத்தரவாதம் தரப்பட வேண்டும் என்பதையும் அது திட்டவட்டமாக அறிவித்தது.

இதற்கிடையே ஜனாப் ஜின்னாவும் தமது பங்குக்கு ஓர் அறிக்கை வெளியிட்டார். முஸ்லிம்கள் பெரும்பான்மையில் வாழும் பகுதிகளைப் 'பாகிஸ்தான்' எனும் பெயரால் பிரிக்க வேண்டுமென்பதே அது!

**ல**ண்டனில் 1940 மார்ச்சு மாதம் இங்கிலாந்தைக் குலுக்கிய ஒரு நிகழ்ச்சி நடந்தது. 1919- ஆம் ஆண்டில் இந்தியாவில், பஞ்சாபில் ஜாலியன்வாலாபாக் படுகொலைக்குக் காரணமாக இருந்த பஞ்சாபின் கவர்னர் மைக்கேல் ஓட்வெர் என்னும் வெள்ளைக்காரரை - இங்கிலாந்தில் இப்போது ஓர் அரசியல்



பிரமுகராக இருந்தவரை - அப்படுகொலையைக் கண்ணால் பார்த்துப் பழிவாங்கும் சபதத்தைத் தன் பன்னிரெண்டாம் வயதில் செய்திருந்த - உதாம் சிங், காக்ஸ்டன் ஹால் எனுமிடத்தில் அவர் சொற்பொழிவாற்றி விட்டு அமர்ந்ததும் ஒரே குண்டால் சுட்டு வீழ்த்தி விட்டான். ஜெனரல் டைர் எப்போதோ செத்து விட்டிருந்தான். சுட்டுக் கொன்றதும் உதாம்சிங் தப்பி ஓட முயலவே இல்லை. ஜாலியன்வாலாபாக் படுகொலைக்கு அங்கீகாரம் அளித்துப் படையனுப்பிய மைக்கேல் ஓட்வெரைக் கொன்றது குறித்துத் தான் மகிழ்ச்சியடைவதாக அவன் அறிவித்தான். பத்து ஆண்டுகளுக்கு முன்னால் தூக்கிலிடப்பட்ட தன் நண்பன் பகத்சிங்கைச் சந்திக்கவே தான் போவதாகத் தூக்கிலிடப்படுமுன் அவன் அறிவித்தான். 'என் பெயர் உதாம்சிங் இல்லை. என் பெயர் ராம் முகம்மது சிங் ஆஜாத் என்பதாகும்'' என்று - இந்தியாவின் முக்கியமான மதங்களின் ஒற்றுமையைக் குறிக்கும் வண்ணமாக - தனது பெயரை அவன் சொன்னான். ஆயினும் காந்தியடிகள் அக் கொலையைக் கண்டித்தார்.

அதே ஆண்டு மே மாதம் சர் வின்ஸ்டன் சர்ச்சில் இங்கிலாந்தின் பிரதம மந்திரியானார். 'ஓர் அரை நிர்வாணப் பக்கிரி, சரிக்குச் சரியாக இங்கிலாந்தில் இந்திய வைசிராயுடன் அமர்ந்து உரையாடுவது பற்றிய கற்பனை கூட எனக்குச் சகிக்கவில்லை' என்று அன்றொரு நாள் கூறிய அதே வின்ஸ்டன் சர்ச்சில்!

அவ்வாண்டின் ஜூலை மாதத்தில் இங்கிலாந்துக்கு எதிரான அறைகூவல்களுக்காக சுபாஷ் சந்திரபோஸ் சிறையில் வைக்கப்பட்டார்.

கங்கா அடிக்கடி ராஜாராமனின் வீட்டுக்குப் போய் வந்து கொண்டிருந்தது வெறும் அரசியல் கருத்துப் பரிமாறல்களுக்காக மட்டும் இல்லை என்பது ராமசாமிக்குப் புரிந்தது. ராஜாராமனின் வீட்டாரும் பவித்திராவின் ஞாபகமே அவன் கால்களைத் தம் வீடு நோக்கி இழுக்கிறதென்றதைப் புரிந்து கொண்டிருந்தனர். 'பவித்ராவுக்கு என்னதான் நேர்ந்திருக்கும்? பல நாட்களாகக் கடிதம் கூட இல்லையே? சிறைப்பட்டிருப்பாளா, அல்லது...' என்று அதற்கு மேல் கற்பனை செய்து பார்க்க முடியாமல் அஞ்சனாவும் அமராவதியும் அவன் தங்கள் வீட்டுக்கு வந்தபோதெல்லாம் அதிகமாய்ப் பவித்திராவின் ஞாபகத்தில் உழல, உண்மையை அறிந்து உள்ளூர அழுது மாய்ந்து கொண்டிருந்த ராஜாராமனோ அவன் முகத்தைப் பார்க்க நேர்ந்த போதெல்லாம் தாங்க முடியாத வேதனைக்கு ஆட்பட்டார். 'இந்தப் பிள்ளை இவ்வளவு நம்பிக்கையோடு வந்து போய்க் கொண்டிருக்கிறதே? உண்மையை இவனுக்கு மட்டும் சொல்லி விட்டால்தான் என்ன? கலியாண வயசை இவன் ரொம்பவும் தாண்டி விட்டானே... பவித்ரா இல்லை என்பது தெரிந்தால் ஒருவேளை அவன் வேறு ஒருத்தியை மணக்க சம்மதிக்கக்கூடும்' என்ற எண்ணம் அவருக்கு வந்து போனாலும், அவனை நேரில் பார்த்ததும் அவருக்கு வாய் அடைத்துப் போயிற்று.

ஒருநாள் தம்மைத் திடப்படுத்திக் கொண்ட ராஜாராமன், அமராவதி, அஞ்சனா ஆகியோரின் முன்னிலையிலேயே, அவனது திருமணப் பேச்சை எடுத்து விட்டார்.

"கங்கா, உங்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்... பவித்ரா எப்ப வருவாளோ என்ன சங்கதியோ? அவகிட்டேருந்து லெட்டரே வர்றதில்லே. நிச்சயமா உங்களோட இயக்கம் சம்பந்தப்பட்ட பெரிய குத்தம் எதையோ பண்ணிட்டு அவ பத்து வருஷம், பதினாலு வருஷம்னு நரேந்திரநாத் மாதிரி தண்டனையடைஞ்சிருக்கணும்னுதான் எனக்குத் தோன்

---

"தலைவருக்குப் பிராணிகள் மேலே அளவு கடந்த பிரியம்!''

"அதுக்காக, மேடைக்குப் பக்கத்துல நாய் நிற்பதைப் பார்த்துட்டு நாய்மார்களே'ன்னு சேர்த்துச் சொல்றது கொஞ்சம்கூட நல்லா இல்லே!''

- எஸ். முகம்மது யூசுப்





ஒருவர் : உங்க படைப்புகளில் எனக்கு மிகவும் பிடித்தது...

எழுத்தாளர் : சொல்லுங்க, சொல்லுங்க...!

ஒருவர் : உங்கள் பெண் மல்லிகாதான்.

- சீர்காழி வி. கௌரி

றது. அதான் ஒரு தகவலும் இல்லே. அதனாலே நீ என்ன பண்றே...” - ராஜாராமனுக்கு இந்த இடத்தில் குரல் நடுங்கியது.

“என்ன பண்ணனும்கறேள், மாமா?”

“சீக்கிரமா, ஒரு நல்ல பொண்ணாப் பாத்து, சட்டுப்புட்டுனு கல்யாணம் பண்ணிக்கிறே.”

கங்கா சிரித்தான். “எனக்குத் தெரிஞ்ச ஒரே நல்ல பொண்ணு பவித்ராதான், மாமா. காத்திண்டிருந்து கல்யாணம் பண்ணிக்குங் கோன்னு நீங்கதானே அன்னிக்குச் சொன்னேள்? இப்ப என்ன திடீர்னு?”

“அப்ப சொன்னேந்தாம்ப்பா. நான் இல்லேங்கலே. ஆனா இவ்வளவு நாள் இழுத்தடிக்கும்னு நான் நெனைக்கல்லேப்பா. அதனால சொல்றேன். எத்தனை வருஷம் ஆச்சு! அவ இருக்கிற இடம் கூடத் தெரியல்ல. அதுக்குத்தாம்ப்பா சொல்றேன்...” - மேலே பேச முடியாமல், பவித்திரா பற்றிய கடித வாசகம் காதில் ஒலிக்க, ராஜாராமன் கண்ணீர் விடத் தொடங்கினார்.

அஞ்சனாவுக்கும் அமராவதிக்கும் கூட அழுகை வரும் போல் ஆயிற்று.

“இந்தப் பேச்சை இனிமே நீங்க எடுக்கக் கூடாது, மாமா. எம் மனசுல பவித்ராவைத் தவிர வேறு யாருக்குமே இடமில்லே.”

‘எம் மனசுல குஞ்சம்மாவைத் தவிர வேற யாருக்குமே இடமில்லே’ என்று வெகுநாள் முன்பு தம்மிடம் ராமசாமி கூறிய சொற்கள் அவர் செவிகளில் ஒலித்தன. ‘ஏகபத்தினி வம்சம் போல இருக்கு’ என்று கசப்புடன் நினைத்துப் புன்சிரிப்புக் கொண்டார். கங்காவை நினைத்த போது பெருமையாகவும் இருந்தது; வருத்தமாகவும் இருந்தது. தன் பேத்தி தேர்ந்தெடுத்த பிள்ளை இவ்வளவு உண்மையுள்ளவனாக இருக்கிறானே என்ற பெருமிதத்தில் அவருக்கு மறுபடியும் கண்கள் கலங்கின.

“வருத்தப்படாதேங்கோ, மாமா. திடீர்னு ஒருநாள் நம்ம எல்லார் முன்னாலயும் - நான் எங்காத்துல வந்து நின்ன மாதிரி - தங்கமும் அவளுமா வந்து நிப்பா பாருங்கோ.”

ராஜாராமனுக்கு அதற்கு மேல் எதுவும் பேச முடியாதபடி தொண்டை அடைத்துக் கொண்டது.

சிறை வைக்கப்பட்ட சுபாஷ் சந்திர போஸ், உண்ணாவிரதமிருந்து உடல் மோசமாகவே விடுவிக்கப்பட்டார். ஆனால் வீட்டுக் காவலில் வைக்கப்பட்டார். வீட்டைச் சுற்றிலும் இருபத்து நான்கு மணி நேரமும் போலீசார் கண்காணித்துக் கொண்டிருந்த நிலையில் அவர்களுக்குக் கடுக்காய் கொடுத்து விட்டு 1941 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 17-ஆம் நாளன்று அங்கிருந்து வெளியேறித் தப்பினார் - ஒரு முஸ்லிமைப் போல் வேடமணிந்து! கோமோ எனுமிடத்துக்குக் காரில் போய், அங்கிருந்து ரெயில் வண்டியில் பெஷாவர் போய், அங்கிருந்து சில ஊர்கள் வழியாக இந்திய எல்லையைக் கடந்து ஜலாலாபாத் வழியாகக் கால்நடையாகவும், குதிரை வண்டியிலும் பின்னர் மோட்டார் அல்லது லாரியிலும் சமயம் போல் பயணித்துக் காபூலைச் சென்றடைந்தார் என்ற உண்மை பின்னர் வெளியாகியது. காபூலிலிருந்து இத்தாலிய பாஸ்போர்ட்டுடன் அவர் ரஷ்யாவை அடைந்தார். 1941, மார்ச்சு 28-இல் மாஸ்கோவிலிருந்து சுபாஷ்சந்திர போஸ் ஜெர்மனியின் தலைநகர் பெர்லினுக்குப் பறந்தார். இந்த விவரங்கள் சிலநாள் கழித்துத் தெரியவந்த போது மூக்கில் விரல் வைக்காதாரில்லை.

பெர்லினில், ஹிட்லரின் வலக்கை என்று சொல்லப்பட்ட ரிப்பன்ட்ராப் சுபாஷை ஆர்வத்துடன் வரவேற்றார். பெர்லின் ரேடியோவிலிருந்து சுபாஷ் பேசலாம் என்றும், ஜெர்மனியில் உள்ள இந்தியப் போர்க்கைதிகளை அவர் பயன்படுத்திப் படையமைத்துக் கொள்ளலாமென்றும் கூறி உற்சாகமளித்தார். சுபாஷ் சந்திரபோசும் ரோம், பாரிஸ் ஆகிய நகரங்களில் ‘இந்திய விடுதலைக் கேந்திரங்க’ளை ஏற்படுத்தும் பணியிலும் படை திரட்டும் வேலையிலும் முழுமூச்சுடன் முனைந்தார்.

டிசம்பர் 7-ஆம் நாளில், அமெரிக்காவுக்குச் சொந்தமான ஹவாய் தீவில் உள்ள போல் ஹார்பர் மீது ஜப்பான் விமானங்கள் குண்டுமழை பொழிந்து அமெரிக்காவின் எண்ணிறந்த கப்பல்களை மூழ்கடித்தும் நாசப்படுத்தியும் அதன் கடற்படை வலிமையைப் பெரிய அளவுக்குச் சேதப்படுத்தி விட்டன. அமெரிக்காவும் பிரிட்டனும் அடுத்த நாளே



**“சார்... போஸ்ட்...”**

**“இதோ பாருப்பா... இங்கே நான் தான் எல்லாம்... அதனாலே இனிமே “மேடம் போஸ்ட்”னு சொல்லித்தான் போடணும்...!”**

**- சுவீட். ரவி**

ஜப்பானின் மீது போர் அறிக்கை விடுத்தன. 11-ஆம் நாள் ஜெர்மனியும் இத்தாலியும் அமெரிக்காவின் மீது போர்ப் பிரகடனம் செய்தன. மேலும் சில நாடுகளும் களத்தில் இருதரப்பிலும் குதிக்க, அந்தப் போர் அனைத் துலகப் போராக உருக்கொண்டு விட்டது. சுமார் இரண்டு மாதங்களில் சிங்கப்பூரும் பிறகு ரங்கூனும் ஜப்பான் வசமாகி விட்டன.

பிரிட்டனின் பிரதம மந்திரி சர் வின்ஸ்டன் சர்ச்சில், ரங்கன் விழுந்த மறுநாளே கிரிப்ஸ் மிஷன் எனும் தூதுக் குழுவை இந்தியாவுக்கு அனுப்பப் போவதாக அறிவித்தார். ஆனால் கிரிப்ஸ் மிஷன் பேச்சு வார்த்தைகள் முறிந்து விட்டன. சர்ச்சில் இம்மியும் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. 'சர்ச்சிலின் பிடிவாதம் நியாயமற்றது' என்று அமெரிக்க அதிபர் ரூஸ்வெல்ட் சுட்டிக்காட்டியும் எந்தப் பயனும் விளையவில்லை.

## 62

நரேந்திரநாத் பானர்ஜி விடுதலையாகிச் சென்னையை வந்தடைந்ததன் பின் சில மாதங்கள் கழிந்து விட்டன. அலிப்பூர்ச் சிறையில் இருந்த தங்கத்தின் தண்டனைக்காலம் முடிய இன்னும் சில மாதங்கள் இருந்ததால், அவள் இன்னும் அங்கேயே இருந்தாள்.

"என்ன யோசனை, நரேன்?" என்று கேட்டவாறு எதிரே வந்தமர்ந்து கொண்ட அஞ்சனாவை அவன் பார்த்துத் துயரத்துடன் புன்னகை செய்தான்.

"உன் பழைய சிரிப்பு போய் விட்டது, நரேன்."

"முகம் வேறு அசிங்கமாகி விட்டதல்லவா? அதுவும் ஒரு காரணமாக இருக்கலாமே."

"பாதி முகத்தைத் தழும்புகள் மறைக்கின்றன என்பது உண்மைதான். ஆனால், நான் அழகைப் பற்றிப் பேசவில்லை. உன் புன்னகையில் உயிரே இல்லாதிருப்பதைப் பற்றித்தான் சொல்லுகிறேன்."

"நான் ஒரே ஒரு தடவை மட்டுமே பார்க்கக் கொடுத்து வைத்த உயிருக்குயிரான என் ஒரே மகள் பற்றி எதுவுமே தெரியாத நிலையில் என் சிரிப்பில் எப்படி உயிர் இருக்க முடியும், அஞ்சனா?"

"நரேன், நரேன். நீங்கள் இப்படி அழலாமா? குளித்துக் கொண்டிருக்கும் அமராவதி திரும்பி வரும் நேரம்... உங்களைப் போலவே பவித்ராவும் சிறைப்பட்டிருக்கலாமல்லவா?"

"யார் கண்டது? எப்படியும் இருக்கலாம். நீண்ட சிறைவாசமென்றே வைத்துக் கொண்டாலும், ஆண்டுக்கணக்கில் அந்தப் பையன் காத்துக் கொண்டிருக்க வேண்டுமா? கலியாணத்துக்கும் ஒரு வயது இருக்கிறதல்லவா?"

"நாங்கள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாகி விட்டது, நரேன். அவன் ஒரே பிடிவாதமாக இருக்கிறான். பவித்ரா எந்த ஊரில், எந்தச் சிறையில் இருக்கிறாள் என்பதைக் கண்டுபிடிக்கவே முடியாதா?"

"முதலில் அவள் உயிரோடுதான் இருக்கிறாளா என்பதையே கண்டுபிடிக்க முடியவில்லையே" - இவ்வாறு சொல்லிவிட்டு அவன் குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்கினான்.

குளியலறைக் கதவுத் தாழ்ப்பாள் விலக்கப்பட்ட ஓசை கேட்டதும், நரேந்திரன் தன் சிவந்த விழிகளை அவள் பார்த்துவிடக் கூடாதென்பதற்காக் எழுந்து வாசற்பக்கம் போய்த் தெருவை வேடிக்கை பார்க்கிறாப்போல் நின்று கொண்டான்.

(தொடரும்)



இரு ரவுடிகள் :
"உன்னோட குழந்தைக்கு நெஞ்சைத் தொடற மாதிரி பேர் வைக்கச் சொன்னியே! தலைவர் என்ன பேர் வெச்சார்?"
"முண்டா பனியன்!"

- கே. சோமசேகர்

"இது புதுமையான பட்டிமன்றமுன்னு பேசிக்கிறாங்களே... எதனால...?"

"நாளைக்கு நடக்கப் போற பட்டிமன்றத்துக்கு யார் நடுவரா இருக்கிறதுன்னு தீர்மானிக்க இந்தப் பட்டிமன்றம் நடக்குது...!"

- எஸ் எஸ். பூங்கதிர்



ஜோதிர்லதா கிரிஜா

சற்று நேரத்தில் ராஜாராமனும் கங்காவும் மதில் சுவர்க்கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தார்கள்.

"வாக்கிங் போயிட்டு வர வழியில கங்காவைப் பார்த்தேன். நம்மாத்துக்குத்தான் வந்துண்டிருந்தான். சேந்து வந்தோம்."

மூவரும் உள்ளே சென்று நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள்.

"வா, கங்கா. கொஞ்ச நேரத்துக்கு முன்னால கூட உன்னைப் பத்தித்தான் நரேனும் நானும் பேசிண்டிருந்தோம்" என்றாள் அஞ்சனா.

"என்னைப் பத்தியா? என்ன பேசிண்டிருந்தேள்?"

"எல்லாம் உன்னோட கல்யாண விஷயமாத்தான்."

கங்காவுக்கு அவர்கள் என்ன பேசி இருந்திருப்பார்கள் என்பது புரிய, தனது முடிவைத் திட்டவட்டமாக எல்லாருக்கும் புரியவைக்கும் நோக்கத்துடன், முகத்தில் முறுவலை வரவழைத்துக் கொண்டு, "அட, அப்படின்னா பவித்திராவைப் பத்தின நியூஸ் கிடைச்சுடுத்தா? லெட்டர் வந்துதா? எப்ப வராளாம்?" என்றான். குரலில் அவன் வேண்டுமென்றே வரவழைத்துக் கொண்ட கிண்டல் அங்கிருந்தவர்களுக்குப் புரியும்படி வெளிப்படையாகவே காட்டிக் கொண்டான். நரேந்திரநாத் தலையைக் குனிந்து கொண்டான். அஞ்சனா, ராஜாராமன் பக்கம் பொருள் பொதிந்த பார்வையை நகர்த்தினாள். அவரும் தலையைத் தாழ்த்திக் கொண்டார்.

அவன் சொன்னதைக் கேட்டுக் கொண்டே காப்பிக் கோப்பைத் தட்டுடன் அங்கு வந்த அமராவதி எல்லார் கைகளிலும் காப்பியைக் கொடுத்து விட்டு எதிரே தானும் அமர்ந்து கொண்டாள்.

மனத்தைத் திடப்படுத்திக் கொண்ட நரேந்திரநாத் பானர்ஜி, தொண்டையைச் செருமிக் கொண்டான் : "கங்கா, நாம் சில உண்மைகளை எதிர்கொண்டே தீர வேண்டும்... பவித்திராவைப் பற்றி எந்தத் தகவலும் இல்லை. அவள் இறந்து கூடப் போயிருக்கலாமல்லவா?"

"அய்யோ. உங்க வாயால அப்படியெல்லாம் சொல்லாதேங்கோ. எனக்கு ஏற்கெனவே கண்டமேனிக்கு துர் சொப்பனமா வந்துண்டிருக்கு. நம்ம எண்ணந்தான் கனவா வருது. பவித்ராவுக்கு எதுவும் ஆகி இருக்காதுன்னு திடப்படுத்திண்டு வளைய வந்திண்டிருக்கேன். துக்கிரித்தனமா எதுவும் சொல்லாதங்கோ" என்று படபடவென்று பொறிந்து தள்ளிய அமராவதி அழத் தொடங்கினாள். அஞ்சனா ஆதரவுடன் அவள் தோள் மீது கை பதித்து, "அழாதே, அமராவதி. அப்படி எதுவும் ஆகி இருக்காது..." என்று தனக்கே நம்பிக்கை இல்லாத குரலில் அவளைத் தேற்ற முயன்றாள். ராஜாராமனோ மார்பில் பதிகிற அளவுக்குத் தாழ்த்திய முகத்தை நிமிர்த்தாமலே உட்கார்ந்து கொண்டிருந்தார்.

அப்போது ராஜாராமனின் நண்பர் தியாகராஜ முதலியாரின் குரல் வாசலில் கேட்டது.

"வாங்க, வாங்க முதலியார்வாள். உக்காருங்க."

"என்னய்யா, நம்ம ராஜாஜி பாகிஸ்தானைப் பிரிச்சுக் குடுத்துடணும்னுட்டாரே. இதென்ன அக்கிரமம்?"

"அவர் லேசுப்பட்ட ஆளில்ல, முதலியார்வாள். சும்மா அப்படிச் சொல்லிடுவாரா? ஆரம்பத்துலேருந்தே அவர் அப்படிச் சொல்லிண்டிருக்கல்லையே. இப்ப சொல்றார்னா, எல்லாத்தையும் அலசி, ஆராய்ஞ்சு பார்த்துட்டுச் சொல்றார்னுதானே எடுத்துக்கணும்? அவரொண்ணும் ஜின்னாவோட கைக்கூலி இல்லியே. அவர்கிட்ட ஒரு தீர்க்க தரிசனம் இருக்கு, முதலியார்வாள். அவரோட மூக்குக் கண்ணாடிக்கு வெளியில தெரியற கண்கள் நம்மைத் தாண்டி எங்கேயோ ரொம்ப தூரத்துல பார்க்கிற மாதிரி தோணும் எனக்கு. அந்தப் பார்வையே

# கொள்ளும் தருணம் இதோ!

**ரூ.** 75,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு, பொதுத்துறை அல்லது தனியார்துறை அல்லது அரசுப்பணி அல்லது அங்கீகாரம் பெற்றுள்ள நிறுவனங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் மூன்று பேர் உத்தரவாதம் அளித்தால் போதுமானது.

**வே**லையில் இருக்கும் பெண்மணி ரூ. 15,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுக்கும்போது அவருடைய கணவரின் உத்தரவாதமே போதுமானது.

★வாஷிங் மெஷின் முதல் ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் தட்டுகள் வரை எண்ணற்ற பரிசுகள்.



## மகிழ்ச்சிக்கு வழி திறக்கும் மர்மத்திறவுகோல்

SECRET KEY
GIFT SURPRISES
COUPON
SPECIMEN

NAME: ..................................
CHIT REF: ..................................
BRANCH: .................. CODE NO: ..........

PLEASE SEE THE REVERSE FOR DETAILS.

ஒரு மர்மத்திறவுகோல் எண்ணற்ற பரிசுகளுக்கு வழி வகுத்து உங்களை மகிழ்வடையச் செய்யக் காத்திருக்கிறது.

★அறிமுகப்படுத்துவோர் பரிசுகள் இப்போதுள்ள சந்தாதாரர்களுக்கு மட்டுமே.




ALL INDIA DEPOSIT MOBILISATION DRIVE IS ON.



**ஸ்ரீராம்** சிட்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ் பி.லிமிடெட்.

**ஸ்ரீராம்** சிட்ஸ் தமிழ்நாடு பி.லிமிடெட்.

நிர்வாக அலுவலகம்: ''சுப்பிரமணியம் பில்டிங்'',
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன்: 8520700/8523932/8522651/
8525536/8520797

*ஸ்ரீராம் சிட்ஸ் -*
*பலருக்கும் பல வகையிலும் பலன்.*

ADWAVE/SCI/5000 TAM D



"உங்க ஆபிசுல எத்தனை பேர் வேலை செய்யறாங்க?"

"ஐந்து பேர் வேலை செய்யறாங்க; இருபது பேர் சம்பளம் வாங்குறாங்க!"

— தக்கோலம் அ. முஸ்தபா

அவரோட தீர்க்க தரிசனத்தைக் காட்றதாத் தான் நான் நினைக்கிறேன்."

"என்னய்யா இதுல தீர்க்க தரிசனத்தைக் கண்டீர்? கடைசியில நாட்டைப் பிரிச்சுத் துண்டாடறதுக்கு ஒரு தீர்க்கதரிசி தேவையா? இதுல என்னய்யா தீர்க்க தரிசனம்? எனக்குப் புரியல்ல அய்யர்வாள்."

"முதலியார்வாள், இப்ப ஒரு குடும்பத்தை உதாரணத்துக்கு எடுத்துக்குங்கோ. பையன் தனிக்குடித்தனம் போகணும்கறான், அப்பாவும் அம்மாவும் கூட்டுக் குடும்பமா இருக்கிறதுனால என்னென்ன நன்மைகள், தனியா வாழ்ந்தா எத்தனை தீமைகள்னெல்லாம் எவ்வளவோ எடுத்துச் சொல்றா. வருஷக்கணக்கா எடுத்துச் சொல்லியும் அவன் கேக்காம தனிக்குடித்தனம்தான் போவேன்னு ஒத்தைக் கால்ல நிக்கறான். அப்ப என்ன செய்யறது? ஒழிஞ்சு போன்னு விட்டுத் தொலைக்க வேண்டித்தானே வரும்? நம்மைப் புரிஞ்சுக்காதவாளையும், நம் பாதவாளையும் நம்ம கூட இருந்துதான் ஆகணும்னு கட்டாயப்படுத்தலாமா ஓய்? அன்பும் அனுசரணையும் தானா வரணுமய்யா. அதை யார் மேலயும் வலுக்கட்டாயமாத் திணிக்கப்படாது, திணிக்கவும் முடியாது. நிரந்தரமா மாமியார் - மருமகள் சண்டையில் குடும்பம் சிக்கிச் சீரழியறதை விட தனித்தனியா இருந்துடறது நல்லது தானே? அதைத்தான் அவர் சொல்றார்."

"............................"

"என்ன பேசாம இருக்கீர்? தவிர்க்க முடியாத ஒண்ணு வந்தா, அதை ஏத்துத் தொலைச்சுண்டுதானே தீரணும், முதலியார்வாள்? நீரே யோசிச்சுப் பாரும்."

தியாகராஜ முதலியார் அதற்கு மேல் விவாதிக்காதிருந்தது ராஜாராமன் சொன்னதைப் பெருமளவுக்கு அவர் ஏற்றுக் கொண்டதை உணர்த்தியதாக எல்லாருக்கும் தோன்றியது.

"அநேகமா ராஜாஜி காங்கிரஸ் காரியக் கமிட்டியிலேருந்து விலகிடுவார்னு நினைக்கிறேன். அவருக்கு எதிர்ப்பு அதிகமா இருக்கிறதால. நீங்க என்ன நினைக்கிறேள், முதலியார்வாள்?"

"எனக்கும் அப்படித்தான் தோணுது."

மேலும் சற்று நேரம் நடப்பு அரசியலை விவாதித்த பின்னர் தியாகராஜ முதலியார் புறப்பட்டுச் சென்றார்.

எல்லாரும் நினைத்தபடியே 1942 ஏப்ரல் 30 ஆம் நாள் ராஜாஜி காங்கிரஸ் காரியக் கமிட்டியிலிருந்து விலகிக் கொண்டார்.

மே 15-இல் ஜப்பான், பர்மா முழுவதையும் கைப்பற்றியது.

ஜப்பானில் குடியேறியிருந்த ராஷ்பிஹாரி போஸ் திட்டமிட்ட ஒரு மாநாடு, அவ்வாண்டு ஜூன் மாதம் 15-லிருந்து 23-ஆம் நாள் வரையில் நடந்தது. அதில் பர்மா, மலேயா, தாய்லாந்து, இந்தோ-சீனா, பிலிப்பைன்ஸ், ஜப்பான், அந்தமான் தீவுகள், ஹாங்காங், சுமித்ரா, ஜாவா, போர்னியோ, சைனா ஆகியவற்றிலிருந்து சுமார் நூறு பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள். ராஷ்பிஹாரி போஸ் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டு, மாநாடு 'இண்டியன் இண்டிபெண்டென்ஸ் லீக்' எனும் இந்திய சுதந்திரக் குழுவை அதிகார பூர்வமாய்த் துவக்கி வைத்தது. இந்திய மூவண்ணக் கொடியை ராஷ்பிஹாரி போஸ் ஏற்றினார். இந்தியாவின் முழுமையான விடுதலைக்குப் பாடுபடுவதே இக்குழுவின் நோக்கம் என்று வரையறுக்கப்பட்டது. மாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்களுள் முக்கியமான ஒன்று சுபாஷ் சந்திரபோஸை இப்போராட்டத்தில் ஈடுபடுத்த அழைக்க வேண்டும் என்பதாகும். ஜப்பானிடம் சரணடைந்திருந்த கேப்டன் மோகன் சிங், இந்த மாநாட்டில் கலந்து கொண்டார். சிங்கப்பூர் வீழ்ச்சியின் போது கைதான சுமார் 40,000 இந்தியப் போர்க் கைதிகளைக் கொண்டு இந்திய தேசியப் படை அமைப்பதென்று முடிவாயிற்று.

உலகப் போர் தொடங்கியதிலிருந்தே வெள்ளையர்களை இந்தியாவை விட்டு உடனே வெளியேற்றி விட வேண்டும் எனும் எண்ணம் காந்திஜியின் உள்ளத்தில் தீவிரமடைந்து கொண்டு வந்தது. காரணம், இந்தியா வெள்ளையர் வசம் இருக்கும்

வரை, வெள்ளையரை எதிர்த்துப் போரிடும் சாக்கில் ஜப்பானியர் இந்தியாவைக் கைப் பற்றும் ஆபத்து நேரும் என்பதுதான். சிங்கத்தின் வாயிலிருந்து தப்பிப் புலி வாயில் விழுவது போன் றது அது என்று காந்தி யடிகள் கருதினார்.

எனவே, வார்தாவில் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் கூட்டம் அவ்வாண்டு ஜூலை மாதம் 6-ஆம் நாள் நடந்த போது காந்தியடிகள் அது பற்றிய தமது கருத்தை வெளியிட்டார். அச் சமயம் காங்கிரஸிலிருந்து அவர் விலகி இருந்தபோதி லும், அதன் முடிசூடாத் தலைவர் காந்தியடிகளே என்பது இப்போதும் தெளிவாகியது. வெள் ளைக்காரர்கள் வெளியேறி னாலல்லாது ஜப்பானால் இந்தியாவுக்கு அபாயமே என்பதில் காந்தியடிகள் பிடிவாதமான கருத்துக் கொண்டிருந்தார்.




ஆகவே, 'வெள்ளையர் களே, வெளியேறுங்கள்' எனும் நாடு தழுவிய இயக் கத்தைத் துவங்கும் யோசனையைக் காந்தியடிகள் அறிவித்தார். இந்திய எல் லையில் பிரிட்டனின் எதிரி நின்று முன் னேறப் பார்க்கையில், தனக்கு எதிரான இயக்கத்தை அது தாங்கிக் கொள்ளுமா என்று பல தலைவர்கள் தயக்கமும் ஐயமும் உற்றார்கள்.

பிரிட்டன் போரில் ஈடுபட்டிருக்கையில் எந்தப் போராட்டத்தையும் அனு மதிப் பதற்கில்லை என்று கண்டிப்பாக வைசிராய் கூறிவிட்டது பிரிட்டன் எள்ளளவும் அசையாது என்பதைக் காந்தியடிகளுக்கு உணர்த்தியது.

## 63

"வெள்ளையனே வெளியேறு" தீர்மானம் 1942 ஆகஸ்டு 8-ஆம் நாள் பம்பாய்க் காங்கிரஸ் மாநாட்டில் ஒரு மனதாக நிறைவேறியது. "நீங்கள் ஒவ் வொருவரும் இந்தக் கணத்திலிருந்து ஒரு சுதந்திர மனிதன் அல்லது பெண்மணி என் பதாகக் கருதிக் கொண்டு சுதந்திரத்துடன் நடந்து கொள்ளலாம். முழுமையான சுதந் திரம் மட்டுமே திருப்தியளிக்க வல்லது. நாம் இந்தியாவை விடுவிப்போம், அல்லது அம் முயற்சியில் செத்து வீழ்வோம். முடியுங்கள் அல்லது மடியுங்கள் என்பதே நான் உங்க ளுக்குத் தரும் தாரக மந்திரமாகும்" என்றார் காந்தியடிகள்.

மறுநாளே காந்தியடிகள், ஆச்சார்யா கிருபலானி, சரோஜினி நாயுடு, ஆஜாத், ராஜேந்திர பிரசாத், சர்தார் வல்லபபாய் படேல் ஆகியோர் கைது செய்யப்பட்டனர். கஸ்தூர்பாவும் கைதானார். அகமதாபாத் காங்கிரஸ் தலைமைச் செயலகம் சீல் வைக்கப்பட்டு, காங்கிரஸின் நிதிகள் பறி முதல் செய்யப்பட்டன. அடுத்த ஒரு வாரத் துக்குள் காங்கிரசின் முக்கியமானவர்கள், கொஞ்சமேனும் செல்வாக்குள்ளவர்கள் என்று கிட்டத்தட்ட அனைத்துக் காங்கிரஸ் காரர்களும் சிறையிலடைக்கப்பட்டார்கள். காங்கிரஸ் இயக்கம் சட்ட விரோதமானது என்று அறிவிக்கப்பட்டது.

தலைவர்கள் அனைவரும் சிறைசெய்யப் பட்டதும் மக்கள் ஓடக்காரன் இல்லாத ஓடம் போலாயினர். வன்முறையற்ற போராட்டமாக அவர்களின் எழுச்சி இருக்க வேண்டுமென்று காந்தியடிகள் அறிவித்திருந்தாரே தவிர, அதற்கான விரிவான திட்டத்தை அவர் வகுத்தாரில்லை. தலைவனற்றுப் போன மக்கள் செய்வதறியாத நிலையில் உணர்ச்சிவசப்பட்டனர். நாடு முழுவதும் கடையடைப்புகள், ஊர்வலங்கள், பொதுக் கூட்டங்கள், மறியல்கள் போன்ற நடவடிக்கைகளில் பெரிய அளவில் ஈடுபட்டனர். தலைவர்கள் அனைவரும் சிறைகளில் இருப்பின், மக்கள் செயலற்றுப் போவார்கள் என்று தப்புக் கணக்குப் போட்டிருந்த அரசு திகைத்தது. மக்களின் எழுச்சியை ஒடுக்கக் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டது. கூட்டங்களும் ஆர்ப்பாட்டங்களும் காந்தியடிகள் சொன்னபடியே வன்முறையற்ற முறையில் நடந்தும், போலீசார் அரசின் கட்டளைப்படி தடியடியோடு துப்பாக்கிச் சூட்டிலும் ஈடுபட்டனர். சில இடங்களில் விமானங்கள் குண்டுகளும் பொழிந்தன. இவற்றால் வெகுண்ட மக்கள் தபால் நிலையங்கள், போலீஸ் நிலையங்களுக்குத் தீ வைத்தல், இருப்புப் பாதைகளைச் சேதப்படுத்துதல் என்று பல்வேறு நாச வேலைகளில் முழு மூச்சுடன் ஈடுபட்டனர். இவற்றைத் தடுக்க, கண்டதும் சுடுமாறு அரசு உத்தரவிட, மக்கள் மேலும் பன்மடங்கு ஆவேசத்துடன் அழிவு வேலைகளில் முனைந்தனர். இந்தியா பயங்கரமான அமைதியின்மைக்குத் தள்ளப்பட்டது. ஆயுதங்களே ஏந்தாத மக்களாயினும் அவர்களைச் சமாளிப்பது அரசுக்குப் பெருந் திணறலாக இருந்தது.

கட்டிலில் படுத்திருந்த கங்கா, காலடியோசை கேட்டு விழிகளைத் திருப்பினான். அத்தைதான் கையில் காப்பியுடன் வந்து கொண்டிருந்தாள்.

"கால்வலி எப்படிடா இருக்கு?" என்று கேட்டு விட்டு அவன் கையில் காப்பியைக் கொடுத்தாள்.

"எவ்வளவோ தேவலை, அத்தே" என்று பதில் சொல்லி விட்டு அவன் காப்பியை வாய் வாயாக ரசித்துக் குடித்தான்.

"நல்லவேளை. ரமணி மாதிரி எலும்பு முறிஞ்சு போகாம வெறுங் காயத்தோட தப்பினியே."

விசாலம் அருகே இருந்த அகன்ற முக்காலியில் உட்கார்ந்து கொண்டாள். காப்பித் தம்ளரை வாங்கிக் கொண்டபின் நகராமல்

> **"150 ரூபாய்க்கு சைக்கிள் ஒன்று பாருங்களேன்?"**
>
> **"தள்ளிக்கிட்டுப் போற மாதிரியா, தூக்கிட்டுப் போற மாதிரியா?"**
>
> **— வி. கௌரி**

அவள் உட்கார்ந்தது கங்காவைப் புன்சிரிப்புக் கொள்ள வைத்தது. 'சரிதான். வழக்கமான பல்லவியைப் பாடத்தான் வந்திருக்கா இந்த அத்தை.'

"டேய், கங்கா. தயவு பண்ணி நான் சொல்றதைக் கேளு. உனக்குக் காலாகாலத்துல கல்யாணமாயிருந்தா இன்னைத் தேதியில உனக்குப் பத்து வயசுல ஒரு பொண்ணு இருக்கலாம். சீக்கிரமா உங்க ரெண்டு பேருக்கும் ஒரு கால்கட்டுப் போட்டுட்டு நான் கண்ணை மூடணும்."

"கால் கட்டுத்தான் போட்டுண்டிருக்கேனே, அத்தே?" என்றான் கங்கா. அவன் தலையில் செல்லமாய் ஒரு குட்டுக் குட்டிவிட்டு, யாரோ கதவு தட்டிய சத்தம் கேட்டு விசாலம் எழுந்து சென்றாள்.

வந்தவர்கள், வெளியே போயிருந்த ராமசாமியும் ரமணியும்தான். இருவருமே நேராக அவனது அறைக்குத்தான் வந்தார்கள்.

"என்ன, கங்கா? கால்வலி எப்படி இருக்கு?"

"ரொம்பத் தேவலைப்பா."

"ரமணிக்குத்தான் ரொம்ப வருத்தம் - தனக்கு அடியே விழல்லியேன்னு."

"அதான் டிரெய்ன்ல குண்டங்களோட சண்டை போட்டுட்டு காலையே முறிச்சிண்டிருக்கானேப்பா? அதுவும் ஒரு சுதந்திரப் போராட்டந்தானே? என்னோட பணத்தை நான் தர மாட்டேன்னு சொல்றது, என்னோட நாடு எனக்கு; வெளியேறுன்னு சொல்ற மாதிரிதானே?"

"இந்தப் போராட்டத்துல வன்முறை இந்த அளவுக்கு அதிகமானதுக்கு தீவிரவாதிகள் ஒரு முக்கியமான காரணம்கறார் நாயுடு மாமா. இந்த நாச வேலைகள் இருக்கு பாத்தியா டெலிகிராப், டெலிபோன் ஒயர்களை வெட்றது, எலெக்ட்ரிசிடி, சம்பந்தப்பட்ட அழிவு வேலை இதெல்லாம் சாதாரணமாப் பொது மக்களுக்குத் தெரியாதில்லையா? அதனால அனுபவசாலிகள் கை வெச்ச



மாதிரி அந்த நாசவேலைகள் நாடு முழுக்க நடந்திருக்கிறதைப் பார்க்கிறப்ப, நிச்சயமா அதெல்லாம் தீவிரவாத இயக்கத்தோட வேலைதாங்கறாங்களாம்."

"அப்படித்தாம்ப்பா இருக்கணும். தீவிர வாதிகள் எப்பவுமே காந்தியோட கொள்கை யில ஈடுபாடு இல்லாட்டாலும், அவர் ஒத் துழையாமை இயக்கம், சட்டமறுப்பு, சத்தி யாக்கிரகம் இதெல்லாம் நடத்தினப்போ, சந் தோஷமாக் கலந்துண்டாளே? 'செய்து முடி, அல்லது செத்து மடி'ன்னு வேற இப்ப ஆவேசமாச் சொல்லிட்டாரே காந்தி. கேக் கணுமா?"

"எப்படியோடாப்பா. நம்ம கங்காவை வெள்ளைக்காரன் பிடிச்சு ஜெயில்ல போடல்ல. கால்லயும் கையிலும் முள்ளுத் தடியால அடிச்சுக் காயப்படுத்தினதோட சரி. ஏதோ இந்த மட்டும் தப்பிச்சானே? ரமணி டைபாய்ட்ல படுத்துட்டான். இல் லேன்னா அவனும் ஒரு கை பாத்திருப்பான்" என்றாள் விசாலம்.

"ஏந்த்தே? எனக்குக் காலு நொண்டியா யிடுத்துன்னு ஒரு 'கை' பார்த்துப்பான்னு சொல்றியா?"

"ஆனா ஒண்ணுப்பா. எது எப்படியானா லும், இந்த க்விட் இண்டியா மூவ்மென்ட்டு னால நல்லதுதான் ஏற்படப் போறது. இனிமே தனக்கு எதிரான போராட்டமெல் லாம் இப்படித்தான் நடக்கும்கிறதா வெள் ளைக்காரன் இப்ப புரிஞ்சுண்டிருப்பான். ஆகாசத்துலேருந்து குண்டு மழையே பொழிஞ்சாலும் அது பத்தின பயமே இல் லாம ஜனங்கள் எதிர்ப்பாங்கிறதையும், எப் படிப்பட்ட தியாகத்தையும் தாய்நாட்டுக்காக அவா செய்யத் தயாரா இருக்காங்கிறதையும் அவன் நிச்சயம் இப்ப தெரிஞ்சுண்டிருப் பான்."

"உன்னோட தோள் வலி எப்படிடா இருக்கு ராமசாமி?"

"எனக்கு விழுந்த அடியெல்லாம் ஒண் ணுமே இல்லேக்கா. நீ அங்க வந்து பார்த் திருக்கணும். மயக்கமே போட்டு விழுந் திருப்பே. இந்தத் தள்ளாத வயசுல ராஜா ராமய்யர் கைதாகி இருக்காரே, அதுதான் கண்றாவியாயிருக்கு. எப்ப விடுவானோ என்ன எழவோ."

"அப்பா. காந்திஜி மூணு வாரம் உண் ணாவிரதம் இருக்க ஆரம்பிச்சிருக்காரே, இது எதுலப்பா கொண்டு போய் விடும்?"

"தெரியலியே. இந்தத் தரம் நாட்டுல நடந்த கலவரங்களாலயும் அக்கிரமங்களால யும் காந்திக்கு மனசு வேற சரி இல்லே. இந்த நெலைமையில இருபத்தொரு நாள் பட்டினி வேற கிடந்தா என்ன ஆவாரோ! அது வேற பயம்மா இருக்கு."

"வைசிராய் அவர் பட்டினி கிடக்கறது தங்களைப் பயமுறுத்தறதுக்காகப் பண்ற வேலை - பொலிட்டிகல் ப்ளாக்மெய்ல் - அப்படின்னு அறிவிச்சிருக்காரே."

"உங்ககிட்ட எனக்கு நியாயம் கிடைக் கல்லே. அதனால உபவாசம் மூலமா கடவுள் கிட்ட முறையிடறேன்'னு பதிலடி கொடுத் துட்டாரே காந்தி!" என்ற ராமசாமி, மகனின் காலை மெல்ல வருடியபடியே, "படுக்கையி லேருந்து எழுந்து கொஞ்சம் நடக்கணும், கங்கா. படுத்துண்டே இருக்கப்படாது" என் றார்.

"இல்லேப்பா. காலை அசைச்சுண்டே தான் இருக்கேன். ஊமை அடி, ரத்தக்காயம் ரெண்டுமே இருக்கே, அநேகமா ஒரு வாரத் துல சரியாயிடும்னு நினைக்கிறேன்" என் றான் கங்காதரன்.

(தொடரும்)

---

"என்னப்பா இது விசிட்டிங் கார்டு....?"

"என்னோடதுதான் தாயி... சமையல் ரெடியானதும் இந்த நம்பருக்குக் கொஞ்சம் ஃபோன் பண்ணிச் சொல்லிடுங்க!"

— சீர்காழி. ரேவதி



“லெட்சுமி...”

கூப்பிட்டபடி திடீரென்று பிரசன்னமானாள் பாட்டி. அவள் பின்னால் பெரியப்பா வீட்டு வேலைக்காரன்.

“வாங்க அத்தை”' என்று வரவேற்றாள் அம்மா, பிரகாசமாய்.

“அவன் எங்கே?'' என்று கேட்டாள் பாட்டி தாய்ப் பாசத்துடன்.

“அப்பா, ஆபீஸ் போயிருக்கார்” என்றேன் நான்.

“அட, சங்கரா? எப்படி வளர்ந்துட்டே?'' என்று அருகில் அழைத்து உச்சிமோந்தாள்.

“உடம்பு தள்ளாமை. முந்தாநாள் சுத்தியடிச்சுடுச்சு. கீழே விழுந்துட்டேன். அப்பா, ஈஸ்வரா...” என்று பெருமூச்சு விட்டபடி சோபாவில் சாய்ந்தாள்.

அதற்குள் அம்மா சமையடிக்குள் போய், ஹார்லிக்ஸுடன் திரும்பினாள்.

“அம்மாடி, கேட்கணும்னு நினைச்சேன். மகராசி, நீயே கொண்டு வந்துட்ட” என்று வாங்கிக் குடித்தாள்.

பெரியப்பா வீட்டில்தான் பாட்டி தங்கியிருப்பாள். உடம்பு சற்று சுணங்கி விட்டால் இங்கு வந்து விடுவாள். பெரியப்பா வீடு முப்பது கிலோ மீட்டர் தள்ளியுள்ள ஊரில் இருக்கிறது. நல்ல பெரிய வேலை. கை நிறையச் சம்பளம். பெரியம்மா சமூக சேவை, மகளிர் மன்றங்களில் தலைமைப் பொறுப்பு வகிப்பவள். ஒரே மகன். ஹாஸ்டலில் தங்கி மருத்துவம் படிக்கிறான்.

இதற்குள் அப்பா வந்து விட்டார் தன் அம்மாவைப் பார்த்ததும் அவர் முகத்தில் மலர்ச்சி.

''வாடா, எப்படி இருக்கே, ஹ...



நான் தான்... உடம்பு இப்படிப் படுத்தறதே..."

அப்பாவைக் கண்டதும் பாட்டி பிரவாகம் எடுத்து விடுவாள். சிறு குழந்தை போல தன் வியாதிகளைச் சொல்லி அழுவாள். அவள் அழ, அப்பா கையைப் பிடித்துத் தேற்ற, அந்த இடமே உணர்ச்சிகரமாகி விடும். அந்தக் காலத்து குடும்பப் படம் பார்ப்பது போலிருக்கும்.

"மாசக் கடைசி, அத்தை வேற வந்திருக்காங்க. பணத்துக்கு..." என்று அம்மா கவலையுடன் அப்பாவைக் கேட்டாள்.

# முகாம்

"ம், பார்க்கறேன்" என்று பெருமூச்சு விட்டார் அப்பா. பிரைவேட் கம்பெனி குமாஸ்தா. இருபது தேதியிலேயே யாரிடம் கடன் கேட்கலாம் என்று அலைபாயும் குடும்பச் சூழல்.

அப்பா சட்டையை மாட்டிக் கொண்டு வெளியே போய் அரை மணியில் திரும்பினார். கூடவே டாக்டர் ராமன். அப்பாவின் பால்ய சிநேகிதர் அவர்.

"என்ன, வீட்டையே கலக்கறேள்?" என்று பாட்டியின் அருகில் வந்து அமர்ந்தார்.

"வாடாப்பா, ஏதோ உன் மருந்துல காலம் ஓடறது. ஏதாவது ஊசியைப் போட்டு என்னை மேலே அனுப்பிச்சுடேன்" என்று அழுதாள் பாட்டி.

"ப்சு, என்னம்மா இது. இப்படியெல்லாம் பேசநீங்க" என்று அதட்டினார் அப்பா.

"வலி தாங்க முடியலே. பேசறாங்க. கவலைப்படாதீங்க. மூணே நாளில் திங்கு திங்குன்னு ஓடப் போறேள்" என்று பிரஷர் பார்த்தார் டாக்டர்.

"என்ன சங்கர், காலேஜ்ல ராகிங் உண்டா?" என்று நடுவில் என்னிடம் வேறு விசாரிப்பு.

அப்பா மூலையில் வைத்திருந்த கனமான பையிலிருந்து ஹார்லிக்ஸ் பாட்டில், பழங்கள் என்று எடுத்து அடுக்கி வைத்துக் கொண்டிருந்தாள் அம்மா.

"லெட்சுமி, சிவராமா, என் கண்களா..." என்று அவ்வப்போது பாட்டி நெக்குருகி கண்ணீர் விட அம்மாவும் அப்பாவும் நானும்தான், ராஜ உபசாரம் செய்ய பாட்டி, டாக்டர் சொன்னது போல மூன்றாவது நாள் எழுந்து அமர்ந்து விட்டாள்.

ஆரம்பித்து விட்டது அடுத்த கட்டம்.

"ஏய் லெட்சுமி" - அதிகாரம் தூள் பறந்தது குரலில்.

"என்ன அத்தை?"

"எனக்கு நெய் போடு. அந்த ஸ்வீட் பாக்கெட் எங்கே? அல்வான்னா எனக்குப் பிடிக்கும்னு தெரிஞ்சே ஒளிச்சு வைச்சிருக்கியே?"

"அத்தை, உங்க உடம்புக்கு நெய், ஸ்வீட்டெல்லாம் கூடாதுன்னு டாக்டர் சொல்லியிருக்காரே..." என்றாள் அம்மா பணிவாய்.

என் அம்மா பசு மாதிரி சாது. அதிர்ந்து பேசத் தெரியாது.

"என்ன இது குழம்பு?"

"வத்தக் குழம்பு. சுண்டைக்காய் போட்டு..."

"தெரியறது. உப்பு, சப்பில்லாம, த்தூ. நாக்கு செத்துப் போச்சு. வத்தக் குழம்புன்னா, தொட்டு நாக்குல வைச்சதும் காரம் 'கிர்'னு உச்சி மண்டைக்கு ஏற வேண்டாமோ?"

"காரம் ஆகாது அத்தை."

"பேஷ், எனக்கு எதுவுமே ஆகாதுன்னு அந்த தண்ட டாக்டர் சொல்லிட்டானா? அவனே சொன்னானா, இல்லை, நீங்க சொல்லச் சொன்னேளா?"

"அத்தை..."

"என்னடி பசப்பறே?" என்று எகிறினாள்.

யுத்தம் இரண்டு, மூன்று நாள் தொடர்ந்தது.

"சிவராமா, நான் போறேன்" என்றாள் அடுத்த நாலு நாளில்.

"என்னம்மா? ஏன் போகணும்? என்ன குறை இங்கே?" என்றார் அப்பா.

"எனக்குப் பிடிக்கலே நீங்க நடந்துக்கற விதம். நான் மூத்தவனிடமே போறேன். கொள்ளி வைக்கப் போறவன் அவன் தானே?"

"அம்மா... அத்தை..."

"போதும்டியம்மா உன் நாடகம். சரியான ஆள் மயக்கி" என்று சிடுசிடுத்தபடி மூட்டை கட்டினாள்.

கிருஷ்ணா



''அவர் போலி ஜோசியர்னு எப்படி கண்டு பிடிச்சீங்க?''

''புது வீடு போகப் போறேன், நாள் நட்சத்திரம் பார்த்து சொல்லுங்கன்னு சொன்னதுக்கு... நாள் வேணும்னா இப்பவே பார்த்து சொல்றேன். ஆனால் நட்சத்திரத்தை ராத்திரிக்குத்தான் பார்த்து சொல்ல முடியும்னு சொல்றாரே!''

— விஜயலட்சுமி பிரட்ரிக்

---



''இந்த டாக்டர் எப்படி சார்...? கெட்டிக்காரரா...?''

''வியாதியைக் கண்டு பிடிக்கிறதுல் எமன் சார்...!''

— சீர்காழி வி. ரேவதி

---

''நாங்க டெலிபோன் டிபார்ட்மெண்ட்ல இருந்து பேசுறோம். உங்க வீட்டு புது டெலிபோன் ஒழுங்கா வேலை செய்யுதா?''

''சரி இல்லே சார்! இது வரையிலும் ஒரு ராங்க் நம்பர் கூட வரலியே!''

— கு. அருணாசலம்



இனி பாட்டியை நிறுத்த முடியாது என்பது அப்பாவின் அனுபவத்தில் கண்ட உண்மை..

"டேய் சங்கரா, ·நீயும் கிளம்பு. பாட்டியைக் கொண்டு போய் பத்திரமா பெரியப்பா வீட்டுல விட்டுட்டு வா" என்றார்.

பஸ்ஸில் பயணம். கூட்டம் அதிகமில்லை. மூன்று பேர் அமரும் இருக்கையில் நானும் பாட்டியும். ஒரு மணி நேரத்தில் போய் விடலாம் பெரியப்பா வீட்டுக்கு.

"சங்கரா, இந்தா" என்று கூப்பிட்டாள் பாட்டி. கையில் ஐம்பது ரூபாய் பணம்.

"எதுக்கு?" என்றேன் வெறுப்பாய்.

"டிக்கெட்டுக்கு."

"எல்லாம் அப்பா கொடுத்திருக்கார். இல்லாட்டி, அதுக்கு வேற திட்டி, சொல்லிக் காண்பிப்பீங்க" என்றேன் குத்தலாய்.

பாட்டி என் கையைப் பிடித்தாள். "என் மேலே கோபமாடா கண்ணா?" என்றாள்.

நான் பாட்டியின் முகத்தை உற்றுப் பார்த்தேன்.

"உடம்பு முடியாம இருக்கறச்சே, அம்மா எப்படித் தாங்கினாள்! கொஞ்சம் தெம்பு வந்ததும், நன்றியே இல்லாம... ப்ச்..."

முகத்தைத் திருப்பிக் கொண்டேன் பேசப் பிடிக்காமல்.

"சங்கரா, உன் பெரியப்பா வீட்டுல காசு, பணத்துக்குக் குறைச்சலில்லே. ஆனால், உடம்பு தளரும் போது வெறும் பணமும் மருந்தும் மட்டும் போதாதுடா. அதுக்கும் மேலே அன்பும் அனுசரணையும் மனசுக்கு வேண்டியிருக்கு."

மெல்லிய குரலில் பேசிய பாட்டியிடம் திரும்பினேன்.

"லெட்சுமியும், சிவராமனும் அதான் உன்னைப் பெத்தவங்க என்னைப் பூ மாதிரி தாங்கறது உண்மைதான். எனக்கும் உங்க கூடவே இருக்க ஆசைதான். ஆனால் ஒரு மாச மருந்து செலவே எனக்கு நானூறு ரூபாய் ஆகுது தெரியுமா?"

பாட்டியை வியப்புடன் பார்த்தேன்.

"நான் இப்படி சண்டை போட்டுட்டு வந்தால்தான், உங்களிடமிருந்து கிளம்ப முடியும். இல்லேன்னா லெட்சுமி என்னைப் போக விடுவாளா?"

பளிச்சென்று புரிந்து போனது பாட்டியின் கரிசன உள்ளமும் தாய்மை உணர்வும்.

"பாட்டி!" என்று என் கைகளுடன். அவள் கையையும் சேர்த்து இறுக்கிக் கொண்டேன் பிரியமாய்.




ராஜாராமனின் வீடு களை இழந்து காணப்பட்டது. அவர் வழக்கமாக உட்காரும் பர்மா தேக்கு நாற்காலி காலியாக இருந்தது. மேசை மீது அவர் வைத்திருந்த புத்தகங்கள் அப்படியே இருந்தன. அவற்றின் மீது தூசு படிந்திருந்தது. எதிரே சோபாவில் உட்கார்ந்திருந்த அஞ்சனா எழுந்து போய் ஒரு துணியால் மேசையையும் புத்தகங்களையும் தூசு போகத் துடைக்கத் தொடங்கினாள். சுவரில் தொங்கிக் கொண்டிருந்த அருணின் பெரிதுபடுத்தப்பட்ட புகைப்படத்தில் கூடத் தூசி படிந்திருந்தது. ஒரு முக்காலியில் ஏறி நின்று கொண்டு அதையும் துடைத்துப் பளிச்சென்று ஆக்கினாள். அண்ணன் அருணின் பெரிய விழிகள் ஓர் ஊடுருவலுடன் தன்னைக் கூர்ந்து பார்ப்பவை போல் அவளுக்குத் தெரிந்தன.

ஜோதிர்லதா கிரிஜா

''என்ன அஞ்சனா பண்ணிண்டிருக்கே?'' என்றாள் அமராவதி.

''அப்பா போனதுலேர்ந்து எல்லாம் வச்சது வச்சபடியே இருக்கிறதுனால எல்லாத்து மேலேயும் ஒரே தூசி. அதான் துடைச்சிண்டிருக்கேன். ரொம்ப வயசானவராச் சேன்னு கூடப் பார்க்காம ஜெயில்ல அப்பாவை என்ன பாடு படுத்தறாளோ!''

அஞ்சனா கண்கலங்கிய வண்ணம் முக்காலி யிலிருந்து கீழே இறங்கினாள்.

''அப்பாவைப் பிடிச்சுண்டு போனதைப் பார்த்த நம்ம தெருக்காரா சொல்லி இருக்கல்லேன்னா அது கூட நமக்குச் சரியாத் தெரிய வந்திருக்காது. ஒரு ஊகந்தான் பண்ணி இருப்போம்.''

''எந்த ஜெயில்ல வெச்சிருக்காளோ, எத்தனை நாள் வெச்சிருப்பாளோ.''

''கல்கத்தா ஜெயில்லேருந்து வந்து கொஞ்ச நாள் கூட ஆகல்லே, அதுக்குள்ள நரேனுக்கு மறுபடியும் ஜெயில் வாசம். மாமனாரும் மாப்பிள்ளையும் ஒரே ஜெயில்ல இருந்தா நமக்கு நிம்மதி.''

''ஆனா அதை எப்படிக் கண்டுபிடிக்கிறது?''

''யாராவது போலீஸ் ஆபீசரைப் பிடிச்சா முயற்சி பண்ணிப் பார்க்கலாம். பாவம், அப்பா. வயசான காலத்துல ஆத்துல விழுந்து கிடக்காம இது என்னத்துக்கு வீண் அக்கப்போர்?''

''நாம கூடத்தான் ஊர்வலத்துல கலந்துண்டோம். ஆனா நம்மளயெல்லாம் போலீஸ் லாரியில ஏத்திண்டு போய் ஊருக்கு வெளியில விட்டுட்டா. அடியம்மா. அங்கேருந்து வந்து சேர்றதுக்குள்ளே உயிரே போயிடுத்து. இப்ப நெனச்சாக் கூட ஏதோ பயங்கரக் கனா மாதிரி இருக்கு,'' என்று அஞ்சனா முகம் வெளிறித் தோள்களைக் குலுக்கிக் கொண்டாள்.

அப்போது வாசலில் ஒரு காரின் ஹாரன் ஓசை கேட்டது. அமராவதி சன்னல் பக்கம் போய் நின்று பார்த்தாள். வந்திருந்தது ஒரு போலீஸ் வேன். அதிலிருந்து மூன்று போலீஸ்காரர்கள் முதலில் குதித்தார்கள். அடுத்து நரேந்திரநாத் பானர்ஜி மெல்ல இறங்கினான்.

''வெள்ளையனே வெளியேறு'' என்று கோஷமிட்டவாறு சென்ற ஊர்வலத்தில் மணவாளநாயுடுவும் கலந்து கொண்டு போலீஸாரின் குண்டாந்தடி பிரயோகத்துக்கு இலக்காகி, காயங்களுடன் படுத்திருந்தார். அவரைக் காணச் சென்றார் ராமசாமி. "வாரும், அய்யர்வாள். உக்காரும்," என்று படுக்கையில் இருந்தபடியே மணவாளநாயுடு ராமசாமியை வரவேற்றார்.

அவர் உடல்நலனை விசாரித்த ராமசாமி, தொடர்ந்து அரசியல்ரீதியாகச் சில நிமிஷங்கள் பேசி முடிப்பதற்கு முன், அவசரமாக வாசற்கதவு தட்டப்பட்டது. போய்ப் பார்த்த திருமதி மணவாளநாயுடு, ''அவரோட மகன் வந்திருக்காங்க. வாப்பா, தம்பி. உள்ளாற வா," என்றாள்.

"அப்பா, ராஜாராம் மாமா செத்துப் போயிட்டார்! ஜெயில்லேருந்து பாடியை நரேந்திரநாத்தோட அனுப்பி வெச்சிருக்கா. செல்லம்மா மாமியாத்துக்கு ஃபோன் வந்தது. வறேளாப்பா?"

படுக்கையில் தளர்வாகப் படுத்திருந்த மணவாளநாயுடு கணத்துக்கும் குறைவான நேரத்துள் நிமிர்ந்தார். அவர் விழிகள் ஒரு நம்ப முடியாமையுடன் குத்திட்டு நின்றன. ராமசாமி உடனே எழுந்து கொண்டார்.

"என்னடா இது அநியாயமா இருக்கு? ஜெயில்ல அடிச்சுக் கிடிச்சுப் பண்ணி இருப்பாளோ?"

"அந்த விவரமெல்லாம் தெரியல்லேப்பா. போய்ப் பார்த்தாத்தான் தெரியும். நரேனைப் 'பரோல்'ல அனுப்பி இருக்காளாம். 'காரியம்' முடிஞ்சதும் திரும்பிடணும்னு சொல்லி, கூடவே ரெண்டு போலீஸ்காரங்களையும் அனுப்பி வெச்சிருக்காங்க."

''இருங்க, அய்யர்வாள். நானும் வர்றேன்.''

"நகரவே கஷ்டப்படறீங்க? நீங்க எப்படி வருவீங்க, நாயுடுகாரு?"

''ஒரு வண்டி பிடிச்சுண்டு மூணு பேருமாப் போயிடலாம் அய்யர்வாள். அவரோட பாடியையாவது நான் பார்க்க வேணாமா?"

'பாடி... வெறும் உடல்... பிணம்... உயிரற்றது...' - நினைத்துப் பார்த்த ராமசாமிக்குத் திக்கென்றது. 'நரேனாவது உடனிருந்தானே?' எனும் அற்ப ஆறுதலும் ஏற்பட்டது.

ராஷ்பிகாரி போசின் அழைப்பை ஏற்று, 1943, பிப்ரவரி 8-ஆம் நாள் ஜெர்மனியைவிட்டு யூ போட்டில் - சிறு கப்பலில் - புறப்பட்ட சுபாஷ் சந்திரபோஸ், எதிர்ப்படக்கூடிய பிரிட்டனின் கப்பல்களைத் தவிர்க்கும் பொருட்டு அட்லாண்டிக் பெருங்கடலில் சுற்று வழியில் பயணம் செய்து, ஏற்கெனவே பேசிக் கொண்டபடி மடகாஸ்கரிலிருந்து நூறு மைல்களுக்கு அப்பால் குறிப்பிடப்பட்டிருந்த ஓரிடத்தில் தயாராகக் காத்திருந்த ஜப்பானிய நீர்மூழ்கிக் கப்பலையடைந்தார். கப்பல் மாறி புறப்பட்டு டோக்கியோவை ஜூன் 13-ஆம் நாளன்று அடைந்தார். ஜப்பான் பிரதமர் டோஜோவைச் சந்தித்தபின், மிகவும் உடல்நலக் குறைவிலும் அவரைக் காண அங்கு வந்திருந்த ராஷ்பிகாரி போஸ் அவரைச் சிங்கப்பூருக்கு அழைத்துப் போனார்.

சிங்கப்பூருக்குப் புறப்படுவதற்கு முன்னால், சுபாஷ்சந்திரபோஸ் டோக்கியோ ரேடியோவில் உரையாற்றினார். இந்தியாவின் கிழக்கு எல்லைகளிலிருந்து பிரிட்டனுடன் போரிடத் தாம் தீர்மானித்துள்ளது பற்றி அவர் அறைகூவினார்.

சுபாஷ் சந்திரபோசுக்குச் சிங்கப்பூரில் ராஷ்பிகாரி போஸ் ஏற்கெனவே செய்து வைத்திருந்த முன்னேற்பாட்டின்படி மகத்

எங்க ஏரியாவில திருடர்கள் அடிக்கிற லூட்டி தாள முடியல!



உங்க வீட்டுக்கு இன்ன தேதியில திருட வரேன்னு திருடன் ஒருத்தன் எங்க வீட்டுக்கு லெட்டர் போட்டிருக்கான்!



தான வரவேற்பு அளிக்கப்பட்டது. ராஷ்பிகாரி போஸ் தமது இடத்தில் இனி சுபாஷ் சந்திரபோஸ் செயல்படுவார் என்று மக்களுக்கு அறிவித்தார். அங்கு கூடி இருந்த ஆயிரக்கணக்கான இந்தியர்கள் ஆரவாரம் செய்தார்கள். இனி இந்திய தேசிய ராணுவத்துக்கு அவரே தலைவர் என்றும் ராஷ்பிகாரி போஸ் அறிவித்தார். பின்னர் சுபாஷ்சந்திர போஸ் 'நேதாஜி' - பெருந்தலைவர் என்று அழைக்கப்படலானார்.

அக்டோபர் 21 ஆம் நாள், மாபெரும் கூட்டத்துக்கு முன்னால், சிங்கப்பூரில் இந்தியாவின் தற்காலிக அரசு அமைக்கப்பட்டு விட்டதாக நேதாஜி அறிவித்தார்.

இந்தியாவிலோ, அக்டோபரில் லின்லித்கோ ஓய்வு பெற, அவரிடத்தில் வேவல் வைசிராயாகப் பதவி ஏற்றார். அவரது பதவியேற்புப் பேச்சிலும் எந்த மாறுபாடும் காணப்படவில்லை. பழைய வைசிராய்களின் பேச்சுக்களுக்கு மறுபதிப்புகளாகவே அது இருந்தது.

அதே ஆண்டு, டிசம்பரில், கராச்சியில் நடந்த முஸ்லிம் லீக் மாநாட்டில், வெள்ளையரை நோக்கி, 'பிரித்து விட்டுப் பிரிந்து விடுங்கள்' எனும் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

அங்கே, சிங்கப்பூரில், நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் 'தில்லி சலோ' - தில்லியை நோக்கிச் செல்லுங்கள் - எனும் போர் முழக்க அறைகூவலையும், 'ஜெய் ஹிந்த்' எனும் தேசிய ஆர்வச் சொல்லையும் தம் படை வீரர்களுக்கு அறிமுகப்படுத்தினார்.

1943-ல் காந்தியடிகளிடம் பாகிஸ்தான் பிரிவினை பற்றித் தாம் தயாரித்திருந்த திட்டத்தை ராஜாஜி சமர்ப்பித்தார். ஜின்னாவின் பிடிவாதம் இனி இம்மியும் குறையப் போவதில்லை என்பது திட்டவட்டமாய்த் தெரிந்து போன பிறகு, 'ராஜாஜியே இந்தத் திட்டத்தைக் கைவிட்டாலும் நான் கைவிடுவதாக இல்லை' என்று காந்திஜி அறிவித்தார்.

இதற்கிடையே கஸ்தூர்பா காலமானார். ஏப்ரல், 1944 இல் ராஜாஜி தமது பிரிவினைத் திட்டம் பற்றி ஜனாப் ஜின்னாவுடன் விவாதித்தார். ஜின்னா அத் திட்டத்துக்கு ஏற்பளிக்கவில்லை. காந்தியடிகள் ஜின்னாவும் தாமும் அது பற்றிக் கூடிப் பேச வேண்டும் என்று கருதினார். எனவே அப்போது சிறையில் இருந்த காந்தியடிகள் விடுதலையானதன் பின்னர் கூடிப் பேச முடிவு செய்தனர்.

"ஆமா? அந்தப் பிராமணன் உடம்பென்ன அங்கங்க வீங்கி இருந்தது? ஜெயில்ல அடிச்சிருப்பாளோ? நானும் கேக்க வேண்டாம்னு இத்தனை நாளும் இருந்தேன்," என்று, அரிசியில் கல் பொறுக்கியபடி ராமசாமியிடம் வினவினாள், விசாலம்.

"ஆமா. ஜெயில்ல கைதிகளை மிருகங்களை விடக் கேவலமா வெச்சிருந்திருக்கா. இவர் ஏதோ கண்டிச்சுக் கேட்டிருக்கார். கண், மூக்குப் பார்க்காம, கண்டபடி அடிச்சு நொறுக்கிட்டா. பாவம். உடம்பெல்லாம் கறுப்புக் கறுப்பாக் கன்னிக் கிடந்தது. வயசான காலத்துல இப்படி ஒரு அடி வாங்கி செத்திருக்க வேண்டாம். எல்லாம் தலை எழுத்து. 'பெரியவரை ஏண்டா அடிக்கிறே?'ன்னு கேட்டு அப்ப பக்கத்துல இருந்த சிங்காரவேலுங்கிற கைதி - அவனும் காங்கிரஸ்காரப் பையன்தான் - கேட்டிருக்கான். அவனோட கையை முறிச்சிருக்கா. ஒரே அராஜகம். கேள்வி முறையே இல்லாம போயிடுத்து!"

"அந்த ரெண்டு பொண்ணுகளுக்கும் இனிமே யார் ஆதரவு? அந்த வங்காளி மாப்பிள்ளையும் ஜெயில்ல இருக்கான். உம். எல்லாம் தலை எழுத்து."

சற்றுப் பொறுத்து, "உயில் கியில் எழுதி வெச்சுட்டுத்தானே போனார் அந்தப் பிராமணன்?" என்று விசாலம் விசாரித்தாள்.

"அதெல்லாம் பக்காவாப் பண்ணி இருக்கார். வக்கீலோல்லியோ?"

"நல்ல காலம். பணக்காரா. இல்லேன்னா சாப்பாட்டுக் கஷ்டம் வேற சேர்ந்துக்கும். அந்த ராமா நாயுடு பொண்டாட்டியாட்டமா பிச்சை எடுத்துப் பொழைக்கும்

படியோ, வீடு வீடா போயி எடுபிடி வேலை செஞ்சு பொழைக்கும்படியோ ஆகி இருக்கும்.''

''அக்கா. உனக்குத் தெரிஞ்சது நம்ம தெருவில இருந்த ராமா நாயுடு. ஆனா இந்தியா முழுக்க எடுத்துண்டா அவராட்டமா எத்தனை பேர் தெரியுமா? அன்னாடங்காய்ச்சிகள்ளாம் காங்கிரஸ் போராட்டங்கள்ள கலந்துண்டு ஜெயிலுக்குப் போயிருக்கா. செத்துப் போயிருக்கா. கை, கால் முறிஞ்சு எதுக்கும் லாயக்கில்லாம போயிருக்கா. ஏழைகள், பணக்காரா, நடுத்தரமானவா, சின்னவா, பெரியவா, வயசானவா, பொம்மனாட்டிகள்னு கிட்டத்தட்ட இந்த நாடே ஆகஸ்டுப் போராட்டத்துல கலந்திண்டிருந்திருக்கு. இப்ப சூடு தணிஞ்சு அதனால சாதகமான பலன் உடனே ஏற்படத்தக்க அளவில இல்லாம போயிட்டாலும், வெள்ளைக்காரனுக்கு இது சரியான சவுக்கடின்னுதான் சொல்லணும்.''

அவளையும் அறியாமல் விசாலத்துக்குக் கண்களில் நீர்க் கோத்தது.



''நமக்காகப் பாடு படறேன்னு சொல்லி ஜெயிச்சுட்டுப் போனாரே சுயேச்சை எம்.எல்.ஏ. அவருக்கு என்ன ஆச்சு?''

''சட்டசபையில் படாத பாடு படறார்!''

— ஞா. ஞானமுத்து

''என்னவோடாப்பா. குடும்பங் குடும்பமா இப்படித் தியாகங்கள் பண்ணிண்டிருக்கு. பொண்டாட்டிக்குப் புருஷன் இல்லே, பெத்தவாளுக்குப் பிள்ளைகள் இல்லைன்னு ஆயிடுத்து. இது எதுல கொண்டு போய் விடப் போறதோ!''

''எல்லாம் நல்லபடியாத்தான் முடியும், அத்தே. ஆச்சு. முக்காவாசி கடந்தாச்சு. இன்னும் கொஞ்சந்தான் பாக்கி.''

ராமசாமி ஒரு நாள் மாலை எழுந்து சட்டையை மாட்டிக் கொண்டு மணவாள நாயுடு வீட்டுக்குப் போனார். வழக்கம் போல் இருவரும் அரசியல் பேசத் தொடங்கினார்கள்.

உலகப் போர் பற்றிய பேச்சுக்களே நாடு முழுவதும் அடிபட்டுக் கொண்டிருந்தன. நேதாஜி சுபாஷ்சந்திரபோஸின் இந்திய தேசிய ராணுவம் தோற்றுவிடப் போவதற்கான அறிகுறிகள் தென்படத் தொடங்கிச் சில வாரங்கள் ஆகி விட்டிருந்தன. இதற்குக் காரணம் பசிபிக் மாகடலில் அமெரிக்காவுடன் ஜப்பான் செய்ய நேர்ந்த மிகக் கடுமையான போரின் விளைவாக, இந்திய தேசிய ராணுவத்துக்குக் கொடுத்திருந்த விமானங்களை ஜப்பான் திரும்பப் பெற்றுக் கொண்டு விட்டதுதான். இதனால் இம்ப்பால் நகரைக் கைப்பற்றும் முயற்சியை இந்திய தேசியப் படையினர் கைவிடும்படி ஆயிற்று. அதற்கு உதவியாக வந்து கொண்டிருந்த தனது படையையும் ஜப்பான் திருப்பியழைத்துக் கொண்டு விட, அதன் நிலை மிக மோசமாயிற்று.

விசாலத்தின் சோர்ந்த முகத்தையும் தளர்ந்த உடலையும் பார்க்கப் பார்க்கக் கங்காவுக்குப் பாவமாகத்தான் இருந்தது. வாய் சற்றே பிளந்திருந்த, அசதியே உருக் கொண்டது மாதிரிப் படுத்திருந்த அவளது கவலையும் களைப்பும் அப்பிய முகத்தைப் பார்த்து அவன் உருகிப் போனான்.

எப்போது படுத்தாலும், மண்டைக்குள் அலாரம் வைத்துக் கொண்டது போல் விசாலம் காப்பி, டிபன் தயாரிக்கச் சரியாக மூன்றரை மணிக்கு எழுந்து கொள்ளுவாள். இன்று அவள் எழுவதற்கு முன்னால் தான் எழுந்து ஒரு சிற்றுண்டி செய்து காப்பியும் போட்டுவிடும் எண்ணம் கங்காவுக்கு வந்தது. 'அத்தை எழுந்து வந்ததும் அப்படியே அசந்து போயிடணும். 'இனிமே நானும் கூட மாட சமையற்கட்டுல உனக்கு ஒத்தாசை பண்ணுவேன். அதனால இனிமே கல்யாணம் பண்ணிக்கச் சொல்லி என்னைத் தொணதொணக்கக் கூடாது' அப்படின்னு சொல்லணும்....'

அவன் வெந்நீர் போட்டு காப்பி டிகாக்ஷன் இறக்கி விட்டான்.

அடுக்களையில் இருந்த டப்பாக்களைத் திறந்து பார்த்ததில் ஒரு டப்பாவில் பம்பாய் ரவை இருந்தது. வெங்காயம் போடாமல் அத்தைக்கும், வெங்காயம் போட்டுத் தங்களுக்கும் உப்புமா செய்துவிடும் எண்ணம் அவனுக்கு வந்தது.

'இந்து பாக சாஸ்திரம்' எனும் சமையல் புத்தகம் அவர்கள் வீட்டில் இருந்தது. அது பரணில் உள்ள ஒரு டிரங்குப் பெட்டியில் வெகு நாட்களுக்கு முன்னால் வைக்கப்பட்டது ஞாபகம் வர, அவன் ஓசைப்படாமல் பரணில் ஏறி அந்தப் பெட்டியை நகர்த்தினான். பூட்டப்படாத அந்தப் பெட்டியைத் திறந்தான். அதன் மூடியில் மூன்று சிறு அறைகள் இருந்தன. அவற்றுள் ஒன்றில் இருந்த ஓர் உறை அவனது கவனத்தைக் கவர்ந்தது. அதை எடுத்துப் பிரித்தான்.

(தொடரும்)

**65**

அன்புள்ள நண்பரே,

நமஸ்கார். வெள்ளையரை எதிர்த்துப் போராடும் பணியில் உள்ள ரிபப்ளிகன் ஆர்மியின் தளபதிகளுள் ஒருவன் இதைத் தங்களுக்கு எழுதுகிறேன். தங்கள் பேத்தி பவித்ரா அண்மையில் எங்கள் பெண் படையினருடன் சேர்ந்து வெள்ளைக் காரர்களுடன் நிகழ்த்திய சிறு போரின் போது உயிரிழந்து வீர சொர்க்கம் அடைந்த செய்தியை மிகுந்த வருத்தத்துடன் தெரி வித்துக் கொள்ளுகிறோம்.... தங்கள் குழந்தை களை இவ்வாறு தேசப்பணியில் அர்ப்பணிக் கும் தங்களைப் போன்றவர்களைப் பாரத மாதா என்றும் வாழ்த்துவாள். இந்தியா சுதந் திரம் அடையும் நாள் வெகு தொலைவில் இல்லை என்பதைப் பவித்ரா போன்ற பெண் கள் எங்களுக்கு உணர்த்தி வருகின்றனர். இப்பேரிழப்பைத் தாங்கும் சக்தியைத் தாங்கள் பெற நாங்கள் பிரார்த்திக்கிறோம்....

தங்கள் அன்புள்ள,

......................................

முதல் முறை படித்த போது கங்கா அதிர்ச்சி யில் இருந்தான். இரண்டாவது முறை படித்த போது அழுகையில் இருந்தான். சமையல் புத்தகத்தை எடுக்கும் ஆர்வம் செத்துப் போய்க் கடிதத்துடன் மெல்லப் பரணி லிருந்து இறங்கினான்.

தன்னறைக்குப் போய்க் கதவைச் சாத்திக் கொண்டு மூன்றாவது முறை படித்து விட்டு அப்படியே படுக்கையில் விழுந்தான்.

"பவித்ரா, பவித்ரா, எங்கிட்ட சொல்லிக் காம நீ போன வருத்தமே என்னை விட்டுப் போகல்லே. அதுக்குள்ள ஒரேயடியா என்னை விட்டுட்டுப் போயிட்டியே...' இதையே திரும்பத் திரும்பப் புலம்பியபடி தலையை உருட்டிக் கொண்டு தாங்க முடியாத துயரத்துடன் கங்கா புரண்டான்.

சரியாக ஐந்து நிமி டங்கள் கழித்து எழுந் தான். அறையை விட்டு வெளியே வந்தான். வெளியே போயிருந்த ராமசாமி இன்னும் திரும்பி இருக்கவில்லை. விசாலம் இன்னும் அதே நிலையில் அரை வாய் திறந்தபடி தூங்கிக் கொண்டிருந்தாள். ரமணியும் வெளியே போயிருந்தது அவனுக்கு வாய்ப் பாக இருந்தது. அழுதது தெரியாமலிருக் கக் குளியலறைக்குள் புகுந்து கொண்டு குளிக்கத் தொடங்கினான். தலையில் ஊற்றிக் கொண்ட தண்ணீருடன் அவனது கண் ணீரும் தொடர்ந்து வழிந்து கொண்டே இருந்தது. தனது சோர்ந்த முகம் அப்பட்ட மாய்த் தெரிந்து விடக் கூடாது என்பதற் காகக் குளித்துக் கொண்டிருந்த அவனுக்கு ஒருவரின் சாவுச் செய்தி தெரிந்ததும் குளிக் கும் வழக்கம் ஞாபகம் வந்தது.

'சுதந்திரப் போராட்டத்துல வாஞ்சிநாதன் மாதிரி நான்தான் போயிடப் போறேன்னு நெனச்சுண்டிருந்தேன். அது மாதிரி நான் போயிட்டா உன்னோட வாழ்க்கை பாழாப் போயிடுமேன்னுதான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க முடியாதுன்னேன். இப்ப? என் னோட வாழ்க்கையைப் பாழாக்கிட்டு நீ போயிட்டியே, பவித்ரா. என் பவித்ரா..."

தண்ணீரும் கண்ணீரும் கலந்து ஓட ஒரு வழியாய்க் குளித்து முடித்து விட்டு அவன் வெளியே வந்த போது எதிர்ப்பட்ட விசா லம், "என்னடா மத்தியானத்துல குளியல்? ஏன் கண்ணெல்லாம் செவந்திருக்கு?" என் றாள்.

"சோப்புப் பட்டுடுத்து அத்தே."

அவன் தனிமையை நாடித் தன்னறைக் குப் போய்க் கதவைச் சாத்திக் கொண்டு மறு படியும் அந்தக் கடிதத்தைப் படித்து விட்டுத் தன் அலமாரியில் பத்திரப்படுத்தி விட்டுப் படுத்துக் கொண்டான். பவித்ராவோடு தனக்கு அறிமுகம் ஏற்பட்ட நாளிலிருந்து தொடங்கி அவன் ஞாபகத்தில் பதிந்து போயிருந்த நிகழ்ச்சிகள் யாவும் வரிசை யாகப் படங்களாய் நகர்ந்தன.

வெளியே போயிருந்த ராமசாமி மூன் றரை மணிக்குத் திரும்பி வந்தார். பரணுக்குக் கீழே அதில் ஏறுவதற்கென்றே போல் போட்டு வைக்கப்பட்டிருந்த உயர்ந்த முக் காலியும், தள்ளி

# மணிக்கொடி

ணாற்போல் தாம் வைத்திருந்த டிரங்குப் பெட்டி முன்னடிக்கு நகர்ந்திருந்த நிலையும் அவ ருக்கு உண்மையை உணர்த்தின.

"கங்கா எங்கேக்கா?"

"குளிச்சுட்டுப் போய் ரூம்ல இருக்கான்."

"குளிச்சானா!"

"ஆமா."

அவர் மெதுவாகப் போய் அவன் அறை வாசலில் நின்றார்.

கதவு உட்பக்கம் தாழிடப்பட்டிருந்தது.

தட்டுவதற்கு அவருக்குத் துணிவு வரவில்லை. கதவைப் பார்த்தபடி சில விநாடிகளுக்கு அப்படியே நின்று கொண்டிருந்தார். 'கங்காவிடம் இனி சுதந்திரம் கிடைத்த பிறகும் கல்யாணப் பேச்சை எடுக்கவே முடியாது' என்று நினைத்துப் பெருமூச்சு விட்டார். 'அவன்தானா மனசு மாறிக் கல்யாணம் பண்ணிக்கலாம்னு முடிவெடுத்தாத்தான் உண்டு... ஆனா அது ஒருநாளும் நடக்கப் போறதில்லே...'

அவர் கதவைப் பார்த்துக் கொண்டே நின்றிருந்த அந்த நேரத்தில் கங்கா அதைத் திறந்து கொண்டு திடீரென்று வெளியே வந்தான். இருவர் பார்வைகளும் சந்தித்துக் கொண்டன.

"கங்கா, உள்ள போய்ப் பேசலாம்" - அவர் அவனது அறைக்குள் நுழைந்தார். அவனும் சென்றான்.

அவனது கட்டிலில் உட்கார்ந்த ராமசாமி, "உங்கிட்ட சொல்றதுனால உனக்கு வீண் மனக்கஷ்டம்கிறதுனாலதான் சொல்லாம இருந்தேன். ராஜாராமன் அந்தக் கவரை எங்கிட்டக் குடுத்து வெச்சிருந்தார்."

"அவாத்துல மத்தவாளுக்கெல்லாம் தெரியுமாப்பா?"

"யாருக்குமே தெரியாது."

"அவாளும் தெரிஞ்சுண்டே எங்கிட்ட தெரியாத மாதிரி நாடகம் போட்றாளோன்னு நெனச்சேன்."

"உங்கிட்ட சொல்லி என்ன லாபம்னுதான் சொல்லல்லே. நீ அந்தப் பொண்ணு மேல ஆசைப்பட்டதை ராஜாராமன் சொன்னார். அதனாலதான். மத்தப்படி உங்கிட்டேருந்து அதை மறைக்கணும்கிற எண்ணத்துனால இல்லே, கங்கா. முடிஞ்சவரைக்கும் உன் மனக்கஷ்டத்தை ஒத்திப் போடணும்கிற ஒரே எண்ணந்தான்."

கங்கா தலையைக் குனிந்து கொண்டான். மறுபடியும் நிறைந்து போன விழிகளிலிருந்து கண்ணீர் உதிரத் தொடங்கிற்று. கங்கா அழுது பார்த்தே இராத அவருக்கு அதிர்ச்சியாகவும் வேதனையாகவும் இருந்தது.

அவன் தோளில் ஆதரவாய்க் கைவைத்து, "வருத்தப்படாதே, கங்கா. என்ன செய்யலாம்? நாம குடுத்து வெச்சது அவ்வளவு



## நெஞ்சை அள்ளும் தஞ்சை வாசகர்களே நினைவுபடுத்துகிறோம்!

உங்களுக்கு தமிழென ஒரு செய்தி! கோவையை அடுத்து உங்கள் மாவட்ட படைப்புகளுக்குத்தான் பிரத்தியோகமாய் இடம் அளிக்கப் போகிறோம். கல்கியின் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' பகுதியில் இடம்பிடிக்க உங்கள் படைப்புகளை அனுப்புங்கள்.

விதிகள் மிக எளிமையானவை :

- இப்போது தஞ்சை மாவட்டத்தில் வசிப்பவர்கள் மட்டுமே எழுதலாம்.
- எழுதும் விஷயங்கள், ஜோக், துணுக்கு, உண்மைச் சம்பவம், புது/மரபுக் கவிதை, மாணவர் நியூஸ், என எதுவாயினும் போஸ்ட் கார்டில் மட்டுமே எழுதலாம்.
- பளீரென்று கவர்ந்திழுக்கும் வண்ணமாக உங்கள் படைப்பு அமைய வேண்டும்.
- கல்கி ஆசிரியர் குழுவினர் தேர்ந்தெடுக்கும் தஞ்சை மாவட்டப் படைப்புகள் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' பகுதியில் இடம் பெறும்.
- பிரசுரமாகும் படைப்புகளுக்குச் சன்மானம் உண்டு.
- உங்கள் படைப்புகளின் தரத்தைப் பொறுத்து அதிகபட்சமாக நான்கு வாரங்கள் வரை இப்பகுதி தொடர்ந்து வெளியாகும்.
- தலைசிறந்த படைப்புக்குச் சிறப்புப் பரிசு உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- ஒருவர் எத்தனை படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். போஸ்ட் கார்டு முகவரிப் பகுதியில் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' என்று குறிப்பிடவும்.
- தஞ்சை பக்கங்களில் இடம் பிடிக்க முந்திக் கொள்ளுங்கள்!

மற்ற மாவட்ட வாசகர்கள் இப்போதே யோசிக்கத் தொடங்கலாமே!

— ஆசிரியர்

தான்" என்றார்.

வேட்டிமுனையால் கண்களைத் துடைத்துக் கொண்ட கங்கா, "அத்தைக்கு இனிமே நாம கொஞ்சம் எடுபிடி வேலையெல்லாம் பண்ணி ஒத்தாசையா இருக்கணும்கிறதோட, சமையலும் கத்துக்கணும்னு திடீர்னு ஒரு எண்ணம் வந்தது. நம்மாத்துல இந்து பாக சாஸ்திரம் ஒரு பழைய புஸ்தகம் இருந்ததில்லியா? அதை எடுக்கிறதுக்காகத்தான் பரண்ல இருக்கிற பெட்டியை நகத்தினேன்...." என்றான்.

அவர் ஒண்ணும் கூறாதிருந்தார்.

"கடைசியில அதை எடுத்துக்காமயே இறங்கிட்டேன். மறந்து போயிடுத்து."

காந்தி - ஜின்னா பேச்சு வார்த்தைகள் 1944 செப்டெம்பர் 9-ஆம் நாள் தொடங்கின. 27-ஆம் நாள் முடிந்தன. ஆனால் ராஜாஜியின் திட்டத்தை ஜின்னா முழுவதுமாக ஏற்கவில்லை. ஏற்கப்படாமைக்கு முக்கியமான இரண்டு காரணங்களில் ஒன்று - இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு பிரிவினையைச் செயல்படுத்தலாம் என்பது காந்திஜியின் கருத்தாக இருக்க, அதற்கு முன்னாலேயே பிரித்தாக வேண்டுமென்பது ஜனாப் ஜின்னாவின் கருத்தாக இருந்தது. அடுத்ததாக, அயல் நாட்டு விவகாரங்கள், தகவல் தொடர்பு இலாகா, நாட்டுப் பாதுகாப்பு, வணிகம், சுங்க இலாகாக்கள் இரு நாடுகளுக்கும் பொதுப் படையாக இருத்தலே இரு நாடுகளுக்கும் நல்லதாக இருக்கும் என்ற காந்தியடிகளின் கூற்றையும் ஜனாப்ஜின்னா ஒப்புக் கொள்ளவில்லை.

இந்தப் பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருக்கையில் விநாயக் தாமோதர் சாவர்க்கர் காந்தியடிகளையும் ராஜாஜியையும் மிகக் கடுமையாக விமர்சித்தார். 'இந்திய மாகாணங்களை தங்கள் விருப்பம் போல் யாருக்கும் தூக்கிக் கொடுப்பதற்கு, அவை காந்திஜியுடையவும் ராஜாஜியுடையவும் தனிப்பட்ட சொத்துக்களா என்ன?'

1945-ல் நேதாஜியின் இந்திய தேசிய ராணுவம் கைப்பற்றி இருந்த மோடக்கைப் பிரிட்டன் தன் வசமாக்கிக் கொண்டு விட்டது. ஜப்பான் ரங்கூனிலிருந்து பின்வாங்கியது. பிரிட்டன் ரங்கூனையும் தன் பிடிக்குள் கொண்டு வந்தது. இந்திய தேசியப் படை வீரர்கள் பிரிட்டனின் போர்க் கைதிகள் ஆனார்கள். ரங்கூன் பிரிட்டனின் வசப்பட்ட பின் மூன்றாம் நாளில் ஜெர்மனி செயலற்றுச் சரணடைந்து விட்டது. அதே நாளில் சுபாஷ் சந்திரபோஸ் வேறிடத்தி

லிருந்து மறுபடியும் திட்டமிட்டு இந்திய சுதந்திரப் போராட்டத்தைத் தொடரும் எண்ணத்துடன் பாங்க்காக் போய்ச் சேர்ந்தார். இருபத்தொரு நாட்கள் நடந்து அவர் தமக்கு விசுவாசமுள்ள சில தோழர்களுடன் பாங்காக்கைச் சென்றடைந்தது செயற்கரிய செயலாகும்.

பின்னர் பாங்க்காக்கிலிருந்து டோக்கியோ செல்லுவதற்காக நேதாஜி விமானத்தில் புறப்பட்டார். செல்லும் வழியில் ஃபார்மோசாவில் உள்ள 'தாய்பே'யில் ஆகஸ்டு 18ஆம் நாளில் அவரது விமானம் தரை இறங்கியது. உணவு அருந்திய பிறகு சுபாஷ் திரும்பவும் விமானத்தில் தாய்பேயை விட்டுக் கிளம்பினார். அதன் பிறகு விமானத்துக்கு என்ன நேர்ந்தது என்பது உறுதியாகத் தெரியவில்லை. அவர் சென்ற விமானம் தீப் பிடித்ததில் விபத்துக்குள்ளாகி, இதனால் சுபாஷ் இறந்தார் என்று ஜப்பான் ரேடியோ ஒலிபரப்பிய செய்தியில் உண்மை இல்லை எனும் வதந்தி பரவிற்று. எனினும் அதன் பிறகு சுபாஷ் எனும் போராளி யார் கண்களுக்கும் தென்படவில்லை.

இதற்கு முன்னால், அதாவது ஜனவரியில், ராஷ்பிகாரிபோஸ் ஜப்பானில் காலமாகி இருந்தார்.

அதே ஆகஸ்டில்,

ஹிரோஷிமா, நாகசாகி ஆகிய ஜப்பானின் நகரங்களில் அமெரிக்கா அணுகுண்டுகளை வீசி அவற்றை சர்வநாசப்படுத்தியதும், ஜப்பானும் சரணடைய, உலகப் போர் நிச்சயமான ஒரு முடிவுக்கு வந்தது.

இந்தக் காலகட்டத்தில் பிரிட்டனில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் தொழிற் கட்சி பெரும்பான்மை வலிமை பெற்று அட்லியை முதலமைச்சராய்க் கொண்ட அமைச்சரவையை அமைத்தது.

இதனிடையில், இந்தப் போரில் பிரிட்டனிடம் பிடிபட்ட, இந்திய தேசிய ராணுவப் படைவீரர்கள் சுமார் 20,000 பேர் மீதும், போர்ப்படை அதிகாரிகளாகிய ஷா நவாஸ், தில்லான், செய்கால் ஆகிய மூவர் மீதும் பிரிட்டனின் இந்திய அரசு வழக்குத் தொடுத்தது. இந்த அதிகாரிகள் மூவரும் முறையே இந்து, முஸ்லீம், சீக்கிய மதங்களைச் சேர்ந்தவர்கள். எதிரிகளின் படையில் சேர்ந்து தேசத் துரோகம் செய்ததாக இவர்கள் மேல் சுமத்தப்பட்ட குற்றத்தை ஆட்சேபித்து நாடெங்கிலும் ஆர்ப்பாட்டங்களும் கடையடைப்புகளும் நிகழலாயின. சர் தேஜ் பகாதுர் சாப்ரு, ஜவாஹர்லால் நேரு, புலாபாய் தேசாய், ஆசப் அலி, குன்வர் சர் திலீப் சிங் ஆகிய ஐவரும் இவர்கள் சார்பில் வக்கீல்

களாகி வழக்காடினர். சில தேசியத் தலைவர்களும் சர்க்காருக்கு எதிரான ஆவேசமூட்டும் பேச்சுக்களிலும், ஆர்ப்பாட்டங்களிலும் ஈடுபட்டு, அவர்களுக்கு நியாயம் வழங்கப்படாவிட்டால், மறுபடியும் ஒரு சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கப்படும் என்று அரசை அச்சுறுத்தலாயினர். மதவேறுபாடு இன்றி இதில் அனைத்துக் கட்சிகளும் ஒன்றுபட்டன.

நாடு முழுவதும் அதைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தது.

**"வா,** கங்கா. உக்காரு..."

அமராவதியைப் பின்தொடர்ந்து போய், கங்கா நாற்காலியில் அமர்ந்தான். கம்பளியில் முழுக்கைச் சட்டை பின்னிக் கொண்டிருந்த அஞ்சனா அதை மேசை மீது போட்டுவிட்டு அவனுடன் பேசத் தயாரானாள். ராஜாராமய்யரின் மறைவுக்குப் பிறகு இருவரும் இளைத்தும் களை இழந்தும் காணப்பட்டதைக் கங்கா கசப்புடன் மனத்தில் வாங்கிக் கொண்டான். "நரேன்கிட்டேருந்து லெட்டர் வந்ததா?"

"வந்தது. ஒண்ணும் விசேஷமா இல்லே. அதான் சென்சார் பண்றாளே? என்னத்தை எழுதுவார்? சும்மா, 'நான் சவுக்கியம், நீ சவுக்யமா'ன்னு எழுதிண்டிருக்கோம்."

"இன்னும் ரெண்டு நாள்ல மெட்ராஸ்ல ஒரு கலாட்டா இருக்கும். அதுல கலந்துக்கப் போறோம்."

"என்ன கலாட்டா? 'கலந்துக்கப் போறோம்'னா, யாராரு?"

"ரமணியும் நானும்தான். அப்பாவை வர வேண்டாம்னுட்டோம்."

"எதுக்கோசரம் கலாட்டா?"

"டில்லியில ஆர்மி ஆபீசர்ஸுக்கு எதிரா கேஸ் நடக்கிறதோல்லியோ? அதுல அவாளுக்கு மோசமான தண்டனை குடுத்துடுவான்னு ஒரே வதந்தியா இருக்கு. அவா எல்லாருமே தேசபக்தர்கள். அவாளுக்கு எந்த தண்டனையும் தரக்கூடாதுன்னுதான்."

இரண்டு பெண்களும் மவுனமாக இருந்தார்கள்.

"அப்புறம் ஒரு விஷயம்..."

அவன் குரல் சன்னமாகி விட்டதையும் அதில் தென்பட்ட தயக்கத்தையும் கவனித்து, "என்ன, கங்கா? சும்மா சொல்லு," என்றாள் அமராவதி.

"வேற ஒண்ணுமில்லே... எனக்கும் பவித்ராவோட ஃபோட்டோ இருந்தா ஒண்ணு வேணும்."

அமராவதி, சிரித்து விட்டு, "ஓ. அதுக்கென்ன? தரேனே!" என்று எழுந்து உள்ளே போனாள்.

அஞ்சனா அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் முகம் தாழ்ந்திருந்ததும் அதில் வெட்கத்துக்குப் பதில் துயரம் படிந்திருந்ததும் அவள் கவனத்துக்குத் தப்பவில்லை.

கொஞ்ச நேரத்தில் திரும்ப வந்த அமராவதி, போட்டோவை அவனிடம் கொடுத்து விட்டு, "என்ன, கங்கா? ஏன் ஒரு மாதிரி ஆயிட்டே?" என்றாள்.

"...பவித்ராவுக்கு எதானும் ஆகி இருக்குமோன்னு இப்பல்லாம் அடிக்கடி சந்தேகம் வருது."

அமராவதியின் கண்கள் நொடிக்குள் நிறைந்தன. "உன் வாயால அப்படியெல்லாம் சொல்லாதே, கங்கா."

"கூடிய சீக்கிரம் சுதந்திரம் வந்துடும். அப்ப் எல்லாக் கைதிகளையும் விடுவிப்பா. நம்ம பவித்ராவும் அப்ப விடுதலை ஆயிடுவா" என்றாள் அஞ்சனா.

கங்கா விடைபெற்றான்.

சென்னைக் கண்டன ஊர்வலத்தில் கலந்து கொண்ட கங்காவும் ரமணியும் கைது செய்யப்பட்டார்கள். வேலூர்ச் சிறைச் சாலைக்குக் கொண்டு செல்லப்பட்டார்கள்.

(தொடரும்)



"அங்க என்ன பெரிய கூட்டமா இருக்கு...?"

"மந்திரி பையன் ஃபெயிலாயிட்டானாம். பாஸ் போடச் சொல்லிப் போராட்டம் நடத்தறாங்க!"

- எஸ். கண்ணன்

"என் மாப்பிள்ளை ரொம்ப தங்கமானவர்..."

"எப்படிச் சொல்றீங்க...?"

"வரதட்சிணை இல்லாம என் இரண்டாவது பொண்ணையும் கல்யாணம் பண்ணிக்கிடட்டுமான்னு கேட்கிறார்!"

- எஸ். எஸ். பூங்கதிர்



# ஜுரம்



**சு**ருண்டு படுத்திருந்தாள் நந்திதா. தலையணையை அணைத்துக் கொண்டு, இடது கையை பாதுகாப்பாக அதன் மேல் போட்டுக் கொண்டு, அருகே அம்மா இருக்கிற நினைப்பில் தூங்கினாள். மஞ்சுளா அவளருகில் வந்து நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள். ஜுரம் குறைந்திருந்தது. ஸ்டூல் மேல் ப்ளாஸ்கும் பிரித்த மாத்திரைக் காகிதமும் விக்ஸ் டப்பாவும் இருந்தது. சுவற்றில், காலண்டரில் மாதுரி தீட்சித். அதனருகே நந்திதாவும் ரவியும் மஞ்சுளாவின் இருபுறமும். தேக்கடி போன போது எடுத்தது. ஓரத்தில் உபயோகமில்லாத பாட்மின்டன் ராக்கெட்.



மஞ்சுளா யோசித்தாள்.

லீவு போட்டு விடலாமா பேசாமல்? வேண்டாம். இன்று அவசியம் ஆபீசில் தலையைக் கொடுத்தாக வேண்டும். எப்படியும் இன்றைக்குள் அந்த விஷயத்திற்கு ஒரு தீர்வு கண்டாக வேண்டும்.

தியாகராஜன் சுகமாக தூங்கிக் கொண்டிருந்தான். கணவன்! முதன் முதலில் அவள் எம்பிராய்டரி செய்திருந்ததை, புதிதாய் பண்ணின 'எக்பெனடிக்ட்'டை, அவளது சர்ரியலிச பெயின்ட்டிங்கைப் பாராட்டினவன்.



இப்போது?

மெலிதாய்க் கணவனைப் பார்த்தாள். பக்கத்தில் படுத்திருந்த ரவியும் அதே போல ஒருக்களித்துப் படுத்திருந்தான். அதே திமிர்? அச்சு அசலாக அதே சாயல். இவனும் தியாகு மாதிரியே வருவானா?

தூங்கப் பிடிக்காமல் எழுந்து பின்கட்டிற்கு வந்தாள். பல் தேய்த்து முகம் அலம்பிக் கொண்டு, காலை நேர குளிர்காற்றின் ஜில்லிப்பை அனுபவிக்க இயலாத அபார்ட்மென்ட் சிறையின் ஆறாவது மாடியிலிருந்து வெளியே பார்த்தாள். தொலைவில் சாம்பல் வானம். 'U' வடிவ பறவைகள் கூட்டம். அப்போது மளுக்கென ஒரு கண்ணீர் முத்து மஞ்சுளாவின்

**விஜயநிலா**

விழியோரம் திரண்டது.

எத்தனை பெரிய வாய்ப்பு. அலுவலகத்தில் எத்தனை பேரின் பச்சைக் கண்களிடையே கிடைத்த பதவி உயர்வு. எத்தனை சடுதியில் இந்த வாய்ப்பு. அப்பாவின் ஞாபகம் வந்தது. அப்பா... நீங்கள் நினைத்த மாதிரியே ஆபீசர் போஸ்ட். ஆறே வருடத்தில் என் திறமைக்கான சன்மானம். பெரிய தாய் தனி வீடு, ஃபோன், கார் இத்யாதி...

"த பாரு மஞ்சு. இப்ப எதுக்கு உனக்கு ப்ரமோஷன்? இதை ஒப்புத்துக்கிட்டியானா உன்னால வீட்டை கவனிக்க முடியாது. அப்புறம் ரவி, நந்திதாவை யார் பார்த்துக்குவா?"

மிக அழகான வார்த்தைகளை ஜாக்கிரதையாக அமைத்து சொன்னான். தொலைபேசியில் சந்தோஷத்தை தெரிவித்தவுடன். அலுவலகத்தில் அனைவரும் அவளது ரியாக்ஷனை கவனித்துக் கொண்டிருப்பது போன்ற உணர்வு.

"இல்லீங்க. சாதாரணமா எல்லாருக்கும் கிடைக்கிற வாய்ப்பு இல்லை. என் திறமை, தகுதியைப் பார்த்துட்டு..."

"சரி எதுவானா என்ன. லுக் மஞ்சுளா. எனக்கு ஊர் ஊரா சுத்தற சேல்ஸ்மேன் வேலை. வீட்டை யார் கவனிக்கறது. குழந்தைங்களோட படிப்பு பாழாப் போயிரும். யாராவது கேட்டா ஒப்புத்துக்காதே. யோசிச்சு பதில் சொல்றேன்னு சொல்லு."

"சரிங்க"

ஸீட்டிற்கு வந்ததும் ஒரு கும்பல் அவளை உற்சாகமாய் மொய்த்தது. கசப்பாகச் சிரித்தாள்.

"என்ன சொல்றாரு உன் ஹஸ்பெண்ட்? எப்ப மஞ்சு எங்களுக்கெல்லாம் ட்ரீட் தரப் போறே?"

மறுபடி சிரித்தாள்.

இப்போது அந்தக் காட்சி மறைந்து நேற்றிரவு அவன் பேசியது நினைவிற்கு வந்தது. ஏன் இத்தனை உபதேசங்கள். பணிவான மிரட்டல்கள். எதற்காக தியாகு என்னை மூளைச் சலவை செய்கிறான்? வீட்டை கவனித்துக் கொள்ளத்தான் பெண்டாட்டி என்றால் அவளை எதற்காக வேலைக்கு அனுப்ப வேண்டும்?

சொல் என் கணவனே. உனக்கு எது வேண்டும்? நானா இல்லை என் பணமா?

புரிந்தது அவளுக்கு. நானும் வேண்டும். என் பணமும் வேண்டும். வா, நீ ஒரு பெண். உன்னை தெய்வமாய் பூஜிக்கிறேன். இந்த வீடும் நானும் என் குழந்தைகளையும் நீதான் பராமரிக்க வேண்டும். நீ இல்லையென்றால்

**"கையில காசு இல்லாம சைனீஸ் ஓட்டலுக்குப் போய் சாப்பிட்டது தப்பா போச்சு."**

**"ஏன்?"**

**"பத்து பாம்பைக் கையில கொடுத்துத் தோல் உரிக்கச் சொல்லிட்டாங்க!"**

**— சீர்காழி வி. ரேவதி**

எல்லாம் ஸ்தம்பித்து விடும் இங்கு. அதற்காக வீட்டில் வளைய வந்து கொண்டிரு. வேலைக்குப் போனால் என்னை விட அந்தஸ்தில் உயர்ந்து விடாதே. இதுதானே உன் விருப்பம். சிரிப்பு வந்தது அவளுக்கு.

அப்பா, நீங்கள் மட்டும் எப்படி தப்பிப் பிறந்தீர்கள் அப்பா? அம்மாவை எப் படி உங்களால் நேசிக்க முடிந்தது? மாங்கு மாங்கென்று அடுப்படியில் வேகிற அம்மாவை உங்களுக்கு சமமாய் எப்படி ஈகோ இல்லாமல் நடத்த முடிந்தது?

பால் பாக்கெட் எடுத்து வந்து பிரித்து டிகாஷன் இறக்கி காப்பி போட்டாள். இப்போது தியாகராஜன் எழுந்து வந்திருந்தான்.

"நந்திதாவுக்கு எப்படியிருக்கு இப்ப?"

"பரவாயில்லை. ஜுரம் விட்டிருக்கு."

"சரி விடு. என்ன முடிவு பண்ணிருக்கே?"

"எதைப் பத்தி?"

முறைத்தான். காலி டம்ளரை சமையல் மேடையில் வைத்து விட்டு கேட்டான்.

"என்ன நினைச்சுட்டு பேசற நீ. அதுக்குள்ள ஆபீசர் தோரணை வந்தாச்சா?"

"சே என்ன பேச்சு பேசறீங்கப்பா. சாதாரணமாத்தான் கேட்டேன். கொஞ்சம் நிதானமா யோசனை பண்ணிப் பாருங்க. லேசில வராத சான்ஸ். ரெண்டாயிரம் ரூபா மாசா மாசம் கூட வரும். இன்னும் நிறைய வசதிங்க."

"அதனால சில இழப்புகளும் வருதே" என்று லுங்கியை மடித்துக் கொண்டு இடுப்பில் கையூன்றியபடி சொன்னான்.

"அதனால என்னங்க. யாராவது நல்ல ஆளா போட்ரலாம்!"

"ஸோ வசதி வந்துட்டா எல்லாத்துக்கும் ஆள் போட்ரலாம். ஸப்போஸ் எனக்கு உடம்பு முடியாமப் போச்சுன்னா கூட....."

என்ன மனிதன் இவன். இவன் கண்களில் பொறாமை இருக்கிறது. இது என் கணவனே இல்லை. இதெல்லாமே கூட



நிஜத்தில் நடக்காமல் நான் யாருடைய கன விலாவது இருக்கிறேனா. சட்டென்று என்னை எழுப்பப் போகிறார்களா?

"என்ன பதிலையே காணோம்?" பாத்ரூமி னின்று கேட்டான் வாயில் ப்ரஷ்ஷுடன்.

"த பாருங்க, உங்களை விட எனக்கு சீக்கிரம் ப்ரமோஷன் வந்திருச்சேன்னு ஏதோ ஒரு காம்ப்ளக்ஸ்தான் உங்களை அப்படிப் பேசச் சொல்லுது. கொஞ்சம் யோசிச்சுப். பாருங்க."

ஒரு செகண்ட் அத்தனை இரத்தமும் அவன் முகத்தை விட்டு வெளியேறி விட்ட மாதிரி இருந்தது. அவன் கண்களில் ஒரு வினோத ஜொலிப்பு தென்பட்டது. தொண் டையை செருமிக் கொண்டான்.

"யாருக்குடி காம்ப்ளக்ஸ்? உனக்குதான் ஸுப்பீரியாரிட்டி காம்ப்ளக்ஸ் வந்திருச்சு. ஆறு வருஷத்துல யாருக்குமே லேசில கிடைக்காத ப்ரமோஷன் சான்ஸ்.... அதெப் படிய்யா சரியா என் பெண்டாட்டிக்கு மட்டும் கரெக்டா வந்துருது! ஒரு சந்தேகம் வருதா இல்லையா. நீதான் உன் ஆபீசிலேயே ஜோன் ஆஃப் ஆர்க்கா?" என்றான்.

கையில் வைத்திருந்த காப்பியை சிங்கில் கொட்டினாள். சே, இவ்வளவுதானா உன் படிப்பு, அறிவு எல்லாம். இவனுக்கா... இவ னுக்கா துணிந்து கழுத்தை கொடுத்தோம். இவனுக்கா இரவுகளில் உடம்பைக் கொடுத் தோம்! உடம்பு முழுவதும் புழு ஊர்வதாக உணர்ந்தாள் மஞ்சுளா.

பேசாமல் டிவோர்ஸ்?

சாத்தியமில்லை. ரவி, நந்திதாவின் மனதை என் எந்த ஒரு செயலும் பாதிக்க லாம். அன்று முழுக்க ஆபீசில் மௌனமாய் அழுதாள். உள்ளே எம்டியின் குஷன் பதித்த நாற்காலி, சன்னமான ஏசி, இண்ட்டீரியர் டெகரேஷன் மனதை என்னவோ செய்தது. எனக்கும் இம்மாதிரி ஒரு பதவி, அதற்கான ஆளுமை பொருந்திய அறை கிடைக்க வாய்ப்பிருக்கிறது. என்ன செய்யப் போகி றேன் நான்? அன்றிரவு தீர்மானித்தாள் மஞ்சுளா.

"என்னங்க"

"என்ன?"

முகம் திருப்பாமல் குரல் மட்டும் கேட் டது. சொன்னாள்.

"நான் முடிவு பண்ணியாச்சுங்க!"

"......................"

"நான் ப்ரமோஷன் வேணாம்னு எழுதிக் கொடுத்திட்டேன். நீங்க சொன்னது முழுக்க யோசிச்சு பார்த்தேன். குழந்தைங்க படிப்பு கெடும். நீங்களும் ஆபீஸ் வேலையா ஊர் ஊரா அலையணும். உங்களையும் கவனிச் சுக்க முடியாது."

"அதான் நான் சொன்னேன், நீ கேக் கலை. பணம் என்ன பணம். பின்னால சம்பாதிச்சுக்க முடியாதா?"

அந்த பெண் உருவம் மெல்ல மண்டி யிட்டது. அதை ஆண் உருவம் பெருமை யாய் தன் வெற்றியாய் எண்ணி எக்காள மிட்டது. தலையை குனிந்து கொண்டு சொன்னாள்.

"ஆனாலும் நீங்க என்ன அத்தனை மோசமா பேசியிருக்க வேணாம்."

"என்ன பண்றது. சேல்ஸ் டார்க் கெட்டை அடையணும்னு மனுஷன் இருக் கற எரிச்சல்ல நீ வேற வந்து முரண்டு பண் ணினா வெறுப்பு வருமா வராதா? சரி ஏதோ பேசிட்டேன். இப்ப என்ன, நந்திதாவை டாக்டர்கிட்ட காண்பிச்சு டானிக் வாங்கித் தரணும். நாளைக்கு சன்டேதான... எங்கேயா வது வெளியே போவமா?"

"சரி."

எக்ஸிபிஷனில் நந்திதா முரண்டு பிடித் தாள். ரவி அவளை முதுகில் அடிக்க வர, அவள் மஞ்சுவின் பின்னால் வந்து ஒண்டிக் கொண்டு, "போடா ஸ்கெலிட்டன் பொம்மை. மூஞ்சுறு" என்றாள்.

"பாரும்மா" என்றான் ரவி. தியாகராஜன் சிரித்தான்.

"ஒரு ஆம்பிளைப் பையனை எதிர்த்துப் பேசலாமா? மன்னிப்பு கேளு நந்து" என் றாள் மஞ்சுளா.

நந்திதா தலையசைத்து மறுத்தாள்.

"எதுக்காக? நான் என்ன தப்பு பண்ணி னேன்? அவன்தான் என்னை முதல்ல ரோபோக்குட்டின்னான். ஆம்பிளைப் பையன்னா பெரிய கொம்பா? நான் மாட் டேம்பா" என்று நந்திதா சொன்னதும்,

"எங்கே இன்னொரு தரம் சொல்லு?" என்றாள் மஞ்சுளா.

ரமணிக்கும் கங்காவுக்கும் அவர்கள் அடைக்கப்பட்ட வேலூர் சிறையில் ஓர் ஆச்சரியம் காத்திருந்தது.

மாட்டுக் கொட்டடி போல் இருந்த அந்தச் சிறையறைக்குள் தள்ளப்பட்ட கங்காவையும் ரமணியையும் பார்த்து அங்கிருந்த நரேந்திரநாத் பானர்ஜி வியப்பிலும் மகிழ்ச்சியிலும் ஆழ்ந்தான்.

"துக்கத்திலும் ஒரு சந்தோஷம்" என்று நரேந்திரநாத் பானர்ஜி சிரித்தான்.

'பவித்ரா செத்துப் போய் விட்டது மிஸ்டர் நரேந்திரநாத் பானர்ஜிக்குத் தெரியுமா?'

கங்கா இயந்திர இயக்கத்துடன் நரேனின் நீட்டிய கைகளைப் பிடித்துக் குலுக்கினான்.

"அப்பா வீட்டில்தானே இருக்கிறார்?"

"ஆமாம். போராட்டத்தில் கலந்து கொள்ளக்கூடாதென்று சொல்லி விட்டோம். அப்புறம் அத்தை தவித்துப் போவாள். வயதாகி விட்டது. பலவீனமாக இருக்கிறார். மகிழ்ச்சியாகவும் இல்லை. அதனால்தான்."

"மிஸ்டர் ராஜாராமன் வீட்டில் எல்லாரும் நலமா?"

"ஓ, இருக்கிறார்கள்."

"ஐ.என்.ஏ. ஆபீசர்களுக்கு ஆதரவு காட்ட நடந்த ஊர்வலத்தில்தானே கைதானீர்கள்?"

"ஆமாம்."

"தங்கள் நாட்டை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் ஒரு நாட்டுக்கு எதிராய்ப் போரிடுவது தேசத் துரோகமாம். எப்படி இருக்கிறது கதை!"

"வெள்ளைக்காரனிடம் கூலி வாங்கிக் கொண்டிருக்கிறார்களே. கூலி வாங்குகிற இடத்துக்குத் துரோகம் செய்யலாமா?" என்று ரமணி சிரித்தான்.

"அப்போது எசமானத் துரோகம் என்று சொல்லு. தேசத் துரோகம் என்று ஏன் சொல்லுகிறாய்?"

"என்னய்யா காரசாரமாப் பேசிட்டிருக்கீங்க?" என்று நடுத்தர வயதைக் கடந்த ஒருவர் அவர்களுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார்.

நரேந்திரன், "இவர் பெயர் செபாஸ்டியன். சென்னைத் துறைமுகத்தில் இருந்தார். நம் ராஜாராமய்யருக்கு லண்டனுக்குக் கடிதம் அனுப்ப ஒத்தாசை செய்வார்" என்றான்.

"ராஜாராமன் சொல்லி இருக்கார். நீங்க எப்படி இங்கே..."

"ஏந்தம்பி! எனக்கு மட்டும் தேச பக்தி வராதா? ரொம்ப நாளுக்கு முந்தி புரியாதவனா இருந்தேன். அப்புறம் புரிஞ்சுக்கிட்டேன். சிவப்பிரகாசம், ஞானப்பிரகாசம்னு ரெண்டு அண்ணந்தம்பீங்க. சி.ஐ.டி. உத்தியோகத்துல இருந்தவங்க. ஒருத்தன் ரகசியமாக் காங்கிரஸ்காரங்களுக்கு ஒத்தாசையா இருந்தான். தம்பிக்காரன் வேற மாதிரி..."

"தெரியும், தெரியும். ராஜாராமய்யர் சொல்லி இருக்கார். அண்ணன்னு தெரியாம, மாறுவேஷத்துல இருந்த சிவப்பிரகாசத்தைத் தம்பி ஞானப் பிரகாசம் சுட்டுட்டாரு. அதைத்தானே சொல்ல வர்றீங்க?" என்றான் கங்கா.

"ஆமா. அது விசயந் தெரிஞ்சதும் எனக்கு மனசே ஒரு மாதிரியாயிடிச்சு. அந்த ஞானப் பிரகாசத்தை எனக்குக் கொஞ்சம் தெரியும். அதுக்கு முந்தியே எனக்கு அவங்கூடப் பழக்கம் ஏற்பட்டிச்சு. அவனும் அண்ணனோட பாதையில போயிருந்தா வம்பே வந்திருக்காது.



## ...ணிக்கொடி

### ஜோதிர்லதா கிரிஜா

கடைசியில சுட்டுக்கிட்டுச் செத்துட்டான். அன்னையிலேருந்து எனக்கு மனசு மாறிடிச்சு."

"நீங்க ஆகஸ்டுப் புரட்சியில கைதானவரா?"

"ஆமாங்க."

பக்கவாட்டில் நரேந்திரநாத் பானர்ஜி தன்னை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தது தெரிய, கங்கா தலையைத் திருப்பி அவனைப் பார்த்தான். நரேந்திரநாத் தன் விழிகளை அகற்றிக் கொண்டான்.

'பாவம் இந்த இளைஞன். பவித்ராவுக்காகக் காத்துக் கொண்டிருப்பதில் திருமண வயதை நிறையத் தாண்டி விட்டவன். இவனிடம் உண்மையைச் சொல்லி விடலாமா?.... கூடாது. எப்படியும் இவன் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளவரை திருமணம் இல்லை என்று இருப்பவன். அதைச் சொல்லுவதால் எந்த லாபமும் இல்லை. வேண்டாம். இப்போது வேண்டாம்.... போராட்டம் முடிந்து இவன் திருமணத்துக்குத் தயாராகும் போது சொல்லி விடலாம்...'

**பி**ப்ரவரி 1946-ல் நரேந்திரநாத், கங்கா, ரமணி, செபாஸ்டியன் ஆகியோர் இன்னும் பல கைதிகளுடன் விடுதலையடைந்தனர்.

கங்காவும் ரமணியும் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த போது ராமசாமி கூடத்தில் ஊஞ்சலில் இருந்தபடி நாளிதழ் படித்துக் கொண்டிருந்தார். விசாலம் நூலாம்படை அடித்துக் கொண்டிருந்தாள். இருவரையும் பார்த்ததும், கையிலிருந்த கொம்பை அப்படியே போட்டு விட்டு, அவள் ஓடி வந்தாள்.

"கொஞ்சங் கூட ஈவிரக்கமே இல்லாத பிள்ளைகள்டா நீங்க ரெண்டு பேரும்... எப்படி இளைச்சுப் போயிட்டேள்! ஜெயில்ல சாப்பாடு நன்னாவே இருக்காதாமே? உக்காருங்கோ, காப்பி கொண்டு வரேன்" என்று உள்ளே விரைந்தாள்.

"பாவம்டா உங்க அத்தை. நீங்க ரெண்டு பேரும் இப்படி அடிக்கடி போராட்டத்துல கலந்துக்கக் கூடாதுன்னு எனக்கே தோணிப் போயிடுத்து. எல்லாம் போறும். நம்ம பங்குக்கு நிறைய ஜெயில் வாசம் பார்த்தாச்சு. அடி வாங்கியாச்சு..."

"அத்தையோட காப்பி அருமை தெரியறதுக்காகவே இன்னொரு தரம் ஜெயிலுக்குப் போகலாம்" என்றான் ரமணி.

**இ**ந்தியாவுக்கு சுதந்திரம் தருவது பற்றியும் பிரிவினை, அரசியல் அமைப்பு இவை பற்றியெல்லாம் பேசி முடிவு செய்யவும் மார்ச் மாதம் இங்கு வந்த காபினெட் மிஷன், கூட்டமைப்பு ஆட்சி முறையைச் சிபாரிசு செய்தது. அயல்நாட்டு விவகாரங்கள், பாதுகாப்பு, தகவல் தொடர்பு ஆகியவை மைய அரசிடமும், மற்ற அதிகாரங்கள் யாவும் மாநில அரசுகளிடமும் இருக்க வேண்டுமென்றும், இந்துக்களின் மாகாணங்கள் எனவும், முஸ்லிம்களின் மாகாணங்கள் எனவும் அவரவர் மக்கட்தொகைக்கு ஏற்ப மாகாணங்கள் அமைக்கப்பட வேண்டுமென்றும், இந்துக்களும் முஸ்லீம்களும் சம அளவு எண்ணிக்கையில் உள்ள மாகாணங்கள் மூன்றாவது பிரிவாக இருக்குமென்றும் அது பரிந்துரைத்தது. சமஸ்தானங்கள் பற்றிய பேச்சு வார்த்தையைப் பின்னர் நடத்தலாமென்றும் அது கூறியது. முஸ்லிம்களுக்குத் தனி நாடு என்பதை அது ஆதரிக்கவில்லை. வகுப்பு வாரியாகச் சட்டசபைகளில் அவர்களுக்கு இடங்கள் ஒதுக்கலாமென்றும் அது கூறியது. சீக்கியர், முஸ்லிம் லீக், காங்கிரஸ் ஆகிய மூன்று பிரிவினரையுமே இந்த யோசனை திருப்திப்படுத்தாத போதிலும் கூடுமானவரை ஆதாயம் தேடும் எண்ணத்துடன் இரண்டு பெருங்கட்சிகளும் அதை ஏற்றன. ஆனால் சீக்



''அரசியல்வாதியையெல்லாம் கோவில் டிரஸ்டியா போட்டா இப்படித் தான்.''

''ஏன், என்னாச்சு?''

''ஸ்ரீராமநவமியன்னிக்கு, 'இன்று பிறந்த நாள் காணும் அண்ணன், ராமன் அவர்களே, நீர் பல்லாண்டு வாழ்க'ன்னு நோட்டீஸ் அடிச்சு ஊர் பூரா ஒட்டிட் டாரு.''

- டி. என். பாலகிருஷ்ணன்

கிரமே கருத்து வேற்றுமைகள் முளை விட முகமது அலி ஜின்னா காபினெட் மிஷனுக் குத் தான் அளித்திருந்த ஆதரவை விலக்கிக் கொண்டார்.

இடைக்கால அரசில் காங்கிரசின் பதவி யேற்புக்கு முன்னால், அதாவது ஆகஸ்டு 6 ஆம் நாள், வைசிராய் ஜவாஹர்லால் நேரு வுக்கு அழைப்பு விடுத்ததன் பின்னர், முஸ் லிம் லீகின் பொதுக் குழுவைக் கூட்டி ஜனாப் ஜின்னா ஆகஸ்டு 16 ஆம் நாளை 'நேரடிச் செயல் நாள்' என்று அறிவித்தார். அது மட்டுமின்றி, 'பாகிஸ்தானை அடைந்தே தீருவோம்' எனும் கோஷத்தையும் அறிமுகப் படுத்தினார்.

1946, ஆகஸ்டு 16 இல், வங்காளத்தில் இந்துக்களுக்கு எதிராக விவரிக்க முடியாத, கொடுமையான கலவரங்கள் நிகழ்ந்தன. கொலைகளும் கொள்ளைகளும் கொளுத்து தல்களும் கற்பழித்தல்களும் கட்டாய மத மாற்ற அசிங்கங்களும் வங்காளத்தில் தொடர்ச்சியாக மூன்று நாட்களுக்கு நடை பெற்றன. மொத்தத்தில் இந்துக்களின் வாழ்க்கை நரகமாயிற்று.

வங்காளத்தில் தலைவிரித்தாடிய மத வெறிச் செயல்கள் நவகாளியில்தான் மிக மோசமான அளவில் நிகழ்ந்தன. மக்களுக்கு ஆறுதல் கூறவும் அவர்களை நல்வழிப்படுத்த வும் காந்தியடிகள் கல்கத்தாவுக்கு முதலில் விரைந்தார். இதற்குள் முஸ்லிம்கள் குறை வாக வாழ்ந்த பீகார் மாநிலத்தில் இந்துக்கள் வங்காள வெறிச் செயல்களுக்காக அங்கு வாழ்ந்த முஸ்லிம்களைப் பழிவாங்கலாயினர். பீகாரில் நடந்து கொண்டிருந்த பழிவாங்கும் வெறிச் செயல்களைக் கண்டித்துக் காந்தியடி கள் ஓர் அறிக்கை விட்டார்.

''இந்த நாடு உருப்படாது போலேருக் குப்பா'' என்றான் கங்கா.

''கால்ல செருப்புக் கூடப் போட்டுக்காம. காந்திஜி நவகாளிக்குப் போயிருக்கார். வழி யில எல்லா இந்துக்கள்கிட்டயும், முஸ்லிம் களுடைய வெறிச் செயல்களுக்குப் பயந் துண்டு ஓடக் கூடாதுன்னும், அகிம்சையைக் கடைப்பிடிக்கணும்னும் சொல்லி இருக்கார்.''

''அன்புங்கிற உணர்ச்சியை மனுஷா மேல வலுக்கட்டாயமாத் திணிக்க முடியாது, இல்லியாப்பா? அது தானா மனசில வளர ணும். இந்த மனத்தத்துவம் தெரிஞ்சவரா இருக்கிறதுனாலதான், ராஜாஜி பாகிஸ்தா னைப் பிரிச்சுத் தொலைச்சுடலாம்னு அன் னிக்கே முட்டிண்டார். யாரும் கேக்கல்லே. இப்ப பாருங்கோ. ரெண்டு பேரும் அடிச் சிண்டு சாகுறா. யார் ரத்தம் சிந்தினாலும் அது கொடுமைதான். இந்துக்களோட ரத் தமா இருந்தா என்ன, இல்லே, முஸ்லிம் களோட ரத்தமா இருந்தா என்ன? மொத்தத் துல மனுஷ ரத்தம்!'' என்று அங்கலாய்ப்பு டன் முகம் சுழித்தான் ரமணி.

''பீகாரைப் பொறுத்தவரைக்கும் காந்திஜி சாகிற வரையில உண்ணாவிரதம் இருக்கப் போறதாச் சொல்லி இருக்காரே.''

''சமயம் பார்த்து அந்தக் கெழவர் வேற மண்டையைப் போட்டு வைக்கப் போறார்...'' என்றாள் விசாலம்.

''அப்படியெல்லாம் உன் வாயால சொல் லாதே, அத்தே. காந்தி ரொம்ப நாள் இருக் கணும்.''

அமராவதியும் அஞ்சனாவும் ரேடி யோவுக்கு முன்னால் அமர்ந்து சேதி கேட் டுக் கொண்டிருந்தார்கள். நரேந்திரநாத் பானர்ஜி கையில் ஒரு புத்தகத்தை வைத்துப் புரட்டிக் கொண்டே இரண்டிலும் கவனம் செலுத்திக் கொண்டிருந்தான். செப்டம்பர் 2-ஆம் நாள் இடைக்கால சர்க்கார் நேருவின தலைமையில் அமையப் போவதாய் ரேடி யோச் செய்தி அறிவித்தது.

அப்போது வாசற்கதவு படபடவென்று தட்டப்பட்டது. அஞ்சனா எழுந்து சென் றாள். கதவுக்கு வெளியே தங்கம் நின்று கொண்டிருந்தாள்.

''அமராவதி! தங்கம் வந்திருக்காடி'' என்று அஞ்சனா பெருங்குரலில் வியப்புடன் கூவி னாள். அமராவதிக்கு முன்னால் நரேந்திர நாத் பானர்ஜி அவசரமாக எழுந்து சென் றான். அவளைத் தள்ளாத குறையாக முந்திக் கொண்டு சென்றான்.

## 67

நரேந்திரநாத் பானர்ஜி எதற்காக அவசரமாக எழுந்து போனானோ அது நடப்பதற்கு முன்னதாகவே, கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே வந்து விட்ட தங்கம் அப்படியே வழிநடையில் உட்கார்ந்து கொண்டு பெருங்குரலில் அழலானாள். 'பவித்ராவைப் பற்றி எதுவும் பேச வேண்டாம். வேறு ஏதாவது பொய்யைச் சொல்லி வை' என்று எச்சரிப்பதற்கு இயலாது போயிற்று.

அமராவதி ஓடி வந்தாள். தங்கம் என்ன சொல்லப் போகிறாளென்பது எல்லாருக்குமே விளங்கி விட்டது. ஒரு வகையில் எதிர்பார்த்தார்கள்தானெனினும், முகங்கள் இருண்டு விட்டன. கண்களில் நீர் சோர்ந்தது.

"பவித்ராவுக்கு என்ன ஆச்சு தங்கம்? எதுக்கு அழறே?" என்று ஒருவேளை இன்னும் சிறையில் இருக்கிறாளோ என்ற அசட்டு ஆசையுடன் - ஆனால் அதில் தனக்கே நம்பிக்கை இல்லாத குரலில் வினவிய அமராவதியின் கண்கள் நொடிக்குள் பொங்கி விட்டன.

"நான் என்னத்தைச் சொல்லுவேன், எப்பிடிச் சொல்லுவேன், அம்மா! பிரசவ அறையில எங்கையில ஏந்தின பொண்ணு. அதும் மேல நான் உசிரையே வெச்சிருந்தேன். அது இன்னைக்கி உசிரோட இல்லேம்மா, உசிரோட இல்லே. குண்டடி பட்டுச் செத்துடிச்சு... எம்புட்டு ஆசையா எனக்கு எழுதப் படிக்கச் சொல்லிக் குடுத்திச்சு? அது சொல்லிக் குடுத்த தமிழ்ல அதோட சாவைப் பத்தி எழுதும்படி ஆயிடிச்சு...."

பின்தொடர்ந்து வந்து அருகே நின்றிருந்த நரேந்திரனுக்கும் கண்கள் சிவந்தன.

"யாருக்கு எழுதினே, தங்கம்? ஒரு லெட்டரும் வரல்லியே?" என்றாள் அஞ்சனா கண்ணீரைத் துடைத்துக் கொண்டு.

"நரேனய்யாவுக்குத்தான் லெட்டர் எழுதி ஒரு ஆளண்ட குடுத்தனுப்பிச்சேன்... இவருடம்டம் ஜெயில்ல இருந்தாரு. நான் ப்ரெசிடென்சி ஜெயில்ல இருந்தேன்..." என்று தொடங்கி நடந்ததைத் தங்கம் சொன்னாள்.

நரேந்திரநாத் பானர்ஜி நிற்க முடியாமல் பொத்தென்று சோபாவில் சாய்ந்தான்.

"உன் லெட்டர் கிடைச்சுது, பதில் கூட அனுப்பினேனே? நாந்தான் இங்க யார்கிட்டயும் அதைப் பத்திச் சொல்லல்லே."

அமராவதி ஒரு நம்ப முடியாமையுடன் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"எவ்வளவு பெரிய விஷயத்தை எங்கிட்டேருந்து மறைச்சிருக்கே, நரேன்?"

"பவித்ரா வந்துடுவான்னு உனக்கு இருந்த அரைகுறை நம்பிக்கையைச் சிதைக்கிறதுல எனக்கு இஷ்டமில்லே, அமராவதி. என்னை மன்னிச்சுடு. என்னைப் புரிஞ்சுக்க, அமராவதி."

"புரியறது. ஆனா... என்னோட துக்கத்தைக் குறைக்கிறதுக்காக இத்தனை நாளும் நெஞ்சுல இவ்வளவு பெரிய சோகத்தைச் சுமந்துண்டு இருந்திருக்கேளே, நரேன்? உங்களால எப்படி முடிஞ்சுது? என்னைப் பார்க்கிற ஒவ்வொரு நிமிஷத்துலயும் 'இவகிட்ட சொல்லிடணும்'னு உங்களுக்கு மனசு அடிச்சுக்கல்லையா, நரேன்?" என்ற அமராவதி முகத்தை இரு கைகளாலும் பொத்திக் கொண்டு அழலானாள்.

அஞ்சனா அவள் தோளை அணைத்துக் கொண்டாள்.

"அப்பா எங்கேம்மா?" என்று தங்கம் கேட்டதும் இரண்டு பெண்களும் அழத் தொடங்கினார்கள்.

"அய்யா போயிட்டாருடி, தங்கம். இந்தக் கண்ராவியையெல்லாம் காது குடுத்துக் கேக்காம போய்ச் சேந்துட்டாரு. அதிருஷ்டக்காரர்டி தங்கம் உங்க எசமான்...." என்று விம்மினாள் அஞ்சனா.

"கங்காவுக்குத் தெரியுமா, நரேன்?"

"தெரியாது, அமராவதி."

மூடாமல் விட்டிருந்த கதவைத் தள்ளிக் கொண்டு அப்போது கங்கா உள்ளே வந்தான். அவன் கையில் ஒரு பெரிய உறை இருந்தது.

அழுது கொண்டிருந்த அனைவரையும் பார்த்ததும் ஏதோ விபரீதம் என்பதைப் புரிந்து கொண்ட கங்கா, எல்லாரையும் விட அதிகமாய்க் கண்ணீர் உகுத்துக் கொண்

"கேடி கண்ணப்பனை இன்ஸ்பெக்டர் ஏன் அடிக்கிறாரு?"

"அவன் ரஜினி ஸ்டைல்ல, 'நான் ஒரு தரம் மாமூல் தந்தா நூறு தடவை தந்த மாதிரி'ன்னு சொல்றானாம்!"

- ஏ. பாலசுப்பிரமணியன்





பம்பாயைச் சேர்ந்த கௌஷல் ஒரு டாக்ஸி டிரைவர். சமீபத்தில் இவர் டாக்ஸியில் இரண்டு பேர் ஏறினார்கள். டாக்ஸியை கௌஷல் வழக்கம் போல் வாயில் வந்த ஏதோ ஒரு பாட்டை மெல்ல முணு முணுத்தபடி ஓட்டினார். பாட்டைக் கேட்டு ரசித்த பயணிகளுக்கு மிகவும் மகிழ்ச்சி. அந்த இரண்டு பேரும் பிரபல மியூஸிக் கம்பெனி யான மேக்னா ஸவுண்ட்டைச் சேர்ந்த அதிகாரிகள். கௌஷலிடம் பேசி அவரை அப்படியே தங்களுடன் கூட்டிப் போய் அவர் பாடிய பாடல்கள் அடங்கிய 'டூபானி டாக்ஸிவாலா' ('டாக்ஸிகார புயல்') என்ற காஸெட்டை பதிவுசெய்து வெளியிட்டார்கள். காஸெட், மார்க் கெட்டில் புயலைக் கிளப்பிக் கொண்டிருக்கிறது!

ஆதாரம் : த வீக்
தகவல் : ஆலன்

டிருந்த தங்கத்தைக் கவனித்ததும் இன்ன விப ரீதம் என்பதை முழுவதுமாய்ப் புரிந்து கொண்டு விட்டான்.

"எது கங்காவுக்குத் தெரியுமான்னு கேட் டுண்டிருந்தேள்? ...பவித்ரா செத்துப் போயிட் டதுதானே?" என்று அவன் சிவந்த விழிகளு டன் பளிச்சென்று வினவ, அவனது கேள்வி அங்கிருந்த எல்லாரையுமே தூக்கிப் போட்டு விட்டது.

"அப்படின்னா... உனக்கு ஏற்கெனவே தெரியுமா, கங்கா?" என்று அமராவதி நரேந் திரநாத் பானர்ஜியைப் பார்த்தாள்.

"நான் சொல்லவே இல்லே, அமராவதி.... உங்களுக்கு எப்பிடித் தெரிஞ்சிச்சு, கங்கா?"

கங்கா உட்கார்ந்து கொண்டான். பிறகு எல்லாவற்றையும் தெரிவித்தான். ராஜா ராமன் தங்களுக்குத் தெரிவிக்காமல் மனத் துள்ளேயே அந்தத் துயரத்தைப் புதைத்துக் கொண்டு தன்னந்தனியாக நாளெல்லாம் உருகி வந்திருப்பதை நினைத்துப் பார்த்ததில் கிளம்பிய புதிய சோகம் பவித்ராவின் மறை வால் விளைந்து விட்ட சோகத்தைத் தூக்கி யடிப்பதாக இருந்தது.

கங்காதான் அருகில் வைத்திருந்த சதுர மான உறையைப் பிரித்து, பெரிதுபடுத்தப் பட்டிருந்த பவித்ராவின் புகைப்படத்தை வெளியே இழுத்தான். கண்ணாடிச் சட்டத் துக்குள் சிரித்துக் கொண்டிருந்த அவளை நோக்கித் தன்னையும் அறியாமல் பதிலுக்குப் புன்னகை செய்த பின் கங்கா அதை அமரா வதியிடம் கொடுத்தான். நரேந்திரநாத் ஆவ லுடன் எழுந்து வந்து அவளுக்குப் பின்னால் குனிந்து மகளின் படத்தை ஆர்வத்துடன் பார்த்தான்.

கண்களைத் துடைத்துக் கொண்டு அம ராவதி மெல்ல எழுந்தாள். சுவரில் தொங்கிக் கொண்டிருந்த ராஜாராமன், அருணின் படங்களுக்கு அருகே இருந்த ஆணியில் அந் தப் படத்தையும் மாட்டினாள்.

அந்தக் 'கணத்தில் அங்கு சூழ்ந்து கொண்ட மவுனத்தில் எல்லார் இதயங்களும் கனத்தன.

நேருவின் தலைமையில் அமைய இருந்த புதிய அரசாங்கத்தை ஜின்னா வர வேற்காததோடு, அது பதவி ஏற்க இருந்த செப்டம்பர் 2-ஆம் நாளைக் கரிநாளாகக் கொண்டாட வேண்டும் என்றும் அவர் அறிக்கை விட்டார். இதனால் மீண்டும் வகுப் புக் கலவரங்கள் தோன்றும் சூழ்நிலை உருவா யிற்று.

காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகுக்குமிடையே உடன்பாட்டை ஏற்படுத்த இயலாதெனில் அது இந்தியாவை மேலும் மோசமான நிலைக்கு இழுத்துச் செல்லும் என்பதை உணர்ந்த பிரிட்டிஷ் பிரதமர் அட்லி தமது கவலையை வெளிப்படுத்தியதோடு 1948 ஜூனுக்குள் இந்தியாவிடம் சுயாட்சி அதிகா ரத்தை ஒப்படைத்து விடத் தீர்மானித்து விட் டதாகவும் அறிவித்தார்.

வைசிராய் வேவல் திருப்பியழைத்துக் கொள்ளப்படுவதாகவும் அவரிடத்தில் மவுண்ட் பேட்டன் 1947 இல் பதவி ஏற்பார் என்றும் அட்லி அறிவித்தார்

(தொடரும்)

"மது சூதாட்டம் இரண்டிலும் பெரும் கேடு உள்ளது. அவற்றால் மக்களுக்கு சிறு பயன்கள் இருந்தாலும் அத னால் ஏற்படும் பாவமே அதிகம்" (குர்ஆன் 2 : 219) எனவே "ரம்ஜான் சிறப்புக் குலுக்கல், மொத்தப் பரிசு ரூ. 1.15 கோடி" என்னும் விளம்பரத்தை – பரி சுச் சீட்டுத் திட்டத்தை, இஸ்லாம் மதம் கண்டிக்கிறது.

ஆதாரம் : சமரசம் (31.3.95)
தகவல் : வீ. எஸ். ராஜகோபால்



# ஜோதிர்லதா கிரிஜா

இந்தியாவில் புதிய வைசிராய் மவுண்ட்பேட்டன் பதவியேற்றதும் இந்தியத் தலைவர்களையெல்லாம் சந்தித்தார். மனம் விட்டுப் பேசினார். காந்திஜியைச் சந்தித்து அவர் விவாதித்தபோது, "பிரி வினையைத் தவிர நீங்கள் வேறு எது செய்தாலும் சம்மதமே," என்றார் அவர்.

தேசம் பிளவுபடக் கூடாது என்பதற்காக, "ஜின்னாவையே பிரதமராக்கி விடலாம். அவரே அமைச்சரவை அமைக்கட்டும்," என்று கூறும் எல்லைக்கும் போனார் காந்தியடிகள். ஆனால் யாருமே இந்த யோசனையை ஒப்புக் கொள்ளவில்லை.

நேருவையும் வல்லபபாய் படேலையும் சந்தித்துப் பிரிவினைக்கு அவர்களின் ஒப்புதலைப் பெற்ற பின்னர், மறுபடியும் காந்தியடிகளைச் சந்தித்த மவுண்ட்பேட்டனிடம், "எனது பிணத்தின் மீதுதான் பிரிவினையைக் கொண்டு வர முடியும்," என்றார் அவர். ஒரு காலகட்டத்தில், 'நீங்களே இதைக் கைவிட்டாலும் நான் கைவிடுவதாக இல்லை' என்று ராஜாஜி தயாரித்திருந்த பிரிவினைத் திட்டத்தை ஏற்றிருந்த காந்தியடிகள்தாம் இன்று இப்படித் தலைகீழாகப் பேசினார்! இதற்கான காரணம் ராஜாஜியின் திட்டத்துக்கும் இதற்கும் நிறைய வேறுபாடு உண்டு என்பதுதான் என்றாலும் காந்திஜி காரணங்களை வெளியிடவில்லை.

## மணிக்கொடி

மவுண்ட்பேட்டன் நிலையைத் திரும்பவும் எடுத்துச் சொன்னதும், காந்தியடிகள் முழுமனத்துடனல்லாத ஒப்புதலைப் பிரிவினைக்கு வழங்கினார்.

நேரு, நாட்டு மக்களுக்கு வானொலியில் உரையாற்றினார். "பிரிவினையை ஏற்க நாம் மறுத்துப் பிடிவாதம் செய்தால், நமக்கு இப்போதைக்குச் சுதந்திரம் கிடைக்காது. காந்திஜியே பிரிவினைக்கு ஒத்துக் கொண்டு விட்ட பிறகு நாமும் அதை ஏற்றுக் கொள்ளுவதைத் தவிர வேறு வழியே இல்லை" என்ற வரிகள் அவரது பேச்சில் முக்கியமானவை.

பிரிவினையைத் துளியும் ஒப்புக் கொள்ளாதவர்களில் அபுல்கலாம் ஆஜாதும் ஒருவராக இருந்தார்.

நாடு பிரிக்கப்பட்டுவிடும் என்பது உறுதியானதும் நாடு முழுவதும் கொந்தளிப்பு ஏற்பட்டது. கலவரங்கள் தில்லியிலும் பஞ்சாபிலும் நடைபெற்றன. எண்ணிறந்த கொலைகள் நிகழ்ந்தன. கொள்ளைகள், தீயிட்டு அழித்தல் போன்ற ரவுடித்தனங்களைக் கட்டுப்படுத்தவோ அடக்கவோ அரசு எதுவும் செய்யாது செயலற்றிருந்தது.

மணவாளநாயுடு பரபரப்புடன் அதிகாலையில் ராமசாமியின் வீட்டுக்கு வந்தார்.

"வர்ற ஆகஸ்டு 15ஆம் தேதியே சுதந்திரம் தந்துடறாங்களாங்காணும். பி.பி.சி.ல சொன்னான்."

"அட!"

"ஆமா, அய்யர்வாள். ஒரு வழியா நம்ம போராட்டம் ஒரு முடிவுக்கு வரப் போகுது."

"அதுக்குள்ள ரொம்பவுந் தான் சந்தோஷப்பட்டுக்காதேயும். இன்னும் ஒண்ணரை மாசம் இருக்கு. அதுக்குள்ள என்ன வேணா நடக்கலாம்."

"இனிமே எந்த மாற்றமும் இருக்காது, அய்யர்வாள். ஜூன், 1948-க்குள்ள தர்றேன்னவன் இப்ப ஆகஸ்டு 47க்குக் குடுத்துடறேன்னு இன்னும் வெரசா இறங்கி வந்துட்டான். இந்தியா தன்னோட கையை விட்டுப் போனாப் போதும்னு ஆயிடிச்சு



அவனுக்குன்னு தோணுது, இல்லையா, அய்யர்வாள்?"

"இன்னும் இருக்கிற இந்த ஒண்ணரை மாசத்துக்குள்ள ரத்த ஆறுகள் ஓடாம இருக்கணும்," என்று கங்கா குறுக்கிட்டுக் கூறினான்.

"ரமணியும் நானும் சுதந்திர தின விழாவை டில்லிக்குப் போய்ப் பார்க்கலாம்னு இருக்கோம், அஞ்சனா மாமி."

"நல்ல ஐடியா."




"அமராவதி மாமி எங்கே?"

"தங்கத்தோட கடைக்குப் போயிருக்கா.... உங்கிட்ட ஒண்ணு சொல்லணும், கங்கா."

"சொல்லுங்கோ..." என்ற கங்காவின் பார்வை அவனையும் அறியாது சுவரில் தொங்கியபடி சிரித்துக்கொண்டிருந்த பவித்ராவின் புகைப்படத்தின் மேல் பதிந்து மீண்டது.

"சுதந்திரம் கிடைச்சுடப் போறது. இனிமேலும் நீ பிடிவாதம் பிடிக்காம சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கணும்."

கங்கா சிரித்தான். "அது என்னால முடியவே முடியாது. சாரி."

"நீ இப்படி காலம் முழுக்க பிரும்மச்சாரியாவே இருந்தா, ஒரு நல்ல கணவன் ஒரு பொண்

**நமக்கு வன்முறையால் சுதந்திரம் கிடைத்ததா, இல்லாவிட்டால் அகிம்சை வழியிலா? எந்த வழியில்?**

ணுக்குக் கிடைக்கிற வாய்ப்பை அநியாயமாப் பறிக்கிறேன்னு அர்த்தம்."

கங்கா கடகடவென்று சிரித்தான். "பவித்ரா மாதிரி ஒரு பொண்ணுக்கு மட்டும்தான் என்னால நல்ல கணவனா இருக்க முடியும்."

"பவித்ரா மாதிரி எத்தனையோ பொண்ணுகள் இருக்கா, கங்கா. நான் உனக்குத் தேடித் தர்றேன்."

"இந்த உலகத்துல ஒரே ஒரு பவித்ராதான் இருக்க முடியும். ஒரே ஒரு கங்காதான் இருக்க முடியும்."

"இவ்வளவு பிடிவாதம் கூடாது கங்கா உனக்கு. வய

சான அப்பாவை நெனச்சுப் பாரு. உங்க அத்தை, பாவம், ஒரு தாயாரை விட உசந்த வள்னே நான் சொல்லுவேன்.''

''குழந்தைகளோட சந்தோஷந்தான் பெரிசுன்னு நினைக்கிறவாதான் உண்மை யான அப்பா - அம்மா. தவிர...''

''தவிர...?''

''.........''

''சும்மா சொல்லு, கங்கா. ஏன் தயங் கறே?''

''நான் ஒண்ணு சொல்ல வந்தேன்... வேணாம். தப்பு.''

''சொல்ல வந்ததைச் சொல்லிடு, கங்கா. அப்புறம் ராத்திரி முழுக்க என்னால தூங்க முடியாது. எதுவானாலும் பரவால்லே. நான் தப்பாவே எடுத்துக்க மாட்டேன்.''

''என்ன சொல்ல வந்தேன்னா.... நீங்க கல் யாணமே பண்ணிக்கல்லே. லவ் பண்ணின தாவும் தெரியல்லே. அதான் என்னோட மனசு உங்களுக்ககுப் புரியல்லேன்னு சொல்ல வந்தேன்.''

அஞ்சனா உடனே தனது பார்வையை விலக்கிக் கொண்டாள். அவள் கண்கள் கணத்துக்குள் நிறைந்து விட்டதைக் கண் ணுற்ற கங்கா பதறிப் போனான்.

''ஐம் ஸாரி, அஞ்சனா மாமி. வெரி ஸாரி... தெரியாம விளையாட்டுத்தனமா, கிறுக்குத்தனமா, வாயில வந்ததைச் சொல் லிட்டேன். மன்னிச்சுக்குங்கோ.''

''பரவால்லே, கங்கா... நானும் லவ் பண்ணி இருக்கேன். ஆனா... யாருக்குமே தெரியாது.''

''உங்க தங்கைக்குக் கூடவா?''

''நான் யாரை 'லவ்' பண்ணினேனோ அவருக்கே அந்த விஷயம் தெரியாது! அப் புறம்னா தங்கைக்குத் தெரியறதுக்கு?''

''யாரு, மாமி?''

''இத்தனை வயசு கழிச்சு அதைப் பத்திப் பேசறதே தப்பு. அசட்டுத்தனம். ஆனாலும் என்னமோ வாயில வந்துடுத்து.''

''யாரது, மாமி? நீங்களே அவர்கிட்ட சொல்லி இருந்திருக்கலாமே?''

''சொல்லக் கூடாத 'லவ்' அது, கங்கா. தப்பான 'லவ்'. வரக் கூடாத 'லவ்'. ஆனா வந்துடுத்து. என்ன செய்ய? ஊமை கண்ட கனவு மாதிரி மனசுக்குள்ளேயே ஆழமாக் குழிதோண்டிப் புதைச்சுட்டேன். யாருக்கும் தெரியாது.''

''யாரு மாமி அது? எனக்குத் தெரிஞ்ச வரா?''

''ஆமா, கங்கா. உனக்கு ரொம்ப நெருக்க மானவர்.... உங்கப்பா!''

கங்கா அதிர்ச்சியில் நெட்டுக்குத் தானான். அவன் கண்கள் விரிந்து கொண் டன. விழிகளில் வியப்பும் வேதனையும் தெரிந்தன.

''கல்யாணம் ஆன ஒருத்தர் மேல 'லவ்' வரலாமா? தப்பில்லே அது? சொல்லு, கங்கா.''

கங்கா பிரமித்துப் போய் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

''இப்ப ஒரு வேகத்துல நான் சொன்னது எதையும் சத்தியமா நீ யார்கிட்டயும் சொல்லக் கூடாது. உன்னைத் தாண்டி இது யாருக்குமே போகக் கூடாது.''

''சத்தியமாப் போகாது. ஆனா அப் பாவை நினைச்சுண்டே வாழ்ந்துட்ட நீங்க என்னைப் பவித்ராவை மறக்கச் சொல் றேளே, நியாயமா அஞ்சனா மாமி?''

சற்று நேரம் அஞ்சனா பதில் சொல்லா திருந்தாள். பிறகு, ''நான் கல்யாணமே பண் ணிக்க வேண்டாம்னு இருந்தவதானே? அத னால என்னோட ஒரிஜினல் முடிவுப்படி நான் இப்படியே இருந்துட்டேன். நீ அப்படி இல்லியே?''

''கல்யாணமே பண்ணிக்காம இருக் கணும்னு நான் நினைச்சதில்லேதான். ஒத் துக்கறேன். ஆனா, கல்யாணம் பண் ணிண்டா அது பவித்ராவைத்தான்கிறது தானே என்னோட நெனைப்பா இருந்தது? நான் மட்டும் அதுலேருந்து மாற முடியுமா?''

''நன்னாத்தான் பேசி மடக்கறே....''

வெளியே போயிருந்த அமராவதியும் தங்கமும் சாமான்கள் வாங்கிய பைகளுடன் திரும்பி வந்தார்கள். அதன் பிறகு அன்றைய அரசியல் நிலவரம் பற்றி நிறையப் பேசி னார்கள். கொஞ்ச நேரத்தில் வெளியே போயிருந்த நரேந்திரநாத் பானர்ஜியும் வர, அவர்களுக்குப் பேசுவதற்கும் அலசுவதற்கும் நிறைய விஷயங்கள் அகப்பட்டன.

கங்காவும் ரமணியும் சுதந்திர தின விழாவைப் பார்க்க தில்லி போக இருப் பதையறிந்ததும், நரேந்திரநாத் பானர்ஜி தானும் வருவதாக உற்சாகத்துடன் கூறி னான். பின்னர் கங்கா விடைபெற்றுக் கிளம் பினான்.

'உனக்கு ரொம்ப நெருக்கமானவர்...

''[illegible] டி.வி.[illegible]? [illegible]!''

''எங்க [illegible] டி.வி.[illegible]!''

— [illegible]

உங்கப்பா' எனும் அஞ்சனாவின் சொற்கள் வெகு நேரம் வரையில் அவன் செவிகளில் ஒலித்தவாறு இருந்தன. அன்றிரவு அவனுக் குத் தூக்கம் வரவில்லை.

மூவரும் தில்லியை இரண்டு நாட்கள் முன்னதாகவே அடைந்து விட்டார்கள். கனாட் பிளேசின் விடுதி ஒன்றில் அவர் களுக்கு ஓர் அறை ஒரு நண்பர் மூலம் ஏற் பாடு செய்யப்பட்டிருந்தது. அடுத்த கட்ட டம் ஒட்டலாக இருந்தது.

சுதந்திர நாளுக்குரிய கோலாகலத்துடன் தில்லி விழாக் கோலம் பூண்டிருந்தது. வெள் ளைக்காரர்கள் நிறைய பேர் ஆங்காங்கு சுறு சுறுப்பாகத் தெருக்களில், கடைகளில், ரெயில்வே நிலையத்தில், விமான தளத்தில் என்று கும்பல் கும்பலாய்க் குடும்பங் களுடன் காணப்பட்டார்கள். இந்தியாவை விட்டுக் கிளம்பி தாய்நாடு திரும்ப நேர்ந்து விட்டதில் அவர்களுக்கெல்லாம் ஒரு பக்கம் மகிழ்ச்சி என்றாலும் இன்னொரு பக்கம் வருத்தம்தான் என்று அவர்களின் முகங் களைப் பார்த்து மூவரும் நினைத்தார்கள்.

ஓய்வான அவ்விரண்டு நாட்களிலும், கங் காவும் நரேந்திரநாத் பானர்ஜியும் ரமணிக்கு டில்லி முழுவதையும் சுற்றிக் காட்டினார் கள். யமுனா நதிக்கரையில் அமைந்திருந்த செங்கோட்டை, ஜும்மா மசூதி, காஷ்மீரி கேட், குதுப்மினார், புரானா கிலா, ஹுமா யூன் கல்லறை, ராஜ்காட்-சலீம்கர், ஆக்ரா வில் தாஜ்மகால் என்று கிட்டத்தட்ட எல்லா இடங்களுக்கும் போனார்கள்.

ஆகஸ்டு பதினான்காம் நாள் இரவி லிருந்தே மக்கள் தெருக்களில் சாரி சாரியாக நடந்து அமைச்சர்கள் ஊர்வலம் செல்ல இருந்த வீதிகளின் இருமருங்கிலும் கூடத் தொடங்கி விட்டார்கள்.

இந்திய வரலாற்றில் சிறப்பு மிக்க அத் திருப்பம் அன்றிரவு சரியாக மணி பன்னி ரண்டு அடித்ததும் தொடங்கியது. பதினைந் தாம் நாளின் விடியல் நோக்கி உலகம் புறப் படத் தொடங்கிய அந்த இருண்ட நேரத்தில் இந்தியா ஒளி பெற்றது.

சுதந்திர நாளைத் தொடங்கி வைத்து ஜவாஹர்லால் நேரு பேசலானார்.



'உலகம் உறங்கிக் கொண்டிருக்கும் இந்த நள்ளிரவு நேரத்தில், இந்தியா வாழ்வும் விடு தலையும் அடைந்து விழித்தெழுந்துள்ளது. ஒரு யுகம் முடிவுற்றுப் பழைமையிலிருந்து வெளியேறிப் புதுமையை நோக்கி அடி யெடுத்து வைக்கும் வேளையும், நீண்ட கால மாக அடக்கி வைக்கப்பட்டு வந்துள்ள ஒரு நாட்டின் ஆன்மாவின் குரல் கேட்கும் வேளையும், வரலாற்றில் எப்போதாவதுதான் வரும்' என்ற வாக்கியத்துடன் அவர் தமது பேச்சைத் தொடங்கித் தொடர்ந்து பேசி னார்.

மவுண்ட் பேட்டன் சுதந்திர இந்தியா வின் முதல் கவர்னர் - ஜெனரலாக நியமனம் பெற்றார். அவையின் தலைவர் ராஜேந்திர பிரசாத் உலகெங்கணுமிருந்து வந்து குவிந்த வாழ்த்துச் செய்திகளைப் படித்தார். மவுண்ட்பேட்டன் இங்கிலாந்து மன்னரின் வாழ்த்தைப் படித்தார்.

தமது நன்றியுரையிடையே ராஜேந்திர பிரசாத் கூறினார். "நாம் அடைந்துள்ள வெற்றிக்கு நம் தியாகங்களும், நாம் பட்ட துன்பங்களும் பெருமளவுக்குக் காரணங்க ளானாலும், உலகத்துச் சக்திகளும் நிகழ்ச்சி களின் போக்கும் நமக்கு உதவியுள்ளன என் பதும் உண்மையாகும். பிரிட்டிஷ் மக்களின் ஜனநாயகக் கோட்பாடுகளுடையவும், வர லாற்று மரபுகளுடையவும் உச்ச நிலையே நமது சுதந்திரத்தில் முடிந்தது."

பதவியேற்புப் பிரமாணம் முடிந்த பின் அமைச்சர்களின் ஊர்வலம் நடைபெற்றது. லார்ட் மவுண்ட்பேட்டனும், லேடி மவுண்ட்பேட்டனும் பவனி வந்த போது இலட்சக்கணக்கில் கூடி நின்ற மக்கள் மகிழ்ச்சியுடன் ஆரவாரம் செய்தார்கள். 'மவுண்ட்பேட்டன் தம்பதியரே! உங்கள் நாட்டு அரசு எங்களைப் பலநூறு ஆண்டு கள் அடிமைப்படுத்தி இருந்தபோதிலும், எங்களுக்கு வெள்ளையர் மீது எத்தகைய கசப்போ காழ்ப்போ துளியும் இல்லை; இனி நாம் நண்பர்களாக இருக்கலாம்' என்று சொல்லுவது போன்று மக்களின் ஆரவாரம் இருந்தது என்று ஒரு மாபெரும் வரலாற்று ஆசிரியர் பின்னர் தமது நூலில் எழுதினார்.

அங்குலம் அங்குலமாக நகர்ந்து கொண்டிருந்த கூட்டத்தில், நரேந்திரநாத் பானர்ஜி, ரமணி, கங்கா ஆகியோர் கை கோத்தவண்ணம் நகர்ந்தார்கள்.

"பாவம் காந்திஜி! இந்தக் கோலாகலத் தில் எந்தப் பங்கும் ஏற்காமல் அவர் கல்கத் தாவில் அமைதியை நிலைநாட்டும் பணியில் இன்னமும் இருக்கிறார்."










"மேற்கு வங்காள கவர்னராக ராஜாஜி போயிருக்கிறார் - அவர்தான் அங்குள்ள வகுப்புக் கலவர நிலவரத்தைச் சமாளிக்க வல்லவர் என்பதால்."

"ஆமாம். காந்திஜியைப் பொறுத்தவரை இந்தியாவின் வரலாற்றில் இந்த ஆகஸ்ட் 15 ஒரு துக்க நாள். அவர் கனவு கண்ட ஏக இந்தியா அமையவில்லை. இந்துக்களும் முஸ்லிம்களும் இணைந்திருக்கச் சம்மதிக்க வில்லை. அவர் அநேகமாக இன்று பட்டினி இருந்தாலும் இருப்பார்."

ஆமாம். காந்தியடிகள் அன்று உபவாச மிருந்தார். ஒருவரை ஒருவர் அடித்துக் காயப் படுத்திக் கொண்டு அலங்கோலமாய்க் கிடந்த பிள்ளைகளைப் பெற்ற துயரத்தில் கண்ணீர் விடும் தாயின் நிலையில் அவர் இருந்தார் என்பது மிகை இல்லை.

பேசிக் கொண்டே வெகு தொலைவு நடந்த பிறகே சாலைகளில் கால் வீசி நடக்க முடிந்தது.

"கங்கா, நீ என்ன நினைக்கிறாய் நமக்கு வன்முறையால் சுதந்திரம் கிடைத்ததா, இல்லாவிட்டால் அகிம்சை வழியிலா? எந்த வழியில்?" என்று கேட்டான் நரேந்திரநாத் பானர்ஜி.

ராஜாராமய்யருடன் அன்றொரு நாள் அது பற்றிய பந்தயத்தில் தான் ஈடுபட்டதும், நூறு ரூபாய் பந்தயம் கட்டியதும் அப்போது கங்காவுக்கு ஞாபகம் வந்தன.

"இரண்டு வழிகளும் தத்தம் பங்கை ஆற்றி இருக்கின்றன என்றே தோன்றுகிறது, மிஸ்டர் நரேந்திரநாத்" என்றான் ரமணி.

"உலகத் தலைவர்களின் கருத்துக்கள், உலகப் பத்திரிகைகளின் கருத்துக்கள், உலகத் துப் பெரிய மனிதர்களின் கண்டனங்கள் - பெர்னார்ட் ஷா, பெர்ட்ராண்ட் ரஸ்ஸல், மிஸ் பேர்ல் பக் போன்றவர்களின் ஆணித் தரமான அறிவிப்புகள் - குறிப்பாக அமெரிக் காவில் பிரிட்டனுக்கு எதிராக ஏற்பட்ட எண்ணங்களின் வெளிப்பாடு இவையும் தான் உதவியுள்ளன" என்றான் கங்கா.

பேசிக் கொண்டே விடுதியை அடைந் தார்கள்.

"எப்படியோ ஒருவழியா சுதந்திரம் கிடைச்சுடுத்து..." என்ற கங்கா அந்த உணர்வை அனுபவிப்பவன் போல் கால் களை நீட்டி மல்லாந்து படுத்தான்.

"ஆனா அதுக்கு நாம குடுத்த விலைதான் அதிகம்," என்றான் ரமணி.

"உண்மைதான்," என்றான் நரேந்திரநாத் பானர்ஜி.

பவித்ராவை எண்ணி அவன் கண்கள் கலங்கின. "நானும் அமராவதியும் மகனைப்



# அபிராமியின் டெபாசிட் சேகரிப்பு விழா



## 14.04.95 முதல் 14.05.95 வரை

### வைப்பு நிதி திட்டம்

| உங்கள் முதலீடு ரூ. 5000/- | |
|---|---|
| காலம் | வட்டி விகிதம் |
| 46 நாட்கள் | 15% |
| 91 நாட்கள் | 18% |
| 6 மாதங்கள் | 21% |
| 1 வருடம் | 24% |

### மறு முதலீட்டுத் திட்டம்

| தொகை : ரூ. 1000/- காலம் 1 வருடம் | | |
|---|---|---|
| 1000/- த்தின் பெருக்கம் | | |
| 12 MONTHS | Rs. 1270/- | 27% |
| 24 MONTHS | Rs. 1610/- | 30.5% |
| 36 MONTHS | Rs. 2050/- | 35% |
| 48 MONTHS | Rs. 2600/- | 40% |
| 60 MONTHS | Rs. 3305/- | 46% |

(மாதம் ரூ. 100 வீதம்) **தொடர் வைப்பு நிதி திட்டம்**

| காலம் | முதிர்வு தொகை | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|---|
| 12 MONTHS | Rs. 1357/- | 48 MONTHS | Rs. 7259/- |
| 24 MONTHS | Rs. 3011/- | 60 MONTHS | Rs. 9977/- |
| 36 MONTHS | Rs. 4974/- | | |

### அஷ்டலெஷ்மி டெபாசிட் திட்டம்

**ரூ. 3000/- = ரூ. 108190/- 15வருடங்கள்**

### பணத்திற்கு உத்திரவாதம் எப்படி?

- ★ 20 ஆண்டு கால தேக்கு மரத் திட்டத்தின் மூலம் பல ஆயிரக்கணக்கான உறுப்பினர்களைப் பெற்றுள்ளோம்.
- ★ பல நூற்றுக்கணக்கான நிலங்களை பக்க பலமாக கொண்டுள்ளது.
- ★ நன்னீர் இறால் வளர்ப்பு திட்டத்தில் முன்னோடியாக திகழ்கிறது
- ★ வீட்டுமனை மற்றும் அபார்ட்மெண்ட் கட்டி தருகிறோம்.
- ★ முன்தேதியிட்ட காசோலை வழங்குகிறோம்.

★ 14.05.95 வரை 3% ஊக்கத்தொகை தருகிறோம்

★ பென்ஷனர் மற்றும் விதவைகளுக்கு 1% அதிக வட்டி வழங்கப்படும்.

## அபிராமி HIGH இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

(இது ஒரு அபிராமி குரூப் நிறுவனத்தின் அங்கம்)

| பதிவு அலுவலகம் : | கிளை அலுவலகம் : | கிளை அலுவலகம் : | கிளை அலுவலகம் : |
|---|---|---|---|
| சித்ரா காம்ப்ளெக்ஸ், சத்திரம் பேருந்து நிலையம் அருகில், திருச்சி - 2. போன்: 31467 | 49/21, பிருந்தாவன் தெரு, முருகன் காம்ப்ளெக்ஸ், மேற்கு மாம்பலம், சென்னை - 33 போன்: 4840258 | சின்னையா காம்ப்ளெக்ஸ், ஐந்து ரோடு, கௌரி தியேட்டர் அருகில், சேலம் - 636 004. | D-6, K.L.R. பில்டிங், 207, சாஸ்திரி ரோடு, ராம் நகர், கோயம்புத்தூர். போன்: 230345 PP |



"ஜே..ஜே. டீ.வி.யில் இன்னிக்குப பட்டி மன்றமாமே, தலைப்பு என்ன?"

"மந்திரிக்கு அழகு கட்அவுட் வைத்தலா? காலில் விழுதலா?"

— ஜாலி

பறிகொடுத்தோம். கங்கா தன் காதலியைப் பறிகொடுத்தான். வகுப்புக் கலவரங்களிலும், தேசிய விடுதலைப் போராட்டங்களிலும் பல்லாயிரக்கணக்கான மனிதர்கள் இறந்து போனதால் எண்ணிறந்த ஆண் பெண்கள் தங்களுக்கு நெருக்கமானவர்களை இழக்க நேர்ந்தது. சிறைக்குப் போய், அங்கு நடந்த கொடுமைகளில் இறந்தவர், அங்கவீனப் பட்டவர்கள் எத்தனை பேர்! இரத்த ஆறுகள் நாடு முழுவதும் ஓடிய பிறகுதான் சுதந்திரம் வந்தது.'

"ராஜேந்திர பிரசாத் பிரிட்டானியர்களின் ஜனநாயகக் கோட்பாடு, வரலாற்று மரபு இந்த இரண்டையும் சிலாகித்து இரண்டு வார்த்தை சொன்னாரே, நீ என்ன நினைக்கிறாய், கங்கா?"

"அவர் சொன்னது சரிதான், மிஸ்டர் நரேன் அவர்கள் நினைத்திருந்தால் நம் தேசத் தலைவர்கள் எல்லாரையும் - காந்திஜி உட்படவும்தான் - என்றைக்கோ சுட்டுக் கொன்றிருக்க முடியும். ஆனால் செய்ய வில்லை. உலகம் முழுவதும் ஹிட்லரைக் கூடத்தான் கண்டித்தது. காந்தி கூட அவனுக்குக் கடிதம் எழுதினார். ஆயினும் அவன் அசைந்து கொடுக்கவில்லையே. ஆனால், உலக அபிப்பிராயங்களுக்கு மதிப்புக் கொடுத்தும் இனிமேலும் இங்கே இருப்பது அசிங்கம் என்பதை நம் எதிர்ப்புப் போராட்டங்களிலிருந்து புரிந்து கொண்டும் கௌரவத்துடன் பிரிட்டன் விலகியது பெரிதுதான். அதில் துளியும் சந்தேக மில்லை..." என்றான் கங்கா.

'சாரே ஜஹாங்சே அச்சா ஹிந்துஸ்தான் ஹமாரா' எனும் இனிய பாடல் எங்கிருந்தோ மிதந்து வந்து அவர்கள் செவிகளை நிறைத்தது.

(முற்றும்)

## பின்னுரை

*அன்புள்ள பெரியப்பா!*

*நீங்கள் கொடுத்த பணியை முடித்து விட்டேன். சரியாகச் செய்துள்ளேனா இல்லையா என்பதை விமர்சிக்க நீங்கள் உயிருடன் இல்லை. கூடிய வரையில் உரையாடல்களில் வரலாற்று நிகழ்ச்சிகளை நகர்த்த முயன்றுள்ளேன். அது சாத்தியப் படாத சில இடங்களில் பாடப் புத்தகப் பாணியில் நிகழ்ச்சிகளை விவரிப்பதை எவ்வளவோ முயன்றும் தவிர்க்க முடியவில்லை. வெறுங்கதை மட்டுமல்லாது, வரலாறும் கணிசமான அளவில் நகர வேண்டும் என்பதைக் குறிக்கோளாய்க் கொண்டதால் வந்த குறை - இது உண்மையில் ஒரு குறையானால், 'சுதந்திரம் அடைவதற்காக அந்தக் காலத்து மனிதர்கள் எப்படியெல்லாம் கஷ்டப்பட்டார்கள், எப்படியெல்லாம் தியாகங்கள் செய்தார்கள் என்பது இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்குச் சுத்தமாய்த் தெரிய வில்லை' என்று சொன்னீர்கள். 'சுத்தமாய்த் தெரியாதவர்களின்' பட்டியலில் நானும் உள்ளேன் என்பதை இம் முயற்சியில் ஈடுபட்ட வேளையில் தெரிந்து கொண்டேன்.*

*அன்னியர் ஆண்ட போது அவர்களுக்குத் தொல்லை விளைவிப்பதற்காகக் கடைப் பிடித்த கடையடைப்பு, வன்முறைக் கோஷங்கள், நாசவேலைகள், பொதுச் சொத்துக்களுக்குச் சேதம் ஏற்படுத்தும் அடாவடித்தனமான வழிமுறைகள் ஆகியவற்றை இன்னமும் கையாண்டு நாட்டின் பொருளாதாரத்துக்கு ஊறுவிளைவிக்கும் நம் அரசியல்வாதிகள் கொஞ்சமேனும் திருந்த மாட்டார்களா எனும் ஆதங்கமும் வந்தது. காந்தியடிகளையும் அவர் விட்டுச் சென்ற உன்னதக் கருத்துக்களையும் நாம் அறவே மறந்ததன் விளைவே இன்று நாட்டில் நிலவுகின்ற வன்முறைக் கலாசாரம் என்பதும் புரிந்தது. 'இந்தியா பிரிட்டனின் காமன்வெல்த் அணியில் தொடர்ந்து அங்கம் வகிக்கும்' எனும் ஜவாகர்லால் நேருவின் பெருந்தன்மையான அறிவிப்பு, கலங்காத சர்ச்சிலின் கண்களிலும் நீரை வரவழைத்தது என்று சொல்லப் படுகிறது. அரசியலில் கூட அன்பு வென்று விடும் என்பதற்கு இதை விடவும் சிறந்த எடுத்துக்காட்டு உண்டா?*

*பெரியப்பா! நீங்களெல்லாம் செய்துள்ள தியாகங்களை எண்ணிப் பார்க்கும் போது, சுதந்திர இந்தியாவின் இன்றைய நிலை குறித்த எத்தனை ஏமாற்றங்களுக்கும் வேதனைகளுக்கும் நீங்கள் ஆட்பட்டிருப்பீர்கள் என்பதை நினைத்துப் பாராதிருக்க முடிய வில்லை.*

*எப்படியோ, ஒரு சுய பரிசீலனைக்கும் விமரிசனத்துக்கும் என்னை உட்படுத்திக் கொண்டு அலசிக் கொள்ளும் ஒரு வாய்ப்பாகவும் நீங்கள் எனக்கு அளித்த பணி பயன்பட்டது. அதற்காக நன்றி. நன்றி. நன்றி.*



# மழை நின்ற பின்பும்

சித்ரன்

"கண்ணம்மா..."

வீல் வீலென்று அழுகிற குழந்தையைப் பார்த்துச் செல்லமாகக் கூப்பிட்டான் ஜகதீஷ். அது அழுவதை சந்தோஷமாய்ப் பார்த்தான். தொட்டுப் பார்த்தான்.

சின்ன குண்டு கண்கள். அழகாய் குவிந்த வாய், இத்துனூண்டு விரல்கள், வெல்வெட் சுருள்முடி, மெத் கன்னம் - பெண் குழந்தை.

ஜகதீஷுக்குத் தவிர்க்கவே முடியாமல் பாரதியின் நினைவு மின்னலாய் வந்து நின்றது. 'பாரதி! நீ எனக்கு மனைவியாய் வாய்த்திருந்தால் - இது போல் எனக்குப் பெண் குழந்தை பெற்றுக் கொடுத்திருப்பாயா?'

'வேண்டாம்!' தப்பான நினைப்பென்று கலைக்க முயன்றான். முடியவில்லை. மனைவி சாந்தாவைப் பார்த்தான். அவள் அழுகிற குழந்தையை 'ஜோ... ஜோ'வென்று தாலாட்டிக் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்துச் சொன்னான்.

"எனக்குப் பிடிச்ச மாதிரி பெண் குழந்தையே பெத்துக் குடுத்திருக்கடி..."

சாந்தா கண் சிமிட்டிச் சிரித்துச் சொன்னாள்.

"உங்களுக்கு என்ன பிடிக்கும்னு எனக்குத் தெரியுங்க..."

ஜகதீஷ் புன்னகைத்தான். 'பாரதிக்கும் தெரியுமே' என்று மனத்தில் சொல்லிக் கொண்டான். அவள் முகம் அவனுள் விலகாமல் கடிகார பெண்டுலம் போல் அசைந்தாடிக் கொண்டிருந்தது.

அவனுக்குத் தன் மேல் சலிப்பாக வந்தது. 'ஏன் நான் அவளைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறேன்? அவளுக்குக் கல்யாணமாகி, ஒரு குழந்தை கூட இருக்கிறதே. ஐந்து வருடங்கள் கழித்து ஏன் அவளின் நினைவுகள் என்னைத் துரத்திக் கொண்டிருக்கின்றன? இல்லை, நான்தான் அந்த நினைவுகளைத் துரத்திக் கொண்டிருக்கிறேன்...' - யோசனைகள் ஓடின.

ஒரு வாரமாகத்தான் இப்படி - அவனுக்குக் குழந்தை பிறந்ததிலிருந்து... அதன் முகத்தைப் பார்த்தால் பாரதி ஞாபகம். இரவுத் தூக்கம் நடுநிசிகளில் கலைகிறது. புரண்டு படுக்கிறான். சில்வண்டு இரைச்சல் போல நினைவுகள் மட்டும் மன தோரத்திலிருந்து கிளம்பிக் கொண்டிருக்கின்றன. பக்கத்தில் தூங்குகிற சாந்தாவைப் பார்த்தால் அவனுக்கு உறுத்தலாயிருக்கிறது.

'எங்கேயிருக்கிறாய் பாரதி? பிரிந்து ஐந்து வருடங்களாகி விட்டது. எப்படியிருக்கிறாய்? கிடைக்கிற இடைவெளிகளில் எப்போதாவது என்னை நினைத்தாயா? ஒரு தடவையாவது? நம் பிரிவின் பாரத்தை எப்படித் தாங்கிக் கொண்டாய்? சந்தோஷமாயிருக்கிறாயா!....

எனக்கும் கல்யாணமாகி ஒரு பெண் குழந்தை - எனக்குப் பிடித்த மாதிரி - பிறந்தது... தெரியுமா உனக்கு? கேள்விப்பட்டாயா?'

ஜகதீஷ் மனசுக்குள் அவளோடு பேசினான்.

சாந்தாவிடம் சொல்லலாமா என்று யோசித்தான். 'இங்க பார் சாந்தா... ஒரு வாரமா எனக்கு...' வேண்டாம். சாந்தாவிடம் பாரதியைப் பற்றியும், கடந்த காலம் பற்றியும் எல்லாம் சொல்லியிருக்கிறான்தான். ஆனால்... இப்போது எதற்கு மறுபடி அவளைப் பற்றின பேச்செடுக்க வேண்டும். அப்புறம் தெளிந்த பக்கெட் நீரில் மண்கட்டி போட்ட மாதிரி கூட ஆகலாம். ஆகவே வேண்டாம்.

ஆபீஸ் போய் உட்கார்ந்தாலும் யோசனைகளில் மறுபடி பாரதியே உலவினாள்.

ஜகதீஷுக்கு மெல்ல வேறொரு எண்ணமும் முளைத்தது.

'உன்னைப் பார்க்கணுமே, பாரதி!'

கடந்த பழைய நாட்கள்.

பொட்டானிக்கல் கார்டன், அதிகக் கூட்டமில்லாத பஸ் ஸ்டாப், இண்டியன் காபி ஹவுஸ், மெதுவாய் வாக்கிங் போன ரேஸ் கோர்ஸ் ரோடு. ஒரு சினிமா தியேட்டர். இன்னும் பல இடங்கள்.

ஜகதீஷும், பாரதியும் - லேசாய்க் கோத்துக் கொண்ட கைகள்.

"பாரதி!" ரகசியமாய்க் கூப்பிடுவான் ஜகதீஷ்.

"ம்..."

"நான் மழை நின்னதுக்கப்புறம் ஏதாவது சின்ன மரத்தடில நின்னு அதை ஆட்டிப் பார்ப்பேன். அந்த மரத்திலிருந்து மழைத் தண்ணி தெறிக்கறப்ப மறுபடி மழை பெய்யற மாதிரி இருக்கும். இந்த ஃபீலிங் எனக்கு ரொம்பப் புடிக்கும் தெரியுமா?" ஜகதீஷ் சொல்வான்.

"எனக்கு வானவில்னா ரொம்பப் பிடிக்கும்" என்பாள் அவள். பாரதி. இவன் சிரிப்பான்.

இதுபோல் இன்னும் பரிமாறின ரசனைகள் நிறைய. இந்தத் தொடர்பு ஒரு கட்டத்தில் வானவில்லாக மறைந்து விடப் போகிறது என்று உணரவேயில்லை இருவரும். நேசிப்பு தொடர்ந்தது. காலம் பற்றி யோசிப்பு இல்லை.

"நம்ம ரெண்டு பேத்துக்கும் கல்யாணமாகி ஒரு பொண்ணு பெத்துக்கணும்..." அவன் அவள் கன்னம் சிவப்பதைக் கவனித்துக் கொண்டே சொல்வான்.

"அவளை எப்படி வளர்க்கணும் தெரியுமா? ரொம்ப புத்திசாலியா... அப்புறம் ரொம்ப தைரியசாலியா, அப்புறம் நிறைய திறமைகள் உள்ளவளா... அருமையான ரசனைகள் உள்ளவளா... அப்புறம் அவ பெரியவளாகும் போது ஏதாவது ஒரு துறையில ரொம்ப மதிப்புள்ள, பாப்புலரான ஆளா..." ஜகதீஷ் யோசித்து யோசித்து ஒவ்வொன்றாய்ச் சொல்லிக் கொண்டே போக...

பாரதி ஆச்சரியமாய்க் கேட்டுக் கொண்டேயிருப்பாள்.

"எல்லாம் நடக்கும் ஜகதீஷ்..." - நம்பிக்கையான ஒரு வார்த்தை. அவன் கைகளை இறுக்கிக் கொள்வாள்.

நடந்தது வேறாகி விட்டது. எல்லாம் தடம் புரண்டன. வெறுமையான ஒரு சூழலில் சில பிரச்னைகள் எழுந்தன. ஜகதீஷ் ஒரு நல்ல வேலை கிடைக்காமல் அலைந்தான். இடைப்பட்ட காலத்தில் வீட்டின் நெருக்கடிகள் காரணமாக அவளுக்கு முறைப் பையனுடனேயே கல்யாணமாகி...

காலம் இழுத்துக் கொண்டு போன போக்கில் இவன் ஒரு ஊர். அவள் ஒரு ஊர். "மன்னியுங்கள் ஜகதீஷ்" என்று ஒற்றை வார்த்தையில் பாரதி கடிதம் எழுதினாள்.

**சா**ந்தா மாதிரி மனைவி எல்லோருக்கும் கிடைத்துவிடுமா என்ன? கல்யாணமான புதிதில் மெல்ல அவளைப் பற்றிச் சொன்னான். எல்லாம். சாந்தா புன்னகைத்துக் கொண்டே முழுக் கதையும் கேட்டாள். மனத்தைப் புரிந்து கொண்ட மனைவி அவள்.

இன்று –

பாரதியைப் பார்க்கப் போவதைப் பற்றி ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை அவளிடம். சொல்லாமலே கிளம்பியிருந்தான்.

"ஒரு ஃப்ரெண்டைப் பார்த்துட்டு வரேன்."

பாரதியைப் பார்த்தேயாக வேண்டுமென்று ஒரு தீவிரம் எழுந்து, முடிவாய் மாறியிருந்தது. பாலு முயற்சி செய்து அட்ரஸ் பெற்றுத் தந்திருந்தான். கோயமுத்தூரில்தான் இருக்கிறாளாம்.

நியூ சித்தாப்புதூரில் வீடு.

அவள் குழந்தைக்கு பிஸ்கட் பாக்கெட் ஒன்றை வாங்கிக் கொண்டு புறப்பட்டான்.

**ஆ**ச்சரியமா. அதிர்ச்சியா என்று தெரியாத முகபாவத்தில் அவள் நின்றிருந்தாள். கண்கள் விரிந்தன.

"ஜகதீஷ்...!" குரலில் நம்பிக்கையின்மை.

அவன் தன் சங்கடத்தை உதறிக் கொண்டு சிரித்தான்.

"நலமா?"

உள்ளே அழைக்கப்பட்டான். பரஸ்பரம் பதற்றத்தை மறைத்துக் கொண்டு இயல்பான குசலம் விசாரிப்புகள். ஜகதீஷ் மேசை மேல் போட்டோ பார்த்தான். அவள், அவள் கணவன் மற்றும் பையனுடன் புன்னகைத்துக் கொண்டிருந்தாள்.

"இந்தா உன் பையனுக்கு..." பிஸ்கட் பாக்கெட் கொடுத்தான். "உன் ஹஸ்பெண்ட்?"

"அவர் இன்னும் வேலையிலிருந்து வரலை. வினு ஸ்கூலிலிருந்து வரலை. நாங்க மூணு பேர்தான் இந்த வீட்ல..."

அவளின் அந்தப் பழைய மழலைச் சிரிப்பு மட்டும் மாறவில்லை என்று நினைத்துக் கொண்டான்.

சாந்தாவைப் பற்றிச் சொன்னான்., தன் பெண் குழந்தையைப் பற்றியும்.

"ஹை..." என்று அவள் முகம் மலர்ந்தது.

"உங்களுக்குப் பிடிச்ச மாதிரியேவா?"

"உனக்கும்..."

சில நிமிடங்கள் மௌனமாகவும் கழிந்தன. பின்னர் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். நேரம் நகர்ந்தது.

"தலைவா! நம்ப வீட்டு வாசல்ல ஜனங்க கூட்டமா வந்திருக்காங்க."

"எந்த விழாவுக்குத் தலைமை வகிக்கணுமாம்?"

"அதுக்கில்லே, 'நாங்க வோட்டு போட்டுத்தானே ஜெயிச்சு எம்.எல்.ஏ. ஆனாரு; லஞ்சமா சம்பாதிக்கறதிலே எங்களுக்கும் பங்கு கொடுக்கணும்'னு கேட்க வந்திருக்காங்க!"

- வி.பி. கிருஷ்ணசாமி



ஜகதீஷ், தொண்டையில் வார்த்தைகளைச் சிக்கலெடுத்து விட்டுக் கேட்டான். கேட்கும் போது பயமாகக் கூட இருந்தது அவனுக்கு.

"ஒண்ணு கேட்டா தப்பா நினைக்க மாட்டியே?"

கேள்விக்குத் தயாரானாள் அவள்.

"நம்ம பிரிவை எப்படித் தாங்கிக்கிட்டே நீ? எப்படி என்னை மறக்க முடிஞ்சது? எப்பவாவது என் ஞாபகம் வருமா?"

"ஏன் கேட்டோம் என்று கூட இருந்தது ஜகதீஷுக்கு. இத்தனை காலம் கழித்து இங்கே ஏன் இப்போது திடீரென்று வந்தோம் என்று கேள்வி எழுந்தது அவன் மனத்தில். எழுந்து போகலாமா என்று யோசித்தான்.

பாரதி பதில் சொல்லாமல் உள்ளே போனாள்.

அவஸ்தை நொடிகள் கடந்தன. காப்பியுடன் வந்தாள். நீட்டினாள். மெதுவாய் சன்னக் குரலில் பேச ஆரம்பித்தாள்.

"என் பையன் வினு இருக்கானே... அவன் ரொம்ப சுட்டி! மூணரை வயசு. ரொம்ப புத்திசாலி. இந்த வயசுல அவன் அறிவைப் பார்த்து டைரக்டா அவனை யு.கே.ஜி.க்கு அனுப்பிட்டாங்க. அங்கேயும் ஃபர்ஸ்ட். ஹிந்தி கத்துக் கொடுக்கறேன் அவனுக்கு. இன்னும் ரெண்டு பாஷை கூட கத்துக் கொடுக்கணும். இப்ப இருந்தே அவன் தைரியத்தை வளர்த்துட்டிருக்கேன். அட்டகாசமாக அவன் ட்ராயிங் போடறதை என்கரேஜ் பண்றேன். அவனை ரொம்ப திறமைசாலியா ஆக்கணும். பாப்புலர் பப்ளிக் ஃபிகரா கொண்டு வரணும்ங்கறதுதான் என்னோட நோக்கம்."

நிறுத்திவிட்டு ஜகதீஷைப் பார்த்து அர்த்தத்துடன் புன்னகை செய்தாள்.

"இது பத்தாதுன்னு டவுன் பஸ்ல போகும் போது, ஒரு பெல் அடிச்சா பஸ் நிக்கும். ரெண்டு பெல் அடிச்சா பஸ் கிளம்பும்ங்கிற மாதிரி சின்னச் சின்ன விஷயங்களையும் கூட அவனுக்குச் சொல்லிக் கொடுக்கறேன் ஜகதீஷ்.. அப்புறம்... மழை நின்னதுக்கப்புறம் அவனும் நானும் என்ன பண்ணுவோம் தெரியுமா? தோட்டத்துல ஒரு மரத்தடியில போய் நின்னு அதை ஆட்டி..."

அவளுக்கு லேசாய்க் கண்கள் கலங்குவதைப் பார்த்தான் ஜகதீஷ்.

"மழை நின்று மரம் பெய்கிறது மழை..." சிரித்தாள்.

"எல்லாம் உங்களோட எண்ணங்கள் தான் ஜகதீஷ். உங்களோட ரசனைகள். உங்களோட பாதிப்பு... ஸோ.. எப்படி நான் உங்களைப் பிரிஞ்சதாய் இருக்க முடியும்? மறந்ததாய் இருக்க முடியும்?"

ஜகதீஷ் அவளை அமைதியாய்ப் பார்த்துக் கொண்டிருந்தான். "தேங்க்யூ பாரதி" என்றான்.

விடைபெற்றுக் கொண்டான்.

இப்போது மனசு நிலைக்கு வந்திருந்தது. ஆனால் திரும்பி வந்தும் கூட சாந்தாவிடம் இதைப் பற்றிச் சொல்லவும் பேசவும் ஏதோ தயக்கம் தடுத்தது.

குழந்தை ஒன்றுக்குப் போன இடத்தில் சாந்தா துணியால் துடைத்துவிட்டுக் கொண்டிருந்தாள்.

"கண்ணம்மா..." என்று கூப்பிட்டான் ஜகதீஷ். "என்னடா, அம்மா சேலையையும் சேத்தே நனைச்சிட்டியா...?" என்றான் குழந்தையிடம்.

"எத்தனை நாள்தான் கண்ணம்மா, கண்ணம்மான்னு கூப்பிட்டிட்டிருப்போம்? ஸ்கூல்ல சேர்க்க ஒரு பேரு வெக்கணுமில்லை...?" என்றாள் சாந்தா. குழந்தைக்கு கவுன் மாற்றிக் கொண்டிருந்தாள்.

'பாரதின்னு வெக்கலாமா?' - கேட்க எழுந்த ஆவலை மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான் ஜகதீஷ்.

"நீயே ஒரு நல்ல பேராச் சொல்லு..." என்றான்.

"ங்...ஙா...!" என்றது குழந்தை.

"நல்ல பேர் ஒண்ணு செலக்ட் பண்ணி வெச்சிருக்கேன். சொல்லட்டா?" என்றாள் சாந்தா.

"என்ன பேர் அது?" ஜகதீஷ் குழந்தையின் விரல்களை ஒவ்வொன்றாய்ப் பிரித்து ஆராய்ந்தவாறே கேட்டான்.

"பாரதி... பா.. ர.. தி!"

ஜகதீஷ் சட்டென்று நிமிர்ந்து சாந்தாவை ஊடுருவிப் பார்த்தான். உடம்பெங்கும் ஜிவ்வென்று ஓர் உணர்ச்சி பரவியது அவனுக்கு. புருவங்கள் உயர்த்தி நம்பாமல் பார்த்தான்.

சாந்தா கண்சிமிட்டிச் சிரித்தாள்.

உங்களுக்கு என்ன பிடிக்கும்னு எனக்குத் தெரியுங்க என்று சொல்வது மாதிரி இருந்தது அந்தச் சிரிப்பு.

---



**"சிஷ்யா, ஏன் அழுதுக்கிட்டு இருக்கே?"**

**"நீங்க தினம் ஓம்... ஓம்னு சொல்லிக்கிட்டே இருக்கணும்னீங்களா, எனக்கு HOME ஞாபகம் வந்திடிச்சி... அதான்...!"**

**- ராஜன்**

சந்திரசேகர் வந்து எதிரே அமர்ந்தார். இனி சந்திரசேகர்தான் மானேஜர்.

கிருஷ்ணமூர்த்தி நிமிர்ந்து பார்த்தார். ''சாயங் காலம் மூணு மணிக்கு 'ஸெண்டாஃப்'. ஞாபகப் படுத்தலாம்னு வந்தேன்....'' - சந்திரசேகர்.

''ம்....''

வேறு என்ன சொல்வதென்று அவருக்குத் தெரியவில்லை. சந்திரசேகருக்கும் மேற்கொண்டு



என்ன சொல்வதென்று புரியவில்லை.

கிருஷ்ணமூர்த்தியே தொடர்ந்தார்.

''இது ஒரு சம்பிரதாயம். அதனால என்னாலே இதை மறுக்க முடியலே. சும்மா ஸ்டாஃப் மாத்திரம் வச்சுக்கலாமா?''

''இல்லை சார், தொழிலாளர்கள்தான் ரொம்ப ஈடுபாட்டோட இருக்காங்க. சொன்னாலும் கேட்க மாட்டாங்க. பாராட்டு விழாவும், இந்தப் பிரிவு உபசார விழாவும் எல்லா இடத்திலேயும் நடக்கிறதுதானே சார். உங்களுக்கு மட்டும் என்ன புதுசா?'' என்றார் சந்திரசேகர்.

சும்மா அமர்ந்திருந்தார் கிருஷ்ணமூர்த்தி.

''சரி சார். அப்போ நான் மத்த ஏற்பாடுகளைக் கவனிக்கிறேன்.'' சொல்லிவிட்டு நகர்ந்தார் சந்திர சேகர்.

அறையிலே தனிமை யாக்கப்பட்டார். மனம் எதை யெல்லாமோ யோசித்தது.

''சார் யூனியன் ஆட்கள் வந்திருக்காங்க'' என்று முத்து வந்து சொன்னான்.

''வரச் சொல்லுங்க'' என்றார் கிருஷ்ணமூர்த்தி.

''வணக்கம் சார்.''

''வணக்கம். உட்காருங்க.''

யூனியன் தலைவர், செயலாளர், பொருளாளர் எல்லோரும் வந்திருந்தனர். எந்த யூனியன் நபருக் கும் இவர் மீது நல்ல எண்ணம் கிடையாது.

# பிரிவு

## பிரித்திவ்

அனேகமாக வாரம் ஒரு மெமோ யாருக்காவது தந்துவிடுவார். மெமோவை வாங்கின மறு நிமிடம் தொழிலாளி யூனியன் வாசலில்தான் போய் நிற் பான். யூனியன் தலைவர்களுக்கு அதன் பிறகு தலைவேதனைதான். யார் சிபாரிசுக்கு வந்தாலும் காதில் போட்டுக் கொள்ள மாட்டார். தலைவரே சொன் னாலும் சரி. ''நல்லாயிருப்

பீங்க. இதிலே நீங்க தலையிடாதீங்க. ஒழுக்கம் எனக்கு ரொம்ப முக்கியம். இதிலே கொஞ்சம் நான் அசட்டையா இருந்திட்டாலும் என்னாலே அப்புறமா இந்த பேஃக்டரியைச் சரியா ரன் பண்ண முடியாது'' என்று சொல்லிவிடுவார்.

''என்ன சார் எதுவும் பேசாம இருக்கீங்க? ரிட்டயர்டு ஆறோமேன்னு வருத்தமா?'' தலைவர் ஜெயசீலன்தான் கேட்டார்.

என்ன அர்த்தத்தில் தலைவர் சொன்னார் என்று புரியவில்லை கிருஷ்ணமூர்த்திக்கு.

''இதிலே எதுக்கு வருத்தம்? வயசானா 'ஓய்வு' ஒரு விதிதானே?''

''விதிதான். ஆனாலும் மனசு உடன்படா துன்னுதான் கேள்விப்பட்டிருக்கேன். அதனால தான் சொன்னேன்.''

''விதி விலக்குகளும் இருக்கலாம் இல்லையா?''

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தலைவருக்குத் தெரியவில்லை.

'ம்' என்று மட்டும் சொன்னார்.

பிறகு சிறிது யோசித்துவிட்டு தயக்கத்துடன் சொன்னார்: ''சார்.... அப்புறம் இந்த கருப்பசாமி கேசு....''

''அதை இன்னமே புது மேனேஜர் பாத்துப் பாரு.''

''இருந்தாலும் நீங்க கொஞ்சம் அவர் கிட்டே சொல்லிட்டுப் போனா பரவாயில்ல.''

''பரவாயில்லதான். ஆனா கருப்பசாமி ஷிப்ட் நேரத்திலே தூங்கினது தப்பில்லையா?''

''ம்..... பாவம் சார் நீங்க. உலக நடப்பே இன்னும் தெரியலே, அதுக்குள்ள இப்படி கோபிக்கறீங்க. ஷிப்டிலே அவனவன் வெளியிலே போயி கொலையே பண்ணறான், நீங்க என்னடான்னா....''

பேச்சை வளர்க்க கிருஷ்ணமூர்த்தி விரும்பவில்லை.

புரிந்து கொண்டு அவர்கள் வெளியேறினார்கள்.

மாலை மூன்று மணி.

கடவுள் வாழ்த்துக்குப் பின் ஒவ்வொரு உயர் அதிகாரியும் பேசினார்.

அத்தனை பேருமே கிருஷ்ணமூர்த்தியை மனித நேயம் தெரியாதவர் என்று நேரிடையாகவே கூறினார்கள்.

கிருஷ்ணமூர்த்திக்கு என்னமோ போல இருந்தது. மனித நேயம் பற்றிப் பேசும் இவர்களுக்கு மட்டும் இங்கிதம் தெரிகிறதா என்ன? ஓய்வு பெறும் ஒரு மனிதனை சந்தோஷத்துடன் இல்லா விட்டாலும், சகட்டு மேனிக்குத் திட்டாமலாவது அனுப்பலாமே.

''தொழிலாளர் சார்பாக கருப்பசாமி பேசுவார்.''

கிருஷ்ணமூர்த்திக்கு ஏதோ நெருடியது. அதிகாரிகளே இதுதான் சாக்கு என்று கோபங்களைக் கொட்டித் தீர்த்து விட்டார்கள். இவன் என்ன பேசப் போகிறானோ தெரியலையே என்று யோசித்தார். நேற்று ஷிப்ட்டில் தூங்கி மாட்டிக் கொண்டவன் இவன்தான்.

கருப்பசாமி மைக்கைப் பிடிக்கவும் தொழிலாளர் பக்கமிருந்து கை தட்டல் காதைப் பிளந்தது. கண்டிப்பாக நம்மைக் குதறிவிடுவான் என்று கிருஷ்ணமூர்த்திக்குக் கௌளி அடித்தது.

''வணக்கம். எனக்குச் சரியாப் பேசத் தெரியாது. ஐய்யா அவங்க இன்னைக்கு ஓய்வு பெறுதாங்க. இது ரொம்ப முக்கியமான நாள். ஐய்யா மனசுக்குள்ள திரும்பத் திரும்ப வந்து போற நாள். ஆனா நம்ம அதிகாரிங்க எல்லாருமே படிக்காதவங்க மாதிரி பேசிட்டாங்க. நான் படிக்காதவன் எனக்கே தெரியுது. இவங்க பேசினது எதுவுமே சரி கிடையாது. ஐயா கொஞ்சம் கோபமா வேலை வாங்குவாரு. ஏன் நான் ஷிப்ட்டிலே நேத்துத் தூங்கி மாட்டிக்கிட்டேன். நான் செஞ்சது தப்பு தான். நல்லாவே தெரியும். ஆனாலும் நம்ம லேபருக்கே உண்டான திமிரு. யூனியன்லே சொன்னேன். அவங்க கூட சார்கிட்டே கேட்டாங்க. சண்டை போட்டாங்க....''

கூட்டம் கை தட்டியது.

''நிழல் அருமை வெய்யில்லதான் தெரியும்னு சொல்வாங்க. அது போல சார் ரிட்டயர்டு ஆறாரு அப்படின்னு சொல்லவும்தான் சாரோட உண்மை சொரூபம் தெரியுது. சாரின் கண்டிப்பில் ஒரு தந்தையின் கண்டிப்பு இருக்கும். மனத்தின் ஒரு ஓரத்தில் ஈரம் தெரியும். இது அத்தனையும் எனக்குத் தெரியும். ஆனாலும் நான் யூனியனிடம் போய்ச் சொன்னேன். தந்தை மகனைக் கண்டித்ததும் ஓடிச் சென்று தாயிடம் சொல்வது போல. இங்கே யாருக்கும் யாரிடமும் துவேஷம் இல்லை. சார் நீண்ட ஆயுளுடன் எல்லா நலமும் பெற்று வாழ வேண்டும்....'' என்று சொல்லி விடை பெற்றான் கருப்பசாமி.

சம்பிரதாயமாக எல்லோரும் கை தட்டினார்கள். கிருஷ்ணமூர்த்தி கண் கலங்கினார்!



அடுத்த இதழ்....

●● ஸ்போர்ட்ஸ் ஸ்பெஷல்!

# குடிசை நீதி

வீட்டின் எதிர்ப்புறக் குடிசையில் ஓலம் ஆரம்பமாகி விட்டது. வசவுகள்.

காதைப் பொத்திக் கொண்டு காட்சியை மட்டும் பார்த்தாள் பானு.

நாராசமான வார்த்தைகளைக் கேட்கக் கூசியதால் உள்ளுக்குள்ளே அருவருப்பும் ஆவேசமும் தலைதூக்கின.

அடப்பாவி! காலால் எட்டி உதைத்தான் மனைவியை அவன். மூடிய காதுக்குள் மெல்லிய ஒலியில் அந்தப் பெண்ணின் அலறல்.

இந்த வீட்டுக்குக் குடி வந்த ஒரு வாரமாய் பானு இந்தக் கொடுமையைப் பார்க்கிறாள். குடி! மனிதனை மிருகமாக்கும் வஸ்து!

'நமக்கெதற்கு வம்பு' என்று அக்கம்பக்கத்தவரைப் போல இருக்க முயன்றாள். முடியவில்லை. அதுவும் இன்று அடக்கப்பட்ட கோபம் சிலிர்த்தெழத் துடிக்கிறது.

சட்டென கதவைத் திறந்து, சாலையைக் கடந்து அந்தக் குடிசை முன் போய் நின்றாள்.

இவளின் திடீர் வரவினால் அந்த ஆணின் 'ஆக்ஷன்' தடைப்பட்டது.

"போலீசைக் கூப்பிடவா?"

மந்திர வார்த்தை முன் மாயமானான் அவன்.

அடிகளின் ரணமும், வலியுமாய்த் தரையில் விழுந்து கிடந்த பெண்ணை நோக்கினாள்.

தன்னை அவள் வியப்புடனும் நன்றியுடனும் நோக்குவதைக் கண்டு புன்னகை செய்தாள்.

"உன் பேரு என்ன?"

"ராக்காயி."

"தினசரி இப்படி அடி வாங்கிச் சாகறியே!"

"வேற வழி? என்னை மாதிரி போக்கத்த சிறுக்கி என்ன செய்ய முடியும்?"

சுயபச்சாதாபத்துடன் பேசியவளை அனுதாபமாய்ப் பார்த்தாள்.

"சரி எழுந்திரு" என்று கை நீட்டினாள்.

"அம்மா...."

"ம்" என்று அதட்டினாள்.

தன்னுடன் வீட்டுக்குக் கூட்டி வந்தாள் அவளை.

கையின் மேல்புறம் அடிபட்டு லேசாய் ரத்தம் வழிவதைக் கண்டாள்.

"நல்லா கழுவிட்டு வா" என்று பாத்ரூமைக் காட்டினாள். பஞ்சினால் துடைத்து மருந்து போட்டாள்.

"ராக்காயி, ஏன் இப்படி அடி வாங்கணும்?"

"குடிச்சுட்டு வந்துடுச்சுன்னா, என் புருஷனுக்குப் புத்தி கெட்டுடும்மா. கஷ்டமாய்த்தானிருக்கு. ஆனால், புருஷன்னு ஒருத்தன் இருந்தால்தான் மதிப்பு. இல்லாட்டி, கண்ட நாயும் உள்ளே நுழையப் பார்க்கும்" என்றாள் தலையைக் குனிந்தபடி.

"இங்கே தங்கிக்கறியா?" என்று கேட்ட பானுவை ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

"அம்மா...."

"உன் புருஷன் அடி, உதையிலிருந்து நீ தப்பிக்க நான் புகலிடம் தரேன். நானும் என் மகனும்தான் இங்கே இருக்கோம். என்ன சொல்ற?"

"அது... என் புருஷன் வீட்டு முன்னாடி நின்னு கத்துமே" என்றவளைக் கூர்ந்து கவனித்தாள் பானு.

பயம்! தன் மேலேயே நம்பிக்கை இல்லாததால் வந்த பயம்!

"கத்தட்டுமே! எத்தனை நாள் கத்துவான்? மீறிப் போனால் நாலு நாள் கத்துவானா?" என்றாள் பானு அலட்சியமாய்.

"அது... இல்லைம்மா..." என்றவளின் தயக்கத்தைப் பார்த்துச் சிரித்தாள்.

ஜீரணிக்க முடியாத விஷயம் இது பெண்களுக்கு. கல்லால் அடித்தாலும் கணவன். ஃபுல்லாய் போட்டு வந்து உதைத்தாலும் புருஷன். வெளியே உதறி விட்டு வர முடியாத கோழைத்தனம்.

"அவன் கையாலே அடிபட்டு சாகணும்னு தலையெழுத்தா என்ன? தங்க இடம் கொடுக்கறேன். ஒரு வேலை வாங்கிக் கொடுக்கவும் நானாச்சு?" என்ற பானுவை யோசனையுடன் பார்த்தாள் ராக்காயி.

அவள் கண்களில் தெரிந்த குழப்பத்தையும் சந்தேகத்தையும் புரிந்து கொண்டாள் பானு.

"ஏன் திடீர்னு உன் மேலே அக்கறை எனக்குன்னு கேட்கறியா? என் புருஷனும் குடிகாரன்தான்... நானும் கஷ்டப்பட்டவள் தான். வெறுத்துப்போய் விட்டுட்டு [illegible]

வந்துட்டேன்...

ஒரு வருஷம் திண்டாடினேன். படிச்ச படிப்பும், பார்க்கற வேலையும் துணிச்சலைக் கொடுத்தது. முதலில் கொஞ்சம் பயமாய்த் தான் இருக்கும். ஆண் ஆதிக்க உலகமாச்சே இது. இப்ப பழகிப் போச்சு. நிம்மதியாய் இருக்கேன். துணைக்கு என் பையன் இருக் கான். ஆறாவது படிக்கிறான். லீவுக்கு எங் கம்மா வீட்டுக்குப் போயிருக்கான்'' என்ற வளைத் திறந்த வாய் மூடாமல் பார்த்தாள் ராக்காயி.

"ராக்காயி, வேலை எப்படியிருக்கு?'' என்று கேட்டாள் பானு தலையைப் படிய வாரியபடி.

"நான் சீவி விடட்டுமாம்மா?''

"பரவாயில்லை. என் வேலைக்கு நான் யாரோட உதவியையும் எதிர்பார்க்கிற தில்லை. சொல்லு. வேலை எப்படி?''

"பிடிச்சிருக்கும்மா'' என்றாள் ராக்காயி.

போன வாரமே அவள், பானுவுடன் தங்க ஆரம்பித்து விட்டாள். புருஷன் கழுத்தை நெறிக்கும் அளவு போகவே மொத்தமாய் வந்துவிட்டாள்.

பானு, தனக்குத் தெரிந்த ரெடிமேட் ட்ரெஸ் தயாரிக்கும் நிறுவனத்தில் 'அட் டெண்டர்' உத்தியோகம் வாங்கிக் கொடுத்து விட்டாள். காலை ஏழு முதல் மாலை நாலு வரை வேலை அவளுக்கு. பிறகு, இங்கு வீட் டுக்கு வந்து பானுவோடு வீட்டு வேலை களில் உதவினாள்.

பானு சொன்னது போலவே, அவள் புருஷன் முதல் இரண்டு நாளில் கத்தினான். பானுவின் அதிகார மிரட்டலில் பயந்து போய் இப்போது இந்தப் பக்கமே வருவ தில்லை.

"ஏன் ராக்காயி ஒரு மாதிரியிருக்கே?''

"ஒண்ணுமில்லேம்மா. வேலை முடிஞ்சு வரும்போது அதைப் பார்த்தேன்.''

"எதை?''

"அதான் என் புருஷனை. வழியிலே தடுத்து நிறுத்தி பணம் கேட்டு மிரட்டுச்சு.''

"ஓகோ, நீ என்ன செஞ்சே?''

"பத்து ரூபாய் முந்தானையில் முடிஞ்சு வைச்சிருந்தேன். பிடுங்கிட்டுப் போயிடுச்சு.''

"ஏன் நீ தடுக்கலியா அதை?''

"ஏதோ ஒரு பயம்... முடியலேம்மா. வார்த் தையே வரலே அது போட்ட அதட்டலில்'' என்றவளை வெறித்துப் பார்த்தாள் பானு.

என்ன உரிமை இருக்கிறது இவள் புருஷ னுக்கு, இப்படி நடுவழியில் மிரட்டி பணம் பிடுங்க? ஏன் இத்தனை மிரட்சி இவளுக் குள்?

கூந்தலைப் பின்னி முடித்து சீப்பிலிருந்து முடிகளை அகற்றி சுருட்டினாள். குப்பைக் கூடையில் அதைப் போட்டு விட்டு எழுந் தாள்.

"ராக்காயி, நீ எதுவரைக்கும் படிச்சி ருக்கே?''

"ஏதோ ரெண்டாவது வரைக்கும் போனேன். அப்புறம் விடலே வீட்டுலே.''

"ம்... நாளை முதல் நீ எழுதப் படிக்கக் கத்துக்கறே.''






ஆந்திராவில் லக்ஷ்மிபார்வதி கொஞ்சம் கொஞ்சமாக அரசியலில் பிரவேசம் செய்து முக்கியத்துவம் பெற்றுக் கொண்டிருக்கிறார் என்பதை விளக்கும் கேலிச் சித்திரம்.
கார்ட்டூன் உபயம் : **"சண்டே கிரானிகிள்"**
தகவல்: **என். பங்கஜம்**



அட,
அங்கேயுமா?

"நானா? ஐயே..." என்றவளை உறுதியாய் ஏறிட்டாள் பானு.

"நம்மை மாதிரி பொம்பளைங்க இப்படி எதுக்கெடுத்தாலும் நடுங்கிச் சாகறதே படிக்காததினாலேதான். படிப்பு, புத்தி பலம் தரும். பலம் நல்ல சிந்தனையை ஏற்படுத்தும். நல்ல சிந்தனை பயத்தைப் போக்கும். பிரச்னையைத் துணிவுடன் எதிர்நோக்க வைக்கும். நாளை முதல் நீ படிக்கிறாய். நான் தான் வாத்தியாரம்மா உனக்கு" என்றவளிடம் மறுக்க முடியாமல் தலையசைத்தாள் ராக்காயி.

அன்று ஞாயிற்றுக்கிழமை. விடுமுறை நாள். பானு சமைத்துக் கொண்டிருந்தாள். ராக்காயி கத்தரிக்காயை அரிந்து கொண்டிருந்தாள் உதவியாய்.

"பரணி எங்கேம்மா?"

"கிரிக்கெட் விளையாடப் போயிருக்கான். கத்தரிக்காயை வெட்டினப்புறம், வெங்காயத்தை உரிச்சுக் கொடு" என்றாள் பானு. குக்கர் விசிலடிக்கவே 'வெயிட்'டை போட்டாள் தலையில்.

"அம்மா...."

"என்ன, சொல்லு"

"அது..." என்றவளை புரியாமல் பார்த்தாள்.

ராக்காயி இங்கு வந்து கிட்டத்தட்ட ஒரு வருடம் ஓடி விட்டது. இப்போது நன்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டு விட்டாள். ஆபீசிலும் நல்ல பெயர். சம்பள உயர்வு கூட கொடுத்திருக்கிறார்கள்.

"ஏம்மா, தாய்மைங்கறது எவ்வளவு பெரிய பரவசம்" என்றவளை வியப்புடன் பார்த்தாள் பானு.

பரணியை, தான் கொஞ்சி மகிழும் போது ஏக்கமாய் ராக்காயி நோக்குவதை கவனித்திருந்தாள் பானு கொஞ்ச நாளாய்.

"ஓ! உனக்கு புருஷன் ஞாபகம் வந்திருச்சா?"

ராக்காயி மௌனமாய் வெங்காயத்தை உரித்தாள்.

"இந்த பெண் ஜன்மமே இப்படித்தான்" என்று எகத்தாளமாய் சொன்னாள் பானு.

ராக்காயி தலைநிமிர்த்திப் பார்த்தாள்.

"ஏம்மா, நான் சாக்கடையிலே இருக்கிற புழு மாதிரி வாழ்ந்துக்கிட்டு இருந்தேன். உலகம் அதுமட்டுமில்லேன்னு நல்ல பக்கத்தை காண்பிச்சது நீங்கதான்."

"எங்கே வர்றே, சொல்லு."

"முன்னே, பின்னே தெரியாத என் மேலேயே நீங்க இவ்வளவு அக்கறை எடுத்து, என் அறியாமையைப் போக்கினீங்களே, அதேமாதிரி..."

"ம், சொல்லி முடி"

"என் கழுத்துல தாலி கட்டின புருஷன். என்னை விட மோசமான இருளில் இருக்காரு. அவரை மாற்றி, இப்படியும் உலகம் இருக்கு, சந்தோஷம் இருக்குன்னு அவர் புத்தியை தெளிய வைக்கறது என் கடமை இல்லையாம்மா?"

பளிச்சென மின்னல் தாக்கியதைப் போல அதிர்ந்து போய் நின்றாள் பானு.

"உங்களவுக்குப் பரந்த மனசோட, யாரோ ஒருத்திக்கு நான் உதவலேன்னாலும், என் புருஷனைத் திருத்தறது என் முதல் கடமைன்னு மனசுக்குப் பட்டுடுச்சும்மா. அதுக்குண்டான துணிச்சலைக் கொடுத்தது நீங்கதான்" என்று கைகூப்பியவளை ஓடிச் சென்று அணைத்துக் கொண்டாள் பானு.

படிப்பும், வேலையும் தன்னை மட்டுமே காத்துக் கொண்டு, நிம்மதியான வாழ்வை தேடிக் கொள்ள வைத்தது என்னை. ஆனால் ராக்காயி...? தன்னை விட விசாலமான மனத்துடன் சிந்திக்கிறாள்!

ராக்காயி, தன் முன் விசுவரூபம் எடுத்து நிற்பதாய் பட்டது பானுவுக்கு.

"நீ புறப்படு ராக்காயி. இன்னிக்கே உன் கடமையை ஆரம்பிச்சுடு. உன் பேச்சு மூலமாய் எனக்கும் புது வழியை காட்டியிருக்கே" என்று சொல்லி அவள் கைகளை அழுந்தப் பிடித்துக் கொண்டாள் பானு.

# அரை ஏக்கர் தென்னை ஐம்பது ரூபாய்!

**தமயந்தி**

பஸ் இன்னும் வந்தபாடில்லை. சிவகாமி 'கால் வலிக்குதும்மா' என்றாள். இனிலும் ஸ்ரீவைகுண்டம் போய், பஸ் மாறி திருநெல்வேலி போக ராத்திரியாகிவிடும். அதற்குள் சிவகாமி நிச்சயம் இடுப்பில் ஏறிவிடும். அதை ஒரு கையில் தூக்கிக் கொண்டு பெருமாள்புரம் பஸ்ஸுக்காக நிற்க வேண்டும். கடவுளே! போகாமலிருந்து விடலாமா?

போகாமலிருந்து விட்டால் திரும்ப வீட்டுக்குப் போக வேண்டும். வீடு என்றால் நாகராஜன் திருப்பி எட்டி உதைப்பான்.

''போ நாயே. உங்கப்பன்ட்ட உன் பங்கு சொத்த வாங்கிட்டு வா. பிசுனஸ் ஆரம்பிக்கணும்.''

மொத்தம் அறுபதாயிரம். பதினைஞ்சு பவுன் நகை. இதைப் போட்டு நாகராஜனைக் கட்டி வைக்கவே அப்பா திணறிப் போய் விட்டார். ஆறு மாசம் முன்தான் தங்கை சொர்ணா கல்யாணம் முடிந்தது. அந்த கடனிலே தத்தளித்துக் கொண்டிருப்பார். இப்போது போய் என் சொத்தைத் தா என்றால் என்ன செய்வார்?

சொத்து என்ன பெரிய சொத்து. நாகர்கோவிலில் மூன்று தென்னந்தோப்பு. ஒவ்வொண்ணும் அரை ஏக்கர். இரண்டு வயல். கல்யாணத்தோடேயே ஒரு தென்னந் தோப்பு இவளுக்கு என்று பேசி முடிவானதுதான். ஆனால் இப்பவே அதற்கென்ன அவசரமாம் என்று தோன்றாதா? ஏற்கெனவே கழுத்து முங்கும் கடனில் அப்பா. அதுதான் நாகராஜனுக்கு பயமாய் இருக்கும். எங்கே கடன் தொல்லையில் மனுஷன் தென்னந்தோப்பை விற்று விடப் போகிறாரோ... என்று. பிஸ்னஸ் இரண்டாம்பட்சம்தான்.

''யம்மா... பஸ் வருது...''

பெருமாள்புரத்தில் இறங்கும் போது இருட்டி விட்டிருந்தது. பெட்ரோமாக்ஸ் விளக்கு பொருத்தும் முயற்சியில் பெட்டிக்கடை முதலாளிகள் இருந்தனர். சிவகாமி இடுப்பில் ஏறிக் கொண்டாள். அப்பாவுக்காக 'அரசனில்' வாங்கின முறுக்கும் கேக்கும் ஒரு கையில் ஆடிற்று. ஹவுசிங் போர்ட் திருப்பத்தில் சிவகாமி மிட்டாய் கேட்டது.

''இருடி... தாத்தா வீடு வந்துட்டுது.''

வீட்டில் அப்பா இல்லை. அம்மா வெளியே வந்து பார்த்தவள் ''ஏய்...'' என்று சந்தோஷப்பட்டாள். விஷயம் கேட்டால் இந்த சந்தோஷம் வற்றிவிடும்.

''என்னடி... மாப்ளே வர்லியா?''

''இல்லம்மா... வேல.''

''என்ன திடீர்னு?''

இப்படி வாசலில் வைத்து ஆரம்பிக்கக்கூடிய விஷயமா இது? மெல்ல சொல்ல வேண்டும். இன்று முடிந்தால் ராத்திரி; இல்லையென்றால் காலையில். மத்யானம் கிளம்பினால் போதும்.

''சும்மா திடீர் ப்ளான்.''

உள்ளே ஹாலுக்குள் நுழைந்ததும் டி.வி. கறுப்பு வெள்ளையில் ஓடிக் கொண்டிருந்தது. பதினாலு இன்ஞ்.

''கலர் டி.வி. எங்கம்மா?''

''சொர்ணா கல்யாணத்துல ஏக கடன். ஒருத்தன் திடீர்னு நாளைக்குக் காலைல எட்டாயிரம் வேணும்னான். நகை எல்லாம் வித்தாச்சு. கலர் டி.வி.ய யாரோ பிரண்டுட்ட வித்துட்டார் அப்பா. நம்ம சேதுதான் அவன் பழைய டி.வி.ய சும்மா கொணர்ந்து போட்டான். ஆமா... சாப்பிடுறியா காப்பி குடிச்சிட்டு சாப்பிடுறியா?''

சேது... அப்பாவிடம் க்ளார்க்காய் இருந்தவன். அவனுக்கே இத்தனை விசாலம் என்றால்

''என்னடி யோசனை?''

''ஒண்ணுமில்லம்மா

அப்பா

வாட்டும் ஒரேடியா சாப்பிட்டுறலாம்.''

[illegible] வருதோ!''

[illegible]

அம்மா நிமிர்ந்து பார்த்தாள்.

[illegible]

[illegible]

''நட்டுப்பாடு. சிவகாமி சாப்பிடுறியாம்மா? பாட்டி சாம்பார் வச்சிருக்கேனாம்.'' சிவகாமி வெறித்தது.

மனசுக்குள் நாகராஜன் நினைவு வந்தது. அவன் ஒரு தடவை திருநெல்வேலி வரும் போது மஞ்சள் காமாலை வந்து விட, அப்பா பேயாய் அலைந்தார். அப்போது சிவகாமிக்கு ஆறு மாதம். ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டும் என்று டாக்டர் சொல்லி விட்டார்.

ஜங்ஷன் ஹைபாவில் நாகராஜன் சேர்க்கப்பட்டான். அப்பா ஆஸ்பத்திரிக்கும் வீட்டுக்குமாய் ஓடினார். சேது சாப்பாடு எடுத்துப் போனான்.

**பினாட் பிரஷரா? யாரால்? மகள்களால். அவர்கள் கல்யாணத்துக்குப் பணம் திரட்டினதால். சீர் செய்ததால். பிரசவம் பார்த்ததால்....**

ஒரு வாரம் கழித்து நாகராஜன் வீட்டுக்கு வந்தான் மெலிந்து, கறுத்து, காரம் சேர்க்காத உணவுடன்.

அந்த முறை கிளம்பும் போது அப்பாவிடம் கேட்டான்

''எவ்ளோப்பா ஆச்சு?''

''எவ்ளோவானா என்னம்மா?''

''இல்லப்பா... போய் அனுப்பிட றேன்.''

''போயிட்டு வா. அடிக்கடி வா. அது போதும்.''

[illegible] ஆயிற்று என்று கூட நாகராஜன் கேட்கவில்லை. கேட்கத் தோன்றவில்லையோ [illegible] மறந்து போனதுதான் அதை விடக் கொடுமை!

அ[illegible] சிவகாமி தூங்கி விட்டாள். அப்பா வந்ததும் அவளை நெற்றியில் இழுத்து முத்தமிட்டார். தூக்கத்தில் சிவகாமி தெளிந்தாள். இப்படித்தானே எங்களையும் வளர்த்திருப்பார்.

''மாப்ள சுகமா?''

''ம். நீங்க நல்லாருக்கீங்களாப்பா?''





***''இதுக்குத்தான், டீ.வியைப் பார்த்து, யோகாசனமெல்லாம் கத்துக்காதீங்கன்னு தலைப்பாடா அடிச்சுக்கிட்டேன்.''***

***- ஜூலி***

---

''ம். இருக்கேன்'' சிரித்தார்.

''சொர்ணா கல்யாணத்துல ரொம்ப கடனாயிடுச்சாப்பா...?''

''ரொம்ப ஒண்ணுமில்ல... சமாளிச்சுறலாம்.''

''எப்படி? டீ.வி., பைக்... ஒண்ணொண்ணா வித்தா?''

''அம்மா சொன்னாளா?''

''ஆமா.''

அப்பா நிமிர்ந்து பார்த்தார். உள்ளே குத்திற்று. நாகராஜன் ஆஸ்பத்திரி செலவுக்கு இரண்டாயிரம் ஆகியிருக்கும். அதை இப்போது கூட கொடுக்கலாம். கொடுத்தால் அப்பாவுக்கு நிச்சயம் உதவியாயிருக்கும்.

வட்டமாய் உட்கார்ந்து தரையில் சாப்பிட்டார்கள். இங்கேதான் இப்படி எல்லோரும் உட்கார்ந்து சாப்பிடுவது எல்லாம். அங்கே நாகராஜனுக்குப் பரிமாறி விட்டுத்தான் சாப்பிட வேண்டும்.

''என்ன யோசனை. சாப்பிடலை?'' அப்பா முதுகைத் தட்டினார்.

பிரமாதமான சாப்பாடில்லை. முருங்கைக்காய் சாம்பார். கோஸ் கூட்டு. இவர்கள் வந்ததால் அப்பளம். ஆனாலும் ருசி பிரமாதமாய்த் தோன்றிற்று.

''வர வர நான் சமைச்சு சாப்டுறதே நல்லால்ல. இதென்ன் இவ்ளோ ருசியா படுது.''

''வா. அடிக்கடி வா. நீதான் வர மாட்டேங்கிற.''

''வர்றேன். அடிக்கடி வர்றேன்ப்பா'' குரல் தளும்பிற்று இவளுக்கு.

''சொர்ணாவும் மாப்ளையும் போன வாரம் வந்தாங்க.''

''நல்லாருக்காளாப்பா?''

''ம். ஆடி சீர் செய்யணும்.''

''என்ன செய்யப் போறீங்கப்பா?''

''வரும். வழி வரும். உங்கல்லாருக்கும் வரலே?''

அப்பா சாப்பிட்டதும் அம்மா ஏதோ மாத்திரையை நீட்டினாள்.

''என்னதுப்பா?''

''மருந்து''

''எதுக்குப்பா?''

''பிரஷர் ஏறிட்டு; டாக்டர் பிடிடா மாத்திரைன்னுட்டான்.''

பிளட் பிரஷரா? யாரால்? மகள்களால். அவர்கள் கல்யாணத்துக்குப் பணம் திரட்டினதால். சீர் செய்ததால். பிரசவம் பார்த்ததால். இப்போது கூட அப்பா கேட்கலாம். 'நாகராஜனுக்காகச் செலவு செய்ததைத் தர முடியுமா?' ஆனால் கேட்கவில்லை! என்ன மனசு, என்ன மனசு!

ராத்திரி தூக்கம் வரவில்லை. இந்த நிலையில் எப்படி 'என் பாகத்தைப் பிரித்துத் தா' என்று கேட்க முடியும்? அப்பாவுக்கு உள்ள பெருந்தன்மை எனக்கு எப்படி எள்ளளவும் இல்லாது போகும்?

மறுநாள் ''கிளம்புறேன்ப்பா'' என்றபோது சிவகாமி கையில் அப்பா ஐம்பது ரூபாய் தாளைத் திணித்தார்.

''எதுக்குப்பா?''

''இருக்கட்டும்மா. பிள்ளைக்கு ஏதாவது வாங்கிக் கொடு.''

கடவுளே! மீண்டும் சம்மட்டியால் ஓங்கி ஓர் அடி. சிவகாமி அதைக் கைக்குள் இடுக்கிக் கொண்டது.

''அப்பா... ஏன் நீங்க நாகர்கோவில் நிலத்தை வித்துறக் கூடாது? கடன் ஒழியுமே!''

''அது ஒவ்வொண்ணும் ஒவ்வொருத்திக்கு வாக்கு கொடுத்தாச்சு. ஏதோ எங்க காலத்துக்கப்புறம் உங்களுக்கு ஒண்ணு வேணாம்?''

'உங்க காலத்திலேயே அதை வாங்கிவிட முயற்சி நடக்கிறதென்பது உங்களுக்குத் தெரியுமா அப்பா?'

தெரியாது. தெரியக்கூடாது. தெரிய வேண்டாம்.

''அப்பா....!''

''என்னம்மா....?''

''என் பங்கை வித்து நீங்க கடனை அடைச்சுடுங்கப்பா.''

''நீ சொன்னதே போறும் தாயி.''

''இல்லப்பா நிஜமா சொல்றேன்.''

அப்பா கண்கலங்க நின்றார்.

அப்பா பஸ் ஏற்றி விட்டார். நிலத்தை விற்பாரா விற்க மாட்டாரோ தெரியவில்லை. பாகம் பிரித்துத் தாவென்று கேட்கவில்லை. அது போதும். பஸ் புகை கக்கி கிளம்பிற்று. மனசுக்குள்ளிருந்து புகை வெளிக் கிளம்பி ஜன்னல் வழி வெளியேற, மனசு லேசானது.

''சிவகாமி!''

''என்னம்மா?'' சிவகாமி சிரித்தாள்.

''அம்பது ரூபாய தொலைச்சிராதே. அப்பாட்ட கொடுத்து ஏதாவது வாங்கிக்க... என்ன?''

சிவகாமி சந்தோஷமாய்ச் சிரித்தாள். நாசரேத் போக, இருட்டிவிடும்.

# பூனைகள் ராஜ்ஜியம்




அலைகளின் ஆரவாரம் வித்தியாச மாக ஒலித்து விடியலை உணர்த்தியது. எழுந் திருக்கத்தான் மனமில்லை. சங்கையா கிழிசல் கம்பளியை இழுத்துப் போர்த்திக் கொண்டு சுருண்டான்.

குடிசைக்கு வெளியே பூனை ஒன்று 'ஊ...ஊ...ஊ...ஊ..' என்று குழந்தை போலச் சிணுங்கி அழுதது. ''அடி செருப்பால! சனியன்!'' என்று வைத மங்கா, புரண்டு படுத் தாள்.

''உனக்கு ஒரு கல்யாணமாகி, குழந்தை அழுதுச்சுன்னா 'சனியன்'னு திட்டுவியா? சர்க்கரைக் கட்டின்னு கட்டி அணைச்சுப் பியா?'' என்று கேட்டவாறு போர்வையை உதறி விட்டு சங்கையா எழுந்தான்.

வலையை அள்ளி, உதறி, தோள் மேல் போட்டுக் கொண்டு, ''மங்கா! போய் வாரேன். கதவைத் தாள் போட்டுக்க'' என்று கூறிவிட்டு வெளியேறினான்.

மணற்பரப்பில் நடந்து கட லோரத்தை நெருங்கிய போது, வானம் குளித்து முடித்து விடியற்காலை பூஜைக்குத் தயாரானது போல் கீழ் வானில் விபூதி தரித்து ஒளிர ஆரம்பித்திருந்தது.

சங்கையா கட்டு மரத்தில் வலையைச் சுருட்டி வைத்துவிட்டு, கரைப்பக்கம் நின்று, கடற்பக்கமாகத் தன் வாழ்க்கையின் ஆதாரத் தையே தள்ள ஆரம்பித்தபோது, தூரத்தில் கடலில் விளக்கொளி தெரிந்து முன்னேறவும் செய்தது.

'நமக்கென்ன? நம்ம காரியத்தைக் கவனிப் போம்' என்று அறிவு கூறியபோதிலும் இயற் கையான ஆவல் குறுகுறுப்புடன் சங்கையா நின்றான். ''சக் சக் சக் சக்'' என்று விசைப் படகின் ஒலி, தெளிவாக அலை கடல் இரைச்சலுக்கும் மேலே கேட்டது. முன்னேறி வந்த ஒளி ஓரிடத்தில் நின்று விட்டது. அதற்கு மேல் கரையை நெருங்கினால் மணலில் சிக்கும். படகிலிருந்து இரு நிழலுரு வங்கள் இறங்கி, மார்பளவு நீரில் நடந்து, கரையை நோக்கி வந்தன. கரங்களை உயர்த் திப் பிடித்திருந்தார்கள். அதில் சுமந்த வாட்டர் புரூப் பாக் பம்மியிருந்தது. அனு பவப்பட்டவர்கள். தடுமாற்றமின்றி நடந்து, சீக்கிரமே கரையை நெருங்கி விட்டார்கள்.

இதற்குள் விசைப்படகு திரும்பிச் சென்று விட்டிருந்தது. விளக்கொளியும் தெரிய வில்லை. ''சக்சக்'' ஓசையும் கேட்கவில்லை.

அவர்களைக் கவனிக்காதவன் போல் அல்லது கவனித்தும் 'தனக்கென்ன போச்சு' என்பது போல் இவன் கடமையில் இறங்கி னான்.

''இந்தாங்க....''

''ஏன் சாமி?''

''வீடு பக்கமா?''

''ஆமா குப்பத்துல...''

''அழைச்சிட்டுப் போறது, உடை மாத்த ணும்... தாகத்துக்கு ஏதும் கிடைக்குமா?''

''மோர்த் தண்ணிதான்.''

''நட.''

அவன் சம்மதத்துக்குக் காத்தி ராமல் உத்தரவிட்டு உடன் நடந் தார்கள். கீழ்ப்படிவது தவிர வேறு வழியில்லை - புரிந்தது.

வீட்டுக்குப் போனதும் திரை மறைவில் உடை மாற்றினார்கள். ஈரம் சொட்டிய உடைகளை மங்காவிடம் தந்தார்கள். அவள் வெளியே எடுத்துச் சென்று பிழிந்து மணலில் உலர்த்தினாள். நீராகாரம் கொடுத் தாள்.

நீல நிற 'டெனிம்', பழுப்பு நிற 'விண்ட் சீட்டர்' அணிந்திருந்தார்கள். 'ஜிப்' கழுத்து வரை உயர்ந்திருந்தது. குளிருக்கு அடக்கமாக 'வாட்டசாட்டமா, அழகா இருக்காங்க' என்று எண்ணினாள்.

''சங்கையா! நாங்க வந்த விஷ[illegible]

கும் தெரியக் கூடாது.''

''நான் யாருகிட்ட போய் சொல்லப் போறேன்'' என்றான்.

"ஏற்கெனவே குப்பத்துல எல்லாருக்கும் தெரியும். நான் துணி உலத்தறதை ராஜாத்தி பார்த்துக்கிட்டிருந்தா. விடிஞ்சிருச்சுல்ல'' என்றாள் மங்கா.

"குப்பத்துக்குத் தெரிஞ்சா பரவாயில்ல."

"உங்கள் மாதிரி பலபேரைப் பார்த்து அனுபவப்பட்டவங்கதான்."

''அதனாலதான் சொல்லுறோம். பரவால்ல. ஆனா போலீஸுக்கு விஷயம் எட்டக் கூடாது. எட்டினா...."

ஒருவர் மங்காவின் முகவாயை அழுந்தப் பிடித்து உயத்தினான். "உன் முகம் பாழாயிடும். ஆஸிட் பல்பு தெரியுமா?"

"வாழ்நாளெல்லாம் அப்பனும் மகளும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து பரிதாபப் பட்டுக்கிட்டிருப்பீங்க!"

திரும்பவும் பேச முடிந்ததும் மங்கா கேட்டாள்! "நீங்க அயல் நாடா? பாஸ்போர்ட் போர்ஜரியா?"

# கி. ராஜேந்திரன்

"விசா, பாஸ்போர்ட் இருந்தா, போர்ஜரியானா கூட திருச்சி அல்லது மெட்ராஸில பிளேன்ல போய் இறங்குவமே!"

"அப்ப நீங்க புலியா?"

"இல்லே, பூனைங்க!"

"அது இங்க நிறைய இருக்கு. இன்னிக்குக் காலைல கூட பூனை அழுதுதான் என்னை எழுப்பிச்சு."

''அதிராமபட்டினத்திலிருந்து தஞ்சாவூருக்கு பஸ் இருக்கா?''

"ஓ! பட்டுக்கோட்டை, மன்னார்குடி, தஞ்சாவூர்."

"அப்புறம் ரயிலேறிடுவோம்."

குளிருக்குக் குளிர்; வெய்யிலுக்கு வெய்யில். விடிந்து சற்று நேரத்துக்கெல்லாம் உடை காய்ந்து விட, சுருட்டி டிராவல் பேகில் அடக் கிக் கொண்டு புறப்பட்டனர்.

"சங்கையா! இன்னிக்கு பொழப்பு கெட்டு



இந்தியா-பாகிஸ்தான் போரில் பூஞ்ச் பகுதியில் செகண்ட் லெப்டினென்ட் வைத் என்னும் பஞ்சாபி இளைஞன் (வயது 23) வீரமரணம் அடைந்தான். அவனுடைய டயரியைப் புரட்டியதில் ஒரு பக்கத்தில் இப்படி எழுதியிருந்தான்:

- நான் முன்னேறினால் தொடர்ந்துவா.
- நான் சரணடைந்தால் என்னைச் சுட்டுவிடு.
- நான் இறந்தால் விட்டுச் சென்று விடு.

— 'பொது அறிவுச் செய்திகள்' நூலிலிருந்து பா. குணா.

தில்லே எங்களால... "இந்தா," ஓர் ஐம்பது ரூபாய் நோட்டு நீள, சங்கையா கை ஏந்து முன்னர், "நாங்க பிச்சைக்காசு வாங்கறதில்லை" என்று வெடித்தாள் மங்கா. சங்கையாவின் ஏமாற்றம் முகத்தில் தெரிந்தது.

நோட்டு மறுபடி பைக்குள் போய்விட, "ரோஷக்காரி! அப்படித்தான் இருக்கணும்!" என்று பாராட்டி விட்டு நடந்தார்கள்.

மணல் பாங்கான பூமியில் சவுக்குத் தோப்பு இடையே ஒற்றையடிப்பாதையில் அதிராமபட்டினம் நோக்கி நடக்கும் போது, "போலீஸ்ல சொல்லாம விடமாட்டா அந்தப் பொண்ணு. அப்பன் பயந்தாலும் இவ நச்சரிப்பா" என்றான்.

"அதானே நம்ம நோக்கம்."

கும்பகோணம் டி.எஸ்.பி. ஃபோன் போட்டு விவரம் தெரிவித்த போது, சென்னை டெபுடி கமிஷ்னர் கடுகடுத்தார்.

"அங்கேயே வளைச்சுப் போடறதுக்கு என்ன?"

"அப்பன்காரன் பயந்துட்டான், ஸார். பொண்ணு தைரியம் சொல்லி அதிராம பட்டினம் போலீஸ் ஸ்டேஷனுக்கு அவனை இழுத்திட்டு வரதுக்குள்ளே இவங்க ரயிலேறியாச்சு?"

"எந்த ரயில்?"

"யாருக்குத் தெரியும்?"

"டிஸ்கிரிப்ஷன் கொடுங்க."

கொடுத்தார்.

"ஓகே. எல்லாத்தையும் எங்க தலைலயே கட்டுறீங்க. பார்க்கறோம்." ஃபோனை வைத்தார். "ராஜ்கமல்!"

"எஸ் ஸார்!"

"எக்ஸ்டன்ஷன்ல கேட்டுட்டிருந்தீங்கல்ல? ஸ்டேஷனுக்கு ஆள் அனுப்புங்க. வரவேற்பு விழா நடத்தி ஃபைவ் ஸ்டார் ஓட்டலுக்கு அழைச்சுப் போங்க."

"என்ன காரணம் சொல்லி அரெஸ்ட் பண்றது ஸார்?"

"காரணம் எதுக்குப்பா? தடா இருக்குல்ல!..."

"அது சுலபமா இருக்கலாம்; ஆனா புத்திசாலித்தனமா இருக்குமா ஸார்?"

"ஏன்யா, என்னை மடையன்னு சொல்றியா?"

"நோ ஸார். அவங்க நம்மை விட கெட்டிக்காரங்கன்னு சொல்றேன். ஆட்கள் அடையாளம் தெளிவா இருக்கு; ஒப்பனா வராங்க, எதுக்கு?"

"'டிகாயா' இருப்பாங்க ஸார். இவர்களை மாதிரி இன்னும் ரெண்டு பேர் வேற இடத்திலே கரை இறங்கி வரலாம்."

"வந்துட்டுப் போகட்டும்."

"இவங்களைப் பிடிச்சா அவங்க செய்யப் போற காரியத்தைத் தெரிஞ்சுக்கவே முடியாம போகலாம்."

"தெரிஞ்சு என்னய்யா ஆகணும்."

"என்ன ஸார், இப்படி கேட்டுட்டீங்க? சந்திரிகா அமைதிப் பேச்சு வார்த்தை ஆரம்பிச்சிருக்காங்க. பிரபாகரன் சந்தோஷமா இருப்பதாகச் செய்தி. யாழ்ப்பாணத்துக்கு நாலாயிரம் கோடி கிடைக்கப் போகுது. இதெல்லாம் பிடிக்காதவங்க புலிகளிலேயே சிலர் இருக்கலாம்."

"இருந்துட்டுப் போகட்டும்."

"அவங்கள்ல சிலர் இங்க வந்து ஒரு பெருந் தலைவரைத் தீர்த்துக் கட்டறதா வைச்சுக்குங்க...."

"யோவ்! என்ன... நாவல் எழுதவா போலீஸ்ல சேர்ந்தே?"

"யோசிங்க ஸார். உடனே இந்தியா இலங்கைக்கு பிரஷர் இருக்கும்.. பேச்சு வார்த்தை தடைப்படலாம்... அவசரப்பட்டு இவங்களை அரெஸ்ட் பண்றது நல்லதா, இவங்க திட்டத்தைப் புரிஞ்சுக்கப் பார்க்கிறது நல்லதா?"

"என்னமும் பண்ணு! கேஸை உன்னிடம் ஒப்படைச்சாச்சு. ஏற்கெனவே அதலபாதாளத்துல இருக்கிற போலீஸ் இமேஜை இன்னும் கெடுக்கவா முடியும்?"

"முயற்சி பண்றேன் ஸார்!" என்று ஸீரியஸாகக் கூறி விட்டு வெளியேறினான் ராஜ்கமல்.

அடையாளங்களை வைத்து அவர்களைக் கண்டு கொள்வதும் 'ஃபாலோ' செய்து போவதும் கஷ்டமாக இருக்கவில்லை. விண்ட் சீட்டரின் ஜிப்பை இறக்கிக் கையை உள்ளே விட்டால் இடது கட்கத்தில் உறைக்குள் தொங்கும் பிஸ்டலை இருவருமே வினாடிப் பொழுதில் வெளியே எடுக்க முடியும் என்பது புரிந்தது.

சிந்தாதரிப்பேட்டையில் ஜாதிப் பெயரை முழுங்கி விட்டதால் வெறும் தெருவாக மட்டுமே இருந்த சந்தில், ஒரு நாலு மாடி கட்டடத்தின் முன் ஆட்டோ நிற்க,

ராஜ்கமல் போலீஸ் மாருதியில் உஷாரா னான்.

. நோட்டம் பார்த்து, மஃப்டியில் இருந்த ஸி.ஐ.டியை அனுப்பி, தவறான ஃபிளாட் டில் மணி அடித்து விட்டது போல் 'ஸாரி' சொல்லச் சொல்லி, இரண்டாம் மாடியில் எட்டாம் நெம்பர் ஃபிளாட்டில் அவர்கள் தங்கியிருப்பதை உறுதி செய்து கொண்டான். 'ஃபிளாட் யாருக்குச் சொந்தம்?'

"ஸி.ஐ.டி. லோகனை அவங்க பார்த்துட் டாங்க. அதனால வாக்கி டாக்கியோட வேற ரெண்டு பேரை அனுப்புங்க'' என்று ஃபோன் செய்து டி.ஸி.யைக் கேட்டுக் கொண்ட போது, அவர் எரிந்து விழுந்தார்.

"இங்க வி.ஐ.பி. ஸெக்யூரிட்டிக்கே ஆள் பத்தலை; நீ வி.பி. ஸெக்யூரிட்டிக்கு ஆள் கேட்கிறயே?"

"யாரு ஸார் வி.பி.?"

"விடுதலைப் புலி."

"இதுவும் இம்பார்ட்டண்ட்ன்னு நினைக் கிறேன், ஸார்!"

"செய், செய்! இந்தக் கேஸில் ஜெயிச் சதும் உன்னை ஐ.ஜி. ஆக்கிடப் போறாங்க, ஸி.எம்!"

**ரா**ஜ்கமலைத் தடுக்க முடியாது என்று தீர்மானித்த டெபுடி கமிஷ்னர், ஒரு பெரு மூச்சோடு அவன் கேட்ட உதவியாளர்களை அனுப்பினார். காத்திருந்து, கார்னர் ஃபளாட் அடையாளம் காட்டி, ஆட்களின் வர் ணனை, கம்ப்யூட்டர் ஸ்கெட்ச் எல்லாம் தந்து, விடை பெற்றான், ராஜ்கமல். "ஜாக் கிரதை சசி! வெளியே போனாங்கன்னா ஃபாலோ பண்ணுங்க; உடனுக்குடன் என்னைத் தொடர்பு கொள்ளணும், கண்ட் ரோல் ரூம் மூலமா, புரியுதா?"

"யெஸ் ஸார்!"

இரவு ஒன்பதரை வரை ஒரு செய்தியும் இல்லை. ஒன்பதே முக்காலுக்கு வெளியேறி, ஒரு மோட்டார் சைக்கிளில் அவர்கள் பயணப்பட, போலீஸ் மாருதி விளக்கு அணைத்துப் பின் தொடர்ந்தது.

பத்து நிமிஷம் சென்று ஃபோன் ஒலிக்க, ராஜ்கமல், மனைவியின் இதழ்கள் விளை யாடி சூடேற்றிய காதில் ரிஸீவரை வைத்த போது சில்லென்றிருந்தது.

"ஸார் சசிவர்ணம் பேசறேன்; கிரீன் வேஸ் ரோடு போறாங்க!"

"என்னது! மினிஸ்டர்ஸ் ஏரியாவா?"

"ஆமாம் ஸார்!"

காது மட்டுமின்றி உடல் முழுவதுமே ஐஸாக உறைந்து போயிற்று ராஜ்கமலுக்கு.

(தொடரும்)

# பக்க வாத்தியம்

## சிஷ்யா

விநோதினி தூங்கிப் போயிருந்தாள். சலனமில்லாத, ஆழ்ந்த தூக்கம். முதுகு மட்டும் மூச்சுக்கு ஏற்ப இலேசாக எழுந்து விழுவதைப் பார்த்துக் கொண்டிருந்தான், சத்யா. ஜன்னல் வழியே பவழ மல்லிகை வாசனை நுழைந்து பரவியிருந்தது. அமைதியான இருட்டு வேளை. மயக்கிய அந்த வாசனை நெஞ்சுக்குள் ஊடுருவி ஆக்கிரமித்தது.

'விநோதினியைப் போல'– சத்யாவின் உதடுகள் அவனை அறியாமலேயே இலேசான புன்னகையில் விரிந்தன.

'அது என்ன, அப்படி ஒரு ஸ்வரக் கோவை! பவழ மல்லி மரத்தை உலுக்கின மாதிரி யல்லவா பொலபொல வென்று ஸ்வரங்கள் உதிர்கின்றன! விதவிதமான நளின வடிவங்களில் தாளக்கட்டுக்குள் சிறைப்பட்டு கோலம் போடுகின்றன..!'

–விநோதினியின் கச்சேரியைத்தான் இப்படி விமர்சித்திருந்தார் சி.வி.கே.

அந்த விமர்சனம் விநோதினியின் வாழ்க்கையில் இரண்டு பெரிய மாற்றங்களை ஏற்படுத்தியது:

'வளரும் கலைஞர்' என்ற வசதியான வட்டத்துக்குள் அவ்வளவு காலமாக அவளைக் கட்டிப் போட்டு வைத்திருந்த சபாக்காரர்களின் காதுகளைத் திறந்துவிட்டது. அந்த வட்டத்திலிருந்து விடுதலையாகி 'ஜிவ்'வென்று ஓர் உயர்ந்த ஸ்தானத்துக்கு விநோதினி சீக்கிரமே வந்தாள்.

இரண்டாவது மாற்றம், சத்யாவுக்கும் அவளுக்கும் இடையே இருந்த உறவில்... "எப்படி...? எப்படி?' ...'பவழ மல்லி மரத்தை உலுக்கின மாதிரி- ஸ்வரங்கள் பொல பொல வென்று'..." - விமர்சனத்தை ஒப்பித்த சத்யாவின் குரலில் பெருமிதம்.

விநோதினி முகம் சிவந்து, தலை குனிந்து கொண்டாள். சத்யாவுக்கு இது புதுசாக இருந்தது.

"என்ன விநோதினி?"

"இல்ல... இவ்வளவு சரியா வார்த்தைக்கு வார்த்தை நினைவிருக்கா...?"

"சுலபத்துல மறக்கற மாதிரியா எழுதியிருக்கார் சி.வி.கே...?"

"அடுத்த வரிகளும் நினைவிருக்கா...?"

"பொல பொலவென்று ஸ்வரங்கள் உதிர்கின்றன....."

சத்யாவின் வார்த்தைகளை வாங்கிக் கொண்டு தொடர்ந்தாள் விநோதினி:

"விதவிதமான நளின வடிவங்களில் தாளக் கட்டுக்குள் சிறைப்பட்டுக் கோலம் போடுகின்றன...! சத்யா! உன் வாசிப்பு கச்சிதமா இருக்கிறதாலதான் என்னால இப்படிப் பாட முடியறது. மிருதங்கம் மட்டும் இடைஞ்சலா இருந்தா என்னால பாட முடியுமா...?"

"இடஞ்சலா இருக்கிறதுக்குப் பேரு பக்க வாத்தியம் இல்லை விநோதினி..."

பளிச்சென்று நிமிர்ந்து பார்த்தாள். சத்யாவின் கண்களில் தெரிந்த நேர்மை நெகிழ்த்தியது.

ஒரு புதிய அனுபவத்தின் விளிம்பில் இருப்பதை இருவருமே உணர்ந்தார்கள்.

இரு வீட்டாருக்கும் ஆச்சரியம். கிட்டத்தட்ட நான்கு வருடங்களாக இவர்கள் கச்சேரி மேடைகளில் இணைந்து உழைத்தவர்கள்தான் என்றாலும், ஒரு அதிகப்படி [illegible] இல்லை; பயணங்களினூடே ஒரு அனாவசிய சல்லாபம் இருந்ததில்லை; பார்வைப் பரிமாற்றம் கூட நட்பைக் [illegible] [illegible]தில்லை... எப்படி இது நடந்தது?

"எங்களுக்கே தெரியாது; ஆனால் ஒண்ணு மட்டும் தெரியும், நீங்க எங்க கல்யாணத்துக்குத் தடை சொல்லப் போறதில்லை..." துணிச்சலாகப் பேசினான் சத்யா.

"எங்களுக்கும் சந்தோஷம்தான்பா... ஆனா..." தயங்கினார் வினோதினியின் அப்பா.

"ஏன் தயங்கறீங்க...?"

"வினோதினி மெயின் ஆர்டிஸ்ட்; சத்யா பக்கவாத்தியம். பின்னால எதுவும் மனக்கசப்பு வருமோன்னு பயமாயிருக்கு..."– பளிச்சென்று சொல்லியே விட்டார் சத்யாவின் அப்பா.

"மாமா, நான் ஒரு போதும் அப்படி நினைச்சதில்லை... நீங்களே வேணா சத்யாவைக் கேளுங்கோ..."- மேற்கொண்டு பேச முடியாமல் அழ ஆரம்பித்தாள் வினோதினி.

"வினோதினி! என்ன இது...!" அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு சமாதானம் சொன்னான் சத்யா. பெற்றோர்கள் அருகில் இருப்பதையும் அவன் பொருட்படுத்தவில்லை.

அதற்கு மேல் ஓர் அச்சாரம் தேவைப்படவில்லை.

திருமண வரவேற்பில் கச்சேரி கிடையாது. விருந்தினர் பேசட்டும்; கை குலுக்கட்டும் குதூகலமாய் இருக்கட்டும்– அந்த இடத்தில் உயிரைக் கொடுத்து ஒருவர் பாட வேண்டாம். கல்யாண இரைச்சலோடு சங்கீத தேவதை மோத வேண்டாம்!

தம்பதிகளின் விருப்பப்படி வரவேற்பு நடந்து முடிந்தது. மாலையைக் கழற்றி, கையில் மாட்டிய நேரத்தில் கடைசி விருந்தினராக விடைபெற்றார் விமர்சகர் சி.வி.கே.

"அம்மா வினோதினி! போய்ட்டு வரேன். சத்யா! நீங்க இரண்டு பேரும் ரொம்ப துணிச்சலான முடிவு எடுத்திருக்கேள். எனக்கு அளவில்லாத சந்தோஷம். ஆனால், உலகம் உங்களை நிம்மதியா விடாது; சீண்டி வேடிக்கை பார்க்கும். இனிமேதான் நீங்க தைரியமா இருக்கணும்..."

சி.வி.கே. போய்விட்டார். கல்யாணக் களைப்போ கிறக்கமோ... அவர் வார்த்தைகள் அன்று ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை.

இன்றைக்குத் தோன்றின! 'உலகம் உங்களைச் சீண்டி வேடிக்கை பார்க்கும்' என்ற வார்த்தைகள் ஒவ்வொரு நாளும் நாலு முறையாவது ஞாபகத்துக்கு வந்தன.

"என்ன வினோதினி, ஆத்துலயும் உன் பாட்டுக்கு அவர் தாளமா?" என்று உரிமையோடு கிண்டல் செய்வது போல் ஆழம் பார்த்தார்கள் உறவுக்காரர்கள்.

"ஆமாம் மாமி! பிராக்டிஸ் பண்ணும்போது மட்டும்" என்று அவர்கள் வாயை அடைத்தாள் வினோதினி.

"நேத்து டீ.வி.யில அம்மா பாடினாங்களே, லட்சணமா எங்கண்ணே பட்றாப்பல இருந்துச்சு... பாவம், ஐயாதான் ஒரமா பூட்டாரு. கொஞ்சமாத்தான் காட்னாங்க..." வீட்டு வேலை செய்த ராஜம்மாள் நிஜமாகவே வருத்தப்பட்ட போது, சத்யா சிரித்தான்.



"பாட்டுக் கச்சேரின்னா அப்படித்தான் ராஜம்மா... பாட்டுதான் மெயின்; மிருதங்கம், வயலின் மாதிரி வாத்தியமெல்லாம் அதுக்கு ஆதரவு..."

"அப்ப உன்னையும் நல்லா காட்ட வேண்டாமா ராஜா! அதானே நாயம்.."

விடாப்பிடியாக அடம்பிடித்தாள் ராஜம்மாள்.

கச்சேரிகளில், முன் வரிசையில் உட்கார்ந்த ரசிக மேதாவிகள் சின்ன அசைவுகளுக்குப் பெரிய அர்த்தங்கள் கற்பித்துக் கொண்டார்கள். வினோதினி பிளாஸ்கிலிருந்து வெந்நீர் எடுத்துக் குடிக்க, 'அவனுக்குத் தந்தாளா பாரு...!' என்று கிசுகிசுத்தார்கள்.

"வாசவன் கச்சேரி ஜூன் பத்து... சார் வாசிக்கணும்" என்று சத்யாவிடம் தேதி கேட்டார்கள் சபாக்காரர்கள். "மன்னிக்கணும்– அன்னிக்கு வினோதினி கச்சேரி இருக்கு– அதுக்கு வாசிக்கணும்-" என்று அவன் பதில் சொன்னபோது ஏளனப் பார்வை பார்த்தார்கள். "அட, மடையா! வாசவன் இன்னிக்கு எவ்வளவு பெரிய வித்வான்! அவருக்கு வாசிக்கற பெருமை ஒரு பக்கம்... வினோதினி கச்சேரியில கிடைக்கக் கூடியதைவிட இதுல மூணு மடங்கு அதிகமா சன்மானம் வேற... இதையே வேண்டாம்னு சொல்றதுன்னா... ஹூம் எல்லாம் தலையணை மந்திரம்தான்!" இத்தனையையும் அந்த ஒரு பார்வையே உணர்த்திவிடும்!

தினம் தினம் புதுப் புது வகையான சீண்டல்கள்; அவ்வப்போது டெலிபோனில் ரசிகர்கள் நாசூக்காக விசாரித்தார்கள்; 'உங்களிடையே எல்லாம் சரியாய்த்தானே இருக்கிறது...?' ஒரு மொட்டைக் கடிதம் கூட வந்தது.

எல்லாவற்றையும் துடைத்தெறிந்தார்கள். சத்யாவும் வினோதினியும் எப்போதும் போல் உற்சாகமாகக் களை கட்டின கச்சேரிகள். வம்புக்கு அலைந்தவர்கள் கூட வாய் மூடி, மெய் மறந்து ரசித்தார்கள். தங்களை அறியாமல் அந்த சுருதி-லய சங்கமத்தில் ஐக்கியமானார்கள்.

எல்லாம் அந்த பத்திரிகை பேட்டி வெளியாகும்வரைதான். கோடாரியால் ஓங்கிப் பிளந்தது போன்ற ஒரு போடு போட்டது அந்த அட்டைப்படக் கட்டுரை.

வினோதினி, நிமிர்த்திய நெஞ்சும் உயர்த்திய கையுமாகத் தாளம் போட, சத்யா சற்றே முன்னுக்குச் சாய்ந்து மிருதங்கம் வாசித்த

அந்தக் கணத்தை போட்டோவாக உறைய வைத்து அட்டையில் போட்டிருந்தார்கள். அவள் உன்மத்தமாகவும் அவன் பவ்யமாகவும்... உடன் வாசகம்: 'வீட்டிலும் பக்கவாத்தியமா?' டிசம்பர் இசை விழாவையொட்டி வெளியான' இதழ். சத்யாவும் வினோதினியும் சேர்ந்து கொடுத்த ஒரு சராசரி பேட்டிக்குத்தான் இப்படியொரு விஷமத்தனமான தலைப்பு. மிகத் திறமையாய் ஆனால் ரசனைக் குறைவுடன் எடுத்துச் சேர்த்த வண்ணப்படம்.

சென்ற இடமெல்லாம் இந்த அட்டை பற்றிய பேச்சும் விமர்சனமும் விரட்டிக் கொண்டு வந்தன.

வினோதினி சோர்ந்து போனாள். சத்யா கசந்து போனான்.

எனினும் முடியும் வரை விஷயத்தைப் பற்றி விவாதிப்பதில்லை என்று முடிவெடுத்தார்கள். பல்லைக் கடித்துக் கொண்டு மூன்று வாரங்களைத் தள்ளினார்கள். சுமைகளைத் தூக்கிக் கொண்டு மேடை ஏறாமல் வழக்கம் போல் அர்ப்பணிப்போடு பாடி, வாசித்து... ஒரு பழுது சொல்ல முடியவில்லை..

மூன்று வார முடிவில் ஒரு நாள் இரவு மதுரை மணி ஐயர் டேப் ஓடிக் கொண்டிருக்க, கனமான மௌனத்தில் சத்யா. பயம் கலந்த எதிர்பார்ப்புடன் வினோதினி.

சத்யா எழுந்து போய் காஸட்டை அணைத்தான். "போறும் வினோதினி!"

"எது போறுங்கறே சத்யா?"

"நாம சேர்ந்து கச்சேரி பண்ணினது தான்..."

"நாமதான் யார் என்ன சொன்னாலும், சலனப்படக்கூடாதுன்னு முதல்லயே தீர்மானம் பண்ணிட்டமே சத்யா..." குரல் கரகரத்தது.

"இப்ப நீதானே சலனப்படறே! குரல் கம்மிப் போச்சு..."

"இல்ல சத்யா- இந்த வருத்தம் மத்தவங்க பேசினதுக்காக இல்ல சத்யா- இப்ப நீ சொன்ன பாரு... அதுக்..."

"நான் இன்னும் சொல்லியே முடிக்கலையே..."

"உம்..."

"எவ்வளவு வருஷம் ஆனாலும் உலகம் நம்மளை இதே மாதிரிதான் பார்க்கும் வினோதினி. நம்ம சங்கீதத்தைவிட இந்த நூதனம்தான் அதுக்கு முக்கியமா படும். ஆண், பெண்ணுக்கு அடுத்த ஸ்தானத்தில இருக்கற நூதனம்..."

"ஆனால், சத்யா..."

நிருபர்: எதிர்காலத்துல தமிழ்ப் படவுலகை ஒரு கலக்கு கலக்குவேன்னு எப்படிச் சொல்றீங்க?
நடிகை: இப்பவே நாலைஞ்சு லைசென்ஸ் கரண்டி வாங்கி வெச்சிருக்கேன்!
—கொங்கணாபுரம் வே.செந்தில்

"தெரியும் வினோதினி.. மேடை ஏறுற எல்லாரும் கலைஞர்கள்-அவங்க ஒருத்தர ஒருத்தர் சார்ந்திருக்கறபோது முதலிடம் என்ன இரண்டாவது இடம் என்ன?.. இதைப் பத்தி பேசிக்கக்கூட அவசியமில்லாத அளவுக்கு நாம இரண்டு பேருமே உணர்ந்திருக்கோம். ஆனால்.."

"உலகம் உணரல்லேங்கறயா சத்யா?"

"உணரல்லே; உணரவும் போறதில்ல. நீயும் நானும் வெள்ளைக் காக்கா மாதிரி வேடிக்கைப் பொருளா ஆயிட்டோம். நம்ம பாட்டும் வாசிப்பும்... who cares for it?"

இவ்வளவு உக்கிரத்தில் சத்யாவை இதுவரை பார்த்ததில்லை. வினோதினி பேச்சற்றுப் போனாள்.

"நான் வாசிக்கறதைப் படிப்படியா குறைச்சுக்கப் போறேன் வினோதினி. அப்பாவோட ஃபாக்டரியில கவனம் செலுத்தப் போறேன். அப்படி செஞ்சா வம்பு வழக்கு இல்லாம போகும். ஆறு மாசத்துல கச்சேரிகளைப் பாதியா குறைச்சுப்பேன். ஒன்றரை வருஷத்துல முழுக்க நிறுத்திடுவேன்..."

"நம் பிரதமருக்குப் பிடித்த நாடு எது தெரியுமா?"
"எது?"
"சிரியா!"
-புளியறை கணேசன்

வினோதினி அழுகையில் கரைந்து கொண்டிருந்தாள். சத்யா அவளை நெஞ்சில் சாய்த்துக் கொண்டான். அழட்டும் என்று அமைதியாகக் காத்திருந்தான். அவன் ஜிப்பாவும் பனியனும் ஈரமாகி நெஞ்சும் நனைந்து போன பிறகு, வினோதினியின் கேவல்கள் மெள்ள அடங்கின.

தலையை நிமிர்த்தாமலே அவள் கேட்டாள்: "நான் வேணா கச்சேரி பண்றதை நிறுத்திடறேன் சத்யா; நீ மத்தவங்களுக்கு வாசிக்கறதுல பிரச்னை ஒண்ணும் இருக்காதே..."

"என்னைப் பாரு..." சத்யா அவள் முகத்தை நிமிர்த்தி, கண்களுக்குள் பார்த்துச் சொன்னான். "உன்னால அது முடியாது வினோதினி. எனக்கு அது உறுதியாத் தெரியும். மேலும்... நம்ம இரண்டு பேர்ல, you are the better artist."

"சே...! இன்னைக்கு தோசை மழைப்பா!"
"என்னது, தோசை மழையா...?"
"ஆமா... 'அடைமழை'ன்னு எத்தனை நாள்தான் சொல்றது?"
-சீர்காழி வி.ரேவதி

வினோதினி கண்களை மூடிக் கொண்டாள். "ஆனால் சத்யா...நம்ம இரண்டு பேர்ல, you are the better person..." மூடிய அவள் இமைகளின் ஓரத்துத்துளிகளை மென்மையாகத் துடைத்தான் சத்யா.

நாள் முழுதும் ஆட்டம் போட்ட ஒரு குழந்தையின் களைப்புடன் அவள் தூங்கிப் போனாள். அவனுக்குத்தான் இன்னும் உறக்கம் வரவில்லை. பவழமல்லி வாசத்தை நுகர்ந்தபடி நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தான்.

## கி.ராஜேந்திரன்

அதிர்ச்சியில் உறைந்துபோன நிலையிலிருந்து ராஜ்கமல் தன்னை உசுப்பி விட்டுக் கொண்டு, அவசரமாகச் சீருடை தரித்து, துப்பாக்கியில் புல்லெட்டுகள் சரிபார்த்து, இடை பெல்ட் உறையில் செருகி நிமிர்ந்தபோது, நளினி அவன் சீருடையை நெஞ்சப் பகுதியில் கசங்கப் பற்றி, "ஜாக்கிரதை" என்றாள்.

கன்னத்தில் இதழ் பதித்து அவளை ஒதுக்கி நடக்க ஆரம்பித்த போது, "இந்தாங்க" என்றாள். "தேவைப்படலாம்."

திரும்பி ஐந்து செல் டார்ச்சை வாங்கிக் கொண்ட போது, தான் மறந்ததை அவள் எடுத்துத்தர நேர்ந்ததில் வெட்கமும் கோபமும் போட்டியிட, "தாங்க்ஸ்" என்று கடுகடுப்புடன் கூறி, இரண்டு இரண்டு படிகளாகத் தாவி இறங்கி, புல்லெட்டை ஒரே 'கிக்'கில் கிளப்பித் தாவினான்.

அது அவனுக்கு எப்போதுமே நம்பிக்கை தரும் வாகனம். சொன்னபடி கேட்டு நடக்கும் ஒரு வாட்ட சாட்டமான அராபிய குதிரை மாதிரி. கனம், வேகம், இலகுவான இயக்கம், 'ஃபட் ஃபட்' என்ற சீரான, ஆர்ப்பாட்டமற்ற ஒலி எல்லாம் உறுதியையும் லாகவத்தையும் ஊட்டின.

இலேசான தூறல், சோடியம் வேப்பர் ஒளியில் தங்கத் துகள்கள்.

சி.பி.ஆர்.சாலை, கிரீன்வேஸ் ரோடில் சந்திக்கும் இடத்தில் வெள்ளை போலீஸ் மாருதி ஜீப்பில் சசிவர்ணம்.

"எங்கே அவங்க?"

"மாயமா மறைஞ்சுட்டாங்க."

"உளறாதே!"

"இடது பக்கம் திரும்பினாங்க; நான் முனைக்கு வந்தப்ப அவங்களை பீச் ரோடிலேயும் காணோம்; துர்காபாய் தேஷ்முக் சாலையும் வெறிச்!"

"ஏறு!"

புல்லெட் சசியையும் கூடுதலாகச் சுமந்து சாலை ரிப்பன்களை விழுங்க, அடையாறு பாலம் முன்னதாக வலப் புறம் நிறுத்தி, டார்ச் ஒளியை வட்ட மடிக்கச் செய்தான். "என்ன அது!" பளபளத்தது. மோட்டார் சைக் கிளின் 'ரேர் வியூ மிர்ரர்.'

"ஓடுய்யா! கிரீன்வேஸ் சாலை பக்கம் கேட். அங்கே செக்யூரி டியை 'வார்ன்' பண்ணு. நான் இங்கே மதிலேறி குதிச்சு மினிஸ்டர் வீட்டுக் காம்ப வுண்டுக்குள் புகுந்திருப் பதைச் சொல்லு!"

முக்கால் உஷா வேகத் தில் சசி ஓட, புல்லெட்டை சைட் ஸ்டாண்டில் நிறுத்தி, கல்லூரிக் காலத்திய 'ஹை ஜம்ப்' ரிகார்டை நினைவில் கொண்டு, சுவரைத் தாவிக் கடக்க ஜட்ஜ் வீடுகள். மேலும் ஒரு



சுவர் தாண்ட, மந்திரி மாரிசாமி வீட்டுத் தோட்டத்தில் இருந்தா...

பர்ர், பர்ர் என்ற உறுமலுடன் 'கிரீரீச்' ஒலியும் சேர்ந்து, இருட்டில் நெஞ்... 'திடுக்'கை ஏற்படுத்தியது. டார்ச் ஒளி திருப்பி, காதல் வயப்பட்ட இரு பூனைகளின் நெருக்கம் கண்டு புன்னகை பூத்தான். ஒளியில் அவை சிலையாவதை விரும்பாது நகர்த்தி, "குளிருக்கு இதம்தான்; கேரி ஆன்" என்று முணுமுணுத்தவாறே புல் தரையில் இலைகள் சரசரக்க விரைந்தான்.

# 2

பங்களாவைச் சுற்றிக் கொண்டு வாசலுக்கு வந்தபோது செக்யூரிடி ஒருவன் தடுத்து, "இங்க யாரும் வரலை, உங்களைத் தவிர" என்றான். "சசியை ஜீப்புக்குத் திருப்பி அனுப்பிட்டோம்; நீங்களும்..."

ராஜ்கமல் ஐ.டி.கார்டை எடுத்து நீட்டி, "எனக்குக் குறுக்கே நிற்குமுன் யோசி" என்றான்.

செக்யூரிடி நிஜமாகவே முகவாய் தடவ, அவன் ஒரு முடிவுக்கு வருமுன் இவன் படிகள் ஏறி, காலிங் பெல் அழுத்தியிருந்தான். பொறுமை இழந்து கதவைத் தடதடவென்று தட்டவும் செய்தான்.

"வரேன், வரேன்" என்ற கடுகடுப்பான பெண் குரலையடுத்து, வாசல் விளக்கு எரிந்தது. ஜன்னல் வழியே குதிரை போன்ற நீளமுகம், மூக்குக் கண்ணாடி அணிந்து பார்த்தது.

"யாரு?"

"போலீஸ்!"

செக்யூரிடி அருகில் செயலற்று நிற்பது கண்டு, உண்மை என்று உணர்ந்து, வாசல் கதவு திறந்தாள். ஒட்டடைக்குச்சி!

"என்னவேணும்?"

"அமைச்சர் ஆபத்துல இருக்கார்; உடனே பார்க்கணும்."

"ஆபத்துல இருக்காரா?.. ஹி ஹி ஹி.." குதிரை தும்முவது போல் சிரித்தாள். "இப்ப உங்களுக்குத்தான் ஆபத்து. அவர் பெட்ரூமுக்குள்ள. புகுந்தாச்சு. நீங்க அவரையோ அவர் உங்களையோ பார்க்கிற நிலையிலே இல்லே. பிடிவாதம் பிடிச்சா அவர் கோபத்துக்கு ஆளாவீங்க."

"ஒரு வேலைக்காரி கிட்டே விவாதம் பண்ணிக்கிட்டிருக்க எனக்கு அவசியமில்லே. நகரு."

ஒ து க் கி



முன்னேற, "மெய்ட் இல்லே; மனைவி" என்றாள்.

கணப்பொழுது அசைவற்று, பின்னர் மெல்லத் திரும்பி, "ஸாரி" என்றான்.

"பரவால்லே" என்றாள். புன்னகையில் சோகம் இழையோடியது.

"பிளீஸ், எது பெட்ரூம்?"

தோள் குலுக்கி, "பின் விளைவுகளுக்கு நான் பொறுப்பில்லே" என்றபோது கண்ணாடி நழுவி மூக்கு நுனியில் ஒட்டிக் கொண்டு ஒரு கவர்ச்சியை உண்டாக்கியது. அதற்கு மேலாக அவனைப் பார்த்து, படிக் கட்டுகளைச் சுட்டிக் காட்டி, "மேலே ஏறின தும் வலப்புறம் திரும்பினா, இடது பக்கம் முதல் அறை" என்றாள்.

"தேங்க்ஸ்" என்று கூறி, படிகளை மூன்றில் ஒன்றாகக் குறைத்து ஏறி, படபடப்புடன் கதவு தட்ட, பதிலில்லை. பின்வாங்கி, வேக மாக ஓடி வந்து தோளினால் தாக்க, "தடால்"!

திறந்த கதவு திகைக்க வைத்தது. அந்தப் பெண் அவசரத்துடன் ஒரு போர்வையை விரித்து தன் உடலை மறைத்துக் கொண்டாள். மந்திரிக்கு அதுவும் எட்டாமல் கட்டில் விளிம்பில் கரங்களால் மானத்தை மறைத்து உட்கார்ந்திருந்தார். கோபத்தில் அவர் முகம் சிவந்து ஜிவுஜிவுக்க, "என்ன இது... யார் நீ... யாரைக் கேட்டுக்கிட்டு வந்தே?"

"ராஜ்கமல், எஸ்.பி.ரேங்க். ஸ்பெஷல் ஸ்குவாட், செக்யூரிட்டி. உங்க உயிருக்கு ஆபத்து!"

"யார்கிட்டேயிருந்து?"

"ரெண்டு புலிங்க சுவர் ஏறி குதிச்சு, இந்த காம்பவுண்டுக்குள்ளே இறங்கினாங்க. ஈரமண்ணுல ஷூ தடம் பார்த்தேன்."

"புலியாவது, பூனையாவது? இங்க யாரும் இல்லே."

"பூனைங்க நிறைய இருக்கு தோட்டத் திலே. காதல் பண்ணிட்டிருக்கு. இந்தப் பொண்ணு யாரு?"

"நீ வெளியே போ! கெட் அவுட்!"

ராஜ்கமல் அங்கே இருந்த வார்ட் ரோபைத் திறந்தான். பட்டு, டெரிகாட் கட்சிக் கரையுடன் வேஷ்டிகள்; பலரகச் சேலைகள், ஒதுக்கினான். ஒருவரையும் காணோம்.

"கெட் அவுட்! கெட் அவுட்!" கூச்சல் களை லட்சியம் செய்யாமல் சில திரைச் சீலைகளை நகர்த்தி, பாத்ரூமுக்குள் எட்டிப் பார்த்து, ஏமாந்து திரும்பி வெளியேற, "கெட் அவுட்"டுகள் பின்தொடர்ந்தன.

குதிரை முகம் புன்னகைத்தது. "கீழேயும் எல்லா அறைகளையும் திறந்து பார்த்துடுங்க. இது என் பெட்ரூம்..." என்றது தேவையின்றி.

கடன் இழவே என்று எல்லாவற்றையும் நோட்டம் விட்டான், தோல்வியில் உள்ளம் சிறுத்ததை மறைத்துக் கொண்டு.

"டாட்டா" என்றாள் கிண்டல் வெளிப்பட.

மாருதி ஜீப்பில் காத்திருந்த சசியை நெருங்க உடலே கனத்தது. "பறந்துட்டாங்க."

"இன்னொரு சுவர் ஏறி குதிச்சு வேற மந்திரி வீட்டுக்குப் போயிருக்கலாம்."

இருக்கலாம்; இந்த வட்டாரம் பூரா மந்திரிங்க. ஒவ்வொரு வீடாகக் கதவு தட்டி அவமானப்பட்டுத் திரும்ப முடியாது... அதோட அப்படி அந்தப் புலிகள் நடந்துக்குவாங்களான்னு யோசிக்கிறேன்."

"பின்னே...?"

"அவங்க மந்திரி வீட்டுக்குள்ள நுழையறதா நாம நம்பணும்னு நினைக்கிறாங்க; அப்படி ஒரு தோற்றத்தை உருவாக்கிட்டு வேற ஏதோ காரியத்துல இறங்கறாங்க."

"என்ன காரியம்?"

"எனக்கு எப்படித் தெரியும்? தெரிஞ்சு துன்னா இப்படி உங்கிட்ட பேசிக்கிட்டா நிற்பேன்?"– எரிந்து விழுந்தான்.

முகம் ஏமாற்றத்தை உணர்த்த, புரிந்து கொண்ட நளினி அவன் தலையை நெஞ்சில் தாங்கினாள். "என்ன ஆச்சு? சொல்லுங்க!" என்று தூண்டினாள்.

சொன்னான். சுமை குறைவது போலிருந்தது. ஒரு மாயை.

"பைக் அங்கேயே இருக்கு. ஆளுங்களைக் காணோம். ஹெலிகாப்டரா வந்து கொத்திக் கிட்டுப் போச்சு?"

"ஹெலிகாப்டர் அங்க எப்படி இறங்க முடியும்? புஷ்பக விமானம் வந்தாத்தான் உண்டு."

"மந்திரியாம் மந்திரி! பெண்டாட்டியைப் பக்கத்திலேயே வைச்சுக்கிட்டு வைப்பாட்டியைக் கொஞ்சறவன் ஒரு மனுஷனா? இந்தாளுதான் ஊருக்கு உபதேசம் பண்ணுறான். அயோக்கிய ராஸ்கல்! எப்படி சகிச்சுக் கிட்டு இருக்கா? என்ன பொண்ணு அவ?"

''கணவனே கண் கண்ட தெய்வம்

''நீ யாருன்னே எனக்குத் தெரியாது. முன்பின் தெரியாத என்கிட்டே வந்து கடன் கேட்கறியே?''

''அதுக்கு என்னங்க பண்ணுறது... தெரிஞ்சவங்க கிட்டேயெல்லாம் ஏற்கெனவே வாங்கிட்டேனே!

– வடுவூர் சிவ.முரளி



டைப்?"

"அவ இடத்திலே நான் இருந்தா புருஷனைக் கொன்னுடுவேன்!"

"கொன்னுட்டு தூக்குலயும் தொங்குவே! ஆனா மனைவி உயிர்த்தியாகம் பண்ணற அளவுக்கு அவன் தகுதியுள்ளவனா?"

மௌனமானாள்.

"உன்னைவிட அவள் கெட்டிக்காரி. ஒரு வேளை சமயம் வரக் காத்திருக்காளோ என்னமோ?"

"பதுங்கும் பெண் புலி?"

"பூனை கூட டேஞ்சர்தான். பூனை பிராண்டினாலும் கடிச்சாலும் ரேபீஸ் வரும். நாய் கடிச்சா வருமே அதுமாதிரிதான். வெறி பிடிச்சு பூனை மாதிரியே ஊளையிட்டுச் சாவான்!"

அவள் நடுங்க, அவன் அணைத்து அமைதிப்படுத்த வேண்டியதாயிற்று.

"வாய்யா ஹீரோ! பெரிய ஜீரோ வாங்கின போல!"

"சசி சொன்னானில்ல?"

"ஃபுல் ரிப்போர்ட் தந்தான். நான் அப்பவே சொன்னேனில்ல, தடாவுல உள்ளே தள்ளுய்யான்னு. இப்ப அவங்களையும் கோட்டை விட்டாச்சு; அவங்க திட்டம் என்னன்னும் தெரியலே!"

"நான் ரொம்ப நொந்து போயிருக்கேன் ஸார், குத்தாதீங்க... அந்த ஃபிளாட் யாருக்குச் சொந்தம்? மோட்டார் சைக்கிள் இவங்களுக்கு எப்படி கிடைச்சுது?"

"ஃபிளாட் சாவி கொடுத்தவன், ஒரு மோட்டார் சைக்கிள் விட்டு வைக்க மாட்டானா என்ன?"

"விசாரிச்சீங்களா?"

"உம்... ஓனர் யாருன்னே தெரியாதுங்கறாங்க. அப்பப்ப யாராவது வருவாங்க; ரெண்டு நாள் தங்கிட்டுப் போயிடுவாங்கன்னு சொல்றாங்க. ஒரு கம்பெனி கெஸ்ட் ஹவுஸ் மாதிரி இருக்கு. ஆனா கம்பெனின்னா ஒளிவு மறைவு தேவையில்லே."

"மோட்டார் சைக்கிள் ரிஜிஸ்தர் நெம்பர்?"

"நம்பர் பிளேட் மாற்றியிருக்கு. அந்த நெம்பர்ல ஒரு மெர்ஸிடஸ் பென்ஸ் ஆர்.டி.ஓ.ல ரிஜிஸ்தர் ஆகி ஓடிக்கிட்டு இருக்கு!"

ஃபோன் ஒலித்தது. எக்ஸ்டென்ஷனைக் கை காட்டினார் டெபுடி கமிஷனர். எடுத்தான்.

"யாருய்யா அது ராஜ்கமல்?" ஐ.ஜி.குரல்.

"எஸ்.பி.ராங்க் ஸார். ஸ்பெஷல் செக்யூரிடி ஸ்குவாட்."

"ஏன்யா வேண்டாத வேலையிலேயெல்லாம் இறங்கறான்? தலை வேதனை! டிபார்ட்மெண்டுக்கு கெட்டபேரு."

"ஏன் சார்! என்ன ஆச்சு?"

"இன்னும் என்னய்யா ஆகணும்? மினிஸ்டர், ஸி.எம். கிட்டே புகார் பண்ணியிருக்காரு. ஸி.எம். என்னைக் கூப்பிட்டு, 'பப்ளிக் விஷயத்துக்கும் பர்ஸனல் மேட்டருக்கும் வித்தியாசம் தெரியாதா?'ன்னு கேட்கறார்."

"ஒரு சாதா ஆளு வைப்பாட்டி வைச்சிருந்தா அது பர்ஸனல் மேட்டர் ஸார்; ஆனா மந்திரின்றபோது பப்ளிக் இன்ட்ரஸ்ட் வந்துடும்."

"அதுக்காக பெட்ரூம்ல பூந்துடறதா? என்னய்யா பெரிய தர்மோபதேசம் பண்றே! தட் ஃபெலோ இஸ் அண்டர் ஸஸ்பென்ஷன்!"

"ஸார்! ஸார்!"

"ஸாராவது மோராவது! ஸி.எம். சொல்லியாச்சு. நான் ஒண்ணும் செய்யறதுக்கில்லே. ஆள வீட்டுக்கு அனுப்பு. டிபார்ட்மெண்ட்ல என்கொயரி நடத்தறதா ஃபைல் ஓபன் பண்ணு. கோ ஸ்லோ; புரொஸீட் பண்ணாதே! ஆறப்போடு. மந்திரி மகாத்மியமெல்லாம் வெளியே வந்தா நல்லாருக்காது. அப்புறம் ஸி.எம். என்னையே வீட்டுக்கு அனுப்பிடுவார். புரியுதா? புரிஞ்சுதாய்யா?"

"யெஸ் ஸார்."

ஃபோனைக் கீழே வைத்து டெபுடி கமிஷனர் நிமிர்ந்தார். "நான் அப்பவே சொன்னேன்..."

"எத்தனை தடவை ஸார் அதையே சொல்லுவீங்க?" என்றான் எரிச்சலுடன். "இப்ப என் பதவி முக்கியமில்லே; என் அவமானமும் முக்கியமில்லே; அந்தப் புலிகள் என்ன ஆனாங்க? என்ன பண்ணப் போறாங்க?"

"ஐயோ!" என்றார் டெபுடி கமிஷனர். "உனக்கென்னய்யா, உன் படிப்புக்கு இந்த வேலை போனா வேற பெரிய கம்பெனி உத்யோகம் கிடைக்கும். என்னையில்ல மாட்டி வைச்சிருக்கே- ரெட்டைப் புலிங்க மத்தியிலே!"

தலையைப் பிடித்துக் கொண்டார்.

(தொடரும்)

டிரஸ்ட் ப்ளஸ் எனில்

இடங்களில் பணத்தைத் திருப்பித் தரும் சேவை

## INVITES DEPOSITS

Fixed Deposits will be accepted at the following rates of interest and subject to the terms and conditions as indicated in the form of application of deposit available at the administrative Office and other branch offices of the Company

### DEPOSIT SCHEMES

| CUMULATIVE DEPOSIT SCHEME | | | FIXED DEPOSIT SCHEME | |
|---|---|---|---|---|
| Period in Months | For Rs 1000 Deposit Amount Payable on [illegible] | Effective Annual Yield | Period in Months | Rate of Interest per annum Monthly Quarterly |
| 12 Months & 1 Day | Rs 1150/ | 15.00% | 12 Months & 1 Day | |
| 24 Months & 1 Day | Rs 1331/ | 16.05% | 24Months & 1 Day | |
| 36 Months | Rs 1518/ | 17.27% | 36 Months | |
| 48 Months | Rs 1745/ | 18.63% | 48 Months | 14% 14.16% |
| 60 Months | Rs 2006/ | 20.12% | [illegible] Months | |

| RECURRING DEPOSIT SCHEME (Minimum Rs 500/-) | | | |
|---|---|---|---|
| Period in Months | Rate of Interest Per Annum | Maturity Value (for Rs 500) | For Every Additional Rs 100/ |
| 12 Months & 1 Day | 14% | Rs [illegible] | Rs 1296/ |
| 24 Months & 1 Day | | Rs 13915/ | Rs 2783/ |
| 36 Months | | Rs [illegible] | Rs 4494/ |

1 Interest warrants payable at par at all branches of SBI

Information required to be specified as per Non Banking Financial Companies (Reserve Bank Direction, 1977 and Non Banking Financial Companies and Miscellaneous Non-Banking Financial Companies (Advertisement) Rules, 1977, are given below

A. Name of the Company . The Investment Trust of India Ltd

B Date of Incorporation . 2nd August 1946

C Business carried on by the Company and its subsidiaries with details of branches or units, if any
Business . Hire Purchase Financing, Investments, Leasing, Industrial Financing, Mortgage Financing e
Subsidiary I.T.I Pioneer AMC Ltd And I.T.I Capital Markets Ltd
Branches Madras, Coimbatore, Dindigul, Erode, Kallakurichi, Madurai, Nagercoil, Salem, Thanjavur, Trichy, Tirunelveli, Tirupur, Tuticorin, Vellore, Karaikal, Pondicherry, Calicut, Cochin, Kottayam, Trichur, Trivandrum, Hubli, Bangalore, Mysore, Hyderabad, Anantapur, Nellore, Proddatur, Rajahmundry, Visakhapatnam Vijayawada Bombay Calcutta New Delhi Rajkot, Surat Regd Office 117, Nungambakkam High Road, Madras 600 034

D Brief Particulars of the Management of the Company
The Company is managed by the Managing Director under the supervision, direction and control of the Board of Directors

F Name, address & occupation of the Directors
Mr B.H. KOTHARI, Chairman & Managing Director "Kothari Bagh" 11 Nungambakkam High Road, Madras 600 034, Industrialist Mr A.L. MUDALIAR "Avanti" 856 Poonamallee High Road, Kilpauk, Madras - 600 010, Business Executive & Management Consultant. Mr G.K. SUNDARAM, "Ramkondalu" Circuit House Road, Coimbatore 641 018, Industrialist Mr G CHIDAMBAR, 101 A, Janakpuri 2nd St Off Velachery Road, Madras 600 0[illegible] Former Managing Director-LIC Mr N SRINIVASAN T 18, Sixth Avenue Besant Nagar Madras 600 090 Chartered Accountant Mr RAM GANAPATHI, No 27 "Ashok Chowk" D.L.F Kutup Enclave Phase 2 Gurgaon, Haryana 122 00[illegible] Former Chairman of RBI Mr C.R RAMAKRISHNAN "Meenakshi" No 4 Sir P.S Sivaswamy Road, Mylapore, Madras 600 004 Former Exe. Managing Director of Larsen & Toubro Ltd. Mr M.R. SHAH A-2 24, Woodlands Apartments, Peddar Road, Bombay 400 026, Business



# இன்னுமொரு ஞாபகம்

பஸ் கோவையை நெருங்கிக் கொண்டிருந்தது. அரை குறை தூக்கம் கலைந்து விழித்தேன். இடுப்பெல்லாம் வலித்தது. மெட்ராஸிலிருந்து கோயமுத்தூருக்குப் பன்னிரண்டு மணி நேரப் பயணமாகி விட்டது. நிமிர்ந்து உட்கார்ந்தேன். சின்னக் கொட்டாவி ஒன்று நிதானமாய் ரிலீஸ் ஆனது.

கண்கள் அனிச்சையாய்த் திரும்பி என் வரிசை பக்க வாட்டு ஸீட்டில் அந்தப் பெண்ணைத் தேடின. 'மடையா! அவள்தான் திருச்சியிலேயே இறங்கி விட்டாளே!'

யோசனைக் குதிரை பின்னோக்கி - அந்தப் பெண்ணை நோக்கி ஓடியது.

**சித்ரன்**

(25 வயது சித்ரனின் முதல் இன்னிங்ஸ் இச் சிறுகதை...)

என்ன ஒரு அழகான பெண்?!! சென்னை யில் தனியாய் ஏறினாள். வழியனுப்ப யாராவது வந்திருந்தார்களோ என்று கவனிக்க வில்லை. நான் அவளை கௌதமி, மாதுரி, மனீஷா கொய்ராலாக்களுடன் ஒப்பிட்டதில் மற்றவர்கள் தோற்றார்கள். இது தனி சௌந்தர்யம். என் வரிசை ஸீட்டில் அவள் உட்கார்ந்ததற்கு எனது போன ஜென்மத்து புண்ணியங்கள் காரணமாயிருக்கலாம். ஆனால் –

அவள் இடதுகால்!?

பஸ் படிகளில் ஏறும் போது அவள் நிறை யவே சிரமப்பட்டதாய் உணர்ந்தேன். ஊனம். மெதுவாய் விந்தி விந்தி நடந்து ஸீட்டுக்கு வந்தாள். ஒரு கையில் சின்ன சூட்கேஸ். 'அழகைக் கொடுத்தது இயற்கையெனில் காலில் குறையைக் கொடுத்தது எது? விதியா?' என்னை நானே கேட்டுக் கொண்டேன். திடீரென்று அந்தப் பெண்ணை எனக்கு ரொம்ப பிடித்துப் போனது.

என் தலைக்கு மேலுள்ள லக்கேஜ் கேரி யரில் அவள் சூட்கேஸை வைக்க உதவி னேன். புன்னகைத்தாள். அவளோடு பேச வேண்டும் என்றெழுந்த ஆவலை கட்டுப் படுத்திக் கொண்டேன். கழுத்தில் தாலி இல் லாததைக் கவனித்தேன்.

திருச்சியில் அவள் இறங்கிக் கொண் டாள். அவளைப் பற்றின யோசனைகள் மனத்தை விட்டு இறங்காமல் கோவை வரை பிடிவாதமாய் வந்து விட்டன. ஊனமுற்ற அந்த அழகான பெண்ணிற்கு எந்த மாதிரி எதிர்காலம் காத்துக் கொண்டிருக்கிறது? சிந் தனைகள் வட்டமடித்தன.

"பஸ் ஸ்டாண்டு கேட்டது யாரு? இறங் குங்க..."

கண்டக்டர் கத்தினார். அதற்குள்ளாகவா கோயமுத்தூர் வந்து விட்டது?

நான் வேகமாய் எழுந்து, லக்கேஜ் கேரி யரிலிருந்து சரக்கென்று என் சூட்கேஸை உருவிக் கொண்டு இறங்கினேன்.

ராம் நகரில் என் அறைக்கு வந்து, பல் விளக்குவதற்காக பேஸ்ட் எடுக்க சூட்கே ஸைத் திறந்தவன் திகைத்து நின்றேன்.

'மைகாட்!'

அந்த சூட்கேஸுக்குள் இரண்டு புடை வைகள், ரவிக்கைகள் ஒரு சுரிதார் மற்றும் உள்ளாடை எல்லாம் தென்பட...

இது என் சூட்கேஸ் இல்லை!

அதிர்ச்சியிலிருந்து மீளாமல் அதை மூடி மேல்புறம் பார்த்தேன். 'எஸ். நீலா' என்று ஆங்கிலத்தில் பெயர் தாங்கின ஸ்டிக்கர் ஒட்டியிருந்தது.

உண்மை உறைத்தது. உடலில் கலவரம் தொற்றிக் கொண்டது. சூட்கேஸ் கைமாறி விட்டது. எப்படி? எப்படி? யோசிக்க ஆரம் பித்தேன். எங்கே வைத்திருந்தேன் அதை! தலைக்கு மேலேயே லக்கேஜ் கேரியரில். அங் கிருந்துதான் திரும்ப எடுத்.... ஆம்! அந்த திருச்சிப் பெண்! அவள் சூட்கேஸையும் நான்தானே வாங்கி அதே இடத்தில் வைத் தேன். அதுவும் கூட, இதே மாதிரிதானே இருந்தது. இல்லை. அதுதான் இது. என்னு டையது மாதிரியே. நிறம், உருவம், அளவு எல்லாம்.

என்னுடைய சூட்கேஸை அவள் எடுத் துக் கொண்டு போயிருப்பாள். 'அந்த சூட் கேஸுக்குள் என்னுடைய அந்த...! 'கடவுளே!' என் அடிவயிற்றில் ஒரு பயம் மெள்ள கிளர்ந் தெழுந்து கொண்டிருப்பதை உணர்ந்தேன்.

ஒருவேளை அவள் ஏதாவது ஃப்ராடு கேஸோ? ச்சே! இருக்காது. அந்தக் குழந்தை முகத்தைப் பார்த்தால் அப்படித் தெரிய வில்லை.

எஸ். நீலா!

இதுதான் அவள் பெயரா? இந்த நீலாவை நான் எங்கே போய்த் தேடுவேன்? நான் அந் தப் பெட்டியை மறுபடி திறந்து புரட்டி அட் ரஸ் எதுவும் கிடைக்குமா என்று பார்த்தேன். வெறும் துணிகள். கோல்கேட் பேஸ்ட், பிரஷ்

மற்றும் பெண்கள் சமாசாரங்கள். இரண்டு புத்தகங்கள் - 'மைக்ரோஸாஃப்ட் சி', 'கிவ் அண்ட் டேக்'. ஒரு சின்ன பர்ஸ். இருநூற்றிப் பன்னிரண்டு ரூபாய் ஐம்பது பைசா அதில் இருந்தது. ஒரு காலி இன்லேண்ட் லெட்டர். அட்ரஸ் மட்டும் இல்லை.

ஆனால் என் சூட்கேஸுக்குள் இருக்கிற பொருட்கள்? வெறும் பொருட்களா அவை? உடைகள், ஷேவிங் செட்டை விடுங்கள். மற்றதெல்லாம்....

என் ஐம்பத்து மூன்று கவிதைகள் தாங்கிய ஸ்பைரல் போட்ட ஒரு குயர் நோட்டு. வித்யாவின் கழுத்து மணிமாலையிலிருந்து அறுந்து விழுந்த மணிகள், கடிதங்கள், மேலும் கடிதங்கள், சாலை விபத்தொன்றில் பலியான என் உயிர் நண்பன் எனக்கெழுதிய ஒரே ஒரு கடிதம், கையில் பொம்மை பஸ் வைத்துக் கொண்டு போஸ் கொடுத்த என் ஒரே குழந்தை ஃபோட்டோ, அழகான பூனைக் குட்டிகள் படம் போட்ட - குழந்தை ராஜி என் பிறந்த நாளுக்குப் பரிசளித்த - போல்ஸ்கா நாட்டு ஸ்டாம்புகள், என் ஐடென்டிடி கார்டு, தாத்தா ஞாபகமாய் வைத்திருந்த பாக்கு சீவுகிற கத்தி, ஜீவா பரிசளித்த தி. ஜானகிராமன் புத்தகங்கள், என் சிறுகதை வெளியான ஆனந்த விகடன் புத்தகத்தின் ஒரே பிரதி. பேனாக்கள், கண்ணாடி க்ளாஸ், ஒரு காய்ந்த சூட்டுக்காய், சிவப்புக் கல் பதித்த கவரிங் மோதிரம், இடுப்பு பெல்ட், ஆடியோ கேஸட், வளையல் துண்டு, மயிலிறகு, என் டயரி, அதற்குள் நான் மிக முயற்சித்துப் பெற்ற அருமை வித்யாவின் பாஸ்போர்ட் சைஸ் போட்டோ... இன்னும் சில பொருட்கள்.

என்னைப் பொறுத்தவரை இது எல்லாமே பொக்கிஷங்கள். குப்பை என்று எதுவும் கிடையாது. கேட்பதற்குச் சிரிப்பாய்க் கூட இருக்கும். 'சுத்தக் கிறுக்கனா இருக்க' என்று சிலர் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இந்தப் பொருட்கள் எல்லாமே ஒவ்வொருவருடைய நினைவுகளைத் தன்னுள் அடக்கிக் கொண்டு கிடக்கிற பொக்கிஷங்கள். எப்போதாவது எடுத்துப் பார்க்கும் போது கிடைக்கும் அந்த இனிமையான பழைய நினைவுகளுக்காய் ஒவ்வொன்றையும் பொக்கிஷமாய் பத்திரப்படுத்தியிருந்தேன். ஒவ்வொரு பொருளும் ஒவ்வொருவர் ஞாபகம்.

போச்சு! எல்லாம் போச்சு!

லீவில் ஊருக்குப் போன நான் இவை எல்லாவற்றையும் எப்போதும் என்னுடனேயே வைத்திருக்கலாமே என்று சூட்கேஸுக்குள் அடைத்துக் கொண்டு வந்தேன்.

நிமிடத்தில் எல்லாவற்றையும் இழக்க வேண்டியதாய்ப் போயிற்று. பிரமை பிடித்த மாதிரி இருந்தது. அழுகை கூட வரும் போல் தோன்றியது. உணர்வுகளைச் சிரமப்பட்டு அடக்கினேன். ஜீரணிக்க முடிகிற இழப்பாய்த் தோன்றவில்லை இது.

வெளியே வந்து ட்ராவல் ஏஜென்ஸிக்கு நம்பிக்கையில்லாமல் ஃபோன் பண்ணிப் பார்த்தேன். நினைத்த மாதிரியே அவள் அட்ரஸ் எதுவும் கிடைக்கவில்லை. பேர் சொல்லிவிட்டுப் பணம் கட்டினால் கோயமுத்தூர் கொண்டு வந்து இறக்கி விடுகிறார்கள். ஸீட் நம்பர்கள் எழுதின லிஸ்டில் பெயருக்கு நேரே ஒரு கையெழுத்து. அட்ரஸ் எங்கேயிருந்து கிடைக்கும்? என்ன ட்ராவல் ஏஜென்ஸி நடத்துகிறார்களோ!

என் சூட்கேஸில் என் ஐடென்டிடி கார்டு இருக்கிறதே. அதில் என் அட்ரஸ்!

லேசாய் எனக்கு உயிரும் நம்பிக்கையும் மீண்டு வந்தது. அவள் பெட்டி என்னிடமிருக்க, அவள் என்னை நிச்சயம் தொடர்பு கொண்டுதான் ஆக வேண்டும். அதுவரை காத்திருக்கலாம்.

ஒரு வாரம் மகா சோகமாய்க் கழிந்தது. என் பெட்டி இனி எனக்குக் கிடைக்காது

---

## விசேஷமா, எடு அரிவாள்மணையை!



**கல்யாணமான புதிதில் என் கணவருடைய கிராமமான பெரிய கிருஷ்ணாபுரத்தில் தங்கியிருந்தேன். ஒரு நாள் நான் வாசலுக்கு வந்து பார்த்த போது, எல்லாப் பெண்களும் கையில் அரிவாள்மணைகளுடன் வேகவேகமாகச் சென்று கொண்டிருந்தனர். எதற்காக இப்படி? அதிர்ச்சியோடு என் மாமியாரைக் கேட்டேன். ''இங்குள்ள யாராவது ஒருவர் வீட்டில் விசேஷமென்றால் சமையலுக்கு ஒரே யொரு ஆள் மட்டும்தான் வைப்பார்கள். அவர் சமையல் மட்டும்தான் செய்வார். எனவே, இங்குள்ள எல்லா வீட்டுப் பெண்களும் போய்க் கறிகாய் நறுக்கிக் கொடுப்பது போன்ற வேலைகளைச் செய்வோம்!'' என்று தாமும் ஓர் அரிவாள்மணையைத் தூக்கிக் கொண்டு, கோடி வீட்டில் மஞ்சள் நீராட்டு விழாவுக்குப் புறப்பட்டுச் சென்றார். அந்த பரோபகாரத்தைப் பார்க்கச் சந்தோஷமாயிருந்தது.**

**சிதம்பரம் – 1, எம். சிவகாமசுந்தரி.**

என்று நான் தொண்ணூற்றைந்து சதவீதம் முடிவு செய்து விட்டேன். அவளின் 'மைக் ரோஸாஃப்ட் சி'யைப் புரட்டினேன். ஒரு மண்ணும் புரியவில்லை. 'கிவ் அண்ட் டேக்'கை நடுநடுவில் படித்துப் பார்த்தேன்.

அடுத்த வாரம் அந்தப் பார்சல் வந்தது. ஆச்சரியம். ஏக குஷியானேன். என்னுடைய பொக்கிஷப் பெட்டி! பாதுகாப்பாய் வந்து சேர்ந்திருந்தது. குரியர் சர்வீஸ் வாழ்க. நான் சந்தோஷத்தால் வானத்துக்கும் பூமிக்கும் குதித்தேன்.

சூட்கேஸை அவசரமாய்த் திறந்தேன். நான் வைத்தபடி இல்லாமல் எல்லாம் கலைந் திருந்தன. ஆனால் எல்லாமே இருந்தன. சாய்ந்த கையெழுத்து. பெயர் பார்த்தேன். நீலா. எஸ். நீலா. அவளேதான். நிதானமாய்ப் படித்தேன்.

*'டியர் மிஸ்டர் பிரபாகர்....*

*இதோ உங்கள் உடைமை. (உங்களுடையதுதானென்று நினைக்கிறேன்.) அது போல் என்னுடையது உங்களிடமிருக்குமென்று நம்புகிறேன். எல்லாவற்றிற்கும் காரணம் நான்தான். என் கவனக்குறைவு. மன்னிப்பீர்களா?*

*உங்கள் பெட்டியை அது பூட்டப்படாத தால் திறந்து, குடைந்தும் பார்த்தேன் – உங்கள் அனுமதியில்லாமல். மறுபடியும் மன்னிக்கவும். பெட்டியின் விஷயங்கள் ரொம்ப சுவாரஸ்யமாயிருந்தன. நீங்கள் எந்த மாதிரி ஆள்? பிடிபடவில்லை.*

*கடிதங்களைப் படிக்க மனம் வரவில்லை. நாகரிகம் காரணம். கவிதை நோட்டை மூன்று மணி நேரம் செலவழித்துப் பொறுமையாய்ப் படித்தேன். அத்தனையும் வாவ்! எனக்கு ரொம்பப் பிடித்தது. நீங்கள் ஒரு கலைஞன் என்று புரிகிறது.*

*ஃபோட்டோவில் சிரிக்கும் அந்தக் கறுப்பு குழந்தை யார்?. ரொம்ப ஸ்வீட். ஐடென்டிடி கார்டின் ஃபோட்டோவில் நீங்கள் சுமார்தான்.*

*ஆனந்த விகடன் புத்தகத்திற்கு எதற்கு அட்டையெல்லாம் போட்டு வைத்திருக்கிறீர்கள்? அதுவும் 'பழைய..ய்ய புத்தகம். நான் உங்களின் தி. ஜானகிராமன் புத்தகங்களை ஆழ்ந்து படித்துக் கொண்டிருக்கும் போது ரூம்மேட் பானு அந்த சூட்டுக்காயை நிலத்தில் தேய்த்து, 'சுள்'ளென்று சூடு வைத்த இடம் இன்னும் வலிக்கிறது. அந்த ஆடியோ கேஸட் கேட்க முடியவில்லை. பிழைத்தீர்கள்!*

*மேலும் வளையல் துண்டு, மயிலிறகு, மோதிரம், மணிமாலை... ஃபோட்டோவில் அந்தப் பெண். யார் அது? உங்கள் மனசுக்குள் இருப்பவளா? தப்பாய்க் கேட்டிருந்தால் ஸாரி...! கத்தி எதற்கு?*

*என் பெயர் நீலா. மெட்ராஸில் தனியாய் பஸ் ஏறி திருச்சியில் இறங்கின கொஞ்சூண்டு அழகான பெண். கவனித்திருப்பீர்கள். (வேறொன்றையும் கவனித்திருக்கலாம்.) திருச்சியில் ஹாஸ்டலில் தங்கிப் படிப்பு. முகவரி கீழே...*

*என் பெட்டி ப்ளீஸ்...*

*– நீலா.*

கீழே முகவரி இருந்தது. யப்பா! ஒன்றை விட்டு வைக்கவில்லை. புரட்டி எடுத்திருக்கிறாள். எனக்கு அதனால் கோபம் வர வில்லை. அவள் ஆர்வத்தை நினைத்துப் புன்னகை வந்தது.

இன்டரஸ்டிங் கேர்ள். இவளைப் போய் ஃப்ராடு என்றெல்லாம் நினைத்தேனே! ரொம்ப வெளிப்படையான டைப் போலும்.

'நீலா' என்று ஒருமுறை சொல்லிப் பார்த்துக் கொண்டேன். அவள் முகம் முழுசாய் நினைவுக்கு வராமல் கலைந்து கலைந்து போனது. ஒரே தடவை பார்த்தது. என் பொக்கிஷத்தைத் திருப்பி என்னிடமே ஒப்படைத்தவள்.

நீலாவின் சூட்கேஸை ஒழுங்குபடுத்தினேன். என் மதிப்பான ஒரே கவிதை நோட்டை எடுத்தேன். அதன் உள் அட்டையில், 'நீலாவுக்கு... நன்றியுடன் ப்ரபாகர்' என்றெழுதி அதையும் அவள் சூட்கேஸில் வைத்தேன். ரொம்ப சந்தோஷமாயிருந்தது. சூட்கேஸை ரொம்ப சிரத்தையாய் பார்சல் செய்து அவள் முகவரி எழுதி அனுப்பி வைத்தேன்.

அப்புறம்... அவளின் அந்தக் கடிதத்தை அழகாய் மடித்து... என் மற்ற பொக்கிஷங்களோடு அதையும் சேர்த்து பத்திரபடுத்தி வைத்திருக்கிறேன். மற்றொரு ஞாபகச் சின்னமாய்!

---



**"நீ லவ் லெட்டர் எழுதினதுக்கு பதில் வந்திடுச்சா, என்னன்னு...?"**

**"முதல்ல, தப்பு இல்லாம, தமிழ் எழுதக் கத்துக்க. அப்புறம், லவ் பண்ணலாம்ன்னு, அட்வைஸ் பண்ணிட்டா..."**

**— ஆர். வசந்தகுமார்**

## ஆஹா!

**1. காமிரா :** கலக்கல். ஒவ்வொரு ஃபிரேமுக்கும் ஒரு பூங்கொத்து தரலாம்!

**2. கலை :** அசத்தல். அழகுணர்ச்சியுடன் செயல்பட்டிருக்கிறார்கள்.

**3. காஸ்டியூம்ஸ் :** எல்லா இடத்திலும் ஜோர்! ஆனால், குடும்ப விஷயம் பேசுவதென்றால் ஹீரோயின் உடனே புடைவை கட்டியே ஆக வேண்டுமா?

**4. லாவண்யா :** மிஸ் இந்தியா ரேஞ்சில் ஒரு கதாநாயகி! இயல்பான நடிப்பு. (கொஞ்சம் அழவும் கற்றுக் கொண்டால் தாய்மார்களை அசத்திவிடலாம்.)

**5. இசை :** இசையென்னும் இன்ப வெள்ளத்தில் நீந்த வைத்திருக்கிறார் ராஜா. (வெற்றிகரமான இரண்டாம் அத்தியாயம்... ஆரம்பமா?)

## ஊஹூம்!

**1. கதை :** காதலை யார் விட்டுக் கொடுப்பது என்று அண்ணன் - தம்பிக்குள் ஒரே பாசப் போட்டி. எத்தனை முறை பார்த்தாச்சு!

**2. எஸ். பி. பி. :** திரும்பத் திரும்ப உடம்பு குண்டாயிருப்பதாகக் கிண்டல் செய்யப்படும் ரோல்களில் நடிக்கணுமா?

3. அனாவசியமாய் ஒரு சண்டை.

ஒரு ஊஹூம் கதையை வைத்துக் கொண்டு ஆஹா சொல்லும்படி திரைக்கதை அமைத்தது பி. ஆர். விஜயலட்சுமியின் வெற்றிதான்.

**- துளசி**



# பாட்டு பாடவா

**கா**லையில் எழும் போதே மனசுக்குள் பொறி தட்டியது. சரஸ்வதி பக்கத்தில் கையைத் துழாவினாள். பூத்துவாலையாய் ஷ்யாம் கையில் பட்டான். இன்றைக்கு இவனைப் பிரிய வேண்டும். மூன்று மாத விடுமுறை முடிந்து, மறுபடியும் வேலைக்குப் போக வேண்டும்.

சந்துரு இருந்திருந்தால் இப்படியொரு நிலை வந்திருக்காது. என்ன ஒரு சந்தோஷ மான வாழ்க்கை! எப்படி முடிந்து போனது? ஸ்கூட்டரின் சக்கரம் மட்டும் முழுசாய்... எல்லாமே நைந்து கிடந்தது. எல்லாமே.... சந்துருவும், சந்தோஷமும். மிஞ்சின சந் தோஷத்துளி ஷ்யாம். வயிற்றில் மூன்று மாசம்.

அதனாலேயே மாமியார் அவனை வெறுத்தாள். 'எம் மகனைக் கொன்ன படு பாவி. பிறக்கும் முன்னயே விழுங்கிட்டான்' என்று கரித்தாள். ஒரு நிமிடத்தில் அவளை, புகுந்த வீட்டை விட் டொழியலாம். ஆனால் எங்கே போக? மூன்று வயசு வந்த பெண் பிள்ளைகளோடு லாட் டரி அடிக்கும் அப்பா விடமா?



முடியாது. எனவே எல்லாமே பொறுத்துப் போக வேண்டும்.

''நீ வேலைக்குப் போனா என்னால இவ னைப் பாத்துக்க முடியா தும்மா.''

"பார்த்துக்க வேணாம். நா, ஒரு ஆள் வச்சுக்கறேன்."

"முடியாதும்மா. அது அவளையும் பாத் துக்கற மாறி ஆயிடும். இந்த சனியன க்ரெஷ்ல விட்டுடு."

"இது சனியன் இல்ல அத்தை. உங்க சந்துருவோட....."

"ஷ்... எம்மகன பிரிச்ச சனி!"

அதற்குமேல் அவளிடம் பேச முடியாது. க்ரெஷில் விடவா? மூன்று மாச சிசுவையா? சரியாய்த் தலைநிற்காத தருணத்திலா? பேசாமல் இன்னும் கொஞ்ச நாள் லீவ் போடலாமா? முடியாது, பாதிச் சம்பளம் அடியாகிவிடும். ஷ்யாமுக்காக சேமிப்பு அவசியம். மிக அவசியம்.

**ப**ஸ் பிடித்து அப்பா வீட்டுக்குப் போனாள். செண்பகா வளர்ந்திருந்தாள். இவள் பார்த்துக் கொள்வாளா?

''மாவு, பாட்டில் எல்லாம் கொண் ணாந்துடறேன். சரியா?''

"கட்டாயமா நான் பாத்துக்கறேன்க்கா."

சொல்லும் போது மனசில் சந்தோஷம் பொங்கிற்று.

வீட்டுக்கு வந்ததும் மாமியார் கேட்டாள்.

"க்ரெஷா?"

"இல்ல. செண்பகா பாத்துக்கறேன்னா."

"அங்கேயே விடப் போறியா?"

"இல்ல. சாயங்காலம் வர்றச்ச கூட்டிட்டு வந்துருவேன்."

"கஷ்டமில்லயா உனக்கு?"

"நீங்க பாத்துக்கறேங்கறீங்களா?"

அவள் மௌனமானாள். அதற்குப் பிறகு பேச்சுக் கூட குறைந்த மாதிரியிருந்தது.

**கா**லையிலேயே ஷ்யாமைக் குளிப்பாட்டி சாம்பிராணி போட்டு லாக்டோஜன், பேரக்ஸ் ப்ளெயின் என்று எடுத்து வைத்துக் கொண்டது சிரமமாகத்தானிருந்தது. செண்ப காவிடம் பத்துத் தடவை லாக்டோஜன் கலக்குவதைச் சொன்னாள்.

"சரிக்கா, கவலைப்படாதே!''

படாது எங்கு இருக்க முடிகிறது? இந்த துருதுரு கண்ணையும் புஷ்டியான பிஞ்சுக் காலையும் பிரிய மனசில்லையே! சந்துரு.... நீ இருந் திருந்தால் சத்திய மாய் நான் வேலைக்குப் போக மாட்டேன். அத்தனை இறுக்கமும் உடைய, சரஸ்வதி அழுதாள்.

''சொ... நம்பிக்கை இல்லையாக்கா எம்மேல?"

''இல்ல. பிள்ளை பாத்துப் பழக்கமில் லையே."

"நீ மட்டும் பழக்கப்பட்டவளா?"

அப்பா - கடைக்குக் கிளம்பிக் கொண் டிருந்தவர் - நின்றார்.

"இங்க வந்து இருந்துடேன் சரஸ்வதி?"

"முடியுமாப்பா?"

"கஷ்டமில்லம்மா."

"செண்பகா கல்யாணம் தடைப்பட லாம்."

"அதெல்லாம் அந்தக் காலம் சரஸ்வதி."

"யோசிக்கலாம்பா."

இன்னுமொரு பத்து தடவை செண்பகா வுக்குச் சொல்லித் தந்தாள்.

"அடிக்கடி கக்குவான்டி. பத்திராம்."

மனசில்லை. மனசில்லை. இருந்தும்

புறப்பட்டாள். ஆபீஸில் வேலை காத்திருந்தது. மனசுக்குள் ஷ்யாம். பாலை முழுசாக நிப்பிளில் கொண்டு வராது கொடுப்பாளா? பிள்ளைக்குப் புரையேறுமே? பார்த்துக் கொள்வாளா? மத்யான லஞ்ச் அவரில் போய் விடலாமா?

"என்ன? என்ன விஷயம் சரசு? ஏன் பதர்றே?"

"ஷ்யாமை...."

"க்ரெஷா?"

"இல்ல. செண்பகா பாத்துக்கறா?"

"என் மக என் மாமியார்ட்ட இருக்க மாட்டா. க்ரெஷ் ஆயாட்ட இருப்பா. என் மாமியாரோட குணம் என் மகளுக்குச் சின்னதுலயே தெரிஞ்சிப் போச்சு." பெரிதாய் காமினி சிரித்தாள்!

பெரிதாய் அவள் சிரிக்க, பெரிதாய் பயம் வந்தது.



இதை நினைத்துப் பார்க்கவில்லை. நினைத்துப் பார்த்திருந்தால் முன்னமே ஒரு நாள் விட்டிருந்திருக்கலாம். புருஷன் இறந்து ஒரு வருஷத்துக்குள் அடிக்கடி புகுந்த வீட்டுக்குக் கூட மாமியார் விடவில்லை. மாமியார் குணம் தெரிந்து, அப்பாவும் அவ்வப்போது தான் எட்டிப் பார்ப்பார். வந்தவுடனேயே குறைகள் எழும்.

'சந்துரு போய் ஒரு வருஷமாகலே. அதுக்குள்ள சரசு பொட்டு வச்சிக்கறா!'

'......'

'நீங்க சொல்லப்படாதா?'

'.....'

'நாலுபேர் நாலு விதமா பேசமாட்டாங்க?'

'பேசட்டும் அத்தை!'

அப்பா பேசமாட்டார். போய் விடுவார். அவர் சொல்வது போல அவருடனே போய் இருக்கலாம். இந்த மாதிரி பேச்சுக் கேட்க வேண்டாம்.

மத்யானத்துக்கு மேலே தாங்க முடியவில்லை. முதல் நாளே லீவா என்பது போல மானேஜர் பார்த்தார்.

"ப்ளீஸ் சார்! குழந்தை..." கண் கலங்கிற்று. எப்படியிருக்கிறானோ? மார்பில் பால் முட்டிற்று. இப்படியொரு அவஸ்தையிலா எல்லோரும் பிள்ளையை விட்டுவிட்டு வேலைக்குப் போய் வருகிறார்கள்? எப்படி?

பஸ் தெய்வமாய் வந்தது. வீடு கிட்டே வரவர, ஷ்யாமின் அழுகைச் சத்தம் கேட்கிறதா என்று துடித்தது. வீட்டுக்குள் நிசப்தம். கதவைத் தட்டினதும் செண்பகா திறந்தாள்.

"பிள்ளை...."

"ஷ்... கத்தாதே... தூங்கறான்."

"அழுதானா?"

"இல்ல. பாலுக்காக அழுதான். அதுக்கு முன்னாலயே நீ சொன்ன டயமுக்கு கலக்கி வச்சிட்டேன். உடனே கொடுத்திட்டேன்க்கா. ஏன் மதியமே வந்துட்டே? தலைவலியா?"

"இல்ல...." நெஞ்சு படபடப்பு அடங்கவில்லை. ஷ்யாமை நெஞ்சோடு அள்ளினாள்.

"நான் சரியாப் பாத்துக்க மாட்டேனோன்னு பயமாக்கா?"

செண்பகாவின் கை தோளில் விழுந்தது. அந்த ஆதரவு மனசை இளக்க, கண் கலங்கிற்று.

"பழகிடும்க்கா."

சரஸ்வதி சிரித்தாள்.

# தமயந்தி

கி.ராஜேந்திரன்

இனி போலீஸ் உத்யோகம் பார்க்க முடியாது என்று தெரிந்த பிறகு, எங்கே போவது, என்ன செய்வது? லைப்ரரி? கிளப்? சினிமா? எதிலே மனம் லயிக்கப் போகிறது? வீடே கதி என்று ஃபிளாட்டுக்கு வந்து சேர்ந்து கதிரி போட்டான்; லுட்லூம் புரட்டினான். உள்ளம் அழுது கொண்டிருக்க எது ரசிக்கும்?

ஃபோன் எடுத்து நளின் காரியாலய நெம்பர் தட்டி, "மே ஐ...?"

"ஹூ இஸ் காலிங்?"

"ஹர் ஹஸ்பண்ட்..."

"ஹாய்" என்று அவள் குரல் ஒலிக்க, "வீட்டுக்கு வா, வரியா? உடனே?"

"வரேன்; தொண்ணூத்தொன்பது பர்சண்ட். முடியலேன்னா ஃபோன் பண்றேன்" என்றாள்.

பர்மிஷன் கேட்டு, லீவு எழுதிக் கொடுத்து, ஸன்னி ஸ்டார்ட் செய்து வந்து சேர இருபத்தைந்து நிமிஷம் பிடிக்கும். ஆறு தடவை கையைச் சுட்டுக் கொண்டு, டிகாக்ஷன் இறக்கி, பால் சுட வைத்து, கலந்தபோது வாசல் கதவு, சாவியில் கிளிக்கித் திறந்தது.

''ம்ம்ம்''– மணத்தை நுகர்ந்து, "ஒரு வேளை மட்டுமே காப்பி உத்தரவு என்ன ஆச்சு?'' என்று சிரித்தாள்.

"சிரிக்காதே!" என்று கத்தினான்.

நளினி முகம் மொட்டாக, அவனை நெருங்கி, தோளில் அழுத்தமாய்க் கைபதித்து, முதுகில் தலை சாய்த்தாள்.

"ஸாரி, நான் ஊகிச்சிருக்கணும். ஏதோ பேட் நியூஸ் இல்லேன்னா ஃபோன் பண்ணி வரவழைச்சிருக்கப்போறதில்லே!"

டைனிங் டேபிள் முன் காப்பி கோப்பைகளுடன் அமர்ந்து, இருகரங்கள் அருந்த இருகரங்கள் பின்னிக் கொண்டன.

"வேலை போயிடுச்சு."

அவன் உள்ளங்கையைக் கன்னத்தில் வைத்து அரை நிமிட மௌனத்துக்குப் பிறகு,

"நிஜமா சொல்லுங்க, நீங்க எதிர்ப்பார்க்கலையா?"

தலை ஆட்டினான்.

"அப்ப ஏன் இத்தனை கோபம்?"

"அநீதி என்பதால். உத்யோகம் முக்கியமில்லே; இது இல்லாட்டா இன்னொண்ணு. நான் கடமையைச் செய்தேன். அதுக்குப் பாராட்டு கிடைக்காட்டா பரவாயில்லே; தண்டனை கிடைக்குதே!"

''இன்றைய இந்தியா இப்படித்தான் இருக்கு. உங்களுக்குத் தெரியும்தானே?''

"அதனால்தான் கோபம் ஜாஸ்தியாறது. அசத்யமேவ ஜயதேங்கிறதை எப்ப மாற்றி அமைக்கிறது?"

"நம்ம கொள்ளுப் பேரங்க காலத்துல...?"

"முடியாது. இன்னிக்கு, இப்பவே!"

"உங்களால என்ன செய்ய முடியும்? அதிகார பலமும் இல்லே."

"என்னை மேலும் சோர்வடையச் செய்ய உன்னை வரச் சொல்லலே."

அவள் பெருமூச்சுவிட்டாள். பின்புறமாக வந்து அவன் நெஞ்சில் கைகள் பதித்து,



"திரும்பத் திரும்ப ஸாரி சொல்றதுல அர்த்த மில்லே. ஐ வில் ஹெல்ப் யூ" என்றாள்.

"'எப்படி உதவப் போறே?"

"அலசுவோம். நடந்தது என்ன? ரெண்டு புலிகள் வராங்க; மந்திரி வீட்டு மதில் ஏறி குதிக்கிறாங்க..."

"மந்திரி சின்னவீடு செட்அப் பண்ண ணும்னு கூட நினைக்கலே. கவர்மெண்ட் பங்களாவிலேயே தன் மனைவி பார்த்துக் கிட்டு இருக்கிறப்பவே ஸ்டெப்னியோட பெட்ரூமுக்குள் போய் கதவு சாத்திக்கிறார். மாண்பு மிகுன்னு நிரூபிக்கிறார்!"

"நீங்க தேடிப் போன புலிகள் மாயமாய் மறைஞ்சுடறாங்க... எனக்கு என்ன தோணுதுன்னா..."

"சொல்லு."

"மையப்புள்ளி, மந்திரி மனைவி."

**ரா**ஜ்கமல் மனத்தில் மின்னல்களாக சாத்தியக் கூறுகள் பளிச்சிட்டன. கண்கள் மீண்டும் ஒளி பெற, நளினியின் உள்ளங்கைகளை அள்ளி எடுத்து முத்தமிட்டான்.

ஃபோன் எடுத்து நெம்பர்கள் அழுத்தி, "சௌந்தர், ஐ நீட் யுவர் ஹெல்ப்" என்றான்.

"யூ ஆர் அண்டர் ஸஸ்பென்ஷன் பிரதர்!"

"அதனால்தான் 'ஹெல்ப்'கேட்கிறேன். இல்லாட்டா 'உத்தரவு' போட மாட்டேனா?"

"கரெக்ட்தான்! சொல்லு. சாத்தியப் படுமா பார்க்கிறேன்."

"சாத்தியப் படாததைக் கேட்க மாட் டேன். மந்திரி மாரிசாமியின் அஃபிஷியல் மனைவியோட பின்னணி வேணும்."

"ஒரு மணி நேரம் டயம் கொடு; வீட்டில தானே இருக்கே!"

"ஆமாம். அரை மணி தரேன்."

முப்பத்திரண்டாவது நிமிஷம் சௌந்தர் ஃபோன் செய்தான்: "பேரு காந்திமதி. திருச்சி. விவசாயக் குடும்பம். 1988ல் பதி னெட்டு வயசில் கல்யாணம். மனைவி வந்த முகூர்த்தம்தான் மாரிசாமி அரசியலில் முன்னேறி,

பூனைகள் ராஜ்யம்

தலைமையின் நம்பிக்கை பெற்று, தேர்தல்ல வெற்றி அடைஞ்சு மந்திரியா னார்னு மாரிசாமியின் பெற் றோர் நம்பறாங்க. அதனால காந்திமதிகிட்ட ரொம்பப் பிரியம். அவ சீதாலக்ஷ்மி கல்லூரியிலே படிச்சுக்கிட்டிருக் கிறப்ப கல்யாணம் நடந்துச்சு. அத்தோட காலேஜுக்கு முழுக்கு. போஸ்டல் டிகிரி வாங்க நினைக்க, அதுல இழுபறி. இன்டரஸ்ட் போயி டுச்சு. குழந்தைகள் இல்லே. ஃபிரெண்ட்ஸ் ரொம்ப குறைச் சல். வெளியே போறது கிடை யாது. மந்திரி அழைச்சுப் போக வும் மாட்டார். வேறென்ன வேணும்?"

"போதும், தாங்க்ஸ்."

**ந**ளினியிடம் திட்டம் விவரிக்க, "நான் ரெடி"



## அவமானம்!

காந்தி சிலை
கவிழ்த்தது தலை
மந்திரி
மாலை இட்டதால்
-பொன். குமார்.

என்றாள். "மாரிசாமி வீட்டு ஃபோன். நெம்பர் என்ன?"

"அந்த ஃபோன் லைன போலீஸ்ல டாப் செய்திருப்பாங்க, டேஞ்சர். அவ ஃபோனுக்கு வரவும் மாட்டா. சுலபமா தட்டிக் கழிச் சுடுவா."

"நேர்லயே போறேன். இப்பவே புறப்படறேன். மந்திரி கோட்டைக்குப் போயிருப்பார். தனியாதான் இருப்பா."

அவன் அவள் தோள்களைப் பற்றினான். "ஜாக்கிரதையா இருப்பியா? மாரிசாமி ரொம்பப் பொல்லாதவன்."

அவள் இலேசாகச் சிரித்து "எப்படி ரோல் மாறுது பார்த்தீங்களா?" என்றாள். "பெண்டாட்டியை இப்படி பயன்படுத் தறோமேன்னு நினைக்காதீங்க. உங்களுக்கு உதவுறது எனக்குப் பெருமைதான்" என்று கன்னம் தட்ட, அவன் மலர்ந்தான்.

"கிறீச் கிறீச்" என்று ஏகச் சத்தம் கேட்க, ஜன்னல் வழியே பார்த்தார்கள். இரண்டு பூனைகள் மதில்மேல் நின்று, ஒன்றைப் பார்த்து ஒன்று பற்களைக் காட்டி, மீசை உயர, கருவிக் கொண்டிருந்தன. ஜிவ்வென்று உடல்கள் சிலிர்த்து, முடிகள் நெட்டுக்குத் தாய் நின்றன. ஒரு கட்டத்தில் உறுமல் நின்று, ஒன்றன் மீதொன்று பாய்ந்து பிராண் டிக் கொண்டு உருண்டு விழ, கீழ் ஃபிளாட் டில் குடியிருந்தவர், "சூ"என்று விரட்டி ஒரு காலி தகரடப்பா வீச, ஓடிப் போயின.

"நல்ல சகுனம்!" என்று சொல்லி மாறாத புன்னகையுடன் மறைந்தாள் நளினி.

மந்திரி வீட்டு வாசலில் ஆட்டோவில் இறங்கி, செக்யூரிடியிடம் "மந்திரி அம்மா வைப் பார்க்கணும்" என்று தயக்கத்தை விடுவித்துக் கொண்டு கூற, அவன் ஏற இறங்கப் பார்த்து, "மந்திரியோட அம்மா வைப் பார்க்க லால்குடிக்குப் போகணும்" என்றான்.

"ஒரு மரியாதைக்கு அம்மான்னு சொன்னேன். சம்சாரத்தைத்தான் குறிப் பிடறேன்."

"எதுக்குப் பார்க்கணும்?"

"ஒரு காரியமுமில்லே. காலேஜ்ல அவங்களோட கூடப் படிச்சவ. மெட் ராஸுக்கு வந்தேன், ஒரு காரியமா. அப் படியே பார்த்துட்டுப் போலாமேன்னு..."

"அவங்க யாரையும் பார்க்கறதில்லே; மந்திரியோட பர்மிஷன் வேணும்."

"நீங்க கேட்டுப்பாருங்க. முடியாதுன்னு சொல்லிட்டா போயிடறேன். சீதாலக்ஷ்மி காலேஜ்-கிளாஸ்மேட் கனகவல்லின்னு சொல்லுங்க."

யோசித்து, 'நமக்கேன் வம்பு' என்பது போல் தோள் குலுக்கி, செக்யூரிடி இன்டர் காமில் பேச, நளினியின் இதயத் துடிப்பு தாறு மாறாயிற்று.

ஃபோனை வைத்து, அவளைச் சந்தேகம் தீராமலே பார்த்து, "வரச் சொன்னாங்க" என்றான்.

ஒரு தடை தாண்டின சந்தோஷத்தோடு அடுத்த கட்ட திகிலும் சேர, வியர்த்தது நளினுக்கு. ஓர் அலட்சிய கம்பீரத்தைக் கஷ்டப்பட்டு வருவித்துக் கொண்டு நடந்து, படியேற, கதவு திறந்து, ஃபிரேம் போட்டது போல் நிலை வாசல் மையத்தில் நின்றாள் காந்திமதி.

உள்ளே அழைத்துப் போய் சோபாவில் அமரச் செய்து ஜூஸ் கொடுக்கும் வரை ஒரு சொல் உதிரவில்லை. பிறகு "சீதாலக்ஷ்மி காலேஜ் சரி; ஆனா கனகவல்லின்னு எனக்கு ஒரு ஃபிரெண்டும் கிடையாது; அங்க சறுக் கிட்டே" என்றாள்.

"பொய்னு தெரிஞ்சு ஏன் உள்ளே அனுமதிச்சீங்க?"

அவள் இமைக்காமல் பார்த்து, தயக் கத்தை வெற்றி கொள்ள நேரம் எடுத்துக் கொண்டு பேசினாள்: "சொல்றேன். தனிமை எவ்வளவு கொடுமைங்கிறது உனக்குத் தெரி யுமா? அனுபவிக்காதவர்களுக்கு அதன் கொடூரம் புரியாது."

பெண்ணினத்தின் இயற்கையான இரக் கத்துடன் அவள் கரத்தைப் பற்றினாள். காந்திமதி உறுவிக் கொண்டாள்.

"நீ நட்புக்காக வரலைங்கறது எனக்குத் தெரியுது. யார் நீ? என்ன வேணும்?"

"காரியார்த்தமாகத்தான் வந்தேன். ஆனா என் சினேகத்தை வழங்கறதுல தடை யில்லே."

"என்ன காரியம்னு தெரிஞ்சுக்கிட்ட பிறகுதான் உன் நட்பை ஏற்றுக் கொள்வதா வேண்டாமான்னு தீர்மானிக்க முடியும்."

நளினி முதல்நாள் இரவு நிகழ்ச்சிகளை நினைவூட்டினாள்.

"ராஜ்கமலின் சம்சாரமா நீ?" காந்தி மதியின் சிரிப்பில் கேலி கொப்பளித்தது.

"உங்க சிரிப்பு என்மேல் நெருப்பை அள்ளிக் கொட்டறமாதிரி இருக்கு."

"எனக்கு நாசூக்கு பத்தாது. மன்னிச்சுக்க."

"உங்க கணவருக்கும்தான். உங்க கண் எதிரிலேயே..." என்றாள் நளினி, குத்தலாக. அப்புறம் அடி உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

"ஆரம்பத்துல ஆத்திரமா இருந்துச்சு. அப்புறம் பழகிடுச்சு. அந்த மனுஷனுக்கு இப்படி என்னைச் சிறுமைப்படுத்தறதுல தான் சந்தோஷம்னு தெரிஞ்ச பிறகு, 'சீ'ன்னு போயிடுச்சு. இப்ப நான் அவரையே லட்சியம் பண்றதில்லே; அவர் செயல்களை எதுக்குப் பெரிசா எடுத்துக்கணும்?" மை கலையாமல் கண்களின் ஓரத்தில் கைக் குட்டையால் ஒற்றிக் கொண்டாள்.

"அப்படி இருக்கறப்போ எனக்கு ஏன் நீங்க உதவக் கூடாது?"

"என்ன உதவின்னு நீங்க இன்னும் சொல்லலியே?"

"அந்தப்புலிகள் என்ன ஆனாங்க?"

காந்திமதி மறுபடி குபீர் என்று சிரிக்க, நளினி பற்களை நறநறத்தாள். 'எழுந்து போயிடலாமா? கூடாது! அவமானத்தைத் தாங்கியாவது காரியத்தை முடிக்கணும்'

"பதிலுக்குக் காத்திருக்கேன்" என்றாள் சிரிப்பலைகளுக்கு மேலாக, அதட்டலாக.

நகையொலி நலிந்து தேய காந்திமதி சொன்னாள்: "இங்கேயேதான் இருந்தாங்க;



ஒரு புலி கட்டிலிலே கம்பெனி கொடுத்துது; இன்னொரு புலி வாசல்ல செக்யூரிட்டி வேஷத்துல உன் கணவரைத் தடுத்து நிறுத்தப் பார்த்தது!''

நளினிக்குப் புரிந்து விட்டது. 'அப்படின்னா ஒரு புலி, பெண்புலி, ஒரு புலி, ஆண் புலியா? இப்படி ஏமாந்ததை உணரும்போது ராஜ்கமல் எப்படி குன்றிப் போவார்!' புழுப்போல உணர்ந்தாள் நளினி.

"என்ன நோக்கம்? அதிராமபட்டணத்தில் ஆரம்பிச்சு, சென்னைப் பட்டணம் வரை போலீஸின் கவனத்தை ஈர்க்கின்ற இந்த நாடகம் எதுக்கு?"

"எனக்குத் தெரியாது."

"தெரிஞ்சுக்க வேணாமா?"

"அதுல ஆபத்து உண்டு. என் கணவர் எப்படிப்பட்டவர்னு எனக்கும் தெரியும்; உனக்கும் தெரியும். நான் எதுக்கு வம்பை விலை கொடுத்து வாங்கணும்?"

"பழி வாங்கறதுக்கு" என்றாள் நளினி, உறுதியாக.

காந்திமதி அவளை உற்றுப் பார்த்தாள். கண்களில் பளபளப்பு ஏறி, இருட்டில் தெரியும் புலிகளின் விழிகளாக ஜொலித்தன.

''பூனைகள் கூடப் புலி வேஷம் போடலாம் இல்லியா?" என்றாள்.

(தொடரும்)

உன் அம்மா, அப்பா எங்கே?

உங்களைப் பார்த்ததிலேருந்து அவங்களும் மலரும் நினைவுகள்ல மூழ்கியிருக்காங்க!

நல்ல காலம் குழந்தைங்க தூங்கின பிறகு இந்தமாதிரி படம்லாம் போடறாங்க...





# நலிவடைந்தோர் பிணிதீர்க்கும்

# இந்து மிஷன் ஆஸ்பத்திரி

'உடம்பார் அழியின் உயிரார் அழிவார்' என்றார் திருமூலர். மந்திரமாய் சொன்ன திருமூலரின் சுந்தரத் தமிழ
ஆழ்ந்த பொருள் இருக்கின்றது. உடம்புதான் ஆலயம்; அதனுள் ஏற்றப்பட்ட ஒளிவிளக்கே உயிர். வாழ்வி
முன்னேற்றத்திற்கும், மன அமைதிக்கும் உடல்நலம் மிக அவசியம். எனவேதான் 'உடம்பை வளர்த்தேன் உ
வளர்த்தேனே' என்று தெளிவாகச் சொல்கிறார் திருமூலர்.

ஆனால் இயந்திரமயமான இந்த உலகில் நோய்க்குத் தப்பியவர்களே இல்லையென்று சொல்லலாம். எனினும் சிற
சிகிச்சை பெற வழியின்றி நோயினால் அதிகம் அல்லல்படுபவர்கள் ஏழை எளியவர்களே.

சிறந்த சிகிச்சை வசதிகளை ஏழைகளும் பெற வேண்டாமா? நோய்தீர்ந்து அவர்கள் வாழ்விலும் இன்பம் மலர வேண்டாமா? இந்த நோக்கத்தையே அடிப்படையாகக் கொண்டு உருவானதுதான் இந்து மிஷன் ஆஸ்பத்திரி. ஏழை எளியவர்களின் பிணிநீக்கும் இம்மருத்துவமனை அவர்கள் வாழ்வின் நம்பிக்கை தீபமாகத் திகழ்கிறது.



ஸ்ரீ ராம நாமா பிளாக் - முன்னாள் துணை ஜனாதிபதி
உயர்திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்களால் 14.4.1985 அன்று
திறந்து வைக்கப்பட்டது.

## இலட்சியப் பயணம்

இந்து மிஷன் ஆஸ்பத்திரி - வசதியற்ற மற்றும் நடுத்தர மக்களின் ஓர் உயிர்நாடி. சென்னையில் இருந்து 26 கி
தொலைவில் நெடுஞ்சாலையில் அமைந்திருக்கின்ற இம்மருத்துவமனை மக்கள் பிணிதீர்க்கும் தன் இலட்சிய
பயணத்தை உறுதியுடன் தொடர்கின்றது.

இந்திய அரசின் மத்திய பாதுகாப்பு அமைச்சகத்திற்குரிய 0.5 ஏக்கர் நிலத்தைப்பெற்று ஒரு சிறிய குடிசைய
ஆரம்பிக்கப்பட்ட இந்த மருத்துவமனையை 1982, டிசம்பர் 2 ஆம் தேதி காஞ்சி சங்கராச்சாரியார் ஸ்ரீ ஜயேந்
சரசுவதி சுவாமிகள் அவர்கள் தொடங்கி வைத்தார்கள். பின்னர் 'ஸ்ரீ ராம நாம்பத்திரா' மூலம் திரட்டப்பட
நிதியின் உதவியினால் அந்த நிலத்தில் 10,000 சதுர அடி நிலப்பரப்பில் மூன்றடுக்கு கட்டடம் கட்டப்பட்டது. 198
ஏப்ரல் 14 ஆம் தேதி, அன்றைய துணை ஜனாதிபதியான திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள் அக்கட்டடத்
திறந்து வைத்தார்.

ஜாதிமத பேதமின்றி அனைத்து மக்களுக்கும் ஆற்றிவரும் தனது தன்னிகரற்ற மருத்துவ சேவையில் 'இந்து மிஷ
ஆஸ்பத்திரி' இன்று மேலோங்கி நிற்கிறது.

நூறு படுக்கை வசதி கொண்ட இந்த மருத்துவமனை, அதிநவீன மருத்துவ வசதிகளுடன் ஏழை எளிய மக்களுக்கு சிற
சேவை புரிந்து வருகின்றது. விபத்திற்கான அவசர சிகிச்சைப்பிரிவு, ICCU வசதி கொண்ட இருதய சிகிச்சைப்பிரி
மகப்பேறு பிரிவு, மற்றும் பொதுமருத்துவம், அறுவை சிகிச்சை, எலும்பு, பல், கண், காது, மூக்கு, தொண்ட
சருமம், குழந்தை நலம் ஆகிய அனைத்திற்கும் மருத்துவ நிபுணர்களை இம்மருத்துவமனை கொண்டுள்ளது. தாம்ப
மற்றும் அதனைச் சுற்றி இருக்கின்ற நலிவடைந்தோரின் நோய்தீர்த்து அவர்களின் வாழ்வில் மகிழ்ச்சியை மல
செய்கிறது. மேலும் சிறந்த முறையில் சேவை செய்ய, முதியோர் வைத்திய பராமரிப்பியல் மற்றும் கண் சிகிச்சை
பிரிவு ஆகியவற்றைத் தொடங்க திட்டமிடப்பட்டுள்ளது.

'தேசிய தொழுநோய் ஒழிப்புத் திட்டத்தி'லும் இந்த மருத்துவமனை ஈடுபட்டு, 8000-க்கும் மேற்பட்டவர்களு
தொழுநோய் பிணிதீர்த்து சாதனை படைத்திருக்கிறது. மேலும் இந்த மருத்துவமனை பல ஏழை எளியவர்களு
இலவச கண் அறுவை சிகிச்சை அளித்து அவர்கள் வாழ்வில் ஒளியேற்றியுள்ளது.



"பிரதீப்பை பிரின்ஸ்பால் கூட்டிட்டு வரச் சொன்னாரு... சாரு!" பியூன் தணிகாசலம் சொன்னதும், புரொபசரிடம் சொல்லிக் கொண்டு கிளம்பினேன்.

பிரின்ஸ்பால் அறையை நெருங்கியதும், "மே.. ஐ... கம் இன் சார்?" பணிவுடன் நுழைந்தேன். முதல்வருக்கு எதிரே பக்கத்து வீட்டு பாலு!

"சாரி மை பாய்! உனக்கு ஒரு கெட்ட செய்தி! உன்னுடைய தந்தை.... தவறிட்டார்!" முதல்வர் என்னைப் பரிதாபத்துடன் நோக்கினார்.

"சார்!" – அவநம்பிக்கையுடன் அவரைப் பார்த்தேன்.

"பாலு...! சார் சொல்றது நிஜமா?"

பாலு கனமாய்த் தலையாட்டினான்.

"எப்படி? காலைலே நல்லா இருந்தாரே?"

"மாசிவ் அட்டாக்காம்!" குறுக்கிட்ட முதல்வர் –

# அம்மா அழுதாள்

"பாலு! டேக் ஹிம்... அவன் தள்ளாடறான்... பிடிங்க!" அவரும் எழுந்தார். பாலு என்னைத் தாங்கிக் கொண்டான்.

ஆதரவாய்த் தட்டிக் கொடுத்த முதல்வர், "கடவுள்தான் இந்த பேரிழப்பைத் தாங்கற வலிமையை ஒனக்குக் கொடுக்கணும்!"

"நான் வர்றேன் சார்!" தடுமாறினேன். பாலுவின் துணையோடு வெளியே வந்தேன்.

"எப்படி... பாலு?" திரும்ப அவனை உலுக்கினேன்.

"வெளியே கிளம்பியிருக்காரு... ஒங்கம்மா ஏதோ சொல்லியிருக்காங்க! கோபத்தோடு திரும்பினாராம்! நெஞ்சைப் பிடிச்சிட்டு விழுந்திட்டாராம்!" பாலு தயங்கித் தயங்கிச் சொன்னான்.

உடம்பெங்கும் ஒரு நெருப்பு ஓடியது.

'கடைசியில் அவரை வறுத்துக் கொட்டி விட்டாயா?' அம்மா மீது கோபமாய் வந்தது.

என்ன கம்பீரமானவர் அப்பா! எத்தனை நேர்மையானவர்! சொற்களில், செயலில் அப்பழுக்கில்லா நாகரிகம்! ஊரே அவரை மதித்தது. ஆனால் அம்மாவுக்கு மட்டும் "ஓதவாக்கரை மனுஷன்!"

நடுவில் வந்த வெறுப்பில்லை இது! என்றைக்கு அவரைக் கைப்பிடித்தாளோ.. அன்றைக்கு வந்த கசப்பு கருக்குலையாது இருந்தது.

முதல் இரண்டு பெண்களை டாக்டருக்கும், என்ஜினியருக்கும் கட்டிக் கொடுத்ததால் கை வறண்டு விட்டதாம் தாத்தாவுக்கு. சாதாரண குமாஸ்தாவான அப்பாவுக்குக் கட்டிக் கொடுத்து விட்டார்.

அந்தக் கோபம் அப்பாவின் பண்பால் மாறவில்லை! அம்மாவின் உதாசீனங்களை முறுவலால் துடைத்துக் கொண்டது அவளுக்குத் தைரியம் கொடுத்தது. நாளுக்கு நாள் உக்கிரம் ஏறத் தொடங்கியது.

தங்க. சிவராசன்




எனக்கு நினைவு தெரிந்து அம்மா, அப்பாவிடம் அன்பாய்ப் பேசினதில்லை. அவருடைய பொழுது இடிமுழக்கத்தோடு தான் விடியும்...! பாத்திரங்களின் உருளலோடு தொடரும்!

பிள்ளைகள் நாங்கள் இருப்பது கூட அவளுக்குக் கவலையில்லை. கேவலமான சொற்களால் அவரைத் திட்டுவாள்.

விழாக் காலங்கள் கூட இதற்கு விதிவிலக்கல்ல!

"ம்! என் அக்காளுங்க... ரெண்டாயிரம் மூவாயிரம்னு பட்டிலே மினுக்குவாளுங்க! இந்த பிழைக்கத் தெரியாத மனுஷரைக் கட்டிட்டதாலே பூனம் புடைவையே பெரிசுன்னு பூரிச்சுப் போவணும்!"

"ராஜம்! இந்த புடைவை ஒனக்கு ஜோரா இருக்கும்!"ன்னு அப்பா பாராட்டினதுக்குக் கிடைக்கும் பரிசுதான் இது!

அப்பாவின் முகம் வாடிப் போகும்! வெளியே கிளம்பிப் போய் விடுவார்.

"ஏம்மா... பாவம்... அப்பாவை இப்படி அவமானப்படுத்தறே?" நாங்கள் கத்துவோம்.

"அப்படியும்... அந்த மனுஷனுக்குப் புத்தி வரல்லியே! கிடைக்கிற சம்பளமே போதும்னு ஓய்ஞ்சிடறாரே! நாலாபக்கம் ஓடி வேலை செஞ்சாத்தானே நாமும் மத்தவங்க மாதிரி முன்னேறலாம்!"

"இப்ப... என்ன குறைச்சலாம்?"

"செருப்பாலடி... நாயே! ஒங்க பெரியம்மா வீட்டுக்குப் போனப்ப, நாம்ப எப்ப காரு வாங்குவோம்னு கேட்டியே... அதுக்குத்தான் சொல்றேன்!"

"அவங்கள்ளாம்... அநியாயமா சம்பாதிக்கறாங்க!"

"சம்பாதிக்கணும்னா... அநியாயம் நியாயம் பாக்கக் கூடாது!"

"எங்கப்பா... அப்படில்லாம் செய்ய மாட்டாரு!" நாங்கள் கோரசாய்க் கத்துவோம். அம்மா துரத்திக் கொண்டு ஓடி வருவாள். நாங்கள் தப்பித்து விடுவோம்!

ஆனால் ஒருநாளும் அப்பா எங்களிடம் அம்மா பற்றிக் குறை கூற மாட்டார்.

"அம்மா... சுத்த மோசம்பா!" நான் சொன்னாலும் "சிச்சி! அப்படில்லாம் சொல்லக் கூடாது! அவ வளப்பமா வளர்ந்தவ! அதனாலேதான் அப்படி!" என்பார்.

அவர்தான் இப்போது என்னைத் தவிக்க விட்டு விட்டுப் போய் விட்டார். தாள முடியாத சோகம் என்னைத் தின்றது.

அப்பாவின் முகத்தில் அமைதி தெரிந்தாலும், ஓரத்தில் உபாதை வடு தெரிந்தது. அவர் மேல் விழுந்து அழுத போது -

'பிரதீப்! எதுக்குடா அழறே? அவமானம், உதாசீனம் எதுவும் எனக்கு இனிமே கிடையாது! இப்பதான் நிம்மதியா தூங்கறேன்... இதுக்கா அழறே?' அப்பா சொன்னது போல உணர்கிறேன்!

"அடி... ராஜம்! சாதாரணமாகவே சம்பளம் பத்தலேன்னு... அல்லாடுவே! இனி என்னடி பண்ணப் போறே?" யாரோ அம்மாவைக் கிளறினார்கள்.

"இப்ப சொல்லி என்ன செய்யறது? எப்ப இந்த மனுஷனைக் கட்டினேனோ, அப்ப இருந்தே அரை வயிறுதானே?"

"கவலைப்படாதே! அவரு போய்ட்டாலும், ஒன் பெரிய பையனுக்கு... அவரோட கம்பெனில வேலை போட்டுக் கொடுப்பாங்க!" யாரோ சொன்னது என்னை விழிக்க வைத்தது.

"நோ!" நான் கத்தினேன். "நான் என் படிப்பைப் பாதியிலே நிறுத்த முடியாது!"

"என்னடா... இப்படிச் சொல்றே?" அம்மா வெறித்தாள்.

"இன்னும்... ஒரு வருஷம் இருக்கு என் படிப்பு முடிய! இப்ப... பாதியிலே... வேலையிலே... சேர்ந்தா...." நான் முடிக்கவில்லை.

'அப்பா உன்கிட்ட பட்ட மாதிரி என் மனைவிகிட்டே என்னால உதாசீனப்பட முடியாது!' எனச் சொல்ல நினைத்தேன். சொல்லவில்லை.

"அப்ப... என்ன செய்றது?" அம்மா என்னையே பார்த்தாள்.

"நீ வேலைக்குப் போ!"

"நானா?"

"ஆமாம்! நீதான் வேலைக்குப் போவணும்! அப்பதான்... ஒனக்குப் பணம் சம்பாதிக்கறது எவ்வளவு கஷ்டம்னு தெரியும். அதும் நேர்மையான வழியில! அப்பா... எவ்வளவு கொண்டு வந்து போட்டாலும், மறுநாளே அவரைப் பணத்துக்காக நச்சரிப்பாயே! வாங்கறதை வைச்சி செலவு செய்ய எப்பதான் கத்துக்கப் போறியோன்னு புலம்புவாரே அப்பா! அதை நீ உணரணும்னுதான்... நான் படிப்பைத் தொடர்றேன்!"

மனத்துக்குள் கோபமும், எதையோ சாதித்து விட்ட பெருமிதமும் பொங்கியது அப்பாவை நிம்மதியோடு பார்த்தேன்!

# என்னுயிரும் நீயல்லவோ

## பாலகுமாரன்

எழுதும்

• காதலும் ஏலமும் கலந்து மணக்கும் தொடர்கதை!

## கல்கி

**9.4.95**

தமிழ்ப் புத்தாண்டுச் சிறப்பிதழில் ஆரம்பம்

"

'அவன் ஏழை, அரிஜன். அவன் எப்படிய்யா எஸ்டேட் வாங்கலாம்? நமக்கு சமமா எப்படி மலைல நடக்கலாம்?'

- இப்படி ஆத்திரப்பட்டே என்னைய ஒழிக்க நினைச்சாங்க. முடியலே. ஏன்...?

உழைப்பு. என் உழைப்புக்கு முன்னால அவங்க பணம், காசு, பதவி, ஜாதி மதிப்பு எல்லாம் தூசு. உழைக்கணும். உழைக்கிறதுன்னா என்னான்னு தெரியறதுக்குக் கூட உழைக்கணும்!

தின்னாத்தானே புட்டு ருசி தெரியுது. உழைச்சாத்தான் உழைப்பு ருசி தெரியும். ஏலக்காய், உழைச்சா பயிரு... இல்லேன்னா....

"



4

முகத்தை மூடியிருந்த கரங்களை ராஜ்கமல் வெகுநேரத்துக்கு நீக்கவே யில்லை. 'மந்திரி மாரிசாமி தன்னை இவ்வளவு சுலபமாக ஏமாற்றி விட்டாரே!' அவமானம் பிடுங்கித் தின்ன, உள்ளங்கை களுக்குப் பின்னால் உதடுகள் அசைந்தன.

"ஆக, ஆணும் பெண்ணுமா அந்த ரெண்டுபேருமே இவரோட அடியாட்கள் தான். ஆனா அவங்க புலிகள்னு போலீஸ்ல ரிகார்ட் ஆகிற மாதிரி ஒரு நாடகமாடியிருக் காங்க. ஏன்?"

அதைத்தான் காந்திமதிகிட்டே கேட் டேன். பேசவே பயப்படறாங்க. 'ஸி.எம்.ஆசி யோடதான் இவர் இந்த மாதிரி பெரிய திட் டம் போட்டிருப்பார். தானாகவே செயல்பட தைரியம் வராது'ன்றாங்க."

"பெரிய திட்டம் மட்டுமில்லே நளின். பயங்கர திட்டம். புலிகள் மேல பழியைச் சுமத்தி இவங்க தப்பிக்க நினைக் கிறாங்கன்னா, அது ஏதாவது கொலைபாதகச் செய லாகத்தான் இருக்கணும்."

# பூனைகள் ராஜ்ஜியம்

அப்படித்தான் காந்திமதியும் நினைக் கிறாங்க. 'அவர் ஆபீஸ் அறையில் ஒண்ணும் கிடைக்காது. பி.ஏ.க்குக் கூடத் தெரியாமத் தான் காரியம் பண்ணிக்கிட்டிருப்பார். பெட் ரூம்ல ஏதாச்சும் தடயம் அகப்படுமா பார்க் கிறேன்'னாங்க."

"ஏதோ பெரிய விபரீதம் நடக்கப் போறது தெரிஞ்சும் அதைத் தடுக்க வழி தெரியாம, இருக்கிறது எவ்வளவு தவிப்பு!" என்றான்.

"டி.ஸி.க்கு ஃபோன் பண்ணி சொல்லி டுங்க. உங்க பொறுப்பு தீர்ந்தது."

"அப்படி கை கழுவிட என்னால் முடி யாது நளின். ஸி.எம்.மே கூப்பிட்டு என்னை சஸ்பெண்ட் பண்ணுமாறு சொன்ன பிறகு என்ன ஆக்ஷன் எடுப்பாங்க? எப்படி தைரியம் வரும்?"

"அவங்களாலேயே முடியாதுங்கறப்ப நீங்க ஏன் பரபரக்கறீங்க?"

"இத்தனை காலமா யூனிஃபார்ம் அணிந் திருந்த பழக்கத்தாலதான். இப்ப அதைக் கழற்றி வைச்சுட்டாலும் கைலி கட்டின சாதா குடிமக்ன்கிற முறையிலயாவது ஏதாவது செய்யத் துடிக்கிறேன்."

இரவு சரியான தூக்கமில்லை. அப் பப்போ உறக்கம் இழுத்துக் கொண்டு போனாலும் பயங்கர சொப்பனம் கண்டு திடுக்கிட்டு விழித்தான்.

காந்திமதி தானே காரை ஓட்டிக் கொண்டு புறப்பட்டபோது, கேட் அருகே பார்த்துக் கொண்டிருந்த செக்யூரிடி, 'நிறுத்து வதா வேண்டாமா' என்று யோசித்து கடைசி யில் குறுக்கே நின்றான்.

'எங்கே போறீங்க?' என்று கேட்பது அப சகுனம்; அவள் சீறலாம். "எதுக்குத் தனியா? டிரைவரை அனுப்பறேனே" என்றான்.

"தேவையில்லை; ஷாப்பிங்தான் போறேன், விதானுக்கு."

"எடுபிடி ஆட்கள் எட்டுப்பேர் இருக்காங்க..."

"நானே போய்த்தான் செலக்ட் பண்ணணும்."

"மந்திரிக்குத் தெரி யுமா?"

"மிஸ்டர்! டீ.வி.ல சொல்ற மாதிரி இதெல்லாம் பொம்பளைங்க சமாசாரம். எல்லாத் துக்கும் அவர் பர்மிஷனைக் கேட்டுட் டிருக்க முடியாது, நகருங்க."

தோள்களைக் குலுக்கிக் கொண்டான். "நான் எச்சரிக்கலைன்னு என்பேரிலே தப்பு வரக்கூடாது பாருங்க."

காபினுக்குத் திரும்பி ரிஜிஸ்தரைப் புரட்டினான். கடிகாரம் பார்த்து, "11 a.m. காந்திமதி வெளியே போகிறார்- தனியே- எச்சரிக்கப்பட்டார்" என்று குறித்தான்.

ஏதோ நினைத்துக் கொண்டவன் போல், முதல் நாள் பக்கத்தைப் புரட்டினான். "3 p.m காந்திமதியைப் பார்க்க கல்லூரி சிநேகிதி."

"மந்திரி விரும்பினா ஒண்ணும் ஒண்ணும் இரண்டுன்னு முடிவுக்கு வரட்டும். ரிஜிஸ்தரைக் கேட்டா கொடுத்துட்டுப் போறேன்" என்று முணு முணுத்துக் கொண்டான்.

நளினி இன்னொரு நாள் லீவு போட்டாள். "ரொம்ப ஸாரி பாஸ். என் ஹஸ்பிக்கு பயங்கர ஜுரம். மலேரியாவா, டைஃபாய் டான்னு டெஸ்ட் பண் ணணும். நாளைக்கு



நிச்சயம் வந்துடறேன்."

"பார்த்துக்கிட்டு வாங்க" என்றார் பரிவுடன்.

நகம் கடிக்காமல் காத்திருந்தார்கள். ஒவ்வொருமுறை ஃபோன் ஒலித்த போதும் உடல்கள் முறுக்கேறி, உள்ளங்கள் டென்ஷனாயின. சாரமற்ற மூன்று ஃபோன்கால்களுக்குப் பிறகு, "நளினி இருக்காங்களா?"

தேகம் முழுதும் ஜிவ்வென்று சூடேற, "நான்தான், நான்தான்; ஆபீஸுக்கு லீவு போட்டுட்டு உங்க ஃபோனுக்காகத்தான் காத்திருக்கேன்."

"நீங்க கேட்டுக்கிட்ட மாதிரியே வெளியே வந்து பப்ளிக் பூத்லேருந்து பேசறேன். இதில் ஃபோன் டாப்பிங் இல்லாட்டாலும் வேற ஆபத்து இருக்கு. வழக்கத்துக்கு மாறா நான் தனியே வெளியே போறதை செக்யூரிடிலே நோட் பண்ணியிருக்காங்க. மந்திரிக்கு ரிப்போர்ட் போச்சுன்னா என் கதி என்ன ஆகுமோ?"

"ஸோ ஸாரி... விஷயம் ஏதாச்சும் தெரிய வந்துதா? தெரிஞ்சிருக்கும். அதனால்தானே ஃபோன் பண்றீங்க."

"ஆமா, இன்னிக்கு மக்கள் கட்சி பொதுக்குழு கூட்டம் நடக்குது. முதல்ல குளோஸ்ட் டோர் மீட்டிங்; அப்புறம் பிரஸ் கான்ஃபரன்ஸ்; கடைசியா பொதுக் கூட்டம். பொதுக் கூட்டத்துக்கு, முன் வரிசைகள் சிலவற்றை ரிஸர்வ் பண்ணி, இன்விடேஷன் அனுப்பியிருக்காங்க. அதுல ஐந்தாறு இன்விடேஷன்கள், இவரோட பெட்ரூம்ல டிரெஸ்ஸிங் டேபிள் டிராயரில் கிடைச்சுது. எல்லாமே 'I'ரோ."

"ஞாபகம் வருது. பேப்பர்ல பார்த்தேன். புவனேசுவரி கல்யாண மண்டபத்திலதானே? 'I'ரோ இல்லியா? தாங்க்ஸ்!"

"முழு விவரமும் கேட்டுக்க. அதே டிராயர்ல ஒரு இங்க் பேடும், ரெண்டு ரப்பர் ஸ்டாம்பும் இருந்துச்சு. ஒண்ணுல 'V'என்ற

கி. ராஜேந்திரன்



எழுத்து இன்னொண்ணுல 'P'என்ற எழுத்து. ரெண்டு ரப்பர் ஸ்டாம்ப் தயாரிச்சதுக்கு இருபத்தி நாலு ரூபா பில். பாக்கிய நீயே யூகிச்சுக்கலாம். வைக்கட்டுமா? சீக்கிரமா ஷாப்பிங் முடிச்சுக்கிட்டு நான் திரும்பணும். ஞாபகமா ரெண்டு பிரா, ஒரு பாக் ஸானிடரி நாப்கின்ஸ் வாங்கிட்டுப் போகணும். பை!''

யோசனையுடன் ரிஸீவரை இறக்கி, ஏராள கேள்விக்குறி தேக்கி நின்ற கணவனுக்கு விளக்கினாள்: "எதிர்க்கட்சிக் கூட்டத்துக்கான இன்விடேஷன்கள் சிலவற்றை சம்பாதிச்சு, I வரிசையை VIPவரிசையா ரெண்டு அழைப்பிதழ்கள்ல மாற்றி, அடியாளுங்க கிட்ட கொடுத்து அனுப்பறாரு."

"முன் வரிசைல அவங்க சுலபமா புகுந்து மக்கள் கட்சித் தலைவரைத் தீர்த்துக் கட்டப் போறாங்க!'' பரபரப்பாக நாளிதழ் புரட்டி நேரங்கள் பார்த்துக் கொண்டான். 'மாலை 4.30-பத்திரிகையாளர் சந்திப்பு. 5.30-பொதுக்கூட்டம்."

**நா**லு மணிக்கு முன்பே யூனிஃபார்ம் அணிந்து நளினிக்குத் தைரியம் சொல்லி விட்டு புல்லெட்டை நெருங்கும்போது கறுப்புப் பூனை குறுக்கே போனது. "சை! நம்பிக்கை இல்லாதவனுக்குக் கூட சகுன நம்பிக்கை வந்துடும்'' என்று எண்ணினான். "சிங்கம், புலி, சிறுத்தை எல்லாமே பூனைக் குடும்பம்தான்'' என்று பள்ளிக் கூடத்தில் படித்தது நினைவு வந்தது. "விலங்கினங்கள் தேவலாம்; நம்மோட பூனைகள் ராஜ்யத்துல புலி எது, பூனை எதுன்னே புரியலே'' என்று உள்ளூரச் சிரித்துக் கொண்டு புறப்பட்டு, பன்னிரண்டு நிமிஷங்களில் புவனேசுவரி மண்டபத்தில் இருந்தான்.

நளினியின் ஆட்சேபணைகள் அவனிடம் செல்லுபடியாக வில்லை. " என்னை சஸ் பெண்ட் செய்திருப்பது இன்னும் யாருக்கும் தெரியாது. நான் பத்திரிகைக் காரங்களுக்கு, பதில் ஸ்டேட்மெண்ட் எதுவும் தரு வேன்கிறதால அடக்கி வாசிக்கிறாங்க. நான் ஸ்பாட்ல இருந்தா டிபார்ட் மெண்ட் ஆளுங்க உள்பட யாரும் சந்தேகிக் கப் போறதில்லே..."

**அ**வன் கணக்கு தப்பாயிற்று. அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த இருவரும் மண்படத்துக்குள் நுழைந்த அதே நேரத்தில் டெபுடி கமிஷ்னர் அலுவலகத்தில் அவனுடன் பணியாற்றிய சகா, "மிஸ்டர்! வாட் ஆர் யூ டூயிங் ஹியர்?'' என்றான்.

"டியூட்டில இருக்கேன்."

"ஐ ஆம் இன்சார்ஜ் ஹியர், யூ கிளியர் அவுட்."

அந்த இருவரும் வி.ஐ.பி. வரிசைக்குள் புகுந்தது கடைக்கண் பார்வையில் நேர்ந்தது.

"உன் டியூடிய நீ பாரு; என் கடமையை நான் செய்யறேன்'' என்று மேடை நோக்கி நகர்ந்தான்.

அவனை முந்திக் கொண்டு, "உனக்கு இந்த யூனிஃபார்ம் போடவே உரிமை இல்லே; எந்த அடிப்படையிலே நீ டியூட்டி பார்க்கறே?''

மக்கள் கட்சி தலைவர் மேடை ஏறி, கை கூப்பி தலைக்கு மேல் உயர்த்திட, கரகோஷம் செவி பிளந்தது.

"இந்த நாட்டின் ஒரு நேர்மையான குடிமகன்கிற முறையிலே." ராஜ்கமல் வேறு வழியின்றி சகாவை ஒதுக்கி விட்டு விரைந்தான்.

"வாழ்க'' கோஷங்களுடன் ஆளும் கட்சித் தலைவரும் அவர் ஆட்சியும் ஒழியவும் கோஷங்கள் எழ, எல்லோரும் உணர்ச்சி வசப்பட, ஒதுக்கப்பட்டவன் கோபம் கொண்டு, ராஜ்கமல் நெஞ்சில் கரம் பதித்துத் தடுத்து நிறுத்தி, "ஐ ஸே கெட் அவுட்!''

விண்ட் சீட்டர் ஜாக்கெட்டின் ஜிப் இறக்கி அடியாட்களின் இரு வலக்கரங்கள் உள்ளே நுழைய,

ராஜ்கமல் தன் சகாவை முரட்டுத் தனமாகத் தள்ளித் தடாலென விழச் செய்து விட்டுப் பாய்ந்தான். கூடவே இடைரிவால்வர் கரத்துக்கு இடம்மாறி இயங்க, "டுமீல்! டுமீல்!''

இருவரும் தொடையில் அடிபட்டுச் சரிய, கூட்டத்தில் ஒரே களேபரம்... பயத்திலே எழுந்த வீல்... நாற்காலிகள் கவிழும் படார்... வியப்பிலே எழுந்த ஆ... பீதியிலே ஐயோ... தடதடவென்று மக்கள் வாசலை நோக்கித் தப்பி ஓட, அந்தக் கும்பலில் மிதி பட்டு நசுங்கிய சகா... மேலதிகாரியின் உத்தரவு இல்லாததால் செயலற்று நின்ற போலீஸ்...

வேதனையில் துடித்த இருவரிடமிருந்தும் துப்பாக்கிகளைப் பறிப்பது ராஜ்கமலுக்கு எளிதாக இருந்தது.

தலைவர் நன்றியோடு பார்த்துக் கை கூப்பியபோது அவர் கரங்கள் அவரையும் மீறி நடுங்கத்தான் செய்தன.

"**ம**க்கள் கட்சித் தலைவரைக் கொலை செய்ய முயற்சி: விடுதலைப் புலிகள் பிடி பட்டனர்!''

காலை நாளிதழில் தலைப்புச் செய்தி பார்த்து, "அக்கிரமம்'' என்றான் ராஜ்கமல்.

"அநியாயத்துக்குத் துணைபோகத்தானே அதிராம பட்டினத்திலிருந்து ஆரம்பித்து அமைச்சர் வீடுவரை சாட்சியங்களை உருவாக்கினாங்க'' என்றாள் நளினி, காப்பி கோப்பையை எதிரே வைத்து.




கலைந்த தலையும் நெகிழ்ந்த நைட்டியு மாக இருந்த அவளை கண்களாலேயே கடித்துத் தின்றான். விரல்கள் விளையாட ஆரம்பிக்குமுன் டெபுடி கமிஷ்னர் ஃபோன் செய்தார். "உன் ஸஸ்பென்ஷன் உத்தரவை வாபஸ் வாங்கியாச்சு; டியூடில சேரு.!!"

"யெஸ்ஸார்" என்றான். "ராஜினாமா செய்யற உத்தேசமில்லே. உள்ளிருந்தபடியே தர்ம நியாயத்துக்குப் போராடுவேன்."

"பிபிப்பிபீ! அறப்போர்!" என்று முழங்கி கிண்டலடித்தார். "தமிழ்நாடு என்ன, இந்தியா என்ன? உலகத்தையே திருத்திப் பிடுவே!"

"எனக்கு நம்பிக்கை இருக்கு ஸார்."

"நம்பு நம்பு! ரெண்டு பேரும் ஒரு நாள் கூட ஜெயிலுக்குப் போகப் போறதில்லே. ஆஸ்பத்திரியிலே இருக்காங்க. பெய்ல்ல வருவாங்க. பிராஸிகியூஷன், கேஸ் நடத்தாம ஆறப்போடும்."

"தெரியும்; தப்பித்தவறி ஜெயிலுக்குப் போனாலும் 'எஸ்கேப்' ஆயிருவாங்க."

"ஏராளமா பணம் பண்ணிட்டாங்க. உனக்கு மட்டும் நம்பிக்கை தளராது.!"

ஒரு மாதம் சென்று ராஜரத்தினம் ஸ்டேடியத்தில் போலீஸ் தடகள விளை யாட்டுக்கள் நடந்து முடிந்து, பிற்பகலில் வீரதீர பராக்கிரமங்களுக்காக எட்டு பேருக்கு மெடல் குத்தினார் ஸி.எம். கான்ஸ்டபிள் முதல் எஸ்.பி.வரை பலரும் இடம் பெற்ற அந்தப் பட்டியலில் கடைசி: ராஜ்கமல்.

"நீதான் ராஜ்கமலா?" என்றார் ஸி.எம். அழுத்தமாக. மெடல் குத்தும்போதே அவர் பற்களை நறநறவென்று கடிப்பது ராஜ் கமலுக்குக் கேட்டது.

"ஆமாம் நான்தான்" என்றான் கம்பீர மாக.

அன்று மாலைப் பத்திரிகையில் முதல் பக்கத்திலேயே "வீர சாகசத்துக்கு விருது" என்ற தலைப்பின் கீழ் ராஜ்கமலுக்கு ஸி.எம். மெடல் குத்துகிற படம் பிரசுரமாகியிருந்தது.

அதற்கு அடியிலே மனைவியைப் பறி கொடுத்த மந்திரி மாரிசாமி கண்கலங்கி நிற்க, காந்திமதி உடலுக்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்திக் கொண்டிருந்தார், முதல்வர்!

'சமையலறை காஸ் விபத்தில் கருகி இறந்து போன' காந்திமதியின் முகம் மட்டும் என்றுமில்லாத சோபையுடன் படத்தில் ஒளிர்வது போல் ராஜ்கமலின் நீர்த்திரை யிட்ட கண்களுக்குத் தோன்றியது.

"அது தியாகத்தின் அழகுங்க" என்று சொல்லிவிட்டு, கணவன் மார்பில் முகம் புதைத்து விம்மி விம்மி அழுதாள் நளினி.

(கதை முடிந்தது; கதை மட்டும்!)

# அன்னப் பறவை

ஓர் அழகிய கவிதை முடிவுறுவது போல் அவள் மரணம் நிகழ்ந்தது.

பூர்ண சந்திரன் தேய்பிறைப் பருவமின்றி, முழுசாய் அப்படியே மறைந்தது போல், முன்தின இரவு தோழிகளுக்காக முகத்தில் மலர்ந்த புன்னகை மாறாமல், அவள் மரணம் நிகழ்ந்தது.

'வாழ்க்கையில் அழுவதற்கு நேரமில்லை. புகார் சொல்லிப் புலம்பிக் கொண்டிருக்க நேரமில்லை. மனசில் குப்பை சேர்த்துக் கொண்டே போனால், அதைப் பெருக்கிச் சுத்தம் செய்ய நேரமில்லை' என்று சொன்ன தற்கேற்ப வாழ்ந்த குப்பையற்ற வாழ்க்கை. அந்த நிர்மலமான முகத்தில் பிரதிபலித்தது. அதனால்தானோ என்னவோ ஐம்பத்திரண்டு வயதிலும் நரை சுருக்கமின்றி இளமை பொலிய ஒரு தேவதை மரணமுற்றது போல் அவள் மரணம் நிகழ்ந்தது.

கல்லூரியின் சக பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள், என் போன்ற மாணவ மாணவிகள் மேடத்தின் வீட்டில் கூடியிருந்தோம். கல்லூரி முதல்வர் கூட ஒரு ரோஜா மாலையைக் காலடியில் வைத்து கணநேரம் மௌனமாய்த் தலைகுனிந்து நின்று விட்டுப் போனார். தமிழ்த்துறைப் பேராசிரியை குழலி மேடம் என்றால் எல்லாருக்கும் அத்தனை மரியாதை. எனக்கும்தான். அதாவது, இப்போது. நான்கு மாதம் முன்பு வரையில் கூட இல்லை.

நான்கு மாதம் முன்பு...

என்னுடன் படிக்கும் மாணவியோடு நெருக்கமாக இருந்த நேரம், கல்லூரி காம்பவுண்டு மூலையின் புளியமர ஒதுக்கத்தில் அநாவசியமாகக் குழலி மேடத்தின் பார்வை குறுக்கிட்டது. காதைப் பிடித்து எழுப்பி நிறுத்தாத குறைதான். மாணவப் பருவத்தின் ஒழுக்கத் தேவையைப் பற்றி ஒரு குட்டி லெக்சரே அடித்து விட்டார்.

கடைசியில் பொறுமையிழந்து என் கூட்டாளி ஏளனமாய்ச் சொன்னாள் :

"கிளாஸில் எங்களுக்குத் தமிழ் இலக்கியம் சொல்லிக் கொடுக்கறீங்களே! அப்போ இலக்கிய மரபுப்படி களவியல் காதல் பண்றவங்க மேல ஏன் கோபம் வருது மேடம்? உங்க மகன் இப்படிப் பண்ணினால் கூட கோபம் வருமா?"

"ஒழுக்கம்னா கிண்டலாயிருக்காம்மா உனக்கு?" என்றார் மேடம்.

"புருஷனை விவாகரத்து பண்ணவங்களெல்லாம் எங்களுக்கு ஒழுக்கம் பத்தி உபதேசம் செய்ய வேணாம்" - இது நான்.

மேடம் முகத்தில் மாற்றமே இல்லை. அந்த அமைதி மனசைப் பளாரென்று அறைவது போல் இருந்தது. சொன்னார் :

"கல்யாணம் செய்துக்கிற எந்தப் பெண்ணும் விவாகரத்தை நினைச்சுக்கிட்டுச் செய்துக்கறதில்லேப்பா! ஆயுசுக்கும் புருஷன் கூட அழகா குடித்தனம் நடத்தணும்கிற எதிர்பார்ப்போடதான் செய்துக்கறா. விட்டுக் கொடுத்து வாழத்தான் நினைக்கறா. அப்படியும் கடைசியில் விவாகரத்து வரைக்கும் போகணும்னா அவள் என்னவெல்லாம் மனவேதனைப்பட்டிருக்கணும்? விட்டுக் கொடுக்கறதை அன்புக்காகச் செய்யலாம். தீமைக்கு விட்டுக் கொடுக்கலாமா? விவாகரத்து செய்த பெண் ஒழுக்கங் கெட்டவளாய் இருப்பாள்னு உங்களைப் போன்ற இளையவர்கள் கூட நினைக்கறது ரொம்ப வருத்தமாயிருக்கு. கட்டின புருஷனும் உயிருக்குயிராய் நினைச்ச சிநேகிதியும் சேர்ந்து தனக்கு துரோகம் செய்யறது தெரியும் போது, அந்தத் திருமணத்திலேர்ந்து வெளியே வருகிற பெண் ஒழுக்கம்



கெட்டவளில்லை. ஒழுக்கத்துக்கு ரொம்ப உயர்வான மதிப்புக் கொடுக்கிறவள்."

சூரிய வெளிச்சம் மேலே விழுந்ததாலோ என்னவோ, குழலி மேடம் அந்தக்கணம் பொன் போல் தகதகவென்று ஒளிர்ந்தாள். பேச்சு ஏதோ ஒரு சத்திய ஆழத்திலிருந்து வருவது போல் கணீரென்று ஒலித்தது. முகமும் தோற்றமும் காட்டிய கம்பீரத்தில் அவர் அடைந்திருநத கசந்த அனுபவத்தின் நிழல் கூடத் தெரியவில்லை.

எங்கள் குனிந்த தலைகள் நிமிர முடிந்த போது சொன்னேன் :

"ஸாரி மேடம். எங்களுக்குத் தெரியாது... நீங்க எப்படி இன்னும் இத்தனை அமைதியாய், இத்தனை இயல்பாய் எல்லோரோடும் நட்போடு பழகிக்கிட்டு..."

மேடம் முகத்தில் புன்னகை எழுந்தது. "அந்தத் திருமணம் முடிஞ்சு போன அடுத்த கணமே அதை என் மனசிலேர்ந்து ஒதுக்கிட்டேன். கசந்த நினைவுகள் குப்பை மாதிரி.



அதையெல்லாம் ஏன் மனசில் போட்டு அடைச்சுக்கணும்? வாழ்க்கையில் நல்ல விஷயங்கள் எத்தனையோ இல்லையா? அதையெல்லாம் இறுக்கமாய் நினைவில் முடி போட்டு வச்சுக்கலாமே! அப்போ மனசு பூந் தோட்டமாய் இருக்கும், குப்பைத் தொட்டியாய் இருக்காது."

அம்மா இறந்து கிடக்கிறாள். என் அம்மா. இனி வர மாட்டாள்.

பட்டுப் புடைவையும் பூமாலையுமாய் அம்மா படுத்திருக்கிறாள். நான் ஈர வேட்டியுடன் பிரமை கொண்டு நிற்கிறேன்.







## இவர் தொடர்ந்த வழக்கு!

'ருடாலி' படத்தில் முக்கிய கதாபாத்திரமொன்றில் நடித்திருக்கிறார் ராக்கி. இவர் பம்பாய் ஹைகோர்ட்டில் வழக்குத் தொடர்ந்தார் : படத்தில் டிம்பிள் நடித்த கதாபாத்திரம் போலவே தன்னுடையதும் முக்கியமான கதாபாத்திரம் என்றும், ஆனால் இயக்குனர் தான் நடித்த பகுதிகளை மூன்றில் ஒரு பங்காக வெட்டிச் சிதைத்து, தன் கதாபாத்திரத்தையே உருத் தெரியாமல் செய்து, டிம்பிளுக்கு மட்டும் முக்கியத்துவம் அளித்துத் தனக்கு அநியாயம் செய்துவிட்டார் என்றும், எனவே அப்படத்தைத் தடை செய்ய வேண்டும் என்றும் வழக்கு.

ஆனால், பம்பாய் உயர் நீதிமன்றம் ராக்கியின் வாதத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. 'படம் வெளியாவதற்கு முன்பே அவர் முறையிட்டிருக்க வேண்டும். இது வரை ஏன் சும்மா இருந்தார்?' எனக் கேட்டு வழக்கைத் தள்ளுபடி செய்துவிட்டது!

ஆதாரம் : சண்டே
தகவல் : ஆலன்

---

என் அம்மா இனி [illegible].

நேற்றிரவு "செல்வம் கண்ணா, [illegible]க்கம் வந்தா படுத்துத் தூங்கிப் போறேன். நீ படிச்சு முடிச்சப்புறம் ஞாபகமா பாலைக் குடிச்சிட்டுப் படுத்துக்க, என்ன?" என்று என் சுருட்டை முடியைக் கோதி, முதுகைத் தட்டிக் கொடுத்துவிட்டு, வழக்கம் போல் படுக்கப் போனாள். சற்று சீக்கிரமே படுக்கப் போனதுதான் வித்தியாசம். சாதாரணமாய் நள்ளிரவு வரை கூட ஏதாவது தமிழ் அல்லது ஆங்கில இலக்கிய நூல் படித்துக் கொண்டிருப்பவள் நேற்றிரவு ஒன்பது மணிக்கே படுத்து விட்டாள். மாலையில் சில சிநேகிதிகள் வந்திருந்தார்கள். அவர்களை வரவேற்ற களைப்பாயிருக்குமென்று நினைத்தேன். வேறேதாவது அசௌகரியம் உடம்பில் தோன்றியதா? நோய் என்று படுத்தவளே இல்லை. அழவைக்கும் நோய்களெல்லாம் கிட்டே வருமுன்பே அவள் சிரிப்பைக் கண்டு சிரித்துக் கொண்டே விலகிவிடும். இப்போதும் அம்மாவின் முகத்தில் சிரிப்பு மாறவில்லை. ஆனால் இரவு படுத்தவள் காலையில் கண்விழிக்கவில்லை.

மாரடைப்பு என்று டாக்டர் மரணச் சான்றிதழ் எழுதினார். இன்னதென்று புரியாத போது வேறென்ன சொல்ல முடியும்?

எனக்கு நினைவு தெரிந்த நாள் முதல் உடனிருந்தவள் என் அம்மா. நான் குழந்தையாய் இருந்த போது, என் வலது கன்னத்தின் சிறு குழியை மெத்தென்று வருடிய விரல் அம்மாவுடையது. நேற்று வரை 'செல்வம் கண்ணா' என்று கனிவு ததும்ப அழைத்த குரல் அம்மாவுடையது. அன்பு என்ற தத்துவத்தை அவள் நிழலில் நான் அறிந்து கொண்டேன். அம்மா என் உலகம்.

பள்ளி ரிகார்டில் என் தகப்பனார் பெயர் அருணாசலம் என்று கொடுக்கப்பட்டிருந்தது. விவரம் தெரிந்த பருவத்தில் "அப்பா எங்கே?" என்று நான் கேட்ட போது, 'மதுரையில் இருக்கிறார்' என்றாள். சொந்தமாய் எலெக்ட்ரானிக் பொருட்கள் வியாபாரம் நடத்துகிறார் என்றாள். நான் இன்னும் வளர்ந்தபின், தங்களுக்கு விவாகரத்து ஆகிவிட்ட தகவலைச் சொன்னாள். அதற்கான காரணத்தைச் சொன்னாள்.

அந்த மனிதனைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை கூட எனக்கு ஏற்படவில்லை. வண்டார்குழலி என்ற உன்னதமான உயிருக்குத் துரோகம் இழைக்கக்கூடியவன் என் அன்புக்கும் அக்கறைக்கும் பாத்திரமானவனல்ல.

அம்மாவே என் அப்பா, என் ஆசான். அழுக்குகளுக்கு மேலே மனசைத் தூக்கி நிறுத்திக் கொள்ள வேண்டும் என்ற மகாமந்திரத்தைக் கற்பித்த ஆசான். இன்று இருபத்து மூன்று வயதில் காமர்ஸ் பட்டம் முடித்துவிட்டு, ஒரு நல்ல கம்பெனியில் சி.ஏ. பயிற்சியின் இறுதிக் கட்டங்களில் இருக்கிறேனென்றால் எல்லாம் அம்மா தந்த ஊக்குவிப்பு. நாங்கள் நண்பர்கள். அம்மா 'பழந்தமிழ் இலக்கியத்தில் அழகியல் கூறுகள்' என்ற பொருளில் பிஎச்.டி. செய்த போது, அவள் ஆராய்ச்சிக் குறிப்புகளை நான் பல சமயம் தட்டெழுதிக் கொடுத்திருக்கிறேன். கண்ணைக்

கவித்துக் கொண்டு பாடுபடாதே என்று சொல்ல மாட்டாள். கண்ணைக் கவித்துக் கொண்டு பாடுபடுவதில் வெளிப்படும் என் அன்பைப் புரிந்து கொண்டு, அதற்கு மதிப் பளிக்கும் விதமாய் என் தோளை அணைத்துத் தட்டிக் கொடுப்பாள். ஆனால் நான் ஜுரம் என்று படுத்து விட்டால் அந்த சிநேகிதி முழுவதும் தாயாக மாறி, அல்லும் பகலும் என் பக்கம் விட்டு அகலாமல் கவலையுடன் கவனித்துக் கொள்வாள்.

அந்த அன்பு, தோழமை அனைத்தையும் கண்களுக்குள் வைத்து மூடி எடுத்துக் கொண்டு எங்கே போய் விட்டாள் என் அம்மா?

என் நெற்றியில் சரிந்த தலைமுடியை அநிச் சையாய்ப் பின்னே தள்ளி விட்டுக் கொண் டேன்.

என் கண்களை யாரோ துடைத்து விட்ட போதுதான், நான் அழுது கொண்டிருப்பதை உணர்ந்தேன்.

அவள் காலமான செய்திக் குறிப்பை நாளிதழில் படித்தவுடன் அந்தச் சடலத்தை யாவது ஒருமுறை பார்க்க வேண்டும் என்று ஏன் மனசு அடித்துக் கொண்டது? தொழில் சம்பந்தமாய்ச் சென்னையில் ஒருவரை அவ சரமாய்ப் பார்க்க வேண்டுமென்று ரஞ்சனி யிடம் பொய் சொல்லி விட்டு, ஏன் மதுரையி லிருந்து பறந்து வந்திருக்கிறேன்?

டாக்டர் எம். ஆர். வண்டார்குழலி. சென் னைக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியை. அவளேதான். முன்பு உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியப் பணி செய்தவள்தானே? மேலே மேலே முன்னுக்கு வந்து, டாக்டர் பட்டம் வரை எட்டக்கூடிய அநாயாச அறிவு படைத் தவள்தான். என் மனைவியை எனக்குத் தெரி யாதா?

மனைவியல்ல. என்னிடமிருந்து மண விலக்குப் பெற்று விட்டவள். அந்த இனிஷி யல்களில் ஏ ஃபார் அருணாசலம் கிடையாது அவள் மதுரை ராமநாதன் வண்டார்குழலி. ராமநாதனின் மகள். யாருடைய மனைவியும் இல்லை.

அவளை ஏமாற்றிய போது, சுகமாய் இருந் ததா? அவள் ஆருயிர்த் தோழி மீனாவை வச மாக்கிக் கொண்ட போது வெற்றியுணர்வு தோன்றியதா? எத்தனை பெண்கள் வசப்படு கிறார்கள் என்பதை வைத்துத்தான் ஓர் ஆண் தன் வெற்றியைக் கணக்கிடுகிறானா? குழலி அதைப் பொறுத்துக் கொள்ள மறுத்தாள் [illegible]யைப் பெருக்கித் தள்ளுவது போல் என்னை விவாகரத்து செய்தாள்.

அதன்பின் நாளடைவில் எனக்கு ரஞ்சனி யின் நட்புக் கிடைத்தது. அவள் ஐந்து நட்சத் திர சங்கிலித் தொடர் ஓட்டல்களின் சொந்

தக்காரருக்கு ஒரே வாரிசு. இதை விளையாட்டாய் முடிந்து போக விடக் கூடாது என்று தீர்மானித்தேன். அவளை நான் மணந்து கொள்ளப் போவதை அறிந்த போது மீனா வெகுண்டாள்.

"குழலியை ஏமாத்தினீங்க: இப்ப என்னையுமா?"

"உன்னைக் கல்யாணம் செய்துக்கறேன்னு நான் எப்பவானும் சொன்னேனா?"

"இன்னும் ஆறு மாசத்தில் எனக்கொரு குழந்தை பிறந்தால் அதுக்கு அப்பா யார்?"

"இதை நீ என்னோடு பழகறதுக்கு முந்தி யோசிச்சிருக்கணும்."

அவள் சிறிது நேரம் என்னை உற்றுப் பார்த்தாள்.

"நட்புக்கு துரோகம் செஞ்ச எனக்கு இது நல்லா வேண்டியதுதான்."

ஆனால் ஆண்டுகள் ஓட ஓட, வயது ஏற ஏற, உள்ளே ஏதோ ஒன்று உயிர் பெற்று எழுந்து உட்கார்ந்து, 'நான்தாண்டா உன் மனச்சாட்சி' என்று கொத்த ஆரம்பித்தது.

அதனால்தான் இன்று இங்கே பறந்து வந்திருக்கிறேனா? என்னை ஒரு புழுவாய் நோக்கிய பார்வை, இப்போது மூடிக் கிடக்கும் என்ற தைரியத்தில் வந்திருக்கிறேனா? உயிரற்ற சடலத்தைப் பார்ப்பதில் என்ன சாதிக்க முடியும் என்று எண்ணி வந்திருக்கிறேன்? மன்னிப்புக் கேட்கவா? அதற்கு இனி என்ன அர்த்தம்? மன்னிப்புக் கேட்பதென்றால் மீனாவிடமும் கேட்டிருக்க வேண்டாமா? இருபத்தோராண்டுகள் முன் மீனா மூளை கான்ஸர் வந்து இறந்த போது, அவள் உடலைப் பார்க்கக் கூட நான் போகவில்லை. அதை நினைத்து இன்றும் துடிக்கிறேன். அடேயப்பா, இருபத்தோராண்டுகளில்தான் மனச்சாட்சிக்கு எத்தனை வளர்ச்சி!

பிற்பகல் வெயில் தீவிரமாய்த் தகித்தது. குழலியின் வீட்டு வெளி வராந்தாவில் தயங்கி நின்றிருந்தேன். பறைகொட்டும் ஓசை உரத்து வந்தது. பூப்பல்லக்கு தயாராய் இருந்தது. விரைவில் உடலைத் தூக்கி விடுவார்கள். நல்ல கூட்டம். எவ்வளவு 'பாப்புலர்' அவள்! கலகலவென்று பழகி நண்பர்களை ஈர்க்கும் இனிய சுபாவம்.

உள்ளே போய்ச் சடலத்தைப் பார்க்கலாமா? 'நீ யார்?' என்று யாராவது கேட்டால்? ஆனால் இழவுக் கூட்டத்தில் அறிமுகமா கேட்கப் போகிறார்கள்?

உள்ளே சென்றேன். அவள் தரையில் நீட்டிக் கிடந்தாள். மூப்புத் தோன்றியிராத ஐம்பத்திரண்டு வயது யுவதி. மாலையும் கழுத்துமாக, நான் அவளை மணந்த தினம் போல...

எண்ணங்களும் நினைவுகளும் ஒருங்கே கழுத்தை நெரிக்கும் மூச்சுத் திணறலோடு மனம் கனக்க நின்றபோது -

"நீங்க யாரு?"

உதறிக் கொண்டு விழிப்புற்றேன். எதிரே ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி.

"நான்... நான் அவங்க ஊர்க்காரன். தற்செயலாய் விஷயத்தைக் கேட்டு வந்தேன்... அவங்களுக்கு என்ன உடம்பு?"

"உடம்புக்கு ஒண்ணுமில்லை. நேரம் வந்திடிச்சு. வேறென்ன சொல்றது?"

அந்தம்மாள் கண்கள் கலங்கியிருந்தன. சக ஆசிரியையாய் இருக்கலாம்.

"இப்போ... யார் கொள்ளி வைக்கப் போறாங்க?" நான் வைக்கிறேன் என்று கூற நா துடித்தது. இதையாவது அவளுக்கு நான் செய்ய முடிந்தால்!

"அவங்க மகன் செல்வம்தான் இருக்கானே எல்லாம் செய்ய."

"மகனா!"

திக்கென்று அதிர்ந்தேன். குழலிக்கு மகன் ஏது? எங்களுக்குக் குழந்தைகள் கிடையாது. என்னிடமிருந்து விவாகரத்து கோரிய சமயத்திலும் அவள் கருவுற்றிருக்கவில்லை. இரண்டாம் திருமணம் செய்து கொண்டிருப்பாளா?

"குழலிக்கு... மகனா!"

"இருபத்தோரு வருஷம் முந்தி மதுரையிலேர்ந்து இங்கே வந்து குடியேறின போது, கையில் ரெண்டு வயசுக் குழந்தையோடுதான் வந்தாங்களாம். குழலி மேடம் சொல்லியிருக்காங்க."

பிரமை பிடித்தாற்போல் நின்று கொண்டிருந்தேன். மெல்ல மெல்லத்தான் அந்த உடலைத் தாண்டி அறையின் மற்ற அம்சங்கள் மூளையில் பதிந்தன.

பூமாலையும் பட்டுச் சேலையுமாய் உறங்குபவளின் தலைமாட்டில் உடைத்த தேங்காய், ஏற்றிய விளக்கு. அருகில் ஈர வேட்டியுடன் நிற்கும் இளைஞன். அவனுக்கு என் முனைப்பான தாடைகள். என் சுருட்டை முடி. அவ்வப்போது முடியைப் பின்பக்கமாய்த் தள்ளிவிட்டுக் கொள்ளும் என் பழக்கம். இறந்த முகத்தைப் பார்த்து ஏதோ சொல்ல

---

"அந்த ஆள் கின்னஸ் புக்ல பேரு வரணும்னு ரொம்ப ஓவரா நடந்துக்கிறார்..."

"என்ன செய்யறார்?"

"தன்னைத்தானே செருப்பால அடிச்சுக்கிறார்!"

- நியூ பாம்பேஜான்



மான நினைவில் கண்ணீருக்கிடையே லேசாய்ப் புன்னகை செய்த போது, வலது கன்னத்தில் விழுகிற மீனாவின் அழகிய சின்னக் குழி.

ரஞ்சனியை மணந்த அடுத்த ஆண்டு ஏதோ ஒரு குறுகுறுப்பில் மீனாவைத் தேடிப் போய்க் கேட்ட போது -

"முந்தி 'ஆறு மாசத்தில் குழந்தை பிறந்தால்' அப்படின்னியே மீனா, அது உண்மையா?"

அவள் என்னைப் புழுவாய்ப் பார்த்தாள். குழலியின் கண்களிலிருந்த அதே பார்வை.

"அதைப் பத்தி உனக்கென்ன?"

"தெரிஞ்சுக்கலாமேன்னுதான். என் குழந்தையில்லையா?"

"திடீர் ஞானோதயம்!"

"சொல்லேன், ப்ளீஸ்!"

"ஆமாம். பிறந்துது."

"அப்புறம்?"

"அநாதை ஆசிரமத்தில் விட்டுட்டேன்."

"ஏன்?"

"பின்னே? உன் குழந்தைன்னா உன் ரஞ்சனி ஏத்துப்பாளா? இல்லே, நான்தான் வச்சு வளர்க்க முடியுமா?" அவள் குரல் தாழ்ந்தது. "என்னமோ தெரியலே, கொஞ்ச காலமாய் எனக்கு அடிக்கடி பயங்கர தலை நோவு வருது. அப்பப்போ மயக்கம் போட்டு விழறேன். யார் கதி எப்படியோ..."

"சரி சரி, எந்த அநாதை ஆசிரமம்?"

"யு வில் நெவர் ஃபைண்ட் அவுட்!" என்று அவள் சிரித்தாள். முன்பெல்லாம் என்னை மயக்கியிருந்த வலது கன்னத்துக் குழி சாட்டையாய் விழுந்தது.

அந்த இளைஞனை மறுபடியும் பார்த்தேன். மீனா தன் குழந்தையை உண்மையில் எங்கே விட்டாள் என்று புரிந்தது. நாங்கள் செய்த துரோகத்தை ஒதுக்கி விட்டு, மீனாவின்பால் இருந்த இரக்கத்தால் அந்தக் குழந்தையை ஏற்றுக் கொள்ளக் குழலியால் முடிந்திருக்கிறது. அதை ஏற்றுக் கொண்ட பிறகும் மீனா இறக்கும் காலம் வரை இவளும் மதுரையிலேயே இருந்திருக்கிறாள் என்பது இப்போது தெரிகிறது. நோயுற்ற தோழிக்குக் கடைசிவரை தன்னால் இயன்ற உதவிகளைச் செய்வதற்குத் தான் என்பதில் ஐயமில்லை.

அன்னப் பறவை பாலிலுள்ள நீரை ஒதுக்கி விட்டுப் பாலை மட்டும் பருகுமாம்.

சிறிது நேரம் குழலிக்கு முன் தலைகுனிந்தவாறு நின்றேன். பிறகு இன்னொரு முறை அவள் மகனை நெஞ்சார நோக்கினேன். மௌனமாய் வெளியேறினேன்.

சாவு வீட்டிலிருந்து திரும்பும்போது, யாரிடமும் போய் வருகிறேன் என்று சொல்லிக் கொள்ளக் கூடாது.

# ராஜமுத்திரை

தீவிரவாதிகளை ஒழிக்கும் சி.பி.ஐ. ஆபீஸர்தான் ஹீரோ என்பது ஒரு வரிச் சுருக்கம். ஒழிப்பதற்கு சென்ட்டிமென்ட்டலாக ஒரு காரணம் வேண்டுமென்பதால் அப்பா, அம்மா, குழந்தையைக் கொன்றவர்களைப் பழிவாங்கும் நிர்ப்பந்தம்.

படம் ஆர்.கே. செல்வமணியுடையது என்பதால் காட்சிகளில் படுபிரும்மாண்டம். 70 எம்.எம். போதாது. 140 எம்.எம்.என்று புதுசாக ஏதேனும் வந்தால் தேவலை.

[illegible] திஹாரிலிருந்து தப்பிக்கும் தீ.வாதிகள், மெட்ராஸுக்கு (ஓடியேவா?) வருகிறார்கள். சி.பி.ஐ. அருண்பாண்டியன் நெப்போலியனுடன் சேர்ந்து துரத்தோ துரத்தோ துரத்தோ துரத்துகிறார். பாருங்கள். அலுக்கவில்லை.

காரணம் அவ்வப்போது நேரும் அதிர்ச்சித் திருப்பங்கள். உதாரணம்- அடைக்கலம் கொடுத்த முஸ்லிம் மீனவர் குடும்பத்திற்கு தீ.வாதி புனித் இஸார், ட்ரான்ஸிஸ்டர் பாம் பரிசளிப்பது. எதிர்பாராத திடுக். அவ்வண்ணமே அந்த கிளைமேக்ஸ் பரபரப்பு.

குண்டுகளும் சண்டைகளும் அடிக்கடி வெடிப்பதால், ரிலாக்ஸேஷனுக்கு வினிதா அலையஸ் ஏவாள். நடிக்க வேண்டாமா மேடம்? போதாக்குறைக்கு ஒரு பாட்டில் சில்க்.

பிரேமானந்தாவை பரமானந்தாவாக்கி (மன்சூர்) செமத்தியாக உதை தின்ன வைத்திருக்கிறார்கள். போலிச் சாமியார்களைச் சாடும் வசனங்களை செங்கல் சூளையில் உட்கார்ந்து எழுதியிருக்கிறார்கள். (யாருங்க?) தியேட்டரில் பிரத்யேகமாகச் சில விஸில்கள் கேட்கின்றன.

சென்ட்டிமென்ட்டலாகக் கிளைமேக்ஸில் 'டச்' பண்ணும் நெப்போலியனுக்கு இந்தப்படம் நல்ல பிரேக். காதலிக்க மட்டும் வேண்டாமே சார்!

இளையராஜா இருக்கிறார். இன்ன பிறரும் இருக்கிறார்கள்.

ஒருத்தரை மட்டும் ஸ்பெஷலாகப் பாராட்டியாக வேண்டும். ஒளிப்பதிவாளர் பன்னீர்செல்வம். சமீபகாலத்தில் இத்தனை லாகவமாக, புதுமையாக, நவீனமாகக் கேமராவைக் கையாளுவதில் தன்னிகரில்லாதவராகத் தெரிகிறார். ஸ்பெஷல் எஃபக்ட்களும், கம்ப்யூட்டர் இசையும் தரமுடியாத 'த்ரில்' உணர்வுகளைத் தமது மாறுபட்ட 'லைட்டிங்' மூலமே கொண்டு வருகிறார். 'சேஸிங்' காட்சிகளில் அருண்பாண்டியனல்ல; பன்னீரே ஹீரோவாகிறார்.

**— பா. ராகவன்**

"Espionage is like roller skating, you partly go where you want to and partly where the damned thing takes you!"

S.N.M.ABDI

# 1

**பத்மா ரவிசங்கர்**

**புது டில்லி, டிசம்பர் 19, 1994**

இந்திய உளவுத் துறையின் ஏஸ் ஏஜண்ட் சூர்யாவிற்கு அவசர அழைப்பு வந்தபோது காலையில் கடும் குளிரில் டில்லி வெடவெடத்தது.

சூர்யாவிற்கு 32 வயது. திடகாத்திரன். மனம் மயக்கும் ஸ்திரமான புன்னகை தவழும் வசீகர முகம். கூரிய பார்வை; மூளை. அடாவடித் தடாலடி ஸ்பை. பார்க்கிங்கிலிருந்து முகப்பிற்கு வந்தான். 'புண்ணாக்கு வியாபாரம்' என்பது போன்ற அபத்த விளம்பர அழுக்குப் பலகை தாங்கிய சாதாரண கட்டடம்தான் அது.

உள்ளேதான் அத்தனை அசாதாரணங்களும்! அவசர டெலக்ஸ்கள், கம்ப்யூட்டர்கள், சென்சிடிவ் ரிசீவர்கள், பல வண்ணப் பொத்தான்கள், இன்ன பிற ஹைடெக் களேபரங்கள் என்று இந்திய இன்டலிஜென்சின் நவீன நரம்பு மையம்!

அதன் மதிப்பு மிகு தலைவர் ஆத்மாவிற்கு ஊடுருவும் பார்வை; நானாவித டோஸியர் விவரங்கள் பொதிந்த அகன்ற நெற்றி. துறையின் பெருமிதச் சொத்து அவர்.

அவர் ஒரு பானத்தை இரு கோப்பைகளில் வார்த்தவாறு, "அசகாய சூரன் சூர்யாவிற்காக அலுவலக விதி தளர்த்தப்படுகிறது!" என்று கண்சிமிட்டினார்.

"எப்போதும் எதிரி தேசம் மண் கவ்வ!" என்று டோஸ்ட் செய்துவிட்டுப் பருகினர்.

"ஓர் அவசர வேலை மகனே! உடனே நீ சென்னை சென்று ஒரு விஞ்ஞானிக்குப் பாதுகாப்புச் செய்ய வேண்டும்."

"ஆசாமி யார் பாஸ்?"

"ஸ்பேஸ் சைன்டிஸ்ட் ப்ரகாஷ்ராவ்!"

சூர்யா சுத்தமாக அதிர்ந்து, "வ்வாட்!" நம்பாமல், "எங்கே... மறுபடி சொல்லுங்கள்" என்றான்.

"நம் விண்வெளி ஆராய்ச்சி விஞ்ஞானி ப்ரகாஷ் ராவ்."

தன் தலைவர் ஆத்மாவிற்கு நட்டு ஏதும் கழன்று விட்டதோ என்று வினோதமாகப் பார்த்தான். கார் விபத்தில் சிக்கிய ப்ரகாஷ் ராவ் முகம், உடல் முழுதும் கட்டுக்களுடன் கோமா நிலையில் புது டில்லி ஆஸ்பத்திரி ஒன்றில் சிகிச்சை பெற்று வர... என்ன உளறல் இது!

ஆத்மா நமுட்டுச் சிரிப்புடன், "ஹும்.. நீ என்ன... உலகத்தையே குழப்பி வைத்திருக்கிறேன்!"

"சஸ்பென்சில் மண்டை வெடிக்கிறது பாஸ்."

"நான் சொல்லப் போவது டாப் சீக்ரட் சூர்யா. விஞ்ஞானி சென்னையில் தனிமையில் அதி ரகசியமாக அதி நவீன ராக்கெட்-பெயர் ஊஷ்க்திரா- பற்றிய ஆராய்ச்சியில் இருக்கிறார். அடுத்த நூற்றாண்டின் நவீனம் அது! மிக ரகசியமாக வைக்க விரும்பியது அரசு. எனவேதான் அந்த விபத்தை 'செட்டப்' செய்தேன்!"

"என்னது... செட்டப்பா!" வாய் பிளந்தான்.

"விபத்தில் நொறுங்கியது அவர் கார்தான். அடையா

ளம் மறைத்து, முகம் முழுதும் கட்டுக்களு டன் 'விஞ்ஞானியாக' ஒருவன்; அதுவும் கோமா நிலையில். இடையூறின்றி உலகம் அறியாமல் ஆராய்ச்சி தொடரப் போதாதா இந்த ஏற்பாடு?"

"ப்ரில்லியண்ட் பாஸ்! ராக்கெட் ரகசியங்கள் அம்பலமாகும் சமீபகாலச் சூழ்நிலையில் இந்த தந்திரம் அவசியம்தான்."

"அவருக்குப் பாதுகாப்பும் அவசியம் என்று உணர்கிறேன். ஓசைப்படாமல் நடக்கும் ரிசர்ச்சிற்கு ஒரு பாதுகாப்புப் படை வைத்து நாமே சங்கை ஊதிக் கெடுத்துவிடக் கூடாது! உன் போல் தேர்ந்தவன் ஒருவன் கண்காணித்து டிஸ்க்ரீட்டாகப் பாதுகாப்பு செய்தால் போதும் என நினைக்கிறேன்."

பெருமிதமுடன் ஆமோதித்தான்.

"சைன்டிஸ்ட் ப்ரகாஷ் ப்ராஜக்ட் ஏறக்குறைய முடிவடையும் தருவாயில். உலகத்திற்கு, முக்கியமாக பாகிஸ்தான் மூக்கு வியர்க்குமுன்- விஞ்ஞானியைக் கவனமுடன் பாதுகாத்து, ப்ராஜக்ட் முடிந்ததும் அதன் ஃபைலை என்னிடம் நீ ஒப்படைக்க வேண்டும். புரிந்ததா? சென்னை சென்றதும் நம் கிளைத் தலைமை அதிகாரி விஸ்வத்திற்குப் பிரத்யேக போனில் தகவல் மட்டும் அளித்து விடு. உதவிக்கு நம் துறை ஆசாமிகள் கூட வேண்டாம்; நம் ஒற்றில் ஓட்டை இருக்கலாம். அவசியமின்றிப் போலீஸ் துணை நாடாதே; எந்தப் புற்றில் எந்தப் பாம்போ...! காதும் காதும் வைத்தாற்போல் காரியம் முடிந்துவிட வேண்டும், என்ன?"

"டன் பாஸ்! அது என்ன வினோதமாக ஹஷ்த்திரா?"

"ராக்கெட் HUSH HUSH ரகசியம் என்பதால் 'அஸ்த்திரம்' ஹஷ்த்திரா ஆகியது சூர்யா!"

ஆத்மா குறும்பாகச் சிரித்தார்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?"

"நம் வயதான் விஞ்ஞானி சற்றுப் பொக்கை வாயாகையால் அஸ்த்திராவை ஹஷ்த்திரா என்று உச்சரிக்கிறார் மகனே!"

உளவுக் கிழவனுக்கு என்ன திமிர்! விரலில் துப்பாக்கி அமைத்து ஆத்மாவை நோக்கிச் சுட்டான் சூர்யா.

அன்று மாலையே சூர்யா சென்னைக்குக் கிளம்பினான். அவன் சில முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுத்திருந்தான். ஏனெனில் சூர்யா என்பவன் உளவுத் துறையின் தூண்; வலையிலிருந்து நழுவும் நரி மூளை எத்தன்; எதிரிகளுக்கு நிரந்தரத் தலைவலி. அவனைக் கண்காணிக்க, முதுகில்



குத்த, அழித்துவிடப் பலர் துடிப்புடன் காத் திருக்கிறார்கள். மாலையில் மாறியிருந்தான் சூர்யா:

ஒட்டுத் தாடி. பொருந்தாத முட்டை வடிவக் கண்ணாடி. நெற்றி வரை மறைத்த தொப்பி. வேறொரு பெயரில் விமான டிக்கட் பதிவு. எப்போதும்... எப்போதும் எச்சரிக்கை.

தோளில் ஒரு லெதர் பேக் தவிர்த்து யாதொரு லக்கேஜூம் இல்லாமல் விமான நிலையத்திற்குக் கிளம்பினான். தன் காரைத் தவிர்த்துவிட்டு, மூன்று வாடகை வண்டிகள் மாற்றிப் பயணித்தான்.

எவரும் பின்பற்றவில்லை என்பது உறுதி யானதும் திருப்தியானான் சூர்யா.

ஆனால் அவன் கண்ணுக்கெட்டாத தொலைவில் பைனாகுலரில் ஒரு ஜோடி வெறித்த விரோத விழிகள் அவனைக் கவனித்துக் கொண்டிருந்தன!

**சென்னை, டிசம்பர் 19, 1994**

சென்னை விமான நிலையத்தில் சூர்யா கால் பதித்தபோது இரவு 7:30. சென்னை வியர்ப்பதில் வியந்தான். வாசலில் ஒரு டாக்ஸி தேர்ந்தெடுத்து அமர்த்திக் கொண் டான்.

கெச்சலாக இருந்த டிரைவர் "எங்கே சார்?" என்றான். இந்தியாவின் பல நகரங் கள், மற்றும் அண்டை நாடுகளின் 'பலான' நகரங்களின் 'டோப்போகிராஃபி' சூர்யா வுக்கு அத்துப்படி. சென்னை விதிவிலக் கல்ல.

"நான் மஃப்டி போலீஸ் அதிகாரி! சொல் கிறபடி கேட்கணும், என்ன?" என்றான் கண் டிப்பான குரலில்! "முதலில் பாரீஸ் கார்னர் போகலாம்."

டிரங்க் ரோடில் டாக்ஸி சீராகச் சென் றது. சாலையில் சோடியம் வேப்பர் விளக்கு களின் அபாரப் பகல் முயற்சி. இடைவெளி இல்லாமல் சுவரொட்டிகள்; கட்- அவுட்டு கள். அனைத்திலும் பிரதானமாக ஒரு முகம். புன்னகைத்தான். 'சென்னை சென்றதும் ரொம்பத் தாழப் பறக்காதே ஜோ! கட்- அவுட்டுகள் ஜாக்கிரதை!' என்று ஏர் ஹோஸ்டஸ் சிரித்தது ஞாபகம் வந்தது.

இரண்டு நிமிடம் சென்றதும் அவனுக் குள் சிவப்பு விளக்கு திக்கென்று விழித்துக் கொண்டது. பின்னால் தொலைவில் ஒரு சிவப்பு மாருதி விடாமல் பின்பற்றுவதைக் கவனித்தான்!

"கொஞ்சம் வேகத்தைக் குறை."

சிவப்பு மாருதியும் வேகம் குறைவதைக் கவனித்தான். ஆபத்து. பின்பற்றும் நிழல் மகனைத் தொலைத்தே ஆக வேண்டும்

காரை நிறுத்தச் சொன்னான்.

நட்ட நடு சாலையில் டாக்ஸி நின்றது. இருக்கை மாறினர். சூர்யா கனவேகமாக் காரைக் கிளப்பினான்.

"ம்ம்... நல்ல கன்டிஷனில்தான் வைத்திருக்கிறாய்! இப்போது பார் வேடிக்கை..."

தேச சேவையில் குறுக்கீடா செய்கிறாய்... உள்ளுக்குள் உறுமினான். அடாவடி சூர்யா விதிகளைக் காற்றில் பறக்க விட்டான்.

சடுதியில் நூறைத் தொட்டு, தொடர்ந்து ஹாரனைப் பேய்த்தனமாக அலறவிட்டு, லஜ்ஜையின்றி ராங் சைடில் பயணித்து எதிர் வரும் லாரி, பஸ்களைத் தவிர்த்து இரண்டு முறை சிக்னல்களை சர்வ அலட்சியமுடன் அத்து மீறி, கிடைத்த வாகன இடைவெளிகளில் புகுந்து புறப்பட்டு...

கிண்டி வந்து சேர்ந்தபோது அந்த சிவப்பு மாருதி எங்கோ கண்காணாமல் பின் தங்கி விட்டிருந்தது. சூர்யா முறுவலித்தான். பீதியில் நடுங்கித் திகிலடித்துப் போய்க் கிடந்த டிரைவரிடம் திரும்பி ''சாரி!'' என்றான். நிம்மதி மூச்சுடன் வேகம் குறைத்துச் சீராகச் செலுத்தினான்.

அதே சமயம், பரங்கி மலையைச் சமீபித்திருந்த சிவப்பு மாருதிக்காரன் வயர்லஸை உசுப்பி சைதாப்பேட்டையில் காத்திருந்த பச்சை மாருதியை அழைத்து, "சாரி துரை! பயல் டபாய்ச்சுட்டுப் போயிட்டான்! ஓவர்."

நந்தனம் கடக்கையில் பச்சை மாருதி ஒன்று வால் பிடித்துக் கொண்டதைப் பார்த்துப் பெருமூச்சு விட்டான் சூர்யா. சற்று முன்னர் நிகழ்த்திய சாகசம் இனிச் சாத்தியமில்லை. காரணம் சாலையை வகுந்த மீடியன் க்ராதித் தடுப்புக்கள். நத்தையாக நகரும் நெரிசல்.

விஞ்ஞானியைக் காக்கும் பணி கவலை கொள்ளச் செய்தது. சூர்யா என்ற அசகாய ஒற்றனை மட்டுமே நம்பி ஒப்படைக்கப் பட்ட இரகசியமான பெரும் பொறுப்பு இது. அவனைக் குறி வைத்து எவரோ அவன் வருகையை அறிந்திருக்கிறார்கள். இவர்கள் அவனைத் தொடர்ந்தால் போதும்; ராக்கெட்டைத் தட்டில் வைத்துக் கொடுத்தது போல...!

ஃபாலோ செய்யும் மாருதியில் இருவர் இருந்தது தெரிந்தது. தடியர்களைத் தற்சமயம் தாக்குவது உசிதமல்ல. யார் அவர்கள்? துரோக இந்தியரா? காசுக்காகச் செய்யும் கூலிப் படையா? பாகிஸ்தானியரா? வேறு நாட்டினரா? எவனாயிருந்தால் என்ன? அவர்களுக்கு 'அல்வா' கொடுத்தாக வேண்டும்...

மேம்பாலம் தாண்டியதும் எதிர்பார்த்த



எம்.எல்.ஏ: ஒரே இடுப்புவலி. குனிய முடியலை, நிமிர முடியலை. பதவியை ராஜி னாமா செய்யலாம்னு நினைக்கிறேன்.

நண்பர்: அடடா, இதுக்கும் பதவிக்கும் என்ன சம்பந்தம்?

எம்.எல்.ஏ: காலிலே விழும்போதெல்லாம் குனிய வேண்டியதாயிருக்கே...

- தேனி முருகேசன்

சந்தர்ப்பம் கிட்டியது. அண்ணா சாலையின் இடப்புறம் அருகருகாக ஒரு தியேட்டர், ரெஸ்டாரெண்ட் கண்டதும் மலர்ந்தான். தியேட்டர் முகப்பில் ஹவுஸ்ஃபுல் போர்டு. நல்லது.

ரெஸ்டாரெண்டின் வாயிலில் டாக்ஸி நின்றதும் தாராளமாகப் பணம் தந்துவிட்டு, "இங்கேயே ஒரு மணி நேரம் இருந்து விட்டுக் கிளம்பு!" என்றான்.

"புரியுதுங்க சார். உள்ளே சாப்பிடற உங்களுக்காக வெயிட்டிங் மாதிரி போஸ் கொடுக்கணும்!"

தேவலையே என்று சிலாகித்துச் சிரித்தான். உளவில் எல்லாமே ஏமாற்றுத்தான்...

ரெஸ்டாரெண்டின் பாத்ரூமில் மளமளவென மாறுவேடம் கலைத்துவிட்டுத் திரும்பினான். ரெஸ்டாரெண்டில் ஏசி. இசை இழை. தட்டில் இருப்பது ஈயா, மிளகா எனத் தெரியாத மங்கல் வெளிச்சம். முகப்பைப் பார்த்தபடி அமர்ந்தான். நேரம் 8:30.

கொஞ்சம் தேநீரும், நிறைய அவகாசமும் வாங்கிக் கொண்டான்.

பக்கவாட்டுப் பார்க்கிங்கில் பச்சை மாருதி கண்ணாடித் தடுப்பு வழியாகத் தெரிந்தது. இரு தடியர்களும் டாக்ஸியை செவ்வனே 'கவர்' செய்தபடி... நன்றாகக் காத்திருக்கட்டும்.

இரவு 9:00. மனிதத் தலைகள் தென்படத் துவங்கின. தியேட்டர் 'ஷோ' முடிந்திருக்கிறது. நிமிட முடிவில் ஏராளமாக ஜனத்திரள் பெருகியது. பிளாட்பாரத்தில், சாலையில், ரெஸ்டாரெண்டில்... எங்கும்... எங்கும் மனிதர்கள்... பல்கிப் பரவிய வண்ணம்...

சூர்யா தாமதியாமல் எழுந்து – அந்த ஜன சமுத்திரத்தில் கரைந்து – வந்து நின்ற



கோயில் கொடி மரத்திற்கு வெளியே விழுந்து வணங்குதல் வேண்டும். உள் பிரகாரங்களில் விழுந்து வணங்குதல் கூடாது. வினாயகரை ஒரு முறையும் சிவமூர்த்தியை மூன்று முறையும் அம்பிகையை நான்கு முறையும் 'வலம்' வருதல் வேண்டும்.

—வாரியார் வாக்கு.

தகவல்: டி.எம்.முருகானந்தம்

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

ஒரு நெரிசல் பஸ்ஸில் பயணித்து – எங்கோ இறங்கி– ஏதோ ஒரு லாட்ஜில் இரவைக் கழித்து – ஓர் உளவாளியின் வாழ்க்கை!

**சென்னை, டிசம்பர் 20, 1994**

விஞ்ஞானி ப்ரகாஷ் ராவிற்குப் பஞ்சாக நரைத்த தலை. ரிம்லெஸ் கிளாஸ் வழியே 'லேசர்' கண்கள். சதா குப் குப்பென்று புகையும் பைப்.

பெசண்ட் நகரில் சந்தேகம் தராத பக்கா குடியிருப்புப் பகுதி அது. ஹூம்... இங்கே இந்தியாவின் நாளைய ராக்கெட் திட்டம் உருவாகிறது என்று எவர் நம்புவர்... நாளும் நாடறியா பல அந்தரங்கங்கள் இப்படித்தான் ஆங்காங்கே அரங்கேறிய வண்ணம்...

"சூர்யா காஃபி!" க்ளுக்கென்று சிரித்துவிட்டு, "டில்லியில் கோமாவென்று கதை பண்ணி எவனையோ என் மனைவி போலித்தனமாக அடைகாக்க – இங்கே நான் வெளித் தொடர்பு இழந்து சுய சமையலில்! ஹூம்... எல்லாம் நம் தாய்த் திருநாட்டிற்காக!"

ப்ரகாஷைப் பெருமிதமுடன் பார்த்தான் சூர்யா.

அடுத்திருந்த அறைக்கு இட்டுச் சென்றார். ஒரு பி.சி.யும், பல காகிதங்களும் இறைந்திருக்க, மேசை மேல் சிறிய பிளாஸ்டிக் மாடல் ராக்கெட் பொம்மை.

"அதுதான் நம் ஹஷ்த்திரா! பெரிய சோதனைச்சாலை எதிர்பார்த்திருப்பாய்! சிக்கலான வரை படங்கள், புள்ளி விவரக் கணக்குள், தியரீக்கள் என ஏராளமாக பேப்பர் வொர்க்தான் முதலில். இன்னும் சில நாட்களில் செம்மையாக முழுமையாகி விடும் என நம்புகிறேன்."

"ஆல்ரைட் சார். நீங்கள் நிம்மதியாக உங்கள் ஆராய்ச்சியைத் தொடருங்கள். நான் அடிக்கடி வந்து தங்களைச் சந்திப்பது ஆபத்து. இயன்றபோது வருகிறேன். அதிகம் நெருங்காமல் எங்கிருந்தாவது கண்காணித்துக் கொண்டு உங்களுக்குப் பாதுகாவலாக இருப்பேன்..."

மதியம்... சில அத்தியாவசிய ரெடிமேடு ஆடைகள் வாங்கிக் கொண்டதும் அதிகாரி விஸ்வத்திற்கு தொலைபேசியில் தான் வந்து சேர்ந்ததை மட்டும் தெரிவித்தான். வேகமாகச் சிந்தித்தவாறு நடந்தான்.

நேற்று பின்பற்றிய 'மாருதி நெட்வொர்க்' ஆசாமிகள் இந்நேரம் தங்கள் ஆட்களை அலர்ட் செய்து நகரத்து ஹோட்டல்களைக் கண்காணித்தபடி தனக்காகக் காத்திருப்பார்கள். வசதியாக வசிக்க, பதுங்கிக் கொள்ள வீடுதான் வசதி. அதுவும் பெசண்ட் நகர் பக்கமிருப்பது சாலச் சிறந்தது.

பணத்திற்கு உள்ள மதிப்பே அலாதியானது. ஒரு புரோக்கரிடம் கூடுதலாகக் காசு வீசியதும் மாலையே அடையாறில் சிறிய வீடு மாத வாடகைக்குச் சிக்கியது.

**டிசம்பர் 22, 1994**

சூர்யா சுதந்திரமாக உணர்ந்தான். இதுவறை எந்த ஒரு பிரச்னையும் இல்லை. வால் ஏதும் தென்படவில்லை. அதை மேலும் உறுதி செய்து கொள்ளவே சுற்றிக் கொண்டு பயணித்து கடற்கரை லைட் ஹவுஸ் வரை வந்திருந்தான்.

சுண்டல் விற்பவனைக் கூடச் சந்தேகம் விலக்காமல் பார்த்தான். இரவு 8:00. சிலுசிலு காற்றிலிருந்து மீள மனமில்லாமல் எழுந்து கொண்டான். பின்னால் கண் பதித்து நடந்தான்.

ஆல் இந்தியா ரேடியோ தாண்டியதும் மைலாப்பூர் லஸ் நோக்கிச் சென்ற ஒரு தெருவில் பிரவேசித்தான். டீ.வி. கட்டிப் போட்டிருக்க, தெருவே காலி. அதன் முடிவில் நீளமான இருண்ட சந்து ஒன்று தென்பட்டது.

அதனுள் நுழைவதற்கு லேசாகத் தயங்கினான். ஹோல்டரில் துப்பாக்கி. உபரியாக பிளாக் பெல்ட். துணிந்து சந்தினுள் பிரவேசித்தான் சூர்யா. இருள். லேசாக அசுத்த வாடை.

சிறிது தூரம் சென்றதும் திடுக்கிட்டான். அங்கே... அங்கே....

அங்கே ஒரு கயவன் ஒரு இளம் பெண்ணைப் பலாத்காரம் செய்ய முயலுவதைக் கண்டான்!

(தொடரும்)



# பறக்கும் பெண்!

**பெ**யர் : கல்பனா;
ஊர்: கர்னால் (ஹரியானா);
கனவு: விமானி ஆக வேண்டும்.

கனவு ஜெட் வேகத்தில்... இல்லையில்லை - ராக்கெட் வேகத்தில் நிறைவேறி கல்பனாவையே 'ஓவர் டேக்' செய்திருக்கிறது!

கனவு கண்ட போது கல்பனாவுக்கு வயது எட்டு. வீட்டுக்குப் பக்கத்து மைதானத்தில் வந்திறங்கிய பயிற்சி விமானங்களை ஆசையாசையாய்ப் பார்த்து, கற்பனையில் அவற்றை ஓட்டி இளமைப் பருவம் கழித்தவர்.

அப்பா டாக்டருக்குப் படிக்கச் சொன்ன போது மறுத்து, இஞ்சினியரிங் கல்லூரி சேர்ந்து ஏரோனாடிக்ஸ் பிரிவில் 'கொடி கட்டிப்' பறந்தார். பின்னர் நிஜமாகவே பறந்தார் அமெரிக்காவுக்கு. கொலராடோ பல்கலைக் கழகத்தில் டாக்டரேட்டுக்காக உழைத்தபடி விமான ஓட்டுனர் பயிற்சி முடித்து லைசன்ஸும் வாங்கினார்.

**ப**றப்பதே பேச்சு; பறப்பதே மூச்சு என்றிருந்தவர் பக்கத்து வீட்டுப் பைலட்டைக் காதலித்து மணந்தது அதிசயமில்லை. அமெரிக்க கணவன் ஜீன்-பியரி-ஹாரிசன் கொடுத்த உந்துதலில் விமானங்களிலிருந்து விண்வெளித் துறைக்குப் பறந்திருக்கிறார் கல்பனா.

NASA (அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சி அமைப்பு) விண்வெளிப் பயணம் மேற்கொள்ள ஆட்கள் தேவை என விளம்பரம் செய்த போது விண்ணப்பித்தார் கல்பனா. முதல் முறை நிராகரிக்கப்பட்டதைப் பொருட்படுத்தாமல் மீண்டும் விண்ணப்ப ஏவுகணை அனுப்ப, ஆயிரக்கணக்காக ஆர்வலர்களிலிருந்து தேர்வு பெற்ற 122 பேரின் பட்டியலில் கல்பனா பெயரும் இருந்தது.

பின்னர் இன்டர்வியூ - பொது அறிவுக்குப் பரீட்சை, ஒரு டஜன் அதிகாரிகள் மாற்றி மாற்றி கேள்விக் கணைகள் தொடுக்க, நடுங்காமல் பதில் சொல்ல வேண்டிய நேர்முகம். 24 மருத்துவப் பரிசோதனைகளில் உடம்பை அலசி எடுத்தார்கள். மேலும் பரிசோதனைகள் மூலம் மனவியல் கணித்தார்கள். இந்த மனவியல் சோதனைகளில் கல்பனா வாங்கிய மதிப்பெண்களும் பாராட்டும் எக்கச்சக்கம்.

இதற்கெல்லாம் பிறகு எஃப்.பி.ஐ.யின் (அமெரிக்க உளவுத் துறை) கழுகுப் பார்வை கல்பனா பேரில். சொந்த வாழ்க்கை, பின்னணி, பழக்க வழக்கங்கள் என்று எல்லாவற்றையும் ஒரு அலசு அலசி ஓ.கே செய்தார்கள்.

**தே**ர்வான செய்தி டெலிபோனில் வந்தபோது நினைவுகளில் பின்னோக்கிப் பறந்திருக்கிறார் கல்பனா. சொப்பு வைத்து விளையாடும் வயதில் விமானக் கனவுகள் கண்டதெல்லாம் நினைவு வர, கண்கள் பனித்திருக்கிறார்.

சோதனைகளின் கடுமையைப் பார்க்கும் போது, விமானப் பணிக்கும் விண்வெளிப் பணிக்கும் இடையே வெகுதூரம் இருப்பது புரிகிறது. அத்தனை தூரத்தையும் வைராக்கியத்துடன் கடந்துள்ளவர்; நாசாவில் முறைப்படி பயிற்சி பெற்று விண்வெளியில் பயணிக்கும் முதல் இந்தியப் பெண்ணாக இருப்பார்.

கல்பனாவை எப்படிப் பாராட்டலாம்....? விண்வெளியில் பறக்கப் போகிறவர் விலைவாசி அளவுக்கு நம் மனத்தில் உயர்ந்து நிற்கிறார் என்று சொல்லலாம்!

— சுப்ரபாலன்.

நன்றி : டெக்கான் ஹெரால்ட்

# ''வாட்ஸ் யுவர் நேம்?''

✸

**ராமானுஜத்தின் கன்னம் பரபரவென்றிருந்தது. பதற்றத்தில் பிளேடு கோடிழுத்து விட்டது. அவன் இண்டர்வ்யூவிற்குக் கூட இத்தனை டென்ஷன் பட வில்லை...**

✸

''அப்படியில்லடா செல்லம்... 'வாட் இஸ் யுவர் நேம்'னு கேட்டா... 'மை நேம் இஸ் ஆர்.கோவர்தன்'னு சொல்லணும். சரியா...''

குழந்தை தலையைச் சம்மதித்து ஆட்டும் போது அதற்குக் கொட்டாவி வந்தது... ராமானுஜமும் ஒரு வாய் தண்ணீர் குடித்தான்.

இது ஐம்பதாவது தடவையா... இருக்கும்.. கிட்டத்தட்ட ஒரு மணி நேரமாவது ஆகியிருக்கும்...ராமானுஜம் வேறு நாட்களில் இந்த ஒரு மணி நேரத்தில் ஒரு தூக்கம் போட்டிருப்பான்...

பள்ளியிலிருந்து தபால் வந்திருக்கிறது. குழந்தைக்கு நாளைய தினம் இண்டர்வ்யூ. எல்.கே.ஜி. நகரத்தின் பள்ளிகளில் இந்தப் புள்ளிக்குத் தான் எக்கச் சக்கமான கீர்த்தி.

ராமானுஜம் படித்த காலங்களில் இவ்வளவு முஸ்தீபுகள் இல்லை... வீட்டின் பின்புறத்துச் சந்தில் கமிட்டி பாய்ஸ் ஸ்கூல். அக்கா கொண்டு விடுவாள். அப்புறம் பாதிரியாரின் பள்ளிக் கூடம். அதிகபட்சக் கட்டணமே பதினோரு ரூபாய் தான். அதுவும் முழுப் பரீட்சை எழுத அவர்கள் தரும் பேப்பருக்கான தொகை... அதுவே 'கொள்ளை' என்று பாட்டி முணுமுணுப்பாள் லேசில் தராமல்...

பாட்டி இன்றில்லை...

யூனிஃபாரம், ஷூ, டை, பை, தூள் துப்பட்டை என்று இந்நாளில் கல்யாண சாமான்களைப் போல பட்டியல் நீள்கிறது.

ராமானுஜம் பாதி விலைக்கு வாங்கிய புத்தகங்களில்தான் படித்தான். அதற்கு வேலையும் கிடைத்து விட்டது. அந்நாட்களில் அனைத்தும் எளிதாய் அமைந்தன.

இப்போது பையனுக்கு ஒத்திகை நடந்தாகிறது. இவனுக்கு வேலை கிடைக்குமா. அதற்கும் ஒத்திகை பார்க்க வேண்டியிருக்குமா. 'அயம் ஆர். கோவர்தன். பி.காம்., அப்போதும் பீகாம் இருக்குமா. வழக்கொழிந்து போயிருக்குமா...'

''கண்ணு...ம்.. சொல்லு. வாட்ஸ் யுவர் நேம்?''

''வாட்டீஸ் யுவர் நேப குழந்தை கிளிப் பிள்ளையானது.

''இல்லடா...மை நேம் ஈஸ்...'' சொல்லும் போதே ராமானுஜத்திற்குக் கொட்டாவி வந்தது.

ராமானுஜம் மதுரை மொழியில் அதற்கு விளக்கினான். ஒவ்வொரு சொல்லாகச் சொல்லி அடுக்கினான்.

குழந்தை சற்று நேரம் தயங்கினாலும் சரியாகச் சொன்னது.

''மை நேம் ஈஸ் ஆர். கோவர்தன்.''

ராமானுஜம் இறுக அணைத்துக் கொண்டான். குழந்தை சிரித்துக் கொண்டே திணறியது.

'ஒரு வாட்டி சொல்லு. வாட் ஈஸ் யுவர் நேம்?'

குழந்தை நேரம் எடுத்துக் கொண்டு பின் சொன்னது. ராமானுஜம் விடவில்லை.. இந்தச் சூட்டில் கேட்டால் தான் பதியும். பின்னணி இசையை வைத்தே 'தேவையில்லே பார்மசி' என்று பாடுகிறது.

இன்னும் ஏழெட்டு தடவை கேட்டான். இம்முறை குழந்தை பளீரென்று சொன்னது.

ராமானுஜம் மூச்சை இழுத்து விட்டான். இன்னும் ஏ.பி.சி. அ.ஆ.இ.ஈ. இருக்கிறது. பாடம் போதிப்பது புது அனுபவம்தான். இவ்வளவு நேரம் மன்றாடினால்தானே பலன் கிடைக்கிறது!

''என்னாங்க! அவனுக்கு இப்ப பால் குடுக்கணும்'' மனைவி இரைந்தாள்... கொடுக்க வேண்டியது தான்.. பாவம் குழந்தை. ஒரு மணி நேரமாய்ச் சிரமப்பட்டிருப்பான.

''கண்ணு... அப்பாக்கு ஒரே ஒரு வாட்டி... வாட்ஸ்''

முடிக்கும் முன் ''மை நேம்

ஈஸ் ஆர். கோவர்தன்...'' என்றது.

"ஓடுறா... இது போதும்.." முதுகில் தட்டிக் கொடுத்தான்.

நாளை இண்டர்வியூவில் வடிகட்டல் நடக்கும் என்று தெரிகிறது. நூற்றிருபது குழந்தைகளுக்குத்தான் அட்மிஷனாம். முதலில் விண்ணப்பம் வாங்குபவர்க்கு முன்னுரிமை என்ற செய்தியைக் கேள்விப்பட்டதும் ராமானுஜம் ஓடினான். அவனுக்குத் தரப்பட்ட விண்ணப்பத்தின் எண் நூற்று நாற்பத்திரண்டு. கவலைதான். ஏதேனும் ரத்தானால் உடனே போடக் கூடிய 'காத்திருப்போர் பட்டியலிலும்' இல்லை. இருபத்து இரண்டு குழந்தைகளையா ரத்து செய்வார்கள்.

போட்டி வைத்து எடுத்தால் நம்பலாம். என்னதான் பள்ளியென்பது பிள்ளைகளுக்குச் சொல்லித்தர என்று இருந்தபோதிலும், பெற்றோர் ஓரளவாவது பிள்ளைகளைத் தயாரிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்...

''கோவர்தன்.. பால் சாப்ட்டியா.. கமான்... வாட்ஸ் யுவர் நேம்."

"மை நேம் ஈஸ்..." உள்ளிருந்து பையன் தேங்காய் உடைத்தான்.

'அடிப் பட்டு...' என்று தாயார் குழந்தைக்கு மெடல் கொடுத்தது கேட்டது ராமானுஜத்திற்கு...

"ம்... சாமியக் கும்புட்டுக்கோ... விவூதி இட்டாச்சா... போலாமா. ராமானுஜத்தின் கன்னம் பரபரவென்றிருந்தது. பதற்றத்தில் பிளேடு கோடி முத்து விட்டது. அவன் இண்டர்வ்யூவிற்குக் கூட இத்தனை டென்ஷன் படவில்லை...



'பாய்ங்'

எதிரே பால் சைக்கிள் வந்தது. சூப்பர் சகுனம். அழாமல் டாட்டா சொன்னான். சைக்கிளில் அமர்ந்தான்.

ராமானுஜம் பள்ளியைப் பற்றி பையனுக்குப் புரியும் படியான விதத்திலும் விரும்பத்தக்க பாணியிலும் உயர்வாகவும் மகிழ்ச்சியூட்டும் படியும் அறிமுகம் செய்தபடி சைக்கிளை மிதித்தான்...

பையன் ஒரு கட்டத்தில் உற்சாகமாகி துணைக் கேள்விகள் கேட்டபோது ராமானுஜம் பாரம் இறங்கியவனானான்.

அடுத்து நடத்தை... பள்ளியில் யார் யாரிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பது குறித்து... குட் பாய் என்று பேர் வாங்க வேண்டியதன் அவசியத்தைச் சொன்னான். பையன் தலையசைத்ததில் சிரத்தை தெரிந்தது.

பள்ளி கசகசவென்று கூட்டமாய் இருந்தது. எல்.கே.ஜி. தவிர இன்னும் வேறு வகுப்புகளுக்கும் இன்று இண்டர்வ்யூ போலும். எப்படி செய்வார்கள் ஒரேநாளில்... பையன்களை

**சுப்ரமணியன் ரவிச்சந்திரன்**

ஒருமுறை அழைத்து விட்டு அனுப்பினாலே நேரம் போதாது... ராமானுஜம் கவலைப் பட்டான். புது மனிதர்களுக்கு முன்பு பையன் சொதப்பா மல் இருக்க வேண்டும்...

மூலையில் அழும் ஒரு சிறுவனையும் சமாதானப்படுத்தும் அதன் தாயாரையும் சுவாரஸ்யமாகப் பார்த்துக் கொண்டிருந் தான் கோவர்தன்.

ராமானுஜம் மெல்லிய குரலில் 'ராஜா வாட் இஸ்...'

"மை நேம் ஈஸ் ஆர். கோவர்தன்..."

ராமானுஜம் கூப்பிடுவதை எதிர்பார்த்து அமர்ந்திருந்தான்.

'ஆர். கோவர்தன்' என்று ப்யூன் அழைத்ததில் ஒரு நிமிடம் இயல்பாய் இருந்த ராமானுஜம் திடுக்கிட்டு பையனை அள்ளிக் கொண்டு போனான். கேண்டி டேட்டின் பெயரைத்தான் கூப்பிடுவார்கள் என்பது பிறகே நியாயமாய் உறைத்தது.

இண்டர்வ்யூ என்றால் பெரிய மேஜை, டெலிபோன், ஒரு குழு எல்லாம் நிறைந்தது என்பதை அந்தத் தனிமனிதர் சிறிய அறை யில் ஒற்றை மேஜையை வைத்துக் கொண்டு பொய்ப்பித்தார்.

ராமானுஜம் வணங்க, அமருமாறு சைகை செய்தார்..

"எல்.கே.ஜி.யா... நீங்க எதில வேலை பாக் கறீங்க?" ராமானுஜத்திடம் மிக நட்புடன் கேட்டார்.

"இங்கதான் எல்.எஃப் ஆடிட்ல" ராமா னுஜம் இழுத்தான்.

"எல்.எஃப் ஆடிட்டா.. மிஸ்டர் ராஜேந் திரன்னு..."

"ஆமா சார்.. காந்தி நகர்ல இருக்காரு... எம் 80ல வருவாரு.. என் பக்கத்து சீட்தான்." ராமானுஜம் தயக்கமின்றிப் பேசினான்.

"சரியாப் போச்சு... என் சகலைதாங்க.. இவ்ளோ தூரம் அலையாம, அவர்கிட்ட சொல்லியிருந்தா சுலபமாப் போயிருக் குமே...!"

ராஜேந்திரன், ராமானுஜத்தின் நண்பர் தான். ஆயினும் அவரது சகலை இந்த ஸ்திதி யில் இருப்பது தெரியாத ஒன்று.

"ஓ.கே. ஃபீஸ் நூத்தம்பது. டொனேஷன் டூ தௌஸண்ட், எல்லாருக்கும் அதான் ரிஸிட் குடுத்துடுவோம். நீங்க சொல்லுங்க என்ன பையா ஸ்கூலுக்கு அழுவா வியா?" என்றார் கோவர்தனின் கன்னத்தை நிமிண்டி.

"வாட் இஸ் யுவர் நேம்?" என்றார் கோவர்தனை.



"இதப் பாருய்யா! கடேசி வாட்டியாச் சொல்றேன்... இன்னொரு தபா நீ எதுனாச்சும் இப்படி எளுதினே... ஆமாம்! பார்த்துக்க..."

கையை ஆட்டிக் கண்ணை உருட்டி அவன் முழக்கிவிட்டு நின்றான். அவனுடைய அந்தத் தோற்றமும் மீசை முறுக்கலும் சின்னராஜுவை நிலை குலைய வைத்தன. இப்போதைக்கு எத்தனை டஜன் வாக்குறுதியானாலும் தந்துவிட்டுத் தப்பித்தால் போதும் என்று ஆகிவிட்டது அவனுக்கு.

இதே ஆள்.... இவனிடமே மூன்றாம் முறையாகவும் மாட்டிக் கொண்டாகி விட்டது. 'இன்னொரு தபா' எதையாவது எழுதி அதுவும் ஏடாகூடம் ஆகிவிட்டால் அவ்வளவுதான். நிச்சயம் தீர்த்துக் கட்டி விடுவான் என்பது புரிந்தது. சந்தேகமே இல்லை. யாருக்கும் பயப்படுகிற பேர்வழி இல்லை அவன்!

போலீஸில் போய்ப் புகார் பண்ணலாமா என்ற நினைப்பு வந்தது. கூடவே பின் விளைவுகளை எண்ணிப் பார்த்தபோது 'சண்டைக்காரன் காலில் விழுவதே மேல்' என்றும் தோன்றியது அவனுக்கு.

போலீஸில் குடைந்தெடுக்கக் கூடிய கேள்விகளுக்கு என்னவென்று பதில் சொல்வது? சொன்னால், ரசிக்கத் தெரியாவிட்டாலும் சிரித்து அவனை அவமானப் படுத்துவார்கள்.

"என்ன சார்! ரொம்ப வேடிக்கையா இருக்கே நீங்க சொல்றது. இது என்ன இ.எஸ்.பி. வெவகாரமா? நீங்க எழுதினா அது அப்படியே நடந்துடுதா?"

சுப்ர. பாலன்




# பிறிதொரு தபா!

அவர்கள் கிண்டலாய்க் கேட்டாலும் அது நியாயம்தான் என்று நினைத்துக் கொண்டான்.

அது இ.எஸ்.பி.யோ இல்லை இட்சிணி மாயமோ சின்னராஜுவின் கதை அச்சில் வரவேண்டியதுதான். மூன்றாவது நாளே இந்தக் கொடுவாள் மீசை அவன் முன்னால் வந்து நிற்பான். இந்த மூன்று தடவையாய் இதுவே வேலையாய்ப் போய்விட்டது.

''நான் ஒண்ணும் இலக்கிய சேவை பண்ண வரல்லே. பிழைப்புக்காக எதை யெதையோ எழுதரேன். அவ்வளவுதான்'' என்று இரண்டு மாதங்களுக்கு முன்னால் ஒரு தொலைக்காட்சி 'நேருக்கு நேரில்' மனம் திறந்து ஒப்புதல் வாக்குமூலம் வாங்கிவிட்டார் அந்தத் துடிப்பான பேட்டியாளர், முதல் முதலாக அந்தப் பேட்டியின்போது தான் சின்னராஜுவின் முகமே வெளியில் தெரிய வந்தது. 'சிக்கண்ணா' என்று கன்னடப் பெயர் மாதிரி ஒன்றில் ஒளிந்து கொண்டிருந்தான் அவன்.

பேட்டி வந்த அதே வாரத்தில் அட்டகாசமான குத்து வெட்டுப் படங்களோடு அவனுடைய கதை, ஒரு வார இதழில் அச்சாகித் தொலைந்திருந்தது. பத்திரிகை வெளியாகி நாலு நாளைக்கெல்லாம் காலை நேரத்தில் யாரோ வாசல்கதவைத் தட்ட, திறந்த போது வெளியே நின்றது இந்தக் கொடுவாள் மீசைதான். மூளையை மனசால் கசக்கிப்பார்த்தான். இந்த ஜன்மத்தில் அப்படி ஒரு முகத்தைப் பார்த்ததாய் நினைவுக்கு வரவில்லை. ஆனாலும் மீசையின் கையால் ஏறக்குறையச் சாறு பிழியப் பட்ட கரும்புச் சக்கை மாதிரி அகப் பட்டுக் கசங்கி மூச்சுத் திணறிக் கொண்டிருந்தது அந்தக் கதை சுமந்த பத்திரிகை.

''யோவ்! நீதான் அந்தக் முக்கண்ணாங்கற பேர்லே கதை எளுதறவனா?'' என்று நேரடியாகவே கேட்டான்.

இந்த மாதிரி ஒரு ரசிகனிடம், 'ஆமாம் நான்தான்' என்று நெஞ்சு நிமிர்த்திச் சொல்ல முடியாமல், அவனுள் எதுவோ குடைந்தது.

"என்ன விஷயம்?"

"விசயம் என்னான்னா கேட்கிறே? வெவகாரம் வந்திருச்சு தொரை. கதை எளுது, இல்லே கருமாதி எளுது எங்க஌ ஏன்யா புடிச்சு வம்பு வலிக்கிறே...?"

சாராயக் கொடுமைக்குப் பலியான ஒரு கூலிப் பெண்ணைப் பற்றிய அவனுடைய 'சுத்தமான கற்பனைக் கதை' கண்முன் படமாக ஓடியது.

புருஷன்காரனின் கொடுமையான அடி உதை தாங்காமல் அந்தப் பெண் தூக்கில் தொங்குவதாய்க் கதையை முடித்திருந்தான். அந்தப் பெண்ணின் பெயர் பொன்னி என்றும், குடிகாரக் கணவன் பெயர் மதுரை என்றும் எழுதியிருந்ததுதான் வம்பாய்ப் போயிற்று.

மீசைக் காரனின் தங்கச்சியின் பெயர் தான் பொன்னியாம். அவளுடைய குடிகாரப் புருஷனின் பெயரும் மதுரையாய் அமைந்து விட்டது ஒரு கொடுமை.

"சத்தியமா உன் குடும்ப விவகாரமெல்லாம் எனக்குத் தெரியாது பெரியவரே... நான் என்னமோ கற்பனை பண்ணி எழுதுன கதை அது..." என்று சொல்லிக் கொண்டே மானசீகமாக அவன் முன்னால் 'தடால்' என்று 'மந்திரி வேலை' பண்ணிய மாதிரியும் உணர்ந்தான் சின்னராஜு.

அதற்குள் அவனுக்கு உடம்பெல்லாம் 'குப்' பென்று வியர்த்து அருவி ஓடியது.

"இன்னாய்யா அளக்கிறே.... மூணுமாசம் முன்னாடி அந்தப் பொண்ணு கவுத்துல தொங்கிச் செத்துப் போனா... நீ அதை அப் படியே வரிவுடாமெ எளுதியிருக்கே, நான் படிக்காதவன்யா... மருமவப் புள்ளாண் டான்தான் வெலாவாரியாப் படிச்சுச் சொன்னானே..."

அவனுக்கு நிஜமாகவே கலக்கம் ஏற் பட்டது. எப்படியோ அக்கம்பக்கத்து நண் பர்கள் மீசையை ஒரு மாதிரி சமாளித்துச் சரி பண்ணிக் கொஞ்சம் 'செலவு'க்கும் கொடுத்து அனுப்பி வைத்துப் புண்ணியம் கட்டிக் கொண்டார்கள்.

**சா**ராயக் கதையை வெறும் சம்பவ ஒற்றுமை என்று எண்ணிச் சமாதானம் பண்ணிக் கொண்டான். கொஞ்ச நாட்களில் அந்த நிகழ்ச்சியையே முழுதுமாய் மறந்தும் போனான். ஆனால் அடுத்த கதையிலேயே மறுபடியும் வம்பில் மாட்டுவோம் என்று கண்டானா என்ன?

கள்ளநோட்டு விவகாரம்பற்றி ஒரு கதை எழுதப் போய்- அகப்பட்டுக் கொள்கிற பேர்வழிக்கு ரத்தினசபாபதி என்று நாம கரணமும் செய்ததால் வசமாய் அகப்பட்டுக் கொண்டான்.

இந்த முறை மீசை ஆபீஸுக்கே வந்து அமர்க்களம் பண்ணிவிட்டான். மேலதிகாரி கள் தலையிட்டு அவனைச் சமாதானம் பண்ணி அனுப்ப வேண்டியதாயிற்று.

"அது எப்படிங்க நியாயம்? நம்ம மச்சாங் காரன் பேருதாங்க சபாபதி. அவனெத் தாங்க நோட்டுக் கேசுல புடிச்சுப் போட்டி ருக்காங்க. ஊரு கூட அதே குப்பாம்பாளை யம் தானுங்க... எப்படிங்க கதையின்னு சொல்லுறீங்க? ஒங்க ஆளு வேணுமின்னே நம்ம கையிலே ராங் பண்ணிக்கிட்டிருக்காரு. அவரெ வெளியிலே வரச் சொல்லுங்க.... நான் கவனிச்சுக்கிறேன்...."

'மதுரை வீரன்' நெடி குடலைப் புரட்டிய வேளையில், எப்படியோ மறுபடியும் சமாளித்துக் கொஞ்சம் கூடுதலான கப்பத் தொகையோடு அனுப்பிவைத்தார்கள். இப்போது 'மூணாவது தபா! நண்பர்கள் தெரிந்தவர்கள் என்று யாருமே உதவிக்கு வராமல் ஒதுங்கிக் கொண்டார்கள். முந் தைய அனுபவங்களின் போது ஏற்பட்டு விட்ட 'நெருக்கம்' காரணமாக மீசையைச் சின்னராஜு தானே சமாளிக்க முடிந்தது.

கணிசமாகவே காசைவைத்து அழுத் தியதோடு ஒரு நானூறிலும் அவனைத் தூக்கிப் போட்டு மிதக்கப் பண்ணினான். அவனைச் சமாளித்து விட்டுத் திரும்பிய போது நண்பர்கள் ஒரு மாதிரியாகப் பார்த் தார்கள்.

'மூன்றாவது தபா' ஒன்றும் பெரிய சமா சாரம் இல்லை. பிக்பாக்கெட் கதை. திருவா ளர் மீசையின் ஆரம்பகால அனுபவமாம் அது. இப்போது அதுமாதிரிச் சில்லறை வேலைக்கெல்லாம் போவதில் அவனுக்குக் கௌரவக் குறைச்சல். இருந்தாலும்–

"ஒளிஞ்சு போவட்டும், வுட்டுடறேன். என்னோட பளைய பேரு 'பிளேடு மஸ் தான்'ங்கறது இப்போ யாருக்கு யாபகம் நிக்கும். நானுந்தான் அந்தத் தொளிலை வுட்டாச்சே. என்னவோ, இனிமே எதையும் எளுதாதே.." என்று சமாதானமானான்.

**ந**ண்பர்களின் ஆலோசனைப்படி எதற் கும் இருக்கட்டும் என்று போலீஸில் ஒரு புகார் கொடுத்துவைத்தான். ஏன் எல்லாக் கதைகளுமே இந்தக் கொடுவாள் மீசையை

## முயற்சி!

சன்னல்
சார்த்தப்பட்டிருப்பினும்
சிறுகீற்று வழியே
நுழையும் காற்று...!

மேகக் கூட்டங்களை
முட்டி மோதி
எட்டிப்பார்க்கும்
நிலவு...!

வற்றாது என்று
தெரிந்தும் கடலைக்
குடித்துப் பார்க்கும்
கதிரவன்...!

முயற்சிசெய்!
முடியாது எனச் சொல்லி
உனை நீயே
முட்டாளாக்காதே!

– ஜி. மனோ



யும் அவனைச் சேர்ந்தவர்களையும் பற்றியே அமைந்து தொலைக்க வேண்டும்? அவனுக்கும் போலீஸுக்கும் கூடக் குழப்பமாகவே இருந்தது.

"ஏதாவது பிளாக் மெயில் செய்கிறானா? உங்களுக்கு விரோதிகள் யாராவது உண்டா?" என்றெல்லாம் காவல் நிலையத்தில் விசாரிக்கப் பட்டபோதுதான், அவன் தன்னுடைய விரோதிகள் என்று யாரை யாவது நினைத்துப் பார்க்க ஆசைப்பட்டான்.

"இல்லை இன்ஸ்பெக்டர், விரோதின்னு யாருமே இல்லே.... நிச்சயம் இது சம்பவ ஒற்றுமைதான். இனிமே வேணுமானா நான் இதுபோலக் கதைகளை எழுதாமெ நிறுத்திக்கிறேன்...."

"அங்கேதான் தப்புப் பண்ணறீங்க மிஸ்டர் சின்னராஜு. அதே மாதிரி– இன்னும் வேகமாக் கூட ஒரு கதை எளுதுங்க... அது அச்சான ஒடனே எங்களுக்குச் சொல்லுங்க.... நாங்க கவனிச்சுக்கறோம்... பயப்படாதீங்க..."

இப்போது நிஜமாகவே மீசையின் கதையை எழுதினால் என்ன என்று தோன்றியது. மீசை மறுபடியும் வருவான். சண்டை வலுக்கும். கத்தியை எடுத்து ஒரே 'சதக்'கில் தன்னைச் சாய்த்து விடுவான். நினைக்கவே அவனுக்குக் குடல் எகிறியது.

எல்லாம் நடக்கிறமாதிரி இதுவும் நடந்து விட்டால் என்ன செய்வது என்று உதறல் எடுத்தது. இரவு ரொம்பநேரம் யோசனை பண்ணி அந்தக் கதையை எழுதி முடித்தான். படித்துப் பார்த்தபோது அவனுக்கே பயமாக இருந்தது.

**நா**லாவது தபா! கதை அச்சாகிக் காவல் நிலையத்திலும் காண்பித்தாயிற்று. ஒருவாரம் ஆகியும் மீசை கண்களில் படவில்லை. நிம்மதியாய்ப் பெருமூச்சு விட்டான்.

"அந்த ஆளு இப்போ எங்கே இருக்கான்னே தெரியலியே சார்" என்று இன்ஸ்பெக்டர் சொன்னபோது 'எங்கே நம்முடைய எழுத்து மறுபடியும் நிஜமாகி விட்டதோ என்று அவனுக்குப் பயம் பிடித்துக் கொண்டது.

"அப்படியானால் அந்த ஆள் செத்தே போயிருப்பானோ?" குரூரமாகக் கற்பனை பண்ணி அவனைச் சாக அடித்ததற்காக நம் மீது கொலைப் பழி வேறு விழுந்து விடுமோ என்று மிரண்டான்.

மேலும் ஒருவாரம் பயத்திலேயே ஓடிப் போனது. ஒருநாள் பல்லவனுக்காகக் காத்து நின்றபோது–

"இன்னா சாரு! எங்கே போவணும்? வூட்டுக்கா?" குரல் கேட்டுத் திரும்பினால், மீசைதான் ரிக்ஷாவை வலித்துக் கொண்டு நின்றான்!

"சும்மா ஏறு தொரே! காசெல்லாம் வாணாம். நாலு நாளா இதுதான் தொயிலு... என்னா? இப்போ ஒண்ணும் கதை எளுதறதில்லே? மருமவப் புள்ளாண்டான் செத்துப் போச்சு தொரே. ஒரு மாசமாச்சு. அவன் போனப்பறம் எனக்குப் படிச்சுச் சொல்ல ஆளே இல்லே."

'நல்ல காலம் தப்பினோம்' என்று மனசில் நிம்மதி படர்ந்தது. கூடவே ஒரு குறுகுறுப்பு.

"ஏம்பா? என்ன பண்ணிச்சு உன் மருமவனுக்கு?

"தகராறுதான் தொரே. பொம்பளை விவகாரம். எவனோ குத்திப் போட்டுட்டான் கத்தியாலே."

"அடடே, விவரமாச் சொல்லு!"

காதைத் தீட்டிக் கொண்டான். மீசைக்குக் கதை படித்துச் சொல்ல இப்போதைக்கு ஆள் இல்லாத தைரியத்தில் 'மருமகப்புள்ள' விவகாரத்தை ஒரு கதை பண்ணிவிட முடிவு செய்து கொண்டான். அப்படியே மாட்டிக் கொண்டாலும் அரை லிட்டர் 'மதுரை வீரன்'!

"நீ சொல்லு துரை..." என்று உற்சாகமானான் சின்னராஜு. உலகத்தில், நிமிர்த்த முடியாதது நாய்வால் மட்டுமில்லை...!

---

அறுவைக்குப் பரிசு!



எழுபத்தி ஆறு வயதான, அலெக் பெராட், சிறந்த அறுவையாளர், என்ற பட்டத்தைப் பெற்றிருக்கிறார். இங்கு அல்ல, பிரிட்டனில்! ஓயாமல், பேருந்துகள் தாமதமாக வருவது ஹியரிங் எய்ட் பாட்டரிகள் வேலை செய்யாதது– இது போன்ற சமாசாரங்களைத் திரும்பத் திரும்பக் கூறி எல்லோரையும் ஒட்டம் பிடிக்கச் செய்வார் இவர்!

நன்றி : சன்

தகவல்

கிருஷ்ணவேணி ரங்கநாதன்

# தந்தை ஒன்னும்!

## ஆர்னிகா நாசர்

'இஸெட் பிளஸ்' போலீஸ் பாது காப்பு அரண் கொண்ட முதலமைச் சர் மாளிகை. கறுப்புப் பூனைகள் இயந்திரத் துப்பாக்கிகளுடன் காவ லுக்கு நிற்க - முதலமைச்சர் தமிழ் பாண்டியன் அழுதபடி நின்றிருந் தார்.

முதலமைச்சரைச் சுற்றி அமைச் சரவை சகாக்கள் அழுதபடி அல்லது அழ முயற்சித்தபடி நின்றிருந்தனர். சகாக்களின் ரியாக்ஷனை அவ்வப் போது கடைக்கண்களால் ஒற்றறிந் தார் முதல்வர்.

வெல்வெட் படுக்கையில் முதல்வரின் வளர்ப்பு நாய் 'ரோஸி' சுருண்டு கிடந்தது. ரோஸி 'சௌசௌ' எனப்படும் சீனவகை அபூர்வ நாய். கறுப்பு நிறத்தில் இருந்தது. ஓர் அடி உயரம். தட்டையான தலை. கண் ணுக்கு முன் தொங்கும் காதுகள். பெரிய அகன்ற மூக்கு. கறுத்துச் சிறுத்த கண்கள். கருநீல நாக்கு. சற்றே விரிந்த கழுத்து. பூனை போன்ற சிறிய வட்டக்கால்கள். உயர்ந்த வால். தலைரோமத்தைப் பின்னி, சடையில் தங்க ரிப்பன் மலர்த்தியிருந்தார்கள். கழுத்தில் வைர நெக்லஸ். படுக்கைக்கு இருபுறம் ஏர்கூலர்கள்.

கால்நடைத் துறை இயக்குனரும் மற்ற உயர் கால்நடை மருத்துவர் குழாமும் காட்சி யமைப்புக்குள் பதற்றமாய் நுழைந்தனர்.

சுருண்டு கிடந்த ரோஸியை இயக்குனர் பரிசோதித்தார்.

வயிற்றை அமுக்கிப் பார்த்தபோது ஹீன ஸ்வரமாய் ரோஸி முனகியது. சிறப்புக் கருவி கள் வைத்து ரோஸியை மல்லாக்கப் போட்டு ஆராய்ந்தார். வலி தொடர்ச்சியாய் இருப்ப தையும் வலி அளவையும் உறுதி செய்தார் இயக் குனர். உடல் பாகங்களைத் தட்டிப் பார்த் தார். ஸ்டெதஸ்கோப் வைத்து இருதயத் துடிப்பை ஆராய்ந்தார். நிணநீர் சுரப்பிகளை அமுக்கிப் பார்த்தார். மலத்தில் இரத்தம் இருந்தது. தாகமாய் இருப்பது போல நாக்கை நீட்டிக் குரைத்தது ரோஸி.

"நேத்திக்கி என்ன சாப்பிடக் குடுத்தீங்க?"

"இறக்குமதி செய்யப்பட்ட நாய் உணவு, ஹார்லிக்ஸ், அவித்த ஆட்டு மாமிசம் சார்!"

"எலி பிரச்னைக்காக மாளிகைக்குள் எலி விஷம் வச்சீங்களா?"

"ஆமாமா சார்! 'மூஷ் மூஷ்'ன்ற விஷம்



வச்சோம் சார்!"

இயக்குனர் முகம் சூரியனித்தது.

"அந்த வில்லை பச்சை நிறத்தில் கேக் மாதிரி இருக்கும். அதை ஏதோ மிட்டாய் என்று நினைச்சு ரோஸி தின்னிருக்கு! பாஸ் பரஸ் பாய்ஸனிங்!"

முதலமைச்சர் ஹிஸ்டாரிகலாய்க் கத்தினார். "எலி விஷம் வச்சவனை சீட்டைக் கிழிச்சு வீட்டுக்கு அனுப்புங்கய்யா!"

செயலாளர் பவ்யமாய்த் தலையசைத்தார்.

முதல்வர் இயக்குனரிடம் கதறினார்: "என் ரோஸியைக் காப்பாத்துங்க! எப்படியாவது எவ்வளவு பெரிய்ய காஸ்ட்லி ட்ரீட்மெண்ட் செஞ்சாவது... ரோஸி எனக்குத் தேவை! ரோஸி! ரோஸி! அம்மா ரோஸி கண்ணு! வலிக்குதாம்மா ரொம்ப? அய்யோ நான் என்ன பண்ணுவேன்?" சுத்திகரிக்கப்பட்ட சிவாஜி பாணி!

அவ்வளவுதான்...

அமைச்சர்கள் ஒளி வேகத்தில் ஓடி முதல்வர் காலில் சிதறினர். போட்டி போட்டுக் கொண்டு அழ ஆரம்பித்தனர்.

"சார்! சார்! அழாதீங்க சார்! நீங்க அழுதா பூமியும் சேர்ந்து அழும் சார்! தமிழ்நாட்டு கிளிண்டனே! பல்கலைக் கழகங்களின் பல்கலைக் கழகமே! சூரியனுக்குப் பிரகாசிக்கச் சொல்லிக் கொடுத்தவரே! நம்ம ரோஸிக்கு ஒண்ணும் ஆகாது சார்! எங்க உயிரைக் கடவுள் பறிச்சுக்கிட்டு ரோஸி உயிரை விட்டுவைச்சா போதுமே!"

ஓர் அமைச்சர் திருநீறு எடுத்து ரோஸியின் நெற்றியில் ஈஷினார். "தமிழ்நாடு கோயில்கள் பூராவும் விசேஷ பூஜை நடத்தச் சொல்லியிருக்கேன் சார்! நம்ம ரோஸிக்கு மரணமேயில்லை!"

இயக்குனர் ரோஸிக்குக் காப்பர் சல்பேட்டும் மக்னீஷியம் சல்பேட்டும் கலந்த கரைசலை வாய்வழியாகப் புகட்டினார். வலி குறைய இன்ஜெக்‌ஷன் போட்டார்.

சிகிச்சை பலவிதங்களில் தொடர்ந்தது.

ஆறு மணி நேரப் போராட்டத்திற்குப் பின் ரோஸி மரித்துப் போனது. செயற்கை சுவாசமும் பயனளிக்கவில்லை.

முதல்வர் ரோஸியின் முகத்தில் முகம் வைத்துக் கதறினார். அழுகை உற்சவம் ஆரம்பித்தது. அமைச்சர்களும் வாரியத் தலைவர்களும் போட்டி போட்டுக் கொண்டு அழ ஆரம்பித்தனர்.

ஓர் அமைச்சர்: "ரோஸியைப் புதைக்கணுமா என்ன? அப்படியே லெனின் உடல் மாதிரி ப்ரிசர்வ் பண்ணினா என்ன? முதல்வருக்கு ஓர் ஆறுதலாயிருக்குமே?"

"மம்மிபிகேஷன் பண்ணலாம்... கொஞ்சம் காஸ்ட்லி! ஆனா... செய்யணும்!"

மூத்த அமைச்சர் முதல்வரிடம் குனிந்தார். "ரோஸியை மம்மிபிகேஷன் பண்றதெல்லாம் அபத்தங்க. பேசாம ரோஸியைத் தோட்டத்திலேயே புதைச்சுரலாம்!"

இன்னோர் அமைச்சர், "இப்ப புதைச்சிரலாம். ஆனால் பின்னாடி அதே இடத்துல ஒரு மணி மண்டபம் எழுப்பிரலாம். மண்டபத்தில் அலங்கார மின்வேலைகள் பண்ணிரலாம்..."

அமைச்சர் முனைப்பானார்: "ரோஸியோட ஒவ்வொரு நினைவு நாளுக்கும் தமிழ்நாடு முழுவதும் அன்னதானம் பண்ணிரலாம்..."

"அதுக்குத்தான் இன்னும் ஒரு வருஷமிருக்கே... இப்ப ஏன் அதைப் பேசுறே?" மூத்த அமைச்சர், இவர் காதைக் கடித்தார்.

ரோஸியின் மரணம் தந்த சோகம் தாங்காமல் ஓர் அமைச்சர் மயங்கி விழுந்தார். போன வருடம் தம்மைப் பெற்ற தாய் மரணமடைந்த போது நிச்சலனமாய் நின்றிருந்த 'பாசக்குன்று' அவர்!

முதல்வர் அழுது கொண்டிருந்தாலும் அமைச்சர்களின் கமெண்டுகளையும் அவர்களது அழுகை அளவையும் மனத்தில் பதித்து வைத்துக் கொண்டார்.

பல பூஜைகளும் பிரார்த்தனைகளும் நடத்தப்பட்டன.

ரோஸி, கண்ணாடிப் பேழையில் பொது மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டது. கூலிக்கு அழும் பெண்கள் மாரடித்துக் கொண்டிருந்னர். கட்சிக்காரர்கள் அஞ்சலி செய்தனர். மாலையில் ரோஸி சகல மரியாதைகளுடன் மாளிகைத் தோட்டத்தில் புதைக்கப்பட்டது.

ஒரு வாரம் கழித்து -

ரோஸியைப் புதைத்த இடத்தில் மணி மண்டபம் எழுப்புவது சம்பந்தமான வரைபடத்தைப் பொறியாளர் குழாம் சூழ, துறை சார்ந்த அமைச்சர் முதலமைச்சரிடம் காட்டி வணங்கினார்.

மணி மண்டபம் சம்பந்தமாக முதல்வர் கூறிய கண்றாவி யோசனைகளைப் 'பிரமாதம்' 'அடடா! இந்த மாதிரி யோசனைகள் இன்ஜினியர்களுக்குக் கூட வராது சார்!' எனப் பாராட்டினார் அமைச்சர்.

மணி மண்டபத்தின் வரைபடம் முதல்வரின் ஒப்புதலைப் பெற்றவுடன் அந்த அமைச்சர் மகாதிருப்தியாய் நகர்ந்தார். மற்ற அமைச்சர்களை நக்க



லாய் உறுத்தார் -

இன்னோர் அமைச்சர் கேள்விக்குறி போல் கூனி முதல்வரிடம் அசடினார்.

"என்னய்யா விஷயம்?"

"ஒரு யோசனை... சொன்னா ஐயா கோச்சுக்கப்படாது!"

"சொல்லு சொல்லு, பாப்பம் - கோபம் வருதான்னு!"

"நம்ம 'ரோஸி' பேர்ல ஒரு போக்குவரத்துக் கழகம் ஆரம்பிச்சா என்ன?"

முதல்வர் முகம் சுவாரசியமானது.

"ஏ... அப்பா! உனக்கும் மூளை புத்திசாலித்தனமா வேலை செய்யுதே! நல்ல ஐடியாதான்... ஆனா... ஆனா ஏற்கெனவே இருபது போக்குவரத்துக் கழகங்கள் இருக்கேய்யா!"

"இருபத்தி ஒண்ணாவதா இருக்கட்டுமே ஐயா!"

"அப்படின்ற? சரி! எதுக்கும் எல்லாப் போக்குவரத்துக் கழகங்களின் எம்.டிகளையும் அழைச்சு இது சம்பந்தமாப் பேசினா என்ன?"

"எதுக்குங்க அதெல்லாம் வீணா? தமிழ்க் கடவுள் நீங்க சொன்னா மறுப்பேதுங்க?"

முதல்வர் முகத்தில் கர்வம் மிளிர்ந்தது.

"என்னைக்கு ஆரம்பிப்போம்?"

"உங்கள் அதிர்ஷ்ட எண் '9' வர்ற மாதிரி உங்க ஆஸ்தான ஜோசியர்கிட்ட கலந்து அடுத்த மாசத்தில ஒரு தேதி குறிச்சுப்போம்! தலைவர்களின் தலைவனே! குயில்களுக்குக் கூவச் சொல்லிக் கொடுத்த மன்னவனே! அந்த தேதில தமிழகத்தையே ஒரு குலுக்கு குலுக்கும் கூட்டத்தை அரங்கேற்றுவோம். மாநகரம் முழுதும் உங்களின் கட்அவுட்கள் ஆயிரத்தெட்டு வைச்சுடுவோம். கூட்டத்தில் உங்களைப் பாராட்டிப் பேச விலங்கு நலத் துறைத் தலைவரைக் கூப்பிட்டுப்போம்..."

"குட்... புது போக்குவரத்துக் கழகத்தின் 'எம்ப்ளம்' என்ன?"

"ரோஸிதான் சார்! இருபதுக்கும் மேற்பட்ட ஓவியர்களை விட்டு, பலவிதமா எம்ப்ளம் தயார் பண்ணிட்டு வரேன் சார்... நீங்க பார்த்து ஓகே பண்ணுங்க சார்... ரோஸி போக்குவரத்துக் கழகத்துக்கான ஃபைலை கிரியேட் பண்ணிக் கொண்டு வரேன் சார்!"

முதல்வர் தலையாட்டினார்.

"செய் செய்!"

அமைச்சர் உற்சாகக் குதியாட்டத்துடன் காருக்கு நடந்தார். மனம் உரத்த குரலில் குதூகலித்தது.

"ரோஸி! நீ வாழ்க! நீ செத்தாலும் உன் தயவால் என் அமைச்சர் பதவி டபுள் ஸ்ட்ராங் நிலைபெற்றது! இன்னும் ஆறு மாதங்களுக்கு எந்தக் கொம்பனாலும் என்னை அசைக்க முடியாது!"

சென்னை விழாக்கோலம் பூண்டிருந்தது. எங்கு பார்த்தாலும் முதல்வரின் நூறடி உயர கட்அவுட்கள். 'ரோஸி' கூட சில கட்அவுட்களாய்ச் சிரித்தது. எல்லா தினசரிகளிலும் முதல்வரைப் பாராட்டி பக்கம் பக்கமாய் விளம்பரங்கள்.

விழா-மேடை தகதகத்தது.

மேடையின் இடதுபுறம், ரோ.போ.க. பஸ்கள் வரிசையாக நின்றிருந்தன.

ஹெலிகாப்டர் டன் கணக்கில் பூ தூவ - விழா ஆரம்பித்தது.

அனைத்து அமைச்சர்களும் முதலமைச்சரை வானளாவப் புகழ்ந்தனர். விலங்குநலத் துறைத் தலைவரும் முதல்வர் தலைமேல் ஐஸ் தொழிற்சாலை அமைத்தார்.

முதல்வர் ரோஸி போக்குவரத்துக் கழகத்தைத் திறந்து வைத்து, தமிழ்நாட்டுக்கு அர்ப்பணித்து வைத்தார். அதனைத் தொடர்ந்து உரையாற்றினார். உரையில் மத்திய அரசுக்குச் சில எச்சரிக்கைகள். தொடர்ந்து, ரோஸியுடனான சில அன்புச் சம்பவங்களை நினைவுகூர்ந்தார். கூட்டம் அவ்வப்போது லட்சம் புறாக்களின் இறக்கைப் படபடப்பாய்க் கைதட்டியது.

கூட்டம் முடிந்து பொதுமக்கள் கலைய ஆரம்பித்தனர்.

நூற்றுக்கணக்கான ஊழல் புகார்களைச் சுமக்கும் முதல்வர் - தம் வளர்ப்பு நாயின் பேரில் போக்குவரத்துக் கழகத்தை ஆரம்பித்திருக்கும் அபத்தம் பற்றிப் பொதுமக்கள் என்ன நினைக்கிறார்கள் என்றறிய ஒரு பத்திரிகை நிருபர் பொதுமக்கள் இருவரை நிறுத்தினார்.

"இந்த விழா அவசியமா? உங்க கருத்தென்ன?"

"உங்க கேள்வியே தப்பு சார்! என்ன இருந்தாலும் முதல்வர் முதல்வர்தான் சார்! என்ன வொரு தந்தையுள்ளம்! முல்லைக்கொடிக்குத் தேரு கொடுத்த பாரிவள்ளல் தோத்தான் போங்க சார்! பிராணிகளின் மீது எத்தனை பரிவு இருந்தால் - ரோஸிக்கு ஒரு போக்குவரத்துக் கழகம் ஆரம்பிப்பாரு! கருணை தெய்வம் சார் அவரு! இனி சாகற வரைக்கும் இவர்தாய்யா முதல்வர்! எத்தினி எத்தினி ஊழல் குற்றச்சாட்டு சுமத்தினாலும் அசைக்க முடியாது!"

"அந்த இன்ஸ்பெக்டரை ஏன் சஸ்பெண்ட் பண்ணிட்டாங்க?"

"'மாமூல் மன்னனே! எங்கள் மாயாண்டி அண்ணனே! லாக்கப்புக்கு வருக வருக என வரவேற்கிறேன்'னு போஸ்டர் அடிச்சு ஒட்டிட்டாராம்!"

- டி. எஸ். திருமலைராயன்

# உதவும் கரங்கள்

ஜோராக ஆரம்பிக்கிறார்கள், சிறுவர் சீர்திருத்தப் பள்ளி மாணவர்கள் பற்றிய கதை என்பதாக. அங்கு வரும் அன்பான சூப்பரின்டென்டென்ட் (எத்தனை 'டென்'?); திருந்தும் முரட்டுப் பையன்கள்; மாறுபட்ட களம். எத்தனை உன்னதமாகச் செதுக்கலாம்? ஒரு அவார்டுக்கான சப்ஜெக்ட். விடுவேனா என்பதாக வெண்திரையில் கசாப்புக் கடை விரித்திருப்பது தமிழ் சினிமாவின் சாபக்கேடு.

இயக்குநரோ, இன்ன பிறரோ ஒரு தரமாவது சீர்திருத்தப்பள்ளி காம்பௌண்ட் சுவரை எட்டிப் பார்த்தார்களா- இந்தப் படத்திற்காக- என்று கேட்கத் தோன்றுகிறது.

ஒரு சிறைக் கூடம் மாதிரி மாணவர் 'செல்'லைக் காட்டியிருப்பதும், கையில் விலங்கிட்டு தனி அறையில் அடைப்பதும் இன்னும் பலவும் நடைமுறையில் இல்லாதவை.

பள்ளியில், காதலித்த பெண்ணுக்காக (கஷ்டம்!) கொலை செய்து இங்கே வரும் பையன்- காதலி, தனக்கு வாழ்வு கொடுத்த சூப்பரின்டென்டென்ட்டின் தங்கை என்று தெரியவர, கிளிஸரின் துணையோடு சிரித்தபடி அழ ஆரம்பிக்க, கதை, சோகக் காதல் டிராக்குக்கு மாறுகிறது. அரை டிராயர் முகங்கள் 'என் அன்பே' என்று ஆயிரம் வயலின் பின்னணியில், மலை முகட்டில் அழுது பாடுவது கண்ணுக்கு நாராசம்.

இது இப்படி இருக்க, வேறொரு டிராக்கில் லோக்கல் ரவுடி, ஆன்மிகப் போர்வையில் கற்பழிப்பு. ஹீரோவின் சாகசம் என்பதாகப் பிறிதொரு வதை!

திருட்டு கேஸில் வரும் அந்த குண்டு பையனை ரசிக்க முடிகிறது. இயல்பாகச் சிரிக்க வைக்க முயலும் வாண்டுக்கு ஜே!

முற்றிலும் வீணாக்கப்பட்டிருக்கும் ராதிகா, புதிய ஜீரோ- ஸாரி- ஹீரோ ரமேஷ், இசையமைப்பாளர் ஆதித்யன் உள்ளிட்ட பெரும் கோஷ்டிக்கு அனுதாபக் கூட்டம் நடத்தலாம். (அதென்ன, ரகுமானை அப்படியே நகலெடுக்கிறார் ஆதித்?)

என்னவோ சொல்ல நினைத்து, என்னென்னவோ சொல்லி, எப்படி எப்படியோ நகர்த்தி, ஒப்பேற்றி இருக்கும் இயக்குநருக்கு ஒரு கேள்வி: ரசிகர்கள் என்ன பாவம் செய்தார்கள் என்று இப்படி ஒரு தண்டனை?

தயாரிப்பாளருக்கு நிச்சயம் உதவாத கரங்கள்.

-ஆர்.பி.ஆர்.



# சுட்டுவிடு, சூர்யா!

# 2

**சென்னை, டிசம்பர் 22, 1994**

சகலமும் பதற சூர்யா உஷ்ணமானான். ஒரு மெகா நகரத்தின் இதயப் பகுதியில், முன்னிரவில், சற்றே இருண்ட சந்தில் மண்தரையில் ஒரு இளம் பெண்ணை வீழ்த்திப் பலாத்காரம் செய்ய ஒரு மிருகம் முயல... இந்த நாடு எங்கே செல்கிறது! என்ன ஒரு அக்கிரமம்....

உக்கிரமாகப் பாய்ந்தான்.

அந்தக் கயவனை அலாக்காகத் தூக்கிப் பக்கவாட்டில் வீசினான்.

அந்தப் பெண்ணின் கை பற்றித் தூக்கி நிற்க வைத்தான். அவள் தலை கலைந்து, அலங்கோலமாக ஆடை ஆங்காங்கே கிழிந்து.... சட்டென்று தன் ஜெர்கினைக் கழற்றி அவள் மீது போர்த்தினான். உதட்டோரம் துளிர்த்திருப்பது இரத்தம் தானே.....

ஆக்ரோஷமாகத் தாக்க ஓடி வந்த அந்தக் காமுகனை "குத்தா ஸாலா!" என்று எதிர் கொண்டான்.

சில நொடிகளில் சில வீழ்த்தல்களில் அவன் தனக்குச் சமதையே அல்ல என்று புரிந்தது. அவன் வலக் கையை முரட்டுத்தனமாகப் பற்றினான் சூர்யா. அப்படியே மெல்லப் பின்னோக்கி வளைத்தான்.

அந்தப் பெண்ணிடமிருந்து 'ஏவ்' என்று ஏப்பம் போல் ஒரு வினோத ஒலி தப்பிக்கவும் நிமிர்ந்தான். அவள் ஸ்லோமோஷனில் அப்படியே மயங்கிச் சரிய -

சூர்யா ஓடிச் சென்று அவளைத் தாங்கிக் கொண்டான். அவன் கரங்களில் அவள் துவண்டாள்.

அசந்தர்ப்பமான அவளின் மயக்கத்தினால் அந்தத் தடியன் தப்பித்து ஓடுவதை இயலாமையுடன் பார்த்தான். ரேப் ராஸ்கலின் குறுந்தாடியும், வட்டக் கழுத்து பனியனும் சூர்யா ஞாபகத்தில் பதிந்து கொண்டது.

நெடிய சந்தின் முடிவில் நிறைய வெளிச்சமும் சுமாரான டிராஃபிக்கும் கொண்ட கிளைச்சாலை தெரிந்தது. ஆட்டுக் குட்டி போல் அவளைச் சுமந்து கொண்டு சென்றான்.

அந்தச் சாலையில் எதிர்ச்சாரியில் ஒரு தனியார் ஆஸ்பத்திரி இருந்தது....

நுனி நாக்கு ஆங்கிலத்தில் லிப்ஸ்டிக் பளபளத்த வரவேற்பாளினி. உற்சாகமாக 'சம்சாரிக்கும்' மலையாள நர்சுகள். பிளாஸ்டிக் மலர்கள். மல்டி சானல் கலர் டீ.வி. மார்பிள் தரை. எங்கும் அசெப்டிக் சுத்தம். பணத்தை மட்டும் கூடையில்தான் வாங்குவார்கள் போல....! மெட்ரோ நகரங்களில் இம்மாதிரி நிறைய முளைத்துள்ளன.

அந்த மருத்துவமனையின் நிர்வாகியும் தலைமை மருத்துவருமான மாணிக்கவேலு நகரத்து சினி, அரசியல், வியாபார விஐபிக்களுடனான தம் தொடர்பை சில பல புகைப்படங்களில் பறைசாற்றியிருந்தார். அவரின் தகுதியாக அவர் பெயருக்குப் பின்னால் புரிந்தும்.



புரியாமலும் பல ஆங்கில எழுத்துக்கள்.

சஃபாரியில் மாணிக்கவேலு சுறுசுறுப்பாக வெளியே வந்து, "ஷி வில் பி ஆல் ரைட். டிரிப்ஸ் கொடுத்து ரெஸ்ட் கிடைக்க செடேஷன் கொடுத்திருக்கேன். மண் தரையில் விழுந்ததால் மேம்போக்கான ஓரிரு சிராய்ப்புகள்தான். பயப்பட வேறு ஒன்றுமில்லை."

"நன்றி டாக்டர். நான் பிறகு வந்து பார்க்கிறேன்."

**டிசம்பர் 23, 1994**

காலையில் சில நிமிடங்கள் போல் அவளுடன் இருந்துவிட்டு பகல் முழுவதும் தொலைவிலிருந்து விஞ்ஞானியைக் கண்காணித்துவிட்டு மாலை மங்கும் போது தான் சூர்யாவால் மீண்டும் ஆஸ்பத்திரி செல்ல முடிந்தது.

"ஐ ஹாவ் சம் பேட் நியூஸ்!" என்றார் மாணிக்கவேலு.

"உடல் நிலை ஏதும் மோசமாகி - "

"நோ! நோ! உடல் நிலை நன்றாகவே உள்ளது. நேற்று நிகழ்ந்த கொடுமையில், அதிர்ச்சியில் அவள் மென்மையான மனம் மிகவும் பாதிக்கப்பட்டுத் தன் கடந்த காலத்தைச் சுத்தமாக மறந்து விட்டிருக்கிறாள்!"

"மை காட்!"

"தான் யார், எங்கிருந்து வந்தோம் என்பதே அவளுக்கு நினைவில் இல்லை. எங்கள் சைக்கியாட்ரிஸ்டிடம் விசாரித்தேன். அனேகமாக இம்மாதிரி கேஸ்களில் நினைவிழப்பு என்பது தற்காலிக பாதிப்புத்தான். சிலருக்குத் திடுமென்று பழைய நினைவுகள் திரும்பி விடுமாம். வேறு சிலருக்குக் காலப் போக்கில் மெல்லக் கடந்த காலம் நினைவுக்கு வரலாமாம். அபூர்வமாக வராமலும் போக வாய்ப்பிருக்கு. காயப்பட்ட கலைந்த மனத்தை மெல்ல ஆறவிட்டுப் பின்னால் பழைய நினைவிற்கு முயற்சிக்கலாம் என்றார். பிஸிக்கலாகப் பாதிப்பு ஏதுமில்லை. இன்றே நீங்கள் அழைத்துச் செல்லலாம். ஆனால் அவளை ஜாக்கிரதையாகக் கையாள வேண்டும். இரவு இரண்டாம் முறையாக அவளுக்கு மயக்கம் வந்தது. மென்ட்டல் ட்ரௌமாதான்!"

"புரிகிறது டாக்டர்."

"வாருங்கள் போய்ப் பார்க்கலாம்."

வார்டில் நுழைந்ததும் நர்ஸ் புகார் செய்தாள்.

"பேஷன்ட் ஒத்துழைக்க மறுக்கிறாங்க. மாத்திரை சாப்பிடாம பிடிவாதம்!"

கட்டிலில் மிரட்சியுடன் விழித்த அவள், சூர்யாவைக் கண்டதும் பாய்ந்து வந்து அவனைக் கட்டிக் கொண்டு, "இவள் என்னைத் தொல்லை செய்கிறாள்! இங்கே எனக்குப் பயமாயிருக்கிறது. நாம் போகலாம், வா."

அவன் கையை இறுக்கிப் பிடித்திருந்தாள். அவனைப் பாசம் பொங்கப் பரிதாபமாகப் பார்த்தாள். 'விட்டு விடாதே' என்பது போல....

அந்த ஆட்டோ சிக்னலிலிருந்து விடுபட்டு விரைந்தது.

"நாம் எங்கே போகிறோம்?"

"நம் வீட்டிற்கு...."

ஆட்டோ சுற்றிக் கொண்டு அடையாறு செல்ல பணிக்கப் பட்டது.

பத்மா ரவிசங்கர்



கல்கி 9.4.95

**டிசம்பர் 24, 1994**

"உன் பைஜாமா ரொம்பத் தொள தொளா! ....சரி, முந்தாநாள் முன் இரவிலிருந்துதான் என் ஞாபகம் கலைந்ததா?"

"ஆமாம்."

"அன்று என்ன நடந்தது?"

"ம்.... 'ஏதும்' நடக்கவில்லை!"

"ப்ளீஸ்... சொல். அன்று என்ன நடந்தது?"

"ஒரு விபத்தில் சிககினாய்!"

"என்ன விபத்து?"

"ப்ளீஸ் நச்சரிக்காதே. ஏதோ விபத்து என்றால் விட்டு விட வேண்டும்."

"சரி! உன் சொல்படியே....

"உன் பெயர், ஊர், உற்றார், கடந்த காலம் எதுவுமே நினைவுக்கு வரவில்லையா?"

"ம்கூம். சுத்தமான பிளாங்க்! ரொம்ப யோசித்துப் பார்த்தால் தலைவலிக்கிறது!"

"ஞாபகம் வரவில்லையென்றால் விட்டு விடு. கடினமாக முயற்சி செய்யாதே. உன் சொந்த ஊர் எது என்று என்னையும்தான் குழப்புகிறது! நீ பேசும் ஹிந்தி உத்தாப்பிரதேசத்தைச் சார்ந்தது. ஆனால் உன் தோற்றம் ஒரு பஞ்சாபியை நினைவு படுத்துகிறது கூரிய நாசி கொண்ட களையான உன் முக

...ழர். சிவந்த நிறமும், வழவழ சருமமும், பழுப்புக் கண்களும், வளமையான இளமையும் இன்னும் - "

"ஹேய்! நிறுத்து! என்னை வர்ணிக்காதே. என்னை என்னமோ செய்கிறது!"

"சாரி!"

"உன் பெயர் சூர்யா என்கிறாய். எனக்கு என்ன பெயர்?"

"உனக்கு.... ம்ம்... ஆங்! கங்கா! எஸ். இனி உன் பெயர் கங்கா!"

"கங்கா!"

"ஆம். அது போல பரிசுத்தமானவள் நீ!"

"ஹா.... நான் கங்கா! பெயர் பிடித்திருக்கிறது. பெயர் சூட்டிய உன்னை மிகவும் பிடித்திருக்கிறது....!"

**டிசம்பர் 26, 1994**

இரண்டு நாட்கள் கழுகாகக் கண்காணிப்புச் செய்ததில் சூர்யா மிகவும் திருப்தியாயிருந்தான். பிரகாஷ் ராவ் ஆராய்ச்சி தொந்தரவின்றித் தொடர, சந்தேகப்படும்படி எதுவும் நடக்கவில்லை; எந்த மர்ம நிழலும் தென்படவில்லை.

பிரத்யேகமாக சங்கேத முறையில் மூன்று முறை விட்டு விட்டுக் கதவைத் தட்டிய

போது இரவு ஏழு.

"வாய்யா சூர்யா!" சாண்ட்விச் மென்றபடி வரவேற்றார். "சாப்பிடுகிறாயா?"

"வேண்டாம் சார்."

பிரகாஷ் ராவ் கண்கள் கீழ் லேசாகக் கருவளையமிட்டிருந்தது. இரண்டு நாட்களாகத் தூக்கம் தொலைத்திருப்பார் போலும்.

"ஏதும் ப்ராப்ளமா?"

"சிறிய சிக்கல்தான். ஒரு கன்டிஷன் 'சிமுலேட்' செய்ததில் ஒரு சூத்திரம் சற்றே உதைக்கிறது! லேசாக மாற்ற வேண்டும். சரியாகிவிடும். அதுவும் இன்று இரவுக்குள்!" என்றார் உறுதியான குரலில். "ஒரு ராக்கெட் என்பது எளிதான விஷயமில்லை சூர்யா. சிக்கலான சர்க்யூட்டுகள், பல்லாயிரம் பாகங்கள்; துடிப்புடன் இணைத்துக் கண்காணிக்க கம்ப்யூட்டர்கள். எல்லாம் ஒருங்கிணைந்து செயல்பட்டு ராக்கெட் வானத்தில் எவ்வ, தாவு தீர்ந்துவிடும்!"

பிரகாஷின் கண்களில் ஆழ்ந்த அறிவு சுடர்விட்டது. சூர்யா இமைக்காமல் பார்த்தான். பெரும் பணத்துடன் அமெரிக்காவும், நய வஞ்சக பாகிஸ்தானும் காத்திருக்க, பால்மாறாமல் தீவிர தாய்நாட்டுப் பற்றுடன் பணியாற்றும் இவர் போன்றோர் இந்தியாவின் பெரும் பேறு....

"ஹஷ்த்திரா என்னுடைய பல வருட ரகசியக் கனவு! அது கிடைத்ததும் ராக்கெட் டெக்னாலஜியில் இந்தியா ஓர் உன்னத 'உயரம்' பெற்றுவிடும். ஹஸ்திராவைச் சற்றே மாற்றினால் கிடைப்பது...." சஸ்பென்சுடன் சிரித்து, "சூப்பரான ஹை-டெக் ஏவுகணை!"

வழியில் கங்காவிற்குச் சில ஆடைகள் வாங்கிக் கொண்டு திரும்பினான் சூர்யா.

**டிசம்பர் 28, 1994**

பீங்கான் தட்டுகளில் ஆவி பறக்கும் உணவு. கங்கா கண்களில் வாஞ்சை வழியப் பரிமாறியதை சூர்யா சுவைத்துச் சாப்பிட்டான். வெளியே கொடியில் அவளால் தோய்க்கப்பட்ட அவன் ஆடைகள் காற்றில் படபடத்தது தெரிந்தது.

"என் பெற்றோரைச் சிறு வயதிலேயே இழந்த அனாதை நான். ஒரு பெண், வீட்டை எப்படி மாற்றிவிடுகிறாள்! இதெல்லாம் எனக்குப் புதிய அனுபவம்!" என்றான் நெகிழ்ச்சியாக.

"என் சொந்தம் எல்லாம் மறந்து போய் நானும் தற்போது அனாதைதான்!" அவள் அழகாகத் தலையசைத்து, "இல்லை. நான் அனாதை இல்லை! எனக்குத்தான் நீ இருக்கிறாயே சூர்யா! எனக்குப் புதிய பெயர். புதிய உறவு. புதிய வாழ்க்கை - உன்னுடன்! உன்னுடன்! எனக்குப் பழைய நினைவுகளே திரும்பக் கூடாது! உன்னுடன் இணைந்துள்ள ஒவ்வொரு நொடியும் இன்பமாக இருக்கிறது சூர்யா."

சூர்யா சங்கடமுடன், "தயவு செய்து அந்த மாதிரி நினைவுகளை அழித்து விடு கங்கா!"

"சாரி சூர்யா! தேதி குறித்து வருவதல்ல காதல்! அது உணர்வு பூர்வமானது; சாசுவதமானது."

"நான் யார், என்ன வேலை செய்கிறேன் என்று தெரிந்தால் இப்படிப் பேச மாட்டாய்!"

"நினைத்தபோது வருகிறாய்; போகிறாய். உன் நடவடிக்கைகள் மர்மமாகத்தான் இருக்கிறது. இருப்பினும் ஒரு நேர்மையற்ற தொழிலோடு உன்னை இணைத்துப் பார்க்க முடியவில்லை. நீ சொல்ல விரும்பாத, ஏதோ இக்கட்டான சூழ்நிலையில் என்னைக் காப்பாற்றிய - கை கழுவி விட்டுப் போகாத - பண்பாளன் நீ! உன் மீது எனக்கு முழு நம்பிக்கை. உன் தொழில் பற்றி ஒன்றும் தெரிய

"பிலிம் இன்ஸ்டிடியூட் மாணவர்களைப் போட்டுப் படம் எடுத்தீர்களே! இப்ப யாரைப் போட்டுப் படம் எடுக்கப் போகிறீர்கள்?"

"ஒரு சேஞ்சுக்காக டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட் மாணவர்களை வைச்சுத்தான்!"

— ஆர். விஸ்வநாதன்



"இது, டைரக்டரோட சொந்தப் படம்னு எப்படிக் கண்டு பிடிச்சீங்க...?"

"வழக்கமா 555 சிகரெட் பிடிக்கிறவர், பீடி குடிச்சுக்கிட்டிருக்காரே அதை வச்சுத்தான்...!"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா



"உங்க வீட்டுக்கு வந்த திருடன் அறிவுஜீவியா? எப்படி சொல்றீங்க?"
"டீ.வி. பெட்டியை மட்டும் வச்சிட்டு மத்த எல்லாத்தையும் அடிச்சுட்டு போயிட்டானே!"
— சுவீட் ரவி



"காதுக்குள்ள பல்லி போயிடுச்சு டாக்டர்!"
"பல்லி போற அளவு என்ன பண்ணினீங்க?"
"அடுத்த அறைல மருமக பேசிட்டிருந்ததை சுவரையொட்டி காதை வச்சி ஒட்டுக் கேட்டேன்!"
— அம்பை தேவா

---

வேண்டாம். மனதார நேசிக்கிறேன் என்று ஒரு வார்த்தை மட்டும் சொல்லு."

"ப்ளீஸ். புரிந்து கொள் கங்கா. என் தொழிலில் எந்நேரமும் சாவின் விளிம்பில் நான்... என் வாழ்வுக்கு உத்தரவாதமில்லை பெண்ணே!"

"மனத்துக்குப் பிடித்தவனுடன் சில நாட்கள் வாழ்ந்தாலும் போதும்!"

அவன் மோவாயைப் பற்றி, முகத்தை நிமிர்த்தினாள்.

"உண்மையில் நீ என்னை நேசிக்கவில்லையா? என் கண்களை நேராகப் பார்த்துச் சொல். ம்ம். கம் அவுட் சூர்யா."

இருவர் கண்களும் கலந்தன; காதலில் கிறங்கின. சூர்யா பெருமூச்சுடன் தலை குனிந்தான்.

"ஹைய்யா!" என்று குழந்தை போல் குதித்தாள் கங்கா.

**மா**லை மயிலை லஸ்ஸில் ஷாப்பிங் செய்தார்கள். சூர்யா கரத்தை விடாமல் பற்றியிருந்தாள் கங்கா. ஒரு கடையிலிருந்து வெளிப்பட்டதும் சூர்யாவின் சிரிப்பு உறைந்தது....

சில அடிகள் தொலைவில் வாயில் சிகரட் புகைய எங்கோ பார்த்தபடி அந்த ரேப் வில்லன்! அதே வட்டக் கழுத்து பனியன்; குறுந்தாடி. லஸ்தான் அவன் இருப்பிடமா....?

சூர்யாவின் தாடை இறுகியது. அயோக்கியனைச் சுட்டுவிடத் துடித்தான்.

அந்த மிருகத்தைக் கங்காவும் கவனிப்பதை சூர்யா பார்த்தான். அன்று இரவு நிகழ்ந்தது நினைவில் இல்லாதவளாக அவள் முகம் அசுவாரசியமாக, சலனமின்றிக் கிடந்தது.

எதேச்சையாகத் திரும்பிய தடியன் அவர்களைக் கவனித்து விட்டான். மெல்ல நழுவத் துவங்கினான்.

"இங்கேயே இரு கங்கா. இதோ வந்துடறேன்."

"என்ன பிரச்னை சூர்யா?" அவன் முகத்தைப் பார்த்துக் கவலையுடன் கேட்டாள்.

சூர்யா பதில் சொல்லாமல் வேகமாகக் கிளம்பினான். அவன் சாலையைச் சடுதியில் கடந்து ஓடத் துவங்கினான்.

சூர்யாவால் சில வினாடிகளுக்கு மேல் துரத்த முடியவில்லை. ஏக நெரிசல். அவன் ஓர் ஆட்டோ பிடித்துப் போயே போய் விட -

சூர்யா சோர்வுடன் கங்காவிடம் திரும்பினான.

"யார் அவன்? ஏன் அவனைத் துரத்தினாய்?"

"அவன் ஒரு பிக்பாக்கட் திருடன்' என் பர்சை ஒருமுறை இழந்திருக்கிறேன்!" என்று சமாளித்தான்.

**டிசம்பர் 30, 1994**

**இ**ரவு 10:30. அந்த வீட்டில் கங்கா கொட்டக் கொட்ட விழித்தபடி அமர்ந்திருந்தாள். காலையில் சென்ற சூர்யாவை இன்னமும் காணோம். அச்சுறுத்தும் தனிமை. தெருவில் சந்தடி சுத்தமாக அடங்கிவிட்டிருந்தது. சுவர்க்கோழியின் ரொய்ங். எங்கோ ஒரு நாயின் ஊளை. பல்லி ஒன்று கௌளி அடித்தது. பெருத்து ஒலித்தது. காற்றில் குளிர் கூடியிருந்தது. கங்கா கைகளைத் தேய்த்து விட்டுக் கொண்டாள்.

திடீரென்று கதவு [illegible] தட்டப்படும் ஓசை கேட்டது. ஆவலுடன் ஓடிச் சென்று [illegible] னாள்!

[illegible]

## வேதா கோபாலன்



**கா**லிங் பெல்லை அழுத்தினேன். பிள்ளை யாரப்பா. இதுவாவது முடியட்டும். இரண்டு முறை, மூன்று முறை நாகரிகமில்லாமல் அந்த மணி காதைக் கிழித்து, பிறகும் பதிலில்லை. கம்பி போட்ட கதவின் வழியே நெடிய ஹால் தெரிந்தது. உள்...ள்ளே சலசலவென யாரோ குளிக்கும் ஒலி. பிள்ளை யாரப்பா. இந்த வீட்டிற்கு நான் வந்த காரியத்தை நல்லபடியாய் முடித்து வை. தோ பாருய்யா. இந்த வாட்டியும் முடியலைன்னா... எனக்குக் கெட்ட கோவம் வரும். உன் கூடப் பேசவே மாட்டேன். எனக்கு அதெல்லாம் தெரியாதுப்பா. இன்றைக்கே இரண்டில் ஒன்று தெரிந்தா -

இருநூறாவது முறையாய் நான் நாத்திகனாகி மீண்டும் மீள முயல்வதற்குள் -



"யாருப்பா அது...?" அப்பாடா! உள்ளேயிருந்து குரல். இந்த மணிக்கு பதில் வந்து விட்டதெனில் என் எண்ணம் ஈடேறும் என்கிற மாதிரி, சகுனம் தட்டுப்பட -

"சார்... உங்ககிட்டே கொஞ்சம் பேசணும்" என்றவாறு எட்டிப் பார்த்த மனிதரை உற்றுப் பார்க்க முயன்றேன். பதினோரு மணிக் கொளுத்தலில் உள்ளேயிருந்து பார்த்த மனிதரின் முகம் ஏனோ ஆந்தையை நினைவுபடுத்தியது.

"குளிச்சுண்டிருக்கேன். வர்றேன்" கதவருகில் தலை மட்டும் எட்டிப் பார்க்க, பதில். ரிக்ஷாக்காரனை அனுப்பி விடலாமா? வேண்டாம். அப்புறம் வெயிலில் எத்தனை தொலைவு நடப்பது? இந்த மனிதர் வந்த பத்து நிமிஷத்தில் பேசி விட்டுக் கிளம்பி விடலாம்.

இரண்டு மூன்று நிமிடம் நின்றிருப்பேன். பக்கத்து வீட்டிலிருந்து ஒரு பெண் பிள்ளை எட்டிப் பார்த்தாள். என்





# காதலுக்கு ஜே!

முப்பத்தைந்து வயசுக்கு எரிச்சலாய் வந்தது. அவள் யாரையோ கூப்பிட்டு என்னைக் காட்டி வேடிக்கை பார்த்தது இரட்டிப்பு எரிச்சல் நல்கியது. 'யோவ்! சீக்கிரம் குளிச்சுட்டு வாயேன்.

உள்ளே இன்னும் சலசல ஒலி. எனக்கு ஆச்சர்யம் மட்டுமில்லை. ஆத்திரமும். வெளியே ஒருத்தன் காத்திருக்கும்போது இத்தனை விஸ்தாரமாய்க் குளிக்கத் தோன்றுமா என்ன? ப்ச். நம் ஆத்திரம் நமக்கு. ஒரு வேளை நாம் வந்த நிமிடம்தான் அவர் பாத்ரூமுக்குள் நுழைந்திருக்கலாம்.

"நாராயணா... நாராயணா... ஈஸ்வரா..." என்று ஆரம்பித்து ஒரு பெரிய லிஸ்ட்டாய்க் கடவுள்களின் பெயர்களைச் சொன்னார். குளித்து முடித்தவுடன் என் தாத்தா கூட இப்படிச் சொல்வதுண்டு. என் தங்கை புவனாவும் இப்போதெல்லாம் அதைக் காப்பியடிக்கிறாள்.



டெல்லி டவுன் பஸ்ஸில் ஒரு நபர் விடாக் கண்டனாக மகளிர் இருக்கையிலேயே அமர்ந்திருந்தார். அந்தப் பெண்மணி மனம் சலித்துப் போய், 'டீக் ஹை, பைட்டியே பஹன்ஜி (சகோதரி), பைட்டியே' என்று கூறவும் பஸ் பயணிகள் அனை வரும் கொல்லென்று சிரித்தனர். வெட்கிப் போன அந்த ஆண் பயணி எழுந்து இடம் தந்தார்!

— எகனாமிக் டைம்ஸ்

— ஆர். கோபாலன்

ஒருவேளை எந்தக் கடவுளுக்காவது காதில் விழுந்து அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாகாதா என்ற நப்பாசையாய் இருக்கக் கூடும். அந்த புவனாவின் ஜாதகத்துடன் தான் இந்த வீட்டுப் படியில் தவம். அவள் திருமணம் பொருட்டுத்தான் எந்த அவமதிப்பையும் சகிக்கும் திடம்!

அப்பா! ஒரு வழியாய்க் குளியல் ஆயிற்று. இடுப்பில் சின்னதாய் ஒரு துண்டு கட்டிக் கொண்டு காலடியில் ஈரம் தரையில் பதிய நடந்து வந்து கதவு திறந்தார்.

"என்ன விஷயம்?" என்னை 'வாக்வம் க்ளீனர்' விற்பனைப் பிரதிநிதியாய் நினைத்தாரோ?

"உள்ளே வந்து பேசலாமா?"

"வாங்கோ..." அழைப்பில் அரை மனது தெரிந்தது.

"எங்க வீட்டுப் பெண்ணோட ஜாதகமும் உங்க பையனோட ஜாதகமும் பொருந்..."

அவருக்கு, 'ப்பூ இவ்வளவுதானா?' என்று தோன்றியதோ?

"இருங்கோ. ஒரு நிமிஷத்தில் வந்துடறேன்."

ஏற்கனவே ஒரு நிமிஷம் என்று சொல்லி விட்டுச் சரியாய் இருபத்தைந்து நிமிடமானது நினைவுக்கு வந்தது. ரிக்ஷாவை அனுப்பி விடலாமா? இத்தனை நேரம் காக்க வைத்த கஸ்மாலத்திடம் கொள்ளையடிப்பானே? வேண்டாம். தங்கை கல்யாணத்தின் பொருட்டு எத்தனையோ செலவினங்கள். ரிக்ஷாவையும் எழுதி விடுவோம்.

மனிதர் உள்ளே போய் ஜலத்தில் வேட்டியை அலசுவது காதில் விழுந்தது. மேலும் ஐந்து நிமிடம் சென்று வெளிப்பட்டார்.

மடித்த வேட்டியை ஒரு முறுக்காய் முறுக்கி, கையிலிருந்த மழமழத்துப் போன மூங்கில் குச்சியால் சடக்கென்று ஒருவித லாகவத்துடன் உயரத்தில் கட்டியிருந்த கம்பிக் கொடியில் போட்டார்.

சாதாரண மனநிலையில் இருந்திருந்தால் இதையெல்லாம் அனுபவித்து ரசித்திருப்பேன். இப்போது டென்ஷன். தங்கை டென்ஷனுடன் ரிக்ஷா டென்ஷனும் சேர்ந்து கொண்டு விட்டது.

வேட்டியை உலர்த்தி விட்டு வருவார் என்றுதான் எதிர்பார்த்தேன். தடக்கென்று சாமி படங்களின் முன் போய் நின்று கொண்டார். உரத்த குரலில் சுலோகங்களைச் சொல்ல ஆரம்பித்தார். டென்ஷனையும் மீறி மனம் லயித்தது. இந்தக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும். ஒவ்வொரு சாமிக்கும் செம்பருத்திப் பூ.

அப்பாடா. ஒரு வழியாய் தீபாராதனை. இப்போது பஜனை மாதிரி ஏதோ பாடலைப் பாட ஆரம்பித்து விட்டார். போச்சுடா. அந்தக் கற்பூரத்தை எத்தனை ரூபாய்க்கு வாங்கினார் என்று விசாரிக்க வேண்டும். இத்தனை நேரமா எரியும்? வாட்சைத் திருப்பி நேரம் பார்த்தால் என் அவசரத்தைக் காட்டிக் கொள்வது போல் ஆகும் என்று பயந்து, தற்செயலாய்க் கழுத்தைத் திருப்புகிறவன் போல் திருப்பி, அவர்கள் வீட்டு கடிகாரத்திலேயே நேரம் பார்த்தேன். ஐயோ! ஒரு மணி நேரமாகவா காத்திருக்கிறேன்?

பயத்துடன் ரோட்டை எட்டிப் பார்த்தேன். ரிக்ஷாக்காரன் வண்டியிலேயே படுத்து, வெயிலுக்குச் சுகமாய்த் தூங்கிப் போயிருந்தான். நிம்மதியாய்த் தூங்குவது

பார்த்தால் கல்யாணத்துக்குத் தங்கை யாரும் இல்லை என்று புரிந்தது.

பக்கத்தில் ஏதோ ஃபாக்டரி இருக்கும் போலும். சங்கு பிடித்தது. எனக்கு இந்த ஏரியா அதிகம் பரிச்சயமில்லை. தாம்பரம் பக்கம் இப்படி இருக்கும் என்று எனக்குத் தெரியாது. திருவல்லிக்கேணிதான் என் சொர்க்கம். இங்கு ஸ்டேஷனில் இறங்கி ரிக்ஷா வைத்துக் கொண்டு வந்தது, பெரிய ஊருக்குப் போகிற பயணம் போல்தான் இருந்தது.

என் தங்கையை இந்த வீட்டில் கொடுத்தால், ஒவ்வொரு தடவையும் இப்படித்தான் அவஸ்தைப்பட்டு அவள் பிறந்தகம் வர வேண்டும். ஆனால் இப்போது முப்பது வயசுக்குக் கல்யாணமாகாமல் அவள் நிற்பதை விட, அப்புறம் பிறந்தகமே வராமல் இருந்தால் அது பொருட்டல்ல.

திடீரென்று பூஜை, பாடல் எல்லாமுமாய் நின்று விட, அப்பாடா என்று திரும்பிப் பார்த்தேன். நமஸ்கரிக்க ஆரம்பித்தார். இதோ முடிந்துவிடும் என்ற எதிர்பார்ப்போடு பார்த்தேன். ஐயோடா! எனக்குத் தெரிந்து ஒருமுறை நமஸ்கரிப்பார்கள். இரண்டுமுறை நமஸ்கரிப்பார்கள். போனால் போகிறது நான்கு. இங்கே என்னடாவென்றால் மனிதர் இது வரைக்கும் இருபது முறை முடித்து விட்டார். ஒரு வேளை எக்ஸர்ஸைஸ் பண்ண இது ஒரு சாக்கோ?

“ஐ’ஆம் ஸாரி. நான் பூஜை முடிக்காமல் யார்கிட்டேயும் பேசறதில்லை” என்று சொன்னவாறு ஒருவழியாய் வெளியே வந்தார். திருநீறு உலர்ந்து இப்போது சுண்ணாம்பு அடித்த மாதிரி கையெல்லாம் பட்டை வரிகளாய்த் தெரிந்தது.

“சேச்சே... என்ன ஸாரியெல்லாம் சொல்றீங்க... நீங்க பெரியவர்...” என்று சட்டென்று எழுந்து நமஸ்கரித்தேன். “ஐயா. என் வீட்டுப் பெண்ணை எப்படியாவது உங்க வீட்டுப் பிள்ளைக்கு ஏற்றுக் கொள்வீராக!” - மனசு வேண்டியது.

“ஐய்யயோ... என்ன தம்பி இது நமஸ்கார மெல்லாம் பண்ணிக்கிட்டு... எழுந்திருங்க.”

“வந்து... இதுதான் என் தங்கையின் போட்டோ...” இருப்பதிலேயே சிறப்பாய் அவளை எடுக்க முயன்றிருந்த போட்டோவை எடுத்துக் காட்டினேன்.

அவர் அதைக் கையில் கூட வாங்கவில்லை. “இருக்கட்டும். இருக்கட்டும்.”

“வந்து... என் தங்கை பள்ளிக்கூடத்தில் கிளார்க்காய் வேலை பார்க்கறா...”

“அப்படியா...? நாங்கதான் பாங்க் அல்லது கவர்மென்ட்டுன்னு எழுதியிருந்தோமே?”

“இருந்தாலும் இரண்டு ஜாதகங்களும் பிரமாதமாய்...” அவநம்பிக்கையுடன் இழுத்தேன். அவர்கள் வீட்டுப் பையன் மட்டும் துக்கிளியூண்டு கையகலக் கம்பெனியில் வேலை செய்யலாமாம். பாங்க் உத்யோகத்தில் பெண் வேண்டுமாம்!

அவர் தீர்மானம் கலையாத குரலில் “அவன்தான் அப்பிடி கண்டிஷன் போடறான். நாளைக்குக் காலத்துக்கும் அவன்தானே அவ கூட வாழப் போறான்?”

“இப்படிச் சொன்னா எப்படி.... நீங்க என்னவெல்லாம் செய்யணும்னு எதிர்பார்க்கறீங்கன்னு சொன்னால்...” இன்னும் பெண் கூடப் பார்க்காத நிலையில் பேரம் பேசுவது பைத்தியக்காரத்தனம் என்று தெரிந்தும் கேட்டேன்.

அவர் வேறு ஒரு தீர்மானத்துக்கு வந்திருக்க வேண்டும். “நேத்தி ஒரு இடத்தில் பெண் பார்த்துட்டு வந்தோம். எங்களுக்குப் பிடிச்சுடும் போல்தான் இருக்கு...”

“இது... ஏழு பொருத்தம் இருக்கு...”

“அதில் எழுநூறு பொருத்தம் இருக்கு...” அவர் பேசும் குரலில் கிண்டலா, கோபமா என்று புரியவில்லை.

“சரி... நான் கொஞ்சம் வெளியே போகணும்..” அவராகவே சட்டென்று எழுந்து கொண்டார். போய்யா என்று துரத்தல் தெரிந்தது.

“தொந்தரவுக்கு மன்னிக்கணும்.” எழுந்தேன்.

**வெ**ளியில் வந்தேன். ரிக்‌ஷாக்காரனை எழுப்பினேன். “வாய்யா.”

ஒரு மணி நேரத்துக்கு மேல் வெயிட்டிங் போட்டதற்காய் அவன் என்னை வசை பாடுவான் என்று நினைத்தேன். அவன் புன்னகையுடன் சீட்டைத் துடைத்து என்னை அனுமதித்தான். பணம் பண்ணுவதில் இதுவும் ஒரு மார்க்கம். ஏழை. இவனுக்குத் தாராளமாய்க் கொடுக்கலாம்.

ரிக்‌ஷாவில் ஸ்டேஷனை அடைந்து அவன் கேட்ட இருபத்தி ஐந்தை மறு பேச்சின்றிக் கொடுத்து, மின்சார ரயில் ஏறி, மீண்டும் பஸ்... மீண்டும் நடை. அப்பாடா. உஸ்ஸென்ற அனல் காற்று முகத்தைப் பிறாண்டும் பஸ்ஸின் ஓர சீட்டை மறக்க, வீட்டுக்குள் நுழைந்தவுடன் தண்ணீரை முகத்தில் வாரி அடித்துக் கொண்டேன். மீண்டும் எந்த ஜாதகம் பொருந்துகிறதோ அந்த ஆள் வீட்டுக்குப் போய் இப்படிக் காத்திருந்து... அவள் கல்யாணத்தின் பிறகுதான் என் கல்யாணம் என்ற நிலையில் நேரடியாய் அறுபதாம் கல்யாணமே சாத்தியம் என்று தோன்றியது.

“**அ**டேடே... வந்துட்டியாப்பா... வா... வா...”

ஐயோ. அம்மா. உன் ஆர்வத்தை நேர் கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். “என்ன சொன்னார்கள்? என்றைக்குப் பெண் பார்க்க வருகிறார்கள்?” என்று விசாரிக்கப் போகிறாயே... என்ன சொல்லட்டும்?

இப்போது தங்கையின் ஏமாற்றத்தையும் விட, என் ஏமாற்றத்தையும் விட அம்மாவின் ஏமாற்றம் விஸ்வரூபமாய்த் தெரிந்தது.

ஆர்வத்துடன் அம்மா கிட்டே வந்தாள். ஆனால் ஆர்வமாய் விசாரிக்காமல் வேறு ஏதோ சொன்னாள். “இன்னிக்கு உன்னைப் பார்க்க ராபர்ட்டுன்னு ஒருவர் வந்திருந்தார். ரொம்ப நேரமாய் உனக்காகக் காத்திருந்தார்.”

காத்திருத்தல் என்றாலே கடுப்பாகிய விஷயம் என்று நன்கு உணர்ந்தவனாதலால் மரியாதையுடன் கேட்டேன். “எங்கேயிருந்து வர்றாராம்? என்ன விஷயமாம்? விசாரிச்சியா?”

“உம்... நம்ம.. டேய்... கொஞ்சம் பொறுமையாய்க் கேளுடா... குதிக்காதேடா... ஆத்திரமில்லாமல் அட்வைஸ் பண்ணு. புவனா கேட்பா... வந்து... அவன் நம்... புவனாவோட பள்ளிக்கூடத்தில் பிடி. வாத்யாராய் இருக்கானாம். இவளை... இவளைப் பண்ணிக்கணும்னு ஆசைப்படறானாம்.. ஆனால்... கிருஸ்துவா...”

நான் அம்மாவை ஒருகணம் உற்றுப் பார்த்தேன். மின்னும் அவள் கண்களில் எத்தனை பாவங்கள்? தயக்கம், பயம், வியப்பு, ஆர்வம், ஏக்கம், எதிர்பார்ப்பு... சட்டென்று சொன்னேன்.

“நாளைக்கே அவளைக் கூட்டி வரச் சொல்லும்மா... எங்கே வைச்சுக் கல்யாணம் முடிக்கச் சொல்றாங்களோ அங்கே சந்தோஷமாய்ச் செய்து கொடுப்போம்.”



“மாப்பிள்ளை மந்திரி மாதிரி....”

“அப்படியா?”

“ஆமா எம் பொண்ணு எது சொன்னாலும் பதிலே கிடையாது! பொட்டுனு கால்ல விழுந்துடுவார்!”

— டி.எஸ். திருமலைராஜன்

# சின்னமணி

காதலித்தவளை மறக்க முடியாததால் கட்டினவளை ஏற்கத் தவிப்பவன் பற்றிய பழைய கதைதான். ஆனால் யாரும் எதிர் பார்க்காத வண்ணம் மிக நேர்த்தியான திரைக்கதை, அளவெடுத்த வசனங்கள், பொருத்தமான வெளிப்பாடு என இங்கே அங்கே நகர முடியாதபடிக்குக் கட்டிப் போடும் புதிய இயக்குநருக்கு ஒரு சபாஷ். மாறுபட்ட ரீ-ரெக்கார்டிங்கிலும், 'வந்தது ஒரு மந்திரம்' பாடலிலும் அசத்துகிற தேவாவுக் கும்...

டைட்டில் நாயகி கஸ்தூரி 'நடித்து' முன் எப்போதேனும் பார்த்திருக்கிறீர்களா?

இதில் பார்க்கலாம். பால்ய விதவை. வய சுக் காலத்து ஏக்கம்... சோகம்... விரக்தி பிரதி பலிப்பு... எதிர்பாராதவிதமாகக் கிடைக்கும் மறுவாழ்வின் போது அந்த முகத்தில் சட் டென்று பற்றிக் கொள்கிற பிரகாசம்... மிக வும் உழைத்திருக்கிறார்.

சப்தமில்லாமல் விதவை மறுமணத்துக்குக் குரல் கொடுத்திருக்கும் கதை. எங்கே வழக் கம் போல இறுதியில் 'கண்கள் பனிக்க' வைத்து விடுமோ என்கிற நினைப்பைத் துடைத்தெறிந்து, கம்பீரமான அந்த பாஸிட்டிவ் கிளைமாக்ஸ்...

மறுபடியும் இயக்குநரைப் பாராட்டத் தோன்றுகிறது.

அப்புறம்... ஹீரோ நெப்போலியன். 'முக மாகப்பட்டது முரட்டுத்தனம் காட்ட மட்டு மல்ல என்பதை இனிவரும் படங்களில் உணர்ந்தால் சரி. ஏனெனில் தவிர்க்க முடி யாத காதல் காட்சிகளில் கூட, எந்த நிமிஷம் அரிவாள் தூக்கி விடுவாரோ என்று பயமா யிருக்கிறது.

மாறாக பயில்வான் ரங்கநாதனும் வடிவே லும் தருகிற நகைச்சுவை விருந்து ரசனைக் குரியது. துண்டுத் துண்டு ஜோக்குகளாக அல் லாமல், எக்ஸ்பிரஷன்கள் மூலம் ஹ்யூமர் கொண்டு வர முயன்று வென்றிருக்கிறார்கள்.

'சாராயம் வேணாங்க' என்று சொல்லும் பாடலில் கூட அரைகுறை உடை, நடன அசைவுகளில் தொக்கி நிற்கும் விரசம் உள் ளிட்ட சாபக்கேடு விஷயங்கள் ஆங்காங்கே தென்பட்டாலும் ஒரு புதிய இயக்குநரின் ஆரோக்கியமான கதை சொல்லும் பாணிக்கு முன் அவற்றை மன்னித்து விடலாம் என்றே தோன்றுகிறது!

— ஆர்.பி.ஆர்.



**3** சென்னை, டிசம்பர் 30, 1994

**வா**சலில் நின்ற அந்த உருவத்திற்கு கூடை கவிழ்த்தாற்போல் செம்பட்டைத் தலை; தேங்காய் துருவலாம் போல முன் துருத்திய பற்கள் நான்கு; கம்பளிப் பூச்சியாகப் பருத்த புருவங்கள்; மொச்சைக் கொட்டை சைஸில் கன்னத்தில் கருத்த மரு.

அந்த உருவம் இரு கைகளை முன் நீட்டி அழைத்தது. கோரமாக இளித்தபடி 'வா' என்றது கரகரத்த குரலில்.

கங்கா மறுபடி அலறினாள். அவள் உடல் வெடவெடவென்று நடுங்கத் துவங்கியது.

"பயப்படாதே கங்கா! நான்தான் உன் சூர்யா!"

பதற்றமாகச் சொன்ன அந்த உருவம், தன் செம்பட்டை விக்கை விலக்கி, இன்ன பிற முரட்டு மேக்கப்பை அவசரமாகக் கலைக்கவும் –

"ஆ! சூர்யா! நீங்களா..."

பெரிதாக விம்மல் வெடிக்க, அவனை நோக்கி தாவிச் சென்றாள்.

"என் அமெச்சூர் அதிர்ச்சி வைத்திய முயற்சிக்கு மன்னித்து விடு கங்கா!"

நடுங்கிய பறவை அவனிடம் ஒடுங்கியபடி, "என்ன...என்ன...சொ.. சொல்கிறாய்?" என்று திக்கியது.

அவன் அசட்டுச் சிரிப்புடன் "பல சினிமாக்கள் பார்த்த பாதிப்பு! ஒரு அதிர்ச்சியில் மறைந்த நினைவு, இன்னொரு அதிர்ச்சியில் திரும்பி விடலாம் என்று நினைத்தேன்! ஐயாம் சாரிம்மா!"

# சுட்டுவிடு, சூர்யா!

"தனிமையில், இரவில் எவ்வளவு கோரம் தெரியுமா? என் குலை நடுங்கிவிட்டது!"

அவளிடம் இன்னமும் விசிப்பு மிச்சமிருந்தது. அவனை இறுகக் கட்டிக் கொண்டிருந்தாள். ஆதாரவாகத் தடவிக் கொடுத்தான்.

ஒரு பருவப் பெண்ணின் அண்மை சூர்யாவைப் பரவசப்படுத்தியது. கங்காவின் கன்னத்தில் உஷ்ணமாக உரசியது அவன் உதடு. வெட்கத்தில் சிவந்தது அவள் முகம்.

"உன்னை பயமுறுத்தியதும் ஒரு வகையில் நல்லதுதான்."

"என்ன...என்ன நன்மை?"

"இந்த இனிய இணைப்பு கிட்டியிருக்குமா?" என்று இன்பமுடன் கிசுகிசுத்து விட்டுத் தாபமுடன் அவள் முகம் நோக்கிக் குனிந்தான்.

"சாரி சார்! எல்லாம் நம் திருமணத்திற்கு அப்புறம்தான்!"

விலுக்கென்று விலகிக் கொண்டு கண் சிமிட்டிச் சிரித்தாள்.

## ஜனவரி 2, 1995

**க**ண்காணிப்பைச் சிறிது நேரமே செய்துவிட்டு சீக்கிரமே திரும்பியிருந்தான் சூர்யா. மொட்டை மாடியில் காற்று வீசியது.

கங்கா மேற்கு திசை நோக்கி மெய்மறந்திருந்தாள்.

"அப்படியென்ன அங்கே பார்க்கிறாய்?"

கங்கா திரும்பாமல் "எங்கே கவனம் சூர்யா? கண் முன் பார் கவிதை!"

சூரியன் ஆரஞ்சாக மெல்ல அடிவானத்தில் தன்னை 'இழக்க', பிரதேசமே பொன்னிறப் பூச்சில்.

"உன் அருகாமையில் எதையுமே கவனிக்க மறந்துவிடுகிறேன் கங்கா!"

"அப்படியா?" என்று கங்கா மகிழ்ச்சியுடன் திரும்பினாள்.

"நான் இவ்வளவு சடுதியில் காதல் வயப்படுவேன் என்று நினைத்ததில்லை டார்லிங்! நீ என்றும் என்னுடையவள் என்ற நினைப்பே இனிக்கிறது!"

கங்கா பரவசமுடன் அவனைப் பார்த்துச் சிரித்தாள். பாக்கட்டிலிருந்து ஒரு சிறு பார்சலை எடுத்துக் கொடுத்தான்.

"என்ன இது?"

"என்னவளுக்கு என் காதல் பரிசு!"

அவள் பரபரப்புடன் வண்ணத்தாளைப் பிரித்ததும் ஒரு அட்டைப்பெட்டி. அதன் மேல் ஸ்கெட்ச் பேனாவால் 'டு மை டியரஸ்ட்' என்ற சூர்யாவின் கைவண்ணம்.

"உன் அன்பு என்னை நெகிழ்த்துகிறது சூர்யா!"

"எமோஷனல் ஆகாதே டியர். பெட்டியைத் திற."



திறந்தாள். உள்ளே ஓர் அழகிய தங்கச் சங்கிலி. மிக மலர்ச்சியுடன் வெளியே எடுத்தாள். சங்கிலியில் ஆர்ட்டின் வடிவில் தடித்த தங்க லாக்கெட் ஒன்றும் ஊசலாடியது.

"அற்புதமான சங்கிலி!"

"மிக அற்புதமான ஒரு தேவதைக்கு!"

"கொள்ளை விலை இருக்குமே சூர்யா!"

"விலை மதிப்பற்ற என் காதலுக்கு!"

ஆசையுடன் அவனே கங்காவிற்கு அணிவித்தான். அந்தச் சங்கிலி அவளுக்கு மேலும் அழகு செய்தது.

**ஜனவரி 5, 1995**

**கா**லை 8:00 'குப் குப்' பைப் சற்றே இளைப்பாற, விஞ்ஞானி ப்ரகாஷ் ராவ் தேன் குடித்த நரி மாதிரி இருந்தார். சூர்யா சைகையாகத் தன் கட்டை விரல் உயர்த்தி வினவ–

"எஸ்!" என்றார் ப்ரகாஷ் அடக்க முடியாத பெருமித முகத்துடன்.

உவகையுடன், உளமாற வாழ்த்துத் தெரிவித்தான். அவர் கரம் பற்றிக் குலுக்கி விட்டு முத்தமிட்டான்.

"இன்று இந்தியாவிற்குப் பொன்னாள்!"

"ஆம் சூர்யா!"

"காரணம் நீங்கள்!"

'இல்லை' என்று தலையசைத்து, "அவன்!" என்று மேலே கை காண்பித்தார்.

மேசை மேலிருந்த அந்த பருத்த ஃபைலை கையிலெடுத்தார் ப்ரகாஷ். வாஞ்சையுடன் அதைத் தடவிக் கொடுத்தார். கனவில் லயித்தாற் போல சில வினாடிகள் ஃபைலை வெறித்துப் பார்த்தார். மானசீகமாக 'ஹஷ்த்திரா' தெரிந்தது போலும். பரவசத் திருப்தியுடன் நிமிர்ந்தார்.

"இயான் ஃப்ளெமிங்கின் ஜேம்ஸ் பாண்டு மாதிரி நீயும் சுடலாம்தானே?"

சூர்யா 'மையமாகத்' தலையசைத்து விட்டுப் புன்னகையுடன், "எதற்குக் கேட்கிறீர்கள் சார்?"

"இந்த ராக்கெட் ஃபைல் விலைமதிப்பற்றது! நீ சர்வ ஜாக்கிரதையுடன் காத்துச் செல்ல வேண்டும்..."

"கவலையை விடுங்கள். அதி ரகசியமாகவே செயல்படுவேன். அப்படியும் எவராவது இதைக் கவர வந்தால்–"

ப்ரகாஷ் ராவ் அவசரமாகக் குறுக்கிட்டு, "தயங்காமல் சுட்டு விடு சூர்யா!" என்றார் தீவிரமாக. பின்,

பிரிய மனமில்லாதவர் போல் அந்த ராக்கெட் கோப்பை சூர்யாவிடம் ஒப்படைத்தார்.

"கேர்ஃபுல் சூர்யா."

"ஷ்யூர் சார். என் உயிரை விட இதை அதிகம் மதிக்கிறேன்!"

பத்மா ரவிசங்கர்

## அடுத்த இதழ் சித்திரைச் சிறப்பிதழ்!

தேவிகுளம் பீர்மேடு அப்படின்னா என்னா தெரியுமா?

சிரிக்காதிக. இது வயித்தெரிச்சல். பெரிய வயித்தெரிச்சல். காசா கொட்டற ஒரு பகுதி கேரளாவுக்குப் போயிருக்க. வரண்ட பகுதி தமிழ் `நாட்டுக்கு வந்துருச்சு.

ஏலத்தோட்டம் வளர்ந்து விளையறது கேரளா. காசாறது தமிழ்நாடு. எல்லாம் இந்தியாதானேன்னு சொல்விக. இல்ல சார். அவக வேற. நாம வேற. இந்த இடத்துலேர்ந்து கேரளா எல்லை ரோடு பார்த்திகளா எப்படி மழமழன்னு.... இது எல்லாம் சரிதான். யூனியன்னு ஒண்ணு ஆரம்பிச்சி.....

# பாலகுமாரன்

எழுதும்

# என்னுயிரும் நீயல்லவோ

— ஏலம் மணக்கும் காதல் தொடர்கதை...

"ஹா...! உன்னைப் பற்றி ஆத்மா சரியா கத்தான் சிலாகித்துச் சொல்லியிருக்கிறார்!"

"அடுத்து உங்கள் ப்ரோகிராம்?"

"அடுத்ததாகவா?" சிரித்தார். "மாறு வேடத்தில் டில்லிக்கு செல்ல வேண்டும். பின்னர் சலோ ஆஸ்பத்திரி! நானே போய் முடங்கிக் கிடப்பேன். ஓரிரு நாட்களில் கட்டுக்கள் தளர்த்தி முதலில் முகம் காண் பிப்பேன். திடுமென்று 'கோமாவிலிருந்து' ஒரு நாள் விழித்து எழுவேன்! அவ்வளவுதான். மருத்துவ விடுப்பு முடிந்து திரும்பவும் ஹாயாக என் அலுவலகம்!" உரக்கச் சிரித் தார்.

அந்தக் கோப்பு கைக்குக் கிடைத்த நொடி யிலிருந்து உச்சபட்ச எச்சரிக்கையில் இருந்த சூர்யா திட்டமிட்டபடி செயல்பட்டான்.

முன்னரே 'விசாரித்து' வைத்திருந்த ஒரு ப்ரத்யேக தனியார் நிறுவனத்திற்கு நேராகச் சென்று, உடனிருந்து, இமைக்காமல் கவனித் துப் புல மணி நேரங்கள் கழிந்து சூர்யா வெளியே வந்தபோது–

ராக்கெட் ஃபைல் மைக்ரோ ஃபிலிமாக உருமாறியிருந்தது! அதற்குச் சில நிமிடங்கள் முன் அந்தப் ஃபைலைத் தீயிட்டுக் கிடைத்த சாம்பலை டாய்லட்டில் ஃப்ளஷ் செய்திருந் தான்!

துளியும் உறக்கமின்றி, இரவைக் கழித் தான்.

**ஜனவரி 6, 1995**

"ஏன் சூர்யா இன்று வெளியே செல்ல வில்லையா?"

"இல்லை கங்கா. இன்று குளிப்பதாகக் கூட இல்லை!"

"ஏன் சூர்யா?"

"நேற்றிரவு சரியான உறக்கமில்லை. ஜுரம் போல உணர்கிறேன்."

அவள் அவனைத் தொட்டுப் பார்த்து விட்டு, "உஷ்ணம் இல்லையே!" பின் குறும் பாகச் சிரித்தபடி, "காதல் ஜுரமாக இருக் கும்!" என்றாள். "நீ வெளியே செல்லாதது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தருகிறது தெரி யுமா?"

சூர்யா எங்கோ கவனமாக இருந்தது கண்டு, "ஹேய்! என்னாயிற்று?" என்று அவ னைச் செல்லமாகத் தட்டினாள்.

"ஓ... ஒன்றுமில்லை!"

"பொய் சொல்லாதே சூர்யா! நீ இயல் பாக இல்லை! ஏதோ பெரும் பாரம் சுமப்ப வன் போல் இருக்கிறாய். என்ன அது? என்ன உன் கவலை? சொல் சூர்யா."

"வீணாகக் கற்பனை செய்யாதே கங்கா."

"புரிகிறது மர்ம மனிதா!" சில்லறை கொட்டியது போல் சிரித்துவிட்டு, "உன் கவ லையில் பகிர்ந்து கொள்ளத்தான் கே

டேன். போகட்டும். இன்று என்ன சமையல் செய்யலாம் சூர்யா?"

### இரவு *9:00*

"நாள் பூராவும் அடைந்து கிடந்ததில் ஒரு மாதிரி இருக்கிறது. ஒரு 'வாக்' போய் வரலாமா சூர்யா? கேட்டபடி சோம்பல் முறித்த கங்காவிடம் எழில் சொட்டியது.

"போகலாமே" என்றான் உற்சாகமாக. "என் இதய ராணி எதைச் சொல்லி நான் மறுத்திருக்கிறேன்!"

அவர்கள் இருந்த ஏரியா ஏகாந்தமாயிருந்தது. கங்கா அவனுடன் கை கோத்துக் கொண்டாள். உரசியபடி நடந்தனர்.

பொழிந்த பால் நிலவு. குளிர்ந்த மார்கழிக் காற்று. மணந்த பங்களாக்களின் தோட்டங்கள்.

"என்ன ஒரு ரம்யமான சூழல்!"

"ஆம் கங்கா.. மலைவாசஸ்தலம் போல் உணர்கிறேன்!"

"அதுவும் என் சூர்யா அருகாமையில் சூழ்நிலையின் இன்பம் இரட்டிப்பாகிறது!"

"எந்நேரமும் சாவை எதிர்பார்த்து வாழ்ந்த எனக்கும் ஓர் சொர்க்க வாழ்க்கை அமைகிறதா? என்னையும் ஒருத்தி நேசிப்பாளா?" என்றான் நம்பாமல்.

"உன்னை உலகம் உள்ளளவும் நேசிப்பேன் சூர்யா!"

சூர்யா உணர்ச்சி வசப்பட்டாற் போலிருந்தான். மரங்களடர்ந்த அகலமான அவென்யூவில் நடந்தனர். ஓர் இருள் தீவு தந்த துணிவில் அவள் இடுப்பில் கை வைத்துத் தன்னுடன் சேர்த்து அனைத்துக் கொண்டான். அவளிடமிருந்து எதிர்பாரா அதிர்ஷ்ட முத்தம் கிடைத்ததும் விடுவித்தான். திளைத்தபடி திரும்பினர்.

வீட்டை நெருங்கியதும் சூர்யா திடுக்கிட்டான்.

காம்பௌண்டு கேட் விரியத் திறந்திருந்தது. வீட்டின் வாசல் கதவும் அப்படியே... ஒன்பது லீவர் பூட்டுகள் உடைக்கப்பட்டு...

வீட்டினுள்ளே யானை புகுந்தது போலக் களேபரமாகக் கலைக்கப்பட்டிருந்தது. தினசரிகள் கலைக்கப்பட்டுக் காகிதங்கள் ஆங்காங்கே. தலையணைகள் கிழிக்கப்பட்டு பஞ்சு பறந்தது. அவர்களின் ஆடைகள் வீசி எறியப்பட்டு, மிதியடிகள் புரட்டப்பட்டிருந்தன. சமையலறையைக் கூட விடவில்லை. சொற்ப பாத்திரங்கள் உருட்டப்பட்டு, சாமான்கள் கவிழ்க்கப்பட்டு... வந்திருந்தவனின் மூர்க்கம் தெரிந்தது.

எவரோ அந்த மைக்ரோ ஃபிலிமுக்காக வந்து அல்லாடியிருக்கிறார்கள் என்று புரிந்தது. வாசற்கதவைத் தாழிட்டுவிட்டு வந்தான்.

பிரமித்திருந்த கங்கா, "என்ன இது?" என்றாள்.

"எவனோ திருடனின் கைவரிசை!"

"நல்லவேளை நான் கழட்டாமல் அணிந்திருப்பதால் என் தங்கச் சங்கிலி தப்பித்தது!"

"தாமதியாமல் பறந்து விட வேண்டியது தான்."

"எங்கே சூர்யா?"

"புது டில்லிக்கு!"

"எப்போது செல்கிறோம்?"

"நாளை அல்லது மறுநாள்!"

சமையலறைச் சாமான்களை ஒழுங்குபடுத்திவிட்டு வருவதாகக் கங்கா செல்ல, சூர்யா யோசித்தபடி நடந்ததில் சிறிது நேரம் சென்றது.

திடீரென்று அவன் சிந்தனை அறுந்தது; தன்னை எவரோ எங்கிருந்தோ கவனிக்கிறார்கள் என்று உள்ளுணர்வு. அவன் புலன்கள் கூர்மையாயின.

வெளியே தோட்டத்தில் சரசரவென்று மெல்லிய சத்தம். ஓடிச் சென்று ஜன்னல் வழியாகப் பார்த்தான். இருளில் ஒன்றும் புலப்படவில்லை. அசந்தர்ப்பமாக மேகத்தினுள் தொலைந்த நிலா. பக்கவாட்டில் மாடிப் படிகள் கிழே மறைந்திருக்கலாமோ...

சட்டென்று மின்சாரம் நின்று போனது. பூரணமான இருள். வெளியே வாசல் சுவரில் மெயின்ஸ் வைத்தவனைச் சபித்தான். அல்லது வீட்டினுள் ப்யூஸ் ஏதும் போய் விட்டதோ..

"கங்கா மெழுகுவர்த்தி ஒன்று ஏத்தி வா."

பதிலில்லை.

"கங்கா!" பதற்றமுடன் கூவினான். "ஆர் யூ ஆல்ரைட்?" பாத்ரூமில் இருக்கிறாளா.. மறுபடி அழைத்தான். மறுபடி மௌனம். கொல்லைக் கதவும் திறந்திருக்குமோ... பாய்ந்து சென்று ஹால் அலமாரியில் கை வைத்தான்.

அவன் துப்பாக்கியைக் காணவில்லை! வீட்டினுள் அலமாரியில்தான் வைத்தான். அவசரமாக அலமாரி முழுவதும் துழாவினான். துப்பாக்கி கிடைக்கவில்லை! எவரோ–

வாசலில் ஒரு ஜோடி காலணி ஒலி– எவரோ அத்துமீறியுள்ளதை மறைக்க முயற்சி செய்யாமல் – உரத்துக் கேட்டது. பிறகு, தகரத்தைத் தரையில் வைத்துச் சுரண்டினாற் போல் ஒரு வினோத ஒலி எழுந்தது. என்ன செய்கிறார்கள் இங்கே....

திடுதிப்பென்று கங்காவின் 'வீல்' என்ற அலறல் கேட்டது!

பின்கட்டை நோக்கிப் பாய்ந்தான். திக்குத் திசை தெரியாத இருட்டு. தட்டுத் தடுமாறி சர்வீஸ் வராந்தாவிற்காகத் திரும்ப–

காத்திருந்த ஓர் உருவம் அவன் பின்னந் தலையில் கனமான பொருளால் நச்சென்று தாக்க– சடுதியில் மயக்கமாகிச் சரிந்தான் சூர்யா!

(தொடரும்)

# பெருங் கூட்டத்தில் ஒருவன்

சிட்லபாக்கம்–

சென்னைக்குத் தெற்கே இத்தனாவது கி.மீ.யில் அமைந்துள்ள, சாக்கடைகள் நிறைந்த புண்ணிய க்ஷேத்ரம். கணேஷுக்கு உத்தண்ட ராமனைக் கண்டுபிடித்து விட்டால் போதுமென்றிருந்தது.

"வரதராஜா தியேட்டர் தெரியுமா? அங்க போய்க் கேட்டா, ஏன் கேப்பானேன். வரத ராஜா தியேட்டர்லேருந்து நேரா கீழே போனா வலது பக்கம் திருப்பம் வரும். அங் கேருந்து மூணாவது லெப்டோ, நாலா வதோ... வாசல்ல கொய்யாமரம் கூட இருக் கும்."

உத்தண்டராமனின் விலாசம் இது! உதவி ஆசிரியர் கல்யாணராமன் கொடுத்தது. சொல் வதைச் செய்வதே நிருபன் வேலை. திருப்பிக் கேட்டால், கல்யாணராமன் தமது சர்வீஸ் சலுகையைப் பயன்படுத்தி, கூடிய விரைவில், சென்னை மொழியில் 'கல்தா' கொடுத்தாலும் கொடுக்கலாம்.

வரதராஜா தியேட்டர். இங்கே ஒரு முறை பெரியப்பாவோடு இடம் பார்க்க வந்த ஞாபகம். பெரிதாய் ஏரி உண்டு. அதைத் தூர்த்து தூர்த்து வீடாக் கிக் கொண்டிருப்பதாகக் கேள்வி.

நேராகக் கீழே! என்றால் எந்த பக்கம்...?

யாரைக் கேட்பது? உத்தண்டராமன் தன் எழுத்தின் வலிமையால், குறைந்தபட்சம் சிட்லபாக்கத்தில் ஒளி பரப்பியிருக்கக் கூடாதோ! பரபரக்கும் கூட்டம். பெரும் பாலும் சைக்கிள். கொஞ்சம் டி.வி.எஸ்-50. சென்னை நகருக்குள் நுழையும் ஆயத்தங்கள் அனைவர் முகத்திலும்.

"கவிஞர் பத்ரிநாராயணனைப் பத்தி உத்தண்டராமனுக்கு நல்லா தெரியும். ரெண்டு பேரும் சின்ன வயசுல திருவல்லிக் கேணி ரூம்ல ஒண்ணா இருந்தவங்க. நீங்க ஒரு பதினெட்டு இன்ச்சுக்கு மேல போகாம ஒரு இரங்கல் எழுதி வாங்கிட்டு வந்துடுங்க."

இப்போதைக்கு பத்ரி நாராயணன் செய்திப் பொருள். காலமாகிவிட்ட கவிஞர் பத்ரிநாராயணன்.

அமெரிக்கப் பல்கலைகள், கனடாவின் பல்கலைகளிலெல்லாம் வருகைதரும் பேரா சிரியர். ஆறேழு கவிதைத் தொகுதிகள். தன் பிள்ளைப் பருவம், பால பருவம், காளைப் பருவம், பின்னர் தரணி புகழ் சென்னையில் ஒரு வெள்ளைக்காரன் கம்பெனியில் குப்பை கொட்டியது எல்லாம் இளம் பருவத்து நினைவுகளாய், மூன்று தொகுதிகளில் வழ வழா தாளில் எல்லோர் கைகளிலும் தவழ விட்டிருக்கிறார்.

கணேஷ் அதன் பைரேடட் எடிஷன் வைத்திருக்கிறான். பிடித்தது. ஜனரஞ்சக மான மொழி. எப்பேர்ப்பட்டவனையும் கவர்ந்துவிடும். முடித்தவுடன் வாசகன் பிர மித்துப் போய்விடுவான். அனுபவங்களைத் துளி சிந்தாமல் பகிர்ந்து கொண்டுள்ள லாக வம் அசத்தும்.

உத்தண்டராமன் இவருக்கு நேர் எதிர். யோசிக்க வைப்பார். இரண்டே தொகுதிகள் ஒன்று 40 பக்கம். மற்றொன்று 56. முதல் தொகுதி, யார் கண்ணிலும் படவேயில்லை. அதில்தான் தீக்ஷண்யமிக்க கவிதைகள் இடம் பெற்றிருப்பதாய் விமர்சகர் பெருங்கோட்டு வேலன் கூறியிருக்கிறார்,

கணேஷ் இரண்டாவது தொகுப்பைத் தான் படித்திருக்கிறான். ஒவ்வொரு கவிதை யும் புத்துணர்ச்சி மிக்கது. கடைசியில் அழகாய் ஒரு சிக்கல். புது விஷயங்களை யோசிக்க வைக்கும் சிக்கல்.

மூன்றாவது லெப்டோ நான்காவது லெப்டோ தானே?

மூன்றாவது லெப்டின் முனையில் நின் றான். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் தென்னை முதுகு வளைத்துத் தெருவை எட்டிப் பார்த் துக் கொண்டிருந்தது. தெருவில் செம்மண் பரப்பியிருந்தார்கள். மேலே தார் போடும் உத்தேசமிருக்கலாம்.

கொய்யாமரம் இருக்குமோ?

கொய்யாமரம் எப்படியிருக்கும்? யார் கண்டார்? சைதாப்பேட்டையிலிருந்து தி.நகர் போய்ப் படித்தவனுக்கு பஸ் தெரியும், லாரி தெரியும். கொய்யாவா தெரியும்? ஒவ்வொரு பெயர்ப் பலகையாய்ப் பார்ப்பதென்று முடிவு செய்தான்.

நான்காவது லெப்டின் முனையில் ஒரு வீட்டில் U மற்றும் Rன் பெயிண்ட் காணா மல் போக, இரண்டு TH களோடு பெயர்

தெரிந்தது. கேட் திறந்து, மணியடிக்க, வெள்ளை வெளேர் மாமி கதவு திறந்தார்.

"உத்தண்டராமன்னு போயட் இருக்காரா?"

பார்வையில் ஆச்சரியம். உடனே கதவை அகலத் திறந்தார்.

"வாங்கோ, உக்காருங்கோ."

சின்ன மரச்சேர்கள் கொண்ட வரவேற்பறை. கணேஷ் தன் பத்திரிகையின் பெயர் சொன்னான். இன்னும் ஆச்சர்யம்.

"இருங்கோ, குளிச்சிண்டிருக்கார். கூப்பிடறேன்."

அவர்களுக்கு உத்தண்டராமனைத் தெரிய நியாயமில்லைதான். ஆனால் பத்ரி நாராயணனை, உத்தண்டராமனைப் போல் ஆழமாய் யாரறிந்திருப்பார்?

"உத்தண்டராமன், பத்ரிநாராயணனுக்கு ரொம்ப குளோஸ் சார்! அவரப்பத்தி இவருக்கு நல்லா தெரியும். ஒரு காலத்துல இரட்டையர் மாதிரி இருந்திருக்காங்க."

"இருக்கட்டுமய்யா. நமக்கென்ன அதப் பத்தி? நமக்குத் தேவை பெரிய பேரு. கலாநேசனை எழுதச் சொல்லு. விளாசிடுவார். கண்ணுல தண்ணி வந்துடும். கண்டிப்பா அதுக்காகவே, ஆயிரம் காப்பி எக்ஸ்ட்ரா போகும்."

கலாநேசனுக்கு பத்ரிநாராயணனைப் பற்றி ஒன்றும் தெரியாதே என்று வாய்வரை வந்துவிட்டது. கணேஷுக்கு. அடக்கிக் கொண்டான். பெரியவர்கள் பேசுகிறார்கள். இடைமறிப்பது அடாத செயல்.

"கலாநேசன் யாரைப்பத்தி வேணுன்னாலும்தான் எழுதுவாரு."

கல்யாணராமன் கீழ் ஸ்தாயியில் முணுமுணுத்தார்.

"இருக்கட்டுமே. ஒரு விஷயம் புரிஞ்சுக்குங்க கல்யாணம். நாம நடத்தறது வியாபாரம். பத்ரிநாராயணன் மரணம், ஒரு நியூஸ். மக்கள் மத்தியில் அதைப் பத்தி ஒரு பேச்சு இருக்கு. அதை நாம பயன்படுத்திக்கறோம். அவ்வளவுதான். அதுக்கு கலாநேசனை மாதிரி ஒரு பாப்புலர் ஃபிகரை எழுதச் சொன்னா, வியாபாரத்துக்கு வியாபாரமும் ஆச்சு, இரங்கல் சொன்ன மாதிரியும் ஆச்சு."



ஆர். வெங்கடேஷ்

"எதுக்குய்யா இரங்கல் செய்தியெல்லாம்...?" என்று ஆரம்பித்த எடிட்டர், பத்ரி நாராயணனுக்கு மக்கள் மத்தியில் இருக்கிற முக்கியத்துவத்தைக் கொஞ்சம் அசை போட்டபின்,

"யாருக்குய்யா உத்தண்டராமனைத் தெரியும்?" என்றார்.

கல்யாணராமன் மௌனம் காத்தார். அவர் கேட்கும் 'யார்' பெரும்பாலான மக்கள்.

உடனே கலாநேசன் தொடர்பு கொள்ளப்பட்டார். வேறொரு பத்ரிகைக்குத் தன் இரங்கலைத் தெரிவித்துக் கொண்டுவிட்டதாக வருந்தினார். அதே வரிசையிலிருந்த பிற பிரபலங்களும் தொடர்பு கொள்ளப்பட, பத்ரிநாராயணன் அமெரிக்காவில் படுக்கையில் சாய்ந்த போதே பிற பத்திரிகைகள் அவருக்கான இரங்கலைத் தயார் செய்யச் சொல்லியிருந்தது தெரிய வந்தது! முன் யோசனை

யில்லாமல் போய்விட்டதே என்று வருந்தினார் எடிட்டர். காலமும் கடப்பதால், வேறு ஆளில்லாமல், உத்தண்டராமன் எங்கிருந்தாலும் கண்டுபிடிக்கப்பட வேண்டியவர் ஆனார்.

"வாங்கோ, வாங்கோ, பெரியவாளெல்லாம் ஆத்துக்கு வந்திருக்கேள்."

செக்கச்செவேல் உத்தண்டராமன். இரண்டாவது தொகுதியின் பின்னே இருந்த போட்டோ பார்த்திருக்கிறான். இங்கே சுத்தமான நரை. வென்னீரின் வெப்பம் சிவக்க வைத்த காது, மூக்கு, சுருக்கங்கண்ட மார்பு. மேல்துண்டால் மார்பை மூடிக் கொண்டார்.

விஷயம் சொன்னான்.

"நாணா பத்திதானே? நன்னா தெரியுமே! இவருக்குக் கொஞ்சம் தூரத்துச் சொந்தம் கூட."

வாசல் படியில் மாமி நின்றபடி சொன்னாள்.

"முந்தா நாள் ஹிண்டு பாத்தவுடனே வயத்த என்னமோ பண்ணித்து. இவர் கூடப் பேசலை. தலைக்கு ஜலம் விட்டுண்டு, பெருமாள்கிட்ட ரொம்ப நேரம் உட்கார்ந்திருந்தார்."

உத்தண்டராமன் வெறுமனே இருந்தார். அழுத்தமான துக்கம். கொஞ்சம் கழித்து.

"நான் எழுதணுமா?"

கணேஷுக்குச் சங்கடமாய் இருந்தது. அனாவசியமாய் எதையோ கிளறிவிடுகிறோம் என்று தோன்றியது.

"எடிட்டர் விருப்பப்படறாரு. உங்களுக்கு நல்லா தெரியும்னு கல்யாணராமன் சொன்னார்."

அமைதியானார். இரண்டு நிமிடம்.

"இப்பல்லாம் பழைய ஞாபகங்கள் திரும்பத் திரும்ப வந்துண்டே இருக்கு. பண்ணின தப்பு, பேசின பேச்சு, செய்கையெல்லாம் திரும்பத் திரும்ப ஞாபகம் வரது. இப்போ நாணா பத்தி திருப்பியும் யோசிக்கறதுன்னா, நான் இன்னும் ஒரு வாரத்துக்குத் தூங்க முடியாது. இந்தச் சலனமெல்லாம் கூடாதுன்னுதான் நான் ஒதுங்கியிருக்கேன்."

மாமி எலுமிச்சம்பழ ஜூஸோடு பிரசன்னமானார். பெரிய தம்ளர்.

"மெட்ராஸ் வந்தான்னா நாணா எங்காத்துக்கு வராம போமாட்டான். மன்னி மன்னிம்பான். பொறிச்ச கூட்டும், அக்காரடைசலும் அப்படி சாப்டுவான்."

மாமியும் உட்கார்ந்து கொண்டாள்.

"எப்ப வந்தாலும் ரெண்டு பேரும் சண்டை போட்டுண்டே இருப்பா. ஏதாவது ஒண்ணு கெடைச்சுடும்."

உத்தண்டராமன் மெல்லிதாய்ச் சிரித்தார். லயிப்பிலிருந்து மீண்டவர் போல்,

"சண்டையில்லை அது! விவாதம். ரெண்டு பேரும் ரெண்டு ஐடியா உள்ளவா. என்ன பண்ண முடியும்? பேச்சு முத்தித்துன்னா சண்டைதான்."

தம்ளரைக் கீழே வைத்தபோது, வயிறு திம்மென்றிருந்தது. மணி ஒன்பதரை இருக்கலாம். ஜாலியிட்ட ஜன்னலில் வெயில் உறைத்தது.

"திருப்பித் திருப்பி ஒரே விஷயம் தான். பேரு, புகழ், பணம். திருவல்லிக்கேணியில் இருந்ததுலேர்ந்து இதுதான். நான் கவிதை எனக்கு மட்டும்தான் பேன். அதை அவன் எல்லாருக்கும்பான். எல்லாருக்கும்னு சொல்லும்போது, கூடவே கமர்ஷியல் வேல்யுவும் வந்துடறதேம்பேன். அதுதான் எனக்கு வேணும்பான்."

"அவன் பேரு, பேட்டி, போட்டோவெல்லாம் பத்திரிகைல வரும்போது, சந்தோஷமா இருக்கும். இவரும் அவன் கூடத்தான் இருந்திருக்கார். வரட்டுப் பிடிவாதம். சொன்னா



- சிறுகதைகள்
- கவிதைகள்
- பயணக் கட்டுரைகள்
- வியப்புத் தகவல்கள்
- சினிமா
- கலை

ஒரு ஜாலி ஜுகல்பந்தி!

கோபம் மட்டும் வரும். அதென்னமோ ஆசையே அத்துப்போச்சு. இன்னும் எனக்குப் போகலப்பா. நான்தான் இவர் எழுதற ஒவ்வொரு வார்த்தையையும் படிச்சிண்டிருக்கேன். பத்திரிகைக்கு அனுப்புங்கோம்பேன். அதெல்லாம் உனக்குத் தேவையில்ல, போடிம்பார்."

உத்தண்டராமன் சிரித்தார்.

"இவாளுக்கெல்லாம் இன்னும் புரியலப்பா. உயர்ந்த கவிதை மனசினுடைய விஷயம். உயர்ந்த அனுபவம். மெல்ல அசை போட்டு அனுபவிக்கணும். எழுதும்போது தான் அதுக்கு வேறொரு வேல்யூ வந்துடறது. அதனாலதான் எழுதறதையே வுட்டுட்டேன்."

கல்யாணராமனுக்குத் தகவல் சொல்ல வேண்டும். டம்மி போட ஆரம்பித்திருப்பார். பக்கம் ஒதுக்கச் சொல்ல வேண்டும்.

"அவரோட நீங்க இருக்கறாமாதிரி, ஏதாவது போட்டோ இருக்குமா சார்?"

மீண்டும் யோசித்தார்.

"இருக்கும். நானும் அவனும் நெறைய சுத்தியிருக்கோம். ஒவ்வொரு கோயிலா. ரெண்டு பேர் ஐடியாவும் ஒத்துக்கலையே தவிர, எப்பவும் சேர்ந்துதான் இருந்திருக்கோம். அதுக்குக் காரணமும் அவன்தான். எதிர்க் கருத்தையும் எடுத்துக்கற மனப்பக்குவம் அவனுக்குத்தான் உண்டு. உன் கவிதையெல்லாம் ரொம்பப் பொய்யாயிருக்கும்பேன். சரி, என்ன பண்றதும்பான். அவன் தேடின தெல்லாம் அடைஞ்சிட்டதா நெனச்சான். பாப்புலரா இருந்தாத்தாண்டா மதிப்பும்பான். என்னால ஒத்துக்க முடியலை...

"போன தடவை வந்த போதுதான் நாணா பக்குவத்துக்கு வந்திருக்கான்னு தோணித்து. என்ன சாதிச்சோம் ரெண்டு பேரும். ரெண்டு பேருடைய ஐடியாவும் தோத்துப் போச்சுன்னுதான் தோணித்து. காலம் எல்லாரையும் குப்பையாத் தூக்கி வெளிய போட்டுடுத்து. கவிதை எனக்கு மட்டுமேன்னு சொன்ன என் கர்வமும் விதண்டாவாதம்னு தெரிஞ்சுது. காலம் அதுக்குள்ள கடந்து போச்சு. இனி ரெண்டு பேரும் ஆசைப் படறதுல ஒண்ணுமில்லைன்னு புரிஞ்சுண்டோம். எழுதறதையே விட்டுடலாம்னு முடிவு பண்ணோம். கடைசியில அவனுக்கு எல்லாமே திகட்டிப் போச்சு. நான் அந்தச் சுவையே வேண்டாம்னு ஒதுங்கிண்டேன். என்ன அடைய நெனச்சோம்னு தெரியாமலேயே போயிட்டுது."

உள்ளே கடிகார மணியடித்தது. பத்து! இங்கேயிருந்து மௌண்ட் ரோடு போவதற்குள் பதினொன்று ஆகிவிடலாம். கல்யாணராமனுக்குப் போன் செய்து தகவல் வேறு சொல்ல வேண்டும்.

"அப்போ நான் கௌம்பறேன். நாளைக்குக் காலையில வரேன். கொஞ்சம் எழுதி வச்சுடுங்க. ரொம்ப பெரிசா வேணாம். புல்ஸ்கேப்ல ரெண்டு பக்கம் வந்தாப் போதும். போட்டோ கிடைச்சாலும் நல்லது. கொஞ்சம் பாருங்களேன்."

"சரி."

மறுநாள் காலை எழுதிவைத்திருந்தார். நுணுக்கி நுணுக்கி. இரண்டு பழைய போட்டோக்களையும் வைத்திருந்தார். எல்லாம் அழகாய் கவருக்குள் போட்டு, மேலே ஆசிரியர், பத்திரிகை பெயர், முகவரி எல்லாம் தெளிவாய்.

அடுத்த வாரம் வழக்கம்போல் வெள்ளியன்று இதழ் வெளியானது. உத்தண்டராமனின் இரங்கல் அதில் இல்லை. கடைசி நேரத்தில் ஒரு பக்க விளம்பரம் வந்ததென்று, இரங்கலைத் தூக்கி விட்டார்கள். கணேஷுக்கு அதன் தலைப்பு ஞாபகம் வந்தது: 'பெருங்கூட்டத்தில் ஒருவன்'!

குடும்பத்தில் அத்தனை பேரும் சம்பாதித்தால் கூட, இருக்கும் விலைவாசியைச் சமாளிக்க முடியாது போலிருக்கிறது. அப்படியிருக்கும் போது, ஒருவர் சம்பாத்தியத்தை மட்டுமே நம்பியிருந்தால் திடீரென்று பணத்துக்கு எங்கே போவது ? இதுதான் திருமதி கீதாவின் பிரச்னை. அவர் எவ்வாறு சமாளித்தார் ?



# ஸ்ரீராம் சிட்ஸ் - நம்பகமான தேர்வு

நீண்ட நாட்களாகவே ஒரு யோசனை. கணவருடைய வருமானத்தை மட்டுமே நம்பியிருக்கும் குடும்பம். இருக்கும் விலைவாசியில் திடீரென்று பணத்தேவை ஏற்பட்டால் என்ன செய்வது?

கணவர் அலுவலகம் சென்ற பின், பகல் பொழுதைப் பயனுள்ள விதத்தில் செலவிட என்ன செய்யலாம் என யோசிக்கத் தொடங்கினார் திருமதி கீதா. ஒரு லெண்டிங் லைப்ரரி நடத்தினால் என்ன? - எண்ணம் தோன்றிய நொடியிலேயே முடிவு செய்தார். அதன் மூலம் கூடுதல் வருவாய் கிடைக்கும் அல்லவா!

அடுத்த கட்டம் அதற்கான மூலதனத்தைத் தேடும் முயற்சி. உறவினர்கள், நண்பர்கள் என அணுகியபோது கிடைத்தது பணம் அல்ல, புத்திமதிதான். "அதெல்லாம் ஒன்றும் சரியாக ஓடாது". வங்கி உதவியை நாடினார். அங்கேயும் பலன் பூஜ்யம். என்ன செய்வது என்று புரியவில்லை.

அவருடைய அலைச்சல்களைப் பார்த்து அனுதாபப்பட்ட அவர் தோழி சுமதி ஒரு யோசனை சொன்னார். அந்த யோசனை அவர் கணவருக்கும் சரியென்று பட்டது.

அப்படியே செய்தார். விரைவிலேயே அது பலனளித்தது. 'மாருதி லெண்டிங் லைப்ரரி' என்கிற பெயரில் திருமதி கீதா தன் லட்சியத்தைத் தொடங்கினார். இன்று சிறந்த முறையில் வளர்ந்து இயங்கிக்கொண்டிருக்கிறது அந்த லெண்டிங் லைப்ரரி.

தோழி சொன்ன யோசனை என்ன தெரியுமா?
ஸ்ரீராமில் சீட்டு சேர்ந்தால் பணம் தேவைப்படும் நேரத்தில் அது உதவுகிறது என்பதுதான்.

ஆமாம், ஸ்ரீராம் சிட்ஸ் - நம்பகமான தேர்வு.



சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் விமானம் சென்னையைத் தொடுவதற்குள் குழந்தைகள் களைத்துப் போயிருந்தார்கள். இமிக்ரேஷன், கஸ்டம்ஸ் எல்லாம் முடிந்து வீட்டிற்கு வந்து படுத்தாலும்... காலை உற்சாகத்துடன் மனசு விழித்துக் கொள்கிறது. மெட்ராஸ் மணக்கும் காப்பி, ஹிந்து பேப்பர்... சுள்ளென்ற வெய்யில்... எந்த ஊர் போனாலும் நம்ம ஊர் போலாகுமா?

"பீச் போகலாமா?" கண் விழிக்கும் பொழுதே கேள்வி.

குழந்தைகளின் உற்சாகமெல்லாம் நாலு நாட்களுக்குத் தான். கசகசவென்று வியர்வை. கலங்கின தண்ணீர். சுற்றுப்புறம் சுத்தமும் சுகாதாரமும் இல்லாமல். "பாத்ரூம் நீட்டாவே இல்லையே." "தண்ணீர் ஏதோ வாசனை அடிக்கிறது. அப்பா!"

வயிறு சரியாக இல்லாமல் போகிறது இரண்டு பேருக்கும்.

லலிதாவிற்கு இதையெல்லாம் கவனிக்க எங்கே நேரம்? இது அவள் அம்மா வீடு. தோழிகள், புடைவைக் கடை, நகைக் கடை.... இத்யாதி.

குழந்தைகள் நச்சரிப்புத் தாங்காமல் வழக்கம் போல சீனி இதமாக ஆரம்பிக்கிறான். "லலிதா நீ வேண்டுமானால் கொஞ்ச நாட்கள் கழித்து வாயேன். நானும் குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு கருங்குளம் புறப்படறேன்?"

வழக்கம் போல ஊசிப் பட்டாசு வெடிக்க ஆரம்பிக்கிறது. மாமனார் விவேகமாகக் குறுக்கிடுகிறார். "லலிதா, மாப்பிள்ளை சொல்வது வாஸ்தவம். குழந்தைகளுக்கு இங்கே பொழுது போகலை. அங்கே ஆறு இருக்கிறது. மலை இருக்கு. குழந்தைகள் ஆசை தீர விளையாடும். சித்ரா பௌர்ணமி உற்சவம் வேறு ஆரம்பிக்கப் போகிறது. அவர் புறப்படட்டும்."

நெல்லை எக்ஸ்பிரஸ் கிளம்புவதற்குள் குழந்தைகள் குதிக்கத் தொடங்குகிறார்கள். "அப்பா, மலை, ஆறு எல்லாம் அப்படியே இருக்குமில்லையா?"

சிரிப்பு வருகின்றது. வேத காலத்திலிருந்தே ஓடும் தாமிரவருணி எங்கே போய் விடுவாள்? கருங்குள மலை எங்கே போகும்? திருப்பதி ஈசனே வேண்டி ஆசைப்பட்டு வந்து அமர்ந்த தலமல்லவா? ஐநூறு, அறுநூறு வருடங்களுக்கு முன்பு திருப்பதியிலே உடைந்த மரப்படியை, வெங்கடேசனாகவே இங்கே பிரதிஷ்டை செய்யும்படி உத்தரவு ஆயிற்றாம். சின்னஞ் சிறிய குன்றம். தாளமிட்டு அன்னம் பரி



மாறுவதற்குள் குழந்தைகள் மலை மீது ஏறி இறங்கி வந்து விடுவார்கள். மலையை ஒட்டி இரட்டைச் சாரியாய் வீடுகள். சக்திமிக்க ஈசன். அந்தத் தெருவில் மட்டும் 23 ஐ.ஏ.எஸ். ஆபீசர்கள் உருவாகி இருப்பதாகக் கணக்குச் சொல்லுவார்கள். எவ்வளவோ பையன்கள் கம்ப்யூட்டர் வல்லுனர்களாக அமெரிக்காவிலே இருக்கிறார்கள், சீனியைப் போல.

இந்தோனேஷியாவில் மார்ச் மாதம் லெபரான். வேலை செய்பவர்களுக்குப் பதினைந்து நாட்களாவது சம்பளத்துடன் விடுப்புக் கொடுக்க வேண்டும் என்று சட்டம். அதனால் ஜகார்த்தா நகரமே காலியானது போலத் தோன்றும். குழந்தைகளுக்கும் பள்ளி விடுமுறை. சித்ரா பௌர்ணமி, வைகாசி விசாகம், குற்றால சீசன் என்று, சேர்த்து லீவு எடுத்துக் கொண்டு வந்து, கும்மாளமிட்டுப் போவது.

கருங்குள மலையின் ஒரு



கோவில் பட்டி உளுந்து போட்டு அரைத்த தோசை. சாப்பாடு, பேச்சு, சாப்பாடு பேச்சு. தெருவில் இருக்கும் அத்தனை தோழர்கள் சம்பந்தப்பட்ட வம்பு முழுவதும் அம்மா சேகரித்து வைத்திருப்பாள். கேட்டுக் கொண்டே, என் நீல ட்ரங்க் பெட்டி எங்கே? என்று ஒரு கத்தல். தானும் இந்த வீட்டின் குழந்தை என்று ஸ்தாபிக்கும் பொல்லாத் தனம். எப்போதுமே இங்கேயே இருப்பது போல பாவனை. கள்ளத்தனம்.

உறவினர்களுக்கு, ஆத்தூர் கொடிக்கால் ராவுத்தருக்கு, வேலைக்காரப் பிச்சிக்கு, சமையற்காரப் பாட்டிக்கு அவன் பேரனுக்கென்று விதவிதமான சாமான்கள், சாக்லேட்டுக்கள். அக்காக்களுக்குப் பவுன், அம்மாவுக்கு....?

"உங்கம்மாவிற்கு என்ன வாங்க வேண்டும்? சொல்லி விடுங்கோ! அப்புறம் பொல்லாப்பு வேண்டாம்!"

வருடா வருடம் லலிதா கேட்கும் இதே கேள்வி... ஒரே பதில் : "அம்மாவிற்கு ஒன்றும் வாங்க வேண்டாம்."

லலிதா தலையை நொடித்துக் கொண்டு போய் விடுவாள். அம்மா என்றால் தன் கணவனுக்கு உயிர் என்று அவளுக்குத் தெரியும். பின் ஏன்?

புறம் வயல்களூடே வளைந்து வளைந்து செல்லும் ரயில். மற்றொருபுறம் திருச்செந்தூர் பாதையை ஒட்டி வளைந்தோடும் தாமிரவருணி. பௌர்ணமி இரவிலே குன்றின் மீது உட்கார்ந்து கொண்டு வெள்ளிக் கோடு போட்டது போலப் போகும் நதியைப் பார்ப்பது சுகானுபவம். அதுவும் வைகாசத்திற்கு முதல் நாளிலிருந்தே மாட்டு வண்டிகள் சாரி சாரியாகப் போகத் தொடங்கும். எத்தனையோ டெம்போக்கள், மெடாடர் வேன்கள் ஓடத் தொடங்கிய போதும் வைசாகத்திற்கு மாட்டு வண்டி கட்டுவது நிற்கவே இல்லை. கடவுளே நிற்கவே கூடாது.

நெல்லை ஜங்ஷனுக்கு அப்பா வந்திருந்தார். வாயெல்லாம் பல். பேரக் குழந்தைகள், மேலே ஏறி துவம்சம் செய்து, பேசிச் சிரித்து... திக்குமுக்காடிப் போனார். அம்மா இளைத்திருந்தாள். அன்பையெல்லாம் கொட்டிக் கொடுக்கும் அம்மா. மண்டை மண்டையாய் தேங்காய்ச் சீடை, நாகர் கோவில் போளி, புழுங்கலரிசி முறுக்கு, உக்காரை, யானைக் கொம்பன் அரிசிச் சோறு, சுண்ட வற்றல் குழம்பு, குதிரைவால் அரிசி,

காலை எழுந்திருக்கும்பொழுதே "அப்பா ஸ்விம்மிங்."

தோசை, மிளகாய்ப் பொடி, காப்பி சகிதம் தாமிரவருணிக் கரைக்குச் சென்றால் தானும் குழந்தையாகிப் போகும் அதிசயம். ஆய்ந்து ஓய்ந்து வீட்டிற்கு வரும் வழியில் ஆத்தூர் நாராயணா பஸ்ஸிலிருந்து ராவுத்தர். கொடிக்கால் வெற்றிலை, பூலாச்செண்டு பழம், கோழிக் கூட்டுப் பழம்.

"ஜகார்த்தாவிலே எத்தனை விதமான பழங்கள் கிடைக்கிறது. அது என்ன, கைக் குழந்தை விரல் போல அந்த பூலாச்செண்டு ஓசத்தி."

"திருநெல்வேலிக்காரனுக்கு லோகம் முழுக்கப் போனாலும் பூலாச்செண்டு பழம் தாண்டி அமிர்தம்!"

"தம்பி திருச்செந்தூர் போகும் பொழுது

ஆத்தூருக்கு வந்து போங்க" என்றார் ராவுத்தர், தனக்களித்த வாக்மேனையும் வீடியோ கேசட்டுகளையும் திருப்தியுடன் தடவிய படி.

"அப்பா நான் கொடுத்த வீடியோ கேமிராவில் ஒரு காசட் முழுக்க காலையில் அம்மா எழுந்திருந்து தாமிரவருணியிலே குளிச்சுட்டு வரதிலேர்ந்து, ராத்திரி வாசப் படிக்குப் போய், மலையை நிமிர்ந்து பார்த்து, "என் அப்பனே ஆண்டவா"ன்னு கன்னத்திலே போட்டுண்டு படுத்துப்பாளே.... அது வரை பொறுமையாய் நீங்க ரெக்கார்ட் பண்ணித் தரணும்."

அம்மா புன்னகைத்தாள். "அம்மாவிற்கு ஒன்றும் வாங்கி வராதே. ஃபோட்டோ மாத்திரம் எடுத்துக்கோ."

முதல் அடி. அம்மாவின் முகத்தைப் பார்த்தான். சலனமில்லாமல் இருந்தது. அம்மா வழக்கம் போல கலகலப்பாக இல்லையோ என்று தோன்றியது.

லலிதாவும் வந்தாயிற்று. குற்றாலக் குளியல். சுலோசனா முதலியார் பாலத்திலிருந்து லக்ஷ்மி விலாஸ். திருநெல்வேலி அல்வா கிலோ கிலோவாகக் காலியாகிறது. சிரிப்பு. சந்தோஷம். அம்மாவின் மடி மீது படுத்துப் புரளும் பொழுது சுவர்க்கம். இருந்தாலும் ஒரு கிலுக்கம். மெலிதான வெடிப்பு கண்ணுக்குத் தெரியாதது போல.

புறப்படும் நாளும் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இந்த சுவர்க்கத்தை விட்டுப் போக வேண்டுமா? டாலர் சம்பளம் இழுக்கிறது. வாழ்க்கையின் நிதர்சனங்கள்.

லலிதா குழந்தைகளுடன் மலைக்குப் போயிருக்கிறாள். அம்மா பெட்டியில் சாமான்களை அடுக்கிக் கொண்டு இருக்கிறாள்.

"அம்மா, எனக்கு என்னென்ன வெச்சிருக்கே?" ஆவலுடன் கேட்கிறான்.

"ஆமாம். தங்கமும் வைரமுமாக அம்மாவிற்கு வாங்கிக் கொண்டு வந்து கொட்டியிருக்கே பாரு. உனக்கு பாக் பண்ணுகிறேன்!"

நின்று கொண்டிருக்கும்பொழுதே, எரிமலை வெடித்து முகத்தில் தீப்பிழம்பு கொட்டிய மாதிரி, எங்கோ மனசிலே எதுவோ பட்டென்று உடைந்து போகிறது. இனி ஒட்டவே ஒட்டாதது போல. முழு நிலவு விழுந்து வானமே சூனியமாகப் போய் விட்ட மாதிரி.

சீனியின் முகத்தைப் பார்த்து அம்மா ஒரு நிமிடத்தில் சுதாரித்துக் கொண்டு விடுகிறாள்.

"விளையாட்டுக்குச் சொன்னேன்டா செல்வமே. உனக்குப் பருப்புப் பொடி, தேங்காய்ப் பொடி, வேப்பிலைக் கட்டி, சீனியவரக்கா



*''அவரை ஏன் எல்லோரும் அடிக்கிறாங்க?''*

*''ரயில்வே பட்ஜெட்ல வித்அவுட்ல போறவங்களுக்குச் சலுகை ஒண்ணும் கொடுக்கலையேன்னு கேட்டு உண்ணாவிரதம் ஆரம்பிச்சாராம்!''*

*- ராதா வாசுதேவன்*

---

வத்தல், தடியங்கா வத்தலெல்லாம் நானே செய்து வச்சிருக்கேன் பாரு.''

லலிதா வந்து விடவே பேச்சு நின்று விடுகிறது. ஆனால் அதற்குப் பிறகு எதுவுமே பிடிப்பில்லாமல் போகிறது.

"ஏன்னா என்னமோ போல இருக்கேள்?'' என்று லலிதா கூடக் கேட்கிறாள்.

"சீனி, உனக்கு உடம்பு சரியா இல்லை போல இருக்கு. இப்போ ஊருக்குப் போகணுமா?'' என்று அப்பா அடிக்கடி கவலையோடு கேட்கிறார்.

நொடிக்கொரு தடவை அம்மா உச்சி மோந்து அணைத்துக் கொள்கிறாள்.

சீனி ஊருக்குப் போய் ஒரு மாதமாகிறது. அம்மா சோர்ந்து இருக்கிறாள். ஆடி வெள்ளிக் கிழமை. கோவிலிலே தாயாரை தரிசித்து விட்டு மலைப்படியிலே உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். குழந்தையின் சோர்ந்த முகம் நினைப்பிலே தோன்றி கண்ணிலே நீரை வரவழைக்கிறது. அப்பா அடிவாரத்திலிருந்து மேலே வருகிறார்.

''கோமதீ. பாளையங்கோட்டையிலே டாக்டர் சுப்பையா ஜகார்த்தா போயிருக்கிறார் என்று போனேன். சீனி, உனக்கு லெட்டரும் நிறைய நகைகளும் கொடுத்து அனுப்பி இருக்கிறான். கேட்டிருந்தையா என்ன?'' என்று லெட்டரையும் நகைப் பெட்டியையும் கொடுத்தார்.

அம்மா பரபரவென்று லெட்டரைப் பிரித்தாள்.

அன்புமிக்க அம்மா,

அநேக நமஸ்காரம்.

நானும் லலிதாவும் குழந்தைகளும் சௌக்கியமாக வந்து சேர்ந்தோம். வந்த தினத்திலிருந்து குழந்தைகள், திரும்ப எப்போது கருங்குளம் போவோம் என்று கேட்கத் தொடங்கியாயிற்று.

அம்மா, நேரில் பேசக் கூச்சப்பட்ட விஷயங்களை நான் உனக்கு லெட்டரில் எழுதுகிறேன். தவறாக எண்ணாதே. ஒவ்வோர் ஆணும் மனத்தளவில் ஏதாவது ஒருவிதத்தில் பெண்ணைச் சார்ந்தேதான் வாழுகிறான், வாழ முடியும். தாயாகவோ, தாரமாகவோ. தமக்கையாகவோ, தங்கையாகவோ அல்லது தன் மகளாகவோ, தோழியாகவோ ஒரு பெண் இல்லாமல் வாழவே முடிவதில்லை. அதிலும் தாயென்ற உறவு பரம சுகமானது. இவள் என்னுடையவள், எனக்காக மட்டுமே, இவளுடைய உலகமே நான்தான் என்று நினைப்பதிலே ஒரு கர்வம் ஒரு ஆணவம் ஒரு திமிர், ஒரு தைரியம். தாய்க்குப பின் அந்த ஆளுமையைத் தாரத்திடம் காண்பிக்கிறான். அந்த உரிமையிலே ஒரு சுகம்.

ஒருமுறை நான் துபாய் போயிருந்த பொழுது எல்லோரும் ''அங்கே என்ன கிடைக்கிறது என்று கேட்டார்கள். நீ ஒருத்தி மட்டும், "உனக்கு எல்லாம் கிடைத்ததாடா குழந்தே'' என்று கேட்டாய். என்னைப் பற்றி மட்டுமே நினைப்பவள் இவள் என்ற பெருமை. லலிதா ஒவ்வொருமுறை உனக்காக என்ன வேண்டும் என்று கேட்கும் பொழுது ஒன்றும் வேண்டாமென்று சொல்லுவேன். ஏனென்றால் ஜகார்த்தாவிலிருந்து என்ன சாமான் வரும் என்று மற்றவர் நினைக்கும் பொழுது சீனி மட்டும் வந்தால் போதும் என்று நீ நினைப்பாய் என்ற என் திமிர். தற்பெருமை.

ஆனால், அம்மா மன்னித்துக் கொள். ஒன்றை மறந்து விட்டேன். நீயும் ஒரு பெண். உன் சுற்றத்தவர், 'உன் பையன் உனக்கு என்ன கொண்டு வந்தான்' என்று கேட்டு உன்னைச் சலனப்படுத்தி இருப்பார்கள். உனக்கு டாக்டர் சுப்பையா மூலமாக நிறைய நகைகள் அனுப்பியிருக்கிறேன்.

எங்கோ படித்தது ஞாபகம் வருகிறது. பெண்களின் அன்பினால் மட்டும்தான் உலகம் இயங்குகிறது. பெண்களெல்லாம் அன்பை மறந்து வியாபாரிகளாகும் பொழுது உலகம் பாலைவனமாகி விடும்... நான் சுயநலவாதி என்று நினைக்காதே. உன் அன்பு எனக்கு முழுசா வேணும்.

உன் சீனி.

அம்மா கண்களிலிருந்து கண்ணீர் கொட்டியது.

"குழந்தே, குழந்தே'' மௌனமாக இருந்த அப்பாவைப் பார்த்துப் புலம்பினாள்.

''தங்கம் போல நீ இருக்க தங்கத்தை ஆசைப்படுவேனாடா செல்வம். ஒரு நிமிஷ அஞ்ஞானத்திலே பேசி விட்டேனடா செல்வமே.''

''ஏன்னா இந்த நகைகளையெல்லாம் தாயாருக்குச் சாத்தி விடுங்கோ. லோகத்திலே இருக்கும் அத்தனை பெண்களுடைய மனசிலே இருக்கும் அன்பு என்ற அமுதகாபி என்றைக்குமே வற்றி விடக் கூடாது என்று வேண்டிண்டு சாத்தி விடுங்கோ!''

**சௌ**தாமினிக்குத் துக்கம் துக்கமாய் வந்தது. அதை விடத் தூக்கம் தூக்கமாய். 'நியூஸ் அட் டென்'னில், சுகன்யா பாலகிருஷ்ணன் கூட, எல்லாரையும் ரொம்பத் தெரிந்தவள் மாதிரி ஒரு முறை சிரித்துவிட்டுச் செய்திகளை வாசிக்கத் தொடங்கிவிட்டாள்....

'எங்கேதான் போனார் இவர்? எங்கே போவதானாலும் சொல்லிக் கொண்டு போக மாட்டாரோ ஒரு மனிதர்?'

காலிங் பெல் அலறியபோது, சந்திரசேகர்தான் என்று நினைத்துக் கதவைத் திறந்தாள்.

பக்கத்து ஃப்ளாட் சாரதா.

"பப்லு தூங்கியாச்சா?" என்றாள். கையில் ஒரு கொத்து விளையாட்டுச் சாமான். பப்லு அவள் ஃப்ளாட்டில் விளையாடப் போய், அங்கேயே விட்டு வந்திருக்கும்.

"அப்பா ஏன் வரலைன்னு ஏகமா அடம் பண்ணிட்டு இப்பத்தான் தூங்கித்து."

"என்ன அதிசயமா நியூஸ் பார்க்கிறே இன்னிக்கு?"

"மணி பத்து தாண்டியாச்சு. இவர் இன்னும் வீட்டுக்கு வரல்லே...."

"இது டெல்லி நியூஸ் ஆச்சே. இதுல எல்லாம் காணாமல் போறவாளைப் பத்திச் சொல்ல மாட்டாளே?"

"ஐயோ, போது போகலேன்னு நியூஸ் போட்டேன் சாரதா. அவ்வளவுதான்!"

"அவருக்கு எதெதில் எல்லாம் இன்டரஸ்ட் உண்டு? சொல்லு!"

"மீட்டிங், அது இதுன்னு போவார்தான். ஆனா எட்டரை மணிக்கு மேல பசி தாங்காது. நானி பல்கிவாலா லெக்சர்னாக்கூட, இடத்தைக் காலி பண்ணிடுவார்!"

"இன்னிக்கு எங்கயாவது போறேன்னாரா?"

"இரு. எங்கேஜ்மென்ட்ஸ்ல என்ன என்ன இருக்குன்னு பேப்பர்ல பார்க்கறேன்."

'ஹிண்டு'வைப் பிரித்து வைத்துக் கொண்டாள்.

"கன்ஸ்யூமர் ஆக்டிவிடீஸ் குரூப். அடையாறு. ஹ்ம்... போக சான்ஸ் இருக்கு. ஏன்னா எலக்ட்ரிசிடி எப்பவும் போய் வந்து அவஸ்தையா இருக்கு. கம்ப்ளெயின்ட் கொடுக்கணும்னார்... அப்புறம்... என்வயர்மென்டல அவேர்னஸ் ஸ்டடி டீம்.... ம்... இங்கயும் அவர் போறதுக்கு சான்ஸ் இருக்கு. எப்பவும் ஓசோன், கீசோன்பார். ஆங்... இதோ பார். ஸ்ரீலஸ்ரீ இடியாப்ப சுவாமிகளின் சீடர், யாரோ, தலைச்சுழி ரகசியங்கள் பற்றிப் பேசறாராம்..."

"என்னது! சாமியாருக்கெல்லாம் சாப்பாட்டு ஐட்டம் பேரா? என்ன அக்கிரமமா இருக்கு!"

"சாரதா, எனக்கென்னவோ இவர் இங்கதான் போயிருப்பார்னு தோணறது. நேத்து ஏதோ பத்திரிகையில் இதைப் பத்தி வாய்விட்டுப் படிச்சார். பிரம்மாதான் ஒரு ஜீவனின் தலைவிதியை நிர்ணயித்து எழுதறானாம். அப்போ ஒரு சுழியுடன் அந்த ஜீவன் பிறக்கிறதாம். அதுதான் கடவுளோட கையெழுத்தாம்!"

"சே! நம்ம மண்டை என்ன, கடவுள் கையெழுத்துப் போடற ஆட்டோகிராஃப் புக்கா?"

"பிரம்மா நிர்ணயித்த தலைவிதி ரொம்பக் கடினமா இருந்தா, சிவன் அதைக் கொஞ்சம் மாத்தி எழுதிவிடுவாராம். அப்போ அந்தச் சுழியுடன் சேர்ந்து சில பேருக்கு ரெட்டைச் சுழி

**சாருகேசி**

# காத்திருந்து, காத்திருந்து....

இருக்குமாம்."

"ரெட்டை மண்டைதான் பார்த்திருக்கேன். ரெட்டைச் சுழியா? சுழியெல்லாம் கூட மாட்டுக்குத்தானே பார்ப்பா? மாட்டுப் பொண்ணுக்கும் கூடப் பார்ப்பாளோ?" என்று ராத்திரி பத்தரை மணி என்றும் பாராமல் 'கடி'த்தாள் சாரதா.

சௌதாமினிக்கு அவளை ஓர் அறை அறையலாம் போல் ஆத்திரம் வந்தது. அடித்தால் அவளுக்கு வலிக்காது. தனக்குத்தான்.

பதினோரு மணி வரை நன்றாக 'அறுத்து' விட்டு, தன் ஃப்ளாட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள் சாரதா.

**ப**யம் என்றால் இப்போதுதான் என்ன என்று தெரிந்தது சௌதாமினிக்கு. மாடிப்படி விளக்கை அணைக்கப் போகக்கூடப் பயமாயிருந்தது. கல்யாணமாகி இந்த நாலு வருடங்களில் இது போல நாலு முறை நடந்திருந்தால் முன் அனுபவமாவது இருந்திருக்கும்.

காலிங் பெல் மறுபடி அலறியது. தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழுந்த பப்லுவைத் தட்டித் தூங்க வைத்து விட்டு அவசரமாக வாசல் பக்கம் போனாள்.

அவர்தானோ? வேறு யாராவதாய் இருந்து தொலைத்தால்? திறக்கிறதா, வேண்டாமா....?

எதற்கும் சமையலறைக்குப் போய் ஒரு பெரிய கரண்டி, ஒரு தோசை திருப்பி, போன தீபாவளிக்கு லட்டு பிடிக்க வந்த சமையல்காரர் மறந்து வைத்துவிட்டுப் போன பெரிய ஜாரணி, ஓர் இடுக்கி (மூக்கை அப்படியே கிடுக்கிப் பிடியாய் இறுக்கிக் கொள்ள) எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு, கொண்டைய ராஜு படம் போல நாலுகை காளி மாதிரி நின்று கொண்டு கதவைத் திறந்தால் —

கீழே இருக்கிற வாட்ச்மேன்!

"மாஜி! ஏ க்யா ஹை! குச் ஹுவா க்யா?"

பயம் போய், வெட்கம் பிடுங்கித் தின்ன, "ஒண்ணுமில்லே பகதூர்... சமையல் வேலை... பாதி பாக்கி இருக்கு...." என்று உளறினாள்.

"தோடா சாம்பார் சாஹியே மா-ஜி!" என்றான் பகதூர்.

சனியன்! சாம்பார் கேட்




**தலைமை தேர்தல் அதிகாரி சேஷன் ஓட்டு போட முடியாது! சேஷன் முன்பு உத்தரபிரதேச மாநிலம் டேராடூன் நகரில் எண்ணெய் மற்றும் இயற்கை எரிவாயு நிறுவனத்தில் வேலை பார்த்தார். அப்போது வாக்காளர் பட்டியலில் அவர் பெயர் சேர்க்கப்பட்டிருந்தது. என்றாலும் அவரை பெண் என்று குறிப்பிடப்பட்டிருந்ததால் வோட்டுப் போட முடியாது போய்விட்டது! லக்னோவில், பல்கலைக் கழக விழா ஒன்றில் பேசியபோது இத்தகவலை நகைச்சுவையாகக் குறிப்பிட்டார்.**

**— எம். இராஜேந்திரன்**

கிற நேரமா இது?

சந்திரசேகர் வந்து இனி சாப்பிடப் போவதில்லை. சாம்பாரை எல்லாமே இவனுக்குக் கொடுத்தால் தப்பில்லை என்று, இருக்கிறதை அப்படியே அவனிடம் கொடுத்தாள்.

கதவை அறைந்து சாத்திவிட்டுப் படுக்கையில் வந்து உட்கார்ந்து கொண்டாள் சௌதாமினி.

"எதுக்கு இந்த எக்ஸ்நோரா, ஒய்நோரா எல்லாம்? கஞ்சா காய்ச்சற பேர்வழி எல்லாம் கறுவிண்டு இருக்கானாம். நீங்க ஏதோ சமூக சேவைன்னு போக, எவனாவது ஒரு கல்லைத் தூக்கிப் போட்டு உங்களை க்ளோஸ் பண்ண மாட்டானா?" என்று ஒரு நாள் கேட்டாள்.

காரணம், உண்மையில் ஒரு கஞ்சா பேர்வழி மிரட்டிவிட்டுப் போனதுதான்.

"அவன் இருக்கறதோ வேற தெரு. நீங்க எதுக்கு அங்க போய் உங்க வேலை எல்லாம் ஆரம்பிக்கணும்?" என்றாள் பொறுக்க முடியாமல்.

"இதுக்கெல்லாம் பயந்தா சோஷியல் ஆக்டிவிடீஸ்ல இறங்கவே முடியாது சௌதா. பாரேன், நாளைக்கு அவனே குப்பை வாரறதுக்கு ட்ரை சைக்கிள் வாங்கித் தரேம்பான்!"

"ட்ரை சைக்கிள் வாங்கித்தர மாட்டான் உங்களுக்கு சைக்கிள் செயின்னா என்னன்னு காமிப்பான்!"

அன்று கோபத்தில் தான் பேசியது போல் நிஜமாகவே நடந்திருக்குமோ?

'போலீஸுக்கு போன் பண்ணலாமா?' - அப்படி போன் செய்து பத்து நிமிஷத்தில் புருஷன் வந்து நின்றால்...

'நீ எப்பவுமே இப்படித்தான் ஓவர் ரியாக்ட் பண்ணுவே' - கத்துவான். வேண்டாம்!

பெட்ரூமில் போய், படுக்கையில் உட்கார்ந்து கொண்டாள். எதிரே காத்ரெஜ் அலமாரிக் கண்ணாடியில் அவள் உருவம் தெரிந்தது. தலைப்பு நழுவி, தலை லேசாகக் கலைந்து, ஒருவித அலாதிக் கவர்ச்சியுடன்.... அய்யோ! எவனாவது அவர் இல்லை என்று தெரிந்து கொண்டு உள்ளே நுழைந்து விட்டால்?

பால்கனிக் கதவைத் திறந்து வைத்திருந்தது திடீரென்று நினைவுக்கு வந்தது. காலில் கேஸ் சிலிண்டர் இணைத்திருப்பது மாதிரி கனத்தது. ஓர் அடி கூட எடுத்து வைக்க முடியாமல் கனத்தது. எவனாவது பால்கனியில் ஏற்கெனவே ஒளிந்திருந்து, கப்பென்னு இறுக்கிக் கட்டிப் பிடித்து....

இருக்கிற தைரியத்தை எல்லாம் கடைசி அயோட்டா வரை திரட்டி எடுத்துக் கொண்டு கட்டிலை விட்டு இறங்கினாள்.

கோட் ஸ்டாண்டில் தொங்கிய குடையை நீட்டி, பால்கனி கதவை ஒரு தள்ளுத் தள்ளிச் சாத்தினாள். சட்டென்று பாய்ந்து போய் 'போல்ட்'டைப் போட்டாள்.

அப்பாடா!

விளக்கை அணைத்துவிட்டு, கட்டிலில் மறுபடி உட்காரலாம் என்று ஸ்விச்சில் கை வைப்பதற்குள் கரண்ட்டே போய்விட்டது!

இருட்டுக்குள் இருக்கிற போது இன்னும் பயமாக இருந்தது. தாக்குவதற்குத்தான் யாரோ முன்னாலேயே 'லைட்'டை எல்லாம் அணைத்து விட்டிருப்பார்களோ? வீட்டுக்குள்ளேயே திருடன் ஒளிந்திருக்க, 'வெய்ட் அன்ட்டில் டார்க்'கில் ஆட்ரி ஹெப்பர்ன் குருடியாக நடித்தது நினைவுக்கு வந்தது. இருட்டில் நடப்பதும், குருடியாய் நடப்பதும் ஏறக் குறைய ஒன்றுதான்...

அதிகாலையில் ஐந்து மணிக்கு விழிப்பு வந்த போது, கரன்ட்டும் வந்து, பெட்ரூம் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அணைத்துவிட்டு, பல் துலக்கிவிட்டு வருவதற்குள், பால்பாக்கெட்டுகள் சின்ன முயல் குட்டிகள் மாதிரி வாசல் கதவருகில் கிடந்து.

காப்பி குடித்து, வெளிச்சம் வந்ததும்




**டைம்ஸ் ஆஃப் இந்தியாவின் தலையங்கத்தில் ஒருமுறை (13.2.92 அன்று) 42 வரிகளில் 48 தவறுகள் இருந்தன. அது கம்ப்யூட்டரினால் ஏற்பட்ட தவறு. இதில் உலக ரிகார்ட் என்னவென்றால் 22.8.78 அன்று வெளி வந்த 'தி டைம்ஸ்'ல் 5.5 ஒருகால அளவில் 97 தவறுகள் இருந்தது தான்.**

**ஆதாரம் : மனோரமா இயர் புக் 1995**
**தகவல் : ஸ்ரீகாந்தன்**

கொஞ்சம் தென்பாய் இருந்தது. எதற்கும் ஒன்பது மணி ஆகட்டும். அவர் ஆபீசுக்குப் போன் பண்ணி மானேஜரிடம் கேட்கலாம் என்று மனசுக்குள் தீர்மானித்தாள்.

ஒன்பது மணி.

ஆபீசுக்கு போன் செய்தபோது மணி அடிக்கிற சத்தம் மட்டும் கேட்டுக் கொண்டே இருந்தது. இன்னுமா மானேஜர் வந்திருக்க மாட்டார்? எட்டுக்கே தினசரி வந்துவிடுவாரே?

பத்து மணிக்கும் அதே கொர் கொர் தான்.

அசிஸ்டென்சைக் கூப்பிட்டாள். அவளுக்கும் கிடைக்காமல் போகவே, "ஃபால்ட் ரிப்போர் கம்ப்ளெயின்ட் கொடுத்திருங்க, மேடம்!" என்று சொல்லிவிட்டாள்.

எரிச்சலாய் வந்தது சௌதாமினிக்கு.

புறப்பட்டு நேராக ஆபீசுக்கே போய் விட்டால்?

ஒரு ஆட்டோ பிடித்து மானேஜரிடம் போய், இவர் நேற்று இரவு முழுக்க வரவே இல்லை வீட்டுக்கு என்று சொன்னால் என்ன?

ஏதோ கெட்ட சகவாசம் இருக்கிறது என்று மனைவி ஆபீசுக்கு நேராகவே சந்தேகப்பட்டுக் கொண்டு வந்துவிட்ட மாதிரி அவர்கள் நினைத்து விட்டால்?

ஐயோ, வேண்டாம்டா சாமி!

பிற்பகல் வரை என்ன செய்வது என்றே தெரியவில்லை.

செய்தித்தாளைப் பிரித்து வைத்துக் கொண்டு ஓர் அங்குலம் விடாமல் படிக்க ஆரம்பித்தாள்.

பன்னிரண்டு மணிக்கு விர்விர் விர்ரென்று காலிங் பெல் அலறியது. அடிபட்ட அவரை யாரானும் ஸ்ட்ரெச்சரில் தூக்கிக் கொண்டு வந்திருப்பார்களோ?....

விழுந்தடித்துக் கொண்டு போய்க் கதவை அகலமாகத் திறந்தாள் சௌதாமினி.

சந்திரசேகர்!

''என்ன ஆச்சு உங்களுக்கு? எங்க போய்ட்டீங்க நேத்து, வீட்டுக்கே வராம?"

சந்திரசேகர் முகத்தில் ஒரு நாள் தாடியோடு நின்றான்.

"ரொம்ப ஸாரி சௌதாமினி! எல்லாம் நம்ம பப்லுவாலதான்...."

"இப்படி ஊர் மேஞ்சுட்டு வந்து -

முழுசா அம்மான்னுகூட இன்னும் சொல்ல வரலை, அந்தக் குழந்தை மேல பழிபோடறீங்களே!"

"இல்ல சௌதா... ஆபீஸ் விட்டு வரச்சே 'ஜாலமந்திர்' ஸ்கூல் வழியா வந்தேனா, அங்க பெரிய கியூ நின்னுது. விசாரிச்சா எல்.கே.ஜி. அப்ளிகேஷன் தரதாச் சொன்னாங்க. நீ பப்லுவை 'ஜாலமந்திர்லதான் படிக்க வைக்கணும்னு ஜூனூனா சொல்லிட்டியே, அதான் நானும் போய் கியூவுல நின்னுட்டேன். அப்புறம் விசாரிச்சா, காலையிலதான் ஃபார்ம் குடுப்பாங்கன்னு தெரிய வந்தது. 'கொஞ்சம் என் இடத்தைப் பாத்துக்குங்க; ஒய்ஃபுக்கு போன் பண்ணிட்டு வரேன்'னு சொன்னா ஒரு பயலாவது கேட்டாதானே? அவனவன் துண்டை விரிச்சுப் படுத்துட்டான்; பதினொண்ணரைக்குத்தான் ஃபாரம் கிடைச்சுது; வாங்கிட்டு நேர வரேன்...."

தொப்பென்று சோபாவில் சரிந்தான் அவன்.

* புறா காக்கையுடன் சிநேகமாக இருந்தால் அதனுடைய இறக்கை வெள்ளையாக இருக்கலாம். ஆனால் அதனுடைய மனம் கறுப்பாகவே இருக்கும்.

ஜெர்மன் பழமொழி
— இ.எஸ். பட்டப்பா






தொடர்

அறிவித்ததுதான் தாமதம். நமது ஆபீசுக்கு ஏகப்பட்ட போன் கால்கள்.

''ஏதோ 'டீ குடிக்கலாம் வாங்க' என்கிற மாதிரி தலைப்புக் குடுத்துட்டீங்க. எங்களை மாதிரி மாசச் சம்பளக்காரங்க எப் படிங்க பணம் பண்ண முடியும்?'' என்று ஒருவர்.

''யார் சார் தொடர் எழுதறாங்க? ஹர்ஷத் மேத்தாவா?'' என்று பயங்கர நக்கலாக இன்னொரு வாசகர்.

கோபம் புரிகிறது.

மாதச் சம்பளத்தில் செப்பிடு வித்தை செய்து வரும் நமது மிடில் கிளாஸ் வாசகர்களுக்கு முதற்கண் சலாம்!

அரசாங்கக் கொள்கை ஒரு பக்கமும் கல்ஃப் வார் முதல் பிரேசிலின் காப்பி பயிர் வீழ்ச்சி வரை ரிமோட் கண்ட்ரோலில் இன்னொரு பக்கமுமாக நமது மாதாந்திர பட்ஜெட்டைத் தாறுமாறாக்கினாலும்...

கௌரவம் குறையாமல் வாழ்க்கை நடத்தி வருகிறோம். சாமர்த்தியமாகக் கல்யாணச் செலவு களைச் சமாளித்து வருகிறோம்.

எப்படி...?

சேமிப்பு உணர்வு என்ற பரம்பரைச் சொத்தின் துணையோடுதான். 350 கிராம் கத்திரிக்காயில் குண்டாக மூன்றை எடுத்து 'நாளைக்குக் குழம்புக்கு இருக்கட்டும்' என்று வைத்து விட்டு, மீதியைப் பொறியல் செய்வதில் ஆரம்பிக்கிறது இந்தச் சேமிப்பு உணர்வு.

இந்த உணர்வை அப்படியே விஸ்தரித்து, சம்பளக் கவருக்குக் கொண்டு போவோம்; கொஞ்சம் திட்டமிடலையும் தொலை நோக்கையும் சேர்த்துப்.... பணம் பண்ணலாம் வாங்க!

குழம்புக்கு எடுத்து வைத்த மூன்று கத்திரிக்காயை ப்ரிஜ்ஜில் வைக்க வேண்டும். அல்லது பழைய நியூஸ் பேப்பரில் சுற்றி வெயில் படாமல் வைக்க வேண்டும். இல்லாவிட்டால் மறுநாள் அழுகியோ வாடியோ போய் விட, கத்திரிக்காய் காரக் குழம்புக்குப் பதில் சுண்டைக்காய் வற்றல் குழம்புதான்!

சம்பளமும் அப்படித்தான். அவசரத்துக்கு இருக்கட்டும் என்று எடுத்து வைப்பதைப் பாதுகாப்பாக வைக்காவிட்டால் போன இடம் தெரியாது!

ஆனால் கத்திரிக்காய் போல் அன்றி குட்டி போடும் தன்மை பணத்துக்கு உண்டு. குட்டி வட்டி உருவத்தில்.

மிக எளிமையான, சுலபமான சேமிப்பு முறை 'வைப்பு நிதி' என்கிற ஃபிக்ஸட் டெபாஸிட். வங்கிகள் இதற்குப் பத்து சதவிகிதமும் தனியார் நிறுவனங்கள் 14 அல்லது 15 சதவிகிதமும் வட்டி தருகின்றன (20 முதல் 30 சதம் வரை வட்டி தருகிறோம் என்றும் விளம்பரங்கள் வரு கின்றன. அத்தகைய நிறு வனங்கள் பற்றித் தனியாய்ப் பின்னொரு சமயம் சொல்கிறேன்.)

ஆக, நாம் தேர்ந்தெடுக்கும் வங்கி அல்லது நிறுவனத்தைப் பொறுத்து, ஆயிரம் ரூபாய் போட்டு 100 முதல் 300 ரூபாய் வரை வட்டி 'சம்பாதிக்கலாம்'.

இந்த வட்டி நமக்கு லாபம் என்று நினைத்துக் கொள்கிறோம். ஆனால், வட்டி விகிதத்தை [illegible] வேகமாகச் செயல்படும் ஒரு விஷயம் நம் லாபத்தை நஷ்டமாக்கி விடுகிறது!

ஓவர் டைமில் உழைத்து வரும் அந்த விஷம் - சாரி - விஷயம்தான் *infalation* என்கிற பணவீக்கம்.

பணவீக்கம் என்பது பண*weak*அம்! காசானது பலவீனமடைந்து, வாங்கும் சக்தியை [illegible] நிலை. (விரிவாய்ப் பின்னால் பார்ப்போம்)

உதாரணம் சொல்ல வேண்டுமென்றால் 1960 ஆம் வருஷத்துக்குப் போவோம். [illegible] 'போர்ன்விடா மிட்டாய்' ஐந்து பைசா என்ற ரேட்டுக்கு வாங்கி நாற்பத்தைந்து [illegible] வகுப்பில் விநியோகித்து, பிறந்த நாள் கொண்டாட்டத்தை முடித்துக் கொள்ள முடிந்தது.

இன்றைக்கு, அதே உள்ளடக்கம் கொண்ட ஒரு மிட்டாயை வாங்க [illegible] செலவாகும்!

**வி. கோபாலன்**

கடந்த 35 வருடங்களில் ரூபாயின் மதிப்பு இரு [illegible]

கொண்டேயிருக்கிறது. இந்தியாவில் பணவீக்க விகிதம் சுமார் பன்னிரண்டு சதவிகிதம் என்பது அரசாங் கமே ஒப்புக் கொள்ளும் கணக்கு. அப்படியானால் நிஜமான கணக்குப்படி அது சுமார் பதினைந்து சத விகிதம் இருக்கும்....

ஆக, ஒரு சிறந்த தனியார் நிறுவனத்தில் ஃபிக்ஸட் டெபாஸிட் போட்டு, பதினைந்து சதம் வட்டி சம்பாதித்தால் கூட, அந்தப் பணம் கைக்கு வரும் போது பணவீக்கம் வட்டியை 'கான்ஸல்' செய்து விடும்.

பாங்க்கில் ஃபிக்ஸட் டெபாஸிட் போட்டாலோ சராசரியாகப் பத்து சதவிகித வட்டிதான் கிடைக்கும். — அதாவது ஆயிரம் ரூபாய்க்கு நூறு ரூபாய் வட்டி. பணவீக்கத்தால் இழப்போ 150 ரூபாய்! நிகர நஷ்டம் ஐம்பது ரூபாய்!

மூன்று தக்காளியில் இரண்டு அழுகிப் போன கதைதான்! (இனி கத்திரிக்காய் உதாரணம் சரிப்பட்டு வராது என்பதால் தக்காளிக்கு மாற வேண்டியுள்ளது!) அதற்காக நாளைக்கும் சேர்த்து இன்றைக்கே சாப் பிட முடியுமா? என்று கேள்வி வரும்.

சாப்பிட முடியாது! ஆனால் தக்காளியை ஊறுகாய் போட்டு வைத்துக் கொள்ளலாம். முறையாகத் தயாரித்தால் மாசக் கணக்கில் கை கொடுக்கும்.

அதே போல், பணத்தையும் வடிவம் மாற்றிப் பண்டமாக - போகப் போக மதிப்பு உயரும் பண்ட மாக வைத்துக் கொள்ளலாம்.

அத்தகைய 'பண்டங்கள்' பொன்னும் நிலமும் என்பது இன்றைய யூ.கே.ஜி. வாண்டுக்குக் கூடத் தெரியும்.

ஆனால்.... ஆயிரம் அல்லது இரண்டாயிரத்தை ஃபிக்ஸட் டெபாஸிட் போடுவதற்கும் அதைப் போல் நான்கு மடங்கு செலவழித்துப் பொன் வாங்குவதற்கும் வித்தியாசம் உண்டு. பிளாட் வாங்க வேண்டுமென்றாலோ முதற்கண் கடன் வாங்க வேண்டும்!

நாளைக்குத் தக்காளி ஊறுகாய் சாப்பிடு வதற்காக இன்று மிளகாய், கடுகு, எண்ணெய், பெருங்காயம் பக்கத்து வீட்டில் ஒரு ஸ்பூன் வெந்தயம் என்று வாங்கிச் செலவையும் முயற்சியையும் பெருக்கிக் கொள்வதைப் போல்தான் இதுவும்...

தக்காளியை ஊறுகாயாக்காமல் வைத்திருந்தால் திடீர் விருந்தாளிக்கு ரசம் செய்யலாம்.

பணத்தை பாங்கிலோ கம்பெனியிலோ போட்டால் சட்டென்று அதன் பேரில் கடன் வாங்கி அம்மாவின் திடீர் ஆபரேஷன் செலவைச் சமாளிக்கலாம்.

வீட்டையோ, நிலத்தையோ, நகையையோ காசாக்கு வது அந்த அளவுக்குச் சுலபமில்லை. நமது அவசரம் அறிந்தால், வாங்குபவர் விலை குறைத்துக் கேட்பார். அவற்றின் பேரில் கடன் வாங்கினாலோ வட்டியைச் சமாளிக்க சில்வஸ்டர் ஸ்டாலோனாக மாற வேண் டும்!

எனவே... சேமிப்பதற்கு முன்னால் சேமிப்பின் நோக்கம் என்ன என் பதில் நாம் தெளிவாய் இருப்போம். நாம் இப்போது சேமிப்பது, திடீர் அவசர செலவுக்கா? பத்து வருடங்கள் கழித்து வரப் போகும் மனைவியின் ஐம்பதாவது பிறந்த நாளுக்கா?

இந்த மாதிரி யோசித்துச் செயல்படுவதைத்தான் தொலைநோக்கு என்பார்கள். கொஞ்சம் 'தொல்லை' நோக்குதான். இருந்தாலும் இது முக்கியம்.

(பணம் பெருகும்!)



## ரூ.100 பரிசு பெறும் அனுபவங்கள்.

### முதலிரவுக்கும் முக்காடு!

**கா**தலியுடன் 'பயணங்கள் முடிவதில்லை' படம் பார்க்கக் கிளம்பினேன். அப்போதுதான் ரிலீஸ் ஆகியிருந்த அப்படத்துக்கு ஒரே கூட்டம். பிளாக்கில் டிக்கட் விற்றவர் 'மூன்று டிக்கெட் உள்ளது. மூன்றையும் வாங்கிக் கொள்வதானால் தருகிறேன்... என்றார். மூன்றையும் எக்கச்சக்க விலைக்கு வாங்கினேன். என்னவளை தியேட்டருக்குள் உட்காரச் சொல்லி அனுப்பிவிட்டு, மூன்றாவது டிக்கட்டை கிடைத்த விலைக்கு விற்றேன். ஏக எதிர்பார்ப்புடன் தியேட்டருள்ளே போய் அவள் அருகில் உட்கார்ந்ததுதான் தாமதம். ''ஐயோ! அப்பா வரார்'' என்றாள். அந்த அப்பா வேறு யாருமில்லை; என் மூன்றாவது டிக்கட்டை வாங்கிய பெரியவர்! படம் முழுவதும் புடைவை தலைப்பால் முக்காடு போட்டுக் கொண்டு நடுங்கியபடி உட்கார்ந்திருந்தாள் அவள். எப்படியோ அன்று தப்பித்துவிட்டோம்.

முதலிரவு அன்று "எதுக்கும் முக்காடு போட்டுக்கோ; உங்கப்பா வந்தாலும் வருவார்'' என்று அவளிடம் நான் சொல்ல, அவள் சிரித்த சிரிப்புக்கு இன்றுவரை நான் அடிமை!

சிவகங்கை, கே.ஜே.எல். முத்துராமன்.

### சிரிப்பும் அழுகையும்

**ப**க்கத்துப் போர்ஷனிலிருந்த வீட்டுச் சொந்தக்காரர் மகளுக்கும் எனக்கும் காதல். எங்கள் இருவரது வீடுகளைப் பிரித்த சுவரில், தரையை ஒட்டி, தண்ணீர் ஓடுவதற்கு ஒரு சிறு துவாரம் இருந்தது. இதுவே நாங்கள் லவ் லெட்டர் பரிமாறிக் கொள்ளும் போஸ்ட் பாக்ஸ்! அந்த 'போஸ்ட் பாக்ஸ்' அருகேதான் இரவில் நாங்கள் படுப்போம். ஓர் இரவு என் அப்பாவுக்கு ஜுரம். அவதியில் என் இடத்தில் படுத்துவிட்டார். அவரை எழுப்ப முடியாமல் தவித்து விட்டு நானும் கண்ணயர்ந்து விட்டேன். சற்றைக்கெல்லாம் பெரும் கூச்சலுடன் எழுந்தார் அப்பா. என் காதலி 'போஸ்ட் பாக்ஸில்' கடிதத்தை வைத்துக் குச்சியால் தள்ள, குச்சி அவர் காதைக் குத்தி விட்டிருந்தது! கலாட்டாவில் கடிதத்தை யாரும் கவனிக்காததால் அதை 'நைஸாக' எடுத்து வைத்துக் கொண்டேன். சம்பவம் சிரிப்பூட்டினாலும் அப்பாவை ஈ.என்.டி. டாக்டரிடம் காட்டிய வகையில் ஆன திடீர் செலவு, ஐம்பது ரூபாய் அழ வைத்தது!

சென்னை-19, கே.ஸி.பி. ஸ்ரீதரன்

### கடற்கரையில் நிலவொளியில்...

**கா**தலியுடன் கன்னியாகுமரிக்கு வந்திருந்தேன். கடற்கரையில் நிலவொளியில் எங்களை மறந்து பேசிக் கொண்டேயிருந்தோம். திடீரென்று வாட்சைப் பார்த்தால், மணி பத்து! இருவரும் நாகர்கோவில் திரும்ப வேண்டும். "நேரமாகி விட்டதே! பஸ்கிஸ் கிடைக்குமோ கிடைக்காதோ!'' என்று கவலைப்பட்ட போது சற்றும் எதிர்பாராதது நடந்தது. ''முதலில் சொன்னது (பஸ்) கிடைக்காது; ஆனால் இரண்டாவதாய்ச் சொன்னது கிடைக்கும்'' என்று முகம் மலரச் சொல்லி விட்டு என் கன்னத்தில் முத்தமிட்டாள். அந்த இனிய மாலைப் பொழுதை, அந்த முதல் முத்தத்தை-இன்று- மூன்று குழந்தைகள் பெற்ற பிறகும் சிலிர்ப்புடன் நினைத்துக் கொள்கிறேன்.

நாகர்கோவில், இராமநாதன்

### தியாகத்தின் எல்லை!

**எ**ன் நண்பன் டேவிட். அவன் காதலி

# காதல் சிரிப்பு!

ப்ரீதா ஹிந்துப் பெண். வழக்கம் போல் மதம் கல்யாணத்துக்குத் தடை! யாராவது ஒருவர் மதம் மாறுவது என்று முடிவு செய்தார்கள். ப்ரீதா, டேவிட்டுக்குத் தெரியாமல் சர்ச்சில் ஞான ஸ்நானம் செய்து கொள்ள, டேவிட் அவளுக்கு 'இனிய ஆச்சரியம் தரும் திட்டத்துடன் இரகசியமாக ஹிந்துவாக மாறி செந்தில் என்று பெயர் மாற்றிக் கொள்ள... முன்பு கல்யாணத்துக்கு மதம் தடையாய் இருந்தது. இப்போது...?

கன்னிவாடி,
ஆர்.ஆர். பூபதி.

## மூன்றாவது சீட்!

அடிக்கடி சந்திக்க முடியா விட்டாலும் எங்கள் காதல் ஆழமானது. ஒரு நாள் அரிதாக சினிமாவுக்குப் போகும் வாய்ப்பு அமைந்தது. ஆனால் அவளுக்குப் பக்கத்தில் உட்காரக் கூச்சப்பட்டுக் கொண்டு ஒரு சீட் இடைவெளி விட்டே அமர்ந்தேன்!

"இந்த சீட் யாருக்குங்க?" என்றாள் காலி இருக்கையைக் காட்டி.

"நம்ப மகனுக்கு" என்றேன்.

"சரியான பயந்தாங்கொள்ளி!" என்று அன்றைக்கு அவள் செல்லமாகத் திட்டியதை நினைத்தால் இன்றும் சிரிப்பு வருகிறது!

இராதாமங்கலம், தென்கைபாபி.

## ராதா, காதல் வராதா?

ராதா! டெல்லியில் 1964ஆம் ஆண்டு என்னுடன் பணிபுரிந்தவள். 'தேனிலவு' படத்துக்கு முதல் வகுப்பு டிக்கட் வாங்கி, ஒன்றை அவளிடம் கொடுத்து, நேரே ரீகல் தியேட்டருக்கு வரச் சொன்னேன். மீசை திருத்தி, தலை வாரி, தேர்ந்தெடுத்து உடுத்துவதில் ஒரு மணி நேரம் செலவிட்டு தியேட்டருக்குப் போனால், ராதாவிடம் கொடுத்த A-1 டிக்கட்டில் ஒரு பாட்டி!

"டிக்கெட் எப்போ வாங்கினீங்க பாட்டி?"

"பக்கத்தாத்துப் பட்டுவோட பெண் ராதா 'திருவிளையாடல்' படம்னு சொல்லி ஒரு டிக்கட் குடுத்தா... வேற படம்னா இங்க ஆடறது...!' என்றார் பாட்டி!

ஆபீஸில் ராதாவிடம் நெற்றிக் கண் திறந்தபோது அவள் மன்னிப்பு கேட்ட வேகத்தில் இருவருமே சிரித்து விட்டோம்.

நான் ராதாவை மணக்க முடியவில்லை என்பது சோகம்தான்!

காஜியாபாத், பி. கிருஷ்ணமூர்த்தி.

## அப்பா வரார்!

காதலிக்க ஆரம்பித்த புதிது. அடிக்கொரு முறை 'ஐயோ! என் அப்பா வரார்!' என்று சொல்லி என்னை ஏமாற்றி மகிழ்வாள் அவள்! ஒரு முறை உண்மையாகவே அவள் தந்தை வந்துவிட, "ஐய்யயோ! எங்க அப்பாங்க!" என்று அவள் வழக்கம் போல் அலற, நான் "எங்க உங்கொப்பன்? இன்னிக்கு அவரை ஒரு வழி பண்ணிடறேன்!" என்று மீசை முறுக்கி கட்டபொம்மன் குரலில் சொன்னேன். என்ன நினைத்தாரோ! எங்களை ஒரு முறை முறைத்து விட்டு அவர் போய்விட்டார். கொஞ்சம் நாள் பயந்து கொண்டு சந்திக்காமல் இருந்தோம். இப்போது அந்த நிகழ்ச்சியை நினைத்தாலே சிரிக்கும் அளவுக்கு 'மூவருமே

முன்னேறி விட்டோம்'.

தஞ்சாவூர்-1, வெ.முருகானந்தம்.

### 'மிஸ்' மீனூ!

'மீனூ, இன்று மாலை பூங்காவில் சந்திப்போம்' என்று கடிதம் எழுதி எதிர் வீட்டுப் பையன் மூலம் அனுப்பி வைத்தேன். மீனாவை நான் மட்டும் காதலுடன் அப்படித்தான்-'மீனூ' என்றழைபது வழக்கம். பார்க்கில் நான் காத்திருந்தபோது வந்ததோ மீனுவின் பாட்டி! கையில் என் கடிதம் வேறு! எனக்கு பயம் கலந்த அதிர்ச்சி... ஒருவாறு சமாளித்தேன். பாட்டியுடன் பேச்சுக் கொடுத்த போதுதான் தெரிந்தது, அவர் பெயரும் மீனாகுமாரி. தாத்தா அவரை மீனு என்ற ழைப்பது வழக்கமாம். பாட்டியைப் பிரிந்து தாத்தா வீட்டை விட்டு வெளியேறி இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டதாம். அவர்தான் கடிதம் அனுப்பியிருக்கிறார் என்று நம்பி வந்த பாட்டிக்கு ஏமாற்றம். ஆனாலும் எங்கள் கல்யாணத்தை நடத்தி வைத்தார் அவர். ஒரு வேளை, இதைப் படித்தால் தாத்தா திரும்பி வருவாரோ?

மதுரை-18, டி.ராதாகிருஷ்ணன்.

### குடும்ப ஜோக்!

பஸ் ஸ்டாப்பில் தோழிகள் புடைசூழ அவள் நின்றிருந்தாள். ஏதாவது பேசியே ஆக வேண்டுமே! என்ன பேசுவது...

"மஹால் போகும் பஸ் போய்விட்டதா?" என்றேன்.

உடனே அந்தப் பெண்கள் படை 'கொல்'லென்று சிரித்தது. எனக்கு எரிச்சலாகிவிட்டது.

"மஹால் பஸ் பற்றித் தெரிஞ்சா சொல்லுங்க; அதை விட்டுட்டு இப்படிச் சிரிப்பானேன்!" என்றேன்.

"உங்க முன்னால் நிற்கற ஒரே பஸ் மஹால் போற பஸ்தான்" என்று ரோடில் நின்ற பஸ்ஸைச் சுட்டிக் காட்டினாள் தோழிகளுள் ஒருத்தி.

"வழியறதுக்கு ஒரு எல்லையே இல்லையோ?" என்றாள் மற்றொருத்தி. "காதல், கண்ணை மறைச்சுடுச்சு..." என்று மூன்றாமவள் கமெண்ட் அடிக்க, என் முகத்தில் வழிந்த அசடைத் துடைக்க எனக்கு வழி தெரிய வில்லை!

இச்சம்பவம் இன்று எங்கள் 'குடும்ப ஜோக்'

திருப்பரங்குன்றம்,

டி.கே. சுப்ரமணியன்.

## மதுமிதா

அக்காவின் குரல் பெரிதாகக் கேட்டது. ஆச்சர்யமாக இருந்தது. அக்கா அதிர்ந்து பேச மாட்டாள். குரல் உயர்த்தினாள் எனில் ஏதோ முக்கிய விஷயமாகத் தானிருக்கும்.

அவசரமாய் ஸ்டிக்கர் பொட்டு பிரித்து தமயந்தி நெற்றிக்கு இட்டாள். ஒற்றை நொடி கண்ணாடியில் பிம்பம் பார்த்து வெளியே வந்தாள்.

இப்போது அக்கா பேச்சு தொலைத்து அழுது கொண்டிருந்தாள். ஊஞ்சல் கம்பியை பிடித்துக் கொண்டு அம்மா மௌனமாக. எதிரே அப்பா ஒருவித குற்ற உணர்ச்சியுடன். தமயந்தி பதறினாள். அக்கா தோளைத் தொட்டாள்.

"என்னம்மா... ஏன் அக்கா அழுறா...?"

அக்கா நிமிர்ந்தாள். இவளைப் பார்த்ததும் அழுகை பெரிதானது.

"என்ன சந்து... என்னம்மா...?"

அவள் கண்ணீர் துடைத்தாள். கைகொடுத்து தூக்கினாள். தோளை அணைத்து உள்பக்கம் அழைத்துப் போனாள்.

அம்மா நகர முயற்சித்தாள். அப்பா கைநீட்டி தடுக்க, நின்றாள். அக்காவை உட்கார வைத்தாள்.

"என்னக்கா... சின்னக் குழந்தை மாதிரி அழறே...?"

அக்கா பார்வை தாழ்த்தினாள். முகவாய் தொட்டு நிமிர்த்தினாள். கண்மீன்கள் மழைத்தன.

"சொல்லுப்பா... அம்மா என்ன சொன்னா...?"

இவள் கைகளை இறுகப் பற்றிக் கொண்டாள்.

"நான் என்னடி பண்ணுவேன்...? வர்ற மாப்பிள்ளை எல்லாம் என்னை வேண்டான்னு சொல்லிட்டு போறான்னு அம்மா என்கிட்ட கத்துறா...!"

பேச முடியாமல் தவித்தாள்.

கடவுளே!

அம்மாவா?

ஆறுதல் சொல்ல வேண்டியவள் காயப்படுத்துகிறாள்.

"ஹேய்... இதானா... சியர் அப் மேன்... அவங்க கிடக்கிறானுங்க முட்டாப் பசங்க...!"

இவள் பேச்சு பார்த்து அக்கா புன்னகைத்தாள்.

"ராஜகுமாரன் வருவான்... என் அக்காவை குதிரைல ஏத்திட்டுப் போவான் தெரியுமா...?"

அக்கா விழி துடைத்தாள்.

"இல்லே தமயந்தி... நான் உனக்கு தடையா நிக்க விரும்பலை... முதல்ல உனக்கு பண்ணச் சொன்னேன்... அதான் அம்மா கத்தறா...!"

தமயந்தி பெரிதாகத் தலையசைத்தாள்.

"நோ.., நோ... உன் பையனை கொஞ்சி ஸ்கூல்லே கொண்டு விட்டுட்டுதான் எனக்கு கல்யாணம்... தத்து பித்துன்னு உளறாதே... வா... சாப்பிடலாம்...!"

அம்மா மௌனமாய் டிபன் பரிமாறினாள். நடுநடுவே தமயந்தி ஜோக் அடித்தாள்.

முதலில் அம்மா மசியவில்லை.

பின்பு அம்மா தணிந்தாள்.

இளகினாள்.

"கோச்சுக்காதடி... செல்லம்... என்ன பண்றது... வயசாய்டுச்சுல்ல...!"

அக்காவின் தலையைக் கோதினாள்.

அக்கா அம்மாவின் இடுப்பில் முகம் புதைத்தாள்.

யாரோ தோளைத் தொட்டார்கள்.

ஸ்வர்ணா.

"தமு... உன் அப்பா வந்துருக்கார்...!"

அதிர்ந்தாள்.

அப்பா அலுவலகம் வர மாட்டார். எனில் எதுவும் அவசரம்? ஃபைலை மூடி விட்டு எழுந்தாள்.

"என்னப்பா... என்ன...?"

"பதறாதம்மா... நல்ல விஷயம்தான்!"

இவள் பதற்றம் பார்த்து அப்பா சிரித்தார்.

"தரகர் வந்தார்... திடீர்னு ஒரு வரன் வந்துருக்கு... அக்காவை உடனே பாக்கணும்னு சொல்றாங்க...!"

"பையன் என்ன பண்றார்...?"

"சிவில் இன்ஜினியர்... சிங்கப்பூர்ல ஒரு பெரிய கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனில வேலை பாக்குறார். ஒரு மாசம் லீவுல வந்துருக்கார்... உடனே பாக்கணும்னு சொல்றாங்க...!"

"சிங்கப்பூரா...!"

"அழச்சிட்டுப் போய்டுவாராம்... அஞ்சு வருஷத்துல காசு சேத்துட்டு இங்க வந்து தொழில் செய்யற ஐடியால இருக்காராம்... நல்ல பையன்தான்...!"

அப்பாவுக்குப் பிடித்துப் போய் விட்டது.

"அரை நாள் லீவு சொல்லிட்டு வாம்மா...!"

தலையசைத்தாள்.

வந்து விட்டார்கள்.

பையனின் கண்கள் அலைபாய்ந்தன.

பையனின் தாய், தந்தை, சகோதரன் வந்திருந் தார்கள்.

அப்பா பேசுவது கேட்டது.

"இவருதான் பையன்... பெரியவர்... அது அவர் தம்பி... ஸி.ஏ. முடிச்சுட்டு கம்பெனில இருக்கார்!"

அப்பா உள்ளே வந்தார்.

"தமு... அக்காவை அழைச்சிட்டு வா...!"

அக்கா மெலிதாக





# 70 JJ

*அவசரக் குளியல், அரைகுறை உணவு,*
*அதிரடியாகப் புறப்பாடு*
*மதிய டிபனை மறதியில் விட்டு*
*மண்டை தெறிக்க நடைபோட்டு,*
*பல்லவ நரகப் படிகளில் தொற்றி,*
*பல பொன் மொழிகள் தினம் கேட்டு*
*தடவித் திணறி, முன்னே வருவது*
*தினமும் உன்னைத் தேடித்தான்!*
*ஜன்னல் ஓரத் தேவதையே என்*
*சேதி உனக்குக் கிடைக்கிறதா?*
*பின்னல் போட்டும் பறக்கிற கூந்தல்*
*பார்வைப் பாதையைத் தடுக்கிறதா?*

*வெளியே என்ன இருக்கிறது?*
*வெற்றுப் பார்வை பார்க்கின்றாய்*
*விரையும் மரங்கள், கார்கள், ஸ்கூட்டர்*
*வீணே அலறும் லாரியினம்*
*பழியே கிடக்கும் பாமரனுக்கொரு*
*பார்வைப் பிச்சைக் கூடாதா?*
*அடியே உனக்கென்ன ஈயக்காதா*
*அடிமன ஓலம் கேட்கலையா?*

*தினமொரு கனவு, தினமொரு கவிதை*
*தினமொரு தருணம் உனைத்தேடி*
*தினமொரு பார்வை, தினமொரு ஏக்கம்*
*தினமொரு நோட்டம் உனக்காக*
*மனமென ஒன்று உனக்கிருந்தால்*
*மறுபடி வருவேன் மறக்காதே!*
*இனியென வேண்டும், வெறும் பார்வை*
*இதை மட்டும் தர மறுக்காதே!*

*— குரோம்பேட்டை கவிராயர்*

அலங்காரம் பண்ணியிருந்தாள்.

அக்காவை அழைத்துக் கொண்டு போனாள்.

அக்கா தலைகுனிந்து உட்கார்ந்திருந்தாள்.

தமயந்தி எல்லோரையும் ஒரு பார்வை பார்த்தாள்.

மாப்பிள்ளை பையனின் பார்வை ஒருமுறை இவள் மேல் மோதியது.

அக்காவை அழைத்துப் போகச் சொன்னார்கள்.

உள்ளே போனார்கள்.

தமயந்தி வெளியே வந்து நின்றாள்.

அவர்கள் ரகசியமாக ஏதோ பேசிக் கொண்டார்கள்.

அப்பா கை பிசைந்து விலகி நின்றார்.

தரகர் தயக்கமாய் அப்பாவிடம் வந்தார்.

"சித்த உள்ற வாங்க...!"

போனார்கள்.

"என்ன சார்?"

அப்பா கேட்டார்.

"அவங்களுக்கு உங்க சம்பந்தம் பிடிச்சிருக்கு... ஆனா... உங்க சின்னப் பொண்ணைக் கொடுப்பீங்களான்னு கேக்கறாங்க...!"

அப்பா அதிர்ந்தார்.

"ஏன்...?"

"சின்னப் பொண்ணு நல்ல அழகு... நல்ல படிப்பு...!"

அக்காவின் கண்களில் நீர் துளிர்த்தது.

தமயந்தி தடக்கென வெளியே வந்தாள்.

இவள் வேகம் பார்த்தவர்கள் புருவம் சுளித்தார்கள்.

"தரகர் எல்லாம் சொன்னார்... உங்க மருமகளா வர்றதுக்கு எனக்கு இஷ்டம் தான்... சின்ன மாறுதல்... பெரிய மருமகளா அல்ல... சின்ன மருமகளா... என்ன சம்மதமா...?"

மாப்பிள்ளை பையன் சட்டென எழுந்தான்.

அவன் முகம் கறுத்திருந்தது.

எல்லோரும் கிளம்பி விட்டார்கள்.

"ஏம்மா... இப்படிப் பேசினே...?"

அப்பா தளர்வாய்க் கேட்டார்.

"உங்க பாஷைல பேசினா அவங்களுக்குப் புரியாதுப்பா... அதான் அவங்க பாஷைல பேசினேன்... சட்டுனு புரிஞ்சுக்கிட்டாங்க...!"

அக்கா இவளைப் பார்த்து சின்னதாய் சிரித்தாள்.




# சத்யபாலா நிதி லிமிடெட்



மத்திய அரசின் அங்கீகாரம் பெற்ற
"பரஸ்பர சகாய நிதி" நிறுவனம்

Nidhi Company Approval No : 37/27/93-CL III

சரவணா காம்ப்ளக்ஸ் எண் 36, பிள்ளையார் கோயில் தெரு, பல்லாவரம், சென்னை - 43
Tel : 405788/404351, Fax : 044-402981, Grams : "SATYABALA"

பாதுகாப்பு பெட்டக வசதி உண்டு

வயதானோர் மற்றும் மகளிருக்கு கூடுதல் 0.5% வட்டி மற்றும் சிறப்புப் பரிசு

சிறப்பு டெபாசிட் சேகரிப்பு மாதம்

**பிக்சட் டெபாசிட் :**

| 46 நாட்கள் | 90 நாட்கள் | 6 மாதங்கள் | 1 ஆண்டு | 2 ஆண்டுகள் | 3 ஆண்டுகள் | 4 ஆண்டுகள் | 5 ஆண்டுகள் |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

* 5 வருடங்களுக்கு--டெபாசிட் ரூ.50,000 அதற்கு மேலும் – வட்டி 21%

**சிறப்பு டெபாசிட் திட்டங்கள்**

| டெபாசிட் ரூ | ஆண்டுகள் | திரும்பக் கிடைக்கும் தொகை ரூ |
|---|---|---|
| 600/- | 25 | 60,000 |
| 4500/- | 12.5 | 50,000 |
| 6500/- | 15 | 1 லட்சம் |
| 9500/- | 20 | 5 லட்சம் |
| 20,000/- | 25 | 25 லட்சம் |

**சத்யபாலா மறுமுதலீட்டுத் திட்டம்**

| டெபாசிட் ரூ | மாதங்கள் | திரும்பக் கிடைக்கும் தொகை ரூ |
|---|---|---|
| 5000/- | 45 | 10,000/- |
| 10,000/- | 68 | 30,000/- |
| 25,000/- | 90 | 1,00,000/- |

* வட்டிக்கு முன்தேதியிடப்பட்ட காசோலைகள்!

*** உடனடி வட்டி டெபாசிட் திட்டம்**

ரூ 5000/-மும் அதற்கு மேலும் 1 ஆண்டுக்கு டெபாசிட் செய்து வட்டி ரூ 725/- உடனடியாக பெறுவீர்.

*** பிறந்த நாள் சிறப்பு டெபாசிட் திட்டம் :**

உங்கள் குழந்தைகளின் ஐந்து பிறந்த நாளன்று ரூ. 1000-ஐ டெபாசிட் செய்தால் 6-ஆவது பிறந்த நாளிலிருந்து ரூ 1500-ஐ பிறந்த நாள் பரிசாக 50 ஆண்டுகள் பெறலாம்.

* குறைந்த வட்டிக்கு சுலப தவணையில் நகை (கி. ரூ. 325/- வரை) மற்றும் அடமானக் கடன் (No Area Restriction)

| தலைவர் | செயலாளர் | நிர்வாக ஆலோசகர் | இயக்குனர்கள் |
|---|---|---|---|
| நீதியரசர் G. இராமானுஜம் (ஓய்வு பெற்ற சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி) | திருமதி. K. இந்திராணி, M.A., B.Ed., | ஆடிட்டர் திரு. G. கனகராஜ், B.Com., F.C.A. | R. அன்பரசு M.P.<br>R. சேதுராஜன்<br>G. சுப்பாராஜ் |

**இதர குரூப் நிறுவனங்கள்**

**சத்யபாலா பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட்** (Deposits, Hire Purchase, Leasing)
**சத்யபாலா பைனான்சியல் சர்விஸஸ்** (OTCEI Dealer - Stock & Share Brokers, Loan Syndication)
**கிளைகள் :** பம்மல, பட்டாபிராம், மேற்கு மாம்பலம், மதுரை, திருப்பூர், இராஜபாளையம், மற்றும் **விரைவில்** தமிழகமெங்கும்.

நிறைவான சந்தோஷத்திற்கு! நிம்மதியான வாழ்க்கைக்கு! நாடுங்கள் உங்கள் சத்யபாலாவை.

# ஜெ காப்டர் சென்னை வந்தது!

## ஜெயலலிதா வெள்ளோட்டம்!!

## அமைச்சர்கள் நேர்த்திக்கடன்!!!

**சென்னை, ஏப்ரல் 1.**

இன்று காலை சரியாக 9:30 மணிக்கு முதல்வர் ஜெயலலிதாவுக்காகத் தமிழக அரசு வாங்கியுள்ள பிரத்யேக ஹெலிகாப்டர் சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் தரை தட்டியது.

அமெரிக்காவிலிருந்து சிங்கப்பூர் வழியாக வந்த இந்த ஹெலிகாப்டருக்கு "ஜெ காப்டர்" என்று பெயர் சூட்டப்படும் என்பதாக அமைச்சர் எஸ்.டி. எஸ். அறிவித்தார்.

### அங்கப் பிரதட்சிணம்

ஹெலிகாப்டர் வந்ததையொட்டி நடந்த பத்திரிகையாளர் கூட்டத்தில் தமிழக அரசின் [illegible] அமைச்சர்களும் கலந்து கொண்டனர்.

[illegible] இயக்கமும் புரட்சித் தலைவி [illegible] நேர்த்திக்க[illegible] விமான நிலையத்தின் [illegible] அங்கப் பிரதட்சி[illegible] செய்வார்கள்" என்று அமைச்சர் இந்திர[illegible]

"ஜெ காப்டர் சரியாக ராகு காலத்தில் வந்து [illegible] காரணமா?" என்று ஒரு நிருபர் கேட்டபோது, "அமெரிக் [illegible]

என்றும் "ஊட்டி, கொடைக்கானல் என்று முதல்வர் பல நாள் ஓய்வுக்குச் சென்றால் கோப்புகளைச் சுமந்து செல்ல இன்னொரு குட்டி ஹெலிகாப்டர் வாங்கப்படும்" என்றும் தலைமைச் செயலர் தெரிவித்தார்.

"முதல்வர் வேறு ஊர்களுக்குப் போகும்போது மலர் தூவிய வரவேற்பு தரப்படும்" என்றார் அமைச்சர் கண்ணப்பன். "ஹெலிகாப்டர் விசிறிகள் சுழலும் வேகத்தில் மலர்கள் பறந்து விடுமாகையால் பூக்கள் முன்னதாகவே தரையோடு தரையாக ஃபெவிக்கால் போட்டு ஒட்டப்படும்" என்று விளக்கினார்.

### மூன்று தளங்கள்

தஞ்சையில் ஒன்று, கொடைக்கானலில் ஒன்று, ஊட்டியில் ஒன்று என மூன்று ஹெலிகாப்டர் தளங்கள் உடனடியாக அமைக்கப்படும். அடுத்து எந்தெந்த ஊர்களுக்கு முதல்வர் போகத் திட்டமிடுகிறாரோ அங்கெல்லாம் தளங்கள் நிறுவப்படும்.

"முதல்வரோடு அமைச்சர்களும் பயணம் செய்ய வசதிகள் உண்டா?" என்று கேட்டதற்கு, "முதல்வரின் வசதிக்கே ஹெலிகாப்டரின் உள்ளே இடம் காணாது" என்றும், "வேண்டுமானால் அமைச்சர்கள் தொங்கிக் கொண்டு போகலாம்" என்றும், "இதற்காக ஜெ. காப்டரின் வெளிப்புறம் பிடிகள் பொருத்தப்படும்" என்றும் எஸ்.டி.எஸ். பதில் கூறினார்.

றார். "தவிரவும், ஹெலிகாப்டரின் பைலட், துணை பைலட் இருவரும் முதல்வருக்குத் தேவையான சமயத்தில் லீவில் போய்விடக் கூடும் என்பதால் மேலும் ஒரு பைலட்டும் துணை பைலட்டும் வேலைக்கு அமர்த்தப்படுவார்கள்" என்றார் ஹரிபாஸ்கர்.

### பிரசாரத்துக்கு

"ஜெ காப்டர் தேர்தல் களத்தில் பயன்படுத்தப்படுமா? அதற்குத் தேர்தல் கமிஷனர் சேஷன் ஆட்சேபணை எழுப்புவாரா?" என்று கேட்டபோது, "அதி.மு.க. கட்சி, முதல்வரின் தேர்தல் பிரசாரத்துக்காக ஹெலிகாப்டரை அரசிடமிருந்து வாடகைக்கு எடுக்கும் என்றும், "ஒருவேளை வாடகை அதிகமாக இருந்து, கட்சியில் பணம் இல்லையானால், ஜெ காப்டரை, கட்சி விலைக்கு வாங்கிவிடும்" என்றும் "தேர்தல் முடிந்த பிறகு அரசுக்கே திரும்பவும் விற்றுவிடும்" என்றும் எஸ்.டி.எஸ். சொன்னார். "இந்த ஏற்பாட்டின்படி சேஷன் ஆட்சேபணை எழுப்புவதற்கில்லை" என்று சுட்டிக்காட்டினார்.

### கட்டை வண்டி

"வெள்ளச் சேதம் போன்றவற்றைப் பார்வையிட ஆளுநர் விரும்பினால், அரசு ஹெலிகாப்டரைப் பயன்படுத்த அவர் அனுமதிக்கப்படுவாரா?" என்று கேட்டபோது, "அவரது பிரத்தியேக உபயோகத்துக்

மாலை கட்டி, திலகமிட்டு, கோயில்களில் ஹெலிகாப்ட ருக்காக விசேஷ பூஜை நடத்துவார்கள். தவிர புதன் கிழமையன்று ஹெலிகாப்டருக்கே பூஜை போடப் படும். அதற்குப் பிறகு புரட்சித்தலைவி ஹெலிகாப் டரில் ஏறி விமான நிலையத்தை மூன்று முறை சுற்றிவந்து இறங்குவார்" என்றார் இந்திரகுமாரி.

"என் விமான நிலையத்தையே சுற்றிவர வேண் டும்' அதற்குமேல் ஹெலிகாப்டர் பறக்காதா?" என்று ஒரு நிருபர் கேட்டபோது, "இதைவிட அதிக தூரம் போகாததற்குக் காரணம், முந்தைய ரிகார் டான சென்னை - எண்ணூர் ஹெலிகாப்டர் பய ணத்தை முறியடிப்பதற்காகவே" என்று எஸ்.டி.எஸ். குறிப்பிட்டார்.

### குளுகுளு அறை

தமிழக அரசின் தலைமைச் செயலர் ஹரி பாஸ்கர் பேசுகையில், "புதிய ஹெலிகாப்டருக்கு ஒரு கோடி ரூபாய் செலவில் புதிய ஷெட் கட்டப் படும்" என்றும் மேலும் ஹெலிகாப்டரின் உட் புறத்தை முதல்வரின் வசதிக்காகத் திருத்தி அமைக்க இரண்டு கோடி ஒதுக்கப்பட்டுள்ளதாகவும், இதற்கு அயல நாட்டு 'இன்டீரியர் டெகரேட்டர்'களின் உதவி கோரப்பட்டுள்ளதாகவும் சொன்னார்.

"ஜெ. காப்டரின் உட்புறம் என்ன வசதிகள் செய்யப்படும்?" என்று கேட்டதற்கு, தலைமைச் செய லர், "தற்போது பதிலளிக்க முடியாது" என்றும் "பொறுத்திருந்து பாருங்கள்" என்றும் கூறினார். என் றாலும் ஜெயலலிதாவுக்குத் தனி அறையும் சகி (சசி) கலாவுக்கு மற்றோர் அறையும் மற்றும் குளியல் அறைகளும் குளுகுளு அறை வசதிகளுடன் நிறுவப் படும் என்பதாகத் தெரிய வருகிறது.

"ஹெலிகாப்டரில் காரியாலய அறை இருக்குமா?" என்று கேட்டதற்கு, "அதற்கு அவசியம் இல்லை"

ஊழல் என்று, பல ஊழல்கள் நடக்க வசதி ஏற்பட் டுள்ளது" என்று கருணாநிதி கூறியுள்ளாரே?" என்று ஒரு நிருபர் கேட்டதற்கு, "கருணாநிதிக்கு ஊழல் பற்றிப் பேசத் தகுதி இல்லை; எனக்குத்தான் இருக் கிறது" என்றார் எஸ்.டி.எஸ்.

"முதல்வரின் பாதுகாப்பு கருதித்தான் ஹெலி காப்டர் வாங்கப்பட்டிருப்பதாகக் கூறுகிறீர்கள்; ஆனால் ஹெலிகாப்டருக்கே பாதுகாப்பு தேவைப் படுமே?" என்று சுட்டிக்காட்டப்பட்டபோது, "அதற் காகத்தான் போலீஸை நவீனப்படுத்த மத்திய அரசி டம் நூறு கோடி ரூபாய் கேட்டிருக்கிறோம்" என் றார் தலைமைச் செயலர் ஹரிபாஸ்கர். "மத்திய அரசு ஒத்துழைக்கவில்லை என்றாலும் மாநில அரசே 20 கோடி செலவில் கறுப்புப் பூனைகளுக்குப் பயிற்சி தந்து, இரவு பகல் காவல் இருக்கச் செய்யும்" என்

### தப்பி ஓடவா?

"ஜெயலலிதா அமெரிக்காவுக்குத் தப்பிஓட வசதி யாகத்தான் ஹெலிகாப்டர் வாங்கப்பட்டிருப்பதாக சு.சுவாமி சொல்கிறாரே?" என்று கேட்டபோது, "இது சுப்பிரமணிய சுவாமியின் அறியாமையைத் தான் எடுத்துக்காட்டுகிறது" என்று ஆர்.எம்.வீ. குறிப் பிட்டார். "அமெரிக்காவுக்குப் போக வேண்டுமென் றால் ஹெலிகாப்டர் போதாது; ஜெட் விமானம் தேவை என்பதை சு.சுவாமிக்கு நினைவூட்ட விரும்பு கிறேன்" என்று ஆர்.எம்.வீ. சொன்னார்.

"கவலையே வேண்டாம்! ஜெட் விமானத்துக்கும் ஆர்டர் கொடுத்தாகிவிட்டது; விரைவில் வந்து சேரும்" என்று எஸ்.டி.எஸ். கூறி, நிருபர்கள் கூட்டத்தை முடித்து வைத்தார்.

**— செம்பியன்**



# பத்மா ரவிசங்கர்

**சென்னை, ஜனவரி 7, 1995**

தொடுவானத் தொலைவிலிருந்து கலகலவென்று ஒரு கேலிச் சிரிப்பு. மிக அருகில் வேங்கையின் உறுமல். தையா தக்காவென்று கற்கால சாடிஸ நடனம். ஏதோ 'தேவ' பாஷையில் பேச்சுக் குரல்கள். இடையே பூனையின் மியாவ். சுரீரென்று வலி. விர்ர்ரென்ற வாகன ஒலி. என்ன வேகமாக ஹஷ்த்திரா செல்கிறது... அவ்வளவுதான், பிடிவாதமாக ஊச லாடிய சூர்யாவின் துளி நினைவும் தப்ப... மத்தாப்புப் பொறி கள் காணாமல் போய் முடிவில்லாத இருண்ட பள்ளத்தினுள் பயணித்து...

பொழுது விடிந்து இரண்டு மணி நேரம் கழித்துத்தான் சூர்யாவுக்கு முழுமையான விழிப்பு கண்டது. விண்விண் ணென்று அவனுக்குப் பின் தலைவலித்தது.

அவ்வளவு இக்கட்டிலும் அவனுக்குச் சிரிப்பு வந்தது. இம்மாதிரி எவ்வளவோ முறை அவன் அடைப்பட்டிருக் கிறான். ஆனால் ஒவ்வொரு முறையும் ஏதாவது கடைசி நொடி தகிடு தத்தம் செய்து தப்பித்திருக்கிறான். சென்ற முறை ஷூ லேஸ் நூல் கொண்டு சாகசமாக–

பரவசமான பழைய நினைவிலிருந்து விடுபட்டு நிலைமை யைக் கணித்தான். அவன் ஷூ அகற்றப்படவில்லை. விசேஷ கைக்கடிகாரம் விட்டு வைத் திருந்தார்கள். உடைகள் அகற்றப்படவில்லை. ஆயி னும் சூர்யாவின் சுதந்திரம் சுத்தமாகத் தொலைந்திருந் தது. அமர்ந்த நிலையில் வலுவான கயிறு கொண்டு கை, கால்கள் அசைக்க முடி யாமல் நாற்காலியுடன் இறுகப் பிணைத்திருந்தார் கள்.

அது ஒரு விசாலமான அறைதான். அதன் வாசல் கதவும் ஜன்னல்களும் சாத் தப்பட்டிருந்தன. ஜன்ன லின் மழுப்பப்பட்ட கண் ணாடிக் கதவுகள் தாராள வெளிச்சம் அனுமதித் திருக்க, சுவரில் வெகு உய ரத்தில் அவனைக் கேலி செய்வது போல ஒரு சிறு வென்டிலேட்டர். இவன் அமர்ந்திருந்த நாற்காலி தவிர்த்து வேறு ஃபர்னிச்சர் இல்லை.

சில நிமிடங்களில் அவன் தப்பிப்பது இயலாத காரியம் என்று புரிந்து கொண்டான். இது ஒரு வீடுதான். சென்னை மாநகரில் இது எந்த இடம்? வெளி உலக ஒலிகளே கேட் காமல் அமைதியாக இருந் தது.

அரை மணி கழித்து அவர்கள் வந்தார்கள். ஒவ் வொருவராக.

கதவு திறந்து முதலில் பிரவேசித்தவன் பெயர் மாலிக்.

"வா மாலிக்! உன் சமாதி யில் புல் முளைத்து விட் டதாக அல்லவா நினைத் திருந்தேன்!" என்று சூர்யா சிரித்தான். ஆக, பாகிஸ்தா னுக்குத்தான் மூக்கு வியர்த் ததா...

சூர்யாவை மிக வெறுப் புடன் பார்த்த மாலிக்கிற்கு ஏறக்குறைய மொட்டை போல ஒட்ட வெட் டப்பட்ட தலை முடி. சாடிஸம் மின் னும் கண்கள். அபாயமானவன். பாகிஸ்தானின்



டாப் ஏஜெண்ட். நெற்றியில் இருந்த வெட்டுத் தழும்பு, முன்னர் சூர்யா அளித்த பரிசு.

அடுத்து வந்தவனைப் பார்த்ததும் சூர்யா அதிர்ந்தான். இரண்டாவதாக வந்த ரேப் வில்லனின் வட்டக் கழுத்து பனியனையும், குறுந்தாடியையும் எப்படி மறக்க முடியும்? அப்படியானால்... அப்படியானால்...

''ரொம்பத் திணறாதே சூர்யா! உன் பட்டாணி சைஸ் மூளையைக் கஷ்டப்படுத்தாதே!'' என்று இகழ்ச்சியுடன் சிரித்த மாலிக்,

"பாகிஸ்தான் உளவுத் துறையில் சமீபத்தில் சேர்ந்த அற்புதத்தை உனக்கு அறிமுகப்படுத்துவதில் பெருமைப்படுகிறேன்! நவ் அவர் லேட்டஸ்ட் ஸ்பை சென்சேஷன்... வெல்கம் நூரு!" என்று சிரம் தாழ்த்தி நாடக பாணியில் இரு கைகளை விரித்தான்.

அறை வாசலில் கங்கா!

உச்ச வோல்ட் கரண்ட்டில் கை வைத்தது போன்ற அதிர்ச்சி அடைந்த சூர்யாவைத் திருப்தியுடன் பார்த்தவாறு தலை நிமிர்ந்து கம்பீரமாக நடந்து உள்ளே வந்தாள் கங்கா.

சூர்யா உணர்ச்சி வசப்பட்டு, "கங்கா நீயா?" என்றான் உதடு துடிக்க.

"ப்பூ! கங்காவா? யார் அது?" என்று அலட்சியமாகச் சிரித்தாள். சூர்யாவைப் பூச்சி போலப் பார்த்தாள். அவன் வாங்கிக் கொடுத்த ஆடையில்தான் இன்னமும் இருந்தாள். அவள் வாய், விடாமல் சூயிங்கம் மென்றது; முகம் இறுகியிருந்தது. தீவிரமான கண்கள். மென்மையான அந்த கங்கா எங்கே?

# சுட்டுவிடு, சூர்யா!

அவளிடம் அனாயாசமான அசைவுகள். சூர்யாவைக் 'கவர்' செய்யும் எச்சரிக்கை பார்வை. அவள் ஓர் தேர்ந்த உளவு ஏஜெண்ட் என்பதைச் சந்தேகமறத் தெரிவித்தாள்.

''எவ்வளவு திறமையாக நடித்திருக்கிறாய்!''

"இந்தியர்கள் முட்டாள்கள் என்பதை இப்போது நம்புகிறாயா மாலிக்? எவ்வளவு சுலபமாக ஏமாறுகிறார்கள் பார்! ஹூம்.. நம் துறையில் அனாவசியமாக சூர்யாவிற்கு புத்திசாலி என்று உயர் ரேட்டிங்!" என்றாள் விசனமாக. "இவனே இப்படி என்றால், மற்றவர்கள்..." சிரித்தாள்.

"போடி காதல் துரோகி!" என்றான் மகா வெறுப்புடன்.

"காதல்! அதுவும் ஓர் இந்திய நாயுடனா! கேட்டாயா மாலிக் இந்த ஜோக்கை!"

மூவரும் உரக்கச் சிரித்தார்கள்.

"இக்கட்டில் பெண்ணைக் காப்பாற்றும் ஒரு இந்தியனின் வீக்னஸை நன்றாகவே பயன்படுத்திக் கொண்டாய் கங்கா! திறம்படத்தான் திட்டமிட்டிருந்தாய். என்னிடம் அறிமுகமாகும் நபர்களின் 'பூர்வாசிரமத்தை' விசாரிக்கச் சொல்லி 'வெரிஃபை' செய்வேன் என்பதை நன்கு உணர்ந்து 'கற்பழிப்பு முயற்சி' என்று துணிகரமாக 'செட்டப்' செய்து அதிர்ச்சியால் சௌகரியமாக நினைவிழப்பு, அதனால் விளைந்த பரிதாபம், உடன் ஒட்டிக் கொள்ள வசதி என்று எத்தனை மாங்காய் அடித்திருக்கிறாய்! உன்னை நான் பாராட்டுகிறேன் நூரு என்கிற கங்காவே!"



"உன் பாராட்டைத் தூக்கிக் குப்பையில் போடு சூர்யா. நேராக விஷயத்திற்கு வருவோம். எதற்காக சென்னை வந்தாய்? என்ன உன் ரகசியம்? எதை, எங்கே ஒளித்து வைத்திருக்கிறாய்? உம். எல்லாம் மடமடவென்று சொல்" என்றாள் உணர்ச்சியற்ற குரலில்.

சூர்யா அழுத்தமாகப் புன்னகைத்தான்.

"கை வீசிக்கொண்டு வந்தான் என்கிறாய் நுரு. ஏதாவது மைக்ரோ ஃபிலிமாகத்தான் இருக்கும். சூர்யாவை எனக்குத்



டாக்டர் : உங்க மனைவிக்கு ஊசி போடும்போது நீங்க ஏன் கத்துறீங்க?

வந்தவர் : 'எனக்கு ஊசி போடும்போது பார்த்துக்கிட்டு சும்மா இருந்தீங்களே...!'ன்னு வீட்ல வந்து திட்டுவாளே, அதுக்காகத்தான்!

- தேனி. எஸ். மாரியப்பன்




''நீங்க அமைச்சரா இருக்கலாம் அதுக்காக, 47 வது தெரு, 47 வது கதவு எண், 47 ரூம் உள்ள வீடு, போன் நம்பர் 47, கார் நம்பர் 47, என்று கேட்டு அடம் பிடிச்சா எப்படி?''

- பஞ்சவர்ணமகன்



ஒரு திரைப்படப் பாடல்கள் அடங்கிய ஆடியோ காஸெட் ரூ. ஆறு லட்சத்திற்கு ஏலம் போயிற்று என்றால் நம்ப முடிகிறதா? தாசரி நாராயணராவின் புதிய திரைப் படமான 'மாயா பஜார்' பாடல்கள் அடங்கிய காஸெட் வெளியீட்டு விழா ஹைதராபாத்தில் நடந்தது. விழாவின் முடிவில் காஸெட் ஒன்றை ஏலம்விட்டு அதில் கிடைக்கும் பணத்தை ஆந்திர முதல்வர் என்.டி.ஆரின் காலமான முதல் மனைவி பெயரில் அமைந்துள்ள புற்றுநோய் ஆஸ்பத் திரிக்கு அளிக்க விரும்பினார், தாசரி. ரூ. 10,000 த்தில் ஏலம் ஆரம்பமாயிற்று. தாசரி தானே ஒரு லட்சம் என்று ஏலம் கோர, அவரைத் தொடர்ந்து பலரும் ஏலத் தொகையை அதிகரித்துக் கொண்டே போக, கடைசியில் ரூ. ஆறு லட்சத்திற்கு சஞ்சய் ரெட்டி ஏலம் எடுத்தார்!

ஆதாரம் : ஸ்கிரீன்

தகவல் : எஸ். ஆலன்

தெரியாதா? நீ இந்த முறை தப்ப முடியாது ராஸ்கல்! வீணாக அடிபடாமல் சொல்லிவிடு'' என்றான் மாலிக் குரூரமாக.

''சாரி எவ்ரிபடி!''

''இது பெரிய விவகாரம். உன்னைத் துண்டு துண்டாக வெட்டவும் தயங்க மாட்டோம். ஃபிலிமை எங்கே ஒளித்து வைத் திருக்கிறாய்?'' மிரட்டினான் 'ரேப்' தடியன்.

மாலிக் ரப்பென்று சூர்யாவின் கன்னத் தில் அறைந்து கும்மென்று வயிற்றில் குத்து வதை அசுவாரசியமாகக் கவனித்தாள் 'கங்கா.'

சூர்யா வலியினூடே, "போடா போ! என் இனிய இந்தியாவை வெற்றி கொள்ள இன் னும் ஆயிரம் வருஷங்களானாலும் முடி யாது!'' என்றான்.

மாலிக் கண்கள் ஜொலிக்க, "நூரு, நீ புதிய வள். இந்திய இரத்தம் பார்த்திருக்கிறாயா?''

வட்டக் கழுத்து பனியன் ஆசாமியின் கையில் ஒரு வினோத ஆயுதம் முளைத்தது. அது ஊசி போலவும், ஸ்க்ரூ டிரைவர் போல வும் இருந்தது.

சித்திரவதை துவங்கியது. சூர்யாவின் மகா மௌனம்.

ஹூம்... சூர்யாவின் தீவிர நாட்டுப் பற்று மற்றும் தளராத அசாத்திய மனவலிமை... சாடிஸ சந்தோஷத்துடன் செய்த டார்ச் சரைப் பாதியில் நிறுத்திவிட்டு மூவரும் வெளியே செல்ல, உச்ச வேதனையில் கண் மூடினான் சூர்யா.

சிறிது நேரத்தில் அவர்கள் திரும்பினர். மாலிக் கையில் ஒரு இன்ஜெக்ஷன் ஊசி.

"முரண்டா பிடிக்கிறே... இந்த 'விசேஷ' ஊசிகிட்ட எவ்வளவு விரைவா மனசைத் திறந்து காண்பிக்கப் போறே பாரு!''

குறுந்தாடி கண்ணில் வெறி மின்ன, "மருந் துல மார்ஃபைனும் கலந்திருக்கா பாஸ்?''

"விஷயம் தெரியாம உளறாதே என்ன?'' என்று மாலிக் சீறினான்.

திமிர இயலாத சூர்யா புஜத்தில் 'மன மர்மத் திறவுகோல்' செலுத்தப்பட்டது. சில வினாடிகளில் அவனைக் கிர்ரென்று கிறக் கம் சூழ்ந்தது. கனைப்பது போல் சிரித்தான். சூரியன் பிரகாசமாக அருகில் வந்தது. பின் எல்லாம் அடங்கி. அடர் நீல [illegible] ஒருவித ஆழ்ந்த நிலைக்கு இட்டுச் செல்ல, கேள்விகள் மெல்ல மிதந்து வந்தன... சிறிது நேரத்தில், அவன் 'மயக்கம்' தெளிந்து பார்த்த போது—

சூர்யாவின் உள்ளாடையில் இரு மெல் லிய துணிகளுக்கிடையில் வைத்துத் தைக் கப்பட்ட அந்த மைக்ரோ ஃபிலிம்—

தற்சமயம் கொக்கரிக்கும் 'கங்கா' வசம்! "பார்த்தாயா! பார்த்தாயா! இனி ஹஷ்த்திரா என்ற நவீன ராக்கெட் என் பாகிஸ்தான் வசம்! வேறு பெயரில்! வெளியே சொல்லவும், விழுங்கவும் முடியாமல் உன் நாடு விழிக்கும்!"

சூர்யா கசப்புடன், ''இதை விட நேர்மையற்ற வழி இருக்க முடியாது! ஹூம்... இதெல்லாம் உங்களுக்குப் பழக்கமானது தானே...''

''வாயை மூடுடா இந்தியப் பதரே!'' வெறியுடன் சீறி சூர்யா முகத்தில் குத்தினான் மாலிக் "ஆல்ரைட். இனித் தாமதிக்காமல் அகன்று விடுவது நல்லது.''

"என் முட்டாள் 'காதலனுக்கு' மரணப் பரிசை நானே அளிக்கிறேன்!'' சொன்ன கங்காவின் கையில் துப்பாக்கி.

தன்னைக் குறி பார்க்கும் துப்பாக்கியை சூர்யா இமைக்காமல் பார்த்தான்.

"என்ன பார்க்கிறாய் சூர்யா? உன் துப்பாக்கிதான்! இப்போது உன்னையே சுடப் பயன்படுகிறது! எப்படி? வித்தியாசமாயில்லை?'' கண்களை உணர்ச்சி தொடாமல் சிரித்தாள்.

ரேப் வில்லனும், மாலிக்கும் மிதப்பாகச் சிரித்தனர்.

"சம்பிரதாயமாக மூன்று எண்ணிச் சுடுவார்கள். போனால் போகிறது. காதலனுக்காக ஐந்து எண்ணட்டுமா?''

சாவு பற்றிச் சற்றும் பயமின்றி சூர்யா அவள் கண்களை நேராகச் சந்தித்தான்.

"1...2...3...''

அப்போது படீரென்று ஒரு ஓசை. சூர்யாவின் வீங்கிய முகம் முறுவலித்து.

மாலிக் சந்தேகமுடன், "நில் நூரு! அது என்ன ஓசை?''

சூர்யா சர்வ சாதாரணமான குரலில், "ஒன்று மில்லை மாலிக்! இந்த வீட்டின் வாசற் கதவு தகர்க்கப்படும் ஓசை!''

அவன் சொல்லி முடித்த வினாடி, அவர்கள் என்ன ஏது என்று சுதாரிப்பதற்குள்—

சுடச் சித்தமாயிருந்த ஆட்டோமேடிக் ரைஃபிள் ரகங்களுடன் ஏழு பேர் கொண்ட படை ஒன்று திமுதிமுவென்று அறையினுள் பிரவேசித்து மூன்று பாகிஸ்தானிய உளவாளிகளையும் வளைத்துப் பிடித்துக் கொண்டனர்!

உளவுத் துறையின் சென்னைக் கிளை தலைமை அதிகாரி விஸ்வம் தலைமையில் வந்த படையில் கமிஷனர் அப்துல் காதரும், ஏசிபி தேவதேவனும் ஏனைய துடிப்பான போலீஸாரும் இருந்தனர்.

சேரிலிருந்து விடுதலையான சூர்யா, "எவ்




**மதுரையில் சராசரியாக ஒரு மனிதனை இரவில் 10 கொசுக்கள் கடிப்பதாகவும் அதனால் மதுரையில் வாழும் மக்கள் ஓர் இரவில் மட்டும் ஐம்பது லிட்டர் இரத்தத்தை இழப்பதாகவும் பூச்சிகளைப் பற்றி ஆராயும் துறையினர் அண்மையில் கண்டறிந்துள்ளனர்.**

**- கோவீ. இராஜேந்திரன்**
**ஆதாரம் : ஹிந்து**

---

வளவு தாமதம்? பொசுக்கென்று என்னைச் சுட்டிருப்பார்கள்!''

"அப்படி விடுவோமா? நாங்கள்தான் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தோமே!'' என்று விஸ்வம் கண் சிமிட்டினார்.

மாலிக்கும் குறுந்தாடியும் அதிர்ச்சியுடன் கை விலங்கை வெறிக்க, 'கங்கா' நம்ப முடியாமல் சூர்யாவைப் பார்த்தாள்.

"இந்திய இன்டலிஜென்சை எவ்வளவு எளிதாக எடுத்துக் கொண்டிருக்கிறாய் கங்கா!''

சிரித்துவிட்டு சூர்யா அவளிடமிருந்து அந்த மைக்ரோ ஃபிலிமை திரும்பக் கவர்ந்து கொண்டான்.

கமிஷனர் அப்துல், "என்ன அது?''

அவரைப் பொருள் பொதியப் பார்த்து மௌனமாகப் புன்னகைத்தான் சூர்யா.

ஏதோ தேச ரகசியம் என்பதைப் புரிந்து கொண்ட கமிஷர், ''ஒகே சார். உங்கள் தலைமை, ப்ரஸ்ஸுக்குத் தரும் தகவலுக்கு ஜம்மென்று தலையாட்டி வைக்கிறேன்!''

அவளைத் தீர்க்கமாகப் பார்த்த சூர்யா, ''நீ போலி என்பதை ஆரம்பத்திலேயே கண்டுபிடித்து விட்டேன் பெண்ணே!''

எப்படி என்பது போலப் பார்த்தாள்.

"ஒரு தேர்ந்த உளவாளிக்கு அனேக விஷயங்கள் தெரிந்திருக்க வேண்டும். அன்று இந்தத் தடியன் தப்பிக்க ஏதுவாக 'மயக்கமாகிச்' சரிந்த உன்னை நான் தாங்கிப் பிடித்தது நினைவிருக்கிறதா? மயக்கமாக நன்றாகவே நடித்தாய்! ஆனால் உன் பல்ஸ்தான் காண்பித்துக் கொடுத்து விட்டது!''

'கங்கா' பிரமிப்புடன் பார்த்தாள்.

"ஆம் மிஸ் நூரு! உன்னைத் தாங்கிக் கொண்ட போது மிக இயல்பாக என் விரல்கள் உன் நாடி பிடித்து நுணுக்கமாகக் கவனித்

தது. ராக் ஸ்டெடி பல்ஸ்! ஒரு பெண்ணுக்குக் கற்பழிப்பு முயற்சி எவ்வளவு பெரிய கொடுமை. அந்தக் கடும் அதிர்ச்சியில் மயக்க முறும் ஒருவளுக்கு துளி லயம் பிறழாத மிக உறுதியான, நார்மல் நாடி துடித்தது என் சந்தேகத்தைக் கிளறியது! உனக்கு அம்னீஷியா என்று சொன்ன அந்த டாக்டர் மாணிக்க வேலு மேல் கூட சந்தேகம் இருக்கிறது. அனேகமாக அவன் பாகிஸ்தான் உளவு ஊழியர் ஊதியப் பட்டியலில் இருந்தாலும் ஆச்சரியப்பட மாட்டேன். பிற்பாடு அவனை 'உரசிப்' பார்க்க இருக்கிறேன்..."

தேவதேவன், "அங்கே கிட்னி மாற்று ராக்கெட் நடப்பதாக அரசல் புரசலாகத் தகவல் சார்!"

சூர்யா தொடர்ந்து, "நீ போலி என்பது புரிந்ததும், இந்த விளையாட்டைக் கடைசி வரை ஆட முடிவு செய்தேன். நீ யார், எந்த நாடு, கூட்டாளிகள் யார், எதுவரை செல்வாய் எல்லாம் அறிய விரும்பி, கூண்டோடு பிடிக்க வலுவில் வலையில் விழுந்தேன்! உனக்கு ஒன்று தெரியுமா கங்கா? நேராக ஏமாற்றுவதை விட ஏமாந்ததாக நடிப்பதில் தான் 'கிக்' அதிகம்!"

சூர்யா ரசித்துச் சிரித்துவிட்டு, "எஸ்பியானேஜில் நீ ஒரு சிறு பாப்பா! உளவு உலகில் பஞ்சமா துரோகங்களும், நரித்தனமான ஏமாற்றல்களும் சர்வ சாதாரணம் டார்லிங்! நீங்கள் மூவரும் பிடிபட கங்காதான் காரணம்!"

"என்ன சொல்கிறாய்?" கேட்ட அவள் முகத்தில் கோபம்; சந்தேகம்; அவமானம்.

"நீ காதல் 'செய்து' என்னை மடக்கினாய். தவறு- மடக்கியதாக நினைத்தாய்! அந்த காதல் காரணமாகத்தான் உன் கூட்டம் சிக்கியது..நான் கொடுத்த காதல் பரிசை நீ சரியாகப் பார்க்கவில்லை போல! அந்தத் தங்கச் சங்கிலியில் லாக்கெட்டைத் திறந்து பார்."

ஒரு போலீஸ் அதிகாரி அவள் அணிந்திருந்த செயினைக் கழட்டி சூர்யாவிடம் தந்தார். அதன் லாக்கெட்டை ஒரு மாதிரி பக்கவாட்டில் வைத்துத் தட்டினான்.

இரண்டாகப் பிளந்து, திறந்து கொண்ட லாக்கெட்டினுள் ஒரு சிறிய அதிசென்சிடிவ் மைக்!

அதை எடுத்து அவளிடம் கொடுத்துவிட்டு, "என் காதல் பரிசு பார்! செவ்வனே செயல்பட்டு விஸ்வம் வளைத்துக் கொள்ள உதவிய மைக்கிற்கு வந்தனம்! இன்னும் குறிப்பாகச் சொல்வதானால் நீங்கள் மூவரும் பிடிபட உங்கள் பாகிஸ்தான் தான் காரணம்!" என்றான் நமுட்டுச் சிரிப்புடன்.

மூன்று பாகிஸ்தான் உளவாளிகளும் உச்ச அதிர்ச்சியுடன் பார்த்தார்கள்.

"ஆம் நூரு என்கிற கங்காவே! அந்த மைக்கின் பின்புறம் பார். அதன் தயாரிப்பு எழுத்துக்களை உரத்துப் படி!"

வாய் விட்டுப் படித்தாள்:

"மேட் இன் பாகிஸ்தான்!"

"எப்படி? வித்தியாசமாயில்லை?

*(முற்றும்)*

---

துன்பத்தை அனுபவித்த காலத்தை மறந்து விடு; ஆனால், அது உனக்கு விட்டுச் சென்ற பாடத்தை மட்டும் மறக்காதே.

— அல்பேனியப் பழமொழி

— பா. குணா

துன்பப் பறவைகள் உங்கள் தலை மேல் வட்டமிடுவதைத் தவிர்க்க முடியாது. ஆனால் உங்கள் தலையிலே கூடு கட்டாதபடி தடுத்துக் கொள்ள முடியும்.

— சீனப் பழமொழி

— பா. குணா

மாறுதல்கள் எல்லாம் இயல்பானவை என்று அமைதியாகவும் இன்முகத்துடனும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருத்தல் வேண்டும். ரயிலில் பிரயாணம் செய்யும் போது, காட்சிகள் மாறா விட்டால் ரயில் நின்றுவிட்டிருப்பதைக் காண்பீர்கள். மாறுதல் இன்றேல் வாழ்க்கையில்லை.

— சின்மயானந்தர்/

மொனிகா சாந்தன்

